# சுந்தரகாண்டம்

(முதற் பகுதி)

வெள்ளிவிழா மலர்








அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

உ

கவிச்சக்கரவர்த்தி

# கம்பர்

இயற்றிய

# இராமாயணம்

## சுந்தரகாண்டம்

(முதற் பகுதி)




அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

1963

# உள்ளுறை

# FOREWORD

I am happy to introduce to the public the Sundarakandam of the Kambaramayanam jointly edited by the Annamalai University and the Mahamahopadhyaya Dr. V. Swaminatha Aiyar Library.

As everyone knows, the Kambaramayanam is one of the great masterpieces of Tamil Literature. Although there have been several attempts to publish an authentic edition of Kamban's work, the results so far have not been very satisfactory. The late Dr. Swaminatha Aiyar, to whom the Tamil World owes so much, studied the Kambaramayanam with a view to editing it. He left exhaustive notes but owing to various reasons was unable to publish it. The Swaminatha Aiyar Library has aready published the Balakandam and the Ayodhya Kandam basing their work on the notes left by the great scholar.

The late Dr. R. K. Shanmukham Chetty, when he was Vice-Chancellor of the Annamalai University, also projected the publication, with notes by the University, of this great classic. Unfortunately, he was unable to see the fruition of his idea during his lifetime. When I became Vice-Chancellor, I thought that it would be a very good thing to co-ordinate the labour of scholars working in the same field so that duplication and wastage of energy might be avoided and better results attained. At my instance, the University suggested to the Swaminatha Aiyar Library that the two institutions might collaborate in bringing out a monumental edition of the Kambaramayanam, utilising to the full to the notes left by Dr. Swaminatha Aiyar. This suggestion was readily accepted by Srimati Rukmini Devi on behalf of the Library.

The University appointed a committee consisting of Srimati Rukmini Devi, Adhyaksha, Dr. V. Swaminatha Aiyar Library as

Chairman, Professor A. Ramanatha Pillai, Deputy to the Vice-Chancellor of the Annamalai University, Professor G. Subramania Pillai, Professor of Research, Annamalai University, Professor R. Viswanathan, Curator, Dr. V. Swaminatha Aiyar Library, Professor K. Swaminathan, Sri S. Satchitanandam Pillai and Sri S. Ramaswami Naidu as members. The present volume is a result of this joint endeavour. This book contains only the first five padalams of the Sundarakandam as we were anxious to present to the public at least a specimen of the work during the Silver Jubilee celebrations of the Annamalai University.

It is a happy coincidence that the Silver Jubilee of the University should fall during the Centenary year of Dr. Swaminatha Aiyar's birth.

I hope that the rest of the work will be completed in due course.

Annamalai University, } C. P. RAMASWAMY AIYAR,

*Vice-Chancellor.*



திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்துத் தலைவர்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள்**

# முகவுரை

(பேராசிரியர், திரு. அ. இராமநாத பிள்ளை அவர்கள், M.A., உதவித் துணைவேந்தர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.)

கம்பராமாணம் தமிழ்ச்சுவையும் பக்திச் சுவையும் நிறைந்த சிறந்த ஒரு காவியம். இத்தகைய அரிய பெரிய இலக்கியத்திற்கு ஒரு நல்ல திருந்திய ஆதாரபூர்வமான பதிப்பு இதுவரையும் வெளிவராதிருப்பது தமிழ்மொழிக்கே ஓர் இழுக்காகும். கம்பனுடைய உண்மைப்பாடம் கண்டு பிடியாத நிலையில் இதுவரை வெளிவந்த அச்சுப் பதிப்புக்களில் அச்சுப் பிழைகளும் திருந்தாத பாடங்களும் சில தவருன உரைகளும் பிழைபட்ட திருத்தங்களும் ஏற்படலாயின. உண்மையான கம்பராமாயணத்தை இன்னும் உலகம் காணவில்லை. இக்குறைபாட்டை நீக்கவேண்டுமென்று பல பெரியார்களும் விரும்பினர். காலம் சென்ற டாக்டர் ரா. க. சண்முகம் செட்டியார் அவர்கள் தம் சொந்தப் பணத்தைச் செலவிட்டாவது ஒரு நல்ல பதிப்பைக் கொண்டு வர வேண்டும் என்று நெடுநாளாக முயன்று வந்தார்கள். ஆனுல் இத்தகைய வேலையைத் தனிப்பட்டவர்கள் செய்வதை விட ஒரு பல்கலைக்கழகமே செய்ய முடியும் என்பதை உணர்ந்தார்கள். தாம் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்துத் துணைவேந்தராய் நியமனம் பெற்றவுடன் அங்குள்ள தமிழாராய்ச்சிப் பகுதியைக் கம்பராமாயணப் பதிப்பு வேலையைத் தொடங்கும்படி உத்தரவிட்டார்கள்.

பல்கலைக்கழகப் புரலவர், செட்டிநாட்டரசர், ராஜா சர் முத்தைய செட்டியார் அவர்கள் தமது பல்கலைக்கழகம் இவ் வேலையைத் தொடங்குவது குறித்துத் தமது மட்டற்ற மகிழ்ச்சியையும் ஆதரவையும் தெரிவித்து ஊக்குவித்தார்கள். இம்முயற்சிக்குத் திருப்பனந்தாள் காசிமடத்துத் தலைவர், காசிவாசி, ஸ்ரீலஸ்ரீ அருணந்தித் தம்பிரான் சுவாமிகளும் தங்கள் மனமுவந்த ஆசியை நல்கியுள்ளார்கள். ஸ்ரீ காசி மடத்து அறக் கட்டளையின் நிதி உதவியால் இப்பதிப்பு அச்சிடப் பெற்றிருக்கிறது. மதுரைத் தமிழ்ச்சங்கத்தாரும், தஞ்சை, சரசுவதி மகால் நூல் நிலையத்தாரும், சென்னைக் கீழ்த்திசைக் கையெழுத்துப் பிரதிகள் நூல் நிலையத்தாரும், மற்றும் பல பெரியார்களும் தங்கள் ஏட்டுச் சுவடிகளை உதவுவதற்கு முன்வந்தார்கள். 1952–ஆம்

ஆண்டு சூலை மாதம் இவ்வேலை தொடங்கப் பெற்றது. சில மாதங்களில் உடல்நிலை காரணமாக டாக்டர் சண்முகம் செட்டியார் அவர்கள் விலக நேர்ந்தது. பின்னர், துணைவேந்தர் பதவியை ஏற்றுக்கொண்ட டாக்டர் சர் சி. பி. இராமசாமி ஐயர் அவர்கள், அண்ணாமலைநகர் அடைந்ததும் முதன்முதல் வருகை தந்து பார்வையிட்டது தமிழாராய்ச்சிப் பகுதியைத்தான். அங்கு நடக்கும் கம்ப ராமாயண ஆராய்ச்சி வேலையைக்கண்டு பெருமகிழ்வெய்தினார்கள். உடனே அடையாறு மகாமகோபாத்தியாய, டாக்டர் சாமிநாத ஐயர் நூல் நிலையத்தாரையும் உடன் சேர்த்து ஒத்துழைக்கும் ஒரு வாய்ப்பினை ஏற்படுத்தினார்கள். இந்த ஒத்துழைப்பின் பயனாக இப்பதிப்பு வெளிவருகிறது. திங்கள்தோறும் இவ்வேலை எம்மட்டில் முன்னேறி வருகிறது என்பதையும் தாமே நேரில் கண்காணித்து வருகிறார்கள். பத்துப்பாட்டு, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து. பரிபாடல், புறநானூறு ஆகிய சங்க நூல்களும், சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி, பெருங்கதை ஆகிய பெருங் காப்பியங்களும் மக்களால் பயிலப்பெறாது அருகி மறையும் நிலையில் அவை மறைந்தொழியாதபடி அவற்றின் ஏட்டுச் சுவடிகளைத் தேடித் தொகுத்துத் திருத்தமுறப் பதிப்பித்து வெளிப்படுத்திய செந்தமிழ்ப் பெரியார் மகாமகோபாத்தியாய, டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களைத் தமிழுலகம் நன்கறியும். சங்க இலக்கியம் முதல் அந்தாதி கலம்பகம் முதலிய பிற்கால இலக்கியங்கள் வரை, தமிழ் நூல்கள் பலவற்றை ஒப்புமைப்பகுதி, ஆராய்ச்சிக் குறிப்பு, உரைவிளக்கம் முதலியவற்றுடன் ஐயரவர்கள் அழகாகப் பதிப்பித்துள்ளார்கள். அதுபோல் கம்பராமாயணத்தையும் அவர்கள் பதிப்பித்திருப்பார்களானால் மிகவும் நன்றாயிருந்திருக்கும். ஆயினும் அவர்கள் அரிதில் தேடி வைத்திருந்த கம்பராமாயண ஏட்டுச் சுவடிகளும் கையெழுத்துப் பிரதிகளும் தமது புத்தகங்களில் ஆங்காங்கு எழுதியிருந்த குறிப்புக்களும் இப்பதிப்புக்குப் பயனுடையவாயிருந்தன. இவ்வளவு சிறப்புக்களுடன் தொடங்கப்பெற்ற இம்முயற்சி வெற்றிபெறும் என்பதில் ஐயமில்லை.

அ. இராமநாதன்.

# பதிப்புரை

(பேராசிரியர், வித்துவான், G. சுப்பிரமணிய பிள்ளை, M.A., B.L.,
தமிழ் ஆராய்ச்சித்துறைத் தலைவர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்;

பேராசிரியர், ரா. விசுவநாதன், M.A.,
அமைச்சர், டாக்டர் சுவாமிநாத ஐயர் நூல் நிலையம், அடையாறு.)

"எண்ணரிய மறையினொடு கின்னரர்கள்
இசைபாட வுலகம் ஏத்த
விண்ணவரு முனிவர்களும் வேதியரும்
கரம்குவிப்ப வேலை யென்னும்
மண்ணுமணி முழவதிர வானரங்கின்
நடம்புரிவா ளிரவி யான
கண்ணுதல்வா னவன்கனகச் சடைவிரிந்தால்
எனவிரிந்த கதிர்கள் எல்லாம்." (கம்பர்)

"மூவுலகும் ஈரடியான் முறைநிரம்பா வகைமுடியத்
தாவியசே வடிசேப்பத் தம்பியொடுங் கான்போந்து
சோவரணும் போர்மடியத் தொல்லிலங்கை கட்டழித்த
சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே
திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே."
(இளங்கோவடிகள்)

நடராஜப் பெருமானின் திருவருளால் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்து வெள்ளி விழாவின் நன்னாளிலே கம்பராமாயண சுந்தர காண்டம், முதற் பகுதி, வெள்ளி விழா மலராக விரிந்திருக்கிறது. அமிழ்தினும் இனிய தமிழிலக்கியங்களுள் தலைசிறந்தது கவிச்சக்கரவர்த்தி கம்பர் இயற்றிய இராமாவதார நன்னூலாகும். தமிழ் நாட்டிலும் வேற்று மொழி வழங்கும் பிற நாட்டிலும் ஆடவர் பெண்டிர், புலவர் பொதுமக்கள், பெரியர் சிறியர் என்ற வாசியற எல்லாராலும் விருப்பொடு பயிலப்பட்டு வருதலே இந்நூலின் பெருமைக்குப் போதிய சான்றாகும். இவ்வாறு பலதிறத்து மக்களாலும் இந்நூல் பெரிதும் பயிலப்பட்டமையால் இதன் வடிவில் பல்லாற்றானும் மாற்றங்கள் ஏற்படலாயின. ஊர் அங்கண நீரும், ஓடைகளும், பேராறுகளும், சிற்றாறுகளும் ஆகியவற்றின் நீரும் கடலொடு கலந்து வேறு பிரித்தறிய முடியாதவாறு கடல் நீரேயாதல் போன்று, எழுதுவோரும் கற்போரும் உரை விரிப்போரும் சொற்பெருக்காற்றுவோரும் ஆகியோருடைய சொற்களும் தொடர்களும் கவிகளும் கம்பர் காவியக் கடலினுட் புகுந்து வேறு பிரித்தறிதல் அரிதாம்

வண்ணம் கலந்து விட்டன. இக்கலப்பினை இப்புத்தகத்தின் பின் இணைத்துள்ள பிரதிபேதங்களும், குறிப்புரையுள் ஆங்காங்குக் காட்டப்பட்டுள்ள மிகைப் பாடல்களும் நன்கு விளக்கும்.

இவ்வாறு உருமாற்றம் அடைந்துள்ள கம்பர் காவியத்தின் உண்மையுருக்காண்டல் அறிஞர் விரைந்து மேற்கொள்ள வேண்டியதொரு செயலாகும். அதுவும், தமிழ் நாட்டிலும் பிற இடங்களிலும் உள்ள இராமாவதார நூலின் பழைய திருந்திய ஓலைச் சுவடிகள் இறந்தழியுமுன் மேற்கொள்ளத் தகுவது. இப் பதிப்பு, அம்முயற்சியின் தொடக்கமாகும். பால காண்டத்திலிருந்து தொடங்கிப் பதிப்பிக்க வேண்டும் என்பது பலருடைய விருப்பமாக இருப்பினும், இராமாயணம் படிப்போர் சுந்தர காண்டத்தை முதலிற் படித்துப் பின் பாலகாண்டத்தைத் தொடங்குவது வழக்கமாயிருக்கும் முறைநோக்கி, சுந்தர காண்டத்துப் பதிப்பு வேலையை விரைவில் முடித்து முதலில் வெளியிடலாயிற்று.

இப்பதிப்புக்கு உறுதுணையாயின, தமிழ் நாட்டிற் பல்வேறிடங்களிலிருந்து கிடைத்த நாற்பது பழைய ஓலைச்சுவடிகளும், மூன்று காகிதக் கையெழுத்துப் பிரதிகளும், பல்வேறு காலத்து வெவ்வேறு புலவரால் பதிப்பிக்கப்பட்ட பதினேரச்சுப் புத்தகங்களும் ஆம். அவற்றின் விவரமெல்லாம் இப்புத்தகத்தின் இறுதியிற் சேர்க்கப்பட்டுள்ள அட்டவணையால் விளங்கும்.

கல்வியிற் பெரியராய கம்பர் கவியின் உண்மையுருக் காண்டற்கு, அவர் எடுத்து ஆளும் சொற்களும் தொடர்களும் கருத்தும், பொருளும் ஆதியவற்றின் அமைதியையும், கவியின் நடையமைதியையும், அவருடைய கலையறிவும் உலகியலறிவும் சமயக் கொள்கையும், அவர் காலத்திலும் அதற்கு முன்பும் வழங்கிய மரபுகளும் வழக்காறுகளும் ஆகிய குறிப்புக்களையும் அறிந்து கொள்ளுதல் இன்றியமையாததாகும். அன்றியும் பழைய ஓலைச் சுவடிகளை எழுதியவர் கையாண்ட முறைகளை நன்கு தெரிந்து கொள்ளுதலும் வேண்டும். மேற்குறித்தவற்றையெல்லாம் நன்கறிந்து ஏற்ற பெற்றி கடைப்பிடித்து இப்பதிப்பினுள் மூல பாடங்கள் துணியப்பட்டுள்ளன; உரையும் வரையப்பட்டுளது. தக்க ஆதாரமின்றி எவ்வகைத் திருத்தமும் மேற்கொள்ளப்படவில்லை. இப்பதிப்பில் சூடாமணிப் படலம் முடிய 690 பாடல்கள் அடங்கியுள்ளன. அவற்றுள் முந்நூற்றுக்குக் குறையாத

பாடல்களுக்குத் திருந்திய பாடங்களும் புதிய உரையும் அமைந் திருத்தலை அறிஞர்கள் காணலாம்.* கம்பராமாயணம் என்று பொதுமக்களால் வழங்கப்பட்டு வரும் இந்நூலுக்குக் கம்பர் என்ன பெயர் கொடுத்திருப்பார் என்பது பற்றிய ஆராய்ச்சி இன்னும் ஒரு முடிவுக்கு வரவில்லை. ஆதலால் இப்பதிப்பில் அதைப்பற்றி ஒன்றும் கூறுவதற்கில்லை. அடுத்துவரும் பதிப்புக் களில் நூலின் பெயர் தெளிவாக்கப்படலாம். ஒவ்வொரு ஏட்டுச் சுவடியைப் பற்றின வரலாற்றுக் குறிப்புக்களும் பின்வரும் பதிப்

---

* திருந்திய பாடம் வந்துள்ள பாடல்களின் எண்கள் :—

2, 3, 4, 5, 6, 10, 15, 17, 22, 23, 24, 25, 28, 29, 32, 33, 34, 35, 37, 42, 43, 44, 45, 52, 55, 58, 59, 60, 62, 63, 64, 70, 72, 73, 76, 77, 78, 81, 82, 88, 89, 90, 92, 93, 94, 96, 97. 98, 99, 100, 101, 102, 103, 105, 106, 108, 109, 111, 115, 119, 120, 124, 127, 130, 142, 144, 150, 151, 154, 156, 159, 160, 163, 164, 165, 166, 168, 172, 178, 182, 183, 188, 192, 194, 195, 215, 217, 220, 223, 224, 226, 227, 232, 236, 238, 240, 256, 258, 275, 276, 277, 278, 281, 282, 284, 286, 288, 291, 292, 295, 296, 299, 301, 305, 307, 309, 312, 313, 314, 315, 321, 325, 328, 333, 335, 336, 341, 342, 344, 345, 346, 347, 354, 356, 357, 358, 361, 362, 364, 366, 368, 373, 390, 392, 395, 397, 408, 411, 412, 413, 414, 420, 421, 423, 425, 428, 429, 430, 431, 433, 434, 438, 439, 441, 444, 445, 447, 456, 457, 458, 459, 460, 466, 467, 470, 471, 476, 477, 481, 485, 486, 488, 489, 491, 493, 494, 495, 497, 499, 506, 515, 519, 520, 525, 526, 527, 531, 532, 533, 536, 548, 554, 562, 563, 565, 566, 570, 573, 578, 580, 582, 602, 608, 620, 627, 631, 632, 634, 635, 636, 637, 640, 653, 654, 655, 660, 663, 667, 668, 669, 670, 671, 673, 676, 680, 686, 689.

புதியவுரை அமைந்த பாடல்களின் எண்கள் :—

1, 2, 3, 6, 8, 10, 11, 15, 16, 17, 18, 22, 23, 24, 25, 30, 32, 33, 34, 37, 42, 43, 46, 48, 51, 52, 55, 57, 58, 59, 60, 61, 62, 63, 64, 65, 66, 70, 72, 73, 74, 76, 77, 78, 81, 82, 88, 89, 90, 92, 93, 94, 97, 100, 101, 102, 103, 105, 106, 109, 111, 115, 120, 124, 127, 129, 130, 138, 142, 144, 150, 151, 153, 154, 156, 159, 160, 163, 165, 166, 168, 170, 178, 181, 183, 185, 192, 194, 215, 217, 220, 224, 225, 227, 235, 241, 242, 256, 257, 258, 264, 271, 278, 282, 291, 296, 299, 300, 305, 313, 314, 315, 317, 328, 333, 335, 336, 353, 395, 399, 403, 404, 408, 409, 410, 411, 412, 413, 414, 415, 417, 418, 419, 420, 421, 425, 428, 430, 432, 433, 434, 435, 436, 438, 439, 441, 443, 444, 445, 447, 450, 454, 455, 456, 457, 458, 459, 460, 466, 467, 468, 469, 470, 471, 473, 477, 484, 486, 488, 493, 494, 495, 497, 507, 514, 532, 533, 536, 548, 550, 551, 552, 565, 580, 582, 585, 599, 602, 607, 608, 609, 612, 613, 615, 616, 617, 618, 620, 621, 624, 625, 627, 629, 630, 631, 632, 634, 635, 637, 640, 653, 655, 657, 663, 667, 668, 670, 671, 676, 680, 686, 688, 689.

புக்களில் விரித்துக் கூறப்படும். இப்பதிப்பில் வந்துள்ள எல்லாப் பாடல்களும் திருத்தம் பெற்று விட்டதாகச் சொல்ல முடியாது. பல பாடல்கள் இன்னும் மயக்கம் தருவனவாகவே உள்ளன. அவற்றிற்கு உரிய சரியான பாடம் இதுவரை கிடைக்கவில்லை. நாளடைவில் அவை திருத்தமடையக் கூடும்.

இனி இப்பதிப்பின் அமைதியினைச் சிறிது குறித்தல் அவசிய மாகும். இக்காண்டத்தின் நுவல் பொருள், முன்னுரையில் சுருக்கித் தரப்பட்டது. ஒவ்வொரு படலத்தின் முன்பும் அப் படலத்தின் நுவல்பொருளும் வரையப்பட்டுளது. பாடல்களின் பொருள் எளிதிற் புலப்படுமாறு தலைப்புக்கள் அமைக்கப்பட்டன.

பாடல்களை அச்சிடுவது பற்றிப் பல கொள்கைகள் நடை முறையில் காணப்படுகின்றன. சந்தி பிரித்து அச்சிட்டால் செய்யுளோசை சிதைந்து கெடும் என்பது ஒரு சாரார் கருத்து. சந்தி பிரியாது அச்சிட்டால், பொதுமக்கள் படிக்குங்கால் இடர்ப் படுவர், பொருளும் விளங்காது என்பது மற்றொரு சாரார் கருத்து. இருதிறத்தார் கருத்திலும் உண்மை உண்டு. கடின சந்திகளை மட்டும் பிரித்து அச்சிடலாம் என்பாரும் உளர். பாடல் களைக் கம்பர் எவ்வடிவில் பாடி எழுதியிருப்பாரோ அவ்வடிவைச் சிதறவிடாது போற்றிப் பாதுகாக்க வேண்டியதும் நம் கடமை யாகும். இந்நிலையில் பாடல்களை எவ்வாறு அச்சிடுவது என்று ஆராய்ச்சி நிகழ்ந்தது. அதன் விளைவாக, இந்நூல் எல்லார்க்கும் பயன்படவேண்டும் என்றும் இப்பதிப்பு நல்ல முறையில் அமைய வேண்டும் என்றும் கருதிப் பின்வருமாறு அமைக்கலாயிற்று.

சிறந்த பாடங்களோடு திருந்திய மூலம், சந்தி பிரியாமலும் சீர் முதலிய யாப்பமைதி குன்றாதவாறும் பெரிய எழுத்தில் முன்னே அமைக்கப்பட்டது.

அடுத்து அம்மூலச் செய்யுளே, அனைவர்க்கும் பொருள் விளங்கத்தக்க நிலையில் சந்தி பிரித்தும், பொருளியைபிற்கேற்பச் சீர்வரையறை நோக்காது சொற்களைக் கூட்டியும், தொடர் மொழிக் குறியீடுகளை ஆங்காங்கு இட்டும் அமைக்கப்பட்டது.

சந்தி பிரியாத பாடலின் தொடக்கத்திற் கொடுக்கப்பட்டவை, இக்காண்ட முழுதும் தொடரும் பாடலின் எண்கள். குறிப்புரை யிறுதியிற் கொடுக்கப்பட்டவை அவ்வப்படலப் பாடலின் எண்கள்.

சந்தமும் யாப்பும் வேறுபடுமிடங்கள், சந்தி பிரியாத பாடல் களின் தொடக்கத்தில் இடப்பட்டுள்ள தொடரெண்ணின் கீழ் உடுக்குறி (*) இட்டுக் காட்டப்பட்டுள்ளன.

ஒவ்வொரு பாடலிலும், ஓலைச் சுவடிகளோடும் காகிதக் கையெழுத்துப் பிரதியோடும் பழைய அச்சுப் புத்தகங்களோடும் ஒப்பு நோக்கிக் கண்ட பிரதி பேதமெல்லாம், அவைகாணப்பட்ட சுவடி முதலியவற்றின் குறியீட்டெண்களோடு, செய்யுட்களின் தொடரெண் முறையில், பிற்சேர்க்கையில், பாட வேறுபாடு என்னும் தலைப்பின்கீழ்க் காட்டப்பட்டுள்ளன. அவற்றுள், கவிகருத்தும் பொருட்சிறப்புமுடையவை மூலத்துள் அங்கங்குச் சேர்க்கப்பட்டன. மூலத்திற் கொள்ளப்பட்ட பாடங்கள், பிற் சேர்க்கையில் ஒவ்வொரு பாட்டிலும் அடிமுறையில் சீர்வரிசைப் படி தொகுதி தொகுதியாகக் காட்டப்பட்ட பிரதி பேதங்களுள் தடித்த முதலெழுத்தோடு முன்னே அமைக்கப்பட்டுள்ளன.

இந்நூற்கு உரைகாண்பதெனின் அஃது எளியதொரு செய லன்று. பழையவுரைகள் உள. ஆகவே புத்துரை வரைதல் வேண்டா. எனினும், பிரதி பேதங்களுட் சிறந்தனவென்று மூலத்துள் இப்பதிப்பின்கண் மாற்றியமைத்த பகுதிகளையும், பாடம் மாருத நிலையினும் சிறந்த பொருணயமுடைய பாடல் களையும் படிப்போர் அவற்றின் பொருளை எளிதின் உணர்ந்து இன்புறுதற்கு ஒரு குறிப்புரை இன்றியமையாததாயிற்று.

இக்குறிப்புரையுள், ஒவ்வொரு பாடற் பொருளும் இனிது விளங்கும்படி சொற்கள் கொண்டு கூட்டப்பட்டன; வினை முடிபுகள் காட்டப்பட்டன; அருஞ்சொற்களுக்குப் பொருள் வரையப்பட்டன; கடினமான பகுதிகளுக்குப் பதவுரையும் கருத் துரையும் எழுதப்பட்டன; ஒப்புமைப் பகுதிகளும் விசேடக் குறிப்புக்களும் இலக்கணக் குறிப்புக்களும் சேர்க்கப்பட்டன.

சில சுவடிகளில் மட்டும் காணப்பட்ட மிகைப் பாடல்கள், அவை எந்த எந்தப் பாடல்களின் பின் காணப்பட்டனவோ அந்த அந்தப் பாடல்களின் குறிப்புரை முடிவில், அவ்வப் பாடல் களின் தொடரெண்களோடு உ முதலிய குறியீடுகளும் தந்து பதிக்கப்பட்டுள்ளன. அவற்றின் பிரதிபேதங்களும் பிற்சேர்க் கையில் அம்முறையே தரப்பட்டுள்ளன.

இது மாதிரிப் பதிப்பே. இனி அறிஞர்கள் கூறும் நன் முறைகளையும் கொண்டு இந் நூற்பதிப்புப்பணி மேலும் தொடர்ந்து நடைபெற இருக்கிறது.

இந் நூற்பதிப்புக்குப் பயன்படும் வண்ணம் ஓலைச்சுவடி யுதவியர்கள் மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரும், தஞ்சைச் சரசுவதி மகால் நூல் நிலையத்தாரும் ஆவர். இவர்கள் தங்களிடம் உள்ள சுவடிகளையெல்லாம் உதவி எங்கள் முயற்சிக்குப் பேராதரவு தந்தது குறித்து மகிழ்ச்சியுடன் இவர்களுக்கு எங்கள் நன்றியறிவைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம். மேலும், சென்னை அரசாங்க நூல் நிலையத்தார்க்கும் சுவடியுதவியது குறித்து எங்கள் பாராட்டு உரியதாகும். கம்பராமாயண நூலாராய்ச்சியை இப்பல்கலைக் கழகத்தார் மேற்கொண்டது தெரிந்ததும் தம்மிடமுள்ள அந்நூற் சுவடியை அனுப்பியுதவிய யாழ்ப்பாணத்துச் சுன்னாகம், முதுபெரும் புலவர், திரு. சி. கணேசையரவர்களுக்கும், ஈரோடு தமிழ்ப் பண்டிதர், திரு. தெய்வசிகாமணிக் கவுண்டரவர்களுக்கும் நன்றி தெரிவிக்கின்றோம். [இவ்விருவரும் உதவிய சுவடிகள் பாலகாண்ட முதலியவற்றை ஆராய்தற்குப் பயன்படுவன.] மேலும், எங்கள் முயற்சி தொடங்கியவுடன் தாம் அரிது தேடித் தொகுத்து வைத்த இராமாயண நூலின் பழைய பதிப்புப் புத்தகங்கள் பலவற்றையும், இந்நூற் பிரதிபேதம் குறிப்பதற்கென்றே தாம் அச்சிட்டு வைத்த தாள்களையும் உதவி எங்களுக்கு ஊக்க மூட்டிய காரைக்குடி கம்பன் கழகச் செயலாளர், திரு. சா. கணேசன் அவர்களுக்கும் எங்கள் உள்ளன்பொடு கூடிய பாராட்டும் வாழ்த்தும் உரியதாகும்.

கிடைக்கும் பிரதிகளிலுள்ள பிரதிபேதங்கள் எல்லாவற்றையும் தொகுத்துத் திருந்திய பாடங்களுடன் கம்பராமாயணத்தை வெளியிடும்பணி இதுவரை மேற்கொள்ளப் பெறவில்லை. இது தனிப்பட்டவர்களாற் செய்யக் கூடியதன்று என்பதையுணர்ந்து அண்ணாமலைப் பல்கலைக் கழகம் இப்பணியை மேற்கொண்டுளது. இப்பதிப்புப் பணியில் நேரும் இடர்ப்பாடுகள் பல. அவற்றைப் பொருட்படுத்தாது அரிதின்முயன்று மாதிரிப் பதிப்பாக இந்நூல் இப்பொழுது வெளியிடப்பெறுகின்றது. இனிமேலும் அறிஞர்கள் கூறும் திருத்தங்களுடன் சிறந்த முறையில் கம்பராமாயணம் முழுவதும் ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன் தொடர்ந்து வெளிவரும். இப்பணி இனிது நிறைவேறுதற்கேற்ற ஆசியும் ஆதரவும் நல்கித் தமிழுலகம் ஊக்கமளிக்குமென நம்புகின்றோம்.

கோ. சுப்பிரமணியம்.
ரா. விசுவநாதன்.

# முன்னுரை

—⁘—

## இராமாவதாரம்

### அவதார காரணம்

அறத்தை நிலைநிறுத்தும்பொருட்டும், தீயோரை ஒறுத்துத் தக்கோரைத் தலையளிசெய்தற்பொருட்டும் இறைவன் அவ்வப்போது அவதரித்தருளுவன் என்பர் பெரியோர்.

"அறந்தலை நிறுத்தி வேதம் அருள்சுரந் தறைந்த நீதித்
திறந்தெரிந் துலகம் பூணச் செந்நெறி செலுத்தித் தீயோர்
இறந்துக நூறித் தக்கோ ரிடர்துடைத் தேக வீண்டுப்
பிறந்தனன் தன்பொற் பாத மேத்துவார் பிறப்ப றுப்பான்."*

என்பர் கம்பர்.

### அவதாரம் என்னும் சொல்லின் பொருள்

அவதாரம் என்னும் வடமொழி மேல்நிலை நின்று இறங்குதல் என்று பொருள்படுமென்பர். வினைவசத்தால் தம் நிலையினும் தாழ்ந்து பிறக்கும் மாந்தரும் பிறரும் போலாது, உயர்வறவுயர்ந்த இறைவன் தன் இச்சையால் தேவர் முதலியோர் துயரினைத் தீர்க்கும் பொருட்டு வீட்டுலகுவிட்டிறங்கி மண்ணுலகில் தோன்றுதலின், அத்தோற்றம் அவதாரம் எனலாயிற்று. இறைவனவதாரங்களுள் இராமாவதாரமும் கிருஷ்ணாவதாரமும் சிறப்புடையன.

### இராமாவதாரம்

இராமன் திருமாலின் அமிசமாய் அவதரித்த ஆண்டகை; கோசல நாட்டை யாண்ட தசரதன் என்னும் பேரரசற்குக் கோசலை யென்னும் பேரரசி திருவயிற்றுதித்த பெரியோன். இவன் வரலாறு கூறும் நூல்கள் வடமொழியினும் தென்மொழியினும் நிரம்பவுண்டு.

### வான்மீகிமுனிவர் இயற்றிய இராமாயணச் சிறப்பு

வடமொழி நூல்களுள் வான்மீகிமுனிவர் இயற்றிய இராமாயணம் தலைசிறந்தது; இதிகாசங்களுள் ஒன்றாக எண்ணப்பட்ட

---

*சுந்தர. பிணிவீட்டுப். 81

பெருமைவாய்ந்தது. வேதம் புகழநின்ற பரம்பொருள் இராமனுக அவதரித்த நிலையில் வேதம் வான்மீகிமுனிவர்வாக்கில் இராமாயண மாக அவதரித்தது என்பர் பெரியோர்.

## இராமாயணம் என்ற தொடரின் பொருள்

இராமாயணம் என்னும் வடசொற்றொடர்க்கு இராம பிரானுடைய வடிவழகினையும் குண நலங்களையும் சிறந்த செயல்களையும் அறிவிப்பது என்பது திரண்ட பொருளாகும். சீதாபிராட்டியின் வடிவழகும் குண நலமும் ஒழுகலாறும் அறிவிப்பது எனவும் பொருள் கூறலாம். இப்பொருட்கு 'ஸீதாயா:சரிதம் மஹத்'* என்னும் வான்மீகர் வாக்கும், 'மாக்கதை'† என்ற கம்பர் நோக்கும், 'இராமாயணத்தால் சிறையிருந்தவளேற்றம் சொல்லுகிறது'‡ என்னும் தொல்லாசிரியர்கூற்றும் ஆதரவாகும். இவ்விராமாயண நூலுக்குப் 'பௌலஸ்தியவதம்' என்று மற்றொரு பெயரும் உண்டு. பௌலஸ்தியன் - புலஸ்தியன் மரபில் வந்தவனான இராவணன்.

இராமாயணத்தினைப் பத்திநூல் என்றும் பிரபத்திநூல் என்றும் பெரியோர் கூறுவர்.

## தமிழில் இராமசரித நூல்கள்

புறத்திரட்டுள் உள்ள சில பாடல்களை நோக்கும்போது முற்காலத்துத் தமிழில் ஆசிரியப்பாக்களால் இயன்ற இராமசரித நூலொன்று இருந்திருக்கலாமென்று தோன்றுகிறது. யாப்பருங் கலவிருத்தியுள்ளும் வீரசோழியத்துள்ளும் மேற்கோளாக எடுத்தாளப்பட்ட சில வெண்பாக்களும் இராமசரிதம் கூறுவனவாயுள்ளன. இவற்றால் பண்டைக்காலத்துத் தமிழ்ச்செய்யுட்களாலியன்ற இராம சரித நூல்கள் தமிழ்நாட்டிற் பெரிதும் வழங்கிவந்தமை புலனாகும். இக்காலத்துத் தமிழிலுள்ள இராம சரிதநூல்களுள் கல்வியிற் பெரிய கம்பர் இயற்றிய இராமாவதாரமே ஒப்புயர்வற்று விளங்குவது.

## இராமாவதார நூற்பெருமை

கம்பர் தாம் இயற்றிய இராமசரிதத்துக்கு இட்ட பெயர் 'இராமாவதாரம்' என்பது. அவர் தற்சிறப்புப்பாயிரப்பாடல்களுள்,

> "நடையில் நின்றுயர் நாயகன் தோற்றத்தின்
> இடைநி கழ்ந்த இராமாவ தாரப்பேர்த்
> தொடைநி ரம்பிய தோமறு மாக்கதை" (11)

என்று கூறிச் செல்லுதலால் விளங்கும்.

---

* ஸ்ரீராமாயண பாலகாண்டம் 4-ஆம் சருக்கத்து 7-ஆம் சுலோகம்.
† கம்பர் தற்சிறப்புப்பாயிரம், செய்யுள்-5, 11.
‡ ஸ்ரீவசநபூஷணம், முதற் பிரகரணம்-சூ. 5.

அன்றியும், கம்பர் இராமபிரானை வான்மீகர் கூறியாங்கு மனிதரிற் சிறந்தோனாகமட்டும் கூறுமல், யாண்டும் பரம்பொருளாகவே பேசிச் செல்லுதலும், பாலகாண்டத்து இராமபிரான் முதலியோர் தோற்ற முரைக்கும் பகுதி திருவவதாரப் படலம் என்ற தலைப்பொடு வழங்கப்படுதலும் மேற் கூறியதனை வலியுறுத்தும் சான்றுகளாய் அமையும்.

கம்பர் இயற்றிய இராமாவதாரம், தொல்காப்பியர் கூறிய தோல் என்னும் நூற்குரிய இலக்கணம் நிரம்பியது; பெருங்காப்பியத்துக்குரிய உறுப்புக்களெல்லாம் குறைவின்றி அமைந்தது; தெய்வப் புலவர் திருவள்ளுவர் கூறும் ஒழுகலாறுகளுக்கு எடுத்துக்காட்டாகும்படி கதை நிகழ்ச்சிகளை விரிப்பது; பாலகாண்டம், அயோத்தியா காண்டம், ஆரணியகாண்டம், கிட்கிந்தாகாண்டம், சுந்தரகாண்டம், யுத்தகாண்டம் என்னும் ஆறு பெரும் பிரிவுகளையுடையது; படலம் என்ற உட்பிரிவில் கதைகளைப் பாகுபாடுசெய்து சற்றேறத் தாழ 10600 செய்யுட்களால் விரிப்பது. இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழ்க் காப்பியமாய்த் திகழ்வது; சொல் நோக்கும் பொருள் நோக்கும் தொடை நோக்கும் நடை நோக்கும் துறையின் நோக்கோடு எந்நோக்கும் காண இலக்கியமாவது; பயில்வார்க்கு நன்னேக்கும் புத்தியும் பத்தியும் முத்தியும் நல்குவது; பாலபாரதியென்பார் இயற்றிய ‘இராம செயம்’* என்னும் இசைத் தமிழ் நூலுக்கும், சீர்காழி அருணசல கவிராயர் இயற்றிய ‘இராம நாடக’த்துக்கும் முதல்நூலாய் விளங்கும் மாண்புடையது; பண்டைத் தண்டமிழ்ச் சான்றோர்கள் இயற்றிய நூல்களையும் ஆழ்வார்களின் அருளிச்செயல்களையும் அவற்றின் பொருள்களையும் கருத்துக்களையும் தழுவியமைந்தது; வடநாட்டுப் புலவர்பெருமானை துளசீதாசர் இவ்விராமாவதார நூலை நன்குமதித்து, தாம் இந்திமொழியில் இயற்றிய இராமசரித நூலுள் இந்நூற் கருத்துக்களை ஆங்காங்கு எடுத்து ஆண்டுள்ளனர் என்றும் புலவர் கூறக் கேட்பதுண்டு.

## இராமாவதாரம் எதன்வழி வந்தது?

வான்மீகிமுனிவர் அருளிய இராமாயணத்தின் வழிநூலாகக் கம்பர் இவ்விராமாவதார நூலை இயற்றினர் என்று கூறி, அதற்குச் சான்ருக அவர் தற்சிறப்புப்பாயிரத்துள் வரும்,

---

* இந்நூல் அரிய பெரிய வண்ணப்பாடல்களால் இயற்றப்பட்டது; அருணகிரிநாதர் திருப்புகழ் போல்வது; ஒவ்வொரு பாட்டிலும் பிற் பாதியில் இராமாயண கதைகளைத் தொடர்புபடவுரைத்து இராமபிரானை முன்னிலைப் படுத்தி, முற்பாதியில் ஆசிரியர் தம் குறைகளைக் கூறி, அது கொண்டு தம்மைக் கைவிடாது ஆட்கொண்டருளவேண்டுமென்று கூறி முடிக்க முற்றி நிற்பது; இனிய நடையுடையது; பால காண்ட முதல் உத்தர காண்டம் இறுதியாக 366 பாடல்களால் இற்றைக்கு நானூறு ஆண்டுகட்கு முன் இயற்றப்பட்டது.

"தேவ பாடையின் இக்கதை செய்தவர்
மூவ ரானவர் தம்முளும் முந்திய
நாவி ஞருரை யின்படி நான்தமிழ்ப்
பாவி ஞல்இ துணர்த்திய பண்பரோ."

என்னும் பாடலைக் காட்டுவர் ஒரு சாரார்.

மற்றொருசாராரோவெனின், வான்மீகி வசிட்டர் போதாயனர் எனும் மூவரும் இயற்றிய வடமொழி இராமாயண நூல்களைக் கற்றுத் தேர்ந்த நாவலர் சொற்படி இவ்விராமாவதாரம் இயற்றப்பட்ட தென்று கூறி, அதற்கு மேற்கோளாக மேற்குறித்த செய்யுளையே காட்டுவர். இவர் மேலும் தம் கூற்றுக்கு ஆதரவாக,

"விழுந்த நாயிற தெழுவதன் முன்மறை வேதிய ருடனுராய்ந்து
எழுந்த நாயிறு விழுவதன் முன்கவி பாடின தெழுநூறே"

என்ற பழம் பாடலையும் கூறுவர்.

## இராமாவதாரத்தின் அமைப்பு

முன்னே உருவமும் பெயரும் கொண்டு ஒரு சமயச்சார்புபற்ருது நின்ற கடவுளை வாழ்த்தி, அடுத்து ஆற்றுப்படலத்தால் வான்சிறப் புரைத்து, அதன்பின் நாடு நகரப்படலங்களால் கோசலமும் அதன் தலைநகராகிய அயோத்தியும் ஆகியவற்றுள் இயல்பாகவே அமைந்த பலவகை வளமும் செல்வமிகுதியும் அவற்றுள் வாழும் பல்வேறு நிலையினராகிய மக்களியல்பும் நீத்தார் பெருமையும் கூறி, அவர் ஒழுக லாறுகொண்டு பொதுவகையான் அறன்வலியுறுத்து, அதன்பின் கதை நிகழ்ச்சிகொண்டு அறத்தைச் சிறப்புவகையால் விரித்துரைத் தலால், இவ்விராமாவதாரநூல் திருக்குறளுக்கு இலக்கியம் என்று கொள்ளத்தக்கதாயிருக்கிறது.

பழம்பெருங் காப்பியங்களுள் சிந்தாமணி, சிலப்பதிகாரம் மணிமேகலை முதலியவற்றிற் காணப்படும் பதிகம் (—நுவல் பொருட் சுருக்கம்) இராமாவதாரநூலிற் காணப்படவில்லை; எனினும், இராமாவதார நூலாசிரியராகிய கம்பர், ஆழ்வார்களுள் இராம பிரான்பால் பெரிதும் ஈடுபாடுடையரான குலசேகரர் அருளிய பெருமாள் திருமொழியுள் 'அங்கணெடுமதில்புடைசூழ்' என்று தொடங்கும் பத்தாந்திருமொழியைப் பதிகமாகக் கொண்டு அதன் விரியாகத் தம் இராமாவதார நூலை இயற்றியருளினர் என்று கருத லாகும். சேக்கிழார் திருத்தொண்டர் புராணத்தைச் சுந்தரமூர்த்தி நாயனர் அருளிய திருத்தொண்டத் தொகையின் விரியாய் இயற்றி யருளியதும் இங்கு நோக்கத்தகும்.

## இராமாவதார நூலாசிரியர்

இந்நூலை ஆக்கியளித்தவர், கல்வியிற் பெரியவர், கவிச்சக்கரவர்த்தியென்று உலகுபுகழ நின்ற கம்பர் என்னும் புலவர் பெருமானவர். இவரைப்பற்றிக் கன்னபரம்பரையாகவும் 'விநோதரசமஞ்சரி' முதலிய புத்தகவாயிலாகவும் அறியப்படும் செய்திகளுள் பல பொருந்தாதன.

இவர் சோழநாட்டுத் திருவழுந்தூரினர். உவச்சர்குடியினரென்பர் சிலர். வேளாண்மரபினர், காரணக்குடையென்னும் கோத்திரத்தினர் என்பர் பலர். பிற் கூறியது பொருந்துவதாகும். இவருடைய பெற்றோர் பெயர் முதலியவை தெரியவில்லை. தந்தை பெயர் ஆதித்தன் என்பர்.

கம்பர் காளிதேவியின் அருளால் ஒரே நாளில் புலமை யெய்தினர் என்பர் சிலர். அவ்வாறன்றி நல்லாசிரியர்பாற் பயின்று வரன்முறையா னெய்திய புலமையுடையரென்பர் வேறு சிலர்; இது 'கல்வியிற் பெரியன் கம்பன்' என்னும் வழக்காலும் வலியுறும். நல்லாசிரியரால் எய்திய நூலறிவுடன் இறையருளால் அடைந்த மயர்வறுமதிநலமும் வாய்ந்தவர் இவர் எனின் இழுக்காகாது.

கம்பர் வாழ்ந்த காலத்திலே சோழநாட்டுத் திருவெண்ணெய் நல்லூரில் வேளாண்குடியிலே பிறவிச்செல்வராய்த் தமிழறிவும் பெருவண்மையும் வாய்ந்தவராய்த் திகழ்ந்த சடையன் என்பார் கவிஞர் பெருமானன கம்பருடைய அறிவும், ஒழுக்கமும், சுவைபலவும் மலியக் கவிபலவும் இயற்றும் ஆற்றலும் முதலியவற்றைக் கண்டு அவரொடு தொடர்புகொண்டு அவர்க்கு வேண்டியவெல்லாம் விழைந்துதவிப் புரந்து வந்தனர். சடையவேள் என்னும் பாற்கடல் ஊட்ட உரம் பெற்று வளர்ந்தோங்கிய கம்பரென்னும் காளமேகம் பொழிந்த கவி மழையால் தமிழ் தழுவிய இராமாவதாரம் என்னும் அமுதப் பேராறு தென்னாடெங்கும் பரவி மக்கட்குப் பெரும்போகம் விளைப்பதாயிற்று.

இவர் இயற்றிய பிற நூல்களுள் சடகோபரந்தாதியும் ஏரெழுபதும் சிறப்புடையவை. இவற்றுள், சடகோபரந்தாதி ஆழ்வார்களுள் தலைசிறந்தவரான சடகோபர் (நம்மாழ்வார்) பெருமையை விரித்துத் துதிக்கும் ஒரு பிரபந்தமாகும். ஏரெழுபது உழவு தொழிலின் சிறப்பையுரைப்பது. சரசுவதியந்தாதி, திருக்கை வழக்கம் முதலிய வேறு சில நூல்களும் இவரால் இயற்றப்பட்டன என்று கூறுவாரும் உளர்.

இவர் இயற்றிய நூல்களால் இவர் பிற மதங்களையும் பிற தெய்வங்களையும் நிந்தியாத பரம வைணவரென்று தெரிகிறது.

இவர் ஆழ்வார்களுக்குப் பிற்பட்டவர்; வைணவ சமயாசாரியர்களாகிய இராமாநுஜர் முதலியோர்க்கு முற்பட்டவர்; நாதமுனிவர் என்னும் வைணவசமயாசாரியர் காலத்தவர் என்று கூறுவாரும் உண்டு. எனவே இவர் இற்றைக்கு உத்தேசம் ஆயிரமாண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர் என்று கொள்ளலாம்.

# கம்பர்

'கவிச் சக்கரவர்த்தி' எனவும் 'கல்வியிற் பெரியன் கம்பன்' எனவும் 'கம்பனுரிடை பெருமையுளது' எனவும் 'விருத்த மென்னும் ஒண்பாவில் உயர்கம்பன்' எனவும் அறிஞர்களால் பாராட்டப் பெற்ற கவிஞர் பெருமானுகிய கம்பரது வரலாறு மற்றப் புலவர்களின் வரலாற்றைப்போல் இன்னும் இருண்ட நிலையில் தான் உளது. எனினும், இப்புலவர்பிரானைப் பற்றி ஆராய்ந்தறிந்த சில உண்மைச் செய்திகளைக் குறித்தல் தகும்.

## பெயர்

இவர் கைக்குழந்தையாயிருந்த காலத்தில் கம்பத்தடியில் கிடந்த காரணம் பற்றிக் கம்பர் என்ற பெயர் பெற்றனர் என்று சிலரும் காலிங்கராயன் என்ற தலைவனது குதிரை இறக்கும்படி பாடிய இவரை அவன் நேரில் பார்த்தபோது இவர் தம் கையில் ஒரு கம்போடு நின்றுகொண்டிருந்தமையால் கம்பர் என அத்தலைவனுல் அழைக்கப் பெற்றுப் பிறகு இப்பெயரே வழங்கிவந்தது என்று சிலரும் கூறுகின்றனர். இவையெல்லாம் பொய்க் கதைகளால் எழுந்த வெறுங் கற்பனைச் செய்திகளே. கம்பம் – தூண் ; கம்பன் - தூணில் தோன்றியவன் : நரசிங்கப்பெருமான். இப்பெயர், தெய் வப்பெயர்களை மக்கட்கு இட்டு வழங்கும் முறையால், கம்பர்க்கு எய்தியதென்றும் நரசிங்கப்பெருமானிடம் ஈடுபாடுடையாரை அப் பெருமான் பெயரால் உபசரித்துக் கூறும் முறையால் அப்பெருமான் பால் எல்லையற்ற அன்புடைய இராமாவதார நூலாசிரியர்க்கு அப் பெயர் எய்தியது என்றும் கூறுவர். கம்பர்க்கு நரசிங்கப்பிரானிடம் எல்லையற்ற அன்புண்டென்பது யுத்தகாண்டத்து வீடணன் இரா வணனுக்கு அறிவுறுக்கும் நல்லுரைகளுள் தாமே இரணியன் வதையை நுழைத்துப் பேசுமாற்ருல் விளங்கும். மேலும், 'கம்பம்' என்பதற்குத் தறியென்று பொருள்கொண்டு உருவகவாய்பாட்டால் ஒரு புலவர் கூறியாங்கு இராமபிரானுகிய வேழம் (-யானை) கட்டுண்ட தறியாய் விளங்குபவர் என்று கூறுவதும் உண்டு. கம்பர் என்பது இயற்பெயரேயன்றிக் காரணப்பெயரன்று. முற்காலத்தில் கம்பன் என்னும் இயற்பெயர் பலருக்கு இட்டு வழங்கப்பெற்றுள்ளது என்பது கல்வெட்டுக்களால் அறியக்கிடக்கின்றது. கி. பி. எட்டாம் நூற்ருண்டின் இறுதியிலும் ஒன்பதாம் நூற்ருண்டின் முற்பகுதியிலும் காஞ்சிமாநகரிலிருந்து தொண்டைநாடு சோழநாடுகளை ஆட்சி புரிந்த நந்திவர்மபல்லவனுடைய அரசியல் அதிகாரிகளுள் கம்பன் அரையன் என்னும் பெயருடைய தலைவன் ஒருவன் இருந்துள் ளனன்.[1] கி. பி. ஒன்பதாம் நூற்ருண்டினிடையில் அரசாண்ட பல்லவ வேந்தனுகிய தெள்ளாறெறிந்த நந்திவர்மனுடைய இரண் டாம் மகன் கம்பவர்மன் என்ற பெயருடையவன். அவன் கல்வெட்

[1] Epigraphia Indica, Vol. XI, No. 15.

டுக்கள் தொண்டை நாட்டின் வட பகுதியில் பல ஊர்களில் காணப்படுகின்றன.[1] முதல் இராசராச சோழனுடைய படைத் தலைவர்களுள் ஒருவன் கம்பன் மணியன் என்ற பெயருடையவன் என்பது திருப்பழனத்திலுள்ள ஒரு கல்வெட்டால் அறியப்படுகின்றது.[2] அவ்வேந்தனுடைய அரசியல் அதிகாரி ஒருவன் கம்பன் என்னும் பெயரினன் என்பது திருக்கோவலூர்க் கல்வெட்டால் புலப்படுகின்றது.[3] இவற்றையெல்லாம் நோக்குமிடத்து நம் புலவர்பெருமானுக்கு வழங்கும் கம்பர் என்ற பெயர் காரணம்பற்றி இடப்பட்டதன்று என்பதும் அந்நாளில் வழங்கியதோர் இயற்பெயரேயாம் என்பதும் நன்கு தெளியப்படும்.

தந்தையார் :

'ஆவின் கொடைச்சகன் ஆயிரத்து நூறொழித்த
தேவின் திருவழுந்தூர் நன்னாட்டு—மூவலூர்ச்
சீராரா தித்தன்றன் சேயமையப் பாடினான்
காரார்கா குத்தன் கதை.'

என்னும் பழைய பாடலால் இவருடைய தந்தையார் ஆதித்தன் என்னும் பெயரினர் என்று தெரிகிறது.

பிறந்த ஊர் :

'கம்பன் பிறந்தவூர் காவேரி தங்குமூர்
கும்பமுனி சாபங் குலைந்தவூர்—செம்பதுமத்
தாதகத்து நான்முகனுந் தாதையுந்தே டிக்காணா
ஓதகத்தார் வாழுமழுந் தூர்.'

என்ற பழைய பாடலால் இவர் திருவழுந்தூரில் பிறந்தவர் என்பது நன்கு வெளியாகின்றது. அவ்வூர் இக்காலத்தில் தேரழுந்தூர் என்று வழங்குகின்றது. அது, மாயூரத்திற்குத் தென்மேற்கேயுள்ள தேரழுந்தூர் என்ற புகைவண்டி நிலையத்திற்குத் தெற்கே இரண்டு மைல் தூரத்திலுள்ளது. இவருடைய தந்தையார் 'மூவலூர்ச் சீராராதித்தன்' என்று மேலே குறிப்பிட்ட பழைய பாடலில் கூறப்பட்டிருத்தலால், இவருடைய முன்னோர்கள் எல்லாம் மாயூரம் புகைவண்டி நிலையத்திற்கு மேற்புறத்துள்ள மூவலூரில் வாழ்ந்துவந்தவர்கள் என்பதும் இவருடைய தந்தையாராகிய ஆதித்தன் தான் அம்மூவலூரை ஏதோ காரணம் பற்றி விட்டுவிட்டுத் திருவழுந்தூரில் குடியேறியிருத்தல்வேண்டும் என்பதும் அவர் அங்கு வாழ்ந்து வந்த நாட்களில்தான் கம்பர் பிறந்திருத்தல் வேண்டும் என்பதும் உணரக்கிடக்கின்றன. திருவழுந்தூர் என்பது சோழமண்டலத்தின் உள் நாடுகளுள் ஒன்றாகிய திருவழுந்தூர்நாட்டிற்குத் தலைநகராக விளங்கிய சிறப்புடைய பழமைவாய்ந்த

[1] South Indian Inscription, Vols. III and XII.
[2] 135 of 1927–28. [3] S. I. I. Vol, VII. No. 863.

ஊராகும். அவ்வூரிலுள்ள சிவாலயமும் திருமால் கோயில்களும் முறையே திருஞானசம்பந்தப்பெருமானாலும் திருமங்கையாழ்வாராலும் பாடப்பெற்ற பெருமையுடையனவாகும். மூவலூர் மாணிக்கவாசகரால் திருக்கோவையாரில் குறிப்பிடப் பெற்ற பழைய ஊர். இவ்விரண்டூர்களும் இக்காலத்தும் ஒன்றுக் கொன்று அண்மையில் இருத்தல் அறியத்தக்கது.

## இராமாயணம் பாடிய காரணம் :

இக்கவிஞர்பிரான், 'ஆசைபற்றி அறையலுற்றேன் மற்றவ்—வேசில் கொற்றத்திராமன் கதையரோ' எனவும், 'ஆங்கவன் புகழ்ந்த நாட்டை அன்பெனு நறவமாந்தி—மூங்கையான் பேசலுற்றான் என்னயான் மொழியலுற்றேன்' எனவும் கூறியிருப்பதை நோக்குமிடத்து, இவர் எல்லையற்ற இராம பத்தியில் ஈடுபட்டவராயிருந்தே இப்பெருநூலை இயற்றியுள்ளனரென்று தெரிகிறது. இவருக்கு அத்தகைய இராமபத்தி எங்ஙனம் உண்டாயிற்று என்பது ஆராயத்தக்கது. முதலாவது,இவர் பிறந்த ஊராகிய திருவழுந்தூர், பல திருமால் கோயில்களையுடைய சிறந்த வைணவத் திருப்பதியாகும். அவ்வூரில் வைணவ சமயத்தினர் பல்கியிருந்தனர். அவர்கள் நாள்தோறும் ஆழ்வார்களுடைய திவ்யப் பிரபந்தங்களை உணர்ச்சியோடு ஓதியும் வ்ந்தனர். கம்பருடைய பெற்றோர்களும் அவ்வூரின் மேற்புறத்தேயுள்ள திருமால்கோயிலின் தெற்குவீதியிலிருந்த ஒரு வீட்டில் இருந்துள்ளனர். அச்செய்தி அங்கு இப்போது கம்பர் மேடு என்று வழங்கும் ஓர் இடத்தால் அறியப்படுகின்றது. எனவே கம்பர் இளமைப்பருவமுதல் திருமால்கோயிற் பக்கத்தில் வளர்ந்துவந்தவர் ; ஆழ்வார்களுடைய பாசுரங்களை நாள்தோறும் கேட்டுக் கேட்டு வைணவ சமயத்தில் ஈடுபாடும் தமிழ்மொழியில் பற்றும் எய்தப்பெற்றவர். சமயப்பற்றால் ஏற்பட்ட மொழிப்பற்றே இவரைப் புலவராக்கியது என்று கூறலாம். இவர் குலசேகர ஆழ்வாருடைய பாசுரங்களைப் படித்துத் தம் உள்ளத்தெழுந்த கிளர்ச்சியினால் இராமசரிதையைத் தம் வாழ்நாளில் பாடிமுடித்தல்வேண்டும் என்ற ஆசை கொண்டனராதல்வேண்டும். வெண்ணெய்ச் சடையன் விரும்பியவாறு இதனைப் பாடினேன் என்று கூறாமல் 'ஆசைபற்றி யறைய லுற்றேன்' என்று கூறியிருப்பது அறியற்பாலதாம். ஆகவே, இவரது இராமபத்தியே இவர் இராமாயணம் பாடியமைக்குக் காரணம் என்பதும் அத்தகைய பத்தியைச் சூழ்நிலையே இவருக்கு உண்டுபண்ணியிருத்தல் வேண்டும் என்பதும் நன்கு துணியப்படும்.

## நூற்பெயரும் நூல் இயற்றிய இடமும் :

இராமாயணத்தில் பாயிரத்திலுள்ள,

> 'நடையி னின்றுயர் நாயகன் தோற்றத்தின்
> இடைநி கழ்ந்த இராமாவ தாரப்பேர்த்

தொடைநி ரம்பிய தோமறு மாக்கதை
சடையன் வெண்ணெய்நல் லூர்வயிற் றந்ததே.'

என்னும் பாடலால் இவ்வாசிரியர் தம் நூலுக்கு இராமாவதாரம் என்று பெயரிட்டனர் என்பதும் இப்பெருநூலைத் திருவெண்ணெய் நல்லூரில் சடையவள்ளல் ஆதரவில் இருந்துகொண்டு பாடிமுடித் தனர் என்பதும் தெள்ளிதிற் புலனாகின்றன. ஆசிரியர் தம் நூலுக்கு இட்ட பெயர் காலப்போக்கில் வழங்காமல் மறைந்து போகவே, இதன் முதனூற் பெயரால் இராமாயணம் என்றே வழங் கப்பெற்றுவருகின்றது.

ஆதரித்த வள்ளல் :

சோழநாட்டில் திருவெண்ணெய்நல்லூரில் பெருங்காணியாள ராகவும் பெருங்கொடைவள்ளலாகவும் நிலவிய சடையன் என்ப வரே இவரை ஆதரித்துவந்த பெருந்தகையாளர் என்பது இவர் இராமாவதாரத்தில் பத்து இடங்களில் அவரைப் பாராட்டிப் பாடி யிருத்தலால் நன்கு புலப்படுகின்றது. இவர் அவ்வள்ளலை அகலி கைப் படலத்தில் 'வெண்ணெய்வாழ் கண்ணன்' எனவும், நாக பாசப் படலத்தில் 'மழையென்று—ஆசங்கைகொண்ட கொடை மீளி அண்ணல் சரராமன்' எனவும் கூறியிருப்பதால் அவருக்குக் கண்ணன், சரராமன் என்ற வேறு பெயர்களும் வழங்கியுள்ளன என்று தெரிகிறது. இப்பெயர்களை நோக்குமிடத்து, கம்பரைப் போலவே சடையவள்ளலும் வைணவசமயப்பற்றுடையவராயிருந் தவர் எனலாம். ஆகவே, கம்பருடைய இராமபத்தியும் தமிழ்ப்புல மையுமே சடையவள்ளலின் உள்ளத்தைப் பிணித்து இருவர்க்கும் பெரு நட்பு உண்டுபண்ணியிருத்தல் வேண்டும் என்பது தேற்றம். அவ்வள்ளலின் பேரன்பும் பேராதரவுமே இப்புலவர்பெருமானைத் திருவெண்ணெய்நல்லூர்க்கு வந்து தங்குமாறு செய்திருத்தல் வேண்டும். அந்நாட்களில் தான் இராமசரிதத்தைத் தமிழ் மொழியில் பாடவேண்டும் என்ற தம் விருப்பத்தை இவர் நிறை வேற்றுவதற்குத் தக்க வாய்ப்பு ஏற்பட்டது என்பதில் ஐயமில்லை. அப்போது இவர் சடையவள்ளலின் பேருதவியினால் வடமொழியில் வல்ல புலவர்களை வருவித்து அவர்கள்பால் வடமொழியிலுள்ள இராமாயண நூற்பொருள்களை நன்கு கேட்டுணர்ந்து, பிறகு அவற் றைத் தாம் சிந்தித்து ஒரு வரையறைசெய்துகொண்டு தம் நூலைத் தொடங்கிப் பாடி முடித்துள்ளனர். இப்பெருஞ்செயல் சடைய வள்ளலின் கைம்மாறு கருதாப் பேருதவியாலும் பேரன்பாலும் அவரது பெருவாழ்விற்குரிய ஊராகச் சிறந்து விளங்கிய திருவெண் ணெய்நல்லூரில் தொடங்கப்பெற்று இனிது நிறைவேறியமையால் 'இராமாவதாரப் பேர்த்—தொடை நிரம்பிய தோமறு மாக்கதை— சடையன் வெண்ணெய் நல்லூர்வயிற் றந்ததே' என்று ஆர்வத் தோடும் பெருமிதத்தோடும் இவர் பாயிரத்தில் கூறியுள்ளமை உணரற்பாலது. அவ்வூர் தன்பெயரை இழந்து குற்றாலத்திற்கு மேற்கேயுள்ள கதிராமங்கலம் புகைவண்டி நிலையத்திற்கு வடக்கே காவேரியாற்றின் வடகரையில் கதிராமங்கலம் என்னும் பெயருடன்

இக்காலத்தில் உளது. சடைய வள்ளல் வாழ்ந்த இடம் இப்போது அவ்வூர்க்குப் பக்கத்தில் பெருந்திடலாகக் கிடக்கின்றது. அப் பெருந்திடற் பகுதியே நம் கவிச் சக்கரவர்த்தி இராமாயணம் பாடிய இடமாதல் வேண்டும். தம்மைப் பேரன்புடன் ஆதரித்துப் போற்றிவந்த வள்ளலை இக் கவிஞர்பிரான்,

> 'மன்னவர் வறுமை நோய்க்கு மருந்தன சடையன்
> வெண்ணெய் அண்ணல்'

என்று வேள்விப்படலத்திலும்,

> 'விண்ணும் மண்ணும் திசையனைத்தும் விழுங்கிக்கொண்ட விரிநன்னீர்ப்
> பண்ணை வெண்ணெய்ச் சடையன்றன புகழ்போ லெங்கும் பரந்துளதால்'

என்று மிதிலைக் காட்சிப்படலத்திலும்,

> '......சடையன் வெண்ணெயில்
> தஞ்சமென்றார்களைத் தாங்குந் தன்மைபோல்'

என்று சேதுபந்தனப் படலத்திலும் உளமுவந்து பாராட்டித் தம் நன்றியறிவைப் புலப்படுத்தியுள்ளமை காண்க. இவரது இராமாயண காவியம் இல்லையேல் சடையவள்ளலின்பெயரே மறைந்து போயிருக்கும் என்பது திண்ணம்.

### கம்பரது காலம் :

இராமாயணப் பிரதிகளில் ஒரு தனிப்பாடல் காணப்படுகிறது. அது,

> 'எண்ணிய சகாத்தம் எண்ணூற் றேழின்மேல் சடையன் வாழ்வு
> நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே கம்ப நாடன்
> பண்ணிய இராம காதை பங்குனி அத்த நாளில்
> கண்ணிய அரங்கர் முன்னே கவியரங் கேற்றி னானே.'

என்பது. இத்தகைய பாடலை வைணவர்கள் தனியன் என்று வழங்குவர். இப்பாட்டில் சகம் 807-ஆம் ஆண்டில் இராமாயணம் கம்பரால் அரங்கேற்றப்பெற்றது என்ற செய்தி கூறப்பட்டுள்ளது. எனவே, கி. பி. 885-ல் இவ்வரங்கேற்றம் நடைபெற்றதாதல் வேண்டும். இக்காலத்தை ஏற்றுக் கொள்வதற்கு இப்பாடலைத் தக்க ஆதாரமாகக் கொள்ள முடியவில்லை. கம்பரைக் குறிக்கு மிடத்து, இப்பாடல் 'கம்பநாடன்' என்று கூறுகின்றது. இவரை இராமாயணத் தனியன்களுள் ஒன்று 'கம்பநாடுடைய வள்ளல்' எனவும், அரசகேசரியார் தம் இரகுவமிசத்தின் பாயிரத்தில் 'கம்ப நாடன்' எனவும் கூறியிருப்பனவெல்லாம் பிற்காலத்தெழுந்த வழக்கேயாம். கம்பநாடு என்ற பெயருடன் முற்காலத்தில் ஒரு நாடு இருந்தது என்பதற்குக் கல்வெட்டுக்களிலாதல் செப்பேடுகளிலாதல் சிறிதும் ஆதாரமின்மை அறியத்தக்கது. எனவே, இப்பாடல் பழமை வாய்ந்ததுமன்று; உண்மைச் செய்தியைக் கூறுவதுமன்று.

கம்பரது இராமாயணத்தில் சீவகசிந்தாமணியிலிருந்து எடுத்தாளப்பட்ட கருத்துக்களும் சூளாமணி விருத்த முறைகளும் ஓசை நயங்களும் அமைந்திருப்பதைக் காணலாம். ஆகவே, இவ்விரு காப்பியங்களுக்கும் பிற்பட்ட காலத்தவர் கம்பர் என்பது தேற்றம். இவ்விரு நூல்களும் கி. பி. ஒன்பதாம் நூற்ருண்டின் இறுதியிலாதல், பத்தாம் நூற்ருண்டின் முதற்பகுதியிலாதல், இயற்றப்பட்டிருத்தல் வேண்டும் என்பது அறிஞர்களது முடிபாகும். 'எண்ணிய சகாத்தம் எண்ணூற்றேழு' என்னும் பாடலை ஏற்றுக்கொண்டால், கம்பர் சிந்தாமணிக்கும் சூளாமணிக்கும் முற்பட்ட காலத்தவர் ஆவர். இஃது உண்மைக்கு முரண்பட்ட முடிவு என்பது யாவரும் அறிந்ததே. ஆகவே, இப்பாடலின் துணைகொண்டு கம்பர்காலத்தைக் காண முயலுவது எவ்வாற்ருனும் ஏற்புடைத்தன்று.

இனி, இராமாயணத்திற் காணப்படும் அகச்சான்றுகளின் துணைகொண்டு இவர் காலத்தை ஆராய்ந்து துணிவது பொருத்தமுடையதேயாம். மருத்துமலைப்படலத்திற் காணப்படும்,

> 'வன்னிநாட் டியபொன் மௌலி வானவன் மலரின் மேலோன்
> கன்னிநாள் திருவைச் சேர்ந்த கண்ணனும் ஆளுங் காணிச்
> சென்னிநாள் தெரியல் வீரன் தியாகமா விநோதன் தெய்வப்
> பொன்னிநாட் டுவமை வைப்பைப் புலன்கொள நோக்கிப் போனன்.'

என்னும் பாடலில் 'தியாகவிநோதன்' என்ற சிறப்புப்பெயரால் ஓர் அரசன் குறிக்கப்பட்டுள்ளனன். இவ்வேந்தன் கி. பி. 1178 முதல் 1218 வரையில் ஆட்சிபுரிந்த மூன்ருங்குலோத்துங்க சோழனே யாவன் என்று ராவ்சாகிப் திரு. மு. இராகவையங்கார் அவர்களும், அவர்களைப் பின்பற்றி ராவ்சாகிப் திரு. எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்களும் கூறுகின்றனர். அதற்கு அவர்கள் எடுத்துக்காட்டும் சான்றுகள் இரண்டினுள், இம்மன்னன் தியாக விநோதன் என்ற சிறப்புப்பெயருடையவனுயிருந்தமையோடு 'வீரக்கொடியொடு தியாகக்கொடி யெடுத்து' ஆட்சி புரிந்தவன் என்றும் இவன் மெய்க்கீர்த்தி இவனைப் புகழ்ந்து கூறுவது ஒன்று; மற்ருென்று 'ஆவின் கொடைச்சகன் ஆயிரத்து நூருெழித்த—தேவின்' என்ற பழம் பாடற்பகுதியால் அறியப்படும் காலக்குறிப்பாகும். இவற்றுள் முன்னையது, எல்லாச் சோழ மன்னர்க்கும் பொதுவான சிறப்புடைச் செயலேயா மென்பது கல்வெட்டுக்களால் அறியப்படுகின்றது. முதல் இராசாதிராச சோழன் 'தியாகமே அணியாக'க் கொண்டவன் என்றும்,[1] வீரராசேந்திர சோழன் 'வீரத் தனிக்கொடி தியாகக்கொடியொடும்' அரசாண்டவன் என்றும்,[2] அதிராசேந்திர சோழன் 'தியாகக் கொடி'யுடையவன் என்றும்,[3] முதற்குலோத்துங்க சோழன் 'வீரமுந் தியாகமும்

---

[1]S. I. I., Vol. V, No. 465. [2]Epigraphia Indica, Vol. XVI, No. 38.
[3]S. I. I., Vol. VIII, No. 4.

விளங்கப் பார்மிசை' ஆண்டவன் என்றும்[1] கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன. ஆகவே, சோழமன்னர்கள் எல்லோருமே தியாக விநோதர்களாக இருந்தனர் என்பதில் ஐயப்பாடு சிறிதும் இல்லை. ஆதலால் தியாகவிநோதன் என்ற தொடர் மூன்றாங் குலோத்துங்கசோழனையே குறிக்குமென்று கொள்வதற்கு இட மின்மை அறியற்பாலதாம்.

இரண்டாவது சான்றாகக் காட்டப்படும் பழம்பாடலில் குறிக்கப் பெற்ற 'ஆயிரத்துநூறொழித்த' சகம் ஆண்டு, தொள்ளாயிரம் ஆகுமேயன்றி ஆயிரத்து நூறாகாது. எனவே, அதிற்கண்ட காலக் குறிப்பு, கி. பி. 978-ஆம் ஆண்டைக் குறிக்குமேயல்லாமல் கி. பி. 1178-ஆம் ஆண்டைக் குறிக்காது என்பது தேற்றம். ஆகவே, இரண்டாவது சான்றும் பொருந்தாமை காண்க. இதுகாறும் கூறிய வாற்றால் கம்பர் இராமாயணம் பாடியது மூன்றாம் குலோத்துங்கன் ஆட்சிக் காலமாகிய கி. பி. 1178-ஆம் ஆண்டன்று என்பது நன்கு தெளியப்படும்.

இனி, கம்பர், பிலநீங்குபடலத்திலுள்ள,

'புவிபுகழ் சென்னிபே ரமலன் தோள்புகழ்
கவிகள்தம் மனையெனக் கனக ராசியும்
சவியுடைத் தூசுமென் சாந்து மாலையும்
அவிரிழைக் குப்பையு மளவி லாதது.'

என்ற பாடலில் 'அமலன்' என்னும் பரியாய நாமத்தால் ஒரு சோழமன்னனைக் கூறியுள்ளனர் என்று தெரிகிறது. இவ்வேந்தன் யாவன் என்று ஆராயுமிடத்து, சிவஞானியாகிய கண்டராதித்த சோழர்க்கும் செம்பியன் மாதேவியார்க்கும் புதல்வனாகத் தோன்றிய உத்தமசோழனாக இருத்தல்வேண்டும் என்று துணிதற்கு இட முளது. உத்தமன் என்ற பெயரையே அமலன் என்னும் பரியாயப் பெயரால் கம்பர் குறித்துள்ளாராதல்வேண்டும். இவன் கி.பி. 970 முதல் 985 வரையில் ஆட்சிபுரிந்தவன். 'ஆவின் கொடைச்சகன்' என்று தொடங்கும் பழம் பாடலில் சொல்லப்பட்டுள்ள சகம் ஆண்டு தொள்ளாயிரம் ஆகும் என்பது முன்னரே விளக்கப்பட்டது. இவ் வாண்டு கி. பி. 978 ஆகும். எனவே, கம்பர் இராமாயணம் பாடிய காலமாக அறியப்படும் கி. பி. 978-ஆம் ஆண்டு உத்தமசோழன் ஆட்சியின் நடுவில் அமைந்திருத்தல் அறியத்தக்கது. ஆகவே, கி. பி. பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கம்பர் இருந்தனர் என்பது தெள்ளிது. தமிழ்த்தாயின் அருந்தவப் புதல்வர்களாய், கவிச் சக்கரவர்த்திகள் என்ற சிறப்புப் பெயருடன் விளங்கியவர்கள், கம்பர், சயங்கொண்டார், ஒட்டக்கூத்தர், கச்சியப்பமுனிவர் என்ற நால்வருமே யாவர். இவர்களுள் கம்பரே காலத்தால் எல்லோ ருக்கும் முற்பட்ட கவிச்சக்கரவர்த்தியாவர் என்பது தேற்றம்.

---

[1] S. I. I.. Vol. V. No. 1003.

# சுந்தரகாண்டம்

## முன்னுரை

இராமாவதாரமாகிய பெருங்காப்பியத்துள் சுந்தர காண்டம் ஐந்தாவது பெரும்பிரிவாகும். இது பதினான்கு படலங்களாகிய சிறு பிரிவில் சற்று ஏறத்தாழ 1350 பாடல்களால் முற்றுப்பெற்று விளங்குவது.

வான்மீகிமுனிவர் இயற்றியருளிய வடமொழி இராமாயண சுந்தரகாண்டமோ 68 சருக்கங்களில் 2800 சுலோகங்களால் முற்றுப் பெற்றுள்ளது.

வான்மீகிமுனிவர் தம் இராமாயண நூலின் பெரும் பிரிவுகளுக்கு வழங்கிய பெயர்களையே கம்பர் தாம் இயற்றிய இராமாவதார நூலின் ஆறு பெரும் பிரிவுகளுக்கும் இட்டு வழங்குவராயினர். ஆயினும், சிறு பிரிவின் பெயரமைப்பில் கம்பர் செய்துகொண்ட மாற்றம் கற்பார்க்குத் தெளிவு பயப்பதாகும்.

முனிவர் நூலுள் சிறுபிரிவு பொதுவாய்பாட்டால் சருக்கம் என்று வழங்கப்பட்டது. இராமாவதாரத்துள் அது கதாபாத்திரங்களின் செயலோடு அல்லது அச்செயல் நிகழ்தற்கு இடமாய்நின்றவற்றின் பெயரோடு இணைந்து படலம் என்ற பெயரால் சிறப்புவாய்பாட்டால் வழங்கப்பட்டது.

முனிவர் நூலுள், அநுமன் இலங்கையிற் சீதாபிராட்டியைத் தேடிய செய்தி பல சருக்கங்களாற் பேசப்பட்டது. இராமாவதாரத்துள் அது கற்பார்க்கு எளிதாக, ஒரே படலத்துப் பேசப் பட்டமை காண்க.

சுந்தர காண்டம் என்பது நுவல்பொருள் பற்றி வந்த பெயராகும். அது சுந்தரத்தைக் கூறும் காண்டம் என விரியும். சுந்தரம் - அழகு ; காண்டம் - நூலின் பெரும் பிரிவு.

சுந்தரம் என்பது உலக நூன்முறையால் இக்காப்பிய நாயகியாகிய சீதாபிராட்டியின் திருமேனியழகினையும் குணநலங்களையும் உணர்த்தி நின்றது. இக்காவிய நாயகனை இராமபிரானுடைய திருமேனியழகினையும் ஆன்மகுணங்களையும் உணர்த்தி நின்றது எனலும் ஆகும். அன்றியும், இக்காவிய நாயகனை இராமபிரானது பணிமேற்கொண்டு கடத்தற்கரிய கடலையும் தாவிக் கடந்து புகற்கரிய பகைப்புலமாகிய இலங்கை நகரிற்புக்கு தேடிப் பிராட்டியைக் கண்டதன்மேலும் செயற்கருஞ்செயல் பல செய்து வென்றியோடுமீண்ட தலையாய தூதனை அநுமனுடைய அறிவும் ஆற்றலும் முயற்சியும் ஊக்கமும் எண்ணித்துணியும் திறமும் உரையாடற்றிறமும் பிறகுண நலங்களும் ஆகிய பெருமையினை உணர்த்தி நின்றது எனினும் அமையும்.

அறிவனூன்முறையால் சுந்தரம் என்பது இறைவனிணையடிக் கீழிருந்து இயற்றும் பணியிழந்து பிறவிச்சிறையுழந்து நொந்த

உயிர்த்தொகை உய்யும்பொருட்டு இலங்கையுள் அசோகவனத்துச் சிறையிருந்த பேறு தருவிக்குமவளாகிய பிராட்டியின் பெருமையினையும்*, உயிர்களின் குற்றங்கண்டு அவற்றைக் கைவிடாது காக்க விரையும் இறைவன் பெருங்கருணையினையும், இறைவனைப் பிரிந்து உலகியலால் வெதும்பிய உயிரை இறைவனிடம் சேர்ப்பிக்கும் ஒரு பெருங் குரவனுடைய மாண்பினையும் உணர்த்திநிற்கும் என்பர் பெரியோர்.

இனி, வடநூலார் முறைப்படி பிரிந்த தலைவனுந் தலைவியுமாகியோர் நிலை (விப்ரலம்பசிருங்காரம்) பேசுதலானும், அந்நிலை அழகுடையதாகவும் சுவை விளைப்பதாகவும் இருத்தலானும், இராமபிரானும் சீதாபிராட்டியுமாகிய இவரது பிரிவுநிலை பேசும் இக் காண்டம் சுந்தரகாண்டமாயிற்று என்பாரும் உளர்.

சுந்தரன் என்பது அநுமன் பெயர்களுள் ஒன்று எனக்கொண்டு அவன் செயல் விரித்தலின் இது சுந்தரகாண்டமாயிற்று என்பர் ஒரு சாரார்.

மற்றும் சிலர், சுந்தரம் என்பது இனிமையைச் சுட்டுவதாகக் கொண்டு, இனிமையாகிய (-சுந்தரமாகிய) காண்டம் என்று கூறுவர். இக்கூற்றுள் இனிமைப்பொருட்கு இக்காண்டத்தோடு மட்டும் ஒரு தனிச் சிறப்பான இயைபு புலப்படாமையாலும், அவ் வினிமை பிறகாண்டங்களுடனும் இயைபுடையதாதற்குத் தடையில் லாமையாலும், இக்கூற்று, நுவல்பொருள்பற்றிப் பிற காண்டங் கட்கும் வழங்கும் பெயர்வழக்கொடு மாறுகொள்ளுதலானும் பொருந் துவதாயில்லை.

எனவே, சுந்தரம் என்பதற்கு அழகு என்று பொருள் கொண்டு முற்படவிரித்த விளக்கமே பல்லாற்றானும் இயைபுடையதாகும்.

இக்காண்டத்துக்கு வடமொழியிலக்கண முறையினமைந்த சௌந்தரிய காண்டம் என்ற தலைப்பும் ஒரு சில ஓலைச்சுவடிகளிற் காணப்படுகிறது.

இராமாவதார நூலை நாடகக் காப்பிய அமைதிகொண்டு நோக்கின், நாடக நூற்கு விதிக்கப்பட்ட முகம், பிரதிமுகம், கருப்பம், விளைவு, துய்த்தல் என்னும் சந்தி ஐந்தனுள் இக்காண்டத்தின் நுவல்பொருளாகிய சீதாபிராட்டியின் சிறையிருப்பு, விளைவு என்னும் சந்தியின்பாற்படும். விளைவு - முதிர்தல். அஃது இராவணன் முதலிய அரக்கர் செய்த தீமையின் முதிர்ச்சியையும், இந்திரன் முதலிய தேவரும் முனிவரும் பிறரும் இயற்றிய அறத்தின் விளைவையும் உணர்த்தும். இராவணன் முதலியோர் செய்த தீவினைகளுள் பிராட்டியைப் பிரித்துச் சிறை வைத்ததனினும் கொடியது பிறிதொன்றுண்டோ? தேவரும் பிறரும் இயற்றிய அறவினையுள் இறைவனை (இராமபிரானை)ச் சரண்புக்கதினும் மேம்பட்ட அறவினையுண்டோ?

---

*இதுபற்றியே 'இராமாயணத்தால் சிறையிருந்தவளேற்றம் சொல்லுகிறது' (ஸ்ரீவசநபூஷணம் 1, 5) என்று பெரியோரும் அருளிச்செய்வர்.

இனி அரக்கர்தீமை ஓங்கிய நிலை மேற்கூறிய ஐந்துசந்தியானும் விளக்கப்படும்.

தாடகை முதலியோர் மூலம் இராவணன் நல்லோர்திறத்து இழைத்ததாகப் பாலகாண்டத்துக் கூறப்பட்ட தீமை, முகம் என்னும் சந்தியின்பாற்படும். அத்தீமை இராவணனால் பின் இழைக்கப்படும் தீமைக்கெல்லாம் வித்தாகிநின்றது. இதனைக் கம்பர்,

"இலங்கையர சன்பணி யமைந்தொரிடை யூருய்
விலங்கல்வலி கொண்டெனது வேள்விநலி கின்றாள்'
(தாடகை வதை. 44)

என விசுவாமித்திரமுனிவன்கூற்றிலும்,

"பொடியுடைக் கான மெங்கும் குருதிநீர் பொங்க வீழ்ந்த
தடியுடை யெயிற்றுப் பேழ்வாய்த் தாடகை தலைகள் தோறும்
முடியுடை யரக்கற் கந்நாள் முந்தியுற் பாத மாகப்
படியிடை யற்று வீழ்ந்த வெற்றியம் பதாகை ஒத்தாள்"
(தாடகை வதை. 74)

எனத் தம் கூற்றிலும் குறித்துச்செல்வாராயினர்.

மேற்கூறிய வித்து, பின் அயோத்தியாகாண்டத்து இராம பிரான் முடிசூட்டுவிழாவுக்குத் தயரதனால் தருவிக்கப்பட்ட மங்கல நன்னீரில் ஊறி முளைக்கொண்டது. இங்கே,

"இன்னல்செய் இராவணன் இழைத்த தீமைபோல்
துன்னருங் கொடுமனக் கூனி தோன்றினாள்."
(மந்தரைசூழ்ச்சி. 39)

"அரக்கர் பாவமும் அல்லவர் இயற்றிய அறமும்
துரக்க நல்லருள் துறந்தனள் தூமொழி மடமான்"
(மந்தரைசூழ்ச்சி. 78)

என்னும் கம்பர்வாக்கு நோக்கத்தகும்.

மேற்கூறிய முளை ஆரணிய காண்டத்துச் சூர்ப்பநகை கரன் முதலிய இராவணன்சுற்றத்தார் இழைத்த தீய செயலால் பிரதிமுகம் ( - நாற்று) என்னும் சந்தியாகித் தழைத்தது. இராவணன் மாய மானாகிய மாரீசன் துணைகொண்டு இராமலக்குமணர்களைப் பிரித்துக் கள்ள வேடத்தோடு சென்று, தனியிருந்த பிராட்டியைக் கவர்ந்த செயலால் கருக்கொண்டது; பின் பிராட்டியை அசோக வனத்துச் சிறைவைத்து இழைத்த கொடுமையால் (சுந்தரகாண்டத்து) விளைந்து முதிர்ந்தது. யுத்த காண்டத்துள் இராவணன் குலத்தொடுமடிதல் கூறுதலால் இராவணன் தான் இழைத்த தீமையின் பயனுகர்தல் ( - துய்த்தல்) விளக்கி நின்றது.

தேவரும் பிறரும் இயற்றிய அறமும் இவ்வாறே ஐந்து சந்தியானும் விரிதல் உற்று நோக்கிற் புலப்படும்.

இராமாவதார நூலுள் ஒவ்வொரு காண்டமும் உறுதிப்பொருள் நுவலுதலாற் சிறப்புறுமேனும், மேற்கூறியவாறு உலக நூன்முறையானும் அறிவனூன்முறையானும் பல்வேறு உறுதிப்பொருள்களை நுவலுதலால், சுந்தரகாண்டம் மற்றைக் காண்டங்களினும் சிறப்புடைத்தென்பது கூறுமதே அமையும். இத்தகைப் பெருமை வாய்ந்து பாராயண நூலாக விளங்கும் இராமாயணத்துள் சுந்தர காண்டம் பல்லோராலும் சிறப்பாகப் போற்றிப் பாராயணஞ் செய்யப்படுதல் உலகம் அறிந்ததொன்று.

இராமகதைநிகழ்ச்சியில் சீதாபிராட்டி இராமபிரானைப்பிரிதல் மூன்றிடங்களிற் பேசப்படுகிறது. அப்பிரிவு மூன்றனுள் சுந்தர காண்டத்துப் பேசப்படும் அசோகவனச் சிறையிருப்பு முதற் பிரிவாகும். இது, தேவர் சிறை நீங்கி உய்யும் பொருட்டுப் பிராட்டியால் மேற்கொள்ளப்பட்டமையின் இது பிராட்டியின் பெருங் கருணைத் திறத்தைப் புலப்படுப்பதாயிற்று.

அன்றியும், இராமபிரானைப் பிரிந்து இராவணன் சிறையிற் பட்டு, அவனுடைய ஆண்மை அரசு செல்வம் முதலியவற்றை மதித்துத் தன்னிலை பிறழாமலும், தான் உற்ற துயரைப் போக்கிக் கொள்ளும் ஆற்றல் தனக்குண்டாயினும்* அச்செயலினை மேற் கொள்ளாமலும், இராமபிரானிடம் கொண்ட பெருங்காதல் மூளத் தன்னை மீட்டற்கு அப்பெருமான் வரவை எதிர்பார்த்திருந்த பத்தினித்தெய்வத்தின் ஒழுகலாறு, உலகியலிற் கற்புடைமகளிர் மேற் கொள்ளவேண்டிய ஒழுகலாற்று விளக்கமாகத் திகழ்வது. இதன் சிறப்பையே,

> "பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
> திண்மையுண் டாகப் பெறின்.''
>
> "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
> பெய்யெனப் பெய்யும் மழை.''
>
> "தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
> சொற்காத்துச் சோர்விலாள் பெண்.''
>
> "சிறைகாக்கும் காப்பெவன் செய்யும் மகளிர்
> நிறைகாக்கும் காப்பே தலை."

என்று தமிழ்மறையும் பாராட்டுகின்றதெனின் அது மிகையாகாது.

இராமாவதார சுந்தர காண்டம் பழைய ஓலைச் சுவடிகளில் ஒரு படியின்றிப் படலங்கள் மிக்கும் குறைந்தும் வேறுபட்டும், பாடல்கள் ஏறியும் குறைந்தும் மாறுபட்டும், பாடல்தோறும் அடிதோறும் சொற்களும் தொடர்களும் மாறி ஊறுபட்டும் காணப்படுகின்றன. அவற்றுள் சிறந்தசில பாடல்களும்,பொருட் சிறப்புடைய எல்லையற்ற பிரதிபேதங்களும் நல்ல பாடங்களும் உள. அவையெல்லாம் இப் பதிப்புள் ஆங்காங்குக் காட்டலாகும்.

---

*'எல்லை நீத்த உலகங்கள் யாவும் என்—சொல்லினாற் சுடுவேன் அது தூயவன்—வில்லி னாற்றற்கு'மாசென்று வீசினேன்.' (சூடா.17) என்பது காண்க.

# 1. கடல் தாவு படலம்

இது, மகேந்திரமலையில் நின்ற அநுமன் தென் கடலைத் தாவிக் கடந்த செய்தி பேசுதலின் இப்பெயர்த்தாயிற்று. தாவிக் கடக்கப் பட்டது தென்கடல்; எனவே அக்கடலின் வடவெல்லையாகிய மகேந் திர மலையும் தாவிக் கடந்து அடைந்த இலங்கைத் தீவின் பவளமலை யும் பெறப்படும். இப்படலத்து அநுமன் கடல் தாவிய செய்தி 94 செய்யுட்களாற் பேசப்படுகிறது. இது வான்மீகத்துச் சுந்தரகாண் டத்து முதற்சருக்கத்து 202 சுலோகங்களாற் பேசப்பட்டது.

இங்கே இக்காவிய நாயகியாகிய சீதாபிராட்டிக்கும் நாயகனை இராமபிரானுக்கும் இடையே அவர்களுள் ஒருவரையொருவர் கிட்டி அளவளாவுவதற்கு இடையூருகத் தெற்குக் கடல் விரிந்து பரந்து கிடத்தல், இறைவனைப் பிரிந்து வினைவசத்தால் துயருறும் உயிர் இறைவனையடைதற்குத் தடையாக எல்லையற்ற பிறவியாகிய கடல் இடையே கிடத்தலைக் குறிப்பான் உணர்த்தும்.

இராமபிரானைப் பிரிந்து அசோகவனத்துச் சிறையில் வருந்திய பிராட்டியைத் தேடிக் கண்டு தேற்றி மீண்ட அநுமன் உரையால், பிராட்டி நிலையறிந்த இராமபிரான், கடல் கடந்து இராவணனை வென்று பிராட்டியை மீட்டருளியது, தன்னைப் பிரிந்து பிறவிச் சிறை யில் வருந்தி நற்குரவனுரையால் உறுதிப் பொருளுணர்ந்த உயிரை அந்நற்குரவனுரை கொண்டு இறைவன் பிறவிக்கடலினின்று முத்தி யங்கரையேற்றி ஆட்கொண்டருளுவன் என்பதைக் குறிப்பான் உணர்த்தும்.

புணை முதலிய கருவிகளின்றிக் கடல்கடத்தலும் வானவூர்தி முத லிய கருவிகளின்றி ஆகாயவழிச்செலவும் என்றும் எங்கும் நிகழ்வன வல்ல, கவி கற்பனையே: என்போரும் உண்டு. அது பொருந்தாது. யோகசித்தி யெய்தினர்க்கு இவை யெளிதென்பது பண்டை நூற்றுணிபு.

முன்னையோருள் முனிவரும் பிறரும் வான்வழிச் செலவுடையரா யிருந்தமை புராண இதிகாசங்களில் பரக்கக் கேட்கப்படுகிறது.

'' மையறு விசும்பின் மண்ணின் மற்றுமோ ருலகின் முற்றும்
மெய்வினை தவமே யன்றி மேலுமொன் றுளதோ கீழோர்
செய்வினை நாவா யேறித் தீண்டலர் மனத்திற் செல்லும்
மொய்விசும் போட மாகத் தேவரின் முனிவர் போனர்.''

(இராமாவதாரம். குகப். 6

என்பர் கம்பர். பௌத்தர், சைநர் முதலியோருள்ளும் அந்தர சாரிகள் உண்மை மணிமேகலை முதலிய நூல்களால் அறியலாம்.

'மாப்போரிற் புறங்காப்பென் வான்சுமந்து செலவல்லேன்' (128) என்பது அரக்கியாகிய சூர்ப்பநகை கூற்றன்றோ?

தம் உருவை அதனிலையினும் பன்மடங்கு பெரியதாகவும் அணுவினும் சிறியதாகவும், மிக்க கனமுடையதாகவும் மிக மிக நொய்தாகவும் ஆக்கிக்கொள்ளவல்ல ஆற்றலுடையார்க்கே கடலைத் தாண்டிக் கடத்தலும் வான்வழிப் பறந்து செல்லலும் இயலுவனவாம். அநுமன்பால் இவையனைத்தும் ஒருங்கமைந்திருந்தமை இப்படல நிகழ்ச்சிகளால் நன்கு விளங்கும்.

இராமபிரான்பணி மேற்கொண்டு கடல்கடக்க முற்பட்ட அநுமனுக்கு முன்னே சுரசை அங்காரதாரை முதலியோரால் உண்டான இடர்களுக்கு எல்லையில்லை. அவற்றையெல்லாம் அவன் தன் மதி வலியாலும் தளராத ஊக்கத்தாலும் கடந்து வெற்றியொடு மீள்வானாயினன். இவ்வாறு இடர்ப்பாடுகளைக் கடந்து வென்றியொடு மீண்ட அநுமன் செயல்,

"இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில்."

"வெள்ளத் தனைய இடும்பை யறிவுடையான்
உள்ளத்தின் உள்ளக் கெடும்."

"இடும்பைக் கிடும்பை படுப்பர் இடும்பைக்
கிடும்பை படாஅ தவர்."

"மடுத்தவா யெல்லாம் பகடன்னான் உற்ற
இடுக்கண் இடர்ப்பா டுடைத்து."

"அடுக்கி வரினும் அழிவிலான் உற்ற
இடுக்கண் இடுக்கட் படும்."

(திருக்குறள். 621-625)

என்னும் தமிழ்மறைக்கு எடுத்துக்காட்டாகும் பெருமையுடைத்து.

கடலைக் கடத்தற்கு அநுமன் கொண்ட வேகம் எல்லையற்றது; இலங்கையையும் கடக்கத் தாவும் அளவின் அமைந்தது. இந்நிலையில் அவனுக்கு எதிர்ப்பட்ட இடையூறுகள், அளவுகடந்த விரைவோடு செல்லும் தேர், நெறிகடந்து, தெருவிலுள்ள வீடுகளின் மேல் மோதித் தான் சிதைவடையாமலும் அவ்வீடுகளைச் சிதைக்காமலும் செவ்வே சென்று குறித்த எல்லையை அடையுமாறு வல்ல வினையாளரால் கொடுக்கப்படும் சறுக்குக் கட்டைபோல், அநுமன்

வேகத்தைப் படிப்படியாகக் குறைத்து இலங்கை யெய்தற்குவேண்டு மளவில் நிறுத்தி நன்மை விளைப்பனவாயின எனினும் இழுக்காது. இதனல் நல்வினைபுரிவார்க்கு இடையே இடர் நேருமாயின் அதுவும் அவர்க்கு அவர் முயற்சியில் உதவி நலன் விளைக்கும் என்னும் நீதியும் புலனாகும். இனி, இப்படலப் பாடல்களைக் கவனிப்போம்.

மலையின் மீது நின்றபோது அவன் கொண்ட பேருரு, பாய்வதற்காக அவன் தாள்களை அழுத்தியபோது அம்மலையில் நிகழ்ந்த காட்சிகள், கடலைத் தாவுவதற்கேற்ப அவன் தன் உறுப்புக்களை அமைத்துக்கொண்ட முறைகள், அவன் பாயத் தொடங்கினபோது மலையிலும் கடலிலும் பிற இடங்களிலும் உண்டான நிகழ்ச்சிகள், அவன் உருவத் தோற்றத்துக்கும் செலவின் வேகத்திற்கும் உவமைகள், ஆகியவற்றை முதல் முப்பத்தெட்டுச் செய்யுட்களில் ஆசிரியர் கூறுகின்றார்.

அநுமனுக்கு வழியிலே மூன்று இடையூறுகள் உண்டாயின. அவை முறையே (1) மைநாக மலையினாலும் (2) அரக்கி உருவில் தோன்றிய சுரசை என்ற நாகமாதாவாலும் (3) அங்காரதாரை என்ற அரக்கியாலும் நிகழ்ந்தவை. மைநாகமலை நட்பும் நன்றியறிவும் கொண்டு கடற்கடவுளின் தூண்டுதலால் அநுமனுக்கு உதவி செய்யத் தோன்றியது. அதன் உண்மையை அறிந்தபின், அவன் அதனிடம் நன்மொழி கூறி அகன்றான். சுரசை தேவர்களால் அநுமனின் வலியை அறிவதற்காக அனுப்பப் பெற்றவள்; அவள் அகத்தே நட்பும் புறத்தே பகைமையுங்கொண்டு தோன்றினாள். அவளுக்கு ஓர் இடையூறில்லாமலே அநுமன் அவளைக் கடந்தது, தான் மேற்கொண்ட அறவினைக்கு ஒத்ததாகவேயிருந்தது. அங்காரதாரையோ அகமும் புறமும் பகைமையையே கொண்டவள்; அவளைக் கொன்றே கடந்தான் அநுமன்.

இப்படலத்தில் கதைப்பகுதி மிகக்குறைவே. இராமாயணத்தில் அநுமன் ஏற்கும் நிலைக்கும், அவன் பிறர் ஒருவராலும் செய்யவியலாத பெருஞ்செயலை நிகழ்த்தும் நலத்துக்கும், வீரச்செயலுக்கும், சுந்தரகாண்டத்தின் மைய நிகழ்ச்சியான பிராட்டியின் தற்கொலையைத் தடுக்கச் செல்லும் அக்கருணாமூர்த்தியின் பெருமைக்கும் ஒத்தவாறு வருணனைகளையும் உவமைகளையும் அமைப்பதிலேயே இப்படலப் பாடல்கள் பெரும்பாலும் அமைந்துள்ளன.

அநுமனின் பேருருவும் வேகமும்: மகேந்திர மலையில் நின்ற அநுமன் துறக்க நாட்டை அருகிற் காண்டலும் இலங்கை மூதூரை முன்னே நெடுந்தூரத்தில் காண்டலும் எளிதாயின. அவன் வானத்தில் குறுக்கே படர்ந்து செல்லும்போது அவனது உடல் மேலே ஒளி

யும் கீழே இருளும் அமையும்படியாயிருந்தது (65). சுரசை அவனை விழுங்குவதற்காகத் தன் வாயைத் திறந்தபோது, அவள் வாய் சிறிதாம் வகை அவன் பின்னும் நீண்டான்.

இவ்வாறு நினைத்தற்கும் முடியாத அளவு பேருருவை ஆக்கிக் கொள்ளும் ஆற்றல் அநுமனுக்கு இருந்தது. அவ்வுருவை அவன் உடனே தன் விருப்பப்படி சுருக்கிக்கொள்ளவும் ஆற்றல் பெற்றிருந்தான் என்பதை அவன் சுரசையின்வாயினுட் சிறியவுருவுடன் புகுந்தமையால் அறியலாம். இவ்வாறு அநுமன் வேண்டும்போது தன் உடலைப் பெருக்கிக்கொள்ளவும் சுருக்கிக்கொள்ளவும் ஆற்றல் பெற்றிருந்தது, கதைப் போக்குக்குப் பெருந்துணையாயிருந்த தென்பதை இக்காண்டத்தில் மேலும் காண்போம்.

அவனுடைய வேகம் அவனுருவுக்கு ஒத்தவாறே அமைந்திருந்ததை ஆசிரியர் நன்கு புலப்படுத்துகின்றார். அவனுடைய உருவம், வேகம், வலிமை, மனஞ்சோராமை, சமயோசித சாமர்த்தியம் ஆகிய அரிய குணங்களோடும், அறவுணர்ச்சியோடும், அறத்தின்பொருட்டு, அறவழியிலேயே அவன் செயலாற்றினமையும் ஒவ்வொரு செய்யுளிலும் வெளிப்படையாகவும் குறிப்பாகவும் ஆசிரியர் காட்டிச் செல்வது அறிந்து நுகர்ந்து இன்புறத் தக்கது.

வருணனை: ஆசிரியர் தாம் கொண்ட கருத்தை நினைத்தபடியே புலப்படுத்த இயற்கையை ஒட்டிக் காட்சிகளை வருணிக்கின்றார்.

மலையில் நின்றவண்ணமே அநுமன் கடல்மீது தாவத் தலைப்படுகின்றான். அவன் உடற்பொறையையும் வேகத்தையும் புலப்படுத்த அங்கு நிகழ்ந்த நிகழ்ச்சிகளை ஆசிரியர் ஒவ்வொன்றாக வருணிக்கின்றார்.

மலை நெரிகிறது; முழைகள் நொறுங்குகின்றன; விலங்குகளும் பறவைகளும் அஞ்சியோடுகின்றன; அங்கு வாழ்ந்த முனிவர், விஞ்சையர், தேவர் முதலியோர் அஞ்சியோடுகின்றனர். மலை கடலுள் ஆழ்கிறது. இச்செய்திகளைப் பத்துச் செய்யுட்கள் (4-13) கூறுகின்றன. இவற்றுட் சில அவ்வப்பொருள்களின் இயல்புகளுடன் நேரடியாகவும் உவமவாயிலாகவும் அமைக்கப்பட்டுள்ளமை படிப்பவர் கண்முன் அக்காட்சிகள் புலப்படுவனவாக அமைய உதவுகின்றது.

மலையிலுள்ள கொடிய பிராணிகளுள் சில நாகம், சிங்கம், புலி, யானை என்பனவாம். இவற்றின் நிலைகளைக் கூறின், மற்றப் பிராணிகளின் நிலையைக் கூறவேண்டுவதில்லை. இவற்றுள் புலி தன் குட்டியைக் கௌவிச் செல்லும் காட்சியும், யானைகள் தம் பிடிகளோடு மரங்களைப் பற்றிக் கொள்ளும் காட்சியும் இயற்கைக்கு ஒத்திருத்தலோடு

இரக்கத்தை ஊட்டுவனவாயும் இருக்கின்றன. முழைகளினின்று பாம்புகள் அஞ்சி வெளியே பெயர்வது, மலையின் குடல் கீறி வெளிப் போந்ததாகவும், அருவிநீர் பலவகை நிறப் பொருள்களுடன் ஓடுவது குன்றம் கிழிந்து குருதி வழிந்ததாகவும் கூறப்படுகின்றன. மலைச் சோலைகளில் தேவர்களும் விஞ்சையரும் வந்து தங்கியிருந்த னர் என்றும், தவசியர் பலர் அங்கிருந்தனர் என்றும் காட்ட அவர்கள் அஞ்சிய நிலையை ஆசிரியர் அழகுபட வருணித்துள்ளார். பெண்டிர் அச்சத்தால் அருகிலுள்ள கணவரை அணைத்துக் கொண் டனர் என்றும், அவர்கள் அச்சத்தால் தமக்குரியவற்றை யெல்லாம் விட்டுச் செல்லும் நிலைமையிலும் தாம் வளர்த்த பைங்கிளிக்கு இரங்கினர் என்றும் புலவர் பாடியுள்ளார்.

இங்கு வான்மீகி முனிவர் மகேந்திரத்தின் வளங்களைப் பல சுலோகங்களில் கூறிக் கதையைத் தொடங்கியிருக்க, கம்பர் அவ்வாறு கூருமல், அங்குள்ள பல உயிர்களும் அச்சத்தால் அடைந்த நிலைமையைக் காட்டி அதன் வளமையை ஊகிக்க வைத்ததன் நயம் கூர்ந்து நோக்கத்தக்கது.

மலையை விட்டு எழும்போது அநுமன் செய்த செயல்களை முத னூல் விளக்கமாகக் கூறும். அவன் தன் வாலைப் பாறையில் வேகமாக அறைந்து, கைகளை மலைமீது ஊன்றி, இடையை நுணுக்கி, கைகால்களை மடக்கி, கழுத்தையும் குறுக்கி, தன் ஆற்றலும், வலி மையும், வீரத் தன்மையும் விளங்கத் தன் துணைவர்களுடன் சில சொற்களைக் கூறிக் கிளம்பினன் என்று அந்நூல் கூறும். இச்செய் தியைக் கம்பர் ஒரே பாட்டில் (17) அழகு பெறப் படம் பிடித்துக் காட்டுகிருர். அச்சமயம் அவன் பேசியதாக அவர் கூறவில்லை.

அவன் எழுந்த வேகமும் கடலிற் சென்ற வேகமும் (18-32) பதினைந்து பாடல்களில் கூறப்படுகின்றன.

இதுவே சிறிதும் கதையில்லாமல் வருணனையைக் கொண்ட பகுதியாகும். இங்குக் கம்பர் பெரும்பாலும் புராணங்களிற் கூறப் படும் வரலாறுகளையே உவமையாகக் கொண்டனர். முத்தலைக்கிரி, புட்பகம், கயிலை, மேரு, வாயு, சூரியன், சந்திரன், கலுழன் ஆகியவை இலங்கையை நோக்கிச் செல்கின்றனவோ என்று தோன்றும்படி அநுமன் விரைந்தனன் என்று கூறும் பாடல்களில் கம்பர் காட்ட விரும்பும் காம்பீரியம் வியந்து பாராட்டத்தக்கது.

முத்தலைக்கிரி, மேரு, வாயு ஆகியவை இலங்கை நகர அமைப் புக்கு உதவின. சூரியனும் சந்திரனும் உற்பாதங்களாக அமைந்தன. இருமுறை அமுதத்தை எடுக்கச்செல்லும் கலுழன் பிராட்டியைக் காணவும் அவளை மீட்கவும் இருமுறை செல்லும் அநுமனுக்கு ஏற்ற

உவமையாயினன்; அநுமனின் முன் நீட்டிய கைகளுக்கும் பின்னே உயர்த்த வாலினுக்கும் காட்டிய உவமைகள் இராமாவதார இரகசியத்தைச் சுட்டிக் கதையுடன் தொடர்புடையனவாயின. இவ்வாறு மிகச் சிறந்த குறிக்கோள்களோடு ஆசிரியர் அமைத்த உவமைகளின் நுட்பம் கூர்ந்து நோக்கி இன்புறத் தக்கது.

இனி அநுமனுக்கு நேர்ந்த இடையூறுகளின் அமைதியைக் காண்போம். மைநாகத்தின் காட்சிக்கு ஐராவதம், மாயோன், கூர்மாவதாரம், உவணத்தரசு, பிரமன், அண்டம், திங்கள், ஆகியவை உவமையாகக் கூறப்படும். உலகத்தோற்றத்தை முறையே கூறுவது புராணத்தின் சிறப்பு. இதிகாசமாகிய இந்நூலில் நேரடியாக அதனைக் கூறுவது முறையன்றுமாகையால், ஆசிரியர் மைநாக எழுச்சியின் வாயிலாக அமைத்தனரோ என்று நினைக்க இடமுண்டாகிறது. மைநாகத்தின் பருமன், நிறம், வளம், ஆகிய பலவும் நமக்குத் தெரியவும் அது கடலினுள்ளிருந்து விரைவில் எழுந்தமை நம் கண்முன் தோன்றவும் இவ்வுவமைகள் அமைந்துள்ளன; அவை யாவும் மங்கலகரமாக அமைந்திருப்பதும் நோக்கத்தக்கது. அம்மலை வெளியே எழுந்த காலத்திலும் அதன் பின்னும் அதன்மீதும் சுற்றுப்புறங்களிலும் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை (47-50) நான்கு பாடல்களில் ஆசிரியர் அமைக்கின்றார். பெரியதொரு பொருளைத் தோன்றச் செய்து அதனால் விளைந்தவற்றைக் கூற மறந்திருப்பாராயின் அவர் இயற்கையை நுனித்துணராதவர் என்ற இழுக்குக்கு இடங்கொடுத்தவராவர்; இக்குறைக்கு இடம் நேராதபடி அவர் காத்துக்கொண்டமை அவர் மகாகவியானமையினாலேதான் என்று கூறவும் வேண்டுமோ ? இங்கும் கம்பீரமே சிறந்த சுவையாயிருத்தல் கவனிக்கத்தக்கது.

இனி மைநாகமலைக்கும் மாருதிக்கும் நடத்த உரையாடல் அவ்விருவரின் பெருந்தன்மைகளையும், கடமைகளையும், அறத்தன்மையையும் விளக்குவனவாகும். மைநாகத்தின் நன்றியுணர்ச்சிக்கு அநுமனின் கடமையுணர்ச்சியே இணையாகி முடிவில் பின்னதே வென்றது.

சுரசையின் இடையீடு (66–72) ஏழு செய்யுட்களில் முடிகின்றது; அங்காரதாரையிடையீடு (76-84) ஒன்பது செய்யுள்களைக் கொண்டதாகிறது. சுரசையின் வருணனை 'பேழ்வாயொ ரரக்கி யுருக்கொடு பெட்பி—னோங்கி' என்ற ஓரடியில் அமைய, அங்கார தாரையின் வருணனை (76—78) மூன்று செய்யுள்களைக் கொண்டதாகின்றது. அதற்குக் காரணம் அவர்களால் விளையும் கொடுமையின் அளவேயாகும். சுரசை சோதிக்க வந்தவள், போலிவேடங்கொண்டவள் தாயினும் அன்பு தாழ்ந்தவள். அரக்கியோ கொல்லவந்தவள்;

இயற்கையில் அச்சம் தரும் உருக்கொண்டவள்; அறத்தை அருளொடும் தின்றவள். சுரசையிடம், 'பெண்பால் ஒருநீ பசிப்பிழை யொறுக்க நொந்தாய், உண்பாய் எனது ஆக்கையை யான் உதவற்கு நேர்வல்' என்று அநுமன் அவளிடம் இரங்கி உதவியும் செய்வதாகக் கூறி அவளைக் கொல்லாமல் ஏமாற்றி வெல்கின்ருன்; அங்காரதாரையோ 'பெண்பா லெனக்கருது பெற்றி யொழி; உண்பா லொருத்தி அது ஒழிப்பதரிது' என்று முழங்குகிருள். இரணியன் குடலைக் களைந்த கோளரிபோன்ருயினன் அநுமன். ஈரிடங்களிலும் தேவர் வாழ்த்துகின்றனர்; ஆனல் பின்னதிலோ தானவர் வேர்த்து அழுங்குகின்றனர். இம்மாறுபாடுகள் இருவர் நிலைமைகளின் இயல்புக்கும், அவர்களால் உண்டாகும் விளைவுகளுக்கும் ஒப்பக் காட்டப் பெற்றிருப்பது கூர்ந்து நோக்கத்தக்கது.

அநுமன் இவ்விடையூறுகளை அன்பாலும், வஞ்சனையாலும், கொடுமையாலும் கடந்து பவளமலையில் இறங்குகிருன் என்பதனேடு இப்படலம் முடிகின்றது. கடலழுவத்து ஆழும் கலம்போலத் தான் புறப்பட்ட மகேந்திரமலையை அழுந்தச் செய்த அநுமன், (8) வாடை தாக்குறத் தளர்ந்து சிந்துங் கலமெனத்தக்க பவளமலையில் இறங்கினுன் (91) என்று அநுமனின் உடற்பொறையின் பெருமையையும் வேகத்தின் உயர்வையும் கூறியதோடு, தென்புலம் வந்த அநுமனை வாடைக்காற்ருகக் கூறியது மிகவும் பொருத்தமாகிறது.

அநுமனுடைய ஆற்றலைத் தெளிவிக்க வந்த இப்படலம் அவனுடைய பணிவு, பக்தி, அன்பு, சாதுர்யம், வீரம் ஆகிய சிறந்த அகப்பண்புகளையும் ஆங்காங்கே புலப்படுத்திச் செல்கின்றது. தேவர், முனிவர் முதலியோர் ஆசி அவனைத் தொடக்கத்திலிருந்து காத்துவருவதையும், இராமகாரியத்தில் அவன் கொண்ட உறுதிப்பாட்டையும், இராமநாமத்தில் அவன் கொண்டிருந்த திடநம்பிக்கையையும், அறத்தின் தூதனுக அவன் செல்லும் பான்மையையும் ஆசிரியர் ஆங்காங்கே சுட்டிக்காட்டி அவன் செலவுக்கு அரண் வகுத்து அமைப்பதும் நோக்கி வியக்கத்தக்கதே.

அநுமன் கடலைத் தாவுவதோடு நில்லாமல் நாமும் ஒன்ருகி அவனுக்கு நேரும் நிகழ்ச்சிகளிலெல்லாம் பங்கெடுத்துக் கொள்கின்றவர்களாகின்ருேம். ஆசிரியர் கையாளும் வருணனைகளும், உவமைகளும், ஓசைநயங்களும் நம்மை மறக்கச்செய்து அவருடன் கதையை அனுபவிக்கச்செய்கின்றன.

---

ஸ்ரீ:

# சுந்தர காண்டம்



## 1. கடல் தாவு படலம்



### கடவுள் வாழ்த்து

1. அலங்கலிற் றோன்றும் பொய்ம்மை
 யரவெனப் பூத மைந்தும்
விலங்கிய விகாரப் பாட்டின்
 வேறுபா டுற்ற வீக்கம்
கலங்குவ தெவரைக் கண்டா
 லவரென்ப கைவி லேந்தி
இலங்கையிற் பொருதா ரன்றே
 மறைகளுக் கிறுதி யாவார்.

அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவு எனப் பூதம் ஐந்தும்
விலங்கிய விகாரப்பாட்டின் வேறுபாடு உற்ற வீக்கம்
கலங்குவது எவரைக் கண்டால், அவர் என்ப, கையில் ஏந்தி
இலங்கையில் பொருதார் அன்றே, மறைகளுக்கு இறுதி ஆவார்!

குறிப்புரை: ஒவ்வொரு காண்டத்தையும் கடவுள் வாழ்த்தொடு தொடங்குதல் இந்நூலாசிரியர் முறை. இக்காண்டத்துக்கு அமைந்தது ஏற்புடைக்கடவுள்வாழ்த்தாகும். வழிபடுகடவுள்வாழ்த்தெனினும் அமையும். வாழ்த்து, வணக்கம், பொருள்நிலையுரைத்தல் என்னும் வாழ்த்துவகை மூன்றினுள் இச்செய்யுள் பொருள்நிலையுரைத்தலின்பாற்படும்.

எவரைக் கண்டால் பூதமைந்தும் விலங்கிய விகாரப்பாட்டின் வேறுபாடுற்ற வீக்கம், அலங்கலில் தோன்றும் அரவின் பொய்ம்மையெனக் கலங்குவது, அவர் மறைகளுக்கு இறுதியாவார், அவரே இலங்கையிற் பொருதார் என்ப: என்று கூட்டிப் பொருளுரைக்க.

மாலையினிடத்துப் பாம்பென்று தோன்றும் திரிபுணர்ச்சியானது, மாலையென்னும் உண்மையுணர்வேற்பட்டவழி நீங்குவதுபோல ஐம் பெரும் பூதங்களின் கலப்பால் உண்டாகும் பலவகைப் பொருள் களிலும் (அப்பொருள்களின் உட்பொருளாகி விளங்கும் இறைவனைக் காணாது) வெளித்தோற்றங்கொண்டு மயங்கி அவ்வப்பொருள் களாகவே காணும் திரிபுணர்ச்சியாகிய அறியாமையின் மிகுதி, அப் பொருள்களில் உள்ளுறை பொருளாகிய இறைவனைக் கண்டவழி நீங்குவதாகும். அவ்வாறு அப்பொருள்களின் உள்ளுறைபவன் வேதங்களின் முடிபாய் விளங்குபவன்; அவனே இலங்கை 'பாழா ளாகப் படைபொருதான்', ('அவனுக்கே சரணங்கள்', 'அவன் நற்குணக்கட லாடுதல் நன்று', அவனுக்கே 'பல்லாண்டு கூறுதும்) என்பது இதன் திரண்ட பொருளாகும்.

பூதம் ஐந்தும் விலங்கிய விகாரப்பாட்டின் வேறுபாடுற்ற வீக்கம் என்றது, பொருள்தோறும் உலகத்தார் கற்பித்துக்கொண்டு வழங்கு கின்ற கற்பனை (யாகிய அறியாமையின் மிகுதி)யை. அது கலங்கு தலாவது—அக் கற்பனை கழிந்து உண்மை புலனாதலாம். "எப் பொருள் எத்தன்மைத்தாயினும்" (355) என்று தொடங்கும் திருக் குறளுக்குப் பரிமேலழகர் எழுதிய விசேடவுரையும் இங்கு நோக்கத் தகும்.

அலங்கல் - மாலை. அரவு - பாம்பு. பூதம் ஐந்து - நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்பன. விலங்குதல் - அப்பூதங்கள் ஒன்றினுள் ஒன்று வெவ்வேறு அளவில் ஊடுருவிக் கலத்தல். விகாரப்பாடு - காரியப்பாடு; 'நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்தும்—கலந்த மயக்கம் உலகம்' என்பது தொல்காப்பியம். வேறுபாடு உற்ற வீக்கம் - திரிதலுற்றமையான் உளதாகிய அறியாமையின் மிகுதி. கலங்குதல் - நீங்குதல். பொருதல் - போர்செய்தல். அன்று அசை. அன்றே என்பதனுள் ஏகாரத்தைப் பிரித்து இறுதியாவார் என்பத னுடன் கூட்டி இறுதியாவாரே எனக்கொள்க. (1)

22-ஆம் ஏட்டில் இக்கடவுள்வாழ்த்துப் பாடலின்முன் தனியன் என்ற தலைப்பின்கீழ்ப் பின்வரும் பாடல் காணப்படுகிறது :—

மெய்ச்சிட்டர் பொதுநோக்கிற் சீர்தூக்கிக்
கம்பனெனும் மேதக் கோன்றன்
உச்சிட்டம் உலகிலுள கசடறக்கற்
றுயர்புலவர் உணற்றி யாப்பில்
வச்சிட்ட சொற்பொருளைக் கணிமுதல
வென்பர்தனி மிதிலைக் கன்னை
விச்சிட்ட மணவாளன் புகழெனின்மற்
றிதன்றகைமை விளம்பற் பாற்றோ!

25-ஆம் ஏட்டில் கடவுள் வாழ்த்தின்பின் பின்வரும் ஆறு பாடல்களும் வரையப்பட்டுள்ளன. அவற்றுள் 2, 4, 5, 6-ஆம் பாடல்கள் அச்சுப் புத்தகங்களுள் கிட்கிந்தா காண்டத்து மகேந்திரப் படலத்தின் இறுதியில் சில பிரதிபேதங்களுடன் காணப்படுவன :—

சென்றனன் இராமன் பாதம் சிந்தையில் நிறுத்தித் திண்டோள்
வன்றிறல் அநுமன் வாரி கடக்குமா றுளத்தின் எண்ணிப்
பொன்றிணி சிகர கோடி மயேந்திரப் பொருப்பின் ஏறி
நின்றிடுந் தன்மை யெம்மால் நிகழ்த்தலாந் தகைமைத் தாமோ. (1)

பொருவரும் வேலை தாவும் புண்ணியன் பொலியுஞ் சோதி
பெருவடி வமைந்த மாயோன் மேக்குறப் பிறங்கு மாதி
உருவறி வடிவி னும்ப ரோங்கின னுவமை யாலத்
திருவடி யென்னுந் தன்மை யாவர்க்குந் தெரிய நின்றான். (2)

இமையவ ரேத்த வாழு மிராவண னென்னு மேலோன்
அமைதிரு நகரைச் சூழ்ந்த வளக்கரைக் கடக்க வீரன்
சுமைபெறு சிகர கோடித் தொன்மயேந் திரத்தின் வெள்ளிச்
சிமையமேல் நின்ற தேவன் றன்மையிற் சிறந்து நின்றான். (3)

பார்நிழற் பரப்புங் கற்றை வெயிற்கதிர்ப் பருதி நின்ற
ஊர்நிறத் தொளிர மேலோ ருலகமு முருவிப் புக்குந்
தார்நிழற் பரப்புந் தோளான் றடங்கடல் தாவா முன்னம்
நேர்நிழ லுவரி தாவி யிலங்கையிற் செல்ல நின்றான். (4)

பாகுவாய் மடங்கல் வைகும் பருவரை கடலின் மூழ்க
ஊகுவாய் விடங்கொள் நாகத் தொற்றைவால் சுற்ற வானின்
ஏகுமா சிகர வெற்பாங் கிடம்வலந் திரிய நின்றான்
மாகுவான் முதுகிற் றோன்று மந்தர மெனலு மானான். (5)

மின்னெடுங் கொண்டல் தாளின் வீக்கிய கழலோ டார்ப்பத்
தன்னெடுந் தோற்றம் வானத் தப்புறந் தாவ வீரன்
வன்னெடுஞ் சிகர கோடி மயேந்திர மண்டந் தாங்கும்
பொன்னெடுந் தூணின் பாதச் சிலையெனப் பொலிய நின்றான். (6)

## அநுமன் மகேந்திரத்துப் பேருருவோடு நின்ற நிலையில் துறக்க நாடு காண்டலும் கருதலும்

**2.** ஆண்டகை யாண்டவ் வானோர்
துறக்கநா டருகிற் கண்டான்
ஈண்டது தான்கொல் வேலை
யிலங்கையென் றைய மெய்தா

வேண்டரு விண்ணு டென்னு
மெய்ம்மைகண் டுள்ள மீட்டான்
காண்டகு கொள்கை யும்ப
ரில்லெனக் கருத்துட் கொண்டான்.

ஆண் தகை ஆண்டு அவ் வானோர்
துறக்கநாடு அருகில் கண்டான் ;
ஈண்டது தான்கொல் வேலை
இலங்கை என்று ஐயம் எய்தா,
வேண் தரு விண்ணுடு என்னும்
மெய்ம்மை கண்டு உள்ளம் மீட்டான் ;
'காண் தகு கொள்கை உம்பர்
இல்' எனக் கருத்துள் கொண்டான்.

ஆண்தகை - ஆண்மையிற் சிறந்தோன்: அநுமன். ஆண்டு - அவ்விடத்து (அதாவது மகேந்திரமலையின் உச்சியில் நிமிர்ந்து நின்ற நிலையில்). துறக்கநாடு - வானுடு: சுவர்க்கம். வேலை இலங்கை ஈண்டதுதான் கொல் என மாறிக் கூட்டுக. ஈண்டது - இவ்விடத்துள்ளது. தான், அசை. வேண்தரு - ஆசையைக் கொடுக்கின்ற. காண்தகு கொள்கை - தேடிக்காணும் உட்கோள். உம்பர் - மேலுலகம்: துறக்கநாடு. கண்டான் கொண்டான் என்பவை முற்றெச்சம். எய்தா - எய்தி. ஆண்டகை, கண்டு எய்தா கொண்டு மீட்டான் என முடிக்க. பிற பதிப்புக்களிலுள்ள காண்டகுதோகை என்ற பாடத்தினும், ஏட்டுச் சுவடிகளிற் கண்ட காண்டகு கொள்கை என்ற பாடம் சிறப்புடைத்து. சம்பாதியுரையால் பிராட்டி இலங்கையில் இருத்தலை அறிந்து அங்கே தேடிக்காண முயலும் அநுமன் காண்டகு கொள்கை உம்பர் இல் என நினைவது பொருத்தமுடைத்தாகும். (2)

### இலங்கையைக் கண்டு ஆரவாரித்தல்

3. கண்டனெ னிலங்கை மூதூர்
கடிபொழிற் கனக நாஞ்சில்
மண்டல மதிலுங் கொற்ற
வாயிலு மணியிற் செய்த
வெண்டளக் களப மாட
வீதியும் பிறவு மென்னு
அண்டமுந் திசைக ளெட்டு
மதிரத்தோள் கொட்டி யார்த்தான்.

'கண்டனென் இலங்கை மூதூர்! கடிபொழில், கனக நாஞ்சில்,
மண்டல மதிலும், கொற்ற வாயிலும், மணியில் செய்த
வெண் தளக் களப மாட வீதியும், பிறவும் !' என்னு,
அண்டமும் திசைகள் எட்டும் அதிரத் தோள் கொட்டி ஆர்த்தான்.

'கண்டனென்' என்பது, தொடங்கி மூன்ருமடியில் 'பிறவும்' என்பது வரை அநுமன் கூற்று. பொழிலும் நாஞ்சிலும் என உம்மை விரிக்க. கடிபொழில் - காவற்சோலை. கனக நாஞ்சில் - பொன்னுற் செய்யப்பட்டதொரு மதிலுறுப்பு; மதின்மேலிருந்து அம்பெய்யும் புழை. மண்டலம் - வட்டம். மணியிற்செய்த வெண்தளக் களப மாடவீதி - படிகக் கற்களாற் செய்யப்பட்ட வெள்ளிய தள வரிசையுடையனவும் யானைகள் செல்லுவனவுமான மாடவீதிகள். வெண் தளக் களப மாடவீதி என்பதற்கு வெள்ளிய சுண்ணச் சாந்து தீற்றிய மாடங்களையுடைய வீதி எனவும் பொருள் கூறலாம். பிறவும் என்றதனுல் அகழியும் வாவியும் மன்றுகளும் மண்டபங்கள் முதலியனவும் கொள்ளப்படும். அநுமன் ஆர்த்தான் என எழுவாய் வருவித்து முடிக்க. கண்டனென் இலங்கை மூதூர் எனப் பொதுவாய் பாட்டாற் கூறிப் பின் அவ்விலங்கை நகரின் உறுப்புக்கள் கண்டவாறு கூறப்பட்டன. ஆதலின், 'மூதூர்க் கடிபொழில்' எனக் ககரவொற்று மிக்க பாடத்தினும் 'மூதூர் கடிபொழில்' எனக் ககர வொற்று மிகாத பாடம் பொருந்துவதாகும். (3)

### அநுமன் தாளால் அழுந்திய மகேந்திரத்து நிகழ்ந்தவை 4—13

4. வன்றந்த வரிகொ ணகம்
 வயங்கழ லுமிழும் வாய
பொன்றந்த முழைக டோறும்
 புறத்துராய்ப் புரண்டு பேர்வ
நின்றந்த மில்லா னூன்ற
 நெரிந்துகீ ழழுந்து நீலக்
குன்றந்தன் வயிறு கீறிப்
 பிதுங்கின குடர்கண் மான.

வன் தந்த வரிகொள் நாகம் வயங்கு அழல் உமிழும் வாய
பொன் தந்த முழைகள் தோறும் புறத்து உராய்ப் புரண்டு பேர்வ,
நின்று, அந்தம் இல்லான், ஊன்ற,நெரிந்து கீழ் அழுந்தும் நீலக்
குன்றம் தன் வயிறு கீறிப் பிதுங்கின குடர்கள் மான.

வன் தந்த வரிகொள் நாகம் - வலிய பற்களையும் (உடம்பில்) கோடுகளையும் உடைய பாம்பு. அழல் - நெருப்பு. முழை - குகை. புறத்து உராய் - முதுகின்கண் உராயப்பெற்று. பேர்வ – வெளிப்படுவனவாயின. அந்தம் இல்லான் - இறப்பில்லாதவன் : அநுமன். நீலக்குன்றம் என்றது இங்கு மகேந்திர மலையை. குடர் - குடல். மான - போல. அந்தமில்லான் நின்று ஊன்றலால் நெரிந்து அழுந்தும் நீலக்குன்றம் தன்வயிறு கீறிப் பிதுங்கின குடர்கள் மான முழைகள்தோறும் வயங்கு அழலுமிழும் வாயநாகம் புரண்டு பேர்வ என முடிவு கொள்க. 'அந்தமில்லான் நின்று ஊன்ற' என்பதனைப் பின்வரும் பாடல்களிலும் ஒட்டிக்கொள்க. (4)

5. புகலரு முழையுட் டுஞ்சும்
பொங்குளைச் சிங்கம் பொங்கி
உகலருங் குருதி கக்கி
யுள்ளுற நெரிந்த வூழின்
அகலரும் பரவை நாண
வரற்றுறு குரல வாகிப்
பகலொளி கரப்ப வானை
மறைத்தன பறவை யெல்லாம்.

புகல் அரும் முழையுள் துஞ்சும் பொங்கு உளைச் சிங்கம் பொங்கி,
உகல் அருங் குருதி கக்கி, உள்உற நெரிந்த : ஊழின்
அகல் அரும் பரவை நாண அரற்றுறு குரல ஆகிப்
பகல் ஒளி கரப்ப வானை மறைத்தன பறவை எல்லாம்.

புகல் அரும் - புகுதற்கரிய. துஞ்சும் - உறங்குகின்ற. பொங்கு - மிக்க. உளை – பிடரிமயிர். சிங்கம் சாதியொருமை. பொங்கி - சினந்து. உகல் அரும் குருதி - சிந்தக்கூடாத இரத்தத்தை. உள் - குகையினுள்ளே. ஊழின் - வரிசைவரிசையாக. உற நெரிந்த - மிகவும் நெரிந்தன. அகல் அரும் பரவை - அகன்ற கடத்தற்கரிய கடல். அரற்றுறு குரல ஆகி - கூவிளியுடையனவாய். பகல் - சூரியன். கரப்ப - மறைய. அந்தமில்லான் மகேந்திர மலையில் கால்களை அழுத்தி ஊன்றியமையால், அம்மலை சிதைய, அதனல் அம்மலைக் குகையுள் துயின்ற சிங்கங்கள் குருதி கக்கி வரிசையாக நெரிந்தன; பறவைகளெல்லாம் அஞ்சிக் கடலொலி நாண அரற்று பேரொலியுடையனவாய் அம்மலையினின்றெழுந்து சூரியனொளி மறையும்படி பறந்து வானத்தை மறைத்தன என்க. (5)

6. மொய்யுறு செவிக டாழ்ந்து
முதுகுற முறைகா றள்ள
மையுறு விசும்பி னூடு
நிமிர்ந்தவா லதிய மஞ்சின்
மெய்யுறத் தழீஇய மெல்லென்
பிடியொடும் வெருவ லோடும்
கையுற மரங்கள் சுற்றிப்
பிளிறின களிநல் யானை.

மொய் உறு செவிகள் தாழ்ந்து முதுகு உற, முறை கால் தள்ள,
மை உறு விசும்பின் ஊடு நிமிர்ந்த வாலதிய, மஞ்சின்
மெய் உறத் தழீஇய மெல் என் பிடியொடும், வெருவலோடும்,
கை உற மரங்கள் சுற்றிப் பிளிறின களி நல் யானை!

மொய் - வலிமை; செவிகள் - காதுகள். செவிகள் தாழ்ந்து முதுகுறுதல் அச்சநிலைநிகழ்ச்சி; 'ஆனைக்குலம் இரிந்தோடித்தம் பிடிசூழலிற்றிரியத், தானப்பிடி செவி தாழ்த்திட' (சுந்தரர் தேவாரம் பதிகம்-79, பாட்டு 5.) கால் முறை தள்ள - கால்கள் முறையே தள்ளாட (தளர). மை - மேகம். வாலதிய - வால்களையுடைய. மஞ்சின்மெய் - மேகம் போன்ற தம்முடலின் கண். தழீஇய - தழுவிய. பிடி - பெண்யானை. வெருவல் - அச்சம். பிளிறுதல் - முழங்குதல். களி - மதச்செருக்கு. களிநல் யானைகள், (அநுமன் தாள் ஊன்ற லால் மகேந்திரமலை நெரிதலும்) தாழ்ந்து முதுகுறும் மொய்யுறு செவிகளும், தள்ளாடும் கால்களும், விசிம்பினூடு நிமிர்ந்த வால் களும் உடையவாய்த் தழுவிநின்ற பிடிகளுடன் அச்சத்தால் கையுற மரங்கள் சுற்றிப் பிளிறின என முடிக்க. பிடி, யானை என்பவை சாதி யொருமை. அஞ்சிய நிலையில் யானையின்பால் நிகழும் மெய்ப்பாடு கள் இங்கு விரிக்கப்பட்டன. (6)

7. பொன்பிறழ் சிமையக் கோடு
பொடியுறப் பொறியுஞ் சிந்த
மின்பிறழ் குடுமிக் குன்றம்
வெரிநுற நெரியும் வேலை
புன்புற மயிரும் பூவாக்
கட்புலம் புறத்து நாரு
வன்பறழ் வாயிற் கௌவி
வல்லிய மிரிந்த மாதோ.

பொன் பிறழ் சிமையக் கோடு பொடி உறப் பொறியும் சிந்த,
மின் பிறழ் குடுமிக் குன்றம் வெரிந் உற நெரியும் வேலை,
புன் புற மயிரும் பூவா, கண்புலம் புறத்து நாரு,
வன் பறழ் வாயில் கௌவி, வல்லியம் இரிந்த மாதோ!

பிறழ்தல் - விளங்குதல். சிமையக்கோடு - சிகரமாகிய உச்சி, குடுமி - உச்சி. குன்றம் - மலை; மகேந்திரம். வெரிந் - முதுகு. புறம் புன் மயிரும் பூவாப்பறழ், கட்புலம் புறத்து நாருப்பறழ், வன்பறழ் என்க. உடலில் மெல்லிய மயிர் முளையாதனவும், வெளியே கண் திறந்து பாராதனவும் ஆன வலிய குட்டி என உரை விரிக்க. புறம் - உடல்; ('பைம் புறப் படுகிளி' ஐங்குறுநூறு. 260). பூத்தல் - முளைத்தல். கட்புலம் - கண்ணாகிய புலம். பறழ் - குட்டி. வல்லியம் - புலி. பறழ், குட்டி என்பவை சாதியொருமை. இரிந்த - ஓடின; மாது, ஓ அசைநிலை. (அநுமன் தாள் ஊன்றலும்) குன்றம் கோடு பொடியுற, பொறியும் சிந்த, வெரிந் நெரியும் வேலை வல்லியம், பறழ்கௌவி இரிந்த என முடிக்க. (7)

8. தேக்குறு சிகரக் குன்றந்
திரிந்துமெய்ந் நெரிந்து சிந்தத்
தூக்குறு தோலர் வாளர்
துரிதத்தி னெழுந்த தோற்றம்
தாக்குறு செருவி னேர்ந்தார்
தாளற வீசத் தாவி
மேக்குற விசைத்தா ரென்னப்
பொலிந்தனர் விஞ்சை வேந்தர்.

தேக்கு உறு சிகரக் குன்றம் திரிந்து மெய் நெரிந்து சிந்தத்
தூக்குறு தோலர், வாளர், துரிதத்தின் எழுந்த தோற்றம்,
தாக்குறு செருவில் நேர்ந்தார் தாள் அற வீசத் தாவி,
மேக்கு உற விசைத்தார் என்னப் பொலிந்தனர் விஞ்சை வேந்தர்!

குன்றம் – மலை : மகேந்திரம். குன்றம் அநுமன் தாள் ஊன்றலால் திரிந்து நெரிந்து சிந்த, விஞ்சைவேந்தர் தூக்குறு தோலர் வாளர் துரிதத்தின் (மேல்) எழுந்த தோற்றத்தால், செருவில் நேர்ந்தார் தாளற வீச மேக்குறத் தாவி விசைத்தாரென்னப் பொலிந்தனர் என முடிக்க. குன்றம் திரிதல் (அசையாததான மகேந்திர) மலை அசைதல். தோல் - கேடகம். துரிதம் – விரைவு. செரு - போர். நேர்ந்தார் - எதிர்ந்தார் : பகைவர். தாள் – முயற்சி. மேக்கு - மேல்.

விசைத்தல் - விரைதல். விஞ்சை வேந்தர் — வித்தியாதர அரசர். விஞ்சையர் பதினெட்டுத் தேவ கணத்தாருள் ஒரு பிரிவினர். பகைவர் படையெடுப்பால் மகேந்திரம் நெரிந்ததென்று கருதிய விஞ்சைவேந்தர் அப்பகைவர் தாளற வீச மேக்குறத் தாவி விசைத்தாரென்னப் பொலிந்தனர் என்க. (8)

இச்செய்யுளின்பின் 25-ஆம் ஏட்டில் பின்வரும் பாடல் வரையப் பட்டுள்ளது :—

8 (a) பெருஞ்சிலம் பறையின் வாழும் பெருவலி யரக்கர் யாரும்
பொருஞ்சின மடங்கல் வீரன் பொறுத்திட மிதித்த லோடும்
அருஞ்சின மடங்கித் தத்த மாதரைத் தழுவி யங்கம்
நெரிஞ்சுறக் கடலின் வீழ்ந்தார் நெடுஞ்சுரு மகர நுங்க.

9. தாரகை சுடர்கண் மேக
மென்றிவை தவிரத் தாழ்ந்து
பாரிடை யழுந்து கின்ற
படர்நெடும் பனிமாக் குன்றம்
கூருகிர்க் குவவுத் தோளான்
கூம்பெனக் குமிழி பொங்க
ஆர்கலி யழுவத் தாழுங்
கலமென லாயிற் றன்றே.

தாரகை, சுடர்கள், மேகம், என்று இவை தவிரத் தாழ்ந்து,
பாரிடை அழுந்துகின்ற படர் நெடும் பனி மாக் குன்றம்,
கூர் உகிர்க் குவவுத் தோளான் கூம்பு எனக் குமிழி பொங்க,
ஆர்கலி அழுவத்து ஆழும் கலம் எனல் ஆயிற்று அன்றே!

(அநுமன் தாள் ஊன்றலால்) தாழ்ந்து பாரிடை அழுந்து கின்ற குன்றம் (மகேந்திரம்), ஆர்கலி யழுவத்து ஆழும் கலமென லாயிற்று என்க. தாரகை - நட்சத்திரங்கள். சுடர்கள் — சூரிய சந்திரர். பனி - குளிர்ச்சி. உகிர் - நகம். குவவு - திரட்சி. கூம்பு — பாய்மரம். ஆர்கலி யழுவத்து — கடலின் ஆழமான இடத்து. கலம் — கப்பல். மறையும் மலைக்குக் கடலாழ்கலம் உவமை (குறுந். 240, 6–7.) (9)

10. தாதுகு நறுமென் சாந்தங்
குங்குமங் குலிகந் தண்டேன்
போதுகு பொலந்தா தென்றித்
தொடக்கத்த யாவும் பூசி
மீதுறு சுனைநீ ராடி
யருவிபோ யுலகின் வீழ்வ
ஓதிய குன்றங் கீறிக்
குருதிநீர் சொரிவ தொத்த.

தாது உகு நறு மென் சாந்தம், குங்குமம், குலிகம், தண் தேன், போது உகு பொலம் தாது, என்று இத் தொடக்கத்த யாவும் பூசி, மீது உறு சுனை நீர் ஆடி, அருவி போய் உலகின் வீழ்வ, ஓதிய குன்றம் கீறிக் குருதி நீர் சொரிவது ஒத்த!

சாந்தமும் குங்குமமும் இங்குலிகமும் தேனும் பொலம் தாதும் இத் தொடக்கத்த யாவும் பூசி, சுனைநீராடி, போய் உலகின் வீழ்வ (னவான) அருவிகள், அந்தமில்லான் தாள் ஊன்றலால் குன்றம் கீண்டு குருதிநீர் சொரிவது ஒத்த என முடிக்க. சாந்தம் உகு நறு மென் தாது என மாறிக் கூட்டி, சந்தனக் கட்டைகள் உக்கமையால் உண்டாகிய நல்ல மென்மையாகிய பொடி என உரை விரிக்க. குலிகம் – இங்குலிகம் : சாதிலிங்கம். போது உகு பொலம் தாது - பூக்களில் நின்று சிந்துகின்ற பொன்னிறமான மகரந்தப்பொடி. வாசனைச் சுண்ணம் திமிர்ந்து சுனையாடலாகிய மகளிர்செயல் அருவிமேல் ஏற்றிக்கூறப்பட்டது. சுண்ணம் கலந்த அருவிநீர் வீழ்ச்சி மகேந்திரமலை வெடித்துக் குருதி சொரிவதுபோலிருந்த தென்க. (10)

11. கடலுறு மத்தி தென்னக்
கனவரை திரியுங் காலை
மிடலுறு புலன்கள் வென்ற
மெய்த்தவர் விசும்பி னுற்ருர்
திடலுறு கிரியிற் றத்தஞ்
செய்வினை முற்றி முற்ரு
உடலுறு பாசம் வீசா
வும்பர்ச்செல் வாரை யொத்தார்.

கடல் உறும் மத்து இது என்னக் கன வரை திரியும் காலை,
மிடல் உறு புலன்கள் வென்ற மெய்த்தவர் விசும்பின் உற்ருர்,
திடல் உறு கிரியில் தத்தம் செய்வினை முற்றி முற்ரு
உடல் உறு பாசம் வீசா, உம்பர்ச் செல்வாரை ஒத்தார்.

வரை திரியும் காலை விசும்பின் உற்ருர் (ஆகிய) மெய்த்தவர், கிரியில் தத்தம் செய்வினை முற்றி, பாசம் வீசா, உம்பர்ச் செல்வாரை ஒத்தார் என முடிக்க. கடல் இங்கே திருப்பாற்கடலைச் சுட்டி நின்றது. மத்து - மத்தாகிய மந்தரமலை. கனவரை – பெரியமலை: மகேந்திரம். திரியும் காலை - (அநுமன் தாள் ஊன்றலால் மகேந் திரம் தன்) நிலைமாறி அதிர்ந்தபொழுது. மிடல் உறு – வலி மிக்க. புலன்கள் – சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்பவை. விசும்பு – ஆகாயம். திடல் உறு கிரி – மேடாக உயர்ந்து தோன்றும் மலை. முற்றி - முடித்து. முற்ரு - முற்றி : வளைத்து. உடலுறு – வருத்து கின்ற. பாசம் – பற்று. வீசா - வீசி : ஒழித்து. உம்பர்–மேலுலகு. (11)

12. வெயிலியற் குன்றங் கீறி
வெடித்தலு நடுக்க மெய்தி
மயிலியற் றளிர்க்கை மாதர்
தழீஇக்கொளப் பொலிந்த வானோர்
அயிலெயிற் றரக்க னள்ளத்
திரிந்தநா ளணங்கு புல்லக்
கயிலையி லிருந்த தேவைத்
தனித்தனிக் கடுத்தல் செய்தார்.

வெயில் இயல் குன்றம் கீறி வெடித்தலும், நடுக்கம் எய்தி
மயில் இயல் தளிர்க்கை மாதர் தழீஇக்கொளப் பொலிந்த வானோர்,
அயில் எயிற்று அரக்கன் அள்ளத் திரிந்தநாள், அணங்கு புல்லக்
கயிலையில் இருந்த தேவைத் தனித்தனிக் கடுத்தல் செய்தார்!

குன்றம் வெடித்தலும் நடுக்கமெய்தி மாதர் தழீஇக்கொளப் பொலிந்த வானோர், அரக்கன் அள்ளக் கயிலை திரிந்தநாள், கயிலை யில் அணங்கு புல்ல இருந்த தேவைத் தனித்தனி கடுத்தல்செய்தார் என முடிக்க. தழீஇக்கொள – தழுவிக்கொள்ள. அயில் எயிற்று அரக்கன் - கூர்மையான பற்களையுடைய அரக்கன் : இராவணன். அள்ள - எளிதாகக் கைக்கொள்ள. திரிந்தநாள் – (கயிலை) குலுங்கிய போது. அணங்கு – தெய்வப் பெண் : உமாதேவி. புல்ல - தழுவ. தே - தெய்வம் : சிவபெருமான். கடுத்தல்செய்தார் – ஒத்தார். (12)

13. ஊறிய நறவு முற்ற
குற்றமு முணர்வை யுண்ணச்
சீறிய மனத்தர் தெய்வ
மடந்தைய ரூட றீர்வுற்
ருறின ரஞ்சு கின்ரு
ரன்பரைத் தழுவி யும்பர்
ஏறின ரிட்டு நீத்த
பைங்கிளிக் கிரங்கு கின்ருர்.

ஊறிய நறவும், உற்ற குற்றமும், உணர்வை உண்ணச்
சீறிய மனத்தர், தெய்வ மடந்தையர், ஊடல் தீர்வுற்று
ஆறினர், அஞ்சுகின்ருர், அன்பரைத் தழுவி உம்பர்
ஏறினர், இட்டு நீத்த பைங்கிளிக்கு இரங்குகின்ருர்!

தெய்வமடந்தையர், நறவும் (அன்பர்) குற்றமும் தம் அறிவை யுண்ண, (அதனுல் அன்பரைச்) சீறிய மனத்தர் (ஆகி அன்பரொடு ஊடி நின்ற நிலேயில் அநுமன் தாள் ஊன்றலால் மகேந்திரம் குலுங்க) அஞ்சுகின்ருர் (ஆகி) ஊடல்தீர்வுற்று அன்பரைத் தழுவி உம்பர் ஏறினர்; (ஏறுங்கால் மகேந்திரமலேயில்) இட்டு நீத்த பைங் கிளிக்கு இரங்குகின்ருர் என முடிக்க. நறவு – கள். உணர்வை உண்ண - அறிவை அழித்தமையால். ஆறினர் – சினம் தணிந்த வராய். (13)

அநுமன் கடல் கடக்க விரைதல்

14. இத்திற நிகழும் வேலே
யிமையவர் முனிவர் மற்றும்
முத்திறத் துலகத் தாரு
முறைமுறை விசும்பின் மொய்த்தார்
தொத்துறு மலருஞ் சாந்துஞ்
சுண்ணமு மணியுந் தூவி
வித்தக சேறி யென்ருர்
வீரனும் விரைவ தானுன்.

இத்திறம் நிகழும் வேலே, இமையவர், முனிவர், மற்றும்
முத்திறத்து உலகத்தாரும், முறைமுறை விசும்பின் மொய்த்தார்,
தொத்து உறு மலரும், சாந்தும், சுண்ணமும், மணியும், தூவி,
‘வித்தக! சேறி’ என்ருர்; வீரனும் விரைவது ஆனுன்.

இத்திறம் நிகழும் வேலை, இமையவரும் முனிவரும் முத்திறத் துலகத்தாரும் மொய்த்து, தூவி, வித்தக சேறி யென்றார்; வீரனும் விரைவதானான் : என முடிக்க. இத்திறம் நிகழும் வேலை - (அநுமன் தாள் ஊன்றலால்) இப்படிப் பல நிகழ்ச்சிகளும் உண்டாகிய பொழுது. இமையவர் – தேவர். இமையவரும் முனிவரும் என உம்மை விரிக்க. மற்றும் முத்திறத்து உலகத்தாரும் – மேலும் (மண் விண் பாதாளம் என்னும்) மூன்றுவகையுலகிலுள்ளாரும். மொய்த்தார் – நெருங்கினராய்; முற்றெச்சம். தொத்து-கொத்து. சுண்ணம்-நறுமணப்பொடி. வித்தக - அறிஞனே; வித்தகன் – தூதனுமாம். சேறி - செல்வாயாக. (14)

### துணைவர்கூற்றும் தூயவன் இசைவும்

15. குறுமுனி குடித்த வேலை
குப்புறுங் கொள்கைத் தாதல்
வெறுவிது விசயம் வைகும்
விலங்கற்றோ ளலங்கல் வீர
சிறிதிதென் றிகழற் பாலை
யல்லைநீ சேறி யென்று
உறுவலித் துணைவர் சொன்னா
ரொருப்பட்டான் பொருப்பை யொப்பான்.

'குறுமுனி குடித்த வேலை
குப்புறும் கொள்கைத்து ஆதல்
வெறுவிது, விசயம் வைகும்
விலங்கல் தோள் அலங்கல் வீர!
சிறிது இது என்று இகழற்பாலை
யல்லை; நீ சேறி!' என்று
உறு வலித் துணைவர் சொன்னார்;
ஒருப்பட்டான் பொருப்பை ஒப்பான்.

குறுமுனி - அகத்தியர். வேலை – கடல். குப்புறும் கொள்கைத் தாதல் - பாய்ந்து கடக்கும் கொள்கையின்கண்ணதாதல்; அதாவது பாய்ந்து கடக்கும் தகுதியுடையதென்று கருதுதல். வெறுவிது - பயனற்றது. சேறி – செல்க. உறுவலி - மிக்க ஆற்றல். துணைவர் : சாம்பவான் அங்கதன் முதலியோர். ஒருப்பட்டான் - இசைந்தான்,

பொருப்பை ஒப்பான் – (பேருருவால்) மலையை யொத்தவனாகிய அநுமன்.

உறுவலித் துணைவர் 'விசயம் வைகும் விலங்கல் தோள் அலங்கல் வீர! நீ "குறுமுனி குடித்தவேலை சிறிது, இது குப்புறுங் கொள்கைத்தாதல் வெறுவிது" என்று இகழற்பாலையல்லை; சேறி' என்னச் சொன்னர்; பொருப்பை யொப்பான் ஒருப்பட்டான் என முடிவு கொள்க. விசயம் வைகும் விலங்கல் தோள் அலங்கல் வீர! என்பது, துணைவர் அநுமனைத் தம் எதிர்முகமாக்கிக்கொள்ளும் விளி. விசயம் வைகும் என்பதைத் தனித்தொடராக்கி 'வெற்றி (உன் பால்) தங்கும்' என ஆசிமொழியாக்கலும் அமையும். (15)

அநுமன் தன் உறுப்புக்களைத் தொழிற்படுத்து மேலெழுதல் 16–17

16. இலங்கையி னளவிற் றன்று
லிவ்வுரு வெடுத்த தோற்றம்
விலங்கவு முளதன் றென்று
விண்ணவர் வியந்து நோக்க
அலங்கருழ் மார்பன் முன்ருழ்ந்
தடித்துணை யழுத்த லோடும்
பொலங்கெழு மலையுந் தாளும்
பூதலம் புக்க மாதோ.

'இலங்கையின் அளவிற்று அன்ருல்,
இவ்வுரு எடுத்த தோற்றம்!
விலங்கவும் உளதன்று!' என்று,
விண்ணவர் வியந்து நோக்க,
அலங்கல் தாழ் மார்பன் முன் தாழ்ந்து,
அடித்துணை அழுத்தலோடும்,
பொலம் கெழு மலையும், தாளும்,
பூதலம், புக்க மாதோ!

அலங்கல் தாழ் மார்பன் எடுத்த தோற்றம் இவ்வுரு, இலங்கையின் அளவிற்றன்று; விலங்கவும் உளதன்று: என்று விண்ணவர் வியந்து நோக்க, முன் தாழ்ந்து அடித்துணை அழுத்தலோடும் மலையும் தாளும் பூதலம் புக்க என முடிக்க. ஆல், மாது, ஓ: அசை.

எடுத்த தோற்றம் இவ்வுரு - புடைபரந்த உயர்ச்சியை யுடைய இவ் வடிவம். எடுத்தல் - புடை பருத்தல் 'மந்தி கவுளெடுக்க' (காசி. காசிப். 49.) என்பது காண்க. தோற்றம் - உயர்ச்சி; 'நிலையிற் றிரியா தடங்கியான் தோற்றம்' (திருக்குறள்-124). இலங்கையின் அளவிற்றன்று - இலங்கையளவும் சென்று ஒடுங்கும் நிலையுடைய தன்று (இலங்கைகடந்து அப்பாலும் செல்லவல்லது என்றவாறு). விலங்கவும் உளதன்று - தடைபடுவதும் அன்று. அலங்கல் தாழ் மார்பன் - மாலை தங்கிய மார்பையுடையான்: அநுமன். தாழ்தல் - தங்குதல்; 'ஆரந்தாழ்ந்த அம்பகட்டு மார்பின்' (திருமுருகாற்றுப் படை. 104). முன் தாழ்ந்து - முன்பக்கம் வளைந்து. அடித்துணை - கால் இரண்டையும். பொலம் கெழு - பொன் மிக்க. மலை - (இங்கு) மகேந்திரம். தாள்-கால். பூதலம் புக்க-பூமியின்கண் அழுந்தின. (16)

**17.** வால்விசைத் தெடுத்து வன்றாள்
மடக்கிமார் பொடுக்கி மானத்
தோல்விசைத் தோள்கள் பொங்கக்
கழுத்தினைச் சுருக்கித் தூண்டும்
கால்விசைத் தடக்கை நீட்டிக்
கட்புலங் கதுவா வண்ணம்
மேல்விசைத் தெழுந்தா னுச்சி
விரிஞ்சனா டுரிஞ்ச வீரன்.

வால் விசைத்து எடுத்து, வன் தாள்
மடக்கி, மார்பு ஒடுக்கி, மானத்
தோல் விசைத் தோள்கள் பொங்கக்
கழுத்தினைச் சுருக்கித் தூண்டும்
கால் விசைத் தடக்கை நீட்டி,
கண்புலம் கதுவா வண்ணம்,
மேல் விசைத்து எழுந்தான், உச்சி
விரிஞ்சன் நாடு உரிஞ்ச வீரன்.

வீரன், வால் எடுத்து, தாள் மடக்கி, மார்பு ஒடுக்கி, கழுத்தினைச் சுருக்கி, கை நீட்டி, உச்சி விரிஞ்சன் நாடு உரிஞ்ச விசைத் தெழுந் தான் என முடிக்க. மானத் தோல் விசைத் தோள்கள் பொங்க - பெருமையும் அழகும் வெற்றியும் உள்ள தோள்கள் பூரிக்க. மானம் - பெருமை. தோல் - அழகு; புகழுமாம். விசை - வெற்றி. பொங் குதல் - பூரித்தல். கால் விசைத் தடக்கை - காற்றுப் போலும் வேகத்

தையுடைய பெரிய கை. கட்புலம் கதுவா வண்ணம் - கண்ணுகிய இந்திரியத்தாற் பற்றப்படாதவாறு (கண்ணுல் காணமுடியாதபடி). விரிஞ்சன் - பிரமன். கடல் கடக்க முற்படுங்கால் அநுமனுடைய உடலுறுப்புகளின் தொழிற்பாடு இதனுள் உரைக்கப்பட்டது. (17)

அநுமன் வேகத்தால் நிகழ்ந்தவை 18–23

**18.** ஆயவ னெழுத லோடு
மரும்பணை மரங்கள் யாவும்
வேயுயர் குன்றும் வென்றி
வேழமும் பிறவு மெல்லாம்
நாயகன் பணியி தென்னு
நளிகட லிலங்கை தாமும்
பாய்வன வென்ன வானம்
படர்ந்தன பழுவ மான.

ஆயவன் எழுதலோடும்,
அரும் பணை மரங்கள் யாவும்,
வேய் உயர் குன்றும், வென்றி
வேழமும், பிறவும், எல்லாம்
'நாயகன் பணி இது!' என்னு,
நளி கடல் இலங்கை தாமும்
பாய்வன என்ன, வானம்
படர்ந்தன, பழுவம் மான!

ஆயவன் எழுதலோடும் (மரம் முதலிய) எல்லாம் தாமும் இலங்கை பாய்வனவென்ன வானம் பழுவம் மானப் படர்ந்தன என முடிக்க. ஆயவன் - வீரனுகிய அநுமன். பணை - கிளை. வேய் - மூங்கில். வென்றி - வெற்றி. வேழம் - யானை. நளி கடல் இலங்கை - பெருமைமிக்க கடலாற் சூழப்பட்ட இலங்கை. நளி - பெருமை; குளிர்ச்சியும் ஆம். பழுவம் - காடு. மரங்களும் மலையும் வேழமும் பிறவும் அநுமன் வேகத்தால் இழுப்புண்டு அவன்பின் ஆகாயத்தே விரைந்து படரும் நிலையில் வானம் மரங்களும் மலைகளும் யானைகளும் உடைய கானம்போலக் காணப்பட்டதென்க. (18)

19. இசையுடை யண்ணல் சென்ற
வேகத்தா லெழுந்த குன்றும்
பசையுடை மரமு மாவும்
பல்லுயிர்க் குலமும் வல்லே
திசையுறச் சென்று சென்று
செறிகட லிலங்கை சேரும்
விசையில வாகித் தாழ்ந்து
வீழ்வன வென்ன வீழ்ந்த.

இசை உடை அண்ணல் சென்ற வேகத்தால், எழுந்த குன்றும்
பசை உடை மரமும், மாவும், பல் உயிர்க் குலமும், வல்லே
திசை உறச் சென்று சென்று, செறி கடல் இலங்கை சேரும்
விசை இலவாகித் தாழ்ந்து வீழ்வன என்ன வீழ்ந்த !

குன்றும் மரமும் மாவும் உயிர்க்குலமும் சென்று சென்று விசையிலவாகித் தாழ்ந்து வீழ்ந்த என முடிக்க. இசையுடை அண்ணல்-புகழுடைய பெரியோனுன அநுமன். மா - விலங்கு. உயிர்க்குலம் - உயிர்க்கூட்டம். வல் - விரைவு. திசை உறச்சென்று - அநுமன் செல்லும் திசையிலே தாமும் அவனெடு பொருந்தச் சென்று. இங்கு, வான்மீகத்துள் வழிச் செல்வாரைச் சுற்றத்தார் சிறிதுவழி உடன் வந்து விடைகொடுத்து நிற்பதுபோல மரங்களும் பிறவும் அநுமன் பின் சென்று நிற்பன வாயின என்று கூறப்பட்டுள்ளமை நினைக்கத் தக்கது. (19)

20. மாவொடு மரமு மண்ணும்
வல்லியு மற்று மெல்லாம்
போவது புரிந்த வீரன்
விசையினுற் புணரி போர்க்கத்
தூவின கீழு மேலுந்
தூர்த்தன சுருதி யன்ன
சேவகன் சேரா முன்னஞ்
சேதுவு மியன்ற மாதோ.

மாவொடு, மரமும், மண்ணும், வல்லியும், மற்றும், எல்லாம்,
போவது புரிந்த வீரன் விசையினுல், புணரி போர்க்கத்
தூவின, கீழும் மேலும் தூர்த்தன, சுருதி அன்ன
சேவகன் சேரா முன்னம் சேதுவும் இயன்ற மாதோ !

வீரன் விசையினுல் மாவும் மரமும் மண்ணும் வல்லியும் மற்று எல்லாமும் புணரிபோர்க்கத் தூவின, கீழும் மேலும் தூர்த்தன; (ஆதலால்) சேவகன் சேராமுன்னம் சேதுவும் இயன்ற(து) என முடிவு கொள்க. வல்லி - கொடி. வீரன் என்றது அநுமனை. புணரி - கடல். தூவின - தூவப்பட்டனவாய். சுருதி - வேதம். சேவகன் - வீரன் : இராமபிரான். இயன்றது என்பது ஈறுகெட்டுநின்றது. (20)

**21.** கீண்டது வேலை நன்னீர்
கீழுறக் கிடந்த நாகர்
வேண்டிய வுலக மெல்லாம்
வெளிப்பட மணிகண் மின்ன
ஆண்டகை யதனை நோக்கி
யரவினுக் கரசன் வாழ்வும்
காண்டகு தவத்த ஞனேன்
யானெனக் களிப்புக் கொண்டான்.

கீண்டது வேலை நல் நீர்,
கீழ் உறக் கிடந்த நாகர்
வேண்டிய உலகம் எல்லாம்
வெளிப்பட, மணிகள் மின்ன,
ஆண் தகை அதனை நோக்கி,
'அரவினுக்கு அரசன் வாழ்வும்
காண் தகு தவத்தன் ஆனேன்
யான்'எனக் களிப்புக் கொண்டான்.

கீண்டது பிளவுபட்டது. வேலைநன்னீர் கீண்டது என மாறிக் கூட்டுக. ஆண்டகை இங்கே அநுமனைச் சுட்டிநின்றது. வாழ்வு - வாழும் இடம். ஆண்டகை களிப்புக்கொண்டான் என முடிக்க. (21)

**22.** வெய்துவான் சிறையி னுனீர்
வேலையைக் கிழிய வீசி
நொய்தின ரமுதங் கொண்ட
நோன்மையே நுவலு நாகர்

உய்துநா மென்ப தென்னே
யுறுவலிக் கலுழ னூழின்
எய்தினு னுமென் றெண்ணி
யலக்கணுற் றிரியல் போனுர்.

வெய்து, வான் சிறையினுல் நீர்
வேலேயைக் கிழிய வீசி,
நொய்தின் ஆர் அமுதம் கொண்ட
நோன்மையே நுவலும் நாகர்,
'உய்தும் நாம் என்பது என்னே ?
உறு வலிக் கலுழன் ஊழின்
எய்தினுனும்' என்று எண்ணி,
அலக்கண் உற்று, இரியல்போனுர் !

உறுவலிக் கலுழன், வான்சிறையினுல் நீர் வேலேயைக் கிழிய வீசி வெய்து நொய்தின் ஆரமுதம் கொண்ட நோன்மையே நுவலும் நாகர், (வேகத்தால் கடல் கிழிய வானளாவ விரைந்து பாயும் அநுமனேக் கருடனென்று பிறழ நினேந்து) 'அக்கலுழன் ஊழின் எய்தினுன் ; நாம் உய்தும் என்பது என்னே ?' என்று எண்ணி அலக்கண் உற்று இரியல் போனுர் என முடிக்க. உறுவலி - பேராற்றல். கலுழன் - கருடன். வான்சிறையினுல் - பெரிய இறக்கைகளால். வெய்து நொய்தின் - விரைவாகவும் எளிதாகவும். ஆர் அமுதம் - நிறைந்த அமுதத்தை. கொண்ட நோன்மையே நுவலும் நாகர் - தம்மிடமிருந்து பறித்துக்கொண்ட வலிமையையே சொல்லிக்கொண் டிருக்கின்ற தேவர்கள். நோன்மை – வலிமை. நாகர் - தேவர். ஊழின் - விதியால் ; முறையால் எனினும் ஆம். 'கலுழன் ஊழின் எய்தினுன் ; நாம் உய்தும் என்பது என்னே !' என்பது வேகத்தால் கடல் கிழிய விரைந்து பாயும் அநுமனேக் கருடனென்று நினேத்து அஞ்சிய தேவர் கூற்று. அலக்கண் - துன்பம். இரியல்போனுர் - நிலே கெட்டோடினுர். இச்செய்யுளிற் கூறப்பட்ட கருடன் அமுதம் கொண்ட செய்தி நாகருலகில் நிகழ்ந்ததென்று உரை கொண்டாரும் உளர். 43-ஆம் பாட்டில் கருடன் நாகலோகத்திலிருந்து அமுதம் கவர்ந்தமை பேசப்படுதலின் இங்கு இவ்வாறு உரை வரையலா யிற்று. கருடன் வானுலகத்திலிருந்து அமுது கவர்ந்த செய்தி வியாச பாரத ஆதிபர்வத்துக் கூறப்பட்டது. (22)

**23.** துள்ளிய மகர மீன்க
டுடிப்பறச் சுறவு தூங்க
ஒள்ளிய பனைமீன் துஞ்சத்
திவலைய தூழிக் காலின்
வள்ளுகிர் வீரன் செல்லும்
விசைபொர மறுகி வாரி
தள்ளிய திரைகண் முந்துற்
றிலங்கைமேற் றவழ்ந்த மாதோ.

துள்ளிய மகர மீன்கள் துடிப்பு அறச் சுறவு தூங்க,
ஒள்ளிய பனைமீன் துஞ்சத் திவலையது ஊழிக் காலின்,
வள் உகிர் வீரன் செல்லும் விசை பொர மறுகி, வாரி
தள்ளிய திரைகள் முந்துற்று, இலங்கைமேல் தவழ்ந்த மாதோ!

வீரன் செல்லும் விசை பொர வாரி தள்ளிய திரைகள் முந்துற்று இலங்கைமேல் தவழ்ந்த என முடிக்க. மகர மீன்கள் - மகரமாகிய மீன்கள். பனைமீன் - மீனினத்தொன்று. துடிப்பறல், துஞ்சல், தூங்கல் என்பவை இறத்தல் என்னும் ஒரு பொருள. திவலையது ஊழிக் காலின் - மழையொடுகூடிய ஊழிக்காற்றுப்போல. திவலை - மழை (பிங்.) ஊழி - உகமுடிவு. விசைபொர - வேகம் தாக்க. மறுகி-கலங்கி. வாரி - கடல். திரைகள் - அலைகள். (23)

விசும்பில் விரைந்து செல்லும் அநுமன் தோற்றம் 24–32

**24.** இடுக்குறு பொருள்க ளென்ன
மெண்டிசை சுமந்த யானை
நடுக்குற விசும்பிற் செல்லு
நாயகன் றூத னாகம்
ஒடுக்குறு காலை வன்காற்
றடியொடு மொடித்த வந்நாள்
முடுக்குறக் கடலிற் செல்லும்
முத்தலைக் கிரியை யொத்தான்.

இடுக்கு உறு பொருள்கள் என்னும்? எண்திசை சுமந்த யானை
நடுக்கு உற, விசும்பிற் செல்லும் நாயகன் தூதன், நாகம்

ஒடுக்குறு காலை, வன் காற்று அடியொடும் ஒடித்த அந்நாள்,
முடுக்குறக் கடலில் செல்லும் முத்தலைக் கிரியை ஒத்தான் !

தூதன் முத்தலைக்கிரியை ஒத்தான் ; இவன் (விசையால்) இடுக்குறு பொருள்கள் என்னும் என முடிக்க. இடுக்கு - துன்பம். நாகம் ஒடுக்குறுகாலை - (ஆதிசேடனாகிய) பாம்பு தன் படத்தாற் பொத்திக் கொண்டபோது. முடுக்குற - செலுத்த. முத்தலைக்கிரி - திரிகூட மலை. (24)

**25.** கொட்புறு புரவித் தெய்வக்
கூர்நுதிக் குலிசத் தாற்கும்
கட்புலங் கதுவ லாகா
வேகத்தான் கடலு மண்ணும்
உட்படக் கூடி யண்ட
முறவுள செலவி னொற்றைப்
புட்பக விமானந் தானவ்
விலங்கைமேற் போவ தொத்தான்.

கொட்பு உறு புரவித் தெய்வக் கூர் நுதிக் குலிசத்தாற்கும்,
கண் புலம் கதுவல் ஆகா வேகத்தான், கடலும், மண்ணும்
உட்படக் கூடி அண்டம் உற உள செலவின், ஒற்றைப்
புட்பக விமானம் தான் அவ் இலங்கைமேற் போவது ஒத்தான் !

கொட்பு உறு (தெய்வப்) புரவிக் கூர்நுதித் தெய்வக் குலிசத் தாற்கும் - சுழன்று (மண்டிலம்) வருகின்ற தெய்வத்தன்மையுள்ள (உச்சைசிரவமென்னும் வெள்ளைக்) குதிரையினையும் கூர்மையான நுனியையுடைய தெய்வத்தன்மையுள்ள வச்சிரப்படையினையும் உடைய இந்திரனுக்கும்; இடைநிலைவிளக்காய்நின்ற தெய்வம் என்னும் அடை புரவிக்கும் கூட்டப்பட்டது. கட்புலம் கதுவலாகா - கண்ணாகிய பொறியினால் பற்ற (தொடர) முடியாத. வேகத்தான் - விரைவுடைய அநுமன். கடலும் மண்ணும் உட்படக்கூடி - கடலும் நிலமும் தன்னுள்(ஒரு சிறு பகுதியாய்ப்) பொருந்தும்படி பெரிதாகி. அண்டம் உற உ(ள்)ள செலவின் – வானமுகடளாவச் செல்லும் செலவினாலும். கடலும் மண்ணும் உட்படக்கூடுதலும் அண்டமுறவுள்ள விரைந்த செலவும் புட்பகத்துக்கும் அநுமனுக்கும் பொதுவான தன்மைகள். ஒத்த வேறொன்றில்லாமையால் ஒற்றைப் புட்பக விமானம் என்னப் பட்டது. வேகத்தான் ஒத்தான் என முடிக்க. (25)

26. விண்ணவ ரேத்த வேத
முனிவரர் வியந்து வாழ்த்த
மண்ணவ ரிறைஞ்சச் செல்லு
மாருதி மறமுட் கூர
அண்ணல்வா ளரக்கன் றன்னை
யமுக்குவெ னின்னு மென்னுக்
கண்ணுத லொழியச் செல்லுங்
கயிலையங் கிரியை யொத்தான்.

விண்ணவர் ஏத்த, வேத
முனிவரர் வியந்து வாழ்த்த,
மண்ணவர் இறைஞ்சச் செல்லும்
மாருதி, மறம் உட்கூர,
'அண்ணல் வாள் அரக்கன் தன்னை
அமுக்குவென் இன்னும்!' என்னுக்
கண்ணுதல் ஒழியச் செல்லும்
கயிலையங் கிரியை ஒத்தான்!

ஏத்த - துதிக்க. முனிவரர் - முனிவரிற் சிறந்தோர். இறைஞ்ச - வணங்க. மாருதி – அநுமன். மறம் - பகைமை. கூர - மிக. அண்ணல் வாள் – பெருமை பொருந்திய வாட்படை; பெருமையுடைய (கடவுளாகிய) சிவபெருமான் (அளித்த) வாட்படையெனலும் ஆம். கண்ணுதல் - நெற்றியிற் கண்ணுடைய சிவபெருமான். கயிலைக்கு இராவணன்பாற் பகை, சலியாத தன்னை இராவணன் பெயர்த் தெடுத்துச் சலிக்கச் செய்தமையான் வந்தது. ஏத்தலும் வாழ்த்தலும் இறைஞ்சலும் அவரவர் தகுதி பற்றி வந்தன. வெண்ணிறமும் பெரு மேனியும் வாய்ந்த அநுமன் இலங்கை நோக்கி விரைந்து செல்லுதல் கயிலை பழம்பகை மேற்கொண்டு இராவணனை அமுத்தும்பொருட்டுச் செல்லுதல் போன்றது என்றபடி. இராவணன் கயிலையெடுத்த போழ்து அவனைத் தன் காற் பெருவிரலால் அழுத்திய கண்ணுதல், பின்பு அவன் பாடிய சாமகீதங் கேட்டு இரங்கி அருளினமையின், மீட்டும் அவன் அவ்வாறு உய்தி பெருவகை அழுத்தக் கயிலை கண்ணுதலொழியச் சென்ற தென்க. (26)

27. மாணியாம் வேடந்தாங்கி
மலரயற் கறிவு மாண்டோர்
ஆணியா யுலகுக் கெல்லா
மறப்பொரு ணிரப்பு மண்ணல்

சேணுயர் நெடுநாட் டீர்ந்த
திரிதலைச் சிறுவன் றன்னைக்
காணிய விரைவிற் செல்லுங்
கனகமால் வரையு மொத்தான்.

மாணியாம் வேடம் தாங்கி, மலர் அயற்கு அறிவு மாண்டு, ஓர்
ஆணியாய், உலகுக்கெல்லாம் அறப்பொருள் நிரப்பும் அண்ணல்,
சேண் உயர் நெடுநாள் தீர்ந்த திரிதலைச் சிறுவன் தன்னைக்
காணிய விரைவில் செல்லும் கனக மால் வரையும் ஒத்தான்!

மாணி – பிரமசாரி. மலர் அயற்கு அறிவு மாண்டு - (திருமாலின் உந்தித் தாமரை) மலரில் தோன்றிய பிரமனினும் அறிவான் மேம்பட்டு. அயற்கு - அயனினும்; உருபு மயக்கம். ஆணி - மாற்றறி கருவி. உயர்ந்த ஒழுக்க முறையை அறிதற்கு அநுமன் ஒழுக்கமுறை கருவியாய் அமையும் என்னுங் கருத்தால் ஆணியாய் என்றார். அறப்பொருள் - அறமாகிய பொருள். அறப்பொருள் நிரப்பும் அண்ணல் என்றது அநுமனை. நெடுநாள் தீர்ந்த சேண் உயர் திரிதலைச் சிறுவன் என மாறிக் கூட்டுக. நெடுநாள் தீர்ந்த - நீண்ட காலம் (தன்னை விட்டுப் பிரிந்து) நீங்கிய. சேண் உயர் திரிதலைச் சிறுவனை-வானுற வோங்கிய திரிகூடமலையாகிய மகனை. தன்—சாரியை. காணிய – காணும்பொருட்டு. கனக மால்வரை – பொன்மயமான பெரிய மேருமலை. அண்ணல் ஒத்தான் என முடிக்க. (27)

28. மழைகிழித் துதிர மீன்கண்
மறிகடல் பாய வானங்
குழைவுறத் திசைகள் கீற
மேருவுங் குலுங்கக் கோட்டின்
முழையுடைக் கிரிகண் முற்ற
முடுகுவான் முடிவு காலத்
தழிவுறக் கடுகும் வேகத்
தாதையு மனைய னானான்.

மழை கிழித்து உதிர மீன்கள், மறி கடல் பாய, வானம்
குழைவுறத், திசைகள் கீற, மேருவும் குலுங்கக் கோட்டின்
முழை உடைக் கிரிகள் முற்ற, முடுகுவான், முடிவு காலத்து
அழிவுறக் கடுகும் வேகத் தாதையும் அனையன் ஆனான்!

மீன்கள் மழை கிழித்து உதிர - நட்சத்திரங்கள் மேகத்தைக் கிழித்துக்கொண்டு சிந்த. மறிகடல் பாய - (அலைகள்) மடங்கி வருகின்ற கடலானது (தரை மீது) தாவ. வானம் குழைவுற - மேலுலகத்தார் வலி கெட. கோட்டின் கிரிகள், முழையுடைக் கிரிகள் என்க. கோட்டின் முழையுடைக் கிரிகள் முற்ற - சிகரங்களை யும் குகைகளையும் உடைய மலைகள் முடிய (அழிய). முடுகுவான் - விரைந்து செல்பவனான அநுமன். உதிர, பாய, குழைவுற, கீற, குலுங்க, முற்ற, முடுகுவான் என்க. முடிவுகாலம் - கற்பாந்தகாலம். அழிவுற - (உலகம்) அழியும்படி. கடுகும் - விரைந்து வீசுகின்ற. தாதை - தந்தையாகிய வாயு. அனையனுனன் - ஒத்தான். முடுகு வான் அனையனுனன் என முடிக்க. மீன்கள் உதிர்தலும், கடல் எல்லை கடந்து நிலமீது பாய்தலும், வானம் குழைதலும் முதலியவை அநுமன் விரைவால் விளைந்தவை. இவை கற்பாந்தகாலத்து வாயு வின் விரைவாலும் நிகழ்வன; ஆதலின் அநுமன் வாயுவை ஒப்பா னுயினன் என்றவாறு. (28)

**29.** தடக்கைநா லைந்து பத்துத்
 தலையொடு முடையான் றானே
அடக்கியைம் புலன்கள் வென்ற
 தவப்பய னறுத லாலே
கெடக்குறி யாகி மாகங்
 கிழக்கெழு வழக்கு நீங்கி
வடக்கெழுந் திலங்கை செல்லும்
 பருதிவா னவனு மொத்தான்.

தடக்கை நாலைந்து பத்துத் தலையொடும் உடையான் தானே,
அடக்கி ஐம்புலன்கள் வென்ற தவப் பயன் அறுதலாலே,
கெடக் குறியாகி, மாகம் கிழக்கு எழு வழக்கு நீங்கி,
வடக்கு எழுந்து இலங்கை செல்லும் பருதிவானவனும் ஒத்தான்.

தலை பத்தொடு தடக்கை நாலைந்தும் உடையான் எனக் கூட்டுக. தடக்கை நாலைந்தும் உடையான் - பெரிய கைகள் இருபதும் உடைய வன்; என்றது இராவணனை. மாகம் - ஆகாயம். பருதி வானவன் - சூரியன். பெரிய ஒளிவடிவுடைய அநுமன் தென்திசையிலங்கை நோக்கிச் செல்வது, இராவணனுடைய நல்வினை தொலைந்தமையால் அவன் விரைந்து கெடுவான் என்பதைக் காட்டும் உற்பாதமாகச் சூரியன் வடதிசையுதித்துத் தென்றிசைச் செல்லுதல்போன்றிருந் தது என்றவாறு. (29)

**30.** புறத்துற லஞ்சி வேறோ
ரரணம்புக் குறைதல் போக்கி
மறத்தொழி லரக்கன் வாழு
மாநகர் மனுவின் வந்த
திறத்தகை யிராம னென்னுஞ்
சேவகற் பற்றிச் செல்லும்
அறத்தகை யரசன் றிண்போ
ராழியு மனைய ஞனன்.

புறத்து உறல் அஞ்சி, வேறு ஓர் அரணம் புக்கு உறைதல் போக்கி,
மறத் தொழில் அரக்கன் வாழும் மாநகர் மனுவின் வந்த
திறத்தகை இராமன் என்னும் சேவகற் பற்றிச் செல்லும்
அறத்தகை அரசன் திண் போர் ஆழியும் அனையன் ஆனன் !

மறத்தொழில் அரக்கன், வேறு ஓர் அரணம்புக்கு உறைதல் போக்கி வாழும் மாநகர்ப் புறத்து உறல் அஞ்சி எனக் கூட்டி, தீவினை புரிதலே தொழிலாகவுள்ள அரக்கனாகிய இராவணன், பிறிதொரு பாதுகாப்புள்ள இடத்தே புக்கு வாழ்தலை விட்டு (ப் பகைவரால் நிகழும் தீங்கு பற்றிச் சிறிதும் கவலையின்றி) வாழும் இலங்கை நகரின் புறத்தே தனித்துச் செல்ல அஞ்சி எனப் பொருள் உரைக்க. அஞ்சி, பற்றி, செல்லும் ஆழி என இயையும். அநுமன் என எழுவாய் வருவித்து ஆழியும் அனையனானன் என முற்றுவிக்க. அரணம் - மதிலும் அகழியும் முதலிய காப்பு வாய்ந்த இடம். திறத்தகை யிராமன் என்னும் சேவகற் பற்றி - ஆற்றலும் அருளும் உடைய இராமனென்னும் வீரனைத் துணைக்கொண்டு. திறம் - ஆற்றல். தகை - அருள். சேவகன் - வீரன். அறத்தகையரசன் திண்போர் ஆழி - அறமாகிய பெருமை வாய்ந்த அரசனாகிய திருமாலினுடைய வலிய பேராற்றலுடைய சக்கரப்படை. அறத்தகையரசு என்றது திருமாலை. திருமாலின் சக்கரப்படை, இராவணனுடைய வரபலத்தால் அவன் வாழும் நகர்ப்புறத்தும் செல்லாது அஞ்சி, மனுகுலத்தே வந்த அருளும் ஆற்றலும் உடைய இராமனென்னும் வீரன் துணைகொண்டு இலங்கை நோக்கிச் செல்லுதல்போல் அநுமன் செல்வானாயினன் என்றவாறு. (30)

**31.** கேழுலா முழுநி லாவிற்
கிளரொளி யிருளைக் கீறப்
பாழிமா மேரு நாண
விசும்பிடைப் படர்ந்த தோளான்

ஆழிசூ ழுலக மெல்லா
மருங்கனன் முருங்க வுண்ணும்
ஊழிநாள் வடபாற் றோன்று
முவாமுழு மதியு மொத்தான்.

கேழ் உலாம் முழு நிலாவில், கிளர் ஒளி இருளைக் கீறப்
பாழி மா மேரு நாண, விசும்பிடைப் படர்ந்த தோளான்,
ஆழி சூழ் உலகம் எல்லாம் அரும் கனல் முருங்க உண்ணும்
ஊழிநாள், வடபால் தோன்றும் உவா முழு மதியும் ஒத்தான்!

கேழ் உலாம் முழு நிலாவிற் கிளர் ஒளி - ஒளி விளங்குகின்ற நிறைந்த நிலவுபோல் (உடலினின்று) எழுகின்ற ஒளியானது. கீற-பிளக்க. பாழி - பருத்த. மாமேரு - மகாமேரு. விசும்பிடைப் படர்ந்த தோளான் - ஆகாயத்தே பரவிப் பருத்த தோள்களையுடையனை அநுமன். ஆழி - கடல். முருங்க - அழிய. வடபால் - வடக்குத் திசையில். உவாமதி முழுமதி யென்க. உவா - பூரணை. கீற, நாண, படர்ந்த தோள் என இயையும். தோளான் ஒத்தான் என முடிக்க. வெண்ணிறம் வாய்ந்து விளங்கும் அநுமன் (இலங்கைக்கு) வடக்கே தோன்றிய தோற்றம், ஊழிக்காலத்தில் வடதிசையில் தோன்றும் முழுமதியின் தோற்றம் போலும் என்றவாறு. ஊழிக்காலத்துச் சந்திர சூரியர் நிலைமாறுதல் இயல்பு. 29-ஆம் பாடலில் சூரியன் நிலைமாற்றம் கூறப்பட்டது காண்க. (31)

32. அடலெலாந் திகிரி மாயற்
கமைந்ததன் னாற்றல் காட்டக்
குடலெலா மவுணர் சிந்தக்
குன்றெனக் குறித்து நின்ற
திடலெலாந் தொடர்ந்து செல்லச்
சேண்விசும் பொதுங்கத் தெய்வக்
கடலெலாங் கடக்கத் தாவுங்
கலுழனு மனைய னானான்.

அடல் எல் ஆம் திகிரி மாயற்கு
அமைந்த தன் ஆற்றல் காட்டக்
குடல் எலாம் அவுணர் சிந்தக்
குன்று எனக் குறித்து நின்ற

திடல் எலாம் தொடர்ந்துசெல்லச்
சேண் விசும்பு ஒதுங்கு அத்தெய்வக்
கடல் எலாம் கடக்கத் தாவும்,
கலுழனும் அனையன் ஆனான் !

அடல் எல் ஆம் திகிரி மாயற்கு அமைந்த தன் ஆற்றல் காட்ட- வருத்துந் தன்மையுள்ள சூரியனை ஒத்த திகிரிப் படையுடைய திரு மாலுக்கு இயைந்த தன்னுடைய ஆற்றலை (அமுதங் கவர்ந்த காலத்துத் தேவர் அறிய) வெளிப்படுத்தும்பொருட்டு. (அமுது காத் திருந்த) அவுணரெல்லாம் குடல் சிந்த என்க. அவுணர் - அசுரர். குறித்து நின்ற திடலெல்லாம் - சொல்லப்பட்டு நின்ற மேடுக ளெல்லாம். விசும்பு சேண் ஒதுங்கு அத் தெய்வக் கடலெல்லாம் கடக்கத் தாவும் - ஆகாயத்தே சேய்மைக்கண் ஒதுங்கிய அத்தேவர் கூட்டமெல்லாவற்றையும் மேற்பட்டுத் தாவிச் செல்லுகின்ற. அநுமன் என எழுவாய் வருவித்துக் கலுழனும் அனையனானான் என முற்றுவிக்க. (32)

### அநுமன் வேகங்கண்டு வானவர் வியத்தல்

33. நாலினோ டுலக மூன்று
நடுக்குற வடுக்கு நாகர்
மேலின்மே னின்ற காறுஞ்
சென்றகூ லத்தன் விண்டு
காலினா லளந்த வான
முகட்டையுங் கடக்கக் கால
வாலினா லளந்தா னென்று
வானவர் மருளச் சென்றான்.

நாலினோடு உலகம் மூன்றும் நடுக்குற, அடுக்கும் நாகர்
மேல் இல் மேல் நின்ற காறும் சென்ற கூலத்தன், ‘விண்டு
காலினால் அளந்த வான முகட்டையும் கடக்கக் கால
வாலினால் அளந்தான் !’ என்று, வானவர் மருளச் சென்றான் !

அடுக்கும்—ஒன்றன்மே லொன்றாக அமைக்கப்பட்டுள்ள. நாக மேல் இல்மேல் நின்றகாறும் - தேவருடைய உயர்ந்த வாசத் தானங்கட்கு மேலும் மேலும் நிலைத்த உலகங்களின் எல்லை வரையும். கூலத்தன் - வாலையுடையவன் ; என்றது அநுமனை. கடக்க - முடிவுபோக. நாகர்மேல் இல்மேல் நின்ற காறும் சென்ற

கூலம், உலகமேழும் நடுக்குறச் சென்ற கூலம் எனக் கொள்க. விண்டு - திருமால். கால வால் - காலனது தன்மை (கொல்லுந் தன்மை)யுள்ள வால். மருள - வியக்கும்படி. கூலத்தன் சென்றான் என்க. 'விண்டு காலினால் கடக்க அளந்த வான முகட்டையும் வாலினால் அளந்தான்' என்பது அநுமன் விரைந்துசெல்லல் கண்டுநின்ற தேவர் கூற்று. இங்கு, காலவால் என்றதனையே அருணாசலகவி இராம நாடகத்து 'வீசியவால் எமபாசமதாக' என்றார். விண்டு காலால் அளந்த வானமுகட்டை, அநுமன் தன் வாலால் அளந்தான் என்ற சொல்நயம் நோக்கத்தக்கது. மேலும் இச் செய்தி, முன் "கழற்கால் மாயன், நெடுமையால் அன்றளந்த வுலகெலாந் தன்மனத்தே நினைந்து செய்யும், கொடுமையால் அளந்தானை" (அயோ. குகப். 69) என்னும் செய்யுளை நினைப்பூட்டு கின்றது. (33)

## அநுமன் வாலின் தோற்றம் 34—35

34. விளித்துப்பின் வேலை தாவும்
வீரன்வால் வேத மெய்க்கும்
அளித்துப்பி னநும னென்னு
மருந்துணை பெற்ற தாயும்
களித்துப்புன் றொழின்மே னின்ற
வரக்கர்கண் ணுறுவ ரென்ன
ஒளித்துப்பின் செல்லுங் கால
பாசத்தை யொத்த தன்றே.

விளித்துப் பின் வேலை தாவும்
வீரன்வால், வேதம் எய்க்கும்
அளித் துப்பின் அநுமன் என்னும்
அருந் துணை பெற்றதாயும்,
களித்துப் புன்தொழில்மேல் நின்ற
அரக்கர் கண்ணுறுவர் என்ன
ஒளித்துப் பின்செல்லும் கால
பாசத்தை ஒத்தது அன்றே!

விளித்து - பேராரவாரஞ் செய்து. வேலை - கடல். வேதம் எய்க்கும் அளி என இயைக்க. எய்த்தல் - அறிதல். அளி துப்பின் - கருணையாகிய வலிமையினையுடைய. வால் ஒத்தது என முடிக்க. 'வேத மேய்க்கும்' என்று பாடங்கொண்டு வேதத்தை ஒத்த (பிழைபடாத) என்று பொருள் கூறலும் அமையும். (34)

35. மேருவை முழுதுஞ் சூழ்ந்து
மீதுற்ற வேக நாகம்
கார்நிறத் தண்ண லேவக்
கலுழன்வந் துற்ற காலைச்
சோர்வுறு மனத்த தாகிச்
சுற்றிய சுற்று நீங்கிப்
பேர்வுறு கின்ற வாறு
மொத்ததப் பிறங்கு பேழ்வால்.

மேருவை முழுதும் சூழ்ந்து, மீது உற்ற வேக நாகம்,
கார்நிறத்து அண்ணல் ஏவக் கலுழன் வந்து உற்ற காலைச்
சோர்வு உறும் மனத்த தாகிச் சுற்றிய சுற்று நீங்கிப்
பேர்வுறுகின்றவாறும் ஒத்தது, அப் பிறங்கு பேழ்வால்!

வேகநாகம் - சினமுள்ள பாம்பாகிய ஆதிசேடன். கார் நிறத்து அண்ணல் - கரிய நிறமுடைய பெருமையிற் சிறந்தோனை திருமால். கழலுன் - கருடன். பேழ்வால் - பெரியவால். வால் ஒத்தது என முடிக்க. அநுமனுடலுக்கு மேருமலையும், சுழன்று மேற்செல்லும் அவன் வாலுக்கு மேருவைப் பிணித்த நிலை நீங்கிப் பெயர்கின்ற ஆதிசேடனும் உவமை. (35)

அநுமன் வேகத்தால் நிகழ்ந்தவை 36—38

36. குன்றொடு குணிக்குங் கொற்றக்
குவவுத்தோட் குரக்குச் சீயம்
சென்றுறு வேகத் திண்கா
லெறிதரத் தேவர் வைகும்
மின்றொடர் வானத் தான
விமானங்கள் விசையிற் றம்மில்
ஒன்றொடொன் றுடையத் தாக்கி
மாக்கட லுற்ற மாதோ.

குன்றொடு குணிக்கும் கொற்றக் குவவுத்தோள் குரக்குச் சீயம்,
சென்றுறு வேகத் திண்கால் எறிதரத் தேவர் வைகும்
மின்தொடர் வானத்து ஆன விமானங்கள், விசையில் தம்மில்
ஒன்றொடு ஒன்று உடையத் தாக்கி, மாக்கடல் உற்ற மாதோ!

தேவர் வைகும் விமானங்கள், குரக்குச்சீயம் சென்றுறு வேகத் திண்கால் எறிதர(லால்) தம்மில் ஒன்ஞெடொன்று உடைய விசை யில் தாக்கி மாக்கடல் உற்ற என முடிவுகொள்க. குன்ஞெடு குணிக்கும் - மலையுடன் ஒப்புக் கூறத்தக்க. கொற்றம் - வெற்றியை யுடைய. குவவு - திரண்ட. குரங்கு குரக்கென்ஞனது வலித்தல்வி காரம். குரக்குச்சீயம் - வானரர்களுள் சிங்கம் போன்றவனுன அநுமன். சென்றுறு - செல்லுதலால் உண்டான. திண்கால் - வலிய காற்று. எறிதர – தாக்குதலால். தேவர் வைகும் - தேவர் கள் தங்கிய. மின் தொடர் - ஒளியொடு கூடிய. வானத்து ஆன - ஆகாயத்தே பொருந்திய. வானத் தான எனப் பிரித்து ஆகாய மாகிய இடத்திலுள்ள எனப் பொருளுரைக்கலும் ஆம். (36)

37\. வலங்கையின் வயிர வேதி
வைத்தவன் வைகு நாடும்
கலங்கிய தேகு வான்றன்
கருத்தென்கொ லென்னுங் கற்பால்
விலங்கயி லெயிற்று வீரன்
முடுகிய வேகம் வெய்யோர்
இலங்கையி னளவன் றென்ஞ
விம்பர்நாடி ரிந்த திப்பால்.

வலங்கையின் வயிர ஏதி
வைத்தவன் வைகும் நாடும்
கலங்கியது! 'ஏகுவான்தன்
கருத்து என்கொல்?' என்னும் கற்பால்;
'விலங்கு அயில் எயிற்று வீரன்
முடுகிய வேகம் வெய்யோர்
இலங்கையின் அளவு அன்று!' என்ஞ,
இம்பர்நாடு இரிந்தது இப்பால்!

வலம் கையில் வயிர ஏதி வைத்தவன் வைகும் நாடும் - வலக் கரத்தில் வச்சிராயுதம் தாங்கியவனுன இந்திரன் உறையும் விண் ணுடும். ஏதி - ஆயுதம். ஏகுவான் - செல்பவனுன அநுமன். கற் பால் - நினைவினுல். 'ஏகுவான் கருத்து என்கொல்' என்னும் கற்பால் வயிர ஏதி வைத்தவன் வைகும் நாடும் கலங்கியது என்க. விலங்கு அயில் எயிற்று வீரன் - வளைந்த கூர்மையான பற்களை யுடைய வீரனுகிய அநுமன். முடுகிய வேகம் - விரைந்த வேகம். வெய்யோர் - கொடியரான இராக்கதர். இம்பர் நாடு - இவ்வுலகம்.

இரிதல் - வெருவியோடுதல். இம்பர் நாடு இப்பால் இரிந்தது என்க. அநுமன் செலவால் விண்ணும் மண்ணும் கலங்கின என்றவாறு. (37)

38. ஓசனை யுலப்பி லாத
வுடம்பமைந் துடைய வென்னத்
தேசமு நூலுஞ் சொல்லுந்
திமிங்கில கிலங்க ளோடும்
ஆசையை யுற்ற வேலை
கலங்கவன் றண்ணல் யாக்கை
வீசிய காலின் வீந்து
மிதந்தன மீன்க ளெல்லாம்.

'ஓசனை உலப்பு இலாத உடம்பு அமைந்து உடைய!' என்னத் தேசமும், நூலும், சொல்லும் திமிங்கில கிலங்களோடும், ஆசையை உற்ற வேலை கலங்க, அன்று அண்ணல் யாக்கை வீசிய காலின், வீந்து மிதந்தன மீன்களெல்லாம்!

அன்று அண்ணல்யாக்கை வீசிய காலின், ஆசையையுற்ற வேலை கலங்க, திமிங்கில கிலங்களோடு மீன்களெல்லாம் வீந்து மிதந்தன என முடிக்க. ஓசனை (நீளம்) அமைந்த உடம்பு, உலப்பு இலாத உடம்பு என்க. உலப்பிலாத - கெடுதல் இல்லாத. ஓசனை-யோசனை: ஓரளவு. தேசம் என்றது ஆகுபெயராய் உலகத்தாரை உணர்த்திநின்றது. திமிங்கிலகிலம் - திமிங்கிலத்தை விழுங்கும் ஒருவகைப் பெருமீன். ஆசையையுற்ற வேலை - திக்கின் எல்லைவரை நீண்ட கடல். அண்ணல் என்றது அநுமனை. யாக்கை - உடம்பு. கால் - காற்று. வீந்து – செத்து. (38)

### முன்னே நீட்டிய அநுமன் கைகளின் தோற்றம்

39. பொருவரு முருவத் தன்னான்
போகின்ற பொழுது வேகம்
தருவன தடக்கை தள்ளா
நிமிர்ச்சிய தம்மு ளொப்ப

ஒருவருங் குணத்து வள்ள
லோருயிர்த் தம்பி யென்னும்
இருவரு முன்னர்ச் சென்ரு
லொத்தன விரண்டு பாலும்.

பொரு அரும் உருவத்து அன்ஞன் போகின்ற பொழுது, வேகம்
தருவன தடக்கை, தள்ளா நிமிர்ச்சிய தம்முள் ஒப்ப,
ஒருவு அரும் குணத்து வள்ளல், ஓர் உயிர்த் தம்பி, என்னும்
இருவரும் முன்னர்ச் சென்ருல் ஒத்தன, இரண்டு பாலும்!

பொரு அரும் உருவத்து அன்ஞன் - ஒப்பில்லாத உருவமுடைய அவ்வநுமன். வேகம் தருவன(வும்) தள்ளா நிமிர்ச்சிய(வும்) தம்முள் ஒப்பன(வும் ஆகிய) தடக்கை யென்க. தள்ளா நிமிர்ச்சிய - நீங்காத உயர்வையுடையன. தடக்கை - பெரிய கை. ஒருவருங்குணத்து வள்ளல் - நீங்குதலில்லாத நற்குணங்கள் அமைந்த வள்ளியோஞன இராமபிரான். அநுமனுடைய மேலோங்க எடுத்த கைத்தலங்கள், அவன் செல்லுங்கால் துணையாக அவனுக்கு இருபக்கமும் இராமபிரானும் இலக்குமணனும் முன் சென்ருலொத்தன என்றபடி. ஒரு நற்பணி புரிதல் கருதி அயலிடத்துக்குப் புறப்படுங்கால், 'முன்னும் பின்னும் பக்கங்களிலும் அம்பு பூட்டிய விற்பிடித்த கையினரான இராமலக்குமணர் உடன்வந்து காக்க' எனத் தியானித்துச் செல்லும் வழக்கை இச்செய்யுள் நினைப்பூட்டுகிறது. (39)

## மைந்நாகமலையின் தோற்றம் 40—46

40. இந்நாக மன்ஞ னெறிகாலென
★ வேகும் வேலைத்
திந்நாக மாவிற் செறிகீழ்த்திசை
காவல் செய்யும்
கைந்நாக மந்நாட் கடல்வந்ததொர்
காட்சி தோன்ற
மைந்நாக மென்னு மலைவானுற
வந்த தன்றே.

இந் நாகம் அன்ஞன், எறி கால் என ஏகும் வேலைத்
திந்நாகம் மா வில் செறி கீழ்த்திசை காவல் செய்யும்

கைந்நாகம், அந்நாள் கடல் வந்தது ஓர் காட்சி தோன்ற
மைந்நாகம் என்னும் மலை வான் உற வந்தது அன்றே!

இந் நாகம் அன்னான் – மலையொத்தவனான இந்த அநுமன். எறி கால் என - மோதுகின்ற காற்றைப்போல (விரைந்து). ஏகும் வேலை - செல்லும்பொழுது. திக் நாகம் என்னும் வடசொற்றொடர் திந்நாகம் என விகாரமாயிற்று. திக் நாகம் - திசை யானைகளுள். மா வில் செறி கீழ்த்திசை காவல்செய்யும் கைந்நாகம் - சிறந்த ஒளி படர்ந்த கிழக்குத் திக்கைக் காக்கின்ற கையையுடைய மலைபோல்வ தாகிய அயிராவதம் என்னும் யானையானது. ஒளிக்கடவுளாகிய சூரியன் உதிக்கும் திசையாதலின் மா வில் செறி கீழ்த்திசையென்றார். வில் - ஒளி, மைந்நாக மலை கடலில் எழுந்த தோற்றம் திருப்பாற் கடலில் அயிராவதம் எழுந்தது போலும் என்றபடி. அமுதம் கடைந்தபோது திருப்பாற்கடலில் தோன்றியவற்றுள் அயிராவதமும் ஒன்று. (40)

41 மீயோங்கு செம்பொன் முடியாயிர
மின்னி மைப்ப
ஓயா வருவித் திரளுத்தரி
யத்தை யொப்பத்
தீயோ ருளரா கியகாலவர்
தீமை தீர்ப்பான்
மாயோன் மகரக் கடனின்றெழு
மாண்ப தாகி.

மீ ஓங்கு செம்பொன் முடி ஆயிரம் மின் இமைப்ப,
ஓயா அருவித் திரள் உத்தரியத்தை ஒப்பத்
தீயோர் உளராகியகால் அவர் தீமை தீர்ப்பான்,
மாயோன், மகரக் கடல்நின்று எழும் மாண்பது ஆகி!

மீ - மேல். உத்தரியம் - மேலாடை; உத்தரியத்துக்கு அருவி உவமை (411). உளராகிய கால் - உள்ளபொழுது. தீர்ப்பான் - போக்கும்பொருட்டு. மாயோன் - திருமால். மகரம் - மீன். மாயோன் மகரக்கடல் நின்றெழுந்தாலனைய மாண்பினதாகி. 'மைந்நாகமென்னும் மலை வானுற வந்தது' என முற்பாட்டின் ஈற்றடியோடிணைத்து முடிக்க. பின் 51-ஆம் பாடல் வரை அவ்வடி கொண்டுகூட்டி முடிவு கொள்ளத்தகும். (41)

**42.** நூலேந்து கேள்வி நுகரார்புல
ஞேக்க லுற்ருர்
போலேந்தி நின்ற தனியாண்மை
பொருது நீங்கக்
காலாழ்ந்த ழுந்திக் கடல்புக்குழிக்
கச்ச மாகி
மாலேந்த வோங்கு நெடுமந்தர
வெற்பு மான.

நூல் ஏந்து கேள்வி நுகரார், புலன் நோக்கல் உற்ருர்
போல் ஏந்தி நின்ற தனி ஆண்மை பொருது நீங்கக்
கால் ஆழ்ந்து அழுந்திக் கடல் புக்குழிக் கச்சம் ஆகி
மால் ஏந்த ஓங்கும் நெடு மந்தரவெற்பு மான !

நூல், ஏந்து கேள்வி நுகரார் – (வேத முதலிய) நூல்(களிற் கூறப்படும் பொருள்)களையும் உயர்ந்த கேள்வி(யால் எய்தற்குரிய பொருள்) களையும் அடைந்து இன்புருராகி. நுகரார் முற்றெச்சம். புலன் நோக்கலுற்ருர் - பொறிகளால் நுகரப்படும் பொருளின்கண் விருப்புற்ருராகிய தேவர். போல் உரையசை. தனி ஏந்திநின்ற ஆண்மை பொருது நீங்க – (எச்செயலும் இறைவனருளால் நிகழ்வது என்கின்ற உணர்வின்றித் தங்கள் ஆற்றலால் நிகழ்வதாக எண்ணிய நிலையில் இறைதொடர்பின்றித் தாம் தனியே உடையராயிருந்த ஆண்மையானது மந்தர மலையைத் தாங்கலாற்ருது விலகியமையால். கால் ஆழ்ந்து அழுந்திக் கடல்புக்குழி - (சந்திரனுகிய) தறி ஆழ்த லால் மத்தாகிய மந்தர மலையும் அழுந்திக் கடலிற்புக்க பொழுதில். கால் – தறி. மால் – திருமால். கச்சமாகி – ஆமையாய். மான - ஒப்ப. மந்தர வெற்புமான மைந்நாகம் வந்தது என முடிக்க. (42)

**43.** தள்ளற் கருநற் சிறைமாடு
தழைப்பொ டோங்க
எள்ளற் கருநன் னிறமெல்லை
யிலாது பொங்க
வள்ளற் கடலைக் கெடநீக்கி
மருந்து வௌவி
உள்ளூற் றெழுமோ ருவணத்தர
சேயு மொப்ப.

தள்ளற்கு அரும் நல் சிறை மாடு தழைப்பொடு ஓங்க,
எள்ளற்கு அரும் நல் நிறம் எல்லை யிலாது பொங்க,
வள்ளல் கடலைக் கெடநீக்கி, மருந்து வெளவி,
உள் உற்று எழும் ஓர் உவணத்து அரசேயும் ஒப்ப !

சிறை - இறக்கை. மாடு - பக்கங்களில். எள்ளற்கரும் நன்னிறம் - பழிக்கப்படாத (பாராட்டத்தக்க) நல்ல நிறம். பொங்க - மிக. வள்ளற் கடல் - (முத்து பவளம் முதலியவற்றைக் கொடுத்தலால்) வள்ளற்றன்மையுடைய கடல். கடலைக் கெடநீக்கி - கடலை(ப் பரவி நிற்கின்ற அதன் தன்மை) கெட்டு இருகூருகும்படி பிரித்து. மருந்து - அமுது. வெளவி - கவர்ந்து. உள் உற்று எழு - கடலினுட் பொருந்தி மேல் எழுந்த. உவணத்தரசேயும் - பறவையரசாகிய கருடனும். உவணத்தரசேயும் ஒப்ப மைந்நாகம் வானுற வந்தது என்க. இப்பாடலில் கருடன் பாதாளலோகத்திலிருந்து அமுதகலசத்தைக் கவர்ந்து வந்த செய்தி குறிக்கப்பட்டது. இருபக்கமும் தன் இறக்கைகள் மிக்கு விளங்கவும் பல நிறமும் தன்பாற் பொலிந்து தோன்றவும் கடலைக் கிழித்துக்கொண்டு மேலெழுந்த மைந்நாகத்தின் தோற்றம், தன் இறக்கைகள் தழைத்தோங்கவும் தன் உறுப்புக்களில் பலவகை நல்ல நிறங்கள் மிகவும் பொருந்தி விளங்கவும் கடலைப் பிளந்துகொண்டு அமுதங்கொண்டெழுந்த கருடனுடைய தோற்றம் போன்றிருந்ததென்றவாறு. மைந்நாகத்துக்கு மருந்து வெளவுதல் ஒஷதிகளையுடையதாதல். (43)

44. ஆன்ருழ் நெடுநீ ரிடையாதியொ
 டந்த மாகித்
தோன்ருது நின்ரு னருடோன்றிட
 முந்து தோன்றி
மூன்ரு முலகத் தொடுமுற்றுயி
 ராய மற்றும்
ஈன்ருனை யீன்ற சுவணத்தனி
 யண்ட மென்ன.

ஆன்று ஆழ் நெடுநீரிடைஆதியொடு அந்தம் ஆகித்
தோன்ருதுநின்ருன் அருள் தோன்றிட முந்து தோன்றி,
மூன்று ஆம் உலகத்தொடும் முற்று உயிராய மற்றும்
ஈன்ருனை ஈன்ற சுவணத் தனி அண்டம் என்ன !

ஆன்று ஆழ் நெடு நீரிடை - நிறைந்து ஆழ்ந்த பிரளய வெள்ளத்திலே. ஆதியொடு அந்தமாகித் தோன்றுது நின்றுன் - உலகத் தோற்றத்துக்கும் அழிவுக்கும் காரணனுகி, (வெளிப்படாது) மறைந்து நின்ற திருமாலினுடைய. முந்து - முன்னே. தோன்றி ஈன்றுன் எனக் கூட்டுக. முற்றுயிராய - நிறைந்த உயிர்களாகியவற்றையும். மற்றும் - உயிரல்பொருள்களையும். ஈன்ற - பெற்ற. தனி சுவண அண்டம் என்ன - ஒப்பற்ற பொன்மயமான அண்டம் போலவும். பிரமன் சுவண அண்டத்திற் பிறந்தமை, தக்கயாகப்பரணியினும் கூறப்பட்டது. இதனுல் பிரமனுக்கு இரணியகர்ப்பன் என்ற பெயர் உண்டாயிற்று. சுவண அண்டம் என்ன மைந்நாகம் வந்தது என முடிக்க. (44)

45. இந்நீரி லென்னைத் தருமெந்தையை
யெய்தி யன்றிச்
செய்ந்நீர்மை செய்யே னெனச்சிந்தனை
செய்து நொய்தின்
அந்நீரில் வந்த முதலந்தண
ஞதி நாளம்
முந்நீரின் மூழ்கித் தவமுற்றி
முளைத்த வாபோல்.

'இந்நீரில் என்னைத் தரும் எந்தையை எய்தியன்றிச்
செய்ந்நீர்மை செய்யேன் !' எனச் சிந்தனைசெய்து, நொய்தின்,
அந்நீரில் வந்த முதல் அந்தணன், ஆதி நாள் அம்
முந்நீரில் மூழ்கித் தவம் முற்றி, முளைத்தவாபோல் !

இந்நீரில் - இந்தப் பிரளயவெள்ளத்தில், எந்தையை - என் தந்தையாகிய திருமாலை. செய் நீர்மை - செய்யத்தக்க நீர்மையுடைய (நல்ல) செயல்களை. நொய்தின் - விரைந்து. அந்நீரில் - அந்தக் கடற்பெருக்கில். அந்தணன் என்றது பிரமனை. அம்முந்நீரில் - அந்தக் கடலில். முந்நீர் - கடல். முளைத்தல் - தோன்றுதல். அந்தணன் தவம் முற்றி முளைத்தவா(று) போல மைந்நாகம் வந்து தோன்றிற்று என்க. நான்முகன் திருமாலைநோக்கித் தவஞ்செய்தமை செவ்வைச் சூடுவார் பாகவதத்துக் கூறப்பட்டது (3-38) (45)

46. பூவாலிடை யூறு புகுந்து பொருத நெஞ்சிற்
கோவாமுனி சீறிட வேலை குளித்த வெல்லாம்
மூவாமுத லுயகன் மீள முயன்ற வந்நாள்
தேவாசுரர் வேலையில் வந்தெழு திங்க ளென்ன.

பூவால் இடையூறு புகுந்து, பொருத நெஞ்சின்
கோ ஆம் முனி சீறிட, வேலை குளித்த எல்லாம்,
மூவா முதல் நாயகன் மீள முயன்ற அந்நாள்,
தேவாசுரர் வேலையில் வந்து எழு திங்கள் என்ன !

பூவால் - திருமகள் சூடிய மாலை காரணமாக (அம்மாலையை அயிராவதம் துதிக்கையால் எடுத்துக் கீழே இட்டு மிதித்துத் தேய்க்கும்படி அதன் தலையில் இந்திரன் வைத்தது காரணமாக). இடையூறு புகுந்து - துன்பம் புகுதலால் (செய்தெனெச்சம் செயவெனச்சமாகத் திரிக்க). பொருத - அத்துன்பத்தைத் தாங்கமாட்டாத, கோ ஆம் முனி-பெருமை பொருந்திய முனிவனுன துருவாசன். கோவமுனி என்பது கோவா முனியென எதுகை நோக்கி நீண்டது என்பாரும் உளர். வாரி - கடல். மூவா முதல் நாயகன் - அழியாத முதன்மையையுடைய தலைவனாகிய திருமால். மீள - மீண்டுவரும்படி. குளித்தவெல்லாம் மீள என்க. தேவாசுரர் வேலை – தேவர்களும் அசுரர்களும் கூடிய கடலில். வேலையில் வந்தெழு திங்களென்ன மைந்நாகமென்னும் மலை வானுற வந்தது என முடிக்க. (46)

மைந்நாகம் எழுந்தகாலத்து நிகழ்ந்தவை 47—51

47. நிறங்குங்கும மொப்பன நீனிறம்
வாய்ந்த நீரின்
இறங்கும்பவ ளக்கொடி சுற்றின
செம்பொ னேய்ந்த
பிறங்குஞ்சிக ரப்படர் முன்றி
ஞெறும்பி ஞவோ
டுறங்கும்மக ரங்க ளுயிர்ப்பொ
டுணர்ந்து பேர.

நிறம் குங்குமம் ஒப்பன, நீல் நிறம் வாய்ந்த, நீரின்
இறங்கும் பவளக்கொடி சுற்றின, செம்பொன் ஏய்ந்த,

பிறங்கும் சிகரப் படர் முன்றில் தொறும், பிணவோடு
உறங்கும் மகரங்கள் உயிர்ப்பொடு உணர்ந்து பேர!

குங்குமநிறமொப்பனவும் நீலநிறம் வாய்ந்தனவும் பவளக்கொடி சுற்றியனவும் செம்பொனேய்ந்தனவும் ஆன விளக்கம் மிக்க சிகரங் களின் பரந்த முன்றில்கள்தோறும் பெட்டைகளுடன் உறங்கும் மகர மீன்கள் அச்சத்தால் உண்டான நெடுமூச்சுடன் கண்விழித்து இடம் பெயர்ந்துலாவ மைந்நாகம் வானுற எழுந்தது என இயைக்க. நீரின் இறங்கும் - நீரில் வேர்வீழ்த்த. பிறங்குதல் - விளங்குதல். படர் - விசாலமான. முன்றில் - முன்பக்கம். பிண - பெட்டை. மகரம் - மீன் வகையுள் ஒன்று. (47)

48. கூன்சூன்முதி ரிப்பி குரைக்க நிரைத்த பாசி
வான்சூன்மழை யொப்ப வயங்கு பளிங்கு முன்றில்
தான்சூல நாளிற் றகைமுத்த முயிர்த்த சங்கம்
மீன்சூழ்வரு மம்முழு வெண்மதி வீறு சீற.

கூன் சூல் முதிர் இப்பி குரைக்க, நிரைத்த பாசி
வான் சூல் மழை ஒப்ப, வயங்கு பளிங்கு முன்றில்
தான் சூலநாளில் தகை முத்தம் உயிர்த்த சங்கம்,
மீன்சூழ்வரும் அம் முழு வெண்மதி வீறுசீற!

சூல் முதிர் இப்பி - கருமுதிர்ந்த சிப்பி. குரைக்க - ஒலிக்க. நிரைத்த - திரண்ட. சூல் மழை வான் ஒப்ப - கருக்கொண்ட மேகத்தோடு கூடிய வான்போல. வயங்கு – விளங்குகின்ற. பளிங்கு முன்றில் - பளிங்குப்பாறையினையுடைய அம்மலையின் சிகரங்களின் முற்பக்கத்து. சூல நாளில் - இரேவதிநட்சத்திரத்தோடு கூடிய நாளில். தகை முத்தம் உயிர்த்த சங்கம் - சிறந்த முத்தினை ஈன்ற சங்கம். மீன்சூழ்வரும் - நட்சட்திரங்களாற் சூழப்பட்ட. வீறு – சிறப்பினை. சீற - முனிய. கூன் சூல் முதிர் இப்பி குரைக்க நிரைத்த பாசி(யினால்) சூல்மழைசூழ் வான் ஒப்ப வயங்கு பளிங்குமுன்றிலின் கண் சூலநாளில் முத்தம் உயிர்த்த சங்கமானது, மீன் சூழ எழும் முழுவெண்மதி வீறு சீற மைந்நாகம் எழுந்தது என முடிக்க. இப்பி குரைத்தலுக்கு மேக முழக்கமும், பாசிக்கு மேகமும், பளிங்குமுன்றிலுக்கு வானமும், முத்துக்களுக்கு மீன்களும், சங்கத்துக்கு மதியமும் உவமைகருதநின்றன. (48)

49. பல்லாயிர மாயிரங் காசினம் பாடி மைக்குங்
கல்லார்சிம யத்தடங் கைத்தல நீண்டு காட்டித்
தொல்லார்கலி யுட்புக மூழ்கி வயங்கு தோற்றத்
தெல்லார்மணி யீட்ட முகந்தெழு கின்ற தென்ன.

பல்லாயிரம் ஆயிரம் காசினம் பாடு இமைக்கும்
கல்லார் சிமயத் தடம் கைத்தலம் நீண்டு காட்டித்
தொல் ஆர்கலியுள் புக மூழ்கி, வயங்கு தோற்றத்து
எல் ஆர் மணி ஈட்டம் முகந்து, எழுகின்றது என்ன!

காசினம் - மணிவகை. பாடு இமைக்கும் - பக்கங்களிலெல்லாம் மின்னுகின்ற. பாடு - செவ்வி, பெருமை, அழகுமாம். கல் ஆர் சிமயத் தடம் கைத்தலம் (அந்த) மைந்நாக மலையிற் பொருந்திய சிகரங்களாகிய பெரிய கைகள். எல் - ஒளி. மணி யீட்டம் - இரத்தினக் குவியல்; முத்தின் தொகுதியும் ஆம். தொல் ஆர்கலியுள் புக மூழ்கி, வயங்கு தோற்றத்து மணியீட்டமெல்லாம் முகந்தெழுகின்ற தென்னப் பல்லார மாயிரம் காசினம் பாடிமைக்கும் கல் சிமையத் தடம் கைத்தலம் நீண்டு காட்டி வானுற வந்தது என்க. (49)

50. மனையிற்பொலி மாக நெடுங்கொடி மாலை யேய்ப்ப
வினையிற்றிரள் வெள்ளரு வித்திரள் தூங்கி வீழ
நினைவிற்கட லூடெழ லோடு முணர்ந்து நீங்காச்
சுனையிற்பனை மீன்றிமி லோடு தொடர்ந்து துள்ள.

மனையில் பொலி மாக நெடுங்கொடி மாலை ஏய்ப்ப,
வினையில் திரள் வெள் அருவித்திரள் தூங்கி வீழ,
நினைவின் கடலூடு எழலோடும், உணர்ந்து நீங்காச்
சுனையில் பனைமீன் திமிலோடு தொடர்ந்து துள்ள!

வினையில் திரள் வெள் அருவித்திரள் - நல்வினை போலத் திரண்ட வெண்ணிறமுடைய அருவியின் தொகுதிகள். மனையிற் பொலி மாக நெடுங்கொடி மாலை ஏய்ப்பத் தூங்கி வீழ - மாளிகைகளில் விளங்குகிற ஆகாயமளாவிய நெடிய (வெள்ளிய) கொடி வரிசையொப்ப அசைந்து கீழ் இழிய. நினைவின் - (அநுமனுக்கு உதவும்) நினைவுடன். அருவித்திரள் கொடிமாலையொப்பத் தூங்கி வீழக் கடலூடு எழுந்த அளவில் பனைமீன் திமிலோடும் உணர்ந்து சுனையிற்றொடர்ந்து நீங்காதனவாய்த் துள்ள மைந்நாகம் வானுற வந்தது என முடிக்க. திமில் - திமிலம் : பெருமீனினத்தொன்று :

ஆரவாரமுமாம். அருவிக்கு வினை உவமை (பால. ஆற்றுப். 17; சீவக 2752) : அருவிக்கு வெண்கொடி உவமை (தக்க. 634). (50)

51. கொடுநாலொ டிரண்டு குலப்பகை
குற்ற மூன்றுஞ்
சுடுஞானம் வெளிப்பட வுய்ந்த
துயக்கி லார்போல்
விடநாக முழைத்தலை விம்ம
லுழந்து வீங்கி
நெடுநாள் பொறையுற்ற வுயிர்ப்பு
நிமிர்ந்து நிற்ப.

கொடுநாலொடு இரண்டு குலப்பகை, குற்றம் மூன்றும்,
சுடு ஞானம் வெளிப்பட, உய்ந்த துயக்கு இலார்போல்,
விடநாகம் முழைத்தலை விம்மல் உழந்து, வீங்கி,
நெடுநாள் பொறையுற்ற உயிர்ப்பு நிமிர்ந்து நிற்ப!

கொடுநாலொடு இரண்டு குலப் பகை - கொடிய ஆறாகிய கூட்டமாகிய பகை. அவை : காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதம் என்பனவாம். குற்றம் மூன்று : மனம் வாக்குக் காயங்களால் நிகழ்வன; ஐயம், திரிபு, அறியாமையும் ஆம். ஆறு பகையும் மூன்று குற்றமும் ஆகிய தூறுகளைச் சுட்டெரிக்கும் மெய்யறிவாகிய நெருப்பு வெளிப்பட என உருவக வாய்பாடு தோன்ற விரிக்க. உய்ந்த - உய்திபெற்ற. துயக்கிலார்போல் - மயக்கமற்ற பெரியோர்களைப்போல. துயக்கிலார்போல் விடநாகம் முழைத்தலை விம்மலுழந்து வீங்கி நெடுநாட் பொறையுற்ற வுயிர்ப்பு நிமிர்ந்து நிற்ப, மைந்நாகம் வானுற வந்தது என முடிக்க. முழைத் தலை - குகையில். விம்மலுழந்து வீங்கி - துன்புற்று மெலிந்து. பொறையுற்ற உயிர்ப்பு - அடங்கிய சுவாசம். நிமிர்ந்துநிற்ப - வெளிப்பட்டுநிற்க. (51)

அநுமன் மைந்நாகத்தைக் கண்டு அயிர்த்தல்

52. எழுந்தோங்கி விண்ணோடு மண்ணோக்க
விலங்கு மாடி
உழுந்தோடு காலத் திடையும்பரி
னும்ப ரெங்கும்

கொழுந்தோடி நின்ற கொழுங்குன்றை
வியந்து நோக்கி
அழுங்காமனத் தண்ண லிதென்கொ
லெனுவ யிர்த்தான்.

எழுந்து ஓங்கி, விண்ணேடு மண் நோக்க,
இலங்கும் ஆடி
உழுந்து ஓடு காலத்திடை, உம்பரின்
உம்பர் எங்கும்
கொழுந்து ஓடி நின்ற கொழுங்குன்றை
வியந்து நோக்கி,
அழுங்கா மனத்து அண்ணல், 'இது என்கொல்?'
என அயிர்த்தான்.

இலங்கும் ஆடி(யின் கண்) உழுந்தோடு காலத்திடை விண்ணேடு மண் நோக்க எழுந்து ஓங்கி, உம்பரினும்பர் எங்கும் கொழுந்தோடி நின்ற கொழுங்குன்றை, அழுங்காமனத்தண்ணல் வியந்து நோக்கி இது என் எனு அயிர்த்தான் என முடிக்க. இலங்கும் ஆடி உழுந்தோடு காலத்திடை - விளங்குகின்ற கண்ணடியின்கண் உழுந்து உருளும் பொழுதினுள்; மிகு விரைவில். உம்பரின் உம்பர் – மேலும் மேலும். எங்கும் - எல்லாத் திசைகளிலும். அழுங்கா மனத்து அண்ணல் என்றது அநுமனை. அழுங்கா - அஞ்சாத. விரைவுக்கு உழுந்து உருளுதலைக் குறிப்பிடுவது வழக்கம்.
(52)

### அநுமன் மைந்நாகத்தைத் தலை கீழுறத் தள்ளி மேலெழுதல்

53. நீர்மேற் படரா நெடுங்குன்று
நிமிர்ந்து நிற்றல்
சீர்மேற் படரா தெனச்சிந்தை
யுணர்ந்து செல்வான்
வேர்மேற் படவன் றலைகீழ்ப்பட
நூக்கி விண்ணோர்
ஊர்மேற் படரக் கடிதும்பரின்
மீது யர்ந்தான்.

‘ நீர்மேல் படரா, நெடுங்குன்று நிமிர்ந்து நிற்றல்
சீர்மேல் படராது ’ எனச் சிந்தை உணர்ந்து, செல்வான்,
வேர் மேல்பட வன்தலை கீழ்ப்பட, நூக்கி, விண்ணோர்
ஊர்மேல் படரக் கடிது உம்பரின்மீது உயர்ந்தான்!

நெடுங்குன்று நீர்மேற் படரா (படர்ந்து) நிமிர்ந்து நிற்றல் சீர்மேல் படராது எனக் கூட்டுக. செல்வான் - ஏகுகின்றவனாகிய அநுமன். நூக்கி - தள்ளி. விண்ணோர் ஊர்மேல் படர - தேவருராகிய அமராவதியை அடையும்படி. கடிது - விரைவில். உம்பரின் மீது - ஆகாயத்தின்மேல். செல்வான் உணர்ந்து, நூக்கி, உயர்ந்தான் என முடிவு கொள்க. (53)

### மைந்நாகம் மீண்டும் எழுந்து அநுமனோடு கூறல் 54—58

54. உந்தாமு னுலைந்துயர் வேலை யொளித்த குன்றம்
சிந்தாகுல முற்றது பின்னருந் தீர்வி லன்பால்
வந்தோங்கி யாண்டோர் சிறுமானுட வேட மாகி
எந்தாயிது கேளென வின்ன விசைத்த தன்றே.

உந்தாமுன் உலைந்து, உயர் வேலை ஒளித்த குன்றம்,
சிந்தாகுலம் உற்றது பின்னரும், தீர்வில் அன்பால்
வந்து ஓங்கி, ஆண்டு ஓர் சிறு மானுட வேடம் ஆகி,
‘ எந்தாய்! இது கேள்!’ என, இன்ன இசைத்தது அன்றே.

உந்தாமுன் - தள்ளுமுன். உலைந்து - வலிகெட்டு. உயர்வேலை- பெரிய கடலுள். ஒளித்த குன்றம் – மறைந்த மைந்நாக மலை. சிந்தாகுலம் உற்றது - மனங் கலங்கியதாய். உற்றது முற்றெச்சம். தீர்வில் - கெடாத. ‘ எந்தாய் இது கேள்!’ என்பது மைந்நாகத்தின் கூற்று. இன்ன இசைத்தது - இம்மொழிகளைச் சொல்லிற்று. சொல்லிய செய்திகள் பின்வரும் பாடல்களில் கூறப்படுகின்றன. குன்றம் பின்னரும் வந்து ஓங்கி மானுட வேடமாகி இன்ன இசைத்தது என முடிக்க. (54)

55. வேற்றுப் புலத்தோ னலனைய
விலங்க லெல்லா
மாற்றுச் சிறையென் றரிவச்சிர
மாண வோச்ச

வீற்றுப் படநூ றியவேலேயின்
வேலே யுய்த்துக்
காற்றுக் கிறைவ னெனேக்காத்தன
னன்பு காந்த.

'வேற்றுப் புலத்தோன் அலன், ஐய! விலங்கல் எல்லாம்
மாற்றுச் சிறை என்று, அரி, வச்சிரம் மாண ஓச்ச,
வீற்றுப்பட நூறியவேலேயின், வேலே உய்த்துக்
காற்றுக்கு இறைவன் எனேக் காத்தனன், அன்பு காந்த.'

ஐய - வியக்கத்தக்கவனே! வேற்றுப்புலத்தோன் அலன்-யான் பகைப் புலத்தோனல்லேன். (பின்னேயாரெனின்) 'விலங்கலெல் லாம் சிறைமாற்று' என்று அரி வச்சிரம் மாண ஓச்ச -'மலேகளே யெல்லாம் இறக்கைகளேப் போக்குக' என்று இந்திரன் வச்சிரா யுதத்தை நன்கு ஓங்கிச் செலுத்த. வீற்றுப்பட நூறியவேலேயின் - (அவ்வச்சிரம் மலேகளின் இறக்கை) துண்டபட வெட்டியபொழுது. காற்றுக்கு இறைவன் அன்புகாந்த எனே வேலே உய்த்துக் காத் தனன் என்க. காற்றுக்கு இறைவன் – வாயுதேவன். அன்புகாந்த - (அவனுக்கு என்பாலுள்ள) அன்பு விளங்க. வேலே உய்த்து - கடலில் இட்டு. (55)

56. அன்னுனருங் காதல ஞதலி னன்பு தூண்ட
என்னுலுனக் கீண்டு செயற்குரித் தாய தின்மை
பொன்னுர்சிக ரத்திறை யாறினே போதி யென்ன
உன்னுவுயர்ந் தேனுயர் விற்கு முயர்ந்த தோளாய்.

'அன்னுன் அருங்காதலன் ஆதலின், அன்பு தூண்ட,
என்னுல் உனக்கு ஈண்டு செயற்கு உரித்தாயது இன்மை,
பொன்னுர் சிகரத்து இறை ஆறினே போதி, என்ன
உன்ன, உயர்ந்தேன், உயர்விற்கும் உயர்ந்த தோளாய்!'

"உயர்விற்கும் உயர்ந்த தோளாய்! (நீ) அன்னுன் அருங் காதலன் ஆதலின், அன்பு தூண்ட உனக்கு என்னுல் ஈண்டு செயற்குரித்தாயது இன்மை (யின்) பொன் ஆர் சிகரத்து இறை ஆறினேபோதி என்ன உன்ன உயர்ந்தேன்'' என இயையும். அன்னுன் - அந்த வாயுவினுடைய. இறை - சிறிது. ஆறினே போதி - இளேப்பாறிச் செல்வாய். (56)

**57.** கார்மேகவண் ணன்பணி பூண்டனன்
காலின் மைந்தன்
தேர்வான்வரு கின்றனன் சீதையைத்
தேவ ருய்யப்
பேர்வானயல் சேறி யிதிற்பெரும்
பேறி லென்ன
நீர்வேலையு மென்னை யுரைத்தது
நீதி நின்ருய்.

'கார்மேகவண்ணன்பணி பூண்டனன், காலின் மைந்தன்
தேர்வான் வருகின்றனன் சீதையைத் தேவர் உய்யப்
பேர்வான் அயல் சேறி, இதில் பெரும்பேறு இல் !' என்ன
நீர்வேலையும் என்னை உரைத்தது, நீதிநின்ருய் !

நீதிநின்ருய் ! நீர்வேலையும், 'காலின் மைந்தன் கார்மேக வண்ணன் பணி பூண்டனன், சீதையைத்தேர்வான் வருகின்றனன்; தேவருய்யப் பேர்வா(ன் ஆகிய அவ)னயல் சேறி ; இதிற் பெரும் பேறு இல்' என்ன என்னை உரைத்தது எனக் கூட்டுக. நீர் வேலை - கடல் (வருணன்). காலின் மைந்தன் - வாயுகுமாரன். கார்மேக வண்ணன் - காளமேகம் போன்ற நிறமுடைய இராமன். பணி - கட்டளை ; தொண்டும் ஆம். தேர்வான் - தேடும்பொருட்டு. தேவர் உய்யப் பேர்வான் அயல் - தேவர் உய்தி பெறும்படி செல்பவனை அவ்வநுமன்பக்கத்தே. சேறி - செல்வாயாக. இதில் - இவ்வாறு சேர்தலினும். பெரும் பேறு - பெரிய ஊதியம். இல் - இல்லை. 'காலின் மைந்தன்.........இல்" என்பது மைந்நாகத்தினை நோக்கி வருணன் கூறியது. அயல் சேறி யென்றது அடுத்துச் சென்று வரவேற்று உபசரிப்பாயாக என்றவாறு. (57)

**58.** நற்ருயினு நல்ல னெனக்கிவ
னென்று நாடி
இற்றேயிறை யெய்தின னேயது
கோடி யென்னல்
பொற்ருரகன் மார்பத மில்லுழை
வந்த போதே
உற்ருர்செயன் மற்றுமுண் டோவென
வுற்று ரைத்தான்.

'நல் தாயினும் நல்லன் எனக்கு இவன்! என்று நாடி
இற்றே, இறை! எய்தினன், ஏயது கோடி என்ஞல்;
பொன்தார் அகல் மார்ப! தம் இல்லுழை வந்த போதே
உற்ருர்செயல் மற்றும் உண்டோ?' என உற்று உரைத்தான்.

"'பொற்ருர் அகன் மார்ப! இறை! எனக்கு இவன் நற்ருயினும் நல்லன்' என்று (உன்னை) நாடி இற்றே எய்தினன்; என்ஞல் ஏயது கோடி; உற்ருர் தம் இல்லுழை வந்தபோது செயல் மற்றும் உண்டோ" என உற்று உரைத்தான் என இயைக்க. பொன் தார் அகல் மார்ப!—பொன்ஞலான மாலைகளை அணிந்த அகன்ற மார்பையுடையவனே! இது மைந்நாகம் அநுமனை முன்னிலையாக்கிக் கொள்ளும் விளி. இவன் நற்ருயினும் நல்லன் என்பது அநுமனை மைந்நாகம் கருதியவாறு கூறுவது. இற்றே - இப்பொழுதே. எய்தினன் – வந்தேன். ஏயதுகோடி—(என் நிலைக்கு) இசைந்ததாய் யான் செய்யும் உபசாரத்தை ஏற்றுக்கொள்க. இல்லுழை-வீட்டின் கண். உற்று உரைத்தான் - (அநுமனைக்) கிட்டிநின்று (மைந்நாகன்) சொன்ஞன். (58)

அநுமன் மைந்நாகத்தை நோக்கல்

59. உரைத்தானுரை யாலிவ ஞறில
னென்ப துன்னி
விரைத்தாமரை வாண்முகம் விட்டுவி
ளங்க வீரன்
சிரித்தானள வேசிறி தத்திசைச்
செல்ல நோக்கி
வரைத்தாழ்நெடும் பொற்குடு மித்தலை
மாடு கண்டான்.

உரைத்தான் உரையால், இவன் ஊறு இலன் என்பது உன்னி,
விரைத் தாமரை வாண்முகம் விட்டு விளங்க, வீரன்
சிரித்தான் அளவே சிறிது அத்திசைச் செல்ல நோக்கி,
வரைத்தாழ் நெடும் பொற்குடுமித் தலை மாடு கண்டான்.

வீரன், உரைத்தானுரையால் 'இவன் ஊறு இலன்' என்பது உன்னி அளவே சிரித்தான் (ஆகி) அத்திசைச் செல்லச் சிறிது நோக்கி, வரைத் தாழ் நெடும் பொற்குடுமித்தலை மாடுகண்டான் என இயையும். சிரித்தான் கண்டான் என்பவை முற்றெச்சம்.

உரைத்தான் உரையால் - (முன் பாட்டிற் கூறியவாறு) சொல்லிய மைந்நாகன் சொற்களால். ‘இவன் ஊறு இலன்’ என்பது மைந்நாகனைப் பற்றி அநுமன் கொண்ட முடிவு. ஊறு - குற்றம். உன்னி. எண்ணி. விரை - நறுமணம். முகம் விட்டு விளங்க - முகம் ஒளி வீசி விளங்க. அத்திசைச் செல்லச் சிறிது நோக்கி - (‘நற்ருயினும் நல்லன்......உற்ருர் செயல் மற்றும் உண்டோ’ எனும் ஒலிவந்த) அத்திசையிலே நோக்கம் செல்லும்படி சிறிது பார்த்து. வரை - (மைந்நாக)மலையின். தாழ் - வணங்கிய. நெடும் - நீண்ட. பொற் குடுமித் தலை - பொன்மயமான சிகரமாகிய தலையினை. வரைக்குடுமி, தாழ்குடுமி, நெடுங்குடுமி, பொற்குடுமி என இயையும். மாடு - பக்கத்து. வீரன் உன்னி, சிரித்து, நோக்கி, கண்டு, அருந்தேன், இருந்தேன், நுகர்ந்தேன்; இதன்மேல் இனி ஈவது என்? அன்பிற் சிறந்தாயதோர் பூசனையுண்டே? மீண்டால் நின்விருந்து நுகர்வேன் எனப் போனன் என்று பின்வரும் பாடல்களும் அடங்க (62-ஆம் பாடல் அகப்பட)க் குளகமாக்கி முடிவுகொள்க. (59)

### அநுமன் மைந்நாகத்தொடு கூறல் 60—61

**60.** வருந்தேலிது வென்றுணை வானவன்
வைத்த காதல்
அருந்தேனினி யாதுமொன் ருசை
நிரப்பி யல்லால்
பெருந்தேன்மொழி சார நின் னன்பு
பிணித்த போதே
இருந்தேனுகர்ந் தேனிதன் மேலினி
யீவ தென்னே.

‘வருந்தேல்! இது என்? துணை வானவன் வைத்த காதல்!
அருந்தேன் இனி யாதும் ஒன்று, ஆசை நிரப்பி அல்லால்;
பெருந் தேன்மொழி சார நின் அன்பு பிணித்த போதே
இருந்தேன், நுகர்ந்தேன்: இதன்மேல் இனி ஈவது என்னே?’

வானவன் வைத்த காதல் துணை! என இயைத்து மைந்நாகத்தை நோக்கிய அநுமன் விளியாக்கித் தேவனுகிய வாயுவினுல் தலையளி செய்யப்பட்ட காதற்றுணவனே! என்று பொருளுரைக்க. வருந்தேல்! இது என்? என்பது முதலியவை மைந்நாகத்தை நோக்கிய அநுமன் கூற்று. (என்) ஆசை நிரப்பியல்லால் யாதொன்றும் அருந்தேன் - (பிராட்டியைத் தேடிக் காண்டலாகிய) யான்

விரும்பிய செயலை முற்றுவித்தன்றி இனி யாதொன்றும் அருந்தேன். பெருந் தேன் மொழிசார நின் அன்பு பிணித்தபோதே இருந் தேன், நுகர்ந்தேன், இதன்மேல் இனி ஈவது என்னோ என முடிக்க. நின் அன்பு பெருந் தேன்மொழி சாரப் பிணித்தபோதே - உன்னு டைய அன்பு மிக இனிய சொல்லோடு என்னை உன் வசப்படுத்திய பொழுதே. இதன்மேல் - இந்த அன்புடைமையினும். வருந்தே னதுவென்றுணை வானவன், பெருந்தேன்பொழிசாரல் என்று பாடங்கொண்டு அதற்கிசைய உரைகூறுவாரும் உளர். அயோத் தியா காண்டத்துக் கங்கைப் படலம் 41-42-ஆம் பாடல்களும் இங்கு நோக்கத்தகும். (60)

61\. முன்பிற்சிறந் தாரிடை யுள்ளவர்
காதன் முற்றப்
பின்பிற்சிறந் தார்குண நன்றிது
பெற்ற யாக்கைக்
கென்பிற்சிறந் தாயதொ ரூற்றமுண்
டென்ன லாமே
அன்பிற்சிறந் தாயதொர் பூசனை
யார்க ணுண்டே.

'முன்பின் சிறந்தார் இடை உள்ளவர் காதல், முற்றப்
பின்பின் சிறந்தார் ; குணம் நன்று இது ! பெற்ற யாக்கைக்கு
என்பின் சிறந்தாயது ஓர் ஊற்றம் உண்டு என்னல் ஆமே ?
அன்பின் சிறந்தாயது ஓர் பூசனை யார்கண் உண்டே ?'

முன்பிற் சிறந்தாரிடை காதல் உள்ளவர் (அக்காதல்) முற்றப் பின் பின் சிறந்தார் ; இது குணம் நன்று என இயையும். காதல் மீட்டும் கூட்டப்பட்டது. முன்பிற் சிறந்தாரிடை - வலியால் மேம் பட்ட பெரியோர் பக்கல். காதல் உள்ளவர் - அன்புடையோர். காதல் முற்ற - அந்த அன்பு முதிர்தலால். பின் பின் - பின்னும் பின்னும். சிறந்தார் - தாம் பெருமையடைந்தாராவர். இது குணம் - இந்த (அன்பாகிய) பண்பு. பெற்ற - அடைந்த. யாக்கைக்கு - உட லுக்கு. என்பிற் சிறந்தாயதொர் ஊற்றம் உண்டென்னலாமே - என்பினும் சிறப்புடையதாகிய ஒரு வலிமையுண்டென்று சொல்லல் கூடுமோ ? (கூடாது, அது போல). அன்பிற் சிறந்தாயது ஓர் பூசனை - அன்பெனும் சிறப்புடையதாகிய ஒரு வழிபாடு. யார்கண் உண்டு - யாரிடத்துண்டு ? (ஒருவரிடத்திலும் இல்லை); உடலுக்கு என்புபோலப் பூசைக்கு அன்பு சிறந்தது என்றபடி. சிறந்ததாயது என்பது சிறந்தாயது என விகாரப்பட்டுநின்றது. (61)

## அநுமன் மைந்நாகத்தைப் பாராட்டி மேலுஞ் செல்லுதல்

**62.** ஈண்டேகடி தேகி யிலங்கை
விலங்க லெய்தி
ஆண்டானடி மைத்தொழி லாற்றலி
னாற்ற லுண்டே
மீண்டானுகர் வேனின் விருந்தென
வேண்டி மெய்ம்மை
பூண்டானவன் கட்புலம் பிற்பட
முன்பு போனான்.

'ஈண்டே கடிது ஏகி, இலங்கை விலங்கல் எய்தி,
ஆண்டான் அடிமைத்தொழில் ஆற்றலின் ஆற்றல் உண்டே?
மீண்டால் நுகர்வேன் நின் விருந்து' என வேண்டி, மெய்ம்மை
பூண்டான் அவன் கண்புலம் பிற்பட, முன்பு போனான்.

ஈண்டே - இப்பொழுதே. கடிதேகி - விரைந்துசென்று. இலங்கை விலங்கல் எய்தி - இலங்கையுள்ள திரிகூடமலையை அடைந்து. ஆண்டான் அடிமைத்தொழிலாற்றலின் ஆற்றல் உண்டே - (என்னை) ஆட்கொண்டருளிய இராமபிரான்திறத்துச் செய்யவேண்டிய அடிமைப் பணிகளைச் செய்தலினும் சிறந்த செயல் உண்டோ? (இல்லை). மீண்டால் - (அப்பணிகளைச் செய்து யான்) திரும்பினால். நின் விருந்து நுகர்வேன் என - நின்னால் செய்யப் படும் விருந்துணவை உண்பேன் என்று சொல்லி. மெய்ம்மை பூண்டு வேண்டினான் (ஆகிய) அவன் கட்புலம் - உண்மையன்பு கொண்டு (தன்னிடம் தங்கிச் செல்லுமாறு) வேண்டிய அந்த மைந் நாகனுடைய கண். ஏகி, எய்தி, ஆற்றலின் ஆற்றல் உண்டே? மீண்டால் நுகர்வேன் என, (வீரன் 59) அவன் கட்புலம் பிற்பட முன்பு போனான் என முற்றுவிக்க.

இந்நிலையில் இந்திரன் தோன்றி மைந்நாகத்தை வாழ்த்த அது அச்சந் தீர்ந்து கடலில் நிலைத்துநிற்பதாயிற்று என்று வான்மீகம் கூறும். (62)

## அநுமன்விரைவு

**63.** செவ்வான்கதி ருங்குளிர் திங்களுந்
தேவர் வைகும்
வெவ்வேறர ணங்களு மீனெடு
மேக மற்றும்

எவ்வாயுல கத்தவு மீண்டி
யிருந்த தம்மின்
ஒவ்வா தன வொத்திட வூழிவெங்
காலு மொத்தான்.

செவ்வான் கதிரும், குளிர் திங்களும், தேவர் வைகும்
வெவ்வேறு அரணங்களும், மீனொடு, மேகம், மற்றும்,
எவ்வாய் உலகத்தவும், ஈண்டி இருந்த தம்மின்
ஒவ்வாதன ஒத்திட, ஊழி வெம் காலும் ஒத்தான்!

செங்கதிர் வான்கதிர் என்க; என்றது சூரியனை. திங்கள் - சந்திரன். தேவர் வைகும் - தேவர்கள் வாழ்கின்ற. அரணங்களும் - பாதுகாப்புள்ள இடங்களும். மீனொடு - மீனும்; நட்சத்திரமும். மேகத்தொடு - மேகமும். ஒடு பிரித்துக் கூட்டப்பட்டது. மற்றும்- மேலும். உலகத்து எவ்வாயவும் - உலகத்துள் எப்பகுதியில் உள் ளனவும் (ஆக). ஈண்டியிருந்த - திரண்டிருந்தனவும். ஒவ்வாதன - (தம்முள்) ஒத்த நிலையும் ஒத்த செலவும் இல்லாதனவும். ஒத்திட - ஒத்த நிலையடையும்படி (விரைந்து செல்லுதலால்). ஊழி வெங்கா லும் - கொடிய ஊழிக்காற்றையும். வீரன் (அநுமன்) ஒத்தான் என எழுவாய் வருவித்து முடிக்க. ஊழிக்காலத்தில், சூரியன் முதலிய கோள்களும் பிறவும் தம் கதி கெட்டுக் காற்றின் கதிப்படி நடக்கும் என்பது குறித்தவாறு. முன் 28-ஆம் பாட்டில் உவமிக்கப்பட்ட ஊழிக்காற்றே இங்கு மீண்டும் உவமிக்கப்பட்டிருப்பது ஆராய்தற் குரியது. அங்கு அழிவுறக் கடுகுதலும் இங்கு ஒவ்வாதன ஒத்திட விரைதலும் ஆகிய வேறு வேறு பொதுத் தன்மைபற்றி உவமை கூறப்பட்டதுபோலும். (63)

அநுமன்விரைவால் நிகழ்ந்தவை 64—65

64. நீர்மேற்கடன் மேனிமிர் கின்ற
நிமிர்ச்சி நோக்காப்
பார்மேற்றவழ் சேவடி பாய்நட
வாப்ப தத்தென்
தேர்மேற்குதி கொண்டவ னித்திறஞ்
சிந்தை செய்தான்
ஆர்மேற்கொலென் றெண்ணி யருக்கனு
மைய முற்றான்.

நீர்மேல் கடல்மேல் நிமிர்கின்ற நிமிர்ச்சி நோக்காப்
பார்மேல் தவழ் சேவடி பாய் நடவாப் பதத்து என்
தேர்மேல் குதிகொண்டவன், இத்திறம் சிந்தைசெய்தான்!
ஆர்மேல்கொல்? என்று எண்ணி, அருக்கனும் ஐயம் உற்றான்!

'நீர்மேல்......ஆர்மேற்கொல்' என்பது சூரியன்கூற்று. நீர் மேல் கடல் மேல் - நீரைத் தன்னிடத்தே கொண்ட கடலின்மீது. நிமிர்கின்ற நிமிர்ச்சி - எழுகின்ற (என்) எழுச்சியை. நோக்கா - நோக்கி. பார்மேல் தவழ் பதத்து, சேவடி பாய் நடவாப் பதத்து எனக் கூட்டுக. பார் - பூமி. பதம் - பருவம். பாய் - பரவி. நீர்மேற் கடல்மேல் நிமிர்கின்ற நிமிர்ச்சி என்பது அநுமன் செயல் குறிப்பது என்று கொண்டு உரைகூறுவாரும் உளர். சூரியனைப் பழமென்று கருதி அநுமன் பாய்ந்தமை, உத்தரகாண்டத்து அநுமப் படலத்துக் காண்க. (64)

65. வாளொத்தொளிர் வாலெயி றூழின் மருங்கி மைப்ப
நீளொத்துயர் தோளின் விசும்பு நிரம்பு மெய்யிற்
கோளொத்தவன் மேனி விசும்பிரு கூறு செய்யும்
நாளொத்தது மேலொளி கீழிரு ளுற்ற ஞாலம்.

வாள் ஒத்து ஒளிர் வால் எயிறு ஊழின் மருங்கு இமைப்ப,
நீள் ஒத்து உயர் தோளின் விசும்பு நிரம்பு மெய்யின்,
கோள் ஒத்தவன் மேனி, விசும்பு இருகூறுசெய்யும்
நாள் ஒத்தது: மேல் ஒளி கீழ் இருள் உற்ற ஞாலம்!

வாள் ஒத்து ஒளிர் வாலும் எயிறும் ஊழின் மருங்கு இமைத்த லாலும், நீள் ஒத்து உயர் தோளினாலும், விசும்பு நிரம்பு மெய்யி னாலும், கோள் ஒத்தவன் மேனி, விசும்பின்கண் இருகூறுசெய்யும் நாள் ஒத்தது; ஞாலம் மேல் ஒளி கீழ் இருள் உற்ற என்க. வாள் ஒத்து ஒளிர் வால் எயிறு ஊழின் மருங்கு இமைப்ப -(பகைவரை வருத்தலால்) வாள்போன்று விளங்குகிற வாலும் பற்களும் சூரியன் பக்கத்தே விளங்கலாலும்; வால் எயிறு ஊழின் மருங்கு இமைப்ப என்பதற்கு வெள்ளிய பற்கள் வரிசையாகப் பக்கத்தே விளங்க என்று உரை கூறுதலும் அமையும். எயிறு - பல். ஊழ் - சூரியன்; வரிசையும் ஆம். இமைப்ப - விளங்க. ஒத்து நீள் உயர் தோளின் - ஒருதன்மையவாய் நீண்ட உயர்ந்த தோள்களாலும். விசும்பு நிரம்பு மெய்யின் - திசைகளில் படர்ந்து பரவிய உடலாலும். விசும்பு - திசை; ஆகாயமும் ஆம். கோள் ஒத்தவன் மேனி - இராகு அல்லது கேது என்னும் கிரகத்தை ஒத்தவனாகிய அநும

னுடைய உடல். விசும்பு ஆகாயத்தின்கண். இரு கூறு செய்யும் நாள் ஒத்தது - பகலும் இரவும் ஆகிய இரு பகுதியையும் செய்கின்ற நாளை ஒத்தது. ஞாலம் - பூமியின்கண். அநுமன் வானிடை விரைந்து பறந்து சென்றுகொண்டிருக்கும்போது அவனுடைய வாலும் பல்லும் சூரியமண்டலத்தை யடுத்து விளங்குதலாலும், ஒத்துயர்ந்த தோள்களாலும் திசைகளிற் பரவிப் படர்ந்த உடலாலும் அவன் சூரியனைப் பற்ற எழுந்த கோளையொத்தான்; அவனுடல் ஆகாயத்தில், பகல் இரவு என்னும் இரு கூற்றினையும் விளக்கும் நாள் போன்று தோன்றிற்று. அதனால் பூமியின்கண் மேலே ஒளியும் கீழே இருளும் உண்டாயின என்றவாறு, (65)

இதன் பின் 19, 30 ஆம் ஏடுகளில் பின் வருமாறு ஒரு செய்யுள் காணப்படுகிறது.

65 (a) விண்ணோரது கண்டன ருள்ளம் வியந்து மேன்மேற்
கண்ணோடிய நெஞ்சினர் காதல் கவற்ற லாலே
எண்ணோ டியைந்து துணையாகு மியக்கி யாய
பெண்ணோடிறை யின்னன பெற்றி யுணர்த்தி ஞரால்.

## சுரசை தோன்றுதல்

**66.** மூன்றுற்ற தலத்திடை முற்றிய
துன்பம் வீப்பான்
ஏன்றுற்று வந்தான் வலியெம்மை
யுணர்த்து நீயென்
றூன்றுற்ற வானோர் குறைநேர
வரக்கி யாகித்
தோன்றுற்று நின்றாள் சுரசைப்பெயர்ச்
சிந்தை தூயாள்.

'மூன்று உற்ற தலத்திடை முற்றிய துன்பம் வீப்பான்
ஏன்று உற்று வந்தான் வலி எம்மை உணர்த்து நீ!' என்று
ஆன்று உற்ற வானோர் குறைநேர, அரக்கி ஆகித்
தோன்றுற்றுநின்றாள், சுரசைப் பெயர்ச் சிந்தை தூயாள்.

"மூன்றுற்ற தலத்திடை முற்றிய துன்பம் வீப்பான் ஏன்று உற்று வந்தான் வலி நீ எம்மை உணர்த்து" என்பது சுரசையை நோக்கிய தேவர்கள் கூற்று. மூன்று உற்ற தலத்திடை - மூன்றாக வுள்ள உலகத்தின்கண். வீப்பான் – போக்கும்பொருட்டு. ஏன்று - இசைந்து. உற்று வந்தான் வலி - நெருங்கி வந்தவனாகிய அநும

னுடைய ஆற்றலை. எம்மை உணர்த்து - எமக்கு அறிவிப்பாயாக. ஆன்று உற்ற வானோர் - நிறைந்து வந்த தேவர். குறைநேர - வேண்ட. தோன்றுற்று - தோன்றி. சிந்தை தூயாள் - மனந்தூயவள். தூயாள் தோன்றுற்றுநின்றாள் என முடிக்க. சுரசை - தக்கன்மகள்; காசிபர்மனைவி; இவள் நாகமாதா எனவும் கூறப்படுவாள் (வான்மீகம்) (66)

## சுரசைகூற்று 67—68

**67.** பேழ்வாயொ ரரக்கி யுருக்கொடு
பெட்பி னோங்கிக்
கோள்வாயரி யின்குலத் தாய்கொடுங்
கூற்று முட்க
வாழ்வாயெனக் காமிட மாய்வரு
வாய்கொ லென்னு
நீள்வாய்விசும் புந்தன துச்சி
நெருக்க நின்றாள்.

பேழ் வாய் ஓர் அரக்கி உருக்கொடு பெட்பின் ஓங்கிக்,
'கோள்வாய் அரியின் குலத்தாய்! கொடுங் கூற்றும் உட்க
வாழ்வாய் எனக்கு ஆம் இடமாய் வருவாய்கொல்?' என்னு,
நீள்வாய் விசும்பும் தனது உச்சி நெருக்க நின்றாள்!

பேழ்வாய் - பிளந்தவாய்; பெரிய வாய் எனினும் அமையும். பெட்பின் ஓங்கி - பெருமையோடு உயர்ந்து. கோள்வாய் அரியின் குலத்தாய் - குற்றம் மிக்க குரங்கினத்தில் வந்தவனே; கோள் - ஆற்றலும் ஆம். எனக்கு ஆம் இடமாய், கூற்றும் உட்க (யான்) வாழ் வாய் என மாறிக் கூட்டுக. எனக்கு ஆம் இடமாய் - எனக்கு உரிய இடமாய். கூற்றும் உட்க வாழ் வாய் - யமனும் அஞ்சும்படி (யான்) வாழும் இடத்தில். வருவாய்கொல் – வருவாயோ? நீள் வாய் விசும்பும் - நீளுதல் (உயர்தல்) மிக்க ஆகாயத்தினையும். உச்சி - தலை. அரக்கி யுருக்கொடு ஓங்கி என்னு நின்றாள் என முடிக்க. (67)

**68.** தீயேயென லாய பசிப்பிணி
தீர்த்தல் செய்வான்
ஆயேவிரை வுற்றெனை யண்மினை
வண்மை யாள

நீயேயினி வந்து நிணங்கொள்
பிணங்கெ யிற்றின்
வாயேபுகு வாய்வழி மற்றிலை
வானி னென்ருள்.

'தீயே எனல் ஆய பசிப்பிணி தீர்த்தல் செய்வான்
ஆயே விரைவுற்று எனை அண்மினை, வண்மையாள !
நீயே இனி வந்து, நிணம் கொள் பிணங்கு எயிற்றின்
வாயே புகுவாய் ! வழி மற்று இலை வானின் !' என்ருள்.

பசிப்பிணி தீர்த்தல்செய்வாஞய் - பசித்துன்பத்தைப் போக்குபவஞய். அண்மினை - நெருங்கினை. நிணங்கொள் - ஊனுடையதான. பிணங்கு - வளைந்த. எயிற்றின் - பற்களையுடைய. (68)

அநுமன்கூற்று

69. பெண்பாலொரு நீபசிப் பீழை
யொறுக்க நொந்தாய்
உண்பாயென தாக்கையை யானுத
வற்கு நேர்வல்
விண்பாலவர் நாயக னேவ
லிழைத்து மீண்டால்
நண்பாலெனச் சொல்லின னல்லறி
வாள னக்காள்.

'பெண்பால் ஒரு நீ பசிப்பீழை ஒறுக்க நொந்தாய் :
உண்பாய் எனது ஆக்கையை : யான் உதவற்கு நேர்வல்,
விண்பாலவர் நாயகன் ஏவல் இழைத்து மீண்டால்,
நண்பால்'எனச் சொல்லினன், நல்லறிவாளன் ; நக்காள்.

நல்லறிவாளன் - நல்லறிவையுடையஞன அநுமன். ஒரு பெண்பால் நீ - ஆதரிப்பார் பிறரை யில்லாத பெண்ணுன நீ. பசிப்பீழை ஒறுக்க நொந்தாய் – பசித்துன்பம் வருத்த வருந்தினுய். விண்பாலவர் நாயகன் ஏவல் இழைத்து மீண்டால் - (நான்) தேவர் தலைவஞன இராமபிரான் ஏவிய பணியைச் செய்து நிறைவேற்றித் திரும்பினுல். நண்பால் எனது ஆக்கையை உதவற்கு நேர்வல் - அன்போடு எனது உடலை (நீ உண்ணும்படி) கொடுப்பதற்கு இசை

வேன். உண்பாய் - (எனது உடலை நீ) உண்பாய். எனச் சொல்லினன் - என்று சொன்னான். நக்காள் - (சுரசை) சிரித்தாளாகி. இதுவும் பின்வரும் 70-ஆம் பாடலும் ஒரு தொடர். (69)

### சுரசைகூற்றும் அநுமன்கூற்றும்

70. காய்ந்தேழுல கங்களுங் காணநின்
யாக்கை தன்னை
ஆர்ந்தேபசி தீர்வனி தாணையென்
றன்னள் சொன்னாள்
ஓர்ந்தானுமி கந்தொரு வேனின
தூழில் பேழ்வாய்ச்
சேர்ந்தேகு கின்றேன் வலையாமெனிற்
றின்றி டென்றான்.

'காய்ந்து ஏழ் உலகங்களும் காண நின்
யாக்கை தன்னை
ஆர்ந்தே பசிதீர்வன் ! இது ஆணை !' என்று
அன்னள் சொன்னாள்.
ஓர்ந்தானும், 'இகந்து ஒருவேன் ! நினது
ஊழில் பேழ்வாய்ச்
சேர்ந்து ஏகுகின்றேன், வலையாம் எனில்
தின்றிடு !' என்றான்.

அன்னள் - அவள் (சுரசை). 'காய்ந்து, ஏழுலகங்களும் காண நின் யாக்கை தன்னை ஆர்ந்தே பசிதீர்வன்; இது ஆணை' என்பது அநுமனை நோக்கிய சுரசைகூற்று. காய்ந்து - சினந்து. யாக்கை - உடல். ஆர்ந்து - உண்டு. இது ஆணை - இது சத்தியம். ஓர்ந்தானும் - அறிந்தோனாகிய அநுமனும். 'இகந்து ஒருவேன்; ஊழில் நினது, பேழ்வாய்ச் சேர்ந்து ஏகுகின்றேன்; வ(ல்)லை யாமெனில் தின்றிடு' என்பது சுரசையை நோக்கிய அநுமன்கூற்று. இகந்து ஒருவேன் - (சொன்னசொல் பொய்த்துப் போகும்படி) விட்டு அஞ்சியோடேன். ஊழ் இல் - முடிவில்லாத. நினது பேழ்வாய் - உன்னுடைய பிளந்த வாயின்கண். சேர்ந்தே ஏகுகின்றேன் என ஏகாரம் விரிக்க. வலையாம் எனில் - நீ ஆற்றலுடைமையாயின். அன்னள் சொன்னாள்; ஓர்ந்தானும் என்றான் என முடிக்க. (70)

### அநுமன் பேருருக்கொள்ளுதல்

**71.** அக்காலே யரக்கியு மண்ட மனந்த மாகப்
புக்கானிறை யாத புழைப்பெரு வாய்தி றந்து
விக்காதுவி ழுங்கநின் ருளது நோக்கி வீரன்
திக்காரவள் வாய்சிறி தாம்வகை சேணி னீண்டான்.

அக்காலே அரக்கியும், அண்டம் அனந்தம் ஆகப்
புக்கால் நிறையாத புழைப் பெருவாய் திறந்து,
விக்காது விழுங்க நின்ருள் ; அது நோக்கி, வீரன்,
திக்கு ஆர் அவள் வாய் சிறிதாம்வகை, சேணில் நீண்டான்.

அக்காலே - (தின்றிடென்று அநுமன் சொல்லிய) அப்பொழுது. அரக்கி யென்றது சுரசையை. அண்டம் அனந்தமாகப் புக்கால் - அண்டங்கள் எல்லேயற்றனவாக ஒரு சேர வந்து புகுந்தாலும். புக்காலும் என்பதனுள் உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. புழைப் பெருவாய் - துளேயையுடைய பெரிய வாய். வீரன் என்றது அநுமனே. திக்கு ஆர் அவள்வாய் - திசைகளில் பரவிய அந்தச் சுரசையின் வாயானது. சேணில் - ஆகாயத்தில். அரக்கி வாய் திறந்து விழுங்க நின்ருள் ; வீரன் நீண்டான் : என முடிக்க. (71)

### அநுமன் சுரசைவாயுட் புக்கு மீளல்

**72.** நீண்டா னுடனே சுருங்கா நிமிர்
வாயி டத்தின்
ஊண்டா னெனவுற் ருெருயிர்ப்புயி
ராத முன்னம்
மீண்டா னதுகண் டனர்விண்ணுறை
வோர்க ளெம்மை
ஆண்டான் வலனென் றலர்தூய்நெடி
தாசி சொன்னுர்.

நீண்டான், உடனே சுருங்கா, நிமிர் வாய் இடத்தின்
ஊண்தான் என உற்று, ஓர் உயிர்ப்பு உயிராதமுன்னம்
மீண்டான் ! அது கண்டனர் விண் உறைவோர்கள் : ‘ எம்மை
ஆண்டான் வலன்!’ என்று அலர் தூய், நெடிது ஆசி சொன்னுர்.

நீண்டான் சுருங்கா உற்று மீண்டான் இன இயையும். நீண்டான் - (மேற்பாட்டிற் கூறியபடி) நீண்டவனுகிய அநுமன். சுருங்கா - சுருங்கி. நிமிர் வாயிடத்தில் - (சுரசையின்) ஓங்கி அகன்ற வாயில். ஊண் - உணவு. ஓர் உயிர்ப்பு உயிராதமுன்னம்- ஒரு மூச்சு விடுமுன்னே. ‘எம்மை ஆண்டான் வலன்’ என்பது தேவர்கூற்று. வலன் - ஆற்றலுடையான். அலர் தூய் - பூக்களைத் தூவி. ஆசி - வாழ்த்து. (72)

## சுரசையேத்தொடு தூதன் சென்றமை 73—75

**73.** மின்மேற் படர்நோன் மையினுமுடல்
வீக்க நீங்கித்
தன்மே னியளா யவள்தாயினு
மன்பு தாழ
என்மேன் முடியா தனவென்றினி
தேத்தி நின்ருள்
பொன்மே னியனும் நெடிதாசி
புனைந்து போனுன்.

மின் மேல் படர் நோன்மையின் ஆம் உடல் வீக்கம் நீங்கித்
தன்மேனியளாய், அவள், தாயினும் அன்பு தாழ,
‘என் மேல் முடியாதன ?’ என்று இனிது ஏத்தி நின்ருள்.
பொன்மேனியனும், நெடிது ஆசி புனைந்து, போனுன்.

அவள், வீக்கவுடல் நீங்கி மின்மேற்படர் தன் மேனியளாய்த் தாயினும் அன்பு தாழ, ஏத்தி நின்ருள், பொன்மேனியனும் ஆசி புனைந்து போனுன் என்க. அவள் என்றது சுரசையை. நோன்மை யின் ஆம் வீக்கவுடல் நீங்கி - வலிமையோடு பருத்தலுமுடைய உடம்பு நீங்கி. மின்மேற் படர் தன்மேனியளாய் - ஒளி பரவும் (பழைய) தன் உருவுடையளாய். அன்பு தாழ — அன்புமிக. ‘மேல் முடியாதன என் ?’ என இயைக்க. இஃது அநுமனை நோக்கிச் சுரசை கூறிய ஆசிமொழி; ‘இனி (உன்னுல்) முடியாதது எது ? ஒன்றுமில்லை’ என்பது இதன் பொருள். பொன்மேனியன் என்றது அநுமனை. நெடிது ஆசி புனைந்து போனுன் - (சுரசை கூறிய) நீண்ட ஆசிமொழிகளைத் தலைதாழ்த்து ஏற்றுச் சென்ருன். இச் செய்யுளும் பின்வரும் 74, 75-ஆம் செய்யுளும் ஒரு தொடர். (73)

**74.** கீதங்க ளிசைத்தனர் கின்னரர் கீத நின்ற
பேதங்க ளியம்பினர் பேதைய ராடன் மிக்க
பூதங்க டொடர்ந்து புகழ்ந்தன பூசு ரேசர்
வேதங்க ளியம்பினர் தென்றல் விருந்து செய்ய.

கீதங்கள் இசைத்தனர் கின்னரர், கீதம் நின்ற
பேதங்கள் இயம்பினர் பேதையர் ஆடல் மிக்க,
பூதங்கள் தொடர்ந்து புகழ்ந்தன, பூசுரேசர்
வேதங்கள் இயம்பினர், தென்றல் விருந்துசெய்ய !

இச்செய்யுளிலுள்ள இசைத்தனர், இயம்பினர், மிக்க, புகழ்ந்தன, இயம்பினர் எனும் முற்றுச்சொற்களை எச்சமாக்கி, கின்னரர் கீதங்கள் இசைக்கவும், பேதையர் கீதம் நின்ற பேதங்கள் இயம்பினராகி ஆடல் மிகவும், பூதங்கள் தொடர்ந்து புகழ்ந்திடவும், பூசுரேசர் வேதங்கள் இயம்பவும், தென்றல் விருந்து செய்யவும் போனான் என 73-ஆம் செய்யுளில் உள்ள முற்றுச் சொல்லொடு கூட்டி முடிக்க. கீதங்கள் - இசைப்பாடல்கள். கீதம் நின்ற பேதம் - இசைப்பாடல்களில் உள்ள பொருள்வேறுபாடுகள். பூசுரேசர் - நிலத்தேவருள் தலைவர். (74)

**75.** மந்தார முந்து மகரந்த மணந்த வாடை
செந்தா மரைவாண் முகத்துச்செறி வேர்சி தைப்பத்
தந்தா முலகத் திடைவிஞ்சையர் பாணி தாழாக்
கந்தார வீணைக் களிசெஞ்செவி தாழ்ந்து நுங்க.

மந்தாரம் உந்து மகரந்தம் மணந்த வாடை
செந்தாமரை வாள் முகத்துச் செறி வேர் சிதைப்பத்
தம்தாம் உலகத்திடை விஞ்சையர் பாணி தாழாக்
கந்தார வீணைக்களி செஞ்செவி தாழ்ந்து நுங்க.

மந்தாரம் உந்து மகரந்தம் மணந்த வாடை - மந்தார மலர்களினின்று செலுத்தப்பட்ட மகரந்தத்தோடு கூடிய காற்றானது. மந்தாரம் - மந்தார மலர். உந்துதல் - செலுத்துதல்; சிந்துதல். மகரந்தம் -பூந்துகள். மணந்த - கூடிய. வாடை - காற்று. வாடை வேர் சிதைப்ப என இயையும். வாள் முகத்து - ஒளி பொருந்திய முகத்தின்கண். தம் தம் உலகத்திடை என்பது எதுகைநோக்கித் தந்தா முலகத்திடை என நீண்டது. விஞ்சையர் வீணைக்களி, பாணி தாழா வீணைக்களி, கந்தார வீணைக்களி என இயையும். பாணி தாழா - தாளம் தவறாத. கந்தார வீணைக்களி - காந்தாரம் என்னும்

பண்ணுகிய வீணையினின்றெழுகின்ற தேனை. களி - தேன். செம் செவி - அழகிய காதுகள். நுங்க - உண்ண. வாடை வேர் சிதைக்கவும், செவி வீணைக்களி நுங்கவும் அநுமன் போனுன் என 73-ஆம் பாட்டொடு சேர்த்து முடிவு கொள்க. (75)

இதன் பின் பல சுவடிகளில் ஒரு பாடல் பின் வருமாறு காணப் படுகிறது :—

75 (a) பரவுக்குரல் பணிலக்குரல் பணையின்குரல் பறையின்
விரவுக்குரல் சுருதிக்குரல் விசயக்குரல் விரவா
அரவக்குல முயிருக்குக வசனிக்குர லடுபோர்
உரவுக்கரு டனுமுட்கிட வுயிர்க்கின்றன வொருபால்.

12 என்னும் குறியீடுள்ள சுவடியில்மட்டும் பின்வருமாறு ஒரு செய்யுள் காணப்படுகிறது :—

75 (b) வானோர் பசுந்தருவின் மாமலர்கள் தூவ
ஏனோரு நின்றுசய முண்டென வியம்பத்
தானோர் பெருங்கருட னென்னவெதிர் தாவிப்
போனான் விரைந்துகடி தேபோகு மெல்லை.

## அங்காரதாரை தோற்றம் 76—78

76. வெங்கார் நிறப்புணரி வேறேயு மொன்றப்
★ பொங்கார் கலிப்புனல் தரப்பொலிவ தேபோல்
இங்கார் கடத்திரெனை யென்னு வெழுந்தாள்
அங்கார தாரைபிறி தாலால மன்னுள்.

வெம் கார் நிறப் புணரி வேறேயும் ஒன்று அப்
பொங்கு ஆர்கலிப் புனல் தரப் பொலிவதேபோல்,
‘இங்கு ஆர் கடத்திர் எனை ?’ என்னு, எழுந்தாள்
அங்காரதாரை, பிறிது ஆலாலம் அன்னாள் !

பிறிது ஆலாலம் அன்னாள் (ஆகிய) அங்காரதாரை, அப் பொங்கு புனல் ஆர்கலி, வேறேயும் ஒன்று வெம் கார் நிறப் புணரி தரப் பொலிவதே போல், இங்கு ஆர் எனைக் கடத்திர் ? என்னு எழுந்தாள் என இயையும். பிறிது ஆலாலம் அன்னாள் - வேறொரு ஆலகாலவிடத்தை ஒத்தவளாகிய. அப்பொங்கு புனல் ஆர்கலி - அந்த மிக்க நீரையுடைய (தென்) கடலானது. வேறேயும் ஒன்று வெம் கார் நிறப் புணரிதர - வேறும் ஒரு கொடிய கருநிறமுடைய கடலைக் கொடுக்க. பொலிவதே போல் - (அவ்வாறு தரப்பட்ட

கடல்) விளங்குவது போல. பொலிவதே போல் எழுந்தாள்; எனே இங்கு ஆர் கடத்திர் என்று எழுந்தாள் எனக் கூட்டி முடிக்க. இவளை ஸிம்ஹிகா என்றும் அங்காரகா என்றும் வான்மீகம் கூறும். கடலிலெழுந்த அங்காரதாரைக்குக் கடலினின்றெழுந்த பிறிதொரு கடலும் பிறிதோர் ஆலாலமும் உவமை. (76)

77. காதக் கடுங்குறி கணத்திறுதி கண்ணுள்
பாதச் சிலம்பினொலி வேலையொலி பம்ப
வேதக் கொழுஞ்சுடரை நாடிநெடு மேனுள்
ஓதத்தி னூடுவரு கைடவனை யொத்தாள்.

காதக் கடும் குறி கணத்து இறுதி கண்ணுள்,
பாதச் சிலம்பின் ஒலி வேலை ஒலி பம்ப,
வேதக் கொழுஞ்சுடரை நாடி நெடு மேல் நாள்
ஓதத்தினூடு வரு கைடவனை ஒத்தாள்!

கணத்து இறுதி காதம் கடுங்குறி கண்ணுள் - ஒரு கண முடிவுக்குள் காத தூரத்துள்ள பொருள்களையும் விரைந்தறியும் கண்களையுடையளான அங்காரதாரை. பாதச் சிலம்பின் ஒலி வேலையொலி பம்ப - காற்சிலம்பின் ஓசை கடலோசையினும் மிக; பம்புதல் - ஒலித்தலும் ஆம். நெடுமேனுள் - மிகப் பழங்காலத்தில். ஓதத்தினூடு வரு - திருப்பாற் கடலிடை வந்த. கைடவன் - திருமாலைப் பகைத்தழிந்த ஓர் அசுரன்; மதுவென்பானுக்கு இளையான். மது கைடவர் வரலாறு யுத்த காண்டத்து அதிகாயன் வதைப்படலத்தும் குறிக்கப்பட்டது. இதுவும் பின்வரும்78, 79-ஆம் பாடல்களும் ஒரு தொடர். கண்ணுள், ஒத்தாள், எயிற்றுள், வாயாள்; நின்ருள் என 78, 79-ஆம் பாடல்களோடு கூட்டி முடிக்க. (77)

78. துண்டப் பிறைத்துணை யெனச்சுட ரெயிற்ருள்
கண்டத் திடைக்கறை யுடைக்கடவுள் கைம்மா
முண்டத் துரித்தவுரி யான்முளரி வந்தான்
அண்டத் தினுக்குறை யமைத்தனைய வாயாள்.

துண்டப் பிறைத்துணை எனச் சுடர் எயிற்ருள்;
கண்டத்திடைக் கறை உடைக் கடவுள், கைம்மா
முண்டத்து உரித்த உரியால் முளரி வந்தான்
அண்டத்தினுக்கு உறை அமைத்தனைய வாயாள்!

துணைப் பிறைத்துண்டமெனச் சுடர் எயிற்ருள் எனக் கூட்டுக. துணைப்பிறைத் துண்டம் என - இரண்டு பிறைத்துண்டம்போல. சுடர் – ஒளிவிடுகின்ற. எயிற்ருள் - பற்களையுடையாள். கண்டத்திடைக் கறையுடைக் கடவுள் - கழுத்தின்கண் விடத்தையுடைய தேவனுன சிவபெருமான். கைம்மா முண்டத்து உரித்த உரியால் - (தாருகவனத்து முனிவர் ஏவிய) யானையின் தலையறுபட்ட வுடலின் கண் உரித்த தோலினுல். முளரி வந்தான் – (திருமால் திருவுந்தித்) தாமரையில் தோன்றியவனுன பிரமன். அண்டத்தினுக்கு - உலகுக்கு. உறையமைத் தாலனைய வாயாள் என்பது உறையமைத்தனைய வாயாள் என நின்றது. இக்கருத்தே பின்னும் 139-ஆம் பாடலிலும் பயின்றமை காண்க. (78)

அங்காரதாரையைக் கண்ட அநுமன் கருதியது 79—80

**79.** நின்ரு ணிமிர்ந்தலை நெடுங்கடலி னீர்தன்
வன்ரு ளலம்பமுடி வான்முகடு வெளவ
அன்ருய் திறத்தவ னறத்தை யருளோடும்
தின்ரு ளொருத்தியிவ ளென்பது தெரிந்தான்.

நின்ருள் நிமிர்ந்து, அலை நெடுங்கடலின் நீர் தன்
வன் தாள் அலம்ப, முடி வான் முகடு வெளவ;
அன்று, ஆய்திறத்தவன், அறத்தை அருளோடும்
தின்ருள் ஒருத்தி இவள்! என்பது தெரிந்தான்.

அங்காரதாரை அலைநெடுங்கடலின் நீர் தன் வன் தாள் அலம்ப, முடி வான்முகடுவெளவ நிமிர்ந்து நின்ருள்; அன்று ஆய்திறத்தவன் இவள் அறத்தை அருளோடும் தின்ருள் ஒருத்தி என்பது தெரிந்தான்; என இயையும். அலம்ப – கழுவ. முடி வான்முகடு வெளவ – தலை ஆகாய முகட்டின் இடப்பரப்பையெல்லாம் தன்ன தாக்கிக் கொள்ள. அன்று – அப்பொழுது. ஆய்திறத்தவன் – ஆராயுந் திறமுடையனுன அநுமன். (79)

**80.** பேழ்வா யகத்தலது பேருலக மூடும்
நீள்வா னகத்தினிடை யேகுநெறி காணுன்
வாழ்வா னனுக்கவளர் வாள்பில வயிற்றைப்
போழ்வா னினைத்தினைய வாய்மொழி புகன்ருன்.

பேழ் வாய் அகத்து அலது பேர் உலகம் மூடும்
நீள் வான் அகத்தினிடை ஏகும் நெறி காணான்,
வாழ் வான் அனுக்க வளர்வாள் பில வயிற்றைப்
போழ்வான் நினைத்து, இனைய வாய்மொழி புகன்றான்.

(ஆய்திறத்தவன்,) அங்காரதாரையின் வாயகத்தலது வானகத்தினிடை யேகும் நெறி காணான் (ஆகி), வான் அனுக்க வளர்வாள் பிலவயிற்றைப் போழ்வான் நினைத்து, இனைய வாய்மொழி புகன்றான் என இயையும். வாழ் – என்றுமுள்ள. வான் அனுக்க - ஆகாயம் வருந்தும்படி. வளர்வாள் - வளர்கின்றவளாகிய அங்காரதாரையின். போழ்வான் – பிளக்கும்படி. வாய்மொழி - மெய்யுரை. புகன்றான் - சொன்னான். (80)

## அநுமன் வினவுதல்

81. சாயா வரந்தழுவி னாய்தழிய பின்னும்
ஓயா வுயர்ந்தவிசை கண்டுமுணர் கில்லாய்
வாயா லளந்துநெடு வான்வழி யடைத்தாய்
நீயாரை யென்னையிவண் நின்றநிலை யென்றான்.

'சாயா வரம் தழுவினாய்; தழிய பின்னும்,
ஓயா உயர்ந்த விசை கண்டும், உணர்கில்லாய்!
வாயால் அளந்து, நெடு வான்வழி அடைத்தாய்!
நீ யாரை? என்னை இவண் நின்ற நிலை?' என்றான்.

சாயாவரம் தழுவினாய் – நிழலைப் பற்றிப் பிணிக்கும் வரத்தால் என்னைப் பிணித்தாய். தழியபின்னும் – உன்னால் பற்றப்பட்ட பின்னும். தழுவிய என்பது தழிய என விகாரப்பட்டது. ஓயா விசை, உயர்ந்த விசை என இயையும். நீயாரை – நீ யார். ஐ சாரியை. (81)

## அங்காரதாரை மறுமொழி

82. பெண்பா லெனக்கருது பெற்றியொழி யுற்றால்
விண்பா லவர்க்குமுயிர் வீடுவது மெய்யே
கண்பா லடுக்கவுயர் காலன்வரு மேனும்
உண்பா லொருத்தியதொ ழிப்பதரி தென்றாள்.

'பெண்பால் எனக் கருது பெற்றி ஒழி! உற்றால்,
விண்பாலவர்க்கும் உயிர் வீடுவது மெய்யே!

கண்பால் அடுக்க, உயர் காலன் வருமேனும்,
உண்பால் ஒருத்தி; அது ஒழிப்பது அரிது!' என்றாள்.

உற்றால் - நெருங்கினால். விண்பாலவர்க்கும் உயிர் வீடுவது மெய் - இறவாத தேவர்களுக்கும் உயிரழிவு நிகழ்வது உறுதி. கண் பால் அடுக்க - என் கண்ணுக்கு அணித்தாக. காலன் வருமேனும் - இயமன் வந்தாலும். உண்பால் ஒருத்தி - உண்ணும் இயல்புடையா ளொருத்தி. அது - (அவ்வாறு) உண்டலை. ஒழிப்பது அரிது - நீக்கல் இயலாது. அரிதென்றாளாகி 'அவள் எயிற்றைத் திறந்தாள்' என அடுத்த செய்யுளுடன் ஒரு தொடராக்கி முடிக்க. (82)

அநுமன் அங்காரதாரையின் வாயுட் புக்கு வயிற்றினைக் கிழித்து வெளிப்படல்

83. திறந்தா ளெயிற்றையவ ளண்ணலிடை சென்றான்
அறந்தா னரற்றிய தயர்த்தமர ரெய்த்தார்
இறந்தா னெனக்கொடொ ரிமைப்பதனின் முன்னம்
பிறந்தா னெனப்பெரிய கோளரி பெயர்ந்தான்.

திறந்தாள் எயிற்றை அவள்! அண்ணல் இடை சென்றான்!
அறந்தான் அரற்றியது! அயர்த்து அமரர் எய்த்தார்!
இறந்தான் எனக்கொடு; ஓர் இமைப்பதனின் முன்னம்,
பிறந்தான்! எனப் பெரிய கோளரி பெயர்ந்தான்!

அவள் எயிற்றைத் திறந்தாள் என்க. அண்ணல் என்றது இங்கே அநுமனை. இடை - அவள் வாயினுள். அநுமன் இறந் தான் எனக் கொடு அறம் அரற்றியது, அமரர் எய்த்தார் என்க. ஓர் இமைப்பதனின் முன்னம் - ஒருமுறை கண் இமைப்பதற்குள். பெரிய கோளரி பெயர்ந்தான் - பெரிய வலிய சிங்க ஏறு போல்பவனான அநுமன் வெளிப்பட்டான். (83)

அங்காரதாரை வயிற்றிலிருந்து வெளிவந்த அநுமன் தோற்றம் 84—85

84. கள்வா யரக்கிகத
றக்குடர் கணத்திற்
கொள்வார் தடக்கையன்
விசும்பின்மிசை கொண்டான்

முள்வாய் பொருப்பின்முழை
யெய்திமிக நொய்தின்
உள்வா ழரக்கொடெழு
திண்கலுழ னொத்தான்.

கள்வாய் அரக்கி கதறக் குடர் கணத்தில்
கொள் வார் தடக்கையன், விசும்பின்மிசை கொண்டான்,
முள் வாய் பொருப்பின் முழை எய்தி, மிக நொய்தின்
உள் வாழ் அரக் கொடு எழு, திண் கலுழன் ஒத்தான்!

கள்வாய் அரக்கி – கள் ஒழுகும் வாயையுடைய அரக்கி; என்றது அங்காரதாரையை. அரக்கி கதறக் கணத்திற் குடர் கொள் வார் தடக்கையன் (ஆகி) விசும்பின்மிசை கொண்டான், மலைக் குகையுள் புக்கு அதனுள் வாழும் பாம்புகளை விரைந்து கௌவிக்கொண்டு மேலெழுகின்ற கருடனை ஒத்தான் என்க. குடர் – குடல். வார் தடக்கை – நீண்ட பெரிய கை. விசும்பின் மிசை கொண்டான் - வானின் மேற் சென்றவனான அநுமன். பொருப்பின் முழை எய்தி - மலைக் குகையுட் புக்கு. அரா அரவெனக் குறுகி நின்றது. அரா - பாம்பு. அங்காரதாரையின் வாய்க்குக் குகையும் பல்லுக்கு முள்ளும் உவமை. (84)

85. சாகா வரத்தலைவ ரிற்றிலக மன்னான்
ஏகா வரக்கிகுடர் கொண்டுட னெழுந்தான்
மாகால் விசைக்கவட மண்ணிலுற வாலோ
டாகாய முற்றகத லிக்குவமை யானான்.

சாகா வரத் தலைவரில் திலகம் அன்னான்,
ஏகா அரக்கி குடர் கொண்டு உடன் எழுந்தான்,
மா கால் விசைக்க, வடம் மண்ணில் உற, வாலோடு
ஆகாயம் உற்ற கதலிக்கு உவமை ஆனான்!

சாகா வரத் தலைவரில் திலகம் அன்னான் - இறவா வரம் பெற்ற தலைவருள் திலகம்போல்பவனான அநுமன். ஏகா –(வாய்வழி) சென்று. மாகால் – பெரிய காற்று. விசைக்க - வீச. வடம் - கயிறு. கதலி - பட்டம்; காற்றாடி. திலகம் அன்னான், அரக்கி குடர் கொண்டெழுந்து கதலிக்கு உவமையானான் என முடியும். (85)

### அநுமன் வென்றியால் நிகழ்ந்தவை

**86.** ஆர்த்தார்கள் வானவர்க டானவ ரழுங்கா
வேர்த்தார் விரிஞ்சனும் வியந்துமலர் வெள்ளம்
தூர்த்தா னகன்கயிலை யிற்றொலை விலோனும்
பார்த்தான் முனித்தலைவ ராசிகள் பகர்ந்தார்.

ஆர்த்தார்கள் வானவர்கள்; தானவர் அழுங்கா
வேர்த்தார்; விரிஞ்சனும் வியந்து மலர்வெள்ளம்
தூர்த்தான்; அகன் கயிலையில் தொலைவு இலோனும்
பார்த்தான்; முனித்தலைவர் ஆசிகள் பகர்ந்தார்.

வானவர்கள் ஆர்த்தார்கள் என இயைக்க. தானவர் - அசுரர். அழுங்கா – வருந்தி. விரிஞ்சன் - பிரமன். கயிலையில் தொலைவிலோன் என்றது சிவபெருமானை. ஆசிகள் - வாழ்த்துரைகள். (86)

### அநுமன் மீண்டும் ஏகுதல்

**87.** மாண்டா ளரக்கியவள் வாய்வயிறு காறும்
கீண்டா னிமைப்பினிடை மேருகிரி கீழா
நீண்டான் வயக்கதி நினைப்பினெடி தென்னப்
பூண்டா னருக்கனுயர் வானின்வழி போனான்.

மாண்டாள் அரக்கி; அவள் வாய் வயிறு காறும்
கீண்டான், இமைப்பினிடை மேருகிரி கீழா
நீண்டான், வயக் கதி நினைப்பின் நெடிது என்னப்
பூண்டான், அருக்கன் உயர் வானின்வழி போனான்!

கீண்டான் – கிழித்தவனான அநுமன். கீண்டான், நீண்டு பூண்டு போனான் என முடியும். நீண்டான் பூண்டான் என்பவை முற்றெச்சம். நினைப்பின் நெடிதென்ன வயக்கதி பூண்டான் என மாறிக் கூட்டுக. வயக்கதி – வலிய விரைவு. நினைப்பின் நெடிது என்ன - நினைப்பினும் (மனோவேகத்தினும்) பெரியது என்று கண்டோர் சொல்லும்படி. நினைப்பினும் என்பதனுள் உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. அருக்கன் உயர் வானின் வழி - சூரியன் (செல்லுகின்ற) உயர்ந்த ஆகாய நெறியில். (87)

அநுமன் நினைவு 88—89

88. சொற்ருர்கள் சொற்றதுணை பல்தொகைய தன்ருே
முற்ரு முடிந்தநெடு வானினிடை முந்நீ
ரிற்ருவி யெற்றெனினும் யானினி யிலங்கை
உற்ருல் விலங்குமிடை யூறெனவுணர்ந்தான்.

'சொற்ருர்கள் சொற்றதுணை பல்தொகையது அன்ருே ?
முற்ரு முடிந்த நெடு வானின் இடை, முந்நீ
ரில் தாவி, எற்று எனினும், யான் இனி இலங்கை
உற்ருல் விலங்கும் இடையூறு' என உணர்ந்தான்.

சொற்ருர்கள் – வழி கூறியவர்கள். முற்ரு முடிந்த – முடிவில்லாதனவாய் அமைந்த. நெடுவானினிடை – நீண்ட ஆகாயத்திலும். முந்நீரில் - கடலிலும். 'சொற்ற துணை – சொல்லிய (இடப் பரப்பும் பகையும் ஆகியவற்றின்) அளவு. பல் தொகையது – பலவாகிய தொகைகளை யுடையது: (எண்ணில் அடங்குவதன்று). அன்று, ஓ: அசை. எற்றெனினும் – அவ்வளவு எவ்வளவினதாயினும். யான் தாவி-யான்தாண்டி(க் கடந்து). விலங்கும்-விலகும். இலங்கையுற்ருல் இடையூறு விலங்கும் என்றது, அங்குப் பிராட்டியுண்மையால் அவள் திருமுன்பு இடையூறுகள் உளவாகா என்பது கருதி. அநுமன் உணர்ந்தான் என்க. (88)

89. ஊறுகடி தூறுவன வூறிலற முன்ருத்
தேறலி லரக்கர்புரி தீமையவை தீரா
ஏறுவகை யிங்குளதி ராமவென வெல்லாம்
மாறுமதின் மாறுபிறி தில்லென மதித்தான்.

'ஊறு கடிது ஊறுவன; ஊறு இல் அறம் உன்ருத்
தேறல் இல் அரகர் புரி தீமை அவை தீரா,
ஏறு வகை இங்கு உளது; இராம! என எல்லாம்
மாறும்; அதின் மாறு பிறிது இல்' என மதித்தான்.

கடிது ஊறுவன ஊறு - விரைந்து மிகும் இடையூறும். ஊறுஇல் அறம் உன்ருத் தேறல் இல் அரக்கர்புரி தீமையவை - குற்றமற்ற அறத்தை நினையாதவர்களும் தெளிவற்றவர்களுமான அரக்கர்கள் செய்கின்ற தீமையாகிய அவைகளும். தீரா – தீர்த்து (நீக்கி). ஏறு வகை - கரையேறும் வழி. இங்கு உளது – இங்கும் உண்டு. இராம

என எல்லாம் மாறும் - இராம என்று சொல்ல அவ்வூறுகளெல்லாம் நீங்கும். அதில் மாறு பிறிது இல் என மதித்தான் – அதனினும் வேருன பிறிதுநெறி இல்லே யென்று (அநுமன்) எண்ணினுன். இங்குக் கூறப்பட்ட இராமநாமச் சிறப்பு கிட்கிந்தா காண்டத்து வாலிவதைப் படலம் 79–ஆம் பாடலாலும் சம்பாதிப் படலம் 48–ஆம் பாடலாலும் 'நன்மையும் செல்வமும்' என்னும் பாயிரப்பாடலாலும் விளங்கும். (89)

அநுமன் பவளமலேயிற் பாய்தல்

90. தசும்புடைக் கனக நாஞ்சிற்
★ கடிமதி றணித்து நோக்கா
அசும்புடைப் பிரசத் தெய்வக்
கற்பக நாட்டை யண்மி
விசும்பிடைச் செல்லும் வீரன்
விலங்கிவே றிலங்கை மூதூர்ப்
பசும்புடைச் சோலேத் தாங்கோர்
பவளமால் வரையிற் பாய்ந்தான்.

தசும்பு உடைக் கனகம் நாஞ்சில்
கடி மதில் தணித்து நோக்கா,
அசும்பு உடைப் பிரசத் தெய்வக்
கற்பக நாட்டை அண்மி,
விசும்பிடைச் செல்லும் வீரன்
விலங்கி வேறு, இலங்கை மூதூர்ப்
பசும் புடைச் சோலேத்து ஆங்கோர்
பவளமால்வரையில் பாய்ந்தான்!

பிரசம் அசும்பு உடை - தேன் ஊறுதலேயுடைய. அண்மி – நெருங்கி. விசும்பிடை - வானில். வீரன் என்றது அநுமனே. மூதூர் இலங்கை - பழையவூராகிய இலங்கையின். கனகம் தசும்பு நாஞ்சில் உடைக் கடிமதில் - பொற்கலசங்களேயும் நாஞ்சில் என்னும் உறுப்பினேயும் உடைய காப்பமைந்த மதிலே. நோக்கா – நோக்கி. தணித்து – (தன் வேகத்தை) அடக்கிக்கொண்டு. விலங்கி – மதிலே விட்டு விலகி. வேறு – அயலிலுள்ள. புடை பசும் சோலேத்து ஓர் பவள மால் வரையில் – பக்கங்களில் பசுமையான சோலேகளே யுடையதாகிய ஒரு பெரிய பவளமலேயிலே. வீரன் பாய்ந்தான் என்க. அநுமன் பாய்ந்துநின்ற மலே லம்பம் என்று வான்மீகம் கூறும். (90)

பவளமலை சலித்தல்

91. மேக்குறச் செல்வோன் பாய
வேலைமே லிலங்கை வெற்பு
நூக்குறுத் தங்கு மிங்குந்
தள்ளுற நுடங்கு நோன்மை
போக்குறற் கிடையூ ருகப்
புயலொடு பொதிந்த வாடை
தாக்குறத் தகர்ந்து சாயுங்
கலமெனத் தக்க தன்றே.

மேக்குறச் செல்வோன் பாய, வேலைமேல் இலங்கை வெற்பு நூக்குறுத்து, அங்கும் இங்கும் தள்ளுற, நுடங்கும் நோன்மை, போக்குறற்கு இடையூருகப் புயலொடு பொதிந்த வாடை தாக்குறத் தகர்ந்து சாயும் கலம் எனத் தக்கது அன்றே!

மேக்கு உறச் செல்வோன் - வானில் மேலே செல்பவனுன அநுமன். பாய - பாய்தலால். வேலைமேல் இலங்கை வெற்பு - கடலில் உள்ள இலங்கையிற் பவளமலையானது. அங்கும் இங்கும் நூக்குறுத்துத் தள்ளுற - அப்புறமும் இப்புறமும் அசைத்துத் தள்ள. நுடங்கும் நோன்மை - அசையுந்தன்மை. புயலொடு பொதிந்த வாடை - மழையொடு கூடிய பெருங்காற்ருனது. வாடை போக்குறற்கு இடையூருகத் தாக்குற எனக் கூட்டுக. தகர்ந்து - சிதைந்து. கலம் - கப்பல். மேக்குறச் செல்வோன் பாய்தலால் இலங்கை வெற்பு நுடங்கும் நோன்மை, வாடை தாக்குறத் தகர்ந்து சாயும் கலமெனத் தக்கது என்க. (91)

அநுமன் இலங்கையைக் காண்டல்

92. மண்ணடி யுற்று மீது
வானுறு வரம்பின் றன்மை
எண்ணடி யற்ற குன்றி
னிலைத்துநின் றெய்த நோக்கி
விண்ணிடை யுலக மென்னு
மெல்லியன் மேனி நோக்கக்
கண்ணடி வைத்த தன்ன
விலங்கையைக் கண்ணிற் கண்டான்.

மண் அடி உற்று, மீது வான் உறு வரம்பின் தன்மை
எண் அடி அற்ற குன்றில் நிலைத்துநின்று எய்த நோக்கி,
விண்ணிடை உலகம் என்னும் மெல்லியல், மேனி நோக்கக்
கண்ணடி வைத்தது அன்ன, இலங்கையைக் கண்ணில் கண்டான்!

அடி - கீழ்ப்பாகம். மண் உற்று - பூமியின் (அடியில்) பொருந்தி. மீது - உச்சி. வானுறு - வானுலகிற் பொருந்திநின்ற. வரம்பின் தன்மை எண் அடியற்ற குன்றில் - எல்லையின் இயல்பு நினைத்தற் குரிய மூலம் இல்லாத பவளமலையில். எய்தநோக்கி - உற்றுப் பார்த்து. விண்ணிடையுலகம் என்னும் மெல்லியல் - வானுலகமென் னும் மென்மைத்தன்மையுள்ள ஒரு பெண். (அநுமன்) குன்றில் நின்று நோக்கி இலங்கையைக் கண்டான் என முடியும். (92)

அநுமன் இலங்கையை வியத்தல் 93—95

93. நன்னக ரதனை நோக்கி
நளினக்கை மறித்து நாகர்
பொன்னக ரிதனை யொக்கு
மென்பது புல்லி தம்மா
அந்நக ரிதனி னன்றே
லண்டத்தை முழுது மாள்வான்
இந்நக ரிருந்து வாழா
னிதுவதற் கேது வென்றான்.

நல் நகர் அதனை நோக்கி, நளினக் கை மறித்து, ‘ நாகர்
பொன் நகர் இதனை ஒக்கும் என்பது புல்லிது, அம்மா!
அந்நகர், இதனின் நன்றேல், அண்டத்தை முழுதும் ஆள்வான்
இந்நகர் இருந்து வாழான்! இது, அதற்கு ஏது!’ என்றான்.

நல் நகர் அதனை - நல்ல பட்டினமாகிய அந்த இலங்கையை. நளினக்கை மறித்து - தாமரை மலர் போன்ற கையைக் கவித்து. நாகர்பொன் நகர்—தேவர்களுடைய பொன்னகராகிய அமராவதி. இதனை - இந்த இலங்கைநகரத்தை. புல்லிது - சிறுமையுள்ள தாகும். அம்மா : வியப்பிடைச்சொல். அந்நகர் - அந்த அமராவதி. இதனின் நன்றேல்-இந்த இலங்கைநகரத்தினும் சிறந்ததாயிருக்கு மாயின். முழுது அண்டத்தையும் ஆள்வான் - எல்லா உலகங்களை யும் ஆள்பவனான இராவணன். இந்நகர் - இந்த இலங்கையில்.

இது-இலங்கையில் வாழ்தல். அதற்கு - ஒவ்வாமைக்கு. கைம்மறித்தல் உடம்பாடின்மைகுறிக்கும் மெய்ப்பாடு (சிந்தா. 1227). (93)

94. மாண்டதோர் நிலத்திற் ருமென்
றுணர்த்துதல் வாய்மைத் தன்ருல்
வேண்டிய வேண்டி னெய்தி
வெறுப்பின்றி விழைந்த துய்க்கும்
ஈண்டரும் போக வின்ப
மீறில தியாண்டுக் கண்டாம்
ஆண்டது துறக்க மஃதே
யருமறைத் துணிவு மம்மா.

'மாண்டது ஓர் நிலத்திற்ரும்' என்று
உணர்த்துதல் வாய்மைத்து அன்ருல்!
வேண்டிய வேண்டின் எய்தி
வெறுப்பு இன்றி விழைந்த துய்க்கும்
ஈண்டு அரும் போக இன்பம்
ஈறிலது, யாண்டுக் கண்டாம்,
ஆண்டு அது துறக்கம்! அஃதே
அருமறைத் துணிவும், அம்மா!

மேல் 93-ஆம் பாடலால் இலங்கை அமரர் பொன்னகரினும் சிறந்த தென்ருர்; இப்பாடலால் இலங்கையையே துறக்கம் (சுவர்க்கம்) என்று அறுதியிடுகிருர். துறக்கம் மாண்டதோர் நிலத்திற்ரும் என்று உணர்த்துதல் வாய்மைத் தன்று - சுவர்க்கம் (எங்கோ) சிறந்ததாகிய ஒரு நிலத்தின்கண் உள்ளது என்று சொல்லுதல் மெய்மையின்கண்படுவதன்று; (ஏன் எனில்), வேண்டிய வேண்டின் எய்தி - விரும்பியவற்றை விரும்பியவண்ணமே அடைந்து. விழைந்த வெறுப்பின்றித் துய்க்கும் - விரும்பியவற்றை உவர்ப்பின்றி நுகர்கின்ற. ஈண்டு அரும் போக இன்பம் - நிரம்பிய பெறுதற்கரிய அனுபவமும் இன்பமும் (ஆகியவற்ருல்). ஈறிலது - முடிவற்ற ஒரு தானத்தை. யாண்டுக் கண்டாம் - எவ்விடத்துப் பார்த்தோமோ. ஆண்டு அது - அவ்விடத்து அத்தானமே. துறக்கம் - சுவர்க்கமாகும். அருமறைத் துணிவும் அஃதே - அறிதற்கரிய வேதமுடிவும் அதுவே. வேண்டியவற்றை வேண்டியவாறே அடைவித்தலாலும், விழைந்தவற்றை வெறுப்பின்றி நுகர்வித்தலாலும், முடிவில்லாத போக இன்பங்களையுடைமையாலும் இலங்கை சுவர்க்கமாயிருந்ததென்றவாறு. (94)

95. உட்புல மெழுநூ றென்ப
ரோசனை யுலக மூன்றிற்
றெட்புறு பொருள்க ளெல்லா
மிதனுழைச் செறிந்த வென்றால்
நுட்புல நுணங்கு கேள்வி
நுழைவின ரெனினு நோக்குங்
கட்புல வரம்பிற் றாமே
காட்சியுங் கரையிற் றாமே

உட்புலம் எழுநூறு என்பர் ஓசனை; உலகம் மூன்றில் தெட்பு உறு பொருள்கள் எல்லாம் இதனுழைச் செறிந்தஎன்றால், நுட்புலம் நுணங்கு கேள்வி நுழைவினர் எனினும், நோக்கும் கட்புல வரம்பிற்றாமே? காட்சியும் கரையிற்றாமே?

உட்புலம் எழுநூறு ஓசனை என்பர் – (இலங்கையின்) உள்ளிடப் பரப்பு எழுநூறு யோசனை என்று கூறுவர் அறிந்தோர். உலகம் மூன்றில் தெட்பு உறு பொருள்கள் எல்லாம் இதனுழை செறிந்த என்றால்–மூன்றுலகிலும் உள்ள குற்றம் நீங்கிய (உயர்ந்த) பொருள் முழுவதும் இந்நகரின்கண் மிக்குள்ளன என்றால். நுண்புலம் – நுண்ணறிவும். நுணங்கு கேள்வி – நுண்ணிய கேள்வியும் (வாய்ந்து). நுழைவினர் எனினும் – நூற்பயிற்சியும் உடையவராயினும். (இந்நகரின் அழகு முழுவதும்) கட்புல வரம்பிற்றாமே - கண்ணாகிய பொறியின் எல்லையில் அடங்குவதாகுமோ? (ஆகாது). காட்சியும் – (இந்நகரிலுள்ள) காட்சிகளும். கரையிற்றாமே - ஓர் எல்லையுள் அடங்குவதாகுமோ? (ஆகாது) என்றவாறு. (95)

இச்செய்யுளின்பின் 25-ஆம் ஏட்டில் பின்வருமாறு ஒரு செய்யுள் காணப்படுகிறது:—

95 (a) என்றுதன் னிதயத் துன்னி யெறுழ்வலித் தடந்தோள் வீரன்
நின்றன னெடிய வெற்பி னிணைப்பரு மிலங்கை மூதூர்
ஒன்றிய வடிவங் கண்டாங் குளத்திடைப் பொறுக்க லாற்றான்
குன்றுறழ் புயத்து மேலோன் பின்னருங் குறிக்க லுற்றான்.

கடல் தாவு படலம் முற்றிற்று.

# 2. ஊர்தேடு படலம்

இங்கே ஊர் என்பது மூன்றுலகும் ஆண்ட இராவணன் என்னும் அரக்கர்வேந்தனுடைய அரசிருக்கைநகராகிய இலங்கையைச் சுட்டி நின்றது. இலங்கைநகருள் சீதாபிராட்டியை அநுமன் தேடிய செய்தி விரித்தலின் இஃது இத்தலைப்பால் வழங்கப்பட்டது. இப்படலம் 234 செய்யுட்களால் இயன்றது. வான்மீகத்துள் இலங்கைநகர்தேடிய செய்தி 2 முதல் 13 முடியவுள்ள 12 சருக்கங்களில் 505 சுலோகங்களாற் பேசப்பட்டது.

இலங்கை தென்கடலிடையே திரிகூடமலையின்மீது அமைக்கப்பட்டது; முன்பு குபேரனுக்குரியதாயிருந்தது; இராவணனால் கவர்ந்துகொள்ளப்பட்டது; முற்றத் துறந்த முனிவரையும் மயக்கும் அழகும் செல்வமும் பிற நலங்களும் நிறைந்தது; "எவ்வுலகத்தோர் யாவரும் தவஞ்செய்தேறுவான் ஆதரிக்கின்ற அவ்வுலகத்தோர் இழிவதற்கு அருத்தி புரிகின்ற" அயோத்தியரசான இராமபிரானுள்ளத்தையும் விழைவற்ற விரதியர்தலைவனான அநுமனுள்ளத்தையும் பிணித்தது இலங்கையெனின் அதன் மாண்பு சொல்லிலடங்கும் தரத்ததோ!

இலங்கை தவத்தின்விளைவாயது; எனினும் அறத்தின் தொடர்பில்லாதது. அயோத்தியோ மாதவம் அறத்தொடு வளர்தற்கு இடமாயது. அயோத்தியை வியந்துபேசிய கம்பரே இலங்கையின் மாட்சியினையும் விரிக்கிறார்.

இப்படலத்துள் முதல் 59 செய்யுட்கள் நிலாத்தோற்றுபடலம் என்ற தலைப்பின்கீழும், அடுத்த 36 செய்யுட்கள் இலங்கைமாதேவி வதைப்படலம்[1] என்ற தலைப்பின்கீழும், அதன்மேல் 139 செய்யுட்களும் ஊர்தேடுபடலம்[2] என்ற தலைப்பின்கீழும் சில ஓலைச்சுவடிகளில் வரையப்பட்டுள்ளன.

234 செய்யுட்களில் ஒரே படலமாகப் பேசப்பட்ட ஊர்தேடிய செய்தியை மேற்குறித்தவாறு மூன்று படலமாக வகுத்தது படிப்பார்க்கு மகிழ்ச்சிவிளைக்குமாயினும் உற்றுநோக்குங்கால் அவ்வகுப்புப் பொருந்துவதாயில்லையென்பது பின்வருமாற்றான் விளங்கும்.

59 செய்யுட்களால் அமைந்ததாகக் காணப்பட்ட நிலாத்தோற்று படலத்துள் முதல் 51 செய்யுட்கள் இலங்கைநகரவருணனை

---

1. இலங்காதேவிப்படலம் என்று சில சுவடிகளிலும், இலங்கைமாதேவிப் படலம் என்று சில சுவடிகளிலும், இலங்காதேவிவதைப்படலம் என்று சில சுவடிகளிலும் வரையப்பட்டுளது.

2. நகர்தேடுபடலம் என்று ஒருசில சுவடிகளிலும், இலங்கையூர் தேடுபடலம் என்று ஒருசில சுவடிகளிலும் காணப்படுகிறது.

யும் அந்நகரின் செல்வமிகுதியும் அந்நகருள் வாழ்வார் அநுபவ நிலையும் பேசுவனவாய் உள்ளன. 52 முதல் 59 முடியவுள்ள 8 செய்யுட்களே நிலாத்தோற்றம் பேசுவன. ஆகவே முன்னே 51 செய்யுட்களால் நகரமைதி பேசும்பகுதியை வாளாவிட்டு 8 செய்யுட்களால் மட்டும் பேசப்படும் நிலாத்தோற்றங்கொண்டு முன் 51 செய்யுளும் அடங்க ஒரு படலமாக்குதல் பொருந்தாது. இலங்கை மாதேவி வதையும் தேடப்புக்கநிலையில் நேர்ந்த தடை நீங்க மேற்கொண்ட செயலாதலின் அதுவும் தனித்தலைப்பில் அமையவேண்டுவதன்று.

எனவே தேடப்புக்க இலங்கைநகரின் அமைதியும், தேடப்புக்க பொழுதின் இயல்பும், புக்கபொழுது இலங்கை மாதேவியால் நேர்ந்த தடையும், அத்தடையைக் கடந்து தேடிய விவரமும் ஆகிய செய்திகள் ஊர்தேடுபடலம் என்ற ஒரே தலைப்பிற் பொருந்தி யமைதலே சிறக்கும். சுரசையையும் அங்காரதாரையையும் அநுமன் வென்ற செய்தி தனித்தனி தலைப்பிற் பேசப்படாமல் கடல்தாவு படலத்தில் அடங்கக் கூறிச் சென்றதும் இங்கு நோக்கத்தகும்.

கவி, இப்படலத்துள் இலங்கையைப் புறநகர் இடைநகர் அகநகர் என மூன்ருகப் பகுத்துப் பேசுகிருர். புறநகருள் படைநிலையும் அரக்கர் வாழ்வும், இடைநகருள் இராவணன் சுற்றமும் அமைச்சரும் முதலியோர் வாழ்வும், அகநகருள் இராவணன் காதற்சுற்றத்தோடு வாழும் நிலையும் பேசப்பட்டன.

அநுமன், தான் கடலைத் தாவி வந்திறங்கிய பவளமலையிலிருந்து இலங்கையை நோக்கினன். வானுற ஓங்கி நின்ற மலைமீது அதனையே குலுங்கச் செய்யும் பெரிய உருவுடன் உயர்ந்த அநுமன், அவ்விடத்தினின்று தன் பேருருவக் கண்களாற் கண்ட காட்சிகள் இப்படலத்தின் முதல் 41 செய்யுட்களில் அமைந்த பொருளாகும். பின் 55 செய்யுட்கள், அவன் மதிலைத்தாவி ஊரினுள் புக முயன்ற செய்தியையும் இடையிலே அவன் செல்கைக்குண்டான இடையூற்றை அவன் எளிதில் வென்ற செய்தியையும் கூறுகின்றன. இதன்பின், அவன் ‘இவ்விலங்கை வாழுமா மன்னுயிர் யான் காணுத மற்றில்லை’ என்று தானே சொல்லிக்கொள்ளுமாறு எழுநூறு ஓசனை சூழ்ந்து எயில் கிடந்த அவ்வூரைத் துருவிச் சென்ற தன்மையைக் கூறும் முகத்தால் இலங்கையின் அமைதிகளையும், அங்கு வாழ்ந்த அரக்கரின் செல்வங்களையும், அவர் அனுபவிக்கும் போகங்களையும், அவ்விலங்கைக் கிறைவனுன இராவணன் வாழ்க்கையையும் வரலாற்ருசிரியரொருவர் படம் பிடித்துக் காட்டுவது போல் நம் மனக்கண்ணின்முன் தோன்றுமாறு பின் 138 செய்யுட்களில் கூறிக் கதையை ஆசிரியர் மேன்மேல் நடத்திக்கொண்டு செல்லுகின்ருர்.

இவ்வாறு இலங்கையின் வருணனையையும், அவ்வூர் மக்களின் இயல்புகளையும், அதற்கு இறைவனும் இராமாவதாரத்திற்குக் காரணனும், இணையற்ற சிறப்புக்கள் பல பெற்றிருந்தும் அறநிலையில் நில்லாத பெரும்பிழையுடைமையால் அச்சிறப்புக்கள் யாவற்றையும் இழந்தவனுமான இராவணனையும் அவனுடைய வரலாறுகளையும் கூறப்புகும் வாயிலாக இப்படலத்தை இக்காண்டத்திலேயே பெரும் படலமாகவும், காண்டத்தின் அளவில் ஆறிலொன்ருகவும் ஆசிரியர் அமைத்துள்ளனரோ என்று நினைக்க இடமுண்டாகிறது. அல்லாமலும் அநுமன் பெருமைகளை விளக்கப்புகும் இக்காண்டத்திற்கு அவனது பலவகை ஆற்றல்களையும் பண்பாடுகளையும் பிற அமைதிகளையும் முகவுரையாகக்கொண்டு இப்படலம் வரையறுக்கப்பட்டுள்ளதோ என்று எண்ணும்படியாகவும் இயற்றப்பட்டுளது.

மற்ருென்றும் இங்கு ஆராய்தற்பாலது. இப்படலத்தில் இலங்கை ஊர் என்றே கூறப்படுகிறது. பால காண்டத்தில் அயோத்தியைப் பற்றிக் கூறும் படலத்துக்கு நகரப்படலம் என்று பெயரிட்டதுபோல அப்படலத்தின் தொடக்கச் செய்யுளிலேயே 'அயோத்திமாநகரம்' என்று தொடங்கிய ஆசிரியர், இங்கு இப்படலத்தை ஊர்தேடுபடலம் என்று பெயரிட்டதற்கு ஏற்ப, இவ்வூரின் பெருமையை இப்படலத்தில் முதன் முதலாகத் தொகுத்துச் சொல்லும் 9-ஆம் செய்யுளில் 'வாழுமன்னுயிர் யாவையு மொருவழி வாழ, ஊழிநாயகன் திருவயிறு ஒத்துளது இவ்வூர்' என்று ஊர் என்ற பெயரையே அமைக்கின்றனர். ஆனுல் நகர் என்னும் பெயரையும் இலங்கைக்கு ஆசிரியர் இடாமலே இருக்கவில்லை. இப்படலத்தில் ஊர், நகர் என்ற இரு சொற்களும் இலங்கைக்கு வழங்கப் பெற்றிருப்பினும் ஊர்ப் பெயரேசிறப்பாக ஆசிரியரால் ஆளப்பட்டுள்ளமை கவனிக்கத் தக்கது. சங்க காலம் முதல் ஊரென்ற பெயராலேயே தமிழகத்தில் பெரிய நகரங்கள் வழங்கப்பெற்றுவந்துள்ளமையும் கருதத்தக்கது. இலங்கையின் அமைப்பு, சங்கநூல்களிலும் பிற்காலத் தமிழிலக்கியங்களிலும் அமைந்துள்ளவாறே பெரும்பாலும் கூறப்பட்டது கருதற்பாலது. இப்படலத்தால் நாம் இலங்கையைப்பற்றி அறியத் தக்கனவற்றைத் தொகுத்துக் கூறுவோம்.

இவ்வூர் திரிகூடம் என்ற மலைக்குவட்டின் மீது, நான்முகன் நகரமைப்பு முறையை வகுத்துக்காட்டத் தெய்வத்தச்சனை விசுவகருமனுல், குபேரனுக்காகக் கட்டப்பெற்றது. ஆகவே இதன் மாளிகைகள் பொன்னுலும் மணியாலும் அமைக்கப்பட்ட தன்மை, அவற்றின் ஒளி, உயரம், பரப்பு ஆகியவை சேய்மையிலிருந்து பார்க்கும் அநுமன் கண்களிற்பட்டபடியையே முதல் 41 செய்யுட்கள் கூறு

கின்றன. பெண்டிர் விளையாடல்களையும் மிகவும் நுட்பமான வேறு பலவற்றையும் அநுமன் அத்துணைச் சேய்மைநிலையினின்று காண வியலுமோவெனின், அவனுடைய உருவ வளர்ச்சிக்கு ஒத்தபடி அவன் புலனுணர்ச்சியும் அமைந்திருந்தது எனக்கொள்ளுதலே போதியதாம்.

அடுத்ததாக, நகரின் காவற்பெருமையைத் தெரிவிக்க முன் வந்த கம்பர், கோபுரத்தையும் மதிலையும் எடுத்துக்கொண்டனர். தமிழகத்தில் ஊர்காவலை ஒரு பெண்தெய்வம் ஏற்றுவந்த செய்தியைச் சிலப்பதிகாரத்தில் மதுராபதி வரலாற்றிற் காண்கிறோம். அதனைப் போன்றே இலங்கைக்கும் இலங்கை மாதேவியென்ற ஒரு காவல் தெய்வம் அமைந்த செய்தி கூறப்படுகின்றது. இது தெய்வ சம் பந்தமான புராண கதையாதலால் அவளுடைய வரலாறு பிரமன் முதலியோருடன் தொடர்புபட அமைந்துள்ளது.

இலங்கைமாதேவியை வென்று அவள் வாழ்த்துரையுடன் அந்தியிருளில் சிறிய உருவங்கொண்டு மதிலைத்தாவி நகரினுள் அநுமன் நுழைந்தனன். ஒரு பூனையின் உருவுடன் அவன் புகுந் தனன் என்று வான்மீகம் கூறும்.

சிலப்பதிகாரக் கதையை நடத்திக்கொண்டே புகார், மதுரை வஞ்சி இவற்றின் முழு வருணனையையும் இளங்கோவடிகள் செய் திருத்தலை யொப்ப, அநுமன் ஊர்தேடுகதையைச் சொல்லுமுகத் தானே இலங்கையையும் அதிலுள்ள மக்களையும் பிறவற்றையும் வருணிக்கின்றார்.

இலங்கை வட்ட உருவமாக அமைந்திருந்தது; அது மூன்று பகுதிகளாகப் பிரிவுண்டிருந்தது. புறமதில் மிகப்பெரியது; அம் மதிலுக்கும் அடுத்த மதிலுக்கும் இடையிலுள்ள பெரும்பகுதி ஆனையின் கூடம், வாசியின் பந்தி முதலிய போர்க்குரிய படைகள் தங்கும் பெருங்கட்டடங்கள் நிறைந்தவை. ஆங்குள்ள மாந்தருட் பெரும்பாலோர் போர்வீரரே. தேவர் முதலியோரை ஏவல்கொள் பவர் அரக்கர் ஆதலால் போகம் நுகர்தலன்றி அவர் வேறெத் தொழிலும் அறியாதவராக இருந்தனர்.

இலங்கைநகர மாந்தருள் இராவணன்முதல் யாவரும் போகம் ஒன்றையே நுகர்தலன்றி வேறெதிலும் ஈடுபட்டவராகக் கூறப் படாமை நோக்கத்தக்கது. அவர்கள் முன்னைத் தவச்சிறப்பையும், அதனால் அவர்கள் பெற்ற செல்வப்பெருக்கையும், அளவுகடந்த ஆற்றலையும் நம் கண்முன் நிறுத்தித் தவத்தினாலாம் பயன்களை நமக்கு எடுத்துக்காட்டி, அப்பயனெல்லாம் அறத்தொடுபட்ட வாழ்க் கையில்லாவிடத்துப் பயனற்றுப்போவதை நிதர்சனப் படுத்தவும்,

ஒரு நாகரிகத்தின் உயர்வில் அறவுணர்ச்சியும் புலனெடுக்கமும் பணிவும் இல்லாவிடத்து அந்நாகரிகம் அழியும் என்பதை உலகுக்கு அறிவிக்கவும் இப்படலத்தை இவ்வளவு விரிவாக அமைத்திருக்கின்றார்போலும். இங்கு அரக்கர் பலவகைக் கலைகளிலும் சிறப்பு வாய்ந்திருந்தமையையும் அறிகிறோம். அவர்களின் கலைப்பெருக்குக்கு எல்லையேயில்லை. ஆயினும் அவர்களின் இன்பநுகர்ச்சி வெளிப்படையாகவும் அடக்கமில்லாமலும் இருப்பதை நாம் இப்படலம் முழுதிலும் காண்கிறோம்.

இவ்வாறமைந்த புறநகரைக் கடந்து உள்நோக்கிச் செல்லும் போது இராவணனுடைய தம்பியர், தனயர் முதலியோரின் மாளிகைகள் நிறைந்த இடைநகர் வருகிறது. அங்குள்ள தெருக்கள் மும்மைநூறாயிரமாம். அவற்றின் பரப்பு பன்னிரண்டு யோசனைகளாம்; கம்மியர், தூரியம் இயக்குவார், நகர்காவலர் முதலியோர் அங்கு வாழ்ந்தனர். இவ்விடத்தை வருணிக்கும்போது ஞான சீலரையும் யோகியரையும் கூட்டி உரைத்தலால் அரக்கர்களிற் (பொதுமக்கள்) சிலர், உத்தமர்களாகவும் ஞானிகளாகவும் இருந்தமை புலனாகின்றது.

அப்பால் ஓர் அகழியையும் மதிலையும் கடந்தபின் இராவணன் மாளிகையைக் கண்டான் அநுமன். ஆகவே இலங்கை மூன்று அகழிகளாலும் மும்மதில்களாலும் காக்கப்பெற்றதென்பது தெரிய வரும்.

அவ்விராவணன் இருப்பிடமும் பல வீதிகளைக்கொண்டது; இயக்கியர், அரக்கியர், வித்தியாதரமாதர் ஆகிய இராவணன் உரிமைச் சுற்றத்தார் அவ்வீதிகளில் தத்தமக்குரிய மாளிகைகளில் வாழ்ந்துவந்தனர். இராவணன் பட்டத்தரசியும், மயன்மகளும் இந்திரசித்தின் தாயுமான மண்டோதரியின் மாளிகை பிறமாளிகைகள் எல்லாவற்றிலும் சிறந்திருந்தது. அம்மாளிகைக்கும் அப்பால் நகரின் நடு இடத்தில் விளங்கியது இராவணன் வாழ்ந்த வியன் கோயில்; இதனைப் புட்பக விமானமென்றே வான்மீகம் கூறும். உறங்கிக்கிடந்த இராவணனைக் கம்பர் 12 கவிகளில் வருணிக்கின்றார். அவனுடைய ஒப்புயர்வற்ற வனப்பையும், வீரத்தையும், புகழையும் மகாகவியான கம்பர் எவ்வளவு வியப்புடனும், நடுநிலையுடனும் கூறலாமோ அவ்வளவு அழகாகக் கூறியிருத்தல் பாராட்டத்தக்கது. முத்தேவர்களின் படைகளும் அவனிடம் வலியிழந்தன; தேவர்கள் தோற்றோடினர்; திக்கயங்கள் கோடிழந்தன. அவன் சௌரியம் திருமாலைப் போன்றிருந்தது. உடலின் வனப்போ உலகத்தையே தன்பால் இழுக்கத்தக்கபடி யிருந்தது. இத்தகைய சிறப்புக்களையும் பிற பெருமைகளையும் கூறும் புலவர், அவன் காமத்தால்

வலியிழந்து பரிதவித்துக் கொண்டிருந்த நிலையை வருணித்தது மிகுந்த வியப்பைத் தருவதொன்றே. வன்மை மென்மை என்ற இரண்டும் நேருக்கு நேர் எதிரான பண்புகள் ; அவற்றைக் காதலும் இரக்கமும் ஆகிய இருசுவைகளோடு கூட்டி அமைத்த ஆசிரியர் திறமையை நாம் பாராட்டாமலிருக்கமுடியாது.

இவ்வாறு அநுமன் மாலைக்காலம் முதல் நள்ளிரவு வரையில் பிராட்டியைத் தேடிக்கொண்டு எழுநூறு யோசனை அலைந்து அல்லலுற்றதை ஆசிரியர் 234 செய்யுட்களில் அமைக்கின்றார். கடல் கடந்து பவழமலையில் வந்திறங்கின பெருமிதத்துடன் தொடங்கிய கதை, அநுமன் மனச்சோர்வுடன் நின்றதன்மையோடு முடிகின்றது. தன் உயிரை மாய்த்துக்கொள்வதென அவன் திட்டமிட்டனன். அச்சமயம் இராமபிரான் கொடுத்த கணையாழியை அவன் காண நேர்ந்ததென்றும், அப்பொழுது அசோகவனம் அவன் கண்ணிற் பட்டதென்றும் வான்மீகம் கூறும். கம்பரோ அவ்வாறு சொல்லாமல் தன் "உள்ளுறையும் அழகனைப்போல் எம்மருங்கும் உலாவினான்......கள்ளுறையு மலர்ச்சோலை அயலொன்று கண்ணுற்றான்" என முடிக்கின்றார். இராமபத்தியே அநுமனுக்கு மேற்காரியத்தை நடத்திச்செல்ல உதவியாயிற்று என்பதைக் கூறாமல் கூறியது போல் இச்செய்தி அமைகின்றது.

அநுமனுடைய இந்த இராமபத்தியைக் கதை முழுவதிலும் நமக்குப் புலவர் ஆங்காங்குக் காட்டிச் செல்கின்றார். பத்திக்குரிய பொருளும் பத்தி செய்பவரும் ஒரே நிலையை அடைகின்றனர் என்ற மிக நுட்பமான இரகசியத்தைக் கம்பர் பல இடங்களில் அநுமனை இராமனோடு ஒப்பிட்டுக்கூறும் வாயிலாக நமக்குக் காட்டுகின்றார்.

இன்னும் இப்படலத்தால் வெளியாகும் உண்மைகள் மிகப்பல. அநுமனைப்பற்றி அறியவேண்டிய பல உண்மைகளையும் நாம் இப் படலத்தில் காண்கிறோம். அவனுடைய மனவுறுதி, சிறந்த நோக்கம், கூர்த்தமதி, ஆழ்ந்ததிறமை, வினயம், சமயோசிதபுத்தி, அறத்தின்பால் மதிப்பு, இராமபத்தி, பகைவர்பெருமையைக் கண்டு பாராட்டும் பரந்த மனப்பான்மை முதலிய பல அருங்குணங்களை நாம் இங்குக் காண்கிறோம். இவ்வளவு சிறப்புடைய அநுமனும் மண்டோதரியைக் கண்டு இவள் சீதைதானோ என்று ஐயப்பட நேர்ந்தால் அது மண்டோதரியின் சிறப்பையே காட்டும் அல்லவா? இராவணனைக் கண்டபோது அநுமன் அவனைக் கொல்ல எண்ணினான். ஆராய்ந்த பின், அச்செயலினின்று தவிர்ந்தான். உணர்ச்சிமேலோங்குங் காலத்தில் அறிவு மழுங்கும் என்பதற்கும், நிதானித்த கூரிய அறிவால் கோபம் அடங்கி அமைதி நிலவும் என்பதற்கும் இந்நூலிற் காட்டப்படும் பல நிகழ்ச்சிகளுள் இஃது

ஒன்ருகும். இவை யாவற்றிற்கும் மேல் அநுமனது பிரமசரிய உறுதியை நாம் காணும்போது வெற்றிகளுக்கெல்லாம் இராம பத்தியும் பிரமசரியமுமே அவனுக்கு நின்று உதவிசெய்தன என்று கூறத் தோன்றுகிறது.

இப்படலத்தில் அநுமனைப் பெரியதொரு கர்மவீரனுகவும் யோகியாகவும் காண்கிருேம். அவன் கதாநாயகனுன இராமனைத் தன் மனத்திலேயே கொண்டு மகிழும் செய்தியை ஆசிரியர் இப் படலத்தில் பல உவமைகள் வாயிலாகக் கூறுகின்ருர். அதனேடு, இப்படலத்தில் அவன் பிராட்டியை நாடி எல்லா இடங்களையும் துருவி அலைந்து, அவளல்லாப் பிறரை யெல்லாம் புறக்கணித்து அவளையே நாடி அலையும் யோக முயற்சியைக் காண்கிருேமன்ருே ? இன்னும் இப்படலத்தில் கம்பர் ஆளும் வருணனைகள் கதையை யொட்டிச் செல்லுவதும் மிக அருமையாய் அமைந்திருப்பதும் படிப் பதற்குப் பெருவிருந்தாயுள்ளன. மாலையிருள், திங்களின் தோற்றம், நகரின் உறக்க நிலை : இவை மிக மிக ஆழ்ந்த கருத்துக்களுடன் அமைந்த இயற்கை வருணனைகளாம். இலங்கைமாதேவி, கும்ப கருணன், வீடணன், இந்திரசித்து, மண்டோதரி, இராவணன் ஆகியோரின் வருணனைகள் அவரவர்களின் புற இயல்புகளோடு அக இயல்புகளின் வருணனையாகவும், கதையின் செலவுக்கு உபகார மாகும் வண்ணமும் அமைந்திருப்பது மிக வியப்பைத் தருவ தாகும். பாலகாண்டத்தில் வரைக்காட்சிப்படலம், பூக்கொய்படலம், நீர்விளையாட்டுப்படலம் இவைகளில் நகரமாந்தரின் காதற்காட்சி களைக் கூறினமைக்கு ஒப்ப இக்காண்டத்தில் இப்படலத்தில் அரக் கரின் இன்பக் காட்சிகளை அமைத்திருப்பது நோக்கி மகிழத்தக்கது.

இப்படலத்தில் காட்டப்பெற்ற உவமைகள், நிலைமைகளை மட்டும் விளக்க வந்தனவாயிராமல் ஆழ்ந்த கருத்துக்களுடன் நிலையான உண்மைகளை உரைப்பனவாகவும் உள்ளன. வான்மீகத்திலும் இந் நூலிலும் வரலாற்றுப்பொருள் ஒன்றேயாயினும் ஆசிரியரிருவரும் கூறும் முறைகளும் பொருள்களும் பல இடங்களில் மாறி ஒன்றுக் கொன்று விளக்கங்களாக இருப்பன காண்கிருேம்.

---

## 2. ஊர்தேடு படலம்

### இலங்கைநகர மாடவருணனை 96—103

**96.** பொன்கொண் டிழைத்தமணி யைக்கொடு பொதிந்த
மின்கொண் டமைத்தவெயி லைக்கொடு சமைத்த
என்கொண் டியற்றியவெ னத்தெரி விலாத
வன்கொண்டல் விட்டுமதி முட்டுவன மாடம்.

பொன்கொண்டு இழைத்த? மணியைக்கொடு பொதிந்த?
மின்கொண்டு அமைத்த? வெயிலைக்கொடு சமைத்த?
என்கொண்டு இயற்றிய? எனத் தெரிவு இலாத,
வன்கொண்டல் விட்டு மதி முட்டுவன மாடம்!

இச்செய்யுள் முதல் 136 முடிய அநுமன் எண்ணியவும் சொல்லியவும். இலங்கை மாடங்கள் மேகமண்டலத்தையும் கடந்து சந்திர மண்டலத்தை அளாவிநின்றன; அவை பொன்னைக் கொண்டு இழைத்தனவோ? மணியைக்கொண்டு பொதிந்தனவோ? மின்னலையே கொண்டு அமைத்தனவோ? அல்லது வெயிலைக்கொண்டே சமைத்தனவோ? என்று ஐயுறுவதன்றி எதைக்கொண்டு இயற்றப்பட்டன என்று தெரிவதற்கரியவாய் ஒளிவீசிக்கொண்டிருந்தன என்றவாறு. 'கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே, எடுப்பதூஉம் எல்லாம் (வல்லது) மழை'யாதலால், 'வன் கொண்டல்' என்றார். (1)

**97.** நாகால யங்களொடு நாகருல குந்தம்
பாகார் மருங்குமில வென்னவுயர் பண்ப
ஆகாய மஞ்சவகன் மேருவை யனுக்கும்
மாகால் வழங்குசிறு தென்றலென நின்ற.

நாக ஆலயங்களொடு நாகர் உலகும், தம்
பாகு ஆர் மருங்கும் இல என்ன, உயர் பண்ப!
ஆகாயம் அஞ்ச அகல் மேருவை அனுக்கும்
மா கால், வழங்கு சிறு தென்றல் என நின்ற!

நாகாலயங்களொடு......உயர்பண்ப - (போகமும் புகமும் வாய்ந்தனவான) நாகர்கள் வாழும் இடங்களையுடைய கீழுலகும், தேவர்கள் வாழும் மேலுலகும் இவ்விலங்காநகர மாளிகைகளின்

ஒரு பகுதிக்கும் ஒப்பாகும் தகுதியில என்னும்படி உயர்ந்த இயல் புடையன என்றவாறு. 'நாகநீண்கரொடு நாகநாடதனொடு, போகநீள் புகழ்மன்னும் புகார் நகர்' (சிலப். மங்கல. 21-22) என்ற இளங்கோவடிகள் கூற்றும் அதற்கெழுந்த உரைகளும் இங்கு நோக்கத்தகும். ஆகாயம் அஞ்ச அகல் மேரு - ஆகாயமும் அஞ்சும் படியாக அகன்றுயர்ந்த மேருமலை. மேருவை அனுக்கும் மாகால் - மேருவை வருத்தி நிலைகலங்கச்செய்கின்ற ஊழிக்காற்று. அவ் ஊழிக்காற்றினாலும் நிலைகலங்காது அக்காற்றும் சிறு தென்றலென உலவும்படி அம்மாடங்கள் நிலைத்துநின்றன என்க. (2)

98. மாகாரின் மின்கொடி மடக்கின ரடுக்கி
மீகார மெங்கணு நறுந்துகள் விளக்கி
ஆகாய கங்கையினை யங்கையினி னள்ளிப்
பாகாய செஞ்சொலவர் வீசுபட காரம்.

மாகாரின் மின்கொடி மடக்கினர் அடுக்கி,
மீகாரம் எங்கணும் நறும் துகள் விளக்கி,
ஆகாய கங்கையினை அங்கையினின் அள்ளிப்
பாகு ஆய செஞ்சொலவர் வீசு படு அகாரம்!

மீகாரம் - மேல் மாடம். பாகாய செஞ்சொலவர் - வெல்லப்பாகு போன்ற இனிய சொல்லையுடைய மகளிர். வீசு படு அகாரம் – தெளித்தலைப் பொருந்திய மாளிகைகள். அடுக்கி விளக்கி வீசுபடு அகாரம் நின்ற என முன்பாட்டில்வந்த வினைகொடுத்து முடிக்க. (3)

99. பஞ்சி யூட்டிய பரட்டிசை
☆ கிண்கிணிப் பதுமச்
செஞ்செ விச்செழும் பவளத்தின்
கொழுஞ்சுடர் சிதறி
மஞ்சி னஞ்சன நிறமறைத்
தரக்கியர் வடித்த
அஞ்சி லோதியோ டுவமைய
வாக்குற வமைவ.

பஞ்சி ஊட்டிய பரட்டு இசை கிண்கிணிப் பதுமச்
செம் செவிச் செழும் பவளத்தின் கொழுஞ்சுடர் சிதறி,

மஞ்சின் அஞ்சன நிறம் மறைத்து அரக்கியர் வடித்த
அம் சில் ஓதியோடு உவமைய ஆக்குற அமைவ !

பஞ்சி - செம்பஞ்சுக்குழம்பு. பரடு - கரண்டைக்கால். பாட்டிசைக் கிண்கிணி, பாடமை கிண்கிணி என்ற பாடங்களினும்' பரட்டிசை கிண்கிணி என்ற பாடம் சிறப்புடைத்து. "புடைச்சிறு பரடு புல்லிக் கிண்கிணி சிலம்பொ டார்ப்ப" (சிந்தாமணி-2445.) என்பதும் காணத்தகும். பரட்டிசை கிண்கிணிப் பதுமச் செஞ்செவிச் செழும் பவளத்தின் - கரண்டையில் பொருந்திய கிண்கிணிகளையுடைய தாமரை போன்ற அடிகளின் நல்ல அழகையுடைய செழுமையான பவளம்போலும் விரல்களினுடைய; செவ்வி செவியென்றுனது விகாரம். மஞ்சின் அஞ்சன நிறம் - மேகத்தின் கரிய நிறம். வடித்த அம் சில் ஓதி - வாரி முடித்து அலங்கரிக்கப்பட்ட அழகிய பொன் வட்டத் தகடு அணிந்த கூந்தல். மாடங்கள் (தம்மிடைப் பயிலும்) மகளிர் கால்விரல்களாகிய பவளத்தின் செவ்வொளியை வீசி மஞ்சின் அஞ்சன நிறம் மறைத்து, (அம் மஞ்சினை) அரக்கியருடைய (சிவந்த) ஓதியோடு ஒப்பாகும்படி செய்யும் அமைதியையுடையன என்க. (4)

**100.** நான நாண்மலர்க் கற்பக நறுவிரை நான்ற
பானம் வாயுற வெறுத்ததா ளாறுடைப் பறவை
தேன வாம்விரைச் செழுங்கழு நீர்த்துயில் செய்ய
வான யாறுதம் மரமியத் தலந்தொறு மடுப்ப.

நான நாள் மலர்க் கற்பக நறுவிரை நான்ற
பானம் வாய் உற வெறுத்த தாள் ஆறு உடைப் பறவை,
தேன் அவாம் விரைச் செழுங் கழுநீர்த் துயில் செய்ய,
வான யாறு தம் அரமியத்தலம் தொறும் மடுப்ப !

நான நாண்மலர்க் கற்பகம் - நறுமணமுடைய அப்பொழுது அலர்ந்த பூக்களோடு கூடிய கற்பகத்தின்கண். நறுவிரை நான்ற பானம் - நல்ல வாசனையோடு பெருக்கெடுத்த தேன். வாயுற வெறுத்த - வாயின்கண் பொருந்த (மிகுதியாகக் குடித்துத்) தெவிட்டிய. ஆறு தாளுடைப் பறவை - ஆறு கால்களையுடைய (ஆண்) வண்டுகள். தேன் அவாம் - பெண் வண்டுகள் விரும்பி உறைகின்ற. விரைச் செழுங்கழுநீர் – மணமுள்ள செங்கழுநீர்ப் பூவின்கண். வானயாறு - ஆகாய கங்கை. அரமியத் தலம் - நிலா முற்றம். மடுப்ப - பாய்வனவாயுள்ளன. மாடங்கள் தம் நிலா முற்றத்துச் செங்கழுநீரோடைகளில் வானயாறு பாயப் பெற்றன

என்க. இனி, கற்பக நான நாண்மலர் நான்ற நறுவிரை(யாகிய) பானம் எனக்கொண்டு, விரை என்பதற்குப் பூந்தேன் என்று உரைப் பாருமுளர். விரை – பூந்தேன் (சிந்தாமணி-1467). (5)

**101.** குழலும் வீணையும் யாழுமென்
　　றினையன குழைய
மழலை மென்மொழி கிளிக்கிருந்
　　தளிக்கின்ற மகளிர்
சுழலும் நன்னெடுந் தடமணிச்
　　சுவர்தொறுந் துவன்றும்
நிழலுந் தம்மையும் வேற்றுமை
　　தெரிவரு நிலைய.

குழலும், வீணையும், யாழும் என்று இனையன குழைய, மழலை மென் மொழி கிளிக்கு இருந்து அளிக்கின்ற மகளிர் சுழலும் நல் நெடும் தட மணிச் சுவர்தொறும் துவன்றும் நிழலும், தம்மையும் வேற்றுமை தெரிவரு நிலைய !

குழல் – வேய்ங்குழல். குழைய - மெலிய (தோல்வியுற). நன் னெடுந் தடமணி சுழலும் சுவர் தொறும் - நல்ல மிகப் பெரிய மணிகள் சுழலும் சுவர் தோறும். துவன்றும் நிழலும் - ஒன்று பல வாகத் தோன்றும் நிழல்களையும். தம்மையும் - அம்மகளிரையும். இங்குத் ‘தம்மெயும்’ என்று பாடங் கிடைப்பிற் சிறக்கும். சுவர் தொறும் துவன்றும் (மகளிர்) நிழல் என்க. மாடங்கள் தெரிவரு நிலைய என முடிக்க. (6)

**102.** இனைய மாடங்க ளிந்திரற்
　　கமைவர வெடுத்த
மனையின் மாட்சிய வென்னினச்
　　சொல்லுமா சுண்ணும்
அனைய வாமெனி னரக்கர்தந்
　　திருவுக்கு மளவை
நினைய லாமன்றி யுவகையு
　　மன்னதாய் நிற்கும்.

இனைய மாடங்கள், இந்திரற்கு அமைவர எடுத்த
மனையின் மாட்சிய என்னின்,அச் சொல்லும் மாசு உண்ணும்:
அனையவாம் எனின், அரக்கர்தம் திருவுக்கும் அளவை,
நினையலாம் ? அன்றி உவகையும் அன்னதாய்நிற்கும் !

இனைய மாடங்கள் - (முற் பாடல்களிற் கூறிய) இத்தன்மையன வான (இலங்கையின்) மாளிகைகள். இந்திரற்கு அமைவர எடுத்த மனையின் மாட்சிய என்னின் - இந்திரனுக்குத் தக்கதாகக் கட்டப் பட்ட கோயிலினும் சிறந்த மாண்பினையுடையன என்று சொன்னு லுங் கூட. அச்சொல்லும் மாசுண்ணும் – அவ்விலங்கை மாளிகை களின் பெருமையைப் புலப்படுத்த வெண்ணிப் பேசிய அச்சொற் களும் அம்மாளிகைளின் பெருமையை உள்ளவாறு முழுதும் கூரு தனவாய் (குன்றக் கூறிய) குற்றமுடையனவாகும். அனையவா மெனின் - அம்மாடங்களே அத் தன்மையுடையனவாமெனின். அரக் கர்தம் திருவுக்கும் அளவை நினையலாம் ? - (அம்மாளிகைகளில் வாழும்) அரக்கர்களுடைய செல்வத்திற்கும் ஓர் அளவை மனதால் நினைத்தலும் இயலுமோ? (இயலாது). அன்றி - அல்லாமலும். உவகையும் அன்னதாய்நிற்கும் - (அந்த அரக்கர்களுடைய) மகிழ்ச் சியும் அத்தன்மையுடையதாம். (7)

**103.** மணிக ளெத்துணை பெரியவு
மால்திரு மார்பின்
அணியுங் காசினு மகன்றன
வுளவென லரிதால்
திணியு நன்னகர்த் திருமனை
தெய்வமாத் தச்சன்
துணிவின் வந்தனன் ஞெட்டழ
கிழைத்தவத் தொழில்கள்.

மணிகள் எத்துணை பெரியவும், மால் திரு மார்பின்
அணியும் காசினும் அகன்றன உள எனல் அரிதால் ;
திணியும் நல் நகர்த் திருமனை, தெய்வ மாத் தச்சன்
துணிவின் வந்தனன் தொட்டு அழகு இழைத்த அத் தொழில்கள்!

மால் திரு மார்பின் அணியும் காசு - கவுத்துவமணி. அரிதால் என்பதனுள் ஆல் அசை. தெய்வமாத் தச்சன் - விசுவகருமா என்னும் தேவர்களின் சிற்பி. துணிவின் வந்தனன் - (மிகச் சிறந்த

தொரு நகரத்தைச் செய்வேன் என்ற) துணிவோடு வந்து. தொட்டு அழகு இழைத்த மனை, அத்தொழில்கள் திணியும் மனை, நன்னகர்த் திருமனை என்க. மனையினும் அகன்றனவுள வெனல் அரிது, என எடுத்துக்காட்டில் நின்றும் ஏற்புடைய கூட்டி உரை விரிக்க. மணிகளுள் எத்துணை பெரியனவும் கவுத்துமணியினும் மேம்பட்டவை இல்லை; அது போல, இலங்கா நகர மாளிகைகளினும் மேம்பட்ட மாளிகைகள் இல்லை என்றபடி. அதுபோல என்பது வருவித்துரைக்கவேண்டுதலின், இஃது எடுத்துக் காட்டுவமையாகும். (8)

## அரக்கர் பெருமை

**104.** மரம டங்கலுங் கற்பக மனையெலாங் கனகம்
அரம டந்தையர் சிலதிய ரரக்கியர்க் கமரர்
உரம டங்கிவந் துழையரா யுழல்குவ ரொருவர்
தரம டங்குவ தன்றிது தவஞ்செய்த தவமால்.

மரம் அடங்கலும் கற்பகம்: மனை எலாம் கனகம்:
அர மடந்தையர் சிலதியர் அரக்கியர்க்கு; அமரர்
உரம் அடங்கி வந்து உழையராய் உழல்குவர்: ஒருவர்
தரம் அடங்குவது அன்று இது! தவம் செய்த தவமால்!

அடங்கலும் - எல்லாம். கற்பகம் - தேவலோகத்திலுள்ளதும் பொன் மயமானதும் கேட்டதைக் கொடுக்கவல்லதுமாகிய ஒரு மரம். அர மடந்தையர் - தேவமாதர். சிலதியர் குற்றேவல்செய்யும் மகளிர். அரக்கியர்க்கு அரமடந்தையர் சிலதியர் என்க. உரம் அடங்கிவந்து-வலிமை யொடுங்கிவந்து. உழையர் - குற்றேவல்செய்பவர். இது ஒருவர் தரம் அடங்குவது அன்று - மேலே கூறிய இந்தச் செல்வச் சிறப்பு ஒருவர்பால் இயல்பாயமைந்த தகுதியுள் அடங்குவதன்று; தரம் - தகுதி. தவம் செய்த தவம் – இராவணன் தவஞ்செய்து பெற்ற பயன். ஆல் - அசை. (9)

## இராவணன் பெருமை

**105.** தேவ ரென்பவர் யாருமித் திருநகர்க் கிறைவற்
கேவல் செய்பவர் செய்கிலா தவரேவ ரென்னின்
மூவர் தம்முளு மொருவனங் குழையனு முயலும்
தாவின் மாதவ மல்லது பிறிதொன்று தகுமோ.

தேவர் என்பவர் யாரும்,இத் திருநகர்க்கு இறைவற்கு
ஏவல் செய்பவர், செய்கிலாதவர் எவர் ? என்னின்,
மூவர் தம்முளும் ஒருவன் அங்கு உழையனு முயலும் !
தாவில் மாதவம் அல்லது பிறிது ஒன்று தகுமோ ?

இத்திருநர்க்கிறைவற்கு, தேவரென்பவர் யாரும் ஏவல்செய் பவர் என்னின், செய்கிலாதவர் எவர் ? என இயைத்துரைக்க. திரு நகர்க்கு இறைவற்கு - அழகிய இலங்காபுரியின் தலைவனுன இராவ ணனுக்கு. மூவர் தம்முளும் ஒருவன் - மும்மூர்த்திகளுள் ஒருவனுன பிரமன். உழையனு முயலும் - ஏவலனுய்ப் பணிசெய்வான். (அங் ஙனமாயின்) தாவின் மாதவமல்லது பிறிதொன்று தகுமோ - குற்ற மில்லாத சிறந்த தவத்தை யியற்றுவதன்றி வேறொன்றை ஒருவன் செய்வது தக்கதாகுமோ ? (ஆகாது). (10)

படைமிகுதி 106—107

**106.** போரி யன்றன தோற்றவென்
றிகழ்தலிற் புறம்போய்
நேரி யன்றவன் றிசைதொறு
நின்றமா நிற்க
ஆரி யன்றனித் தெய்வமாக்
களிறுமோ ராழிச்
சூரி யன்றனித் தேருமே
இந்நகர்த் தொகாத.

போர் இயன்றன தோற்ற என்று இகழ்தலில், புறம்போய்
நேர் இயன்ற வன் திசைதொறும் நின்ற மா நிற்க,
ஆரியன் தனித் தெய்வ மாக் களிறும், ஓர் ஆழிச்
சூரியன் தனித் தேருமே, இந்நகர்த் தொகாத !

போரியன்றன தோற்ற என்று - போரிலே எதிர்ந்தனவாய்த் தோற்றன என்று. நேரியன்ற வன்திசைதொறும் - நேராகவுள்ள வலிய திசைதோறும். மா - யானை : இங்கே திக்கயங்கள். ஆரியன் தனித் தெய்வ மாக் களிறு - அரிகரபுத்திரரான ஐயனுருடைய ஒப்பற்ற தெய்வத்தன்மைவாய்ந்த வாகனமாகிய யானை. ஓராழி - ஒற்றைச் சக்கரம். தொகாத - வந்து கூடாதவை. எல்லையில்லாது நீண்டுகிடத்தலின் வன்திசை என்ருர். (11)

107. வாழு மன்னுயிர் யாவையு
மொருவழி வாழும்
ஊழி நாயகன் றிருவயி
றெத்துள திவ்வூர்
ஆழி யண்டத்தி னருக்கன்ற
னலங்குதேர்ப் புரவி
ஏழு மல்லன வீண்டுள
குதிரைக ளெல்லாம்.

வாழும் மன் உயிர் யாவையும் ஒருவழி வாழும்
ஊழி நாயகன் திரு வயிறு ஒத்துளது இவ்வூர்!
ஆழி அண்டத்தின், அருக்கன்தன் அலங்கு தேர்ப் புரவி
ஏழும் அல்லன, ஈண்டு உள குதிரைகள் எல்லாம்!

வாழும் மன்னுயிர் யாவையும் - உலகப் பரப்பிடை நிறைந்து வாழ்கின்ற நிலைபெற்ற உயிர்களெல்லாம். ஒருவழி வாழும் ஊழி நாயகன் திருவயிறு - ஊழிக் காலத்திலே ஒரோ விடத்திலே ஒடுங்கி வாழ்கின்ற அழியாத முதல்வனாகிய திருமாலுடைய அழகிய வயிற்றை: வாழ்கின்ற வயிறு என்க. வயிற்றை ஒத்துளதாகிய இவ்வூரின்கண், அருக்கன் தேர்ப்புரவி ஏழுமல்லன (ஆகிய) ஆழி யண்டத்தின் குதிரைகளெல்லாம் ஈண்டு (தல்) உள என்க. ஆழி அண்டம் - வட்டமாகிய உலக கோளம். அருக்கன் - சூரியன். அலங்கு - விளங்குகின்ற; அசைகின்ற எனினும் ஆம். புரவி-குதிரை. ஈண்டுதல் - தொகுதல்: அஃது ஈண்டு என முதனிலைத் தொழிற் பெயராய்நின்றது. அருக்கன் புரவி ஏழு: இதனை ஸப்த (ஏழு) என்ற பெயருள்ள ஒரே குதிரை என்பாரும் உளர். (12)

பலவகையொலி

108. தழங்கு பேரியி னரவமுந்
தகைநெடுங் களிறு
முழங்கு மோதையு மூரிநீர்
முழக்கொடு முழங்கும்
கொழுங்கு ழற்புதுக் குதலையர்
நூபுரக் குரலின்
வழங்கு மேகலைக் கிண்கிணி
வயின்றெறு மறையும்.

தழங்கு பேரியின் அரவமும், தகை நெடும் களிறு
முழங்கும் ஓதையும், மூரிநீர் முழக்கொடு முழங்கும்;
கொழுங் குழல் புதுக் குதலையர் நூபுரக் குரலின்,
வழங்கும் மேகலைக் கிண்கிணி வயின்தொறும் மறையும்!

தழங்கு – ஒலிக்கின்ற. பேரி - முரசு. தகை நெடுங்களிறு - அழகிய பெரிய யானைகள். அரவம், ஓதை, முழக்கு, குரல் என்பன ஒருபொருட் பன்மொழி. மூரிநீர் - பெரிய நீர் : கடல். பேரியும் களிறும் கடலினும் மிக்கொலித்தன, நூபுரம் மேகலைச் சதங்கையினும் மிக்கொலித்தது என்க. கொழுங்குழற் புதுக்குதலையர் - வளவிய குழலிசைபோல் இனிய புதுமையாகிய மழலைச் சொற்களையுடைய மகளிர். நூபுரம் - சிலம்பு. வழங்கு மேகலைக் கிண்கிணி - மேகலையிடத்து அசைகின்ற சதங்கையின் ஒலி. வயின்தொறும் - இடந்தோறும். மறையும் - அடங்கும். (13)

## இலங்கை நகரின் பெருமை 109—113

109. மரக தத்தினு மற்றுள
மணியினும் வனைந்த
குரக தத்தனித் தேரெலா
மிமைப்பில்பல் கோடி
இரவி வெட்கநின் றிமைக்கின்ற
வியற்கைய வென்றால்
நரக மொக்குமா னன்னெடுந்
துறக்க மிந்நகர்க்கு.

மரகதத்தினும், மற்று உள மணியினும், வனைந்த
குரகதத் தனித் தேர் எலாம் இமைப்பு இல் பல் கோடி
இரவி வெட்க நின்று இமைக்கின்ற இயற்கைய என்றால்,
நரகம் ஒக்குமால் நல் நெடும் துறக்கம் இந்நகர்க்கு!

குரகதத் தனித்தேர்-குதிரை பூட்டிய ஒப்பற்ற தேர்கள். இமைப்பில் பல்கோடி இரவி - சுருங்குதலில்லாத (கதிர்களையுடைய) பல கோடி சூரியர்கள். இமைக்கின்ற - ஒளிவிடுகின்ற. நல் நெடுந் துறக்கம் இந்நகர்க்கு நரகம் ஒக்கும் - நல்ல பெரிய சுவர்க்கலோகமும் இவ்விலங்காபுரியோடு ஒப்பிட்டு நோக்குமிடத்து நரகம்போல்வதாம். ஒளியும் இன்பமும் பெருமையும் வாய்ந்தமையின், நன்னெடுந் துறக்கம் என்றார். ஒளியும் இன்பமும் பெருமையும் வாய்ந்த

துறக்கமும் பேரொளியும் மிக்க வின்பமும் மிக்க பெருமையும் வாய்ந்த இலங்கையொடுவைத் தெண்ணுமிடத்து இருள் சேர்ந்த இன்னுவுலகுபோல்வதாம் என்றவாறு. (14)

110. திருகு வெஞ்சினத் தரக்கருங்
கருநிறந் தீர்ந்தார்
அருகு போகின்ற திங்களு
மறுவற்ற தழகைப்
பருகு மிந்நகர்த் துன்னொளி
பரத்தலிற் பசும்பொன்
உருகு கின்றது போன்றுள
துலகுசூ ழுவரி.

திருகு வெம் சினத்து அரக்கரும் கருநிறம் தீர்ந்தார்,
அருகு போகின்ற திங்களும் மறு அற்றது, அழகைப்
பருகும் இந்நகர்த் துன் ஒளி பரத்தலில், பசும்பொன்
உருகுகின்றது போன்று உளது உலகு சூழ் உவரி!

திருகு - மாறுபட்ட. தீர்ந்தார் - நீங்கினர். அற்றது - நீங்கியது. அழகைப் பருகும் இந்நகர் - பார்த்தோர் விரும்பிப் பருகும்படியான அழகையுடைய இவ்விலங்காபுரி. துன்னொளி - நிறைந்த ஒளி. உவரி - கடல். இந்நகரத்தின் ஒளியால் அரக்கர் தம் கருநிறம் தீர்ந்தார், திங்கள் மறுவற்றது, கடல்நீரும் உருகிய பொன்போலத் தோன்றியது என்றவாறு. (15)

111. அண்ட முற்றவும் விழுங்கிரு
ளகற்றுநின் றகல்வான்
கண்ட வத்தனிக் கடிநகர்
நெடுமனை கதிர்கட்
குண்ட வாற்றலென் றுரைப்பரி
தொப்பிடிற் றம்முன்
விண்ட வாய்ச்சிறு மின்மினி
யென்னவும் விளங்கா.

அண்டம் முற்றவும் விழுங்கு இருள் அகற்றும் நின்று, அகல்வான்
கண்ட அத் தனிக் கடிநகர் நெடுமனை ; கதிர்கட்கு
உண்டு அ ஆற்றல் என்று உரைப்பு அரிது ! ஒப்பிடில், தம்முன்
விண்டவாய்ச் சிறு மின்மினி என்னவும் விளங்கா !

நின்று அண்டம் முற்றவும் விழுங்கு இருள் - (பரந்து) நின்று உலகமுழுவதையும் விழுங்கும் இருளை; அகல் வான் கண்ட அத் தனிக் கடிநகர் நெடுமனை – அகன்ற வானளாவ ஓங்கிய அவ்வொப்பற்ற காவல் அமைந்த நகராகிய இலங்கையின்கண்ணுள்ள பெரிய மாளிகைகள்; நெடுமனை இருளகற்றும் என்க. அவ் ஆற்றல் கதிர்கட்கு உண்டு என்று உரைப்பரிது - அவ்வாறு உலகத்து இருள் முழுவதையும் அகற்றும் வலிமை சூரிய சந்திரராகிய கதிர்கட்கு அல்லது ஆதித்தர் பன்னிருவர்க்கும் உண்டு என்று சொல்லமுடியாது ; ஒப்பிடில் – அம்மாளிகைகளோடு அக்கதிர்களை ஒப்பிட்டால்; தம் முன் விண்டவாய் - அம்மாளிகைகளின் முன் நிற்க இயலாது தோற்றனவாய் ; சிறு மின்மினி யென்னவும் விளங்கா - சிறு மின்மினிப் பூச்சியளவுகூட ஒளியுள்ளனவாய்க் காணப்படமாட்டா. இலங்கை நகரத்து மாளிகைகள் அண்டத்து இருளை அகற்றும்; கதிர்கட்கு அவ்வாற்றல் இல்லை; அவை அம்மாளிகைகளின் முன்னே மின்மினி போலவும் விளங்கா என்க. (16)

**112.** தேனுஞ் சாந்தமு மான்மதச்
செறிநறுஞ் சேறும்
வான நாண்மலர் கற்பக
மலர்களும் வயமாத்
தான வாரியு நீரொடு
மடுத்தலிற் றழீஇய
மீனுந் தானுமோர் வெறி மணங்
கமழுமால் வேலை.

தேனும், சாந்தமும், மான்மதச் செறி நறும் சேறும்,
வான நாள் மலர் கற்பக மலர்களும், வய மாத்
தான வாரியும், நீரொடு மடுத்தலில் தழீஇய
மீனும், தானும் ஓர் வெறிமணம் கமழுமால் வேலை !

சாந்தமும் - சந்தனமும். மான்மதச் செறிநறுஞ் சேறும் - கத்தூரியைக் கலந்து செய்த வாசனைக் குழம்பும். வானம் - வாசனையுள்ள.

நாள்மலர் - அன்றலர்ந்த (பலவகை) மலர்களும். வயமா - வலிமை மிகுந்த யானைகளின் ; தானவாரியும் - மதவெள்ளமும். நீரொடு மடுத்தலின் – கடல்நீரிற் பாய்ந்து அதனோடு கலத்தலினால். வேலை தானும் தழீஇய மீனும் ஓர் வெறிமணம் கமழும் - அக்கடல் தானும் தன்னிடத்தில் பொருந்திய மீன்களும் (தமக்கு இயல்பாகவுள்ள புலால் நாற்றம் நீங்கி) ஒப்பற்ற நறுமணம் வீசுவனவாயின. (17)

113. தெய்வத் தச்சனைப் புகழ்துமோ
செங்கண்வா ளரக்கன்
மெய்யொத் தாற்றிய தவத்தையே
வியத்துமோ விரிஞ்சன்
ஐயப் பாடிலா வரத்தையே
மதித்துமோ வறியாத்
தொய்யற் சிந்தையேம் யாவரை
யாதென்று துதிப்பேம்.

தெய்வத்தச்சனைப் புகழ்துமோ ? செங்கண் வாள் அரக்கன்
மெய் ஒத்து ஆற்றிய தவத்தையே வியத்துமோ ? விரிஞ்சன்
ஐயப்பாடு இலா வரத்தையே மதித்துமோ ? அறியாத்
தொய்யல் சிந்தையேம் யாவரை யாது என்று துதிப்பேம் ?

தெய்வத் தச்சன் - தேவர்களின் சிற்பியான விசுவகருமா. செங்கண்வாள் அரக்கன் - கோபத்தாற் சிவந்த கண்களையுடைய கொடிய அரக்கனான இராவணன். மெய்யொத்து - மெய்ம்மை தவறாமல். ஐயப்பாடிலாவரம் - தவறாமல் பலிக்கக்கூடிய வரம். தொய்யற் சிந்தையேம் - சோர்வுபடுகின்ற மனத்தையுடையேமான நாம். இலங்கையின் ஒப்புயர்வற்ற செல்வச்சிறப்பிற்கு அதனை நிருமித்த தேவ சிற்பியும், அச்செல்வத்தை ஈட்டுவதற்கு உள்ளும் புறமும் ஒத்து உண்மையாய் அரிய பெரிய தவத்தைச் செய்த இராவணனும், அதற்கு உவந்து தவறாப் பெருவரங்கள் அளித்த பிரமனும் காரணமாதலின், அவர்கள் மூவரும் பாராட்டுதற்குரியர் என்பதாம். (18)

பொழிற்சிறப்பு

114. வானும் நிலனும் பெறுமாறினி மற்று முண்டோ
★ கானும் பொழிலு மிவைசெங்கன கத்தி னாலும்

ஏனை மணியாலு மியற்றிய வேனும் யாவும்
தேனும் மலருங் கனியுந்தரச் செய்த செய்கை.

வானும் நிலனும் பெறுமாறு இனி மற்றும் உண்டோ?
கானும், பொழிலும், இவை செங் கனகத்தினாலும்
ஏனை மணியாலும் இயற்றியவேனும், யாவும்
தேனும், மலரும் கனியும், தரச் செய்த செய்கை.

பெறும் ஆறு - பெறும்வழி. செங்கனகம் - செம்பொன். பொன்னாலும் மணியாலும் கானும் பொழிலும் செயற்கையாக அமைந்தன. எனினும், இயற்கை மரங்களைப்போன்று, அவை மலரும் கனியும் தேனும் தருவனவாய் அமைந்தன. இவ்வாறு தரச் செய்த செய்கை விண்ணுலகமும் மண்ணுலகமும் இனிப் பெறும்வழி மற்றும் உண்டோ என்க. இக்கவி விற்பூட்டுப் பொருள்கோள். (19)

## கோபுர வருணனை

**115.** நீரும் வையமு நெருப்புமே
 னிமிர்நெடுங் காலும்
மாரி வானமும் வழங்கல
 வாகுந்தம் வளர்ச்சி
ஊரி னிந்நெடுங் கோபுரத்
 துயர்ச்சிகண் டுணர்ந்தால்
மேரு வெங்ஙனம் விளர்க்குமோ
 வுடன்முற்றும் வெள்கி.

நீரும், வையமும், நெருப்பும், மேல் நிமிர் நெடும் காலும்,
மாரி வானமும், வழங்கல வாகும் தம் வளர்ச்சி
ஊரின் இந் நெடும் கோபுரத்து உயர்ச்சி கண்டு உணர்ந்தால்,
மேரு எங்ஙனம் விளர்க்குமோ உடல் முற்றும் வெள்கி?

நீரும்........வானமும் - (உலகம் அழியுங் காலத்து எழுகின்ற) நீர் முதலாகிய ஐந்து பூதங்களும். தம் வளர்ச்சி வழங்கலவாகும் ஊரின் - தத்தமது மிகுதி கொண்டு உள்ளே நுழையமுடியாத இலங்கை நகரின். உணர்ந்தால் - அறிந்தால். வெள்கி - வெட்கப்பட்டு. உடல் முற்றும் எங்ஙனம் விளர்க்குமோ - தனது உடம்பு முழுவதும் எவ்வாறு வெண்ணிற மடையுமோ. (20)

மதில் வருணனை 116—119

**116.** முன்னம் யாவரு மிராவணன்
முனியுமென் றெண்ணிப்
பொன்னின் மாநகர் மீச்செலான்
கதிரெனப் புகல்வார்
கன்னி யாரையி னொளியினிற்
கண்வழுக் குறுதல்
உன்னி நாடொறும் விலங்கினன்
போதலை யுணரார்.

முன்னம் யாவரும், ‘இராவணன் முனியும் என்று எண்ணிப்
பொன்னின் மாநகர் மீச்செலான் கதிர்’ எனப் புகல்வார்;
கன்னி ஆரையின் ஒளியினில் கண் வழுக்குறுதல்
உன்னி, நாள்தொறும் விலங்கினன் போதலை உணரார்!

முன்னம் - முன்பு (நெடுநாளாக). கதிர்-சூரியன். கன்னி ஆரையின் - (இலங்கையின்) அழிவில்லாத மதிலின். கண்வழுக் குறுதல் - கண் கூசுதல். விலங்கினன் போதலை - விலகிச் செல்லுதலை. (21)

**117.** தீய செய்குநர் தேவரா
லனையவர் சேரும்
வாயி லில்லதோர் வரம்பமைக்
குவனென மதியாக்
காய மென்னுமக் கணக்கறு
பதத்தையுங் கடக்க
ஏயு நன்மதி லிட்டனன்
கயிலையன் றெடுத்தான்.

‘தீய செய்குநர் தேவரால், அனையவர் சேரும்
வாயில் இல்லது ஓர் வரம்பு அமைக்குவன்’ என மதியாக்
காயம் என்னும் அக் கணக்கு அறு பதத்தையும் கடக்க
ஏயும் நன்மதில் இட்டனன், கயிலை அன்று எடுத்தான்!

தீய செய்குநர் - (அரக்கருக்குத்) தீங்கு புரிபவர்கள். தேவரால் - தேவர்களே. அனையவர் - அத்தேவர். சேரும் வாயில் இல்லதோர்

வரம்பு அமைக்குவன் என - வந்து அடையும் வழியில்லாதபடி ஓர் எல்லையை அமைப்பேன் என்று. மதியா - எண்ணி. காயம் என்னும் அக் கணக்கறுபதத்தையும் - ஆகாயம் என்னும் அந்த எல்லை யில்லாத இடத்தையும். கயிலையன்றெடுத்தான் என்றது இராவணனை. (22)

118. கறங்கு கால்புகா கதிரவ
 னொளிபுகா மறலி
மறம்பு காதினி வானவர்
 புகாரென்கை வம்பே
திறம்பு காலத்துள் யாவையுஞ்
 சிதையினுஞ் சிதையா
அறம்பு காதிந்த வணிமதிட்
 கிடக்கைநின் றகத்தின்.

கறங்கு கால் புகா, கதிரவன் ஒளி புகா, மறலி
மறம் புகாது, இனி, வானவர் புகார் என்கை வம்பே !
திறம்பு காலத்துள், யாவையும் சிதையினும் சிதையா
அறம் புகாது, இந்த அணி மதில் கிடக்கைநின்று அகத்தின் !

இந்த அணி மதில் கிடக்கை நின்று - இந்த அழகிய மதிலைக் கடந்து; அகத்தின் - இவ்வூரினுள்ளே. கறங்கு கால் - (சூறாவளி, புயல் போன்ற) சுழலும் காற்றுக்கள். கதிரவன் ஒளி - சூரியனுடைய வெம்மைக் கதிர்கள். மறலி மறம் - கூற்றுவனின் கொடுமை. வம்பே - வீணே. திறம்பு காலத்துள் - (உலகம்) நிலைகெட்டு மாறுங் காலத்தில் (அதாவது, சர்வசங்கார காலத்தில்). யாவையும் சிதை யினும் சிதையா அறம் - எல்லாப் பொருள்களும் அழிந்தாலும் தான் மட்டும் அழியாது நிலைத்து நிற்பதாகிய தருமம். அழிவைத் தடுப்பதாகிய அறம் இராவணன் ஆட்சியிற் காணப்படவில்லை யாதலால் இலங்கை அழியும் என்றவாறு. (23)

119. கொண்ட வான்றிரைக் குரைகட
 லிடையதாய்க் குடுமி
எண்ட வாவிசும் பெட்டநின்
 றிமைக்கின்ற வியல்பாற்

பண்ட ராவணைப் பள்ளியா
னுந்தியிற் பயந்த
அண்ட மேயுமொத் திருந்ததிவ்
வணிநக ரமைதி.

கொண்ட வான் திரைக் குரைகடல் இடையதாய்க் குடுமி
எண் தவா விசும்பு எட்ட நின்று இமைக்கின்ற இயல்பால்,
பண்டு அரா அணைப் பள்ளியான் உந்தியில் பயந்த
அண்டமேயும் ஒத்து இருந்தது இவ் அணி நகர் அமைதி!

கொண்ட வான் திரைக் குரைகடல் இடையது ஆய் - தன்னிடத்தே கொண்ட பெரிய அலைகளையுடைய ஒலிக்கின்ற கடலினிடையே யுள்ளதாய். குடுமி -(அரண்மனையின்) விமான சிகரங்கள். எண் தவா விசும்பு எட்ட நின்று இமைக்கின்ற இயல்பால் - எண்ணின் அளவுக்கு அகப்படாத வானத்தை அளாவ உயர்ந்து விளங்குகின்ற தன்மையால். அராவணைப் பள்ளியான் பண்டு உந்தியில் பயந்த அண்டமேயும் ஒத்திருந்தது - பாம்புப் படுக்கையிற் பள்ளி கொண்டவனான திருமால் முற்காலத்தில் திருவுந்தியினின்று தோற்றுவித்த பிரமாண்டத்தையும் ஒத்திருந்தது. இவ் அணி நகர் அமைதி - இந்த அழகிய இலங்கை நகரத்தின் அமைப்பு. இவ் அணிநகரமைதி அண்டமேயும் ஒத்திருந்தது என்க. (24)

## இலங்கைநகர் வாழ்வோர் செயல் 120–135

**120.** பாடு வார்பல ரெண்ணின்மற்
றவரினும் பலரால்
ஆடு வார்கண்மற் றவரினும்
பலருள ரமைதி
கூடு வாரிடை யின்னியங்
கொட்டுவார் முட்டில்
வீடு காண்குறுந் தேவரால்
விழுநடங் காண்பார்.

பாடுவார் பலர், எண் இல் மற்று அவரினும் பலரால்
ஆடுவார்கள், மற்று அவரினும் பலர்உளர் அமைதி
கூடு வாரிடை இன்னியம் கொட்டுவார், முட்டு இல்
வீடு காண்குறும் தேவரால் விழு நடம் காண்பார்!

பாடுவார் பலர் – (அந்த இலங்கை நகருள்) பாடுவோர் அநேகர். எண் இல் அவரினும் பலர் ஆடுவார் - அளவற்றவராகிய அப்பாடுவோரினும் பலர் ஆடுவோராவர். அவரினும் பலர் அமைதிகூடுவாரிடை இன்னியம் கொட்டுவார் உளர் - அவ்வாறு ஆடுவோரினும் பலர் இலக்கண அமைதியுடைய வாரின் தொடர்புள்ள இனிய மத்தளம் கொட்டுவோர் உளர். விழுநடம் காண்பார் - (இவ்வாறு பாடல் ஆடல் மத்தளங்கொட்டலோடு நிகழும்) சிறந்த நாடகத்தைப் பார்ப்போர். முட்டில் வீடு காண்குறும் தேவர் - முட்டுப்பாடில்லாத (எல்லா வளமும் நிரம்பிய) வீட்டுலகத்தை அடைதற்குரிய தேவர் ஆவர். ஆல்: அசை. இதனுல் அரக்கர் புரியும் நாடகத்தின் சிறப்புக் கூறப்பட்டது. (25)

**121.** வான மாதரோ டிகலுவர்
விஞ்சையர் மகளிர்
ஆன மாதரோ டாடுவ
ரியக்கிய ரவரைச்
சோனே வார்குழ லரக்கியர்
தொடர்குவர் தொடர்ந்தால்
ஏனே நாகிய ருநடக்
கிரியையாய்ந் திருப்பார்.

வானமாதரோடு இகலுவர் விஞ்சையர் மகளிர்,
ஆன மாதரோடு ஆடுவர் இயக்கியர், அவரைச்
சோனே வார் குழல் அரக்கியர் தொடர்குவர், தொடர்ந்தால்,
ஏனே நாகியர் அரு நடக் கிரியை ஆய்ந்திருப்பார்!

வானமாதரோடு - தேவமாதர்களுடன். விஞ்சையர் மகளிர் – வித்தியாதர மாதர்கள். இகலுவர் - மாறுபடுவர்: (அதாவது போட்டியிட்டு நடனமாடுவர்). ஆன மாதரோடு - அங்ஙனம் இகலி ஆடும் வித்தியாதர மகளிரோடு. இயக்கியர் ஆடுவர் - இயக்கர் மகளிர் (மாறுபட்டு) ஆடுவர். சோனே வார் குழல் அரக்கியர் - விடாது (தேன்) துளிகளைச் சிந்துகின்ற (பூச்சூடிய) நீண்ட குழலையுடைய அரக்க மாதர். அவரைத் தொடர்குவர் - அவ்வியக்கியரோடு (மாறுபட்டு அவர்களைத்) தொடர்ந்து ஆடுவர். தொடர்ந்தால் - அங்ஙனம் தொடர்ந்து ஆடுமிடத்து. ஏனே நாகியர் - மற்ற நாகர் மகளிர். அருநடக்கிரியை ஆய்ந்திருப்பார் - (தாம் ஆடமாட்டாமல் ஆடுபவர்களின்) அரிய நடனத்தின் நுண்செயல்களைப் பார்த்துக்கொண்டிருப்பார்கள். (26)

### செல்வ வளம்

**122.** இழையு மாடையு மாலையுஞ்
சாந்தமு மேந்தி
உழைய ரென்னநின் றுதவுவ
நிதியங்க ளொருவர்
விழையும் போகமே யிங்கிது
வாய்கொடு விளம்பிற்
குழையு நெஞ்சினல் நினையினு
மாசென்று கொள்ளும்.

இழையும், ஆடையும், மாலையும், சாந்தமும், ஏந்தி
உழையர் என்ன நின்று உதவுவ நிதியங்கள்! ஒருவர்
விழையும் போகமே இங்கு இது? வாய்கொடு விளம்பின்,
குழையும்! நெஞ்சினல் நினையினும் மாசு என்று கொள்ளும்!

நிதியங்கள் – (சங்கம் பதுமம் முதலிய ஒன்பது) நிதியங்களும். இழை - நகைகள். உழையர் - அடுத்துநின்று பணிசெய்வோர். நிதியங்கள் இழையும் ஆடையும் மாலையும் சாந்தமும் ஏந்தி நின்று உழையர் என்ன உதவுவ என்க. இங்கு இது ஒருவர் விழையும் போகமே - இங்குள்ள இந்த இன்பம் ஒருவர் ஆசைப்படத்தக்க இன்பமா? இங்கு இது கொடு விளம்பின் வாய் குழையும் - இங்குள்ள இந்த இன்பத்தைச் சொல்லப்புக்கால் வாய் மெலிவடையும்; இங்கு இது : இடைநிலைவிளக்கு. நெஞ்சினல் நினையினும் மாசு என்று கொள்ளும் - (இதனை) வருணிக்க மனதால் நினைப்பதும் (முழுதும் வருணிக்க இயலாதாகையால்) குற்றமாகக் கொள்ளும். இலங்கையின் இன்பவளம் பேசுதற்கும் நினைத்தற்கும் அடங்காதது என்றபடி. (27)

### நகரமைத்த திறம்

**123.** பொன்னின் மால்வரை மேன்மணி
பொழிந்தன பொருவ
உன்னி நான்முகத் தொருவனின்
றூழ்முறை யுரைப்பப்
பன்னி நாள்பல பணியுழந்
தரிதினிற் படைத்தான்
சொன்ன வானவர் தச்சனு
மிந்நகர் துதிப்பான்.

பொன்னின் மால்வரைமேல் மணி பொழிந்தன பொருவ,
உன்னி, நான்முகத்து ஒருவன் நின்று ஊழ்முறை உரைப்பப்
பன்னி நாள் பல பணி உழந்து, அரிதினில் படைத்தான்,
சொன்ன வானவர் தச்சனும், இந்நகர் துதிப்பான் !

நான்முகத்து ஒருவன் - நான்கு முகங்களையுடைய ஒப்பற்றவனான பிரமன். நின்று - அருகில் நின்று. உன்னி - நினைத்து. ஊழ்முறை உரைப்ப - ஒழுங்காக முறைப்படி சொல்லிவர. பன்னி - ஆராய்ந்து. பலநாள் பணி உழந்து - நெடுங்காலம் வருந்தியுழைத்து. பொன்னின் மால் வரைமேல் - பொன்மயமான பெரிய மேருமலை மேல். மணி பொழிந்தன பொருவ - இரத்தினங்களைச் சொரிந்தது போல. அரிதினின் - அருமையாக. இந்நகர் - இவ்விலங்காபுரியை. துதிப்பான் - பலரும் பாராட்டும் வண்ணம். படைத்தான் சொன்ன வானவர் தச்சன் ஆம் - அமைத்தவன் (சிறந்தவனாகச்) சொல்லப் பட்ட தேவ சிற்பியான விசுவகருமனும். (28)

**124.** மகர வீணையின் மந்தர
கீதத்து மறைந்த
சகர வேலையி னார்கலி
திசைமுகந் தழுவும்
சிகர மாளிகைத் தலந்தொறுந்
தெரிவையர் தீற்றும்
அகரு தூமத்தி னழுந்தின
முகிற்குல மனைத்தும்.

மகர வீணையின் மந்தர கீதத்து மறைந்த
சகர வேலையின் ஆர்கலி ! திசைமுகம் தழுவும்
சிகர மாளிகைத் தலம் தொறும் தெரிவையர் தீற்றும்
அகரு தூமத்தின் அழுந்தின முகிற்குலம் அனைத்தும் !

மகரவீணையின் - மகரமீன் வடிவமாகச் செய்யப்பட்ட வீணையினது; மந்தரகீதத்து-மெலிவுத்தானத்து ஓசையையுடைய பாடலில்: 'மந்தர மத்திம தாரமிவை' (கல்லாடம், 21-50). சகர வேலையின் - சகரர்களால் தோண்டப்பட்ட கடலின். ஆர்கலி - ஓசை. மறைந்தது என்பது மறைந்த என ஈறு கெட்டு நின்றது. திசைமுகம் தழுவும் சிகர மாளிகைத் தலம் தொறும் - திக்குகளின் எல்லைகளைத் தழுவி நிற்கும் சிகரங்களையுடைய மாளிகைகளின் இடந்தோறும்; தெரிவையர் - பெண்கள்; தீற்றும் - (தமது கூந்தல் முதலியவற்றிற்கு)

ஊட்டுகின்ற; அகருதூமத்தின் அகிற்புகையினுள்; முகிற்குலம் அனைத்தும் - மேகக் கூட்டங்களெல்லாம்; அழுந்தின - அடக்குவன வாயின : மறைந்தன என்க. மகரவீணையின் மந்தரகீதத்தில் கடலொலியும், மகளிர் தீற்றும் அகிற்புகையில் முகிற்குலமும் மறைந்தன என்றவாறு. (29)

125. பளிக்கு மாளிகைத் தலந்தொறு
மிடந்தொறும் பசுந்தேன்
துளிக்குங் கற்பகத் தண்ணறுஞ்
சோலைக டோறும்
அளிக்குந் தேறலுண் டாடுநர்
பாடுந ராகிக்
களிக்கின் றலாற் கவல்கின்று
ரொருவரைக் காணேன்.

பளிக்கு மாளிகைத் தலம் தொறும், இடம் தொறும், பசுந்தேன்
துளிக்கும் கற்பகத் தண் நறும் சோலைகள் தோறும்,
அளிக்கும் தேறல் உண்டு, ஆடுநர் பாடுநர் ஆகிக்
களிக்கின்றார் அலால், கவல்கின்றார் ஒருவரைக் காணேன் !

பளிக்கு மாளிகைத் தலந்தொறும் - பளிங்கினாற்செய்த வீடுகளின் இடங்கள்தோறும். பசுந்தேன் துளிக்கும் கற்பகத் தண் நறும் சோலைகள் தோறும் - புதிய தேனைச் சிந்துகின்ற கற்பக மரங்களையுடைய குளிர்ந்த மணம் வீசும் சோலைகள் தோறும். இடம் தொறும் - மற்றும் பலவகையான இடங்கள்தோறும். அளிக்கும் தேறல் - (பணியாளர்களால்) கொடுக்கப்படுகின்ற மதுவினை. கவல்கின்றார் - கவலைப்படுகின்றவர். ஒருவரை - ஒருவரையும். (30)

126. தேறன் மாந்தினர் தேனிசை
மாந்தினர் செவ்வாய்
ஊறன் மாந்தின ரின்னுரை
மாந்தின ரூடற்
கூறன் மாந்தின ரனையவர்த்
தொழுதவர் கோபத்
தாறன் மாந்தின ரரக்கியர்க்
குயிரன்ன வரக்கர்.

தேறல் மாந்தினர், தேன் இசை மாந்தினர், செவ்வாய்
ஊறல் மாந்தினர், இன் உரை மாந்தினர், ஊடல்
கூறல் மாந்தினர், அனையவர்த் தொழுது, அவர் கோபத்து
ஆறல் மாந்தினர், அரக்கியர்க்கு உயிர் அன்ன அரக்கர்!

அரக்கியர்க்கு உயிர் அன்ன அரக்கர் - அரக்க மகளிர்க்கு உயிர் போன்ற (காதலர்களாகிய) அரக்கர். தேறல் மாந்தினர் - (அம் மகளிர் அளிக்கும்) மதுவினை (மகிழ்ந்து) உண்கின்றவர்களும். தேன் இசை மாந்தினர் - (அவர்கள் பாடுகின்ற) தேன்போல் இனிய கீதத்தை (ஆவலோடு) கேட்கின்றவர்களும். செவ்வாய் ஊறல் மாந்தினர் - (அவர்களுடைய) சிவந்த வாயில் ஊறும் நீரினை (விரும்பிப்) பருகுகின்றவர்களும். இன் உரை மாந்தினர் - (அவர் களுடைய) இனிமையான பேச்சை (அன்புடன்) கேட்கின்றவர்களும். ஊடற் கூறல் மாந்தினர் - (அவர்கள்) ஊடலிற்கூறும் கடுஞ்சொற் களையும் (பிரியத்தோடு) கேட்கின்றவர்களும்; அனையவர்த் தொழுது - அங்ஙனம் ஊடிய அம்மகளிரை வணங்கி. அவர் கோபத்து ஆறல் மாந்தினர் - அவர்கள் கோபம் ஆறுதலை (ஆசை யோடு) காண்கிறவர்களும். அரக்கர் தேறல் மாந்தினரும்...... கோபத்து ஆறல் மாந்தினரும் ஆயினர் என முடிக்க. (31)

**127.** எறித்த குங்குமத் திளமுலை
 யெழுதிய தொய்யில்
கறுத்த மேனியிற் பொலிந்தன
 வூடலிற் கனன்று
மறித்த நோக்கியர் மலரடி
 மஞ்சுளப் பஞ்சி
குறித்த கோலங்கள் பொலிந்தில
 வரக்கர்தங் குஞ்சி.

எறித்த குங்குமத்து இளமுலை எழுதிய தொய்யில்
கறுத்த மேனியில் பொலிந்தன! ஊடலில் கனன்று
மறித்த நோக்கியர் மலர் அடி மஞ்சுளப் பஞ்சி
குறித்த கோலங்கள், பொலிந்தில, அரக்கர்தம் குஞ்சி!

இளமுலை எறித்த குங்குமத்து எழுதிய தொய்யில் அரக்கர் தம் கறுத்த மேனியிற் பொலிந்தன - (அரக்கியர்களுடைய) இளமை யான முலையின்கண் செந்நிறவொளி வீசுகின்ற குங்குமக்குழம்பால் எழுதிய வரிக்கோலங்கள், (ஊடலின்பின் நிகழ்ந்த கூடலால்)

அரக்கர்களுடைய கரிய நிறமுள்ள மார்பிலே விளங்குவனவாயின. (ஆனுல்), ஊடலில் கனன்று - ஊடலினிடத்துச் சினந்து. மறித்து நோக்கியர் - மாறவைத்த கண்களையுடைய அரக்கியரின். மலர் அடி மஞ்சுளப் பஞ்சி - மலர்போன்ற அடிகளிலே ஊட்டிய அழகிய செம் பஞ்சுக் குழம்பு. குறித்த கோலங்கள் - (அரக்கியர் உதைத்தலால்) பதிந்த அடையாளங்கள். அரக்கர் தம் குஞ்சி - அரக்கர்களுடைய தலைமயிரின்கண். பொலிந்தில - (அவை செம்பட்டை நிறமுடைமையால்) விளங்காவாயின. (32)

128. விளரிச் சொல்லிய ரோதியால்
வேலையுண் மிடைந்த
பவளக் கோடெனப் பொலிந்தது
படைநெடுங் கண்ணுற்
குவளைக் கோட்டகங் கடுத்தது
குளிர்முகக் குழுவால்
முளரிக் கானமு மொத்தது
முழங்குநீ ரிலங்கை.

விளரிச் சொல்லியர் ஓதியால், வேலையுள் மிடைந்த
பவளக் கோடு எனப் பொலிந்தது ! படைநெடும் கண்ணுல்,
குவளைக் கோட்டகம் கடுத்தது ! குளிர்முகக் குழுவால்,
முளரிக் கானமும் ஒத்தது ! முழங்குநீர் இலங்கை !

முழங்கு நீர் இலங்கை - ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த இலங்கையானது ; விளரிச் சொல்லியர் ஓதியால் - விளரியென்னும் பண்போல் இனிய சொற்களையுடைய அரக்கியர் கூந்தலின் செந்நிறத்தால் ; வேலையுள் மிடைந்த பவளக்கோடு எனப் பொலிந்தது - கடலினுட் செறிந்த பவளமலைபோல விளங்கியது ; படைநெடுங்கண்ணுல் - அவர்களுடைய வாள் போற் கூரிய நீண்ட கண்களால் ; குவளைக் கோட்டகம் கடுத்தது - கருங்குவளை மலர்கள் நிறைந்த நீர்நிலையைப் போன்றது ; குளிர்முகக் குழுவால் - அவர்களுடைய குளிர்ச்சியான முகங்களின் கூட்டத்தால் ; முளரிக்கானமும் ஒத்தது - செந்தாமரைக் காடு போலவும் ஆயிற்று. (33)

129. எழுந்தனர் திரிந்து வைகு
★ மிடத்ததா யின்று காறும்
கிழிந்தில தண்ட மென்னு
மிதனையே கிளப்ப தல்லால்

அழிந்துநின் ருவ தென்னே
　　யலருளோ ளுதி யாக
ஒழிந்தவே றுயிர்க ளெல்லா
　　மரக்கருக் குறையும் போதா.

எழுந்தனர் திரிந்து வைகும் இடத்ததாய், இன்று காறும்
கிழிந்திலது அண்டம், என்னும் இதனையே கிளப்பது அல்லால்,
அழிந்துநின்று ஆவது என்னே ? அலர் உளோன் ஆதி ஆக,
ஒழிந்த வேறு உயிர்கள் எல்லாம், அரக்கருக்கு உறையும் போதா!

அலர் உளோன் ஆதியாக - தாமரையில் உறைபவனுன பிரமன் முதலாக; ஒழிந்த வேறு உயிர்கள் எல்லாம் - மற்றுமுள்ள வெவ் வேறு வகையான உயிர்கள் அனைத்தும்; அரக்கருக்கு உறையும் போதா - அரக்கர்களின் எண்ணிக்கைக்கு உறையிடவும் போத மாட்டா. உறையென்பது ஒவ்வொரு பெருந்தொகைக்கு ஒன்ருக இடும் ஒரு சிறு குறி. அண்டம் - பூமியானது; எழுந்தனர் திரிந்து வைகும் இடத்தது ஆய் - (இவ்வரக்கர் அனைவரும்) மேலெழுந்து நடந்து தங்குவதற்குரிய இடமாய் இருந்தும்; இன்று காறும் கிழிந் திலது - இற்றைநாளளவும் பிளவுபடா திருந்ததே; என்னும் இதனையே கிளப்பது அல்லால் – என்று (இவ்வண்டத்தின்) தாங்கும் ஆற்றலையே வியந்து பாராட்டுதலன்றி; அழிந்து நின்று ஆவது என்னே - (அவர்களின் எண்ணிக்கை இவ்வளவு என்று சொல்ல முடியாமை கருதி) வருந்துவதால் யாது பயன் விளையும்? பயனில்லை என்றபடி. (34)

130. காயத்தாற் பெரியர் வீரங்
　　கணக்கில ருலகங் கல்லும்
ஆயத்தார் வரத்தின் றன்மை
　　யளவற்ரு ரறித றேற்ரு
மாயத்தா ரவர்க்கெங் கேனும்
　　வரம்புமுண் டாமே மற்ருேர்
தேயத்தார் தேயஞ் சேர்ந்தாற்
　　றேர்விலார் செருவிற் சேறல்.

காயத்தால் பெரியர், வீரம் கணக்கு இலர், உலகம் கல்லும்
ஆயத்தார், வரத்தின் தன்மை அளவு அற்ருர், அறிதல் தேற்ரு

மாயத்தார், அவர்க்கு எங்கேனும் வரம்பும் உண்டாமே ? மற்ருேர்
தேயத்தார் தேயம் சேர்ந்தால், தேர்விலார் செருவிற் சேறல் !

காயத்தால் பெரியர் - (அரக்கர்கள்) உடம்பின் அளவினுல் பெருமையுடையவர்கள் ; வீரம் கணக்கு இலர் - வீரத்தன்மையிலும் அளவில்லாதவர்கள் ; உலகம் கல்லும் ஆயத்தார் - (தனித் தனி) பூமியைக் கிளைத்தெடுக்கும் ஆற்றலுடைய கூட்டத்தார் : ஆயம் - கூட்டம் ; வரத்தின் தன்மை அளவு அற்ருர் – வரபலத்தின் சிறப்பிலும் அளவில்லாதவர்கள் ; அறிதல் தேற்ரு மாயத்தார் - (பிறரால்) அறியமுடியாத வஞ்சனையையுடையவர்கள் ; அவர்க்கு எங்கேனும் வரம்பும் உண்டாமே - (இத்தகைய) அரக்கர்களுக்குச் செல்லக்கூடிய இடம் இதுவரைதான் என்று ஓர் எல்லையும் உண்டோ : அரக்கர் செல்லாத உலகம் இல்லை என்றவாறு. மற்ருேர் தேயத்தார் தேயம் சேர்ந்தால் - வேருெரு நாட்டவர் இவ்விலங்கையுட் செல்வதாயிருந்தால் ; செருவிற்சேறல் - போர்புரிந்து உள்ளே புகுதலை ; தேர்விலார் – கொள்ளமாட்டார்கள் : அதாவது, பிறர் இலங்கையுட் புகுவதாயின், நட்புரிமையோடு புகலாமேயன்றி, பகைமையோடு புகுதல் இயலாது என்பது கருத்து. (35)

131. கழலுலாங் காலுங் கால
வேலுலாங் கையுங் காந்தும்
அழலுலாங் கண்ணு மில்லா
வாடவ ரில்லை யன்ஞர்
குழலுலாங் களிவண் டார்க்குங்
குஞ்சியாற் பஞ்சி குன்ரு
மழலையாழ்க் குதலைச் செவ்வாய்
மாதரு மில்லை மாதோ.

கழல் உலாம் காலும், கால வேல் உலாம் கையும், காந்தும்
அழல் உலாம் கண்ணும், இல்லா ஆடவர் இல்லை ! அன்ஞர்
குழல் உலாம் களி வண்டு ஆர்க்கும் குஞ்சியால், பஞ்சி குன்ரு
மழலை யாழ்க் குதலைச் செவ்வாய் மாதரும் இல்லை மாதோ !

கழல் உலாம் கால் - வீரக் கழல் அணிந்த கால். கால வேல் உலாம் கை - கொலைத்தொழிலைச் செய்யும் வேலேந்திய கை. காந்தும் அழல் உலாம் கண் – (சினத்தால்) கொதிக்கும் நெருப்பு வீசுகின்ற கண். கழல் உலாம் கால் இல்லா ஆடவர் இல்லை, கால வேல் உலாம் கை இல்லா ஆடவர் இல்லை, காந்தும் அழல் உலாம் கண் இல்லா ஆடவர் இல்லை என இயைத்துப் பொருள் கொள்க.

இலங்கையில் அரக்கர் யாவரும் கழலணிந்து வேல் பிடித்துச் சிவந்த கண்ணராய்த் திகழ்ந்தனர் என்பது கருத்து. அன்னார் குஞ்சியால் பஞ்சிகுன்ரு மாதரும் இல்லை - அவ்வரக்கர்களுடைய தலைமயிரினால் (தங்கள் பாதங்களில் ஊட்டிய) செம்பஞ்சுக் குழம்பு குலையாத அரக்கிமாரும் (இலங்கையில்) இல்லை : ஊடலின்கண் அரக்கியர் பாதங்களில் அரக்கர் தலைவணங்குவதாலும் அரக்கியர் எற்றுதலாலும் பஞ்சி குன்றியதென்க. குழல் உலாம் களி வண்டு ஆர்க்கும் குஞ்சி - குழலிசையொடு உலாவுகின்ற களிக்கின்ற வண்டுகள் ஆரவாரிக்கும்படியான (பூச்சூடிய) ஆடவரின் தலைமயிர். மழலை யாழ்க் குதலைச் செவ்வாய் மாதர் - இனிய ஒலியையுடைய யாழிசைபோன்று இனிய குதலைச் சொற்களைப் பேசும் சிவந்த வாயினையுடைய பெண்களாகிய அரக்கியர். (36)

132. கள்ளுறக் கனிந்த பங்கி
யரக்கரைக் கடுத்த காதல்
புள்ளுறத் தொடர்வ மேனி
புலாலுறக் கடிது போவ
வெள்ளுறுப் பெயிற்ற செய்ய
தலையன கரிய மெய்ய
உள்ளுறக் களித்த குன்றி
னுயர்ச்சிய வோடை யானை.

கள் உறக் கனிந்த பங்கி அரக்கரைக் கடுத்த! காதல்
புள் உறத் தொடர்வ, மேனி புலால் உறக் கடிது போவ,
வெள் உறுப்பு எயிற்ற, செய்ய தலையன, கரிய மெய்ய,
உள் உறக் களித்த, குன்றின் உயர்ச்சிய, ஓடை யானை!

காதல் புள் உறத் தொடர்வ - ஆசையோடு வண்டுகளினால் மிகுதியாகத் தொடரப்படுபவையும் ; மேனி புலால் உறக் கடிது போவ - உடம்பிற் புலால்நாற்றம் வீசும்படி விரைந்துசெல்பவையும்; வெள் உறுப்பு எயிற்ற - வெள்ளைநிற அவயவமாகிய தந்தங்களை யுடையவையும் ; செய்ய தலையன - செந்நிறமான தலைமயிரையுடையவையும் ; கரிய மெய்ய - கருநிறமான உடம்பை யுடையவையும் ; உள் உறக் களித்த - (மதத்தினால்) மிகுதியாகக் களிப்பை யுடையவையும் ; குன்றின் உயர்ச்சிய - மலை போன்ற உயர்வை யுடையவையுமான ; ஓடையானை - நெற்றிப் பட்டத்தை அணிந்த (இலங்கையிலுள்ள) யானைகள் ; கள் உறக் கனிந்த பங்கி அரக்கரைக் கடுத்த - (சூடிய மலர்களின்) தேன் பெருகுவதால் (செந்நிறம்)

மிக்குத் தோன்றுகின்ற தலைமயிரினையுடைய அரக்கரை ஒத்திருந்தன. யானை அரக்கரைக் கடுத்த எனக் கூட்டுக. புள்ளூறத் தொடர்தல் முதலிய காரணங்களால் யானைகள் அரக்கரை ஒத்திருந்தன என்க. அவை யானைக்கும் அரக்கர்க்கும் பொது. (37)

133. வள்ளிநுண் மருங்கு லென்ன
வானவர் மருளி னுள்ளம்
தள்ளுறப் பாணி தள்ளா
நடம்புரி தடங்கண் மாதர்
வெள்ளிய முறுவ றோன்று
நகையர்தாம் வெள்கு கின்றார்
கள்ளிசை யரக்கர் மாதர்
களித்திடுங் குரவை காண்பார்.

வள்ளிநுண் மருங்குல் என்ன, வானவர் மருளின் உள்ளம்
தள்ளுறப் பாணி தள்ளா நடம் புரி தடம் கண் மாதர்,
வெள்ளிய முறுவல் தோன்றும் நகையர் தாம், வெள்குகின்றார்,
கள் இசை அரக்கர் மாதர் களித்திடும் குரவை காண்பார் !

வானவர் - தேவர்கள் ; வள்ளி நுண் மருங்குல் என்ன - (ஆடுகின்ற தம்முடைய) பூங்கொடிபோன்று நுண்ணிய இடை சோர்வது போல ; மருளின் உள்ளம் தள்ளுற - மயக்கத்தால் மனம் சோரும்படி ; பாணி தள்ளா நடம் புரி தடம் கண் மாதர் - தாளம் வழுவாது ஆடல்வல்ல பெரிய கண்களையுடைய (தேவ) மாதர் ; வெள்ளிய முறுவல் தோன்றும் நகையர் - வெள்ளைநிறப் பற்கள் தோன்றும்படி சிரித்தவர்களாயும் ; வெள்குகின்றார் - கூச்சப்பட்டவர்களாயும் ; கள் இசை அரக்கர் மாதர் களித்திடும் குரவை காண்பார் – மதுவைப் பருகிய அரக்கியர் அக்களிப்பினால் ஆடுகின்ற குரவைக்கூத்தைக் காண்பார்கள். (கள்வெறியால் மயங்கிய அரக்கியர் ஆடிய குரவைக்கூத்து அலங்கோலமாயிருத்தல் நோக்கி ஆடலில் வல்ல அமரமாதர் வெட்கங்கொண்டு நகைத்தனர் என்க.) (38)

134. ஒறுத்தலோ நிற்க மற்றோ
ருயர்படைக் கொருங்கிவ் வூர்வந்
திறுத்தலு மெளிதா மற்றும்
யாவர்க்கு மியக்க முண்டே

கறுத்தவா ளரக்கி மாரு
மரக்கருங் களித்து வீசி
வெறுத்தபூண் வெறுக்கை யாலே
தூருமிவ் வீதி யெல்லாம்.

ஒறுத்தலோ நிற்க, மற்ருேர்
உயர்படைக்கு ஒருங்கு இவ்வூர் வந்து
இறுத்தலும் எளிதாம்? மற்றும்,
யாவர்க்கும் இயக்கம் உண்டே?
கறுத்த வாள் அரக்கிமாரும்,
அரக்கரும், களித்து வீசி
வெறுத்த பூண் வெறுக்கையாலே
தூரும் இவ் வீதியெல்லாம்!

மற்ருேர் உயர் படைக்கு - பிறருடைய உயர்ந்த படைக்கு; ஒறுத்தலோ நிற்க-(இந்நகரத்தை) அழித்தல் இருக்கட்டும்; ஒருங்கு இவ் ஊர் வந்து இறுத்தலும் எளிதாம் - ஒருசேர இவ்விலங்காபுரியின் புறத்தே வந்து தங்கத்தான் முடியுமா? மற்றும் - மேலும்; யாவர்க்கும் இயக்கம் உண்டே - எல்லா வீரர்களும் உள்ளே செல்லத்தான் முடியுமா? (முடியாது என்றபடி). வாள் - கொடுமை; களித்து வீசி வெறுத்த பூண் வெறுக்கையாலே - கள்ளைக் குடித்த களிப்பினுலே வேண்டாமென்று வீசிக் களைந்த அணிகலன்களின் மிகுதியாலே; இவ்வீதியெல்லாம் தூரும் - இந்நகரத்துத் தெருக்களெல்லாம் வழிதூர்ந்து கிடக்கின்றன. (39)

135. வடங்களுங் குழையும் பூணு
மாலையுஞ் சாந்தும் யானைக்
கடங்களுங் கலின மாவி
லாழியுங் கணக்கி லாத
இடங்களி னிடங்க டோறும்
யாருெடு மடுத்த வெல்லாம்
அடங்கிய தென்னி னென்னே
யாழியி னுழ்ந்த துண்டோ.

வடங்களும், குழையும், பூணும்,
மாலையும், சாந்தும், யானைக்
கடங்களும், கலினமா
விலாழியும், கணக்கு இலாத

இடங்களின் இடங்கள் தோறும்,
யாறொடும் அடுத்த எல்லாம்,
அடங்கியது என்னின், என்னே,
ஆழியின் ஆழ்ந்தது உண்டோ?

வடம் - ஆரம். சாந்து - (அரக்கரும் அரக்கியரும் உடம்பில் அணிந்த) சந்தனக் குழம்பு. கடம் - மதநீர். கலினமா விலாழி - கடிவாளம் பூண்ட குதிரைகளின் வாய்நுரை. இடங்களின் இடங்கள் தோறும் - இடங்கள் தோறும் இடங்கள் தோறும்; இன், சாரியை. கணக்கு இலாத - கணக்கிலாதனவாய். யாறொடும் - ஆறுகளோடும். அடுத்த எல்லாம் - வந்து சேர்ந்தனவெல்லாம்; அடங்கியது என்னில் - (தன்னிடத்தே) அடங்கப் பெற்றது என்றால்; ஆழியின் ஆழ்ந்தது உண்டோ - கடல்போல ஆழமான இடம் (வேறு) உண்டோ?; என்னே - இது என்ன ஆச்சரியம்! (40)

படைப் பெருமை

**136.** விற்படை பெரிதென் கேனோ
வேற்படை மிகுமென் கேனோ
மற்படை யுடைத்தென் கேனோ
வாட்படை வலிதென் கேனோ
கற்பணந் தண்டு பிண்டி
பாலமென் றினைய காந்து
நற்படை பெரிதென் கேனோ
நாயகற் குரைக்கு நாளில்.

விற்படை பெரிது என்கேனோ?
வேல் படை மிகும் என்கேனோ?
மற்படை உடைத்து என்கேனோ?
வாட்படை வலிது என்கேனோ?
கற்பணம், தண்டு, பிண்டிபாலம்
என்று இனைய, காந்தும்
நற்படை பெரிது என்கேனோ?
நாயகற்கு உரைக்கும் நாளில்.

நாயகற்கு உரைக்கும் நாளில் - இறைவனான இராமபிரானிடம் நான் சென்று கூறும்பொழுது. விற்படை - வில்லேந்திய வீரர் படை. மற்படை - மல்லர்களின் படை. கற்பணம் - கப்பணம்;

யானைநெருஞ்சி முட்போல இரும்பினாற் செய்த ஒருவகைப் படை (சீவகசிந் - 285; மதுரைக் காஞ்சி - 597 - உரை). பிண்டிபாலம் - எறிபடை வகை (சீவகசிந் - 2269). காந்தும் நற்படை - விளங்கப் பெற்ற சிறந்த சேனை. (41)

## சூரியன் மேலைக்கடலில் மறைதல்

**137.** என்றன னிலங்கை நோக்கி
யினையன பலவு மெண்ணி
நின்றன னரக்கர் வந்து
நேரினு நேர்வ ரென்னாத்
தன்றகை யனைய மேனி
சுருக்கியச் சரளச் சாரற்
குன்றிடை யிருந்தான் வெய்யோன்
குடகடற் குளிப்ப தானான்.

என்றனன், இலங்கை நோக்கி, இனையன பலவும் எண்ணி,
நின்றனன், அரக்கர் வந்து நேரினும் நேர்வர் என்னாத்
தன் தகை அனைய மேனி சுருக்கி, அச் சரளச் சாரல்
குன்றிடை இருந்தான்; வெய்யோன் குடகடல் குளிப்ப தானான்.

என்றனன் - (முன்னுள்ள பாடல்களிற் கண்டவாறு அநுமன்) கூறினானாய்; இலங்கை நோக்கி இனையன பலவும் எண்ணி நின்றனன் - இலங்கையைப் பார்த்து இன்னோரன்ன பலவும் எண்ணிய படியே நின்று கொண்டிருந்தவன். நேரினும் நேர்வர் - எதிர்ப் படினும் படுவர். தன் தகை அனைய - தன் தன்மையைப் போன்ற (அளவிடற்கரிய பெருமையையுடைய); மேனி சுருக்கி - உடம்பினைச் சிறிதாகச் சுருக்கிக்கொண்டு. அச் சரளச் சாரல் குன்றிடை - தேவதாரு மரங்களடர்ந்த பக்கங்களையுடைய அந்தப் பவளமால் வரையின்கண். வெய்யோன் குடகடல் குளிப்பதானான் - சூரியன் மேலைக்கடலில் மறைந்தான். (42)

## இருள் பரவுதல் 138-141

**138.** ஏய்வினை யிறுதியில் செல்வ மெய்தினான்
★ ஆய்வினை மனத்திலா னறிஞர் சொற்கொளான்
வீவினை நினைக்கிலா னொருவன் மெய்யிலான்
தீவினை யெனவிருள் செறிந்த தெங்குமே.

ஏய் வினை இறுதியில், செல்வம் எய்தினன்,
ஆய்வினை மனத்து இலான், அறிஞர் சொல் கொளான்,
வீவினை நினைக்கிலான், ஒருவன் மெய் இலான்,
தீவினை என, இருள் செறிந்தது எங்குமே!

ஏய்வினை - தன் மனம்போனபடி செய்த (கொடுஞ்) செயலால்; இறுதியில் செல்வம் எய்தினன் – எல்லையில்லாத செல்வத்தையடைந்தவனும்; ஆய்வினை மனத்து இலான் - (நல்லது கெட்டது என்று) ஆராய்ந்தறியும் வினைத்திட்பம் மனத்தில் இல்லாதவனும். வீவினை – அழிவை. மெய் இலான் ஒருவன் - மெய்யொழுக்கமில்லாதவனுமாகிய ஒருவனுடைய; தீவினை என - பாவம் செறிந்தாற்போல. தீவினை கருநிறமுடையது எனக் கூறுதல் மரபாதலால், அஃது இங்கு இருளுக்கு உவமையாயிற்று. (43)

**139.** கரித்தமூன் றெயிலுடைக் கணிச்சி வானவன்
எரித்தலை யந்தண ரிழைத்த யானையை
உரித்தபே ருரிவையா லுலகுக் கோருறை
புரித்தன ஞன்முக னென்னும் பொற்பதே.

கரித்த மூன்று எயில் உடைக் கணிச்சி வானவன்,
எரித்தலை அந்தணர் இழைத்த யானையை
உரித்த பேர் உரிவையால், உலகுக்கு, ஓர் உறை
புரித்தனன் நான்முகன், என்னும் பொற்பதே!

கரித்த மூன்று எயில் உடைக் கணிச்சி வானவன் - முப்புரங்களை எரித்தவனும், மழுவை ஏந்தியவனுமான சிவபிரான்; அந்தணர் எரித்தலை இழைத்த யானையை - (தாருகவனத்து) இருடியர் வேள்வித் தீயிடம் உண்டாக்கி அனுப்பிய யானையை; உரித்த பேர் உரிவையால் - உரித்தெடுத்த பெரிய தோலைக் கொண்டு; நான் முகன் உலகுக்கு ஓர் உறை புரித்தனன் என்னும் பொற்பது - பிரமன் இவ்வுலக முழுவதுக்கும் ஓர் உறையைச் செய்து போர்த்தனன் என்னும்படி (இருள் எங்கும்) மிகுந்து விளங்கியது. முன் 78-ஆம் செய்யுள் இங்கே நினைவுகூரத்தக்கது. (44)

**140.** அணங்கரா வரசர்கோ னளவி லாண்டெலாம்
பணங்கிளர் தலைதொறு முயிர்த்த பாய்விடம்
உணங்கலி லுலகெலா முறையி னுண்டுவந்
திணங்கெரி புகையொடு மெழுந்த தென்னவே.

அணங்கு அரா அரசர்கோன், அளவில் ஆண்டெலாம்,
பணம் கிளர் தலைதொறும் உயிர்த்த பாய் விடம்,
உணங்கல் இல் உலகெலாம் முறையின் உண்டுவந்து,
இணங்கு எரி புகையொடும், எழுந்தது, என்னவே!

அணங்கு அரா அரசர்கோன் - வருத்தத்தைச் செய்கின்ற பாம்பினங்களின் பேரரசனான ஆதிசேடன். பணம் கிளர் தலை தொறும் உயிர்த்த பாய் விடம் - படம் விளங்குகின்ற ஆயிரம் தலை களினின்றும் சொரிந்த பரவுந்தன்மையுள்ள நஞ்சானது. உணங்கல் இல் - கெடுதலில்லாத. இணங்கு எரி புகையொடும் - (அந்த நஞ்சு தன்னோடு) இயைபுடைய நெருப்புடனும் புகை யுடனும். எழுந்ததென்ன இருள் செறிந்தது என்க. (45)

141. வண்மைநீங் காநெடு மரபின் வந்தவப்
பெண்மைநீங் காதகற் புடைய பேதையைத்
திண்மைநீங் காதவன் சிறைவைத் தானென
வெண்மைநீங் கியபுகழ் விரிந்த தென்னவே.

வண்மை நீங்கா நெடு மரபின் வந்த அப்
பெண்மை நீங்காத கற்புடைய பேதையைத்
திண்மை நீங்காதவன் சிறைவைத்தான் என,
வெண்மை நீங்கிய புகழ் விரிந்தது என்னவே!

நீங்கா வண்மை நெடுமரபின் வந்த - நீங்காத கொடையை யுடைய நெடிய மரபிலே தோன்றிய; பெண்மை நீங்காத கற்புடைய அப்பேதையை - மகளிர்க்குரிய நற்குணங்களை விட்டுப் பிரியாத கற்பிற் சிறந்த பெண்ணாகிய அந்தச் சீதையை; திண்மை நீங்காதவன் - வலிமை நீங்காதவனான இராவணன்; சிறைவைத் தான் என - சிறைவைக்க; வெண்மை நீங்கிய புகழ் - வெண்ணிற மில்லாத புகழ்: (அஃதாவது கருநிறமுள்ள பழி); விரிந்தது என்ன- உலக முழுவதும் பரந்தது என்னும்படி. இராவணன் பழியைப் போல இருள் பரந்தது என்றவாறு. (46)

இருளில் அரக்கர் இயங்குதல் 142–143

142. அவ்வழி யவ்விருள் பரந்த வாயிடை
எவ்வழி மருங்கினு மரக்க ரெய்தினர்

தெவ்வழி யந்தரத் திசைய ராகையால்
வெவ்வழி யிருடர மதித்து மீச்செல்வார்.

அவ்வழி, அவ் இருள் பரந்த ஆயிடை,
எவ்வழி மருங்கினும் அரக்கர் எய்தினர்,
தெவ் அழி அந்தரத் திசையர் ஆகையால்,
வெவ்வழி இருள்தர மதித்து மீச்செல்வார்.

அவ்வழி - அவ்விடத்தில். ஆயிடை - அப்பொழுது. எவ்வழி மருங்கினும்: எம்மருங்கு வழியினும் - எல்லாப்பக்கத்து வழிகளிலும்; அரக்கர் எய்தினர் - அரக்கர்கள் வந்தடைந்தவர்களாய்; தெவ் அழி - பகை நீங்கிய; அந்தரத் திசையர் ஆகையால் - ஆகாய வழியாகச் செல்பவராகையால்; வெவ்வழி இருள் தர: இருள் வெவ் வழி தர - இருள் வெவ்விதாய் வழியவும்; மதித்து மீச்செல்வார் - மதங்கொண்டு மேற் செல்வாராயினர். ('மதித்த களிற்றினன்' - பஞ்ச சேனு - 56) (47)

143. இந்திரன் வளநகர்க் கேகு வாரெழிற்
சந்திர னுலகினைச் சார்கு வார்சலத்
தந்தக னுறையுளை யணுகு வாரயில்
வெந்தொழி லரக்கன தேவன் மேயினர்.

இந்திரன் வள நகர்க்கு ஏகுவார், எழில்
சந்திரன் உலகினைச் சார்குவார், சலத்து
அந்தகன் உறையுளை அணுகுவார், அயில்
வெம் தொழில் அரக்கனது ஏவல் மேயினர்.

அயில் வெம் தொழில் அரக்கனது ஏவல் மேயினர் - வேற்படை கொண்ட கொடுந்தொழிலையுடைய அரக்கனை இராவணனது ஏவலை மேற்கொண்ட அரக்கர். சலத்து அந்தகன் உறையுளை அணுகுவார் - கோபத்தோடு கூற்றுவன் உறையுமிடத்தை நெருங்குவார்கள். அரக்கனது ஏவல் மேயினர், ஏகுவாரும் சார்குவாரும் அணுகுவாருமாயினர் என்க. (48)

தேவமாதர் முதலியோர் பணிநீங்கிச் செல்லுதல்

144. பொன்னகர் மடந்தையர் விஞ்சைப் பூவையர்
பன்னக வனிதைய ரியக்கர் பாவையர்

முன்னின பணிமுறை மாறி முந்துவார்
மின்னின மிடைந்தென விசும்பின் மீச்செல்வார்.

பொன் நகர் மடந்தையர், விஞ்சைப் பூவையர்,
பன்னக வனிதையர், இயக்கர் பாவையர்,
முன்னின பணிமுறை மாறி முந்துவார்,
மின்இனம் மிடைந்தென விசும்பின் மீச்செல்வார்.

பொன் நகர் மடந்தையர் - பொன்மயமான தேவலோகத்து மாதர்களும்; விஞ்சைப் பூவையர் - வித்தியாதரமகளிரும்; பன்னக வனிதையர் - நாககன்னிகைகளும்; இயக்கர் பாவையர் - இயக்கியரும்; முன்னின பணி முறைமாறி - (அரக்கர்கள்) நினைத்த பணிகளை(க் குறிப்பறிந்து) வரையறுத்த காலத்தே செய்து; முந்துவார்- (தம் இருப்பிடங்களுக்கு) விரைவோர்களாய்; மின் இனம் மிடைந்து என - மின்னற் கூட்டம் செறிந்தாற்போல; விசும்பின் மீச் செல்வார் - ஆகாயவழியாய் மேலே செல்வாராயினர்.

இப்பெண்கள் தமக்குரிய வேலையை முடித்து உரிய காலத்தில் முறை மாறினவுடனே தம் உறைவிடம் செல்லலுற்றார் என்க. (49)

### தேவர் முதலியோர் பணிசெய வருதல் 145-146

**145.** தேவரு மவுணருஞ் செங்க ணுகரும்
மேவரு மியக்கரும் விஞ்சை வேந்தரும்
ஏவரும் விசும்பிரு ளிரிய வீண்டினர்
தாவரும் பணிமுறை தழுவுந் தன்மையார்.

தேவரும், அவுணரும், செங்கண் நாகரும்,
மேவரும் இயக்கரும், விஞ்சை வேந்தரும்,
ஏவரும், விசும்பு இருள் இரிய ஈண்டினர்,
தா அரும் பணி முறை தழுவும் தன்மையார்.

அவுணரும் - அசுரர்களும்; செங்கண் நாகரும் - சிவந்த கண்களையுடைய நாகர்களும்; மேவரும் இயக்கரும் - விரும்பத்தக்க (அழகையுடைய) இயக்கர்களும்; விஞ்சை வேந்தரும் - வித்தியாதர அரசர்களும்; ஏவரும் - மற்றுமுள்ளார் யாவரும்; தா அரும் பணி முறை தழுவும் தன்மையார் - தவறுதலில்லாத பணிமுறையை மேற்

கொள்ளும் தன்மையராகி; விசும்பு இருள் இரிய ஈண்டினர் - ஆகாயத்திலே இருள் நீங்கும்படி வந்து கூடினர்கள்.

இவர்கள் முறைப்படி பணி மேற்கொள்ள வந்தோர் என்க. (50)

**146.** சித்திரப் பத்தியிற் றேவர் சென்றனர்
இத்துணை தாழ்த்தன முனியு மென்றுதம்
முத்தினு ரங்களு முடியு மாலையும்
உத்தரீ யங்களுஞ் சரிய வோடுவார்.

சித்திரப் பத்தியில் தேவர் சென்றனர்,
'இத்துணை தாழ்த்தனம், முனியும்!' என்று, தம்
முத்தின் ஆரங்களும், முடியும், மாலையும்,
உத்தரீயங்களும், சரிய ஓடுவார்.

சித்திரம் பத்தியின் - ஓவியத்தெழுதிய உருவங்களின் வரிசை போல (அலங்கரித்துக்கொண்டு); சென்றனர் - (மெல்லச்) சென்ற வர்களான; தேவர் - தேவர்கள்; இத்துணை தாழ்த்தனம் - (பொழுது கழிந்ததை உணர்ந்தவுடன்) இவ்வளவு நேரம் பிந்திவிட்டோமே; முனியும் - (இராவணன்) கோபிப்பான்; என்று - என்று எண்ணி; தம் முத்தின் ஆரங்களும் முடியும் மாலையும் உத்தரீயங்களும் - தாம் அணிந்திருந்த முத்துவடங்களும், பொன்முடிகளும், பூமாலையும், மேலாடைகளும்; சரிய - நிலைகுலையும்படி; ஓடுவார் - ஓடுவாரா யினர். (51)

சந்திரோதய வருணனை 147-149

**147.** தீண்டருந் தீவினை தீக்கத் தீந்துபோய்
மாண்டற வுலர்ந்தது மாரு திப்பெயர்
ஆண்டகை மாரிவந் தளிக்க வாயிடை
ஈண்டற முளைத்தென முளைத்த திந்துவே:

தீண்டரும் தீவினை தீக்கத் தீந்துபோய்
மாண்டு அற உலர்ந்தது, மாருதிப் பெயர்
ஆண் தகை மாரி வந்து அளிக்க, ஆயிடை,
ஈண்டு அறம் முளைத்தென, முளைத்தது இந்துவே!

தீண்ட அரு - அணுகத்தகாத; தீவினை - (இராவணன் முதலிய அரக்கர்கள் இயற்றிய) பாவச் செயல்களாகிய கோடை; தீக்கத் தீந்து போய் - சுடுதலால் கரிந்துபோய்; மாண்டு – வலிகுன்றி; அற உலர்ந்தது - முழுதும் காய்ந்து கிடந்த; ஈண்டு - நிறைந்த; அறம் - தருமமாகிய முளை; மாருதிப்பெயர் ஆண்டகை மாரி - (மாருதத்தின் மகனுதலால்) மாருதி யென்னும் பெயர்கொண்ட வீரனுகிய மழை; வந்து அளிக்க - வந்து உதவுதலினுல்; ஆயிடை - அப்பொழுது; முளைத்து என முளைத்தது இந்துவே - முளைத்தாற் போல் சந்திரன் தோன்றியது. (52)

148. வந்தன னிராகவன் றூதன் வாழ்ந்தனன்
எந்தையே யிந்திர னுமென் றேமுறும்
அந்தமில் கீழ்த்திசை யளக வாணுதற்
சுந்தரி முகமெனப் பொலிந்து தோன்றிற்றே.

'வந்தனன் இராகவன் தூதன்! வாழ்ந்தனன்
எந்தையே இந்திரனும்!' என்று ஏமுறும்,
அந்தம் இல் கீழ்த்திசை அளக வாள் நுதல்
சுந்தரி முகம் எனப் பொலிந்து தோன்றிற்றே!

இராகவன் தூதன் வந்தனன் - இராமபிரானது தூதனுகிய அநுமன் (இலங்கைக்கு) வந்துவிட்டான்; எந்தை இந்திரன் வாழ்ந்தனன் ஆம் என்று - (ஆதலால் இனி) எமது தலைவனுகிய இந்திரன் வாழ்ந்தவனுவான் என்று நினைத்து; ஏம் உறும் – மகிழ்ச்சியடைகின்ற; அளகம் வாள் நுதல் அந்தம் இல் கீழ்த்திசைச் சுந்தரி முகம் என - கூந்தலையும் ஒளி பொருந்திய நெற்றியையுமுடைய அழிதல் இல்லாத கிழக்குத் திக்காகிய அழகிய பெண்ணினது முகம் (பொலிவுற்று விளங்கினுற்) போல; பொலிந்து தோன்றிற்று - (சந்திரன்) விளங்கிக் காணப்பட்டது. எந்தை இந்திரன் வாழ்ந்தனன் என்று கீழ்த்திசையாகிய சுந்தரி முகம் பொலிவது போலச் சந்திரன் விளங்கிற்று. இந்திரன் கீழ்த்திசைத் தலைவனுதலால் எந்தையெனப்பட்டான். இங்குக கீழ்த்திசை பெண்ணுக உருவகிக்கப்பட்டது. ஒரு பெண்ணின் முகத்திற்குப் பூரண சந்திரனே உவமை கூறப்படுமாதலால், அநுமன் இலங்கையிற் பௌர்ணமியன்று புகுந்தனன் என்று கருதலாம். இதனைப் பின்வரும் பாடல்களும் விளக்கும். (53)

149. கற்றைவெண் கவரிபோற் கடலின் வெண்டிரை
சுற்றுநின் றலமரப் பொலிந்து தோன்றிற்ருல்
இற்றதென் பகையென வெழுந்த விந்திரன்
கொற்றவெண் குடையெனக் குளிர்வெண் டிங்களே.

கற்றை வெண்கவரிபோல், கடலின் வெண்திரை
சுற்றும் நின்று அலமரப் பொலிந்து தோன்றிற்ருல்!
'இற்றது என் பகை' என எழுந்த இந்திரன்
கொற்ற வெண் குடை எனக் குளிர் வெண் திங்களே.

கற்றை வெண்கவரி – திரட்சியான வெண்சாமரங்கள். அலைகள் அசைவன சாமரை அலமரல் போன்றிருந்தன: (தக்க. 284). வெண் கவரி, கடல் அலைக்கும் வெண்கொற்றக்குடை, வெண்டிங்களுக்கும் உவமை. இற்றது என்பகை என எழுந்த - என்பகைவன் ஒழிந் தான் என்ற உறுதியுடன் போருக்கு எழுந்த.

இப்பாடலுள் 'குடை நாட்கோள்' என்னும் புறத்துறை தொனித்து நின்றவாறு காண்க. (54)

## நிலவு பரவுதல் 150-155

150. தெரிந்தொளிர் திங்கள்வெண் குடத்தி ஞற்றிரை
முரிந்துயர் பாற்கடன் முகந்து மூரிவான்
சொரிந்ததே யாமெனத் துள்ளு மீனெடும்
விரிந்தது தண்ணிலா மேலுங் கீழுமே.

தெரிந்து ஒளிர் திங்கள் வெண் குடத்தினுல், திரை
முரிந்து உயர் பாற்கடல் முகந்து, மூரிவான்
சொரிந்ததேயாம் எனத் துள்ளும் மீனெடும்,
விரிந்தது தண்நிலா மேலும் கீழுமே!

மூரிவான் - பெரிய வானமானது; தெரிந்து ஒளிர் திங்கள் வெண் குடத்தினுல் - தோன்றி விளங்குகின்ற சந்திரனுகிய வெண்குடத் தினுல்; திரைமுரிந்து உயர் பால் கடல் முகந்து - அலைகள் சிதறி யெழுகின்ற பாற்கடலிற் பாலை மொண்டெடுத்து; சொரிந்ததே ஆம் என - பொழிந்ததாமென்று சொல்லும்படி; தண் நிலா - குளிர்ச்சி

பொருந்திய நிலவானது; துள்ளும் மீனொடும் - துள்ளுகின்ற மீன்களாகிய உடுக்களுடனே; மேலும் கீழும் விரிந்தது - வானும் நிலனும் எங்கும் பரவி விளங்கிற்று. (55)

151. அருந்தவன் சுரபியே யந்தி வான்மிசை
விரிந்தபே ருதயமா மடிவெண் டிங்களா
வருந்தலில் பசுங்கதிர் வழங்கு தாரையாச்
சொரிந்தபா லொத்தது நிலவின் றோற்றமே.

அரும் தவன் சுரபியே அந்தி வான்மிசை
விரிந்த பேர் உதயமா, மடி வெண திங்களா,
வருந்தல் இல் பசும் கதிர் வழங்கு தாரையாச்
சொரிந்த பால் ஒத்தது நிலவின் தோற்றமே!

அரும் தவன் சுரபியே - அரிய தவத்தைச் செய்துள்ளவனுன வசிட்ட முனிவனது காமதேனுவாகிய பசுவே; அந்திவான்மிசை - மாலைக் காலத்து வானின்கண்; விரிந்த பேர் உதயமா-(கிரணங்கள்) விரிந்த பெரிய சந்திரன் உதிக்கின்ற இடமாகவும்; மடி – (அக்காம தேனுவின்) பாலுள்ள மடி; வெண்திங்களா – வெண்ணிறம் பொருந்திய சந்திரனுகவும்; வருந்தல் இல் பசுங்கதிர்–வருத்தம் நீங்குதற்குக் காரணமான அச் சந்திர கிரணங்கள் : (சோர்வை ஒழிப்பனவான கிரணங்கள் என்றபடி) வழங்குதாரை ஆ - அம்மடியினின்று பொழிகின்ற பாலின் ஒழுக்காகவும்; நிலவின் தோற்றம் - நிலாவினுடைய காட்சியானது; சொரிந்த பால் ஒத்தது - சொரிந்து பரவிய பாலைப் போன்று இருந்தது. இச்செய்யுள், "வால்வெண் ணிலவுல காரச் சுரக்கும்வெண் டிங்களென்னும், பால்விண்சுரவி" (73) என்னும் திருவிருத்தத்தின் விரியாய் அமைந்திருத்தல் நோக்கத்தகும். (56)

## விண்மீன் தோற்றம்

152. எண்ணுடை யநுமன்மே லிழிந்த பூமழை
மண்ணிடை வீழ்கில மறித்தும் போகல
அண்ணல்வா ளரக்கனை யஞ்சி யாய்கதிர்
விண்ணிடைத் தொத்தின போன்ற மீனெலாம்.

எண் உடை அநுமன்மேல் இழிந்த பூமழை.
மண்ணிடை வீழ்கில, மறித்தும் போகல,

அண்ணல் வாள் அரக்கனை அஞ்சி ஆய்கதிர்
விண்ணிடைத் தொத்தின போன்ற மீன் எலாம்!

மீன் எலாம் - உடுக்களெல்லாம். எண் உடை அநுமன் - யாவ ராலும் நன்குமதிக்கத்தக்க பெருமையையுடைய அநுமன்; தான் வந்த பணியிலேயே செல்லும் கருத்தையுடைய அநுமன் எனலுமாம். இழிந்த பூ மழை - (தேவர்களாற் சொரியப்பட்டுச்) சிந்திய பூமழை. அண்ணல் வாள் அரக்கன் – பெருமை பொருந்திய வாளைக்கொண்ட அரக்கனாகிய இராவணன். விண் இடை தொத்தின - வானத்திலே தொத்திக்கொண்டிருந்தன. அநுமன்மேல் விழுந்த பூமழை இராவ ணனுக்கு அஞ்சி மண்ணில் விழாமலும் விண்ணுக்கு மீளாமலும் இடையே தொத்திக்கொண்டிருந்த காட்சிபோல் விண்மீன்கள் விளங்கின என்றவாறு. (57)

**153.** எல்லியி னிமிரிருட் குறையு மிவ்விருள்
கல்லிய நிலவின்வெண் முறியுங் கௌவின
புல்லிய பகையெனப் பொருவ போன்றன
மல்லிகை மலர்தொறும் வதிந்த வண்டெலாம்.

எல்லியின் நிமிர் இருட் குறையும், இவ் இருள்
கல்லிய நிலவின் வெண் முறியும், கௌவின,
புல்லிய பகை எனப் பொருவ போன்றன,
மல்லிகை மலர்தொறும் வதிந்த வண்டு எலாம்!

மல்லிகை மலர் தொறும் - மல்லிகை மலர்கள் தோறும்; வதிந்த– தேனை உண்ணுதற்பொருட்டுத் தங்கிய; வண்டு எலாம் - வண்டுக ளெல்லாம். எல்லியின் நிமிர் இருட் குறையும் – இரவிலே பரவு கின்ற இருளின் துண்டங்களும். இவ் இருள் கல்லிய நிலவின் வெண் முறியும் - இவ்விருளைக் கிளைத்தழிக்கவல்ல வெண்மையான நிலாவின் துண்டுகளும். புல்லிய பகை என - அற்ப குணம் படைத்த பகைவர் களைப் போல; கௌவின - (ஒன்றையொன்று) பற்றியனவாய். பொருவ போன்றன – போர்செய்வனவற்றை ஒத்துள்ளன. வண் டெலாம் பொருவ போன்றன என முடிக்க. (58)

**154.** வீசுறு பசுங்கதிர்க் கற்றை வெண்ணிலா
ஆசுற வெங்கணு நுழைந்த ளாயது
காசுறு கடிமதி லிலங்கை காவலூர்
தூசுறை யிட்டது போன்று தோன்றிற்றால்.

வீசு உறு பசும் கதிர்க் கற்றை வெள் நிலா
ஆசு உற எங்கணும் நுழைந்து அளாயது,
காசு உறு கடி மதில் இலங்கை காவல் ஊர்
தூசு உறை இட்டது போன்று தோன்றிற்றால்!

வீசுறு பசுங்கதிர் - வீசுகின்ற குளிர்ச்சியான கிரணங்களையுடைய சந்திரனது; கற்றை வெண் நிலா - செறிந்த வெண்மையான நிலவு; ஆசு உற எங்கணும் நுழைந்து அளாயது - விரைவாக (இலங்கையின்) எல்லா இடத்திலும் புகுந்து பரந்த தோற்றமானது; காசு உறு கடிமதில் இலங்கை - மணிகள் பதித்த காவலையுடைய மதில் சூழ்ந்த இலங்கை நகர்; காவல் ஊர் தூசு – காவல் மிக்க தூசினாலாகிய; உறை இட்டது போன்று தோன்றிற்று - உறையிடப் பட்டது போன்று தோன்றிற்று. தூசு - ஆடை. ஆல், அசை. (59)

**155.** இகழ்வரும் பெருங்குணத் திராம னெய்ததோர்
பகழியின் செலவென வநுமன் பற்றினல்
அகழ்புகுந் தரண்புகுந் திலங்கை யாங்கவன்
புகழ்புகுந் துலாயதோர் பொலிவும் போன்றதே.

இகழ்வு அரும் பெரும் குணத்து இராமன் எய்தது ஓர்
பகழியின் செலவு என, அநுமன் பற்றினல்,
அகழ் புகுந்து, அரண் புகுந்து, இலங்கை, ஆங்கு அவன்
புகழ் புகுந்து உலாயது ஓர் பொலிவும் போன்றதே!

இகழ்வு அரும் பெருங் குணத்து - இகழ்வில்லாத சிறந்த குணங்களையுடைய; இராமன் எய்தது ஓர் பகழியின் செலவு என அநுமன் பற்றினல் - இராமனல் எய்யப்பட்ட ஓர் அம்பினது விரைவுபோல விரைந்து சென்ற அநுமனுடைய தொடர்பினல்; அவன் புகழ் - அந்த இராமனுடைய புகழ்; அகழ் புகுந்து - அகழியிற் பரவி; அரண் புகுந்து – மதிலிற்பரவி; இலங்கை புகுந்து - இலங்கை நகரினும் பரவி; உலாயது - எங்கும் பரந்து விளங்கியதான; ஓர் பொலிவு - ஓர் அழகையும்; போன்றது - ஒத்தது. அந்நிலவின் தோற்றம், போன்றது என எழுவாய் வருவித்து முடிக்க. ஆங்கு, அசை. (60)

### அநுமன் இலங்கையுள்ளே புக எண்ணுதல்

156. அவ்வழி யநுமனு மணுக லாம்வகை
எவ்வழி யென்பதை யுணர்வி னெண்ணினுன்
செவ்வழி யொதுங்கினன் றேவ ரேத்தப்போய்
வெவ்வழி யரக்கரூர் மேவன் மேயினுன்.

அவ்வழி அநுமனும், அணுகலாம் வகை
எவ்வழி என்பதை உணர்வின் எண்ணினுன்,
செவ்வழி ஒதுங்கினன், தேவர் ஏத்தப்போய்
வெவ்வழி அரக்கர் ஊர் மேவல் மேயினுன்.

செவ்வழி ஒதுங்கினன் - நேரான வழியிலே செல்லுபவனும்; தேவர் ஏத்தப் போய் வெவ்வழி அரக்கர் ஊர் மேவல் மேயினுன் அநுமன் - தேவர்கள் துதிக்கச் சென்று கொடியவழி நடக்கும் அரக்கர்களுடைய ஊரான இலங்கையை அடைய விரும்பியவனும் ஆன அநுமன்; அவ்வழி - அப்பொழுது; அணுகலாம் வகை எவ்வழி என்பதை உணர்வின் எண்ணினுன் - இலங்காபுரியினுள் தான் சென்று சேர்வதற்கு உரிய வழி, எது என்பதைத் தன் அறிவு கொண்டு யோசித்தான். 'தேவர் ஏத்தப்போய்' என்பதோடு, முன் 'விண்ணவர் ஏத்த.........செல்லும் மாருதி' (26) என்பதனையும் நோக்குக. (61)

### அநுமன் இலங்கையின் மதிலை அணுகுதல்

157. ஆழியக ழாகவரு காவமரர் வாழும்
☆ ஏழுலகின் மேலைவெளி காறுமுக டேறிக்
கேழரிய பொன்கொடு சமைந்துகிளர் வெள்ளத்
தூழிதிரி நாளுமுலை யாமதிலை யுற்றுன்.

ஆழி அகழாக, அருகா அமரர் வாழும்
ஏழ் உலகின் மேலை வெளி காறும் முகடு ஏறிக்
கேழ் அரிய பொன்கொடு சமைந்து, கிளர் வெள்ளத்து
ஊழி திரி நாளும் உலையா மதிலை உற்றுன்.

ஆழி அகழ் ஆக - கடலே அகழியாக அமைந்திருக்க; அருகா - கெடாத; அமரர் வாழும் ஏழுலகின் - தேவர்கள் வாழ்கின்ற மேலேழுலகங்களின்; மேலை வெளிகாறும் - உயர் வான வெளியின் எல்லை

யளவும். முகடு - உச்சி. கேழ் அரிய பொன் - ஒளிபொருந்திய அரிய பொன். ஊழி கிளர் வெள்ளத்து திரி நாளும் உலையா மதிலை - ஊழியினிறுதியிற் பொங்கியெழுகின்ற கடற்பெருக்கினல் உலகங்கள் நிலைகுலைகின்ற காலத்திலும் அழியாத மதிலினை. (62)

## மதிலை வியத்தல் 158-159

**158.** கலங்கலில்க டுங்கதிர்கண் மீதுகடி தேகா
அலங்கலயில் வஞ்சகனை யஞ்சியெனி னன்ருல்
இலங்கைமதி லிங்கிதனை யேறலரி தென்றே
விலங்கியகல் கின்றனவி ரைந்தென வியந்தான்.

'கலங்கல் இல் கடும் கதிர்கள் மீது கடிது ஏகா
அலங்கல் அயில் வஞ்சகனை அஞ்சி எனின் அன்ருல்:
இலங்கை மதில் இங்கு இதனை ஏறல் அரிது என்றே
விலங்கி அகல்கின்றன விரைந்து!' என வியந்தான்.

கலங்கல் இல் கடும் கதிர்கள் - நிலைகலங்குதல் இல்லாதனவும் விரைவை யுடையனவுமான கதிர்கள். விலங்கி - விலகி. அலங்கல் அயில் வஞ்சகனை - வெற்றிமாலையை அணிந்தவனும் வேற்படை கொண்டவனும் வஞ்சகனுமான இராவணனை. முன் 116-ஆவது பாடலில் கதிரானது மதிலின் ஒளியினிற் கண்வழுக்குறுதல் உன்னி விலகிச் சென்றதாகக் கூறப்பட்டது: இப்பாடலில் மதிலின் உயர்ச்சி யைக்கண்டு ஏறலரிதென்று விலகியதாகக் கூறப்பட்டது. (63)

**159.** தெவ்வளவி லாதவிடை சேறலரி தம்மா
அவ்வளவ கன்றதர ணண்டமிடை யாக
எவ்வளவி னுண்டுவெளி யீறுமது வென்ன
வெவ்வள வரக்கனை மனக்கொள வியந்தான்.

'தெவ் அளவு இலாத இடை சேறல் அரிது அம்மா!
அவ்வளவு அகன்றது அரண், அண்டம், இடையாக;
எவ்வளவின் உண்டு வெளி, ஈறும் அது!' என்ன
வெவ் வள அரக்கனை மனக்கொள வியந்தான்.

அரண், அண்டம் இடையாக அவ்வளவு அகன்றது; வெளி எவ் வளவின் உண்டு, ஈறும் அது; அளவிலாத தெவ்(வும்) இடைசேறல் அரிது; என்ஞ வெவ் வள அரக்கனே (அநுமன்) மனக்கொள வியந்தான் என்க.

அரண் - கோட்டை. அண்டம் - பூமி. இடைதல் - வருந்துதல். அண்டம் இடையாக - பூமி வருந்தும்படி இடப்பரப்பிற் பெரிய தாகிய பூமியும் இலங்கையின் கோட்டைமதிற்பரப்பைக்கண்டு வருந் தும்படி அவ்வளவு பெரிதாயிருந்தது அரண் என்றபடி. இடைதல் என்பது தல் விகுதி கெட்டுநின்றது. வெளி எவ்வளவின் உண்டு, ஈறும் அது - ஆகாயம் எவ்வளவு உயர்ந்துள்ளதோ அவ்வளவு உயர்வும் இவ்வரணுக்கு உண்டு. அளவு இலாத தெவ்(வும்) இடை சேறல் அரிது - எல்லேயற்ற பகைவர்களும் இவ் அரணினுட் சேர்தல் இயலாது. தெவ்வும் என்பது தெவ் என உம்மை தொக்குநின்றது. அகன்றது என்பது தொடங்கி, அரிது என்பதுவரை இலங்கையரண் கண்ட அநுமன் நினைவு கூறியபடி. வெவ் வள அரக்கன் (வெம்மை வளம் அரக்கன்) - வலிமையாகிய வளத்தையுடைய அரக்கனுகிய இராவணன்; வெம்மை - வலி. மனக்கொள - மனங்கொள்ளும்படி. (64)

## அநுமன் இலங்கை நகர வாயிலேக் காண்டல்

**160.** மடங்கலரி யேறுமத மால்களிறு நாண
நடந்துதனி யேபுகுது நம்பிநனி மூதூர்
அடங்கரிய தானேயயி லந்தகன தாணேக்
கடுந்திசையின் வாயனேய வாயிலெதிர் கண்டான்.

மடங்கல் அரி ஏறும், மத மால் களிறும் நாண,
நடந்து, தனியே புகுதும் நம்பி, நனி மூதூர்
அடங்கரிய தானே அயில் அந்தகனது ஆணேக்
கடுந்திசையின் வாய் அனேய வாயில் எதிர் கண்டான்.

மடங்கு(தல்) அல் அரி ஏறும் - (பிற விலங்குகளால்)மடங்குதல் இல்லாத ஆண்சிங்கமும்; மதம் மால் களிறும் - மதங்கொண்ட பெரிய ஆண்யானேயும்; நாண - வெட்கமடையும்படி; தனியே நடந்து புகுதும் - (துணேயின்றித்) தான் ஒருவனுகவே (பீடுநடையுடன்) நடந்து (அம்மதிலினருகிற் செல்லுகின்ற); நம்பி - சிறந்தவனுன அநுமன்; அடங்கு(தல்) அரிய தானே - (எண்ணிக்கைக்கு) அடங்கு தலில்லாத (அரக்கர்) சேனேகளேயுடையதும்; அயில் அந்தகனது ஆணே கடுந்திசையின் வாய் அனேய - சூலப்படையேந்திய இயம

னுடைய ஆணை செல்லுகின்ற தென்திசையாகிய கொடிய இயமலோகத்தின் முன் வாயிலைப்போன்றதும் ஆகிய; நனி மூதூர் வாயில் - மிகவும் பழமையான இலங்கை நகரத்தின் (கோட்டை) வாயிலை. (65)

### வாயிலை வியத்தல் 161-162

**161.** மேருவை நிறுத்திவெளி செய்ததுகொல் விண்ணோர்
ஊர்புக வமைத்தபடு கால்கொலுல கேழுஞ்
சோர்வில நிலைக்கநடு விட்டதொரு தூணே
நீர்புகு கடற்குவழி யோவென நினைந்தான்.

'மேருவை நிறுத்தி வெளி செய்ததுகொல் ? விண்ணோர்
ஊர் புக அமைத்த படுகால்கொல்? உலகு ஏழும்
சோர்வு இல நிலைக்க நடு விட்டது ஒரு தூணே?
நீர் புகு கடற்கு வழியோ ?' என நினைந்தான்.

மேருவை நிறுத்தி வெளிசெய்ததுகொல் - மேருமலையைக் கொண்டு வந்து இங்கு நிறுத்தி அதிற் பெரியதோர் இடைவெளியை உண்டாக்கியதுதானோ? (பொன்மயமான பெரிய வாயிலாதலான் மேருவை நினைத்தனன் என்க); விண்ணோர் ஊர் புக அமைத்த படுகால்கொல் - தேவர்களுடைய ஊர்க்கு ஏறிச் செல்லுமாறு வைத்த ஏணிதானோ? படுகால் - ஏணி : (சீவக சிந்தாமணி, 2872). உலகு ஏழும் சோர்வில நிலைக்க நடு விட்டது ஒரு தூணோ - மேலேழுலகங்களும் தாழாமல் நிலை நிற்க அவற்றிற்கு ஆதாரமாக நடுவில் நாட்டியதொரு தூண் தானோ?; நீர்புகு கடற்கு வழியோ : கடல்நீர் புகற்கு வழியோ - கடல்நீர் முழுதும் புகுந்து செல்லுதற்கு இட்ட ஒரு மதகு வழிதானோ? என நினைந்தான் - என்று (இலங்கை நகர வாயிலைக் குறித்து அநுமன்) நினைத்தான். (66)

**162.** ஏழுலகின் வாழுமுயிர் யாவையு மெதிர்ந்தால்
ஊழின்முறை யன்றியுட னேபுகுமி தொன்றோ
வாழியரி யங்குவழி யீதென வகுத்தால்
ஆழியுள வேழினள வன்றுபகை யென்றான்.

'ஏழ் உலகின் வாழும் உயிர் யாவையும் எதிர்ந்தால்
ஊழின்முறை அன்றி, உடனே புகும்! இது ஒன்றோ?

வாழியர் இயங்கு வழி ஈது என வகுத்தால்,
ஆழி உள ஏழின் அளவு அன்று பகை!' என்றான்.

எதிர்ந்தால் - (இந்நகரினுள் நுழைய) வந்தால். ஊழின் முறை அன்றி உடனே புகும் - ஒருவர் பின் ஒருவராக முறையே புகுவதல்லாமல் அனைவரும் ஒரு சேரப் புகுதல் ஆகும். இது ஒன்றோ - இஃது ஒன்றுமட்டுமா? (இல்லை). வாழியர் இயங்கு வழி - (இந்நகருள்) வாழ்பவர் நடமாடுவதற்கு உரிய வழியை. ஈது என வகுத்தால் - இதுவாக (இவ்வளவு பெரிதாக) அமைத்துள்ளாரென்றால். பகை - (நமக்குப்) பகையான அவ்வரக்கர் திரள்கள். ஆழி ஏழின் அளவு உள அன்று - கடல்கள் ஏழின் அளவாகவும் உள்ளனவல்ல (அவற்றின் மிக்குளவாம்). என்றான் - என்று அநுமன் எண்ணினான். (67)

## வாயில் காவலர் நிலை 163–166

**163.** வெள்ளமொரு நூறொடிரு நூறுமிடை வீரர்
கள்ளவினை வெவ்வலி யரக்கரிரு கையும்
முள்ளெயிறும் வாளுமுற மின்னமுறை நின்றார்
எள்ளரிய காவலினை யண்ணலு மெதிர்ந்தான்.

வெள்ளம் ஒருநூறொடு இருநூறும் மிடைவீரர்,
கள்ளவினை வெவ் வலி அரக்கர், இருகையும்,
முள் எயிறும் வாளும் உற மின்ன, முறை நின்றார்,
எள்ளரிய காவலினை அண்ணலும் எதிர்ந்தான்.

இரு கையும் - (கோட்டை வாயிலின்) இரண்டு பக்கங்களிலும். முள் எயிறும் வாளும் உற மின்ன - (வாயின்கண் கோரதந்தமென்னும்) முட்போன்று கூரிய பற்களும் (கையில்) வாட் படையும் மிகவும் மின்னும் படியாக. வெள்ளம் ஒரு நூறொடு இருநூறு மிடை வீரர் - முந்நூறு வெள்ளம் கொண்ட அளவினராய வீரர்களாய். வெள்ளம்- ஒருபெருந்தொகை. முறை நின்றார் - வரிசையாக நின்றவர்களாகிய. கள்ளவினை வெவ்வலி அரக்கர் - திருட்டுத் தொழிலும் கொடிய வலிமையுமுடைய அரக்கர்களின். எள்ளரிய காவலினை - இகழ்தற்கரிதாகிய (வாயிலின்கண் உள்ள) காவலினை. அண்ணலும் எதிர்ந்தான் - அநுமன் எதிரே கண்டான். (68)

164. சூலமழு வாளொடயி றோமர முலக்கை
காலவரி விற்பகழி கப்பண முசுண்டி
கோலகணை நேமிகுலி சஞ்சுரிகை குந்தம்
பாலமுத லாயுதம் வலத்தினர் பரித்தார்.

சூலம், மழு, வாளொடு, அயில், தோமரம், உலக்கை,
கால வரி வில், பகழி, கப்பணம், முசுண்டி,
கோல கணை, நேமி, குலிசம், சுரிகை, குந்தம்,
பாலம், முதல் ஆயுதம் வலத்தினர் பரித்தார்.

வலத்தினர் - வலிமையையுடையோராய். சூலம்.........பாலம்: படை வகைகள். கோலகணை - அழகான கணையமும் : கணையம் - வளைதடி. முதல் ஆயுதம் - முதலான படைக் கலங்களை. பரித்தார் - தாங்கி நின்றார்களும். (இப்பாடலும் பின்வரும் இரண்டு பாடலும் ஒரு தொடர்) (69)

165. அங்குச நெடுங்கவ ணடுத்துடல் விசிக்கும்
வெங்குசைய பாசமுதல் வெய்யபயில் கையர்
செங்குருதி யன்னசெறி குஞ்சியர் சினத்தோர்
பங்குனி மலர்ந்தொளிர் பலாசவன மொப்பார்.

அங்குசம், நெடும் கவண், அடுத்து உடல் விசிக்கும்
வெம் குசைய பாசம், முதல் வெய்ய பயில் கையர்,
செம் குருதி அன்ன செறி குஞ்சியர், சினத்தோர்,
பங்குனி மலர்ந்து ஒளிர் பலாசவனம் ஒப்பார்.

உடல் அடுத்து விசிக்கும் வெம் குசைய பாசம் - உடம்பினைப் பற்றி இறுகக் கட்டும் கொடிய தருப்பைவடிவமான பாசக் கயிறும் : குசை - தருப்பை. முதல் வெய்ய பயில் கையர் - முதலிய கொடிய படைக்கலங்கள் தங்கிய கையையுடையவர்களும். சினத்தோர் - அதிக கோபமுடையவர்களும் : கோபத்தாற் கண்சிவந்திருந்தார் என்றபடி. செம் குருதி அன்ன செறி குஞ்சியர் - சிவந்த இரத்தம் போன்று அடர்ந்த செம்பட்டைத் தலைமயிரையுடையவர்களும் ஆகி. பங்குனி மலர்ந்து ஒளிர் பலாச வனம் ஒப்பார் - பங்குனி மாதத்தில் மலர்ந்து விளங்குகின்ற புரசமரக்காடு போன்றவர்களும். புரசம்பூ செந்நிறமுடையது : பங்குனி மாதத்தில் புரசமரத்தின் இலைகளெல்லாம் உதிர்ந்து சிவந்த மலர்மயமாகவே காணப்படும் : காவல் புரியும் அரக்கர் சிவந்த தலைமயிராலும் கோபத்தாற் சிவந்த கண்களாலும் புரசமரக்காடுபோலக் காட்சியளித்தனர் என்க. (70)

**166.** அளக்கவரி தாகிய கணத்தொடய னிற்கும்
விளக்கின மிருட்டினை விழுங்கியொளி கால
உளக்கடிய காலன்மன முட்குமணி வாயில்
இளக்கமில் கடற்படை யிருக்கையை யெதிர்ந்தான்.

அளக்க அரிதாகிய கணத்தொடு அயல்நிற்கும்
விளக்கினம் இருட்டினை விழுங்கி ஒளி கால,
உளக் கடிய காலன் மனம் உட்கும் மணி வாயில்
இளக்கம் இல் கடற்படை இருக்கையை, எதிர்ந்தான்.

விளக்கினம் இருட்டினை விழுங்கி ஒளி கால, அளக்க அரிது ஆகிய கணத்தொடு நிற்கும் இளக்கம் இல் கடற்படை யிருக்கையை உளக்கடிய காலன் மனம் உட்கும் மணி வாயில் அயல் எதிர்ந்தான் : என இயைத்துரைக்க.

'பரித்தார்,' (164) 'கையர்,' 'ஒப்பார்' (165) ஆகிய 'அளக்க வரிதாகிய கணத்தொடு' என இயைத்துப் பொருள் முடிவு செய்க.

கணம் - கூட்டம். கால - உமிழ. உளக்கடிய காலன் - கடிய உள்ளமுடைய இயமன். உட்கும் - அஞ்சும்படியான. இளக்கம் இல் கடற்படை இருக்கையை - தளர்ச்சியில்லாத கடல் போன்ற பெரிய படைகளின் இருப்பிடத்தை. (71)

## வாயிற்காவல் கண்டு அநுமன் வியத்தல் 167-169

**167.** எவ்வமர ரெவ்வவுண ரேவருள ரென்னே
கவ்வைமுது வாயிலி னெடுங்கடை கடப்பார்
தெவ்வரிவர் சேமமிது சேவகனும் யாமும்
வெவ்வமர்தொ டங்கிடினெ ஞய்விளையு மென்ருன்.

'எவ் அமரர், எவ் அவுணர், ஏவர் உளர், என்னே!
கவ்வை முது வாயிலின் நெடுங்கடை கடப்பார்?
தெவ்வர் இவர்! சேமம் இது, சேவகனும் யாமும்,
வெவ் அமர் தொடங்கிடின், எஞய் விளையும்?' என்ருன்.

கவ்வை முது வாயிலின் நெடுங்கடை கடப்பார்-ஆரவாரம் மிக்க வாயிலின் பெருவழியைக் கடந்து செல்ல வல்லவர். எவ் அமரர் - எந்தத் தேவர் தாம்? எவ் அவுணர் - எந்த அசுரர் தாம்? ஏவர்

உளர் - வேறு எவர் தாம் இருக்கின்றார்? என்னே – என்ன வியப்பு! இவர் தெவ்வர் - இத்தன்மையோர் பகைவர். இது சேமம் - இத் தகையது (அவர்களுடைய) அரண். சேவகனும் யாமும் வெவ் அமர் தொடங்கிடின் என் ஆய் விளையும் - இராமபிரானும் யாமும் (இவ் வரக்கர்களோடு) கொடிய போரைத் தொடங்குவதாயிருந்தால் யாதாய் முடியுமோ ? என்றான் - என்று அநுமன் எண்ணினான். (72)

**168.** கருங்கடல் கடப்பதரி தன்றிநகர் காவற்
பெருங்கடல் கடப்பதரி தெண்ணமிறை பேரின்
அருங்கடன் முடிப்பதரி தாமமர் கிடைப்பின்
நெருங்கடல் விளைப்பர்நெடு நாளென நினைந்தான்.

'கருங்கடல் கடப்பது அரிது அன்று : இநகர் காவல்
பெரும் கடல் கடப்பது அரிது ! எண்ணம் இறை பேரின்,
அரும் கடன் முடிப்பது அரிதாம் ! அமர் கிடைப்பின்
நெருங்கு அடல் விளைப்பர் நெடுநாள்!' என நினைந்தான்.

இ நகர் காவல் பெருங்கடல் - இந்த இலங்காபுரியின் காவலாகிய பெரிய கடலை. எண்ணம் இறை பேரின் - நாம் ஆலோசனையிற் சிறிது தவறினால்; அருங்கடன் முடிப்பது அரிது ஆம் - (சீதா தேவியைக் கண்டு பேசி மீள்வதாகிய) அருமையான கடமையை நிறைவேற்றுதல் கடினமாகிவிடும். அமர் கிடைப்பின் - போர் நேருமானால். நெடுநாள் நெருங்கு அடல் விளைப்பர் - நீண்ட நாட்கள் செறிந்த போரினை (அரக்கர்) செய்வார்கள். (73)

இதன் பின் 25-ஆம் ஏட்டில், கடல் தாவு படலத்தின் 88-ஆம் பாடல் கீழ் வருமாறு காணப்படுகிறது :

168 (a) ஊறுமிக வேயுறினும் யானுமமர் தோரேன்,
தேறலி லரக்கர்புரி தீமையது தீர்வுற்
றேறுவகை யெங்குள விராமனிடை யல்லால்
மாறுமதி வேறுபிறி தில்லென மதித்தான்.

**169.** வாயில்வழி சேறலரி தன்றியும் வலத்தோர்
ஆயிலவர் வைத்தவழி யேகலழ கன்றால்
காய்கதி ரியக்கின்மதி லைக்கடிது தாவிப்
போயிநகர் புக்கிடுவெ னென்றுரயல் போனான்.

'வாயில்வழி சேறல் அரிது! அன்றியும், வலத்தோர்,
ஆயில், அவர் வைத்தவழி ஏகல் அழகு அன்ருல்.
காய்கதிர் இயக்கு இல் மதிலைக் கடிது தாவிப்
போய் இ நகர் புக்கிடுவென்' என்று, ஓர் அயல் போனன்.

வாயில் வழி சேறல் அரிது - இந்தக் கோட்டைவாயிலின் வழியாகச் செல்லுதல் எளிதன்று. அன்றியும் - அல்லாமலும். ஆயில் - எண்ணிப் பார்க்குமிடத்து. வலத்தோர் - ஆற்றல் மிக்கவர். அவர் வைத்த வழி ஏகல் அழகு அன்று - அவ்வரக்கர் அமைத்துள்ள வழியாகவே செல்லுதல் அழகாக மாட்டாது. காய்கதிர் இயக்கு இல் மதிலைக் கடிது தாவிப் போய் – ஒளி வீசுகின்ற சூரியனும் (மேலே) செல்லாத இக்கோட்டை மதிலை விரைவாகத் தாண்டிச் சென்று. இநகர் புக்கிடுவென் - இந்த இலங்கையினுள்ளே நுழைவேன். என்று - என்று நிச்சயித்து. ஓர் அயல் போனன் - (அம்மதிலின்) ஒரு பக்கமாகச் சென்றனன் (அநுமன்). (74)

### இலங்காதேவி எதிர்தல்

170. நாண ளுந்தா னல்கிய
★ காவ னனிமூதூர்
வாண ளன்ளுள் போவதின்
மேலே வழிநின்ருள்
தூண மென்னுந் தோளுடை
யானைச் சுடரோனைக்
காண வந்த கட்செவி
யென்னக் கனல்கண்ணுள்.

நாள்நாளும் தான்நல்கிய காவல், நனி மூதூர்
வாழ்நாள் அன்ளுள், போவதின், மேலே வழிநின்ருள்,
தூணும் என்னும் தோளுடையானைச், சுடரோனைக்
காண வந்த கட்செவி என்னக் கனல் கண்ணுள்.

நாள் நாளும் தான் நல்கிய காவல் போவதின் மேலே வழி நின்ருள் (ஆகிய) நனி மூதூர் வாழ்நாள் அன்ளுள், தூணும் என்னும் தோள் உடையானை, சுடரோனைக் காண வந்த கட்செவி என்னக் கனல் கண்ணுள் (ஆகி) என இயைத்து, பின் 176-ஆம்

செய்யுளில் 'வல்லே சென்ருள்' என்பதனேடு முடிக்க. இது முதல் 176-ஆம் செய்யுள் முடிய ஒரு தொடர்.

நாள் நாளும் - தினந்தோறும். தான் நல்கிய காவல் போவதின் - தான் அன்புடன் செய்து வந்த நகர் காவலுக்காகப் போகின்ற காரணத்தாலே. மேலே வழி நின்ருள் - கோட்டை மதிலின் மேலே வழியிலே நின்றவளாகிய. நனி மூதூர் வாழ்நாள் அன்னுள் - மிகவும் பழைய நகரமாகிய அவ் விலங்கையின் ஆயுளேயே ஒத்தவளான இலங்கை மாதேவி. தூண் ஆம் என்னும் தோள் உடையானே - தூண் போன்றுயர்ந்த தோள்களே யுடையவனுன அநுமனே. சுடரோனேக் காணு வந்த கட்செவி என்ன - சூரியனேக் கண்டு வருகின்ற பாம்பு போல. கனல் கண்ணுள் - கனலுங் கண் களேயுடையவளும். தோளுடையானேக் கனலும் கண்களே யுடைய வளும் என்க. (75)

## இலங்காதேவியின் இயல்பு 171-175

171. எட்டுத் தோளா ணுலு
முகத்தா ளுலகேழுந்
தொட்டுப் பேருஞ் சோதி
நிறத்தாள் சுழல்கண்ணுள்
முட்டிப் போரின் மூவுல
கத்தை முதலோடுங்
கட்டிச் சீறுங் காலன்
வலத்தாள் கமையில்லாள்.

எட்டுத் தோளாள், நாலு முகத்தாள், உலகு ஏழும்
தொட்டுப் பேரும் சோதி நிறத்தாள், சுழல் கண்ணுள்,
முட்டிப் போரின் மூவுலகத்தை முதலோடும்
கட்டிச் சீறும் காலன் வலத்தாள், கமை இல்லாள்.

உலகு ஏழும் தொட்டுப் பேரும் சோதி நிறத்தாள் - ஏழுலகங் களிலும் பரவி மீளும்படியான ஒளியை வீசுகின்ற மார்பையுடைய வளும் : நிறம் - மார்பு. சுழல் கண்ணுள் - சுழல்கின்ற கண்களே யுடையவளும். போரின் முட்டி மூவுலகத்தை முதலோடும் கட்டிச் சீறும் காலன் வலத்தாள் - போரிலே பகைத்து மோதி மூன்றுலகத் தவரையும் அடியோடு கட்டி விட்டு(ப் பின்னரும் அடங்காமற்) கோபிக்கின்ற கூற்றுவனே யொத்த வலிமையையுடையவளும். கமை இல்லாள் – பொறுமை யில்லாதவளும். (76)

**172.** பாரா நின்ரு ளெண்டிசை
　　தோறும் பலரப்பால்
வாரா நின்ரு ரோவென
　　மாரி மழையேபோல்
ஆரா நின்ரு ணூபுர
　　மச்சந் தருதாளாள்
வேரா நின்ருள் மின்னி
　　னிமைக்கு மிளிர்பூணுள்.

பாரா நின்ருள் எண்திசை தோறும் பலர்அப்பால்
வாரா நின்ருரோ என, மாரி மழையே போல்
ஆரா நின்ருள், நூபுரம் அச்சம் தரு தாளாள்,
வேரா நின்ருள், மின்னின் இமைக்கும் மிளிர்பூணுள்.

அப்பால் பலர் வாராநின்ருரோ என எண் திசைதோறும் பாரா நின்ருள் - தூரத்தில் வேறு பலரும் (அநுமனுக்குத் துணையாக) வருகின்ருர்களோ வென்று எட்டுத் திக்குகளிலும் பார்க்கின்றவளும். மாரி மழையே போல் ஆரா நின்ருள் - மழை பொழிகின்ற மேகம் போல முழங்குகின்றவளும். நூபுரம் அச்சம் தரு தாளாள் - (அணியப்பட்ட) சிலம்பு (அதிர்வதனல் பிறர்க்கு) அச்சத்தை விளைவிக்கும் கால்களையுடையவளும். வேரா நின்ருள் - (கோபத்தால் உடம்பெல்லாம்) வியர்வையுண்டாக நின்றவளும். மின்னின் இமைக்கும் மிளிர் பூணுள் - மின்னல் போல் மிகுதியாக ஒளி செய்கின்ற நகைகளை அணிந்தவளும். (77)

**173.** வேல்வாள் சூலம் வெங்கதை
　　பாச மிளிர்சங்கம்
கோல்வாள் சாபங் கொண்ட
　　கரத்தாள் வடகுன்றம்
போல்வா டிங்கட் போழி
　　னெயிற்ருள் புகைவாயிற்
கால்வாள் காணிற் காலனு
　　முட்குங் கதமிக்காள்.

வேல், வாள், சூலம், வெம்கதை, பாசம், மிளிர்சங்கம்,
கோல், வாள், சாபம், கொண்ட கரத்தாள், வடகுன்றம்

போல்வாள், திங்கட் போழின் எயிற்ருள், புகை வாயிற்
கால்வாள், காணில் காலனும் உட்கும் கதம் மிக்காள்.

வாள் சூலம் - கொடிய சூலப்படை. வெம் கதை - கொடிய கதாயுதம். மிளிர் சங்கம்-விளங்குகின்ற சங்கம். கோல் - அம்பு. சாபம்-வில். வேல், சூலம், கதை, பாசம், சங்கம், கோல், வாள், வில் ஆகிய எட்டுப் படைகளையும். கொண்ட கரத்தாள் - வைத்திருக்கிற கைகளையுடையவளும் : எட்டுக் கைகளிலும் எட்டுப் படைகள் ஏந்தினள் என்க. வடகுன்றம் போல்வாள் - மேருமலையை ஒத்தவளும். திங்கள் போழின் எயிற்ருள் - திங்களைப் பிளந்து வைத்தாற்போன்ற கோர தந்தங்களையுடையவளும். புகை வாயில் கால்வாள் - வாயினுற் புகையைக் கக்குபவளும். காணில் காலனும் உட்கும் கதம் மிக்காள் - கண்டால் யமனும் அஞ்சும்படியான கோபம் மிக்கவளும். (78)

**174.** அஞ்சு வணத்தி னுடை
யுடுத்தா ளரவெல்லாம்
அஞ்சு வணத்தின் வேக
மிகுத்தா ளருளில்லாள்
அஞ்சு வணத்தி னுத்தரி
யத்தா ளலையாரும்
அஞ்சு வணத்தின் முத்தொளி
ராரத் தணிகொண்டாள்.

அஞ்சு வணத்தின் ஆடை உடுத்தாள், அரவு எல்லாம்
அஞ்சு உவணத்தின் வேகம் மிகுத்தாள், அருள் இல்லாள்,
அம் சுவணத்தின் உத்தரியத்தாள், அலை ஆரும்
அம் சு வள் நத்தின் முத்து ஒளிர் ஆரத்து அணிகொண்டாள்.

அஞ்சு வணத்தின் ஆடை உடுத்தாள் - ஐந்து நிறம்கொண்ட ஆடையை (அரையில்) உடுத்தவளும்; (ஐந்து வண்ணங்கள் : வெண்மை, கருமை, செம்மை, பொன்மை, பசுமை.) அரவு எல்லாம் அஞ்சு உவணத்தின் வேகம் மிகுத்தாள் - எல்லாப் பாம்புகளும் அஞ்சும்படியான கருடன் போல வேகம் மிக்கவளும். அருள் இல்லாள் - இரக்கமில்லாதவளும். அம் சுவணத்தின் உத்தரியத்தாள் - அழகிய பொன்னுலாகிய மேலாடையை அணிந்தவளும். அலை ஆரும் - அலைகள் நிரம்பிய. அம் - நீரில் (அதாவது, கடல் நீரிலுள்ள). சு - அழகிய. வள் – பெரிய. நத்தின் - சங்கிலுண்டான. ஒளிர் - விளங்குகின்ற. முத்து ஆரத்து அணி

கொண்டாள் - முத்தினாலாகிய மாலைகளை அணிந்து கொண்ட வளும். (79)

175. சிந்தா ரத்தின் செச்சை
யணிந்தா டெளிநூல்யாழ்
அந்தா ரத்தி னேர்வரு
சொல்லா ளறைதும்பி
கந்தா ரத்தி னின்னிசை
பன்னிக் களிகூரும்
மந்தா ரத்தின் மாலை
யலம்பு மகுடத்தாள்.

சிந்து ஆரத்தின் செச்சை அணிந்தாள், தெளிநூல் யாழ்
அம் தாரத்தின் நேர்வரு சொல்லாள், அறை தும்பி
கந்தாரத்தின் இன் இசை பன்னிக் களிகூரும்
மந்தாரத்தின் மாலை அலம்பும் மகுடத்தாள்.

சிந்து ஆரத்தின் செச்சை அணிந்தாள் - கடலிற் பிறந்த முத்துக்களாலாகிய சட்டையணிந்தவளும். சிந்து - கடல். ஆரம் - முத்து. செச்சை - சட்டை. தெளி நூல் யாழ் அம் தாரத்தின் நேர்வரு சொல்லாள் - தெளிந்த நூல்களிற் கூறிய இலக்கணப்படி யமைந்த யாழினிடத்து வாசிக்கப்படுகிற அழகிய தாரம் என்னும் இசையைப் போன்ற சொற்களையுடையவளும். அறை தும்பி கந்தாரத்தின் இன் இசை பன்னிக் களி கூரும் மந்தாரத்தின் மாலை அலம்பும் மகுடத்தாள் - ஒலிக்கின்ற வண்டுகள் காந்தாரம் என்னும் பண் போல இனிமையான இசையைப் பாடிக் களிக்கும்படியான மந்தாரம் என்னும் தேவதருவின் மலர்களாலாகிய மாலை அசையப் பெற்ற முடியையுடையவளும். இப்பாடலின் பின்னிரண்டு அடிகளோடு, சீவக சிந்தாமணியுள், "மந்தார மாலை மலர் வேய்ந்து மகிழ்ந்து தீந்தேன், கந்தாரஞ் செய்து களி வண்டு முரன்று பாட" (1959) எனும் அடிகளையும், 'களிவண்டு மந்தார மாலையின் மலரை மொய்த்து அதிற் றேனையுண்டு மகிழ்ந்து காந்தார மென்னும் பண்ணையாக்கி ஆளாபஞ் செய்து பாடும்படி' என வரும் உரைப் பகுதியையும் ஒப்பிடுக. சீவக சிந்தாமணி, 1710-ஆம் பாடலின் 'கற்பகம் : அரசர் தம தாணையால் இவ்வுலகிற் கொணர்ந்த கற்பகம் தேவரது சாபத்தால் தன்னிலை யன்றிப் பூவளவே யுண்டாயிற் றென்க. மந்தாரமும் அவ்வாறும் ; கவிரமும் அவ்வாறும்' என்னும் உரைப் பகுதியும் ஈண்டு அறிதல் தகும். (80)

## இலங்கா தேவியை அநுமன் எதிர்தல்

**176.** எல்லா முட்கு மாழியி
லங்கை யிகன்மூதூர்
நல்லா ளவ்வூர் வைகுறை
யொக்கு நயனத்தாள்
நில்லாய் நில்லா யென்றுரை
நேரா நினையாமுன்
வல்லே சென்ருள் மாருதி
கண்டான் வருகென்ருன்.

எல்லாம் உட்கும் ஆழி இலங்கை இகல் மூதூர்
நல்லாள், அவ்வூர் வைகு உறை ஒக்கும் நயனத்தாள்,
'நில்லாய்! நில்லாய்!' என்று உரை நேரா, நினையாமுன்,
வல்லே சென்ருள்; மாருதி கண்டான், 'வருக!' என்ருன்.

எல்லாம் உட்கும் ஆழி இலங்கை இகல் மூதூர் நல்லாள் - எல்லாப் பிராணிகளும் அஞ்சும்படியான கடல் சூழ்ந்த இலங்கையாகிய வலிமைகொண்ட பெரிய ஊர்க்கு நன்மையைச் செய்பவளும்; அவ் ஊர் வைகு உறை ஒக்கும் நயனத்தாள் - அந்த ஊர் முழுவதும் தங்கும்படியான ஓர் உறையைப்போன்ற கண்களையுடையவளுமாகிய இலங்காதேவி; நில்லாய் நில்லாய் என்று உரைநேரா - 'நில் நில்' என்று (அநுமனை நோக்கி) அதட்டிக்கொண்டு; நினையாமுன் வல்லே சென்ருள் - நினைத்தற்குமுன்பு விரைவாக (அநுமனெதிரிற்) சென்ருள்; மாருதி கண்டான் வருக என்ருன் - அநுமன் பார்த்து 'வருவாயாக' என்று சொல்லி (அஞ்சாது) அழைத்தான். இலங்கை முழுவதும் தங்கும்படியான ஓர் உறையைப் போன்ற கண்களையுடையவள் என்ற கருத்து, பெரிய கண்களையுடையவள் என்பதோடு, அவ்வூரைத் தன் கண்ணிற் கருமணிபோல் வைத்துப் பாதுகாப்பவள் என்றவாறும் ஆம். (81)

## அநுமனை நோக்கி இலங்காதேவி கூறுவது

**177.** ஆகா செய்தா யஞ்சலை
போலு மறிவில்லாய்
சாகா மூலந் தின்றுழல்
வார்மேற் சலமென்னும்

பாகா ரிஞ்சிப் பொன்மதி
ருவிப் பகையாதே
போகா யென்ருள் பொங்கழ
லென்னப் புகைகண்ணுள்.

'ஆகா செய்தாய்! அஞ்சலை போலும்? அறிவு இல்லாய்!
சாகா மூலம் தின்று உழல்வார்மேல் சலம் என்னும்?
பாகு ஆர் இஞ்சிப் பொன்மதில் தாவிப் பகையாதே!
போகாய்!' என்ருள், பொங்கு அழல் என்னப் புகை கண்ணுள்.

பொங்கு அழல் என்னப் புகை கண்ணுள் - மூண்டெரியும் நெருப்புப் போல (மிக்க சினத்தினுல்) புகைகின்ற கண்களையுடைய வளான இலங்காதேவி; (அநுமனை நோக்கி) ஆகா செய்தாய் - உனக்குத் தகாத காரியத்தைச் செய்தாய்; அஞ்சலை போலும் - (அஞ்சவேண்டுவதற்கு நீ) அஞ்சவில்லைபோலிருக்கிறதே? அறிவு இல்லாய்-அறிவில்லாதவனே!; சாகம் மூலம் தின்று உழல்வார்மேல் சலம் என் ஆம் – இலைகளையும் வேர்களையும் தின்று திரிபவர்மேல் நான் சினந்தால் என்ன விளையும் தெரியுமா? பாகு ஆர் இஞ்சிப் பொன் மதில் தாவிப் பகையாதே - (அரணுக்கு வேண்டிய) உறுப்பு வகைகளெல்லாம் நிரம்பிய கோட்டையின் பொன்மயமான மதிலைத் தாவ முயன்று பகைத்துக்கொள்ளாதே; போகாய் - 'ஓடிப்போ'; என்ருள்; சாகமூலம் என்ற வடமொழித் தொடர் எதுகை நோக்கி நீண்டது. (82)

அநுமன் மறுமொழி

178. களியா வுள்ளத் தண்ணல்
மனத்திற் கதமூள
விளியா நின்றே நீதி
நலத்தின் வினையோர்வான்
அளியா னிவ்வூர் காணு
நலத்தா லணைகின்றேன்
எளியே னுற்ருல் யாவ
துனக்கிங் கிழவென்ருன்.

களியா உள்ளத்து அண்ணல், மனத்தில் கதம் மூள
விளியாநின்றே, நீதி நலத்தின் வினை ஓர்வான்,

'அளியான் இவ் ஊர் காணும் நலத்தால் அணைகின்றேன் :
எளியேன் உற்ருல், யாவது உனக்கு இங்கு இழவு?' என்ருன்.

நீதி நலத்தின் வினை ஓர்வான் - நீதிநெறியாலே நல்வினைகளை அறிந்தவனும்; களியா உள்ளத்து அண்ணல் - செருக்கடையாத உள்ளத்தையுடைய சிறந்தவனுமான அநுமன்; மனத்தில் கதம் மூள விளியா நின்றே - மனத்தில் சினம் எழவும் அதனை யடக்கி நின்று; அளியான் - ஆசையினுல்; இவ்வூர் காணும் நலத்தால் அணைகின்றேன் - இவ் விலங்கை நகரைக் காணும் நல்லெண்ணத் துடனே வருகின்றேன்; எளியேன் இங்கு உற்ருல் உனக்கு இழவு யாவது - எளியவனுன யான் இவ்வூரினுட் சென்ருல் உனக்கு நஷ்டம் என்ன ? என்ருன். (83)

## இலங்காதேவி சினத்தல்

**179.** என்னு முன்ன மேகென
வேகா தெதிர்மாற்றஞ்
சொன்னு யேநீ யாவ
னடாதொல் புரமட்டான்
அன்னு ரேனு மஞ்சுவ
ரெய்தற் களியுற்ருல்
உன்னு லெய்து மூர்கொ
லிவ்வூரென் றுறநக்காள்.

என்னு முன்னம், 'ஏகு! என ஏகாது, எதிர்மாற்றம்
சொன்னுயே? நீ யாவன்? அடா! தொல் புரம் அட்டான்
அன்னுரேனும் அஞ்சுவர் எய்தற்கு : அளியுற்ருல்,
உன்னுல் எய்தும் ஊர்கொல் இவ்வூர் ?' என்று உற நக்காள்.

என்னுமுன்னம் - என்று (அநுமன்) கூறுமுன்னே. எதிர் மாற்றம் – மறுமொழி. தொல்புரம் அட்டான் - பழமையான முப்புரங் களையும் சுட்டழித்தவனுன சிவபெருமான். அளியுற்ருல் - ஆசைப் பட்டால். உற நக்காள் - மிகுதியாகச் சிரித்தாள் (இலங்காதேவி என்க). (84)

### இலங்காதேவி கூற்றும்—அநுமன் மாற்றமும்

**180.** நக்கா ளைக்கண் டையன்
மனத்தோர் நகைகொண்டான்
நக்காய் நீயார் யார்சொல
வந்தா யுனதாவி
உக்கா லேதா மோடலை
யென்ருு ளினியிவ்வூர்
புக்கா லன்றிப் போகல
னென்ருன் புகழ்கொண்டான்.

நக்காளைக் கண்டு, ஐயன் மனத்து ஓர் நகை கொண்டான்;
'நக்காய்? நீ யார்? யார்சொல வந்தாய்? உனது ஆவி
உக்கால் ஏதாம்? ஓடலை?' என்ருள்; 'இனி, இவ்ஊர்
புக்கால் அன்றிப் போகலன்!' என்ருன், புகழ்கொண்டான்.

நக்காளை - சிரித்தவளான இலங்காதேவியை. ஐயன் - வியக்கத் தக்கவனுன அநுமன். நகை : ஈண்டு இகழ்ச்சிபற்றிவந்த புன் சிரிப்பு. நக்காய் - சிரிக்கவாசெய்தாய்? உனது ஆவி உக்கால் ஏது ஆம் - உனது உயிர் அழிந்தால் (உனக்கு) யாது பயன்? ஓடலை - ஓடிப்போக மாட்டாய்? இனி - இவ்வளவு எய்தியபின்னர். போகலன் - போக மாட்டேன். புகழ் கொண்டான் - புகழ்பெற்ற வனுன அநுமன். (85)

### இலங்காதேவி சிந்தித்தல்

**181.** வஞ்சங் கொண்டான் வானர
மல்லன் வருகாலன்
துஞ்சுங் கண்டா லென்னை
யிவன்சூழ் திரையாழி
நஞ்சங் கொண்டார் கண்ணுத
லைப்போ னகுகின்ருன்
நெஞ்சங் கொண்டே கல்லென
நின்றே நினைகின்ருள்.

'வஞ்சம் கொண்டான்! வானரம் அல்லன்! வரு காலன்
துஞ்சும் கண்டால் என்னை; இவன் சூழ் திரை ஆழி

நஞ்சம் கொண்டு ஆர் கண்ணுதலைப் போல் நகுகின்றான்!'
நெஞ்சம் கொண்டே, கல் என நின்றே, நினைகின்றாள்.

வானரம் அல்லன் - (இவன் உண்மையான) குரங்கல்லன்; வரு காலன் என்னைக் கண்டால் துஞ்சும் - எதிர்த்து வருகின்ற யமனுங் கூட என்னைப் பார்த்த அளவிலே செயலற்றுப்போவான்; (ஆனால்) இவன் திரை ஆழி சூழ் நஞ்சம் கொண்டு ஆர் கண்ணுதலைப்போல் நகுகின்றான் - இவன் அலைகளையுடைய பாற்கடலில் (தேவர் முதலியோரை) வளைத்தெழுந்த ஆலமாகிய நஞ்சினை எடுத்து உண்ட நெற்றிக் கண்ணனாகிய சிவபெருமானைப்போல் சிரிக்கின்றான்; (என்று) நெஞ்சம்கொண்டு - மனத்திலே கொண்டு. ஏ: அசை. கல் என நின்று - சிலைபோல அசையாது நின்று; ஏ: அசை. நினைகின்றாள் - மேலும் நினைப்பாளானாள்: (இலங்காதேவி என்க.) (86)

இதன்பின் ஓர் அதிகப்பாடல் 1,33-ஆம் ஏடுகளில் உள்ளது.

181. (a) கண்ட வனப்பான் மேனி கரக்குங் கருமத்தாற்
கொண்டல் செறிப்பான் வானர மென்றுங் கொளலன்றே
அண்ட மனைத்தும் பூரண னாகு மவனாகும்
சண்டை கொடுத்துங் கொள்வ னெனத்தான் சலமுற்றாள்.

### இலங்காதேவி சூலத்தை யேவல்

**182.** கொல்வா மன்றேற் கோளுறு
மிவ்வூ ரெனல்கொண்டாள்
வெல்வாய் நீயேல் வேறி
யெனத்தன் விழிதோறும்
வல்வாய் தோறும் வெங்கனல்
பொங்க மதிவானில்
செல்வா யென்னு மூவிலை
வேலைச் செலவிட்டாள்.

'கொல்வாம் அன்றேல், கோள் உறும்
இவ்வூர்!' எனல் கொண்டாள்;
'வெல்வாய் நீயேல், வேறி!'
எனத் தன் விழிதோறும்,

வல்வாய் தோறும், வெம் கனல்
பொங்க, ' மதிவானில்
செல்வாய் !' என்னா, மூவிலை
வேலைச் செலவிட்டாள்.

கொல்வாம் - (இவனைக்) கொல்வோம்; அன்றேல் - அப்படிக் கொல்லாதுபோனால்; இவ் ஊர் கோள் உறும் எனல் கொண்டாள் - இவ்விலங்கைமா நகரம் (இவனால்) அழிவடையும் என்று கருதினவளாய்; (அநுமனை நோக்கி) வெல்வாய் நீயேல் வேறி என—' நீ வெல்ல வல்லவனானால் (என்னை) வென்றுகொள் ' என்று கூறி; தன் விழிதோறும் வல்வாய் தோறும் வெம் கனல் பொங்க - தனது (எட்டுக்) கண்களிலும் வலிய (நான்கு) வாய்களிலும் வெவ்விய தீ எழும்படியாக; மதிவானில் செல்வாய் என்னா - சந்திரன் விளங்குகின்ற வானிடத்திற்கே நீ சென்று சேரக் கடவாய் ' என்று; மூவிலை வேலைச் செலவிட்டாள் - முத்தலைச் சூலப் படையை (அநுமன்மேற்) செல்லும்படியாக எறிந்தாள் (இலங்காதேவி). (87)

### அநுமன் சூலத்தை முறித்தல்

183. தடித்தா மென்னத் தன்னெதிர்
செல்லுந் தழல்வேலைக்
கடித்தா னாகம் விண்ணின்
முரிக்குங் கலுழன்போல்
ஒடித்தான் கையா லும்ப
ருவப்ப வுயர்காலம்
பிடித்தா ணெஞ்சந் துண்ணென
வெண்ணம் பிழையாதான்.

தடித்தாம் என்னத் தன் எதிர் செல்லும் தழல்வேலைக்
கடித்தான், நாகம் விண்ணின் முரிக்கும் கலுழன் போல்,
ஒடித்தான் கையால், உம்பர் உவப்ப, உயர்காலம்
பிடித்தாள் நெஞ்சம் துண் என, எண்ணம் பிழையாதான்.

எண்ணம் பிழையாதான், தடித்து ஆம் என்னத் தன் எதிர் செல்லும் தழல்வேலை, உயர்காலம் பிடித்தாள் நெஞ்சம் துண்ணென(வும்), உம்பர் உவப்ப(வும்), கடித்தான் (ஆகி), விண்ணின் நாகம் முரிக்கும் கலுழன் போல் கையால் ஒடித்தான் என இயைக்க.

எண்ணம் பிழையாதான் - தான் நினைத்த காரியம் தவருதவனுன அநுமன். தடித்து - மின்னல். உயர் காலம் பிடித்தாள் - (அச் சூலப் படையை) நீண்ட காலமாகப் பிடித்திருந்தவளான இலங்கா தேவி. கலுழன் - கருடன். (88)

## இலங்காதேவியும் அநுமனும் பொருதல் 184-185

**184.** இற்றுச் சூல நீறெழல்
காணு வெரியொப்பாள்
மற்றுத் தெய்வப் பல்படை
கொண்டே மலைவாளை
உற்றுக் கையா லாயுத
மொன்று மொழியாமற்
பற்றிக்-கொள்ளா விண்ணி
லெறிந்தான் பழியோர்வான்.

இற்றுச் சூலம் நீறு எழல் காணு, எரி ஒப்பாள்,
மற்றுத் தெய்வப் பல்படை கொண்டே மலைவாளை
உற்றுக் கையால் ஆயுதம் ஒன்றும் ஒழியாமல்
பற்றிக் கொள்ளா, விண்ணில் எறிந்தான் பழி ஓர்வான்.

இற்று - முறிந்து. நீறு எழல் - துகளாய்ப் போதல். காணு - கண்டு. எரி ஒப்பாள் - நெருப்புப்போல் கொதிப்பவளான இலங்கா தேவி. பழி ஓர்வான் - (பெண்ணுகிய இவளைக் கொல்லுதல்) பழி யாகுமென்று எண்ணுபவனுன அநுமன். (89)

**185.** வழங்குந் தெய்வப் பல்படை
காணுண் மலைவான்மேல்
முழங்கு மேக மென்ன
முரற்றி முனிகின்ருள்
கழங்கும் பந்துங் குன்றுகொ
டாடுங் கரமோச்சித்
தழங்குஞ் செந்தீச் சிந்த
வடித்தா டகைவில்லாள்.

வழங்கும் தெய்வப் பல்படை காணாள், மலைவான் மேல்
முழங்கும் மேகம் என்ன முரற்றி முனிகின்றாள்,
கழங்கும், பந்தும், குன்றுகொடு ஆடும் கரம் ஓச்சித்
தழங்கும் செந்தீச் சிந்த அடித்தாள், தகைவு இல்லாள்.

தகைவு இல்லாள் – தடை (அல்லது இளைப்பு) இல்லாதவளாகிய இலங்காதேவி; மேல் மலைவான் - மேலும் போர் செய்தற்கு; வழங்கும் தெய்வப் பல்படை காணாள் – ஏவத்தக்க தெய்வத்தன்மையுள்ள பல படை (களுள் ஒன்றும்) காணாதவளாகி; முழங்கும் மேகம் என்ன முரற்றி – இடிக்கின்ற மேகம்போல ஆரவாரித்து; முனிகின்றாள் – சினக்கின்றவளாகி; பந்தும் கழங்கும் குன்று கொடு ஆடும் கரம் ஓச்சி - கழற்சிக் காயாகவும் பந்தாகவும் மலைகளைக் கொண்டு விளையாடும் தன் கைகளால் ஓங்கி; தழங்கும் செந்தீச் சிந்த அடித்தாள் – ஒலிக்கின்ற சிவந்த தீப்பொறி சிதறும்படி (அநுமனை) அடித்தாள். (90)

### இலங்காதேவி தோல்வியுற்று வீழ்தல்

186. அடியா முன்ன மங்கை
யனைத்து மொருகையாற்
பிடியா வென்னே பெண்ணிவள்
கொல்லிற் பிழையென்னா
ஒடியா நெஞ்சத் தோரடி
கொண்டா னுயிரோடும்
இடியே றுண்ட மால்வரை
போன்மண் ணிடைவீழ்ந்தாள்.

அடியா முன்னம், அங்கை அனைத்தும் ஒரு கையால்
பிடியா, 'என்னே? பெண் இவள்! கொல்லில் பிழை!' என்னா
ஒடியா நெஞ்சத்து ஓர்அடி கொண்டான்; உயிரோடும்,
இடியேறு உண்ட மால்வரை போல், மண்ணிடை வீழ்ந்தாள்.

ஒடியா நெஞ்சத்து - (இலங்காதேவியின்) தளராத மார்பிலே, இடி ஏறுண்ட மால்வரை - இடியால் தாக்கப்பட்ட பெரிய மலை. (91)

## இலங்காதேவி தன் வரலாறு கூறுதல் 187—190

**187.** விழுந்தா ளொந்தாள் வெங்குரு
திச்செம் புனல்வெள்ளத்
தழுந்தா நின்ரு ணான்முக
ணர்த மருளூன்றி
எழுந்தாள் யாரும் யாவையு
மெல்லா வுலகத்தும்
தொழுந்தாள் வீரன் றூதுவன்
முன்னின் றிவைசொன்னாள்.

விழுந்தாள் ; நொந்தாள் ; வெம் குருதிச் செம்புனல் வெள்ளத்து
அழுந்தா நின்ருள் ; நான்முகனார்தம் அருள் ஊன்றி
எழுந்தாள் ; யாரும், யாவையும், எல்லா உலகத்தும்
தொழும் தாள் வீரன் தூதுவன் முன் நின்று, இவை சொன்னாள்.

நான்முகனார் தம் அருள் ஊன்றி எழுந்தாள் - பிரமனுடைய அருளைப் பற்றுக்கோடாகக் கொண்டு எழுந்தாள். எல்லா உலகத்தும் யாரும் யாவையும் தொழும் தாள் வீரன் – அனைத்துலகங்களிலுமுள்ள எல்லாவகை உயிர்களும் வணங்கும்படியான திருவடிகளையுடைய வீரனாகிய இராமனுடைய. தூதுவன்முன் நின்று- தூதுவனாகிய அநுமன் முன் நின்று. இவை சொன்னாள் - (இலங்கா தேவி) பின்வருமாறு சொல்வாளாயினள். (92)

**188.** ஐயகேள் வைய நல்கு
★ மயனரு ளமைதி யாக
எய்தியிம் மூதூர் காப்பெ
னிலங்கைமா தேவி யென்பேன்
செய்தொழி லிழுக்கி னாலே
திகைத்திந்தச் சிறுமை செய்தேன்
உய்தியென் றளித்தி யாயி
னுணர்த்துவ லுண்மை யென்றாள்.

'ஐய! கேள்! வையம் நல்கும்
அயன் அருள் அமைதியாக
எய்தி, இம் மூதூர் காப்பென்,
இலங்கைமாதேவி என்பேன்;
செய்தொழில் இழுக்கி ஞலே
திகைத்து இந்தச் சிறுமை செய்தேன்.
உய்தி என்று அளித்தியாயின்
உணர்த்துவல் உண்மை' என்ருள்.

வையம் நல்கும் அயன் அருள் அமைதி ஆக - உலகங்களைப் படைக்கும் பிரமனது கட்டளை பொருந்திய காரணமாக; என்பேன் - என்று வழங்கப்படுவேன்; செய்தொழில் இழுக்கிஞலே - நான் செய்கின்ற காவற்ருெழில் அழிதலால்; திகைத்து - மனம் கலங்கி; இந்தச் சிறுமை செய்தேன் - (உன்பால்) இந்தப் பிழையைச் செய்தேன்; உய்தி என்று அளித்தி ஆயின் - நீ பிழைத்துப்போ என்று கருணைசெய்வாயாஞல். (93)

இதன்பின் 25-ஆம் ஏட்டுள் அடியிற் காணுமாறு ஓர் அதிகப் பாடல் உள்ளது:—

188 (a) ஆயவ னருளால் மீட்டு மந்தரி யறைந்தாண் முன்னுள்
மாயமா நகரந் தன்னை வகுத்தய னென்னும் மேலாம்
தூயவ னென்னை நோக்கிச் சுந்தரீ காப்பா யென்ருங்
கேயின னிதற்கு நாம மிலங்கையென் றெவரும் போற்ற.

189. எத்தனை காலங் காப்பல்
யானிந்த மூதூ ரென்றம்
முத்தனை வினவி னேற்கு
முரண்வலிக் குரங்கொன் றுன்னைக்
கைத்தல மதனுற் றீண்டிற்
கழிவதன் றென்னைக் காண்டி
சித்திர நகரம் பின்னைச்
சிதைவது திண்ண மென்ருன்.

"எத்தனை காலம் காப்பல்
யான் இந்த மூதூர்? என்று, அம்
முத்தனை வினவினேற்கு,
'முரண்வலிக் குரங்கு ஒன்று உன்னைக்

கைத்தலம் அதனுல் தீண்டில்,
கழிவது ; அன்று என்னைக் காண்டி !
சித்திர நகரம் பின்னைச்
சிதைவது திண்ணம்!' என்ருன்.''

அம் முத்தனை - பற்றற்ற அந்த நான்முகக் கடவுளை. முரண் வலிக் குரங்கு - மிக்க வலிமையையுடைய குரங்கு: முரண் - வலி ; கழிவது - (காவற்ருெழில்) முடிவுறும். அன்று என்னைக் காண்டி - (அவ்வாறு முடிவடையும்) அந்நாளில் என்னை வந்து காண்பாயாக. சித்திர நகரம் - அழகிய ஊராகிய இலங்கை. (94)

**190.** அன்னதே முடிந்த தைய
அறம்வெல்லும் பாவந் தோற்கும்
என்னுமீ தியம்ப வேண்டுந்
தகையதோ இனிமற் றுன்னுல்
உன்னிய வெல்லா முற்று
முனக்குமுற் ருத துண்டோ
பொன்னகர் புகுதி யென்று
புகழ்ந்தன ளிறைஞ்சிப் போனுள்.

'அன்னதே முடிந்தது, ஐய !
அறம் வெல்லும் பாவம் தோற்கும்,
என்னும் ஈது இயம்ப வேண்டும்
தகையதோ ? இனி, மற்று, உன்னுல்
உன்னிய எல்லாம் முற்றும் !
உனக்கும் முற்ருதது உண்டோ ?
பொன் நகர் புகுதி !' என்று
புகழ்ந்தனள், இறைஞ்சிப் போனுள்.

ஐய அன்னதே முடிந்தது - ஐயனே ! அந்த நான்முகன் சொன்னபடியேயாயிற்று. இயம்பவேண்டும் தகையதோ - சொல்லித் தெரிய வேண்டியதில்லை என்றபடி. உனக்கும் முற்ருதது உண்டோ - (எல்லாம் வல்லவனுன) உனக்கும் இயலாதது ஒன்று உளதோ ? (இல்லை யென்றபடி). பொன் நகர் - அழகிய ஊராகிய இலங்கை. புகழ்ந்தனள் இறைஞ்சிப் போனுள் - புகழ்ந்து வணங்கிப் போனுள். (95)

### அநுமன் இலங்கையுட் புகுதல்

**191.** வீரனும் விரும்பி நோக்கி
மெய்ம்மையே விளையு மஃதென்
ருரியன் கமல பாத
மகத்துற வணங்கி யாண்டப்
பூரிய ரிலங்கை மூதூர்ப்
பொன்மதி ருவிப் புக்கான்
சீரிய பாலின் வேலைச்
சிறுபிரை தெறித்த தன்ஞன்.

வீரனும், விரும்பி நோக்கி,
'மெய்ம்மையே! விளையும் அஃது!' என்று,
ஆரியன் சமல பாதம்
அகத்து உற வணங்கி, ஆண்டு, அப்
பூரியர் இலங்கை மூதூர்ப்
பொன்மதில் தாவிப் புக்கான்,
சீரிய பாலின் வேலைச்
சிறுபிரை தெறித்தது அன்ஞன்!

வீரனும் - வீரஞகிய அநுமனும். விரும்பி நோக்கி-(இலங்கா தேவி கூறியவற்றை) ஆழ்ந்து சிந்தித்து; மெய்ம்மையே - உண்மை தான். அஃது - அவள் கூறியபடி அறம் வெல்லுதலும் பாவம் தோற்றலும். விளையும் - நிகழும். என்று - என்று எண்ணின வஞய். ஆரியன் பாத கமலம் அகத்து உற வணங்கி – இராமபிரா னுடைய திருவடித் தாமரைகளை மனத்தின்கண்ணே மிகவும் வணங்கி. பூரியர் – கீழோராய அரக்கர். சீரிய பாலின் வேலை - சிறந்த பாற்கடலில். சிறுபிரை - சிறிய உறைமோர்த்துளி.

வீரனும், நோக்கி, என்று, வணங்கி, மதில்தாவி, பாலின் வேலைச் சிறுபிரை தெறித்தது அன்ஞன் (ஆகி) இலங்கைமூதூர்ப் புக்கான் : என முடிக்க. (96)

### மணிமாடங்களின் ஒளிகண்டு துணுக்குறல்

**192.** வான்றெடர் மணியிற் செய்த
மையறு மாட கோடி
ஆன்றபே ரிருளைச் சீத்துப்
பகல்செய்த வமைவு நோக்கி

ஊன்றிய வுதயத் துச்சி
யொற்றைவா னுருளைத் தேரோன்
தோன்றினன் கொல்லோ வென்ணு
வறிவனுந் துணுக்கங் கொண்டான்.

வான்தொடர் மணியில் செய்த
மை அறு மாட கோடி
ஆன்ற பேர் இருளைச் சீத்துப்
பகல் செய்த அமைவு நோக்கி,
'ஊன்றிய உதயத்து உச்சி
ஒற்றை வான் உருளைத் தேரோன்
தோன்றினன் கொல்லோ?' என்ணு,
அறிவனும் துணுக்கம் கொண்டான்.

மை அறு மணியில் செய்த வான் தொடர் மாட கோடி - குற்ற மில்லாத இரத்தினங்களாற் செய்யப்பட்ட வானளாவ வோங்கிய (அவ்விலங்கையிலுள்ள) மாளிகைகளின் வரிசைகள். ஆன்ற பேர் இருளைச் சீத்துப் பகல் செய்த அமைவு நோக்கி – (உலகில்) நிறைந்த மிகுதியான இருளையொழித்து (இரவிலும்) பகல் போன்ற ஒளி செய்த அமைவினைப் பார்த்து. அறிவனும் – பேரறிவாளியாகிய அநுமனும். வான் ஒற்றை உருளைத் தேரோன் - வானிலே செல்லும் படியான ஒரே சக்கரத்தைக்கொண்ட தேரையுடையவனுன சூரியன். ஊன்றிய உதயத்து உச்சித் தோன்றினன்கொல்லோ என்ணு – (கீழ்த்திசையில்) நிலைபெற்ற உதயமலையின் உச்சியில் உதித்துவிட்டானே என்று. துணுக்கம் கொண்டான் - திடுக் கிட்டான். (97)

## இலங்கையின் ஒளியை வியத்தல் 193—194

**193.** மொய்ம்மணி மாட மூதூர்
முழுதிரு ளகற்ரு நின்ற
மெய்ம்மையை யுணர்ந்து நாணு
மிகையென விலங்கிப் போனன்
இம்மதி லிலங்கை நாப்ப
ணெய்துமேற் றன்மு னெய்தும்
மிம்மினி யல்ல னேவவ்
வெயிற்கதிர் வேந்த னம்மா.

மொய்ம்மணி மாட மூதூர்
முழுது இருள் அகற்ரு நின்ற
மெய்ம்மையை உணர்ந்து, நாணு,
மிகை என விலங்கிப் போனுன்!
இம்மதில் இலங்கை நாப்பண்
எய்துமேல், தன்முன் எய்தும்,
மிம்மினி அல்லனே, அவ்
வெயிற்கதிர் வேந்தன் அம்மா!

**193-195** பாடல்கள் ஒரு தொடர். (அவ்வாறு துணுக்கங் கொண்ட அநுமன்) மொய் மணி மாடம் - திரளான இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற மாளிகைகள். மூதூர் இருள் முழுது(ம்) அகற்ரு நின்ற மெய்ம்மையை உணர்ந்து - பழைய நகரமாகிய இலங்காபுரியின்கண் இருள் முழுதையும் போக்குகின்ற உண்மையை உணர்ந்தவனுய். (பின் வருமாறு தன்னுட் கூறுவானுயினுன்) அவ் வெயில் கதிர் வேந்தன் – வெப்பமான கிரணங்களேயுடையவனும் (சுடர்கட் கெல்லாம்) தலேவனுமான அச்சூரியன்; இம் மதில் இலங்கை நாப்பண் எய்துமேல் - இந்த மதில் சூழ்ந்த இலங்கையின் நடுவிலே வருவானுனுல்; தன்முன் எய்தும் மிம்மினி அல்லனே - தன்முன் வருகின்ற மின்மினியைப் போல் ஒளி குன்றி விடுவா னல்லவா? (அதனுல்) நாணு - (அச்சூரியன்) வெட்கப்பட்டு; மிகை என விலங்கிப்போனுன் - தான் இந்நகருக்குத் தேவையில்லே யென்று ஒதுங்கியே போய்க்கொண்டிருக்கிருன்; அம்மா: வியப் பிடைச்சொல்; மின்மினியென்பது எதுகைநோக்கி மிம்மினியென விகாரப்பட்டு நின்றது. இஃது அநுமன் கூற்று. (98)

**194.** பொசிவுறு பசும்பொற் குன்றிற்
பொன்மதி னடுவட் பூத்த
வசையற விளங்குஞ் சோதி
மணியினு லமைந்த மாடத்
தசைவிலிவ் விலங்கை மூதூ
ராரிரு ளின்மை யாலோ
நிசிசர ராயிற் றம்மா
நீணகர் நிருத ரெல்லாம்.

'பொசிவு உறு பசும்பொற் குன்றில் பொன்மதில் நடுவண் பூத்த வசை அற விளங்கும் சோதி மணியினுல் அமைந்த மாடத்து

அசைவு இல் இவ் இலங்கை மூதூர் ஆர் இருள் இன்மையாலோ
நிசிசரர் ஆயிற்று, அம்மா! நீள் நகர் நிருதர் எல்லாம்!'

நீள் நகர் நிருதர் எல்லாம் - பெரிய நகராகிய இவ்விலங்கையிலுள்ள அரக்கரனைவரும். நிசிசரர் ஆயிற்று - இரவில் சஞ்சரிக்கின்றவர்களாயினமை; பொசிவு உறு பசும்பொன் குன்றில் - நெகிழுமியல்புள்ள மாற்றுயர்ந்த பசிய பொன்மயமான திரிகூட மலையின் மேல். பொன்மதில் நடுவண் பூத்த - பொன்னாலாகிய மதிலின் நடுவிற் பொலிந்து தோன்றுகின்ற. வசை அற விளங்கும் சோதி மணியினால் அமைந்த மாடத்து - குற்றமில்லாமல் பிரகாசிக்கும் ஒளியையுடைய இரத்தினங்களால் ஆக்கப்பட்ட மாளிகைகளால். அசைவு இல் இவ் இலங்கை மூதூர் - சலித்தலில்லாத இந்த இலங்கையாகிய பழமையான ஊரிலே. ஆர் இருள் இன்மையாலோ - நிறையுமியல்புள்ள இருளில்லாத காரணத்தினாற்போலும்! அம்மா : வியப்பிடைச்சொல். (99)

அநுமன் மாளிகைநிழலில் மறைந்துசெல்லல்

**195.** என்றன வியம்பி வீதி
யேகுவ திழுக்க மென்னாத்
தன்றகை யனைய மேனி
சுருக்கிமா ளிகையிற் சாரச்
சென்றன னென்ப மன்னோ
தேவருக் கமுத மீந்த
குன்றென வயோத்தி வேந்தன்
புகழெனக் குலவு தோளான்.

என்று அன இயம்பி, வீதி ஏகுவது இழுக்கம் என்னாத்
தன் தகை அனைய மேனி சுருக்கி, மாளிகையில் சாரச்
சென்றனன் என்ப மன்னோ. தேவருக்கு அமுதம் ஈந்த
குன்று என, அயோத்தி வேந்தன் புகழ் எனக் குலவு தோளான்!

தேவருக்கு அமுதம் ஈந்த குன்று என - தேவர்களுக்கு(த் திருப்பாற்கடலைக் கடைந்து) அமுதத்தைக் கொடுத்த மந்தரமலை போலவும். அயோத்தி வேந்தன் புகழ் என - அயோத்தி மன்னனாகிய இராமபிரானது புகழ்போலவும். குலவு தோளான் - விளங்குகின்ற தோள்களையுடையவனான அநுமன். (இங்கு மலை பெருமைக்கும், புகழ் நிறத்திற்கும் உவமிக்கப்பட்டன.) என்று அன இயம்பி - என்று முன்னிரண்டு பாடல்களிற் கண்டவைபோன்ற

மொழிகளைக் கூறி. இழுக்கம் - தவறு ; தன் தகை அனைய மேனி : முன் 137-ஆம் செய்யுளிற் காண்க. மாளிகையில் சாரச் சென்றனன்- வீடுகளிலே பொருந்தும்படி போனான். என்ப, மன், ஓ : அசைகள். (100)

பசுக்கொட்டில் முதலிய பல இடங்களிலும்
அநுமன் தேடிச் செல்லுதல்

**196.** ஆத்துறு சாலை தோறு
மானையின் கூடந் தோறும்
மாத்துறு மாடந் தோறும்
வாசியின் பந்தி தோறும்
காத்துறு சோலை தோறுங்
கருங்கடல் கடந்த தாளான்
பூத்தொறும் வாவிச் செல்லும்
பொறிவரி வண்டிற் போனான்.

ஆத் துறு சாலை தோறும், ஆனையின் கூடம் தோறும்,
மாத் துறு மாடம் தோறும், வாசியின் பந்தி தோறும்,
காத் துறு சோலை தோறும், கரும் கடல் கடந்த தாளான்,
பூத்தொறும் வாவிச் செல்லும் பொறிவரி வண்டில், போனான்.

ஆ துறு சாலை - பசுக்கள் நிரம்பிய கொட்டில்கள் ; மா துறு மாடம் - பெருமை மிக்க மாளிகைகள் ; மாத்து உறு மாடம் என்றும் பிரிக்கலாம். மாத்து - பெருமை : (திருக்கோவையார் 373). வாசியின் பந்தி - குதிரைகள் உள்ள சாலைகள். கா துறு சோலை - காவல் மிக்க சோலைகள். கரும் கடல் கடந்த தாளான் - கரிய கடலைத் தாண்டி வந்த கால்களையுடையவனான அநுமன். வாவி - தாவி. (101)

இலங்கைநகர் வீதியிற் செல்லும் அநுமன் தோற்றம்

**197.** பெரியநா ளொளிகொ ணுன
விதமணிப் பித்திப் பத்தி
சொரியுமா நிழலங் கங்கே
சுற்றலாற் காலின் ரேன்றல்

கரியனாய் வெளிய னாகிச்
செய்யனாய்க் காட்டுங் காண்டற்
கரியனா யெளிய னாந்தன்
னகத்துறை யழக னேபோல்.

பெரிய நாள் ஒளிகொள் நானாவித மணிப் பித்திப் பத்தி
சொரியும் மா நிழல் அங்கு அங்கே சுற்றலால், காலின் தோன்றல்,
கரியனாய் வெளியன் ஆகிச் செய்யனாய்க் காட்டும், காண்டற்கு
அரியனாய் எளியனாம் தன் அகத்து உறை அழகனே போல்!

நாள் ஒளி கொள் - நட்சத்திரங்களின் ஒளியைக் கொண்டுள்ள. நானாவிதம் – பலவகையான. பெரிய மணி—பெரிய இரத்தினங்கள மைக்கப்பட்ட. பித்திப் பத்தி-சுவர்வரிசைகள். சொரியும் - வெளிவிடு கின்ற. மா நிழல் - சிறந்த (பலநிற) ஒளிகள். அங்கு அங்கே சுற்ற லால் - அவ்வவ்விடங்களிற் சுழன்றுகொண்டிருத்தலால். காலின் தோன்றல் - காற்றின் மைந்தனாகிய அநுமன். காண்டற்கு அரியனாய் எளியனாம் தன் அகத்து உறை அழகனே போல் - (அன் பில்லாதவர்களுக்குக்) காணக்கூடாதவனாகியும் (அன்பர்களுக்குக்) காண எளியனாகியும் தன் உள்ளத்தில் உறைகின்ற பேரழகனாகிய இராமபிரானைப்போல். கரியனாய் வெளியனாகி செய்யனாய்க் காட்டும்– (அங்கங்குச் செல்லும்போது) கருநிறமுடையவனாயும், வெண்ணிற முடையவனாயும் செந்நிறமுடையவனாயும் தோன்றுவான். ஒருவனே மும்மூர்த்திகளாய்த் தோன்றும் உண்மையை மூன்று நிறங்களும் குறித்துநின்றமை காண்க. (102)

கவிக்கூற்று

198. ஈட்டுவார் தவம லான்மற்
றீட்டினா லியைவ தின்மை
காட்டுவார் விதியா ரஃது
காண்கிற்பார் காண்மி னம்மா
பூட்டுவார் முலைபொ ருத
பொய்யிடை நையப் பூநீர்
ஆட்டுவா ரமரர் மாத
ராடுவா ரரக்கர் மாதர்.

ஈட்டுவார் தவம் அலால், மற்று ஈட்டினால் இயைவது இன்மை
காட்டுவார் விதியார், அஃது காண்கிற்பார் காண்மின் அம்மா!

பூட்டு வார் முலை பொருத பொய் இடை நையப் பூநீர்
ஆட்டுவார் அமரர் மாதர், ஆடுவார் அரக்கர் மாதர்!

ஈட்டுவார் - தேடித் தொகுப்பவர்கள். தவம் அலால் மற்று ஈட்டினால் - தவமல்லாத மற்றவைகளைச் சேர்த்து வைப்பதால். இயைவது இன்மை - பயனில்லையாதலை. விதியார் - படைத்தற் கடவுள். அஃது காண்கிற்பார் காண்மின் - அந்த உண்மையைக் கண்கூடாகக் காண விரும்புகிறவர்கள் இதோ இங்கேயே கண்டு கொள்ளலாம்! வார் பூட்டு முலை பொருத - கச்சணிந்த தனபாரத்தைத் தாங்கமாட்டாத; பொய் இடை நைய - பொய்போலும் இல்லையாய்த் தேய்ந்துபோன இடைகள் வருந்தும்படி. அமரர் மாதர் - தேவலோகப் பெண்கள். பூநீர் ஆட்டுவார் - நல்ல மலர்கள் நிறைந்த நீரைச் சுமந்துகொண்டு குளிப்பாட்டுவர். அரக்கர் மாதர் ஆடுவார் – (அந்த நீரிலே) அரக்கியர் (வருந்தாமல்) குளிப்பார்கள்.
(103)

### அநுமன் கண்ட அரக்கர்நிலை 199—215

199. கானக மயில்க ளென்னக்
களிமட வன்ன மென்ன
ஆனன கமலப் போது
பொலிதர வரக்கர் மாதர்
தேனுகு சரளச் சோலைத்
தெய்வநீ ராற்றுத் தெண்ணீர்
வானவர் மகளி ராட்ட
மஞ்சன மாடு வாரை.

கானக மயில்கள் என்னக் களி மட அன்னம் என்ன,
ஆனன கமலப் போது பொலிதர, அரக்கர் மாதர்,
தேன் உகு சரளச் சோலைத் தெய்வநீர் ஆற்றுத் தெள் நீர்
வானவர் மகளிர் ஆட்ட, மஞ்சனம் ஆடுவாரை.

தேன் உகு சரளச்சோலைத் தெய்வ நீராற்றுத் தெள்நீர் வானவர் மகளிர் மஞ்சனம் ஆட்ட, கானக மயில்கள் என்ன, களிமட அன்னம் என்ன, ஆனன கமலப்போது பொலிதர அரக்கர் மாதர் (மஞ்சனம்) ஆடுவாரை: என இயைக்க.

தேன் உகு சரளச் சோலை - (மலர்கள்) தேனைச் சிந்தும் தேவ தாரு மரங்களடர்ந்த சோலைகளில். தெய்வ நீர் ஆற்றுத் தெள்நீர் –

தெய்வத் தன்மைவாய்ந்த ஆகாயகங்கையின் தெளிந்த நீரைக் கொண்டு; வானவர்மகளிர் மஞ்சனம் ஆட்ட - தேவலோகப் பெண்கள் நீராட்ட. ஆனன கமலப்போது பொலிதர – முகங்களாகிய தாமரை மலர்கள் அழகுடன் விளங்க. அரக்கர் மாதர் ஆடுவாரை - நீராடுகின்ற அரக்கியரையும்.

இதுமுதல் பதினேழு செய்யுட்களும் பதினெட்டாம் செய்யுளாகிய 216-ல் வரும் 'மயக்கற நாடி யேகும் மாருதி' என்பதனோடு இயைந்து முடியும். (104)

200. இலக்கண மரபிற் கேற்ற
வெழுவகை நரம்பி னல்யாழ்
அலத்தகத் தளிர்க்கை நோவ
வளந்தெடுத் தமைத்த பாடல்
கலக்குற முழங்கிற் றென்று
சேடியர் கன்னி மார்தம்
மலர்க்கையான் மாடத் தும்பர்
மழையின்வாய் பொத்து வாரை.

இலக்கண மரபிற்கு ஏற்ற எழுவகை நரம்பின் நல்யாழ்
அலத்தகத் தளிர்க்கை நோவ அளந்து எடுத்து அமைத்த பாடல்
கலக்கு உற முழங்கிற்று என்று, சேடியர் கன்னிமார் தம்
மலர்க்கையால் மாடத்து உம்பர் மழையின்வாய் பொத்துவாரை.

இலக்கண மரபிற்கு ஏற்ற - (யாழ்நூலிற் சொல்லிய) விதிகளுக்குத் தக்க(வாறு அமைக்கப்பட்ட); எழுவகை நரம்பின் நல்யாழ் - ஏழு வகையாகிய சுருதிகளை இசைக்கக்கூடிய நரம்புகளையுடைய நல்ல யாழினிடத்து: இந்த இசைகள் ஏழும் தமிழில் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் எனப்படும். அலத்தகம் - செம்பஞ்சுக் குழம்பு. அளந்து எடுத்து அமைத்த பாடல் - (தாளத்திற்கு இசைய) அளவு செய்து எழுப்பிய இசைப்பாடல்; கலக்கு உற - குழம்பும்படி; முழங்கிற்று - இடி முழக்கம் செய்தது; மாடத்து உம்பர் மழையின் வாய் – மேல் மாடத்தின் மீதுள்ள மேகத்தின்வாயை; பொத்துவார் - மூடுபவர்களாகிய; சேடியர் கன்னிமாரை - பணிசெய்யும் சிறு பெண்களையும். (105)

**201.** சந்தப்பூம் பந்தர் வேய்ந்த
தமனிய வரங்கிற் றத்தம்
சிந்தித்த துதவுந் தெய்வ
மணிவிளக் கொளிருஞ் சேக்கை
வந்தொத்து நிருத மாக்கள்
விளம்பின நெறிவ ழாமல்
கந்தர்ப்ப மகளி ராடு
நாடகங் காண்கின் றுரை.

சந்தப் பூம் பந்தர் வேய்ந்த தமனிய அரங்கில், தத்தம்
சிந்தித்தது உதவும் தெய்வ மணிவிளக்கு ஒளிரும் சேக்கை
வந்து ஒத்து, நிருத மாக்கள், விளம்பின நெறி வழாமல்
கந்தர்ப்ப மகளிர் ஆடும் நாடகம் காண்கின்றுரை.

சிந்தித்தது உதவும் தெய்வ மணி விளக்கு ஒளிரும் தத்தம் சேக்கை நிருதமாக்கள் வந்து ஒத்து, சந்தப்பூம்பந்தர் வேய்ந்த தமனிய அரங்கில் விளம்பின நெறி வழாமல் கந்தர்ப்ப மகளிர் ஆடும் நாடகம் காண்கின்றுரை : என இயைக்க.

சிந்தித்தது உதவும் – நினைத்தவற்றைக் கொடுக்கவல்ல. தெய்வ மணி விளக்கு – தெய்வத்தன்மை வாய்ந்த இரத்தின தீபங்கள் ; ஒளிரும் - ஒளிவிடுகின்ற ; தத்தம் சேக்கை-தத்தமக்குரிய கட்டில்களில் ; நிருத மாக்கள் வந்து ஒத்து - அரக்கரும் அரக்கியரும் வந்து பொருந்தி(யவராய்). சந்தப் பூம்பந்தர் வேய்ந்த தமனிய அரங்கில் - அழகிய மலர்களினாலாகிய பந்தலிடப்பட்ட பொன்மய மான நாடக மேடையில் ; விளம்பின நெறி வழாமல் - (நாடக நூல் களிற்) கூறிய விதிகளிற் பிறழாதபடி. கந்தர்ப்ப மகளிர் - கந்தருவப் பெண்கள் ; காண்கின்றுரை - பார்த்துக்கொண்டிருக்கிறவர்களையும்.
(106)

**202.** திருத்திய பளிக்கு வேதித்
தெள்ளிய வேல்க ளென்னக்
கருத்தியல் புரைக்கு முண்கட்
கருங்கயல் செம்மை காட்ட
வருத்திய கொழுநர் தம்பால்
வரம்பின்றி வளர்ந்த காமம்
அருத்திய பயிர்க்கு நீர்போ
லருநற வருந்து வாரை.

திருத்திய பளிக்கு வேதித் தெள்ளிய வேல்கள் என்னக்
கருத்தியல்பு உரைக்கும் உண்கண் கரும் கயல் செம்மை காட்ட,
வருத்திய கொழுநர் தம்பால் வரம்பின்றி வளர்ந்த காமம்
அருத்திய பயிர்க்கு நீர்போல், அருநறவு அருந்துவாரை.

திருத்திய பளிக்கு வேதி - அழகாக அமைக்கப்பட்ட பளிங்குக் கற்களினுலாகிய மேடைகளில் (இருந்து கொண்டு) ; கருத்து இயல்பு உரைக்கும் கரும் கயல் உண்கண் தெள்ளிய வேல்கள் என்ன செம்மை காட்ட - மனத்திலுள்ள எண்ணங்களை வெளியிடவல்ல கரிய நிறமுள்ள கயல் மீன்போன்ற மையுண்ட கண்கள் வடித்தெடுத்த வேற்படைகள் போலச் சிவந்து தோன்றும்படி ; வருத்திய கொழுநர் தம்பால் வரம்பு இன்றி வளர்ந்த காமம் அருத்திய பயிர்க்கு நீர்போல் - (தமது பிரிவினுல் தங்களை) வருந்தும்படிசெய்த கணவர்மாட்டு அளவில்லாமல் மேன்மேல் வளர்ந்த தங்கள் காம விருப்பமாகிய பயிர் செழித்தற்குத் தண்ணீர் (பாய்ச்சினுற்) போல ; அருநறவு அருந்துவாரை - கிடைத்தற்கு அருமையான மதுவைக் குடித்துக்கொண்டிருக்கும் அரக்கிமாரையும். (107)

**203.** கோதறுங் குவளை நாட்டங்
 கொழுநர்கண் வண்ணங் கொள்ளத்
தூதுளங் கனியை வென்று
 துவர்த்தவாய் வெண்மை தோன்ற
மாதரு மைந்தர் தாமு
 மொருவர்பா லொருவர் வைத்த
காதலங் கள்ளுண் டார்போன்
 முறைமுறை களிக்கின் ருரை.

கோதறும் குவளை நாட்டம் கொழுநர் கண் வண்ணம் கொள்ளத்
தூதுளம் கனியை வென்று துவர்த்தவாய் வெண்மை தோன்ற,
மாதரும் மைந்தர் தாமும், ஒருவர்பால் ஒருவர் வைத்த
காதல் அம் கள் உண்டார் போல், முறைமுறை களிக்கின்ருரை.

கோது அறும் - குற்றம் நீங்கிய ; குவளை நாட்டம் - நீலமலர் போன்ற (அரக்கியரின் கரிய) விழிகள் ; கொழுநர்கண் வண்ணம் கொள்ள - (அரக்கரான) தம் தலைவர் கண்கள் போலச் சிவப்பு நிறத்தை மேற்கொள்ள ; தூதுளங்கனியை வென்று துவர்த்த வாய் - தூதுளம் பழத்தை நிறத்தால் வென்று சிவந்த வாய் ; வெண்மை தோன்ற - வெண்ணிறமாக (மாறித்) தோன்ற ; கலவி

யால் இதழ் வெளுத்தல் : (கலிங்கத்துப் பரணி, 61.) காதல் அம் கள்-காதலாகிய சிறந்த கள் ; காதலைக் கள் என்பது : (திருக்குறள், 1145, 1281 ; சீவக சிந்தாமணி, 233.). (108)

204. விற்படர் பவளப் பாதத்
தலத்தக மெழுதி மேனி
பொற்பள வில்லா வாசப்
புனை நறுங் கலவை பூசி
அற்புத வடிக்கண் வாளிக்
கஞ்சன மெழுதி யம்பொற்
கற்பகங் கொடுக்க வாங்கிக்
கலன்றெரிந் தணிகின் ருரை.

வில் படர் பவளப் பாதத்து அலத்தகம் எழுதி, மேனி
பொற்பு அளவு இல்லா வாசப் புனை நறும் கலவை பூசி,
அற்புத வடிக்கண் வாளிக்கு அஞ்சனம் எழுதி, அம் பொன்
கற்பகம் கொடுக்க, வாங்கிக் கலன் தெரிந்து அணிகின்ருரை.

அம்பொன் கற்பகம் கொடுக்க வாங்கி - அழகிய பொன்மயமான கற்பகமரம் (அலத்தகம் முதலியவற்றை நினைத்தபடியே) கொடுத்துக் கொண்டிருக்க அவற்றை வாங்கிக்கொண்டு ; (அவற்றில்) அலத்தகம் வில் படர் பவளப் பாதத்து எழுதி - செம்பஞ்சுக் குழம்பை ஒளி வீசுகின்ற பவழம் போன்ற தம் கால்களில் தடவி ; அளவு இல்லா வாசப் புனை நறும் கலவை பொற்பு மேனி பூசி - மட்டுக்கடங்காது மிகுந்த நறுமணமுடைய புதுமையான நல்ல கலவைச் சந்தனத்தை அழகிய உடம்பில் பூசி ; அற்புத வடிக்கண் வாளிக்கு – (கண்டோர்) வியக்கும்படியான மாவடுப் போன்ற கண்களாகிய அம்புகளுக்கு ; அஞ்சனம் எழுதி - மை யிட்டு ; கலன் தெரிந்து அணிகின்ருரை - பொன்னணிகளைத் தக்கனவாகத் தேர்ந்தெடுத்து அணியுமிடங்களில் அணிந்து கொள்கின்றவரான அரக்கிமாரையும். (109)

205. புலிபடு மதுகை மைந்தர்
புதுப்பிழை யுயிரைப் புக்கு
நலிவிடை யமுத வாயா
னச்சுயிர்த் தயிற்க ணல்லார்

மெலிவுடை மருங்குன் மின்னி
னலமரச் சிலம்பு விம்மி
ஒலிபட வுதைக்குந் தோறு
மயிர்புள குதிக்கின் ருரை.

புலிபடு மதுகை மைந்தர்
புதுப்பிழை உயிரைப் புக்கு
நலிவு இடை, அமுத வாயால்
நச்சு உயிர்த்து, அயில் கண் நல்லார்
மெலிவு உடை மருங்குல் மின்னின்
அலமரச் சிலம்பு விம்மி
ஒலிபட, உதைக்கும் தோறும்,
மயிர் புளகு உதிக்கின்ருரை.

புலி படு மதுகை மைந்தர் புதுப்பிழை - புலியும் தோல்வியடையும்படியான வலிமையையுடைய (தமது கணவராகிய) வீரர்கள் செய்த புதிய பிழைகள் ; புக்கு உயிரை நலிவு இடை - (தமது மனதினுட்) புகுந்து உயிரையுமுட்பட வருத்திய பொழுது ; அயில்கண் நல்லார் – வேலாயுதம் போலும் கூரிய கண்களையுடைய பெண்களாகிய அரக்கிமார் ; அமுத வாயால் நச்சு உயிர்த்து - அமுதம் போலும் இனிய மொழிகளைப் பேசும் வாயினுலே நஞ்சைப் போலும் கொடிய சொற்களைச் சொல்லி ; மெலிவு உடை மருங்குல் மின்னின் அலமர - மெலிந்த இடையானது மின்னலைப் போலத் துவளும் படியும் ; சிலம்பு விம்மி ஒலிபட - காலணியாகிய சிலம்பு அசைந்து ஒலிக்கும்படியும் ; உதைக்கும் தோறும் - உதைக்குந் தோறும் உதைக்குந்தோறும் ; மயிர் புளகு உதிக்கின்ருரை - (தமது உடம்பில்) மயிர் சிலிர்க்கப்பெறுகின்றவ(ர்களாகிய அப் புலிபடு மதுகை மைந்த)ரையும்.

அயிற்கணல்லார் என்றது சினத்தால் வேலாயுதம் போலும் கொடுமையான பார்வையையுடையவராளுர் என்னும் பொருள்பட வந்தது. (110)

**206.** உள்ளுடை மயக்கா லுண்கண்
சிவந்துவாய் வெண்மை யூறித்
துள்ளிடைப் புருவங் கோணித்
துடிப்பவேர் பொடிப்பத் தூங்கும்

வெள்ளிடை மருங்கு லார்தம்
மதிமுகம் வேறெென் றாகிக்
கள்ளிடைத் தோன்ற நோக்கிக்
கணவரைக் கனல்கின் றாரை.

உள்உடை மயக்கால் உண்கண்
சிவந்து, வாய் வெண்மை ஊறித்
துள்ளிடைப் புருவம் கோணித்
துடிப்ப, வேர் பொடிப்பத் தூங்கும்
வெள்ளிடை மருங்குலார், தம்
மதிமுகம் வேறு ஒன்று ஆகிக்
கள்ளிடைத் தோன்ற, நோக்கிக்
கணவரைக் கனல்கின்றாரை.

உள்ளுடை மயக்கால் - (கள்ளைப் பருகியதனால்) மனத்திலெழுந்த மயக்கத்தாலே; உண்கண் சிவந்து வாய் வெண்மை ஊறி - மை தீட்டிய (கரிய) கண்கள் சிவந்தும் (செந்நிறமான) வாய் வெண்ணிறம் பெற்றும்; துள்ளிடை - துடிக்கும் பொழுது; புருவம் கோணித் துடிப்ப - புருவங்கள் வளைந்து துடிப்ப; வேர் பொடிப்ப - வேர்வைநீர் அரும்ப; தூங்கும் - அசைகின்ற. தூங்கும் மருங்குல், வெள்ளிடை மருங்குல் என இயையும். வெள்ளிடை மருங்குலார் - ஆகாயம் போன்ற (வடிவு தோன்றாத) இடையை யுடையவர்களான அரக்கிமார்; தம் – தங்களுடைய. கனல்கின்றாரை - கோபிக்கின்ற அரக்கிமார்களையும்.

கண் சிவத்தல், வாய் வெளுத்தல், புருவம் வளைதல், கண் வாய் புருவங்கள் துடித்தல், வேர்வையரும்புதல் என்பன கட்குடியினாலுண்டாகும் வேறுபாடுகள். மதுமயக்கத்தால் மதுக்கிண்ணத்தில் தங்கள் முகங்கள் மாறுபட்டுத் தோன்றுவதை வேறு பெண்களின் முகங்களாக நினைத்துத் தங்கள் கணவன்மார் வேறு பெண்களோடு உறவாடுவதாகக் கருதிக் கோபித்தனர் என்க. (111)

**207.** ஆலையின் மலையிற் சாலி
முளையினி லமுத வாரிச்
சோலையிற் றுவச ரில்லிற்
சோனகர் மனையிற் றாய

வேலையிற் கொளவொ ணுத
வேற்கணுர் குமுதச் செவ்வாய்
வாலெயிற் றூறு தீந்தேன்
மாந்தினர் மயங்கு வாரை.

ஆலையில், மலையில், சாலி முளையினில், அமுதவாரிச்
சோலையில், துவசர் இல்லில், சோனகர் மனையில், தூய
வேலையில், கொள ஒணுத, வேல்கணுர் குமுதச் செவ்வாய்
வால்எயிற்று ஊறு தீம்தேன், மாந்தினர் மயங்குவாரை.

ஆலையில் - கரும்பாலைகளிலும்; மலையில் - மலைகளிலும்; சாலி முளையினில் - செந்நெல் முளைகளிலிருந்தும்; அமுத வாரிச் சோலையில் - இனிய நீர்ப்பெருக்குப் பாயப்பெற்ற சோலைகளிலும்; துவசர் இல்லில் - கள்விற்போரின் வீடுகளிலும்; சோனகர் மனையில் - (கள்ளைக் குடிப்போரான) மிலேச்சர்களின் வீடுகளிலும்; தூய வேலையில் – சுத்தமான பாற்கடலிலும்; கொள ஒணுத - பெறுதல் கூடாத; வேல்கணுர் குமுதச் செவ்வாய் வால் எயிற்று ஊறு தீந்தேன் - வேல் போன்ற கண்களையுடைய பெண்களுடைய செவ்வாம்பல் மலர் போன்று சிவந்த வாயிதழ்களிலும் வெள்ளிய பற்களிலும் சுரக்கின்ற இனிமையான நீரை; மாந்தினர் - பருகி; மயங்கு வாரை - (களிப்பினுல்) மயங்கிக் கிடப்பவரான அரக்கர்களையும்.

ஆலைகளிற் கிடைக்கின்ற கருப்பஞ்சாறும், மலைகளிற் கிடைக்கின்ற தேனும், நெல் முளைகளைக்கொண்டு ஆக்கப்படும் கள்ளும், சோலை மலர்களினின்று கிடைக்கின்ற தேனும், தென்னை பனை முதலிய மரங்களிலிருந்து துவசர்கள் இறக்கி விற்கும் கள்ளும், திராட்சை முதலியவற்றினின்று சோனகர் வடித்தெடுக்கும் மதுவகைகளும், பாற்கடலில் தோன்றிய சாவா மருந்தாகிய அமுதமும் அப்பெண்களுடைய வாயிதழ் அமுதுக்கும் வாலெயிறூறிய நீருக்கும் இணையாகா என்றவாறு. வாயிதழ் அமுதத்தை அதராமிருத பானம் என்றும், வாலெயிறூறிய நீரினைத் தந்தாமிருத பானம் என்றும் கூறுவர். "பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி, வாலெயிறூறிய நீர்" (திருக்குறள்-1121). (112)

208. நலனுறு கணவர் தம்மை
நவையுறப் பிரிந்து விம்மு
முலையுறு கலவை தீய
முள்ளிலா முளரிச் செங்கேழ்

மலர்மிசை மலர்பூத் தென்ன
வளைக்கையால் வதனந் தாங்கி
அலமரு முயிரி ேனாடு
நெடிதுயிர்த் தயர்கின் றாரை.

நலன்உறு கணவர் தம்மை
நவை உறப் பிரிந்து, விம்மும்
முலைஉறு கலவை தீய,
முள்இலா முளரிச் செங்கேழ்
மலர்மிசை மலர்பூத்தென்ன,
வளைக்கையால் வதனம் தாங்கி,
அலமரும் உயிரிேனாடு,
நெடிது உயிர்த்து அயர்கின்றாரை.

நலன் உறு கணவர் தம்மை நவை உறப்பிரிந்து – அழகுமிக்க (தமது) கணவரை (அவர் தமக்குச் செய்த குற்றம் காரணமாக)த் தண்டிப்பதற்காக ஊடிப் பிரிந்து. கலவை தீய - (உள்ளெழுந்த வேட்கைத் தீயால்) பூசிய கலவைச் சந்தனம் தீந்துபோக. முள் இலா முளரிச் செங்கேழ் மலர் மிசை - (தண்டிலே) முள்ளில்லாத ஒரு செந்தாமரை மலர்மீது: (இது மகளிர் கையினுக்கு உவமை); மலர் பூத்தென்ன - மற்றும் ஒரு செந்தாமரை மலர் பூத்திருந்தது போல; மகளிர் கையும் முகமும் தனித்தனி செந்தாமரை மலரை யொத்திருத்தலால், கையால் முகத்தைத் தாங்கிய நிலைக்கு மலர் மிசை மலர் பூத்தல் உவமையாயிற்று. அலமரும் உயிரிேனாடு - வருந்துகின்ற தமது உயிரோடு; நெடிது உயிர்த்து - பெருமூச்சு விட்டு; அயர்கின்றாரை - தளர்கின்றவர்களான அரக்கிமாரையும்.

கணவர்களை வருத்துவதற்காக ஊடிப்பிரிந்த மகளிர் தாமே மிக வருந்தினர் என்றவாறு. (113)

209. ஏதியங் கொழுநர் தம்பா
லெய்திய காத லாலே
தாதியங் கமளிச் சேக்கை
யுயிரிலா வுடலிற் சாய்வார்
மாதுயர் காத றூண்ட
வழியின்மேல் வைத்த கண்ணார்
தூதியர் முறுவ னேக்கி
யுயிர்வந்து துடிக்கின் றாரை.

ஏதி அம் கொழுநர் தம்பால் எய்திய காதலாலே,
தாது இயங்கு அமளிச் சேக்கை உயிர் இலா உடலில் சாய்வார்,
மாதுயர் காதல் தூண்ட, வழியின்மேல் வைத்த கண்ணர்,
தூதியர் முறுவல் நோக்கி, உயிர்வந்து துடிக்கின்றாரை.

ஏதி அம் கொழுநர் தம்பால் எய்திய காதலாலே - படைக்கலம் வல்ல தம்முடைய அழகிய கணவர்மீது உண்டான வேட்கையாலே; தாது இயங்கு அமளிச்சேக்கை உயிர் இலா உடலில் சாய்வார் - (அவர்களைப் பிரிந்திருத்தல் ஆற்றாது) மலரிதழ்களாலான மெத்தையாகிய படுக்கையில் உயிரில்லாத வெற்றுடல் போலச் சாய்ந்து படுத்தவர்களாய்; மாதுயர் காதல் தூண்ட வழியின்மேல் வைத்த கண்ணர் - மிக்க துன்பத்தை விளைக்கின்ற ஆசையானது தூண்டுதலால் கணவர் வரும் வழிமேல் விழிவைத்தவர்களாகி; தூதியர் முறுவல் நோக்கி - தூதுவிடப்பட்ட மகளிரின் புன்சிரிப்பைப் பார்த்து; உயிர் வந்து துடிக்கின்றாரை - (போன) உயிர் மீண்டுவரப்பெற்று (மகிழ்ச்சியால்) துடிக்கின்ற அரக்கிமாரையும். (114)

**210.** சங்கொடு சிலம்பு நூலும்
பாதசா லகமுந் தாழப்
பொங்குபன் முரச மார்ப்ப
வில்லுறை தெய்வம் போற்றிக்
கொங்கலர் கூந்தற் செவ்வா
யரம்பையர் பாணி கொட்டி
மங்கல கீதம் பாட
மலர்ப்பலி வகுக்கின் றாரை.

சங்கொடு, சிலம்பும், நூலும், பாதசாலகமும், தாழப்
பொங்கு பல் முரசம் ஆர்ப்ப, இல் உறை தெய்வம் போற்றிக்
கொங்கு அலர் கூந்தல் செவ்வாய் அரம்பையர், பாணி கொட்டி,
மங்கல கீதம் பாட, மலர்ப்பலி வகுக்கின்றாரை.

சங்கொடு சிலம்பும் நூலும் பாதசாலகமும் தாழப் பொங்குபல் முரசம் ஆர்ப்ப - சங்கினாலாகிய வளைகளும், சிலம்பென்னும் காலணியும், நூலிற்கோத்த மாலைகளும் (அல்லது, நூலாற் கட்டிய மேகலையும்), பாதசரமென்னும் காலணியும் (ஒலிக்கின்ற ஓசைகளெல்லாம்) தாழும்படியாக மேலோங்கிப பலவகை முரசங்கள் ஆரவாரிக்க; கொங்கு அலர் கூந்தல் செவ்வாய் அரம்பையர் பாணி கொட்டி மங்கல கீதம் பாட - மணமுடைய மலரணிந்த கூந்தலையும் சிவந்த வாயையும் உடைய தேவமாதர்கள் கைகளால் தாளமிட்டு மங்களகரமான இசைப்பாட்டுக்களைப் பாட; இல் உறை தெய்வம்

போற்றி - (தங்கள்) மனையுறை தெய்வங்களைத் துதித்து; மலர்ப்பலி வகுக்கின்றாரை – மலர்களைக்கொண்டு அருச்சனைசெய்கின்றவர்களான அரக்கியரையும்; (இல்லுறைதெய்வத்திற்குப் பூப்பலியிடுதல் : சீவகசிந்தாமணி. 2394) (115)

**211.** இழைதொடர் வில்லும் வாளு
மிருளொடு மலைய யாணர்க்
குழைதொடர் நயனக் கூர்வேல்
குமரர்நெஞ் சுருவக் கோட்டி
முழைதொடர் சங்கு பேரி
முகிலென முழங்க மூரி
மழைதொடர் மஞ்ஞை யென்ன
விழாவொடு வருகின் றாரை.

இழைதொடர் வில்லும், வாளும், இருளொடு மலைய, யாணர்க் குழைதொடர் நயனக் கூர்வேல் குமரர் நெஞ்சு உருவக் கோட்டி, முழைதொடர் சங்கு, பேரி, முகில் என முழங்க, மூரி மழைதொடர் மஞ்ஞை என்ன விழாவொடு வருகின்றாரை.

இழை தொடர் வில்லும் வாளும்—(தாம் அணிந்துள்ள) அணிகலன்களிலிருந்து வீசுகின்ற வில்லென்றும் வாளென்றும் கூறப்படும் ஒளிகள்; இருளொடு மலைய - இருளோடு போர் செய்து அதனை யொழிக்க (இழைகளின் பேரொளி இருளை விலக்கிற்று என்பதாம்); யாணர்க் குழை தொடர் நயனக் கூர்வேல் - அழகிய குழைகளை அளாவும் (அதாவது, செவியளவோடி நீண்ட) கண்களாகிய கூரிய வேல்களை; குமரர் நெஞ்சு உருவக்கோட்டி - இளைஞர்களின் இதயங்களைத் துளைக்கும்படி செலுத்தி; முழை தொடர் சங்கு பேரி முகில் என முழங்க - உள்ளே துளைகொண்ட சங்குகளும் முரசங்களும் மேகம்போல் ஆரவாரிக்க; மூரி மழை தொடர் மஞ்ஞை என்ன- பெரிய மேகத்தைப் பின்பற்றிச் செல்லும் மயில்கள்போல்; விழாவொடு வருகின்றாரை - மங்கலச் சடங்குகளுடனே வருகின்றவர்களான அரக்கியரையும். (116)

**212.** பள்ளியின் மைந்த ரோடு
மூடிய பண்பு நீங்கி
உள்ளிய கலவிப் பூச
லுடற்றுதற் குருத்த நெஞ்சர்

மெள்ளவே யிழையை நீக்கி
யஞ்சன மெழுதி யேய்ந்த
கள்ளவா ணயன மென்னும்
வாளுறை கழிக்கின் றுரை.

பள்ளியின் மைந்தரோடும், ஊடிய பண்பு நீங்கி,
உள்ளிய கலவிப் பூசல் உடற்றுதற்கு உருத்த நெஞ்சர்,
மெள்ளவே இழையை நீக்கி, அஞ்சனம் எழுதி ஏய்ந்த
கள்ளவாள் நயனம் என்னும் வாள் உறை கழிக்கின்றுரை.

பள்ளியில் - படுக்கையில்; மைந்தரோடும் - (தமது) கணவரோடும்; ஊடிய பண்பு நீங்கி - பிணங்கிய தன்மையை விட்டு; உள்ளிய கலவிப் பூசல் உடற்றுதற்கு - (தாம்) நினைத்த புணர்ச்சியாகிய போரைச் செய்தற்கு; உருத்த நெஞ்சர் - விரும்பிய மனத்தையுடையவர்களாய்; இழையை நீக்கி - (அதற்கு இடையூறாயிருந்த) ஆபரணங்களைக் களைந்துவிட்டு; அஞ்சனம் எழுதி ஏய்ந்த - மை தீட்டியமைந்த; கள்ளவாள் நயனம் என்னும் - வஞ்சனையையும் ஒளியையுமுடைய கண்கள் என்று சொல்லப்படுகிற; வாள் உறை கழிக்கின்றுரை - வாளாயுதங்களை உறையினின்று நீக்குபவர்களான அரக்கிமாரையும்.

கலவியைப் போர் என்றதற் கேற்ப, கண்கள் வாட்படை யென்னப்பட்டன : கண்ணாகிய வாளுக்கு மை நெய்யும், இமை உறையும் ஆயின என்க : கலவியை விரும்பிய பெண்கள், தங்கள் பார்வையால் அதைத் தெரிவிப்பதற்காக இமையைத் திறந்தது, வாளை உறையினின்றும் உருவியதுபோலாயிற்று : அப்பார்வை மைந்தரை வருத்திக் கொடுமை விளைத்து ஒளி வீசி அழகு செய்ததால், 'கள்ளவாள் நயனமென்னும் வாள்' என்னப்பட்டது. (117)

**213.** ஓவிய மனைய மாத
ரூடின ருணர்வோ டுள்ளம்
மேவிய கரண முற்றுங்
கொழுநரோ டொழிய யாணர்த்
தூவியம் பேடை யென்ன
மின்னிடை துவள வேகி
ஆவியுந் தாமு மேபுக்
கருங்கத வடைக்கின் றுரை.

ஓவியம் அனைய மாதர் ஊடினர், உணர்வோடு உள்ளம்
மேவிய கரணம் முற்றும் கொழுநரோடு ஒழிய, யாணர்த்
தூவி அம் பேடை என்ன, மின் இடை துவள ஏகி,
ஆவியும் தாமுமே புக்கு, அரும் கதவு அடைக்கின்றாரை.

ஊடினர் (ஆகி) கரணம் முற்றும் கொழுநரோடு ஒழிய, துவள ஏகி அருங்கதவு அடைக்கின்றாராகிய ஓவியம் அனைய மாதரை : என இயைக்க.

உணர்வோடு - அறிவோடு; உள்ளம் மேவிய கரணம் முற்றும் – அந்தக்கரணங்களாகிய மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பவையெல்லாம்; கொழுநரோடு ஒழிய - (தம்மை விட்டு நீங்கிக்) கணவரைச் சார்ந்துவிடவும்; யாணர்த் தூவி அம் பேடை என்ன - அழகிய மெல்லிறகுடைய பேடையன்னம்போல; துவள - வருந்த; ஆவியும் தாமுமே புக்கு - (தமது) உயிரும் தாமுமே சென்று : (அறிவு மனம் முதலிய யாவும் கணவரிடத்திருக்க உயிரை மட்டுமே உடல் கொண்டு சென்றது என்றவாறு). அரும் கதவு அடைக்கின்றார் - அடைத்தற்கருமையான கதவினை அடைக்கின்றவரான; ஓவியம் அனைய மாதரை - சித்திரம் போன்ற அரக்கிமாரையும் : இங்கு மாதருடைய செயலற்ற நிலைக்கும் அழகுக்கும் சித்திரம் உவமையாயிற்று. அருங்கதவடைக்கின்றார் என்றமையால், மாதர் ஊடலில் தளர்ந்து போய் வலியில்லாமல் வருந்தி மெல்லக் கதவை அடைத்தனர் என்றவாறு. ஆவியும் தாமுமே யென்றதால், உயிர் மாத்திரமே மிச்சப்பட்டவர்களாய் என்றவாறு. (118)

**214.** கின்னர மிதுனம் பாடக்
கிளர்மழை கிழித்துத் தோன்று
மின்னெனத் தரளம் வேய்ந்த
வெண்ணிற விமான மூர்ந்து
பன்னக மகளிர் சுற்றிப்
பலாண்டிசை பரவப் பண்ணைப்
பொன்னகர் வீதி தோறும்
புதுமனை புகுகின் றாரை.

கின்னர மிதுனம் பாடக் கிளர்மழை கிழித்துத் தோன்றும் மின் எனத் தரளம் வேய்ந்த வெண்ணிற விமானம் ஊர்ந்து, பன்னக மகளிர் சுற்றிப் பலாண்டு இசை பரவப் பண்ணைப் பொன்னகர் வீதி தோறும், புதுமனை புகுகின்றாரை.

கின்னர மிதுனம் பாட - ஆணும் பெண்ணுமாகிய இரட்டையாய் நிற்கின்ற கின்னரரென்னும் தேவசாதியார் கீதம் பாடவும்; பன்னக மகளிர் பலாண்டு இசை பரவ - நாக கன்னியர் பல்லாண்டு வாழ்த்துப் பாடவும் : நீடூழி வாழ்க வென்று பாடுதல் பல்லாண்டு இசைத்தல் ஆகும்; பண்ணை சுற்றி - மகளிர் கூட்டம் சூழ்ந்து வர; சுற்றி - சுற்ற. கிளர் மழை கிழித்துத் தோன்றும் மின் என - மேலெழுந்த மேகங்களைக் கிழித்து விளங்குகின்ற மின்னலைப்போல; தரளம் வேய்ந்த வெண்ணிற விமானம் ஊர்ந்து - முத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட வெண்ணிறம் பொருந்திய பல்லக்குகளில் (அல்லது ஊர்திகளில்) ஏறி; பொன் நகர் வீதிதோறும் - அழகிய நகரமாகிய அந்த இலங்கையின் வீதிகளிலெல்லாம்; புதுமனை புகுகின்ருரை - புதிதாக(க் கணவர்) மனைக்குச் செல்கின்றவரான அரக்கிமாரையும் : புதுமனைபுகுதல் என்பது, மணமான பெண்ணைப் புதிதாகக் கணவன்மனைக்கு அழைத்துச் செல்லுதற்கும், மணமாகாத பெண்ணை மணம் முடிக்கவேண்டி மணமகன்மனைக்குக் கூட்டிப்போதலுக்கும், புதுவீடு கட்டிக் குடிபோதலுக்கும் ஏற்றவாறு பொருள் கொள்ளலாம்.

விமானத்திற்கு மழையும், அதனுள்ளிருந்த மங்கைக்கு மின்னலும் உவமை. விமானத் திரைகளினூடே மங்கையர் காட்சியளித்தது மழையைக் கிழித்து மின்னல் தோன்றியது போலிருந்ததுஎன்க.(119)

**215.** கோவையுங் குழையு மின்னக்
கொண்டலின் முரச மார்ப்பத்
தேவர்நின் ருசி கூற
முனிவர்சோ பனங்கள் செப்பப்
பாவையர் குழாங்கள் சூழப்
பாட்டொடு வான நாட்டுப்
பூவையர் பலாண்டு கூறப்
புதுமணம் புணர்கின் ருரை.

கோவையும் குழையும் மின்னக் கொண்டலின் முரசம் ஆர்ப்பத்
தேவர்நின்று ஆசி கூற, முனிவர் சோபனங்கள் செப்பப்
பாவையர் குழாங்கள் சூழப் பாட்டொடு வான நாட்டுப்
பூவையர் பலாண்டு கூறப் புதுமணம் புணர்கின்ருரை.

கொண்டலின் முரசம் ஆர்ப்ப - மேகங்கள் (இடிப்பது) போல மங்கல முரசங்கள் ஆரவாரிக்கவும்; தேவர் நின்று ஆசிகூற - தேவர்கள் (கால்கடுக்கக் காத்து) நின்றவண்ணம் ஆசீர்வாதம்

சொல்லவும்; முனிவர் சோபனங்கள் செப்ப - இருடிகள் மங்கல வாழ்த்துக் கூறவும்; வானநாட்டுப் பூவையர் பாட்டொடு பலாண்டு கூற - தேவலோகத்து மாதர்கள் இசைப்பாட்டுடனே பல்லாண்டு பாடவும்; பாவையர் குழாங்கள் சூழ - அரக்க மகளிரின் கூட்டங்கள் சூழ்ந்து நிற்கவும்; கோவையும் குழையும் மின்ன - (மணிகள் முதலியன) கோக்கப்பட்ட மாலைகளும் குழையென்னும் காதணிகளும் மின்னிக் கொண்டிருக்கவும்; புதுமணம் புணர்கின்றாரை - புதிதாகக் கல்யாணம் செய்துகொள்கின்றவர்களான அரக்கரையும். (120)

இதன் பின் 25-ஆம் ஏட்டில்,

215. (a) இத்திற மனந்த கோடி யிராக்கதக் குழுவினுள்ளார்
தத்தம செய்கை யெல்லாந் தனித்தனி நோக்கித் தாங்கா
தெத்திற மிவர்தம் சீரை யெண்ணுவ தெனவே யண்ணல்
உத்தமன் தேவி தன்னை யொழிவற நாடிப் போனான்.

என்ற பாடல் உளது.

## அநுமன் கும்பகன்னனைக் காண்டல்

216. இயக்கிய ரரக்கி மார்க
ளாகிய ரின்சொல் விஞ்சை
முயற்கறை யிலாத திங்கண்
முகத்தியர் முதலி னோரை
மயக்கற நாடி யேகு
மாருதி மலையின் வைகும்
கயக்கமி றுயிற்சிக் கும்ப
கருணனைக் கண்ணிற் கண்டான்.

இயக்கியர், அரக்கி மார்கள், நாகியர், இன்சொல் விஞ்சை
முயல்கறை இலாத திங்கள் முகத்தியர், முதலினோரை
மயக்கற நாடி ஏகும் மாருதி, மலையின் வைகும்
கயக்கமில் துயிற்சிக் கும்ப கருணனைக் கண்ணிற் கண்டான்.

இயக்கியர்......முதலினோரை - இயக்க மாதர்களும், அரக்க மாதர்களும், நாககன்னிகைகளும், இனிய சொற்களைப் பயிலுகின்ற வித்தியாதர மாதராகிய முயலென்னும் களங்கமில்லாத நிறைமதிபோன்ற முகத்தையுடையவர்களும் (என்ற இவர்) முதலானவர்களையும்; மயக்கு அற நாடி - சந்தேகமில்லாதபடி நன்றாய்ப் பார்த்துக் கொண்டே; ஏகும் மாருதி - செல்கின்றவனான அநுமன்; மலையின் வைகும் - மலைபோலப் பெரிய உருவத்துடன் படுத்திருக்கிற;

கயக்கம் இல் துயிற்சிக் கும்பகருணனைக் கண்ணிற் கண்டான் – கலக்கமில்லாத உறக்கத்தையுடைய கும்பகன்னனைக் கண்களாற் பார்த்தான். (121)

## கும்பகன்னன் பள்ளியறைச் சிறப்பு

**217.** ★ ஓசனை யேழகன் றுயர்ந்த தும்பரின்
வாசவன் மணிமுடி கவித்த மண்டபம்
ஏசுற விளங்குவ திருளை யெண்வகை
ஆசையி னிலைகெட வகற்றி யான்றது.

ஓசனை ஏழ் அகன்று உயர்ந்தது, உம்பரின்
வாசவன் மணிமுடி கவித்த மண்டபம்
ஏசு உற விளங்குவது, இருளை எண்வகை
ஆசையில் நிலைகெட அகற்றி ஆன்றது.

ஓசனை ஏழு அகன்று உயர்ந்தது - (கும்பகன்னனுடைய பள்ளியறை) ஏழு யோசனையளவு அகன்று அவ்வேழுயோசனையளவு உயர்ந்ததாய்; உம்பரின் வாசவன் மணிமுடி கவித்த மண்டபம் ஏசு உற விளங்குவது – தேவலோகத்தில் இந்திரன் இரத்தின கிரீடம் சூட்டப் பெறுதற் கிடமான சுதர்மையென்னும் மண்டபமும் இகழ்ச்சியுறும்படி சிறந்து தோன்றுவதாய்; இருளை நிலைகெட எண்வகை ஆசையில் அகற்றி ஆன்றது – இருட்டை இல்லாதபடி எட்டுத் திசைகளிலும் ஓட்டி (ஒளியுடன்) அமைந்தது. (122)

## கும்பகன்னன் துயிலுநிலை 218—224

**218.** அன்னத னடுவணோ ரமளி மீமிசைப்
பன்னக வரசெனப் பரவை தானெனத்
துன்னிரு ளொருவழித் தொக்க தாமென
உன்னருந் தீவினை யுருக்கொண் டென்னவே.

அன்னதன் நடுவண் ஓர் அமளி மீமிசைப்
பன்னக அரசு எனப் பரவைதான் எனத்
துன்இருள் ஒருவழித் தொக்கதாம் என
உன்னரும் தீவினை உருக்கொண் டென்னவே.

இப்பாடல் முதல் 129-ஆம் பாடல் முடிய ஒரு தொடர். அன்ன தன் நடுவண் – அத்தன்மைத்தாகிய பள்ளியறையின் நடுவில்; ஓர் அமளி மீ மிசை - ஒரு படுக்கையின் மீது; பன்னக அரசு என – பாம்புகளுக்கு அரசனான ஆதிசேடன்போலவும்; பரவைதான் என – கடல்போலவும்; துன் இருள் ஒருவழித் தொக்கது ஆம் என - செறிந்த இருளெல்லாம் ஓரிடத்திற் சேர்ந்திருந்ததுபோலவும்; உன்னரும் தீவினை உருக்கொண்டு என்ன – நினைக்கத்தகாத பாவங்கள் (திரண்டு) ஒரு வடிவத்தைக் கொண்டாற்போலவும். 'உறக்கம் எய்தினன்' என, 129-ஆம் செய்யுளோடு முடிக்க. கும்ப கன்னனுக்கு ஆதிசேடன், பெருங்கடல், ஒரு வழித்தொக்க இருள், உருக்கொண்ட தீவினை என்ற நான்கும் உவமைகள். (123)

இதன் பின் 25-ஆம் ஏட்டில்,

218. (a) "கிடந்தனன் வடவரை கிடந்த போலிரு
தடம்புயந் திசைகளை யளக்கத் தாங்கிய
உடம்புறு முயற்சியி னுறங்கினன் கடை
இடம்பெறு தீவினை யாவு மேத்தவே."

என்ற பாடல் உளது.

**219.** முன்னிய கனைகடன் முழுகி மூவகைத்
தன்னியல் கதியொடுந் தழுவித் தாதுகு
மன்னெடுங் கற்பக வனத்து வைகிய
இன்னிளந் தென்றல்வந் திழுகி யேகவே.

முன்னிய கனைகடல் முழுகி, மூவகைத்
தன் இயல் கதியொடும் தழுவித் தாது உகு
மன்நெடும் கற்பக வனத்து வைகிய,
இன் இளம் தென்றல் வந்து இழுகி ஏகவே.

முன்னிய கனைகடல் முழுகி–முன்னுள்ள ஒலிக்கின்ற கடல் நீரில் முழுகி; தன் இயல் மூவகை கதியொடும் தழுவி – தனக்குப் பொருந்திய (மந்த நடை, இடைத்தரமான நடை, விரைவான நடையென்னும்) மூன்று வகையான நடைகளோடுங் கூடி; தாது உகு மன் நெடுங் கற்பக வனத்து வைகிய - மகரந்தப்பொடிகள் சிந்தப் பெற்ற நிலையான நீண்ட கற்பகச் சோலையில் தங்கிய; இன் இளம் தென்றல் வந்து இழுகி ஏக - இனிய இளமையான தென்றற் காற்று வந்து தடவிச் செல்ல (உறக்கம் எய்தினன், 129.) என முடியும். (124)

**220.** வானவர் மகளிர்தாள் வருட மாமதி
ஆனனங் கண்டமண் டபத்து ளாய்கதிர்க்
கானகு காந்தமீக் கான்ற காமர்நீர்த்
தூநிற நறுந்துளி முகத்திற் றூற்றவே.

வானவர் மகளிர் தாள் வருட, மாமதி
ஆனனம் கண்ட மண்டபத்துள், ஆய் கதிர்க்
கால் நகு காந்தம் மீக் கான்ற காமர்நீர்த்
தூ நிற நறும் துளி முகத்தில் தூற்றவே.

வானவர்மகளிர் தாள் வருட – தேவமாதர்கள் (தன்) கால்களைப் பிடிக்கவும்; ஆனனம் மாமதி கண்ட - (அத்தேவ மாதர்களின்) முகங்களாகிய நிறைமதியங்களைப் பார்த்த; மண்டபத்துள் – அந்தப் பள்ளியறையில்; ஆய்கதிர்க் கால் நகு காந்தம் - சிறந்த ஒளியையுடைய தூண்களாய் விளங்குகின்ற சந்திரகாந்தக் கற்கள்; மீக்கான்ற காமர் நீர்த் தூநிற நறுந்துளி – மேல்நின்று சொரிகின்ற அழகிய (இனிய) நீரினது சுத்தமான நிறத்தையுடைய நல்ல துளிகளை; முகத்தில் தூற்றவே - முகத்தில் தூவ (உறக்கம் எய்தினான், 129).

சந்திரன்முன் நீர்த்துளிகளைச் சொரிகின்ற ஒருவகைக் கல் சந்திர காந்தம் எனப்படும். சந்திரகாந்தக் கற்கள் தேவமாதர் முகங்களை மதியங்களாக நினைத்து நீர்த்துளிகளைத் தூவின என்றவாறு. (125)

**221.** மூசிய வுயிர்ப்பெனு முடுகு வாதமும்
வாசலின் புறத்திடை நிறுவி வன்மையால்
நாசியி னளவையி னடத்தக் கண்டவன்
கூசினன் குதித்தனன் விதிர்த்த கையினான்.

மூசிய உயிர்ப்பு எனும் முடுகு வாதமும்,
வாசலின் புறத்திடை நிறுவி, வன்மையால்,
நாசியின் அளவையின் நடத்தக் கண்டவன்,
கூசினன், குதித்தனன், விதிர்த்த கையினான்.

இப்பாட்டு முன்னும் பின்னுமுள்ள பாடல்களோடு இயைபின்றி நிற்றலால் இடைச் செருகலாயிருக்கலாமென்று தோன்றுகின்றது. இதுபோலவே யுத்தகாண்டம், கும்பகருணன் வதைப் படலம், 50-ஆம் பாட்டும் பொருத்தமில்லாதபடி அங்கே இடைச்செருகலாய் வந்துள்ளமை அறிதற்பாலதாம்.

மூசிய - அடர்ந்த; உயிர்ப்பு - வெளிவிடும் மூச்சு; முடுகு வாதம்- விரைந்து செல்லும் காற்று. கண்டவன் - கண்டவனாகிய அநுமன். விதிர்த்த - நடுங்கிய. (126)

**222.** பூழியின் றொகைவிசும் பணவப் போய்ப்புகுங்
கேழில்வெங் கொடியவ னுயிர்ப்புக் கேடிலா
வாழிய வுலகெலாந் துடைக்கு மாருதம்
ஊழியி னிறுதிபார்த் துழல்வ தொக்கவே.

பூழியின் தொகை விசும்பு அணவப் போய்ப்புகும்
கேழில்வெம் கொடியவன் உயிர்ப்புக் கேடிலா
வாழிய உலகெலாம் துடைக்கும் மாருதம்,
ஊழியின் இறுதிபார்த்து உழல்வது ஒக்கவே.

பூழியின் தொகை விசும்பு அணவ - புழுதியின் கூட்டம் ஆகாயத்தை அடையும்படி; போய்ப் புகும் - வெளியே போய் உள்ளே வந்துகொண்டிருக்கிற; கேழ் இல் வெம் கொடியவன் உயிர்ப்பு - ஒப்பில்லாத மிகவும் கொடியவனான கும்பகன்னனது மூச்சுக் காற்று; கேடு இலா உலகு எலாம் துடைக்கும் மாருதம் – அழிதலில்லாமல் நெடுங்காலம் நிலைபெற்ற உலகங்களை யெல்லாம் (முடிவு காலத்தில்) அழிப்பதான சூருவளிப் புயல்; வாழிய : அசை. ஊழியின் இறுதி பார்த்து உழல்வது ஒக்கவே - அவ்வூழி முடிவு காலத்தின் வருகையை எதிர்பார்த்து அதுவரை ஓரிடத்தில் திரிந்துகொண்டிருப்பதை ஒத்திருக்க (உறக்கம் எய்தினான், 129).

கும்பகன்னன் மூச்சுக்கு உலகம் துடைக்கும் காற்று உவமை. (127)

**223.** பகையென மதியினைப் பகுத்துப் பாடுற
அகையில்பேழ் வாய்மடுத் தருந்து வானெனப்
புகையொடு முழங்குபே ருயிர்ப்புப் பொங்கிய
நகையிலா முழுமுகத் தெயிறு நாறவே.

பகை என மதியினைப் பகுத்துப் பாடுற
அகை இல் பேழ் வாய்மடுத்து, அருந்துவான் எனப்
புகையொடு, முழங்குபேர் உயிர்ப்புப் பொங்கிய
நகைஇலா முழுமுகத்து, எயிறு நாறவே.

மதியினை - (பூரண) சந்திரனை; பகை என - (அரக்கராகிய தங்களுக்குப்) பகைவனென்று நினைத்து; பகுத்து – (அச்சந்திரனை இரு கூறுகப்) பிளந்து; பாடு உற – (தனது வாயின் இரண்டு) பக்கத்திலும் பொருந்தும்படி; அகை இல் பேழ்வாய் மடுத்து - கெடாத பெருத்த (தனது) வாயிலிட்டு; அருந்துவான் என - உண்கின்றனன் (இவன்) என்று தோன்றும்படி; புகையொடு முழங்கு பேர் உயிர்ப்புப் பொங்கிய - புகையுடனே ஒலிக்கின்ற பெரிய மூச்சு மிகுதியாய் வரப் பெற்ற; நகையிலா முழுமுகத்து எயிறு நாற – சிரிப்பில்லாத பெரிய முகத்தில் வக்கிர தந்தங்கள் விளங்கிக்கொண்டிருக்க (உறக்கம் எய்தினன், 129). (128)

**224.** தடையுறு மந்திரந் தகைந்த நாகம்போல்
இடையுற வரியதோ ருறக்க மெய்தினன்
கடையுக முடிவெனுங் கால மோர்ந்தயல்
புடைபெய ராநெடுங் கடலும் போலவே.

தடையுறு மந்திரம் தகைந்த நாகம்போல்,
இடையுறவு அரியது ஓர் உறக்கம் எய்தினன்,
கடையுக முடிவெனும் காலம் ஓர்ந்து அயல்
புடைபெயரா நெடும் கடலும் போலவே.

தடை உறு மந்திரம் - தடையாகவுற்ற மந்திரத்தால்; தகைந்த நாகம் போல் - கட்டுப்பட்ட பாம்பைப் போலவும்; கடை உகம்...... போல - கடைசியுகத்தின் முடிவென்கிற ஊழிக்காலத்தை எதிர் பார்த்துக்கொண்டு பக்கத்திலெங்கும் பொங்கிவராமல் ஒரு நிலையில் நிற்கின்ற பெரிய கடலைப் போலவும்; இடையுறவு அரியது ஓர் உறக்கம் எய்தினன் - இடையூறு இல்லாத பெரிய தூக்கத்தை அடைந்திருந்தான்; (அக்கும்பகன்னன்).

உகமுடிவை எதிர்நோக்கி அடங்கியிருக்கும் கடல் உவமையாக வருதல் பின் 317-ஆம் பாட்டினும் காண்க. (129)

இதன்பின் 17-ஆம் ஏட்டுள் ஓர் அதிகப் பாடல் உள்ளது.

**224.** (a) குடந்தருஞ் செவிகளுங் குன்ற நாணுறத்
தடந்தரு கரங்களுந் தாளுந் தாங்குருக்
கிடந்ததோ ரிருளெனக் கிடந்து ளான்றனை
அடைந்தன னஞ்சுரு தநும ணுண்மையான்.

கும்பகன்னனை இராவணனென்று நினைத்து அநுமன் சினத்தல்

225. ஆவ தாகிய தன்மைய
☆ வரக்கனை யரக்கர்
கோவெ னுநின்ற குணமிலி
யிவனெனக் கொண்டான்
காவ னாட்டங்கள் பொறியுகக்
கனலெழக் கனன்றான்
ஏவ னோவிவன் மூவரி
னொருவனு மீட்டான்.

ஆவது ஆகிய தன்மைய அரக்கனை, அரக்கர்
கோ எனு நின்ற குணம் இலி இவன் எனக் கொண்டான் ;
காவல் நாட்டங்கள் பொறி உகக் கனல் எழக் கனன்றான் ;
'ஏவனோ இவன் ? மூவரின் ஒருவனும் ஈட்டான் !'

(முன் 216-ஆம் பாடலில் 'ஏகும் மாருதி.........கும்பகருணனைக் கண்ணிற் கண்டான்' என்று கூறப்பட்டது. அங்ஙனம் கண்ட மாருதி என்று இங்கே எழுவாய் வருவித்துக் கொள்க.) ஆவது ஆகிய தன்மைய அரக்கனை – அவ்வாறான தன்மையையுடைய இராக்கதனான கும்பகன்னனை(க் கண்ட மாருதி). இவன் ஏவனோ-'இவன் யாரோ ?' மூவரின் ஒருவன் ஆம் ஈட்டான் - திரிமூர்த்திகளில் ஒருவன் என்று சொல்லும்படியான வலிமையுடையவனாய் இருக்கிறானே !; இவன் அரக்கர் கோ எனு நின்ற குணம் இலி எனக் கொண்டான் – இவனே இராக்கதரின் தலைவன் என்று கூறாநின்ற நற்குணம் சிறிதுமில்லாத இராவணன் என்று எண்ணினானாகி; (உடனே) காவல் நாட்டங்கள் - (இயல்பாகவே அருளால்) பாதுகாக்கவல்ல கண்கள்; பொறி உகக் கனல் எழக் கனன்றான் - தீப்பொறி பறக்குமாறும் பார்த்த இடம் தீயெழுமாறும் கோபம் கொண்டான். (130)

இராவணன் அல்லன் என்று சினந்தணிதல்

226. குறுகி நோக்கிமற் றவன்றலை
யொருபதுங் குன்றாத்
திறுகு திண்புய மிருபது
மிவற்கிலை யென்னா

மறுகி யேறிய முனிவெனும்
வடவைவெங் கனலை
அறிவெ னும்பெரும் பரவையம்
புனலினு லவித்தான்.

குறுகி நோக்கி, மற்று அவன் தலை ஒருபதும், குன்று ஒத்து
இறுகு திண்புயம் இருபதும் இவற்கு இலை! என்று,
மறுகி ஏறிய முனிவு எனும் வடவை வெம் கனலை,
அறிவு எனும் பெரும் பரவை அம் புனலினால் அவித்தான்.

அவன் - அவ்வாறு கனன்ற அநுமன்; மற்று - பின்பு; குறுகி நோக்கி - அருகிற் சென்று பார்த்து; குன்று ஒத்து இறுகு திண்புயம் இருபதும் - மலையை யொத்துத் திண்ணியவான வலிய இருபது தோள்களும்; மறுகி ஏறிய முனிவு எனும் வடவை வெம் கனலை - மனத்தில் மாறுபடக் கருதியதனாலுண்டாகி வளர்ந்த கோபமாகிய வடவை யென்னும் கொடிய தீயை; அறிவு எனும் பெரும் பரவை அம்புனலினால் அவித்தான் - தனது அறிவாகிய பெரிய கடல் நீரினால் தணித்தான்.

அநுமன் முனிவுக்கு வடவைக் கனலும்; அவன் அறிவுக்குப் பரவைப் புனலும் உவமைகள்: ('அறிவெனு நீரால் அவித்தொழுக லாற்றின்' அறநெறிச். 81; நாலடி. 68.) (131)

## அநுமன் கும்பகன்னன் பள்ளியறையைக் கடந்து செல்லல்

**227.** அவித்து நின்றெவ னாயினு
மாகவென் றங்கை
கவித்து நீகிட சிலபகல்
என்பது கருதாச்
செவிக்குத் தேனன்ன விராகவன்
புகழினைத் திருத்துங்
கவிக்கு நாயக னனையவ
னுறையுளைக் கடந்தான்.

அவித்து நின்று, 'எவன் ஆயினும் ஆக!' என்று அங்கை
கவித்து, 'நீ கிட சிலபகல்!' என்பது கருதாச்
செவிக்குத் தேன் அன்ன இராகவன் புகழினைத் திருத்தும்
கவிக்கு நாயகன், அனையவன் உறையுளைக் கடந்தான்.

செவிக்குத் தேன் அன்ன இராகவன் புகழினைத் திருத்தும் கவிக்கு நாயகன் - (கேட்பவருடைய) காதுகளுக்கெல்லாம் தேன் போல் தித்திக்கும் ரகுகுலத்தோனுகிய இராமபிரானது புகழைச் சொல்லும் குரக்கினத் தலைவனுன அநுமன் : திருத்தும் - சொல்லும் ('திருத்தாய் செம்போத்தே', பெரியதிருமொழி, 10–10 : 1); அவித்து நின்று - (கோபத்தைத்) தணித்து நின்று ; எவனுயினும் ஆக என்று- இவன் யாராயிருந்தாலும் இருக்கட்டும் என்று ; அங்கை கவித்து - அகங்கையைக் கவித்து ; நீ கிட சில பகல் என்பது கருதா – 'நீ இன்னும் சில நாட்கள் வரை (இவ்வாறு படுத்துக்) கிட' என்று மனதிலே நினைத்து ; அனையவன் உறையுளைக் கடந்தான் - அந்தக் கும்பகன்னனுடைய மாளிகையைக் கடந்து சென்ருன். (132)

### அநுமன் மேலும் பல இடங்களிலும் தேடல்

**228.** மாட கூடங்கண் மாளிகை
யோளிகண் மகளிர்
ஆட ரங்குக ளம்பலந்
தேவரா லயங்கள்
பாடல் வேதிகை பட்டிமண்
டபமுதற் பலவும்
நாடி யேகின னிராகவன்
புகழெனு நலத்தான்.

மாட கூடங்கள், மாளிகை ஓளிகள், மகளிர்
ஆடு அரங்குகள், அம்பலம், தேவர் ஆலயங்கள்,
பாடல் வேதிகை, பட்டிமண்டபம், முதல் பலவும்
நாடி ஏகினன், இராகவன் புகழ்எனும் நலத்தான்.

இராகவன் புகழ் எனும் நலத்தான் – ரகுகுலத்தோனுகிய இராம பிரானது புகழ் (வடிவுகொண்டு வந்தது) என்று சொல்லத்தக்க சிறப்பினனுகிய அநுமன்; மாளிகை ஓளிகள் - வீட்டு வரிசைகள் : ('மாளிகையோளி' : பால : மிதிலை. 22). மகளிர் ஆடு அரங்குகள் - மாதர் ஆடல் புரிகின்ற நடனசாலைகள். அம்பலம் - பலரும் கூடும் படியான இடங்கள். பாடல் வேதிகை - இசை பாடுதற்குரிய மேடைகள். பட்டி மண்டபம் - புலவர் சொற்போர் நிகழ்த்தும் இடங்கள். நாடி ஏகினன் - (சீதையைத்) தேடிக்கொண்டு சென்ருன். (133)

### தேடுங்கால் அநுமன் நிலை

**229.** மணிகொள் வாயிலிற் சாளரத்
தலங்களின் மலரிற்
கணிகொ ணாளத்திற் காலெனப்
புகையெனக் கலக்கும்
நுணுகும் வீங்குமற் றவனிலை
யாவரே நுவல்வார்
அணுவின் மேருவி னாழியா
னெனச்செலு மறிவோன்.

மணிகொள் வாயிலில், சாளரத் தலங்களில், மலரில்,
கணிகொள் நாளத்தில், கால் எனப் புகை எனக் கலக்கும்,
நுணுகும், வீங்கும், மற்று அவன் நிலை யாவரே நுவல்வார் ?
அணுவில் மேருவின் ஆழியான் எனச் செலும் அறிவோன்.

அணுவில் மேருவின் ஆழியான் எனச் செலும் அறிவோன் – மிகச் சிறிய பொருளாகிய அணுவிலும் மிகப் பெரிய பொருளாகிய மேரு மலையிலும் அணுவுக்கணுவாகவும் மேருவுக்கு மேருவாகவும் உட்புகுந்தும் கடந்து பரவியும் இருப்பவனாகிய சக்கரத்தையுடைய திருமாலைப்போல் செல்கின்றவனாகிய அநுமன் ; மணிகொள் வாயிலில்- இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற (மாளிகை) வாயில்களினுள்ளும் ; சாளரத்தலங்களில் - பலகணியிடங்களினுள்ளும் ; மலரில் - பூக்களினுள்ளும் ; கணிகொள் நாளத்தில் – ஊன்றியுணரத்தக்க பூந்தண்டுகளின் துளைகளுள்ளும் ; கால் எனப் புகை எனக் கலக்கும் - காற்றைப் போலவும் புகையைப் போலவும் நுண்ணிதிற் சென்று தேடுவான் ; நுணுகும் வீங்கும் – (அந்தந்த இடத்தின் வழிக்குத் தக்கபடி) மிகச் சிறிய வடிவங் கொள்வான், பெரிய வடிவமும் எடுப்பான் ; அவன் நிலை யாவரே நுவல்வார் - அவன் வேண்டியபடி வடிவங் கொள்ளுகின்ற தன்மையை யாராலேதான் சொல்ல முடியும் ? (134)

### அநுமன் வீடணன் இல்லிற் புகல்

**230.** ஏந்த லிவ்வகை யெவ்வழி
மருங்கினு மெய்திக்
காந்தள் மெல்விரன் மடந்தையர்
யாரையுங் காண்பான்

வேந்தர் வேதியர் மேலுளோர்
கீழுளோர் விரும்பப்
போந்த புண்ணியன் கண்ணகன்
கோயிலுட் புக்கான்.

ஏந்தல் இவ்வகை எவ்வழி மருங்கினும் எய்திக்
காந்தள் மெல்விரல் மடந்தையர் யாரையும் காண்பான்,
வேந்தர், வேதியர், மேலுளோர், கீழுளோர், விரும்பப்
போந்த புண்ணியன் கண்ணகன் கோயிலுள் புக்கான்.

ஏந்தல் - பெருமையிற் சிறந்தவனை அநுமன். காந்தள் - செங்காந்தள் மலரின் இதழ்போன்ற. மேல் உளோர் — மேலுலகத்திலுள்ளவர்கள். கீழ் உளோர் - கீழுலகத்திலுள்ளவர்கள். புண்ணியன் - நல்வினைகளையேயுடையவனை வீடணனது; கண் அகன் கோயில் உள் புக்கான் - இடமகன்ற மாளிகையினுள்ளே சென்ருன். (135)

### வீடணனை நெருங்கல்

231. பளிக்கு வேதிகைப் பவழத்தின்
கூடத்துப் பசுந்தேன்
துளிக்குங் கற்பகப் பந்தரிற்
கருநிறத் தோர்பால்
வெளித்து வைகுத லரிதென
வவருரு மேவி
ஒளித்து வாழ்கின்ற தருமமன்
ஞன்றனை யுற்ருன்.

பளிக்கு வேதிகைப் பவழத்தின் கூடத்துப் பசுந்தேன்
துளிக்கும் கற்பகப் பந்தரில், கருநிறத்தோர்பால்
வெளித்து வைகுதல் அரிதுஎன, அவர் உரு மேவி,
ஒளித்து வாழ்கின்ற தருமம் அன்ஞன்தனை உற்ருன்.

கருநிறத்தோர்பால் - கருநிறமுடைய அரக்கர்களினிடையே; வெளித்து வைகுதல் அரிது என - வெளிப்படையாய்(த் தனக்குரிய தான) வெண்ணிற வுருக்கொண்டு வாழ்வது முடியாதென்றெண்ணி; அவர் உருமேவி - அவ்வரக்கர்களுக்குரிய கரிய வடிவத்தையே தானும் கொண்டு; பசும் தேன் துளிக்கும் கற்பகப் பந்தரில் — புதுத்

தேன் துளிகளைச் சிதறுகின்ற கற்பக மரங்கள் அடர்ந்து நிழல் செய்கின்ற இடத்திலே; பளிக்கு வேதிகைப் பவழத்தின் கூடத்து - படிகக் கற்களினாலாகிய மேடைகளையுடைய பவழமயமான மாளிகையில்; ஒளித்து வாழ்கின்ற - (தன்னிலைமையை அவ்வரக்கர்கள் அறியாதபடி) மறைத்து வாழ்கின்ற; தருமம் அன்னான்தனை உற்றான் - தருமத்தைப் போன்றவனை வீடணனை நெருங்கி நோக்கினான் (அநுமன்). தருமத்தின் இயல்பான நிறம் வெண்மை என்ப. (136)

## வீடணனை நல்லவன் என்று தெரிந்து அநுமன் மேற்செல்லல்

**232.** உற்று நின்றவ னுணர்வைத்தன்
னுணர்வினு லுணர்ந்தான்
குற்ற மில்லதோர் குணத்தின
னிவனெனக் கொண்டான்
செற்ற நீங்கிய மனத்தின
னொருசிறை சென்றான்
பொற்ற மாடங்கள் கோடியோர்
நொடியிடைப் புக்கான்.

உற்று நின்று அவன் உணர்வைத் தன்
உணர்வினால் உணர்ந்தான்,
குற்றம் இல்லதோர் குணத்தினன்
இவன், எனக் கொண்டான்,
செற்றம் நீங்கிய மனத்தினன்,
ஒருசிறை சென்றான்.
பொற்ற மாடங்கள் கோடி ஓர்
நொடியிடைப் புக்கான்.

உற்று நின்று - (இங்ஙனம் அநுமன் வீடணனை) நெருங்கி நின்று; அவன் உணர்வை - வீடணனது மனப்பண்பை; தன் உணர்வினால் - தனது நுண்ணறிவுகொண்டு; உணர்ந்தான் - ஆராய்ந்தறிந்தவனாய்; செற்றம் - மனவைரம்: ('செற்றம் நீக்கிய மனத்தினர்': பகைமை நெடுங்காலம் நிகழ்வது செற்றம்: திருமுருகு, 132: உரை). சிறை - பக்கம். பொற்ற - அழகுமிக்க: நல்ல: பொன் மலிந்த. (137)

அநுமன் இந்திரசித்தின் மாளிகையை அடைதல் 233-4

233. முந்த ரம்பையர் முதலினர்
முழுமதி முகத்துச்
சிந்து ரம்பயில் வாய்ச்சியர்
பலரையுந் தெரிந்து
மந்தி ரம்பல கடந்துதன்
மனத்தின்முன் செல்வான்
இந்தி ரன்சிறை யிருந்தவா
யிலின்கடை யெதிர்ந்தான்.

முந்து அரம்பையர் முதலினர், முழுமதி முகத்துச்
சிந்துரம் பயில் வாய்ச்சியர், பலரையும் தெரிந்து,
மந்திரம் பல கடந்து, தன் மனத்தின்முன் செல்வான்,
இந்திரன் சிறையிருந்த வாயிலின்கடை எதிர்ந்தான்.

முந்து - சிறந்த. சிந்துரம் – சிவப்புநிறம். வாய்ச்சியர் - வாயையுடைய பெண்கள். மந்திரம் - மாளிகை. மனத்தின்முன் செல்வான்- தன் மனத்தின் வேகத்திற்கும் முந்தி விரைபவனுன அநுமன்: இந்திரன் சிறையிருந்த வாயிலின்கடை எதிர்ந்தான் - (முன்பு) தேவேந்திரன் சிறை கிடந்த (இந்திரசித்தினது வீட்டின்) கடைவாயிலைச் சேர்ந்தான். (138)

234. ஏதி யேந்திய தடக்கையர்
பிறையெயி றிலங்க
மூது ரைப்பெருங் கதைகளும்
பிதிர்களு மொழிவார்
ஓதி லாயிர மாயிர
முறுவலி யரக்கர்
காது வெஞ்சினக் களியினர்
காவலைக் கடந்தான்.

ஏதி ஏந்திய தடக்கையர், பிறை எயிறு இலங்க,
மூதுரைப் பெருங் கதைகளும், பிதிர்களும், மொழிவார்,
ஓதில், ஆயிரம் ஆயிரம் உறுவலி அரக்கர்,
காது வெஞ்சினக் களியினர் காவலைக் கடந்தான்.

ஏதி - ஆயுதம். முதுரைப் பெருங்கதைகளும் பிதிர்களும் மொழி வார் - பழமொழிகளோடுகூடிய நீண்ட கதைகளையும், விடுகதை களையும் பேசிக்கொண்டிருக்கிறவர்களும் ; காது வெம் சினக் களி யினர் - (பகைவரைக்) கொல்லவல்ல கொடிய கோபத்தினுலாகிற போர்வெறி பிடித்தவர்களுமான ; ஓதில் ஆயிரம் ஆயிரம் உறுவலி அரக்கர் - அளவு சொல்லுமிடத்து ஆயிரத்தாற் பெருக்கிய ஆயிர மென்னும் தொகையையுடைய மிக்க வலிமை கொண்ட அரக்கர் களின் ; காவலைக் கடந்தான் - (வாயிலின்) பாதுகாவலைக் கடந்து உள்ளே சென்ருன் (அநுமன்). (139)

அநுமன் இந்திரசித்தைக் காண்டல்

235. முக்க ணோக்கினன் முறைமக
னறுவகை முகமுந்
திக்கு நோக்கிய புயங்களுஞ்
சிலகரந் தனையான்
ஒக்க நோக்கியர் குழாத்திடை
யுறங்குகின் ருனைப்
புக்கு நோக்கினன் புகைபுகா
வாயினும் புகுவான்.

முக்கண் நோக்கினன் முறைமகன், அறுவகை முகமும்,
திக்கு நோக்கிய புயங்களும், சில கரந் தனையான்,
ஒக்க நோக்கியர் குழாத்திடை உறங்குகின்ருனைப்
புக்கு நோக்கினன், புகைபுகா வாயினும் புகுவான்.

புகை புகா வாயினும் புகுவான் - புகை நுழைய மாட்டாத இடத் தினும் நுழையவல்லவனுன அநுமன் ; ("புகுமே புகையும், புகற் கரிய பூழை நுழைந்து" நாலடியார் - 282). முக்கண் நோக்கினன் முறை மகன் — மூன்று கண்ணுடையவனுன சிவபெருமானுக்கு மக னகைப் பிறந்த அறுமுகக் கடவுள் : அறுவகை முகமும் - (வெவ்வேறு தொழில்களிடத்துச் செய்யும் முறைமைகளைப் பயின்று நடத்தும்) ஆறு வகையான முகங்களும் : (இதன் விளக்கத்தைத் திருமுருகாற் றுப்படை 90 முதல் 103 வரையுள்ள அடிகளிற் காண்க); திக்கு நோக்கிய புயங்களும் - திக்குக்களை அளாவி வளர்ந்த பன்னிரண்டு தோள்களும் ; சில கரந்து அனையான் - சில (வாகும்படி) மறையப்பெற்றுவந்தாற்போன்றவனுய் : (ஆறுமுகங்களையும் பன்னி ரண்டு கைகளையுமுடைய முருகன் ஒரு முகமும் இரண்டு கைகளும் கொண்டு வந்தாற்போன்ற தோற்றத்தினன் இந்திரசித்து என்ற

வாறு). ஒக்கு அம் நோக்கியர் குழாத்திடை உறங்குகின்றானை - அழகாலும் கருத்தாலும் தன்னை யொத்த அழகிய கண்களையுடைய மாதர்களின் கூட்டத்தினிடையே தூங்குகின்றவனான இந்திரசித்தை ; புக்கு நோக்கினன் - போய்ப் பார்த்தான். (ஒக்க நோக்கியர் என்பதற்கு, ஒரு படியாகத் தன்னையே பார்க்கும் மகளிர், என்றும் பொருள்கொள்ளலாம்.) (140)

இந்திரசித்தைக் கண்ட அநுமன் நினைதல் 236-237

**236.** வளையும் வாளெயிற் றரக்கனோ
கணிச்சியான் மகனோ
அளையில் வாளரி யனையவன்
யாவனோ வறியேன்
இளைய வீரனு மேந்தலு
மிவனுட னெடுநாள்
உளைய வுள்ளபோ ருளதென
வுள்ளத்தி னுணர்ந்தான்;

வளையும் வாள் எயிற்று அரக்கனோ ? கணிச்சியான் மகனோ ?
அளையில் வாள் அரி அனையவன் யாவனோ ? அறியேன் !
இளைய வீரனும் ஏந்தலும் இவனுடன் நெடுநாள்
உளைய உள்ளபோர் உளது ! என, உள்ளத்தின் உணர்ந்தான்.

அளையில் வாள் அரி அனையவன் - மலைக் குகையிலுள்ள கொடிய சிங்கம்போன்றவனான இவன் ; வளையும் வாள் எயிற்று அரக்கனோ - வளைந்திருக்கின்ற ஒளி பொருந்திய கோரப் பற்களையுடைய இராக்கதனோ?; கணிச்சியான் மகனோ - (அல்லது) மழுவேந்திய சிவபிரானுடைய மகனான முருகனோ ? யாவனோ அறியேன்- யாரோ ? (நான்) அறிகின்றிலேன் ; இளைய......உணர்ந்தான் - வீரனும் பெருமையிற் சிறந்தோனும் இளவலுமாகிய இலக்குவனும் இவனுடன் நீண்ட காலம் வருந்திச் செய்யவேண்டிய போர் எதிர் காலத்தில் உள்ளது என மனதில் தெரிந்துகொண்டான் : (அநுமன்) (141)

**237.** இவனை யின்றுணை யுடையபே
ரிராவண னென்னே
புவன மூன்றையும் வென்றதோர்
பொருளெனப் புகலேன்

சிவனை நான்முகத் தொருவனைத்
திருநெடு மாலாம்
அவனை யல்லது நிகர்பிற
ரென்பது மறிவோ.

'இவனை இன் துணை உடைய பேர் இராவணன், என்னே,
புவனம் மூன்றையும் வென்றது? ஓர் பொருள் எனப் புகலேன்!
சிவனை, நான்முகத்து ஒருவனைத் திருநெடுமாலாம்
அவனை அல்லது, நிகர் பிறர், என்பதும் அறிவோ?'

இவனை - (இங்கு உறங்கிக்கொண்டிருக்கின்ற) இவனை: (இந்திர சித்தை); இன் துணை உடைய பேர் இராவணன் புவனம் மூன்றையும் வென்றது என்னே - இனிய துணைவனாகவுடைய பெருமை மிக்க இராவணன் மூன்றுலகங்களையும் வென்றதில் என்ன ஆச்சரியம் (இருக்கிறது)?; ஓர் பொருள் எனப் புகலேன் - அதை ஒரு பெரிய காரியமாகச் சொல்லமாட்டேன்; சிவனை...... அறிவோ - சிவனையும், நான்கு முகங்களையுடைய பெரியவனான பிரமனையும், திருமாலான அவனையும் அல்லாத மற்றையோர் இவனை ஒப்பவராவர் என்று சொல்வது அறிவின்பாற்படுமோ? (அறிவாகாது) என்றவாறு. இந்திரசித்துக்கு மும்மூர்த்திகளே நிகராவர் என்றபடி. (142)

## அநுமன் பிற இடங்களில் தேடல்

**238.** என்று கைம்மறித் திடைநின்று காலத்தை யிழப்ப
தன்று பேர்வதென் றுயிர மாயிரத் தடங்காத்
துன்று மாளிகை யோளிக டுரிசறத் துருவிச்
சென்று தேடின னிந்திர சித்தினைத் தீர்ந்தான்.

என்று, கைம்மறித்து, 'இடைநின்று, காலத்தை இழப்பது
அன்று, பேர்வது!' என்று, ஆயிரம் ஆயிரத்து அடங்காத்
துன்று மாளிகை ஒளிகள் துரிசு அறத் துருவிச்
சென்று தேடினன், இந்திர சித்தினைத் தீர்ந்தான்.

என்று கை மறித்து - (அநுமன் மேலே கண்டபடி) விசாரித்து மறுப்பதுபோற் கையை அசைத்து; இடை நின்று காலத்தை இழப்பது அன்று - இவ்விடத்தில் நின்று வீணே காலத்தைக் கழிய விடுதல் கூடாது; பேர்வது என்று - (இதைவிட்டு) அப்பாற் செல்லு

தல்வேண்டும் என்று; இந்திரசித்தினைத் தீர்ந்தான் - இந்திரசித்தின் மாளிகையை நீங்கினவனாகி; சென்று - மேல் தொடர்ந்து சென்று; ஆயிரம் ஆயிரத்து அடங்காத்துன்று மாளிகை ஒளிகள் துரிசு அறத் துருவித் தேடினன் - ஆயிரமாயிரமென்ற கணக்கிலுமடங்காது மிகப் பலவாய் நெருங்கிய வரிசையான வீடுகளை (ஐயந்திரிபென்னும்) குற்றமில்லாதபடி ஆராய்ந்து (சீதையைத் தேடினன்.) (143)

### அநுமன் அக்கன் முதலியோரில்லங்களில் தேடிக் கடத்தல்

**239.** அக்கன் மாளிகை கடந்துபோய்
மேலதி காயன்
தொக்க கோயிலுந் தம்பிய
ரில்லமுந் துருவித்
தக்க மந்திரத் தலைவர்மா
மனைகளுந் தடவிப்
புக்கு நீங்கின னிராகவன்
சரமெனப் புகழோன்.

அக்கன் மாளிகை கடந்துபோய், மேல் அதிகாயன்
தொக்க கோயிலும், தம்பியர் இல்லமும், துருவித்
தக்க மந்திரத் தலைவர் மா மனைகளும் தடவிப்
புக்கு நீங்கினன், இராகவன் சரம் எனப் புகழோன்.

அக்கன் - அட்சகுமாரன்: இந்திரசித்தின் தம்பி; இராவணனுக்கு மண்டோதரியினிடம் பிறந்த இளையமகன். அதிகாயன் - இராவணனுக்குத் தாந்யமாலினி என்னும் மனைவியிடம் பிறந்தவன்: பெரிய வுடம்பையுடையவன் என்று பொருள்; தொக்க கோயிலும் - பொருந்தி வாழும் மாளிகையிலும்; தக்க மந்திரத் தலைவர் மா மனைகளும் - தகுதியான ஆலோசனைக்குரிய தலைவர்களாகிய மந்திரிகளுடைய வீடுகளிலும்; இராகவன் சரம் எனப் புக்குத் தடவி நீங்கினன்- இராமபிரானது கணையென்று சொல்லும்படி விரைவிற் புகுந்து தேடியவண்ணம் நீங்கினான்; (யாரெனில்) புகழோன் - புகழ் நிறைந்தவனாகிய அநுமன். (144

### அநுமன் இடைநகர் அகழியை அடைதல்

**240.** இன்ன ராகிய விரும்படைத்
தலைவர்க ளிருக்கைப்
பொன்னின் மாளிகை யாயிர
கோடியும் புக்கான்
கன்னி மாநகர்ப் புறத்தவன்
கரந்துறை காண்பான்
சொன்ன மூன்றினு ணடுவண
தகழியைத் தொடர்ந்தான்.

இன்னர் ஆகிய இரும் படைத் தலைவர்கள் இருக்கைப்
பொன்னின் மாளிகை ஆயிர கோடியும் புக்கான்,
கன்னி மாநகர்ப் புறத்து அவன் கரந்துறை காண்பான்,
சொன்ன மூன்றினுள், நடுவணது அகழியைத் தொடர்ந்தான்.

இன்னர்......மாளிகை - இத்தன்மையராகிய பெரிய படைத் தலைவர்களுடைய இருப்பிடமாகிய பொன் மயமான வீடுகள். கன்னிமா நகர்ப்புறத்து அவன் கரந்து உறை காண்பான் - அழியாத பெரிய நகரமாகிய இலங்கையினிடத்து அந்த இராவணனுடைய ஒளிப்பிடத்தைக் காணவேண்டி; சொன்ன......தொடர்ந்தான் - (நூல்களிற்) சொல்லப்பட்ட மூன்றினுள் நடுவிலுள்ளதான அகழியைச் சார்ந்தான். (145)

### அநுமன் அகழியைக் காண்டல்

**241.** தனிக்க டக்களி றெனவொரு
துணையிலான் றூய
பனிக்க டற்பெருங் கடவுடன்
பரிபவந் துடைப்பான்
இனிக்க டப்பரி தேழ்கடல்
கிடந்ததென் றிசைத்தான்
கனிக்க டற்கதிர் தொடர்ந்தவ
னகழியைக் கண்டான்.

தனிக் கடக் களிறு என ஒரு துணையிலான், 'தூய
பனிக் கடற் பெருங் கடவுள்தன் பரிபவம் துடைப்பான்,

இனிக் கடப்பு அரிது! ஏழ் கடல் கிடந்தது !' என்று இசைத்தான்
கனிக்கு அடல் கதிர் தொடர்ந்தவன் அகழியைக் கண்டான்.

தனி கடம் களிறு என ஒரு துணை இலான் - ஒப்பற்ற மதயானை போலத் தனக்கு வேறு துணை வேண்டாதவனும்; கனிக்கு அடல் கதிர் தொடர்ந்தவன் - பழம் பெறுதற்பொருட்டு வெங்கதிருடைச் சூரியனைத் தொடர்ந்து சென்றவனுமான அநுமன்; அகழியைக் கண்டான் - அந்த இடைநகரகழியைப் பார்த்து; தாய பனிக்கடல் பெரும் கடவுள் தன் பரிபவம் துடைப்பான் - (என்னல்) தாண்டப் பட்ட குளிர்ச்சியான கடலுக்கு இறைவனான வருணதேவனுக்கு (நேர்ந்த) மானக் கேட்டினை நீக்குதற் பொருட்டு; ஏழ் கடல் கிடந்தது - ஏழு கடலும் ஒரு சேர இவ்வாறு இயைந்துகிடந்தது; கடப்பு அரிது - இதைக் கடந்து செல்வது அரிய காரியம்; என்று இசைத்தான் - என்று (தனக்குட்) சொல்லிக் கொண்டான். (இங்கு ஏழ்கடல் அகழிக்கு உவமை.) (146)

### அநுமன் இடைநகர் அகழியை வியத்தல் 242-3

**242.** பாழி நன்னெடுங் கிடங்கெனப்
பகர்வரேற் பல்பேர்
ஊழி காலநின் றுலகெலாங்
கல்லினு முடியா
ஆழி வெஞ்சினத் தரக்கனை
யஞ்சியாழ் கடல்கள்
ஏழு மிந்நகர்ச் சுலாயகொ
லாமென விசைத்தான்.

'பாழி நல் நெடும் கிடங்கு எனப் பகர்வரேல், பல் பேர்
ஊழிகாலம் நின்று, உலகு எலாம் கல்லினும், முடியா !
ஆழி வெம்சினத்து அரக்கனை அஞ்சி, ஆழ் கடல்கள்
ஏழும் இந்நகர்ச் சுலாயகொலாம் !' என இசைத்தான்.

பாழி நல் நெடும் கிடங்கு எனப் பகர்வரேல் - (இதனை) அகல மானதும் சிறந்ததும் நீண்டதுமானதோர் அகழி என்று (எவரேனும்) சொல்வாரானல்; உலகு எலாம் பல் பேர் ஊழி காலம் நின்று கல்லினும் முடியா - உலகத்தாரனைவருங்கூடிப் பல பெரிய கற்பாந்த காலமாக முனைந்து தோண்டினலும் (இவ்வளவு நீளமாகவும் அகல மாகவும் ஆழமாகவும்) தோண்டி முடியமாட்டாது; ஆழி வெம் சினத்து

அரக்கனே அஞ்சி - கடல்போற் பொங்கியழிக்கும் கொடிய சினமுள்ள அரக்கனான இராவணனுக்குப் பயந்து; ஆழ் கடல்கள் ஏழும் இந்நகர்ச் சுலாய கொலாம் என இசைத்தான் ஆழமான ஏழு கடல்களும் இந்த நகரத்தைச் சூழ்ந்தன போலும் என்று (தனக்குட்) சொல்லிக்கொண்டான் : (அநுமன்). (147)

243. ஆய தாகிய வகன்புன
லகழியை யடைந்தான்
தாய வேலையி னிருமடி
விசைகொடு தாவிப்
போய காலத்தும் போக்கரி
தென்பது புகன்ருன்
நாய கன்புகழ் நடந்தபே
ருலகெலா நடந்தான்.

ஆயது ஆகிய அகன் புனல் அகழியை அடைந்தான்,
'தாய வேலையின் இருமடி விசைகொடு தாவிப்
போய காலத்தும் போக்கு அரிது!' என்பது புகன்ருன்,
நாயகன் புகழ் நடந்த பேர் உலகு எலாம் நடந்தான்.

ஆயது ஆகிய - அத்தன்மையதான. தாய வேலை - முன்பு தான் தாவிய கடல். இருமடி - இரு மடங்கு. நாயகன் புகழ் நடந்த பேர் உலகு எலாம் நடந்தான் - உலகநாயகனுகிய இராமபிரானது புகழ் சென்று பரவிய பெரிய உலகங்களிலெல்லாம் (தானும் தனது புகழினுற்) சென்றவனுன அநுமன். (148)

## இடைநகரகழின் இயல்பு 244-250

244. மேக்கு நால்வகை மேகமுங் கீழ்விழத்
★ தூக்கி னுலன்ன தோயத்த தாய்த்துயர்
ஆக்கி னுன்படை யன்ன வகழியை
வாக்கி னுலுரை வைக்கலு மாகுமோ.

மேக்கு நால்வகை மேகமும் கீழ்விழத்
தூக்கினுல் அன்ன தோயத்ததாய்த் துயர்
ஆக்கினுன் படை அன்ன அகழியை,
வாக்கினுல் உரை வைக்கலும் ஆகுமோ?

மேக்கு - மேலேயுள்ள (வானத்திலுள்ள); நால்வகை மேகமும் - புட்கலாவர்த்தம் முதலிய நான்கு மேகங்களும் : (திருவாலவாய்த் : 12 : 4); கீழ்விழத் தூக்கினல் அன்ன தோயத்தது ஆய் - (நீர் முகந்து கொள்ளுதற் பொருட்டுத் தன்னை நோக்கி) இறங்கி வருமாறு அமைந்தது போன்ற நீர் மிகுதியையுடையதாய்; துயர் ஆக்கினன் படை அன்ன அகழியை - (உலகத்துக்குத்) துன்பத்தைச் செய்த வனை இராவணனது சேனையைப் போன்ற (பரப்பினையுடைய) அந்த அகழியின் இயல்பை; வாக்கினல் உரைவைக்கலும் ஆகுமோ- வாயினலெடுத்துச் சொல்லுதலும் முடியுமோ? (முடியாதென்றபடி). (149)

**245.** ஆனை மும்மத மும்பரி யாழியும்
மான மங்கையர் குங்கும வாரியும்
நான மார்ந்த நறைக்குழ லாவியும்
தேனு மாரமுந் தேய்வையு நாறுமால்.

ஆனை மும்மதமும், பரி ஆழியும்
மான மங்கையர் குங்கும வாரியும்
நானம் ஆர்ந்த நறைக்குழல் ஆவியும்,
தேனும், ஆரமும், தேய்வையும், நாறுமால்!

ஆனை மும்மதமும் – யானைகளின் மூன்று வகை மத நீரும்; பரி ஆழியும் - குதிரைகளின் வாய்நுரை நீரும்; மான மங்கையர் - பெருமை பொருந்திய மகளிர் (பூசிய); குங்கும வாரியும் - குங்குமக் குழம்பும்; நானம் ஆர்ந்த நறைக்குழல் ஆவியும் – கத்தூரிக் குழம்பு பூசிய நறுமணமுடைய குழலுக்கு ஊட்டும் அகிற்புகை போன்ற ஆவியின் மணமும்; தேனும் - (மலர்களிலுள்ள) தேனும்; ஆரமும் - சந்தனக் குழம்பும்; தேய்வையும் - (மற்றும் அகில், தகரம் முதலிய வாசனைப் பொருள்கள்) தேய்த்த பூச்சும்; நாறும் - மணம் வீசப் பெறும் (அவ்வகழி நீர்). ஆல் : அசை. (150)

**246.** உன்ன நாரை மகன்றில் புதாவுளில்
அன்னங் கோழிவண் டானங்க ளாழிப்புள்
கின்ன ரங்குரண் டங்கிலுக் கஞ்சிரல்
சென்னங் காகங் குணாலஞ் சிலம்புமே.

உன்னம், நாரை, மகன்றில், புதா, உளில்,
அன்னம், கோழி, வண்டானங்கள், ஆழிப்புள்,
கின்னரம், குரண்டம்,கிலுக்கம்,சிரல்
சென்னம், காகம், குணாலம், சிலம்புமே!

உன்னம் - அன்னப் பறவையுள் ஒரு வகை. மகன்றில் - இணை பிரியா நீர்வாழ் பறவை. புதா - பெருநாரை. உளில் - உள்ளான். வண்டானம் - நாரையில் ஒரு வகை. ஆழிப்புள் - சக்கரவாகம். கின்னரம் – ஒரு வகையான பாடும் பறவை. குரண்டம் - நீர்க் காக்கை. சிரல் - மீன்கொத்திப் பறவை. சிலம்பும் - ஒலிக்கும். கிலுக்கம், சென்னம், குணாலம் : என்பவை நீர்ப்பறவை யினங்கள். (அவ்வகழியிற் பலவகை நீர்ப்பறவைகளொலித்தல் கூறப்பட்டது.) (151)

**247.** நலத்த மாதர் நறையகி ணாவியும்
அலத்த கக்குழம் புஞ்செறிந் தாடின
இலக்க ணக்களி ரேடிள மென்னடைக்
குலப்பி டிக்குமொ ரூடல் கொடுக்குமால்.

நலத்த மாதர் நறையகில், நாவியும்,
அலத்தகக் குழம்பும்,செறிந்து ஆடின,
இலக்கணக்களிரேடு இள மெல் நடைக்
குலப்பிடிக்கும் ஓர் ஊடல் கொடுக்குமால்!

நலத்த மாதர் - அழகுள்ள மகளிரது; நறை அகில் - (கூந்தலி லூட்டிய) நறுமணமுள்ள அகிற் புகையும்; நாவியும் - கத்தூரிப் புழுகும்; செறிந்து - (தன்னிடத்தில்) மிகுதியாகச் சேரப்பெற்றிருத் தலால்; (அவ்வகழி நீரானது) ஆடின இலக்கணக் களிரேடு - (தன் னிடத்தில்) முழுகிய உத்தம இலக்கணமமைந்த ஆண்யானைகளோடு; குலம் மெல்நடை இளம் பிடிக்கும் - உயர் சாதியில் தோன்றிய மெல் லியநடையுள்ள இளமையான பெண் யானைகளுக்கும்; ஓர் ஊடல் கொடுக்கும் - ஒருவகைப் பிணக்கை உண்டாக்கும்; ஆல் : அசை.

அகழி நீரில் முழுகிவந்த ஆண் யானைகள் புதுமையான மணத் தையும் நிறவேறுபாட்டையும் கொள்ளுதலால், அவற்றைக் கண்ட பெண்யானைகள், தமக்கு உரிய அவ்வாண்யானைகளை வேறு பிடி யானைகளோடு கலவி கொண்டு வந்தன என்று தவருக நினைத்து ஊடல் கொள்ளும், என்க. (152)

248. நறவு நாறிய நாணறுந் தாமரை
துறைக டோறு முகிழ்த்தன தோன்றுமால்
சிறையி னெய்திய செல்வி முகத்திஞே
டுறவு தாமுடை யாரொடுங் கார்களோ.

நறவு நாறிய நாள் நறும் தாமரை
துறைகள் தோறும் முகிழ்த்தன தோன்றுமால்!
சிறையின் எய்திய செல்வி முகத்திஞேடு
உறவு தாம் உடையார் ஒடுங்கார்களோ?

நறவு நாறிய - தேனுடனே மணம் வீசுகின்ற; நாள் நறும் தாமரை - புதிய (அன்றலர்ந்த) நல்ல செந்தாமரை மலர்கள்; துறைகள் தோறும்-(அவ்வகழியின்) இடங்கள் தோறும்; முகிழ்த்தன தோன்றும் - (அவ்விரவில்) குவிந்தனவாய்க் காணப்படும்; ஆல்: அசை; சிறையின் எய்திய செல்வி முகத்திஞேடு - சிறையிலே புக்கவளான சீதாபிராட்டியின் முகத்தினுடன்; உறவு உடையார் தாம் ஒடுங்கார்களோ - உறவு முறையுள்ளவர்கள் (அம்முகம் வாடியிருக்கும்போது) தாமும் ஒடுங்காமலிருப்பார்களோ?

முகத்துக்கும் செந்தாமரை மலர்க்குமுள்ள ஒப்புமை கருதி, அவை ஓரினமாய் உறவு கொண்டனவாகக் குறிக்கப்பட்டன. (153)

249. பளிங்கு செற்றிக் குயிற்றிய பாயொளி
விளிம்பும் வெள்ளமு மெய்தெரி யாதுமேல்
தெளிந்த சிந்தைய ருஞ்சிறி யார்களோ
டளிந்த போதறி தற்கெளி தாவரோ.

பளிங்கு செற்றிக் குயிற்றிய பாய்ஒளி
விளிம்பும், வெள்ளமும், மெய் தெரியாது மேல்
தெளிந்த சிந்தையரும் சிறியார்களோடு
அளிந்த போது, அறிதற்கு எளிதாவரோ?

பளிங்கு...விளிம்பும் - படிகக்கற்களைச் செதுக்கிப் பதிக்கப்பெற்ற வீசுகின்ற ஒளியையுடைய (அவ்வகழியின்) ஓரமும்; வெள்ளமும் - (அவ்வகழியின்) நீரும்; மேல் மெய் தெரியாது - மேல் தோற்றத்தில் வடிவம் வேறுபடக் காணப்படாமல் (இருந்தன); தெளிந்த...... ஆவரோ - தெளிவுள்ள மனமுடைய பெரியோர்களும் (அவ்வாறு

தெளிவில்லாத) சிறியவர்களுடன் கலந்தபோது எளிதில் வேறு பாடறியத் தக்கவராவரோ? (ஆகார்.) (154)

**250.** நீல மேமுத னன்மணி நித்திலம்
மேல கீழபல் வேறொளி வீசலால்
பாலின் வேலை முதற்பல வேலையுங்
கால்க லந்தன வோவெனக் காட்டுமே.

நீலமே முதல் நன்மணி நித்திலம்
மேல கீழ பல்வேறு ஒளி வீசலால்,
பாலின் வேலை முதல் பல வேலையும்
கால் கலந்தனவோ எனக் காட்டுமே!

மேல கீழ - (அவ்வகழியின் கரைகளில் நீரளவுக்கு) மேலுங் கீழுமாய்ப் (படிகக்கற்களிற்) பதிக்கப்பெற்றுள்ளனவான; நீலமே முதல் நல்மணி - நீலமணி முதலிய பலவகை இரத்தினங்களும்; நித்திலம் - முத்துக்களும்; பல்வேறு ஒளி வீசலால் - பல வேறு வகைப்பட்ட ஒளியை வீசுதலால்; பாலின்......காட்டுமே - பாற்கடல் முதலிய பல நிறக்கடல்களும் காற்றினால் ஒன்றுசேர்ந்திட்டனவோ வென்னும்படி தோன்றும்.

ஊழிக்காற்றினால் ஏழுவகைக் கடல்களும் கூடிப் பிரளயமாகப் பொங்குவதை உள்ளிட்டு இவ்வாறு கூறப்பட்டது. (155)

### அநுமன் இடைநகருட் புகுந்து தேடல் 251–2

**251.** அன்ன வேலை யகழியை யார்கலி
யென்ன வேகடந் திஞ்சியும் பிற்படத்
துன்ன ருங்கடி மாநகர் துன்னினான்
பின்ன ரெய்திய தன்மையும் பேசுவாம்.

அன்ன வேலை, அகழியை, ஆர்கலி
என்னவே, கடந்து, இஞ்சியும் பிற்படத்
துன்னரும் கடி மாநகர் துன்னினான்
பின்னர் எய்திய தன்மையும் பேசுவாம்.

அன்னவேலை - அப்பொழுது; அகழியை ஆர்கலி என்னவே கடந்து - அவ்விடை நகர் அகழியை (முன்பு) கடலைக் (கடந்து

சென்றது) போலவே தாண்டிச்சென்று; இஞ்சியும் பின்பட - (அவ்வகழியைச் சேர்ந்த) மதிலும் பின்னாக; துன்னருங் கடிமா நகர் துன்னினான் - (எவரும்) புகுதற்கரிய காவலையுடைய பெரிய அவ் இடை நகரினுள்ளே சேர்ந்தான். (156)

**252.** கருவி நாழிகை பாதியிற் காலனும்
வெருவி யோடு மரக்கர்தம் வெம்பதி
ஒருவ னேயொரு பன்னிரண் டோசனைத்
தெருவு மும்மைநூ றாயிரந் தேடினான்.

கருவி நாழிகை பாதியில், காலனும்
வெருவி யோடும் அரக்கர்தம் வெம்பதி
ஒருவனே, ஒரு பன்னிரண் டோசனைத்
தெருவு மும்மை நூறாயிரம் தேடினான்!

கருவி நாழிகை பாதியில் - (நாழிகை வட்டில் என்னும்) கருவியால் அளக்கப்படும் ஒரு நாழிகையின் பாதியாகிய அரை நாழிகைப் பொழுதில்: நாழிகை - இருபத்திநான்கு நிமிடங்கொண்ட நேரம்; வெம்பதி - கொடிய நகரமாகிய இலங்கையில்; ஒருவனே - (அநுமன் தான்) ஒருவனாகவே, ஒரு பன்னிரண்டோசனைத் தெருவு மும்மை நூறாயிரம் - பன்னிரண்டு யோசனையளவு தூரமுள்ள மூன்று லட்சம் தெருக்களிலும்.

'கருவி நாழிகை' என்பதற்குப் பதில், 'கரிய நாழிகை' என்றும் பாடம் கொள்ளலாம். 'கரிய நாழிகை யூழியிற் பெரியன கழியுமாறறியேனே' (பெரிய திருமொழி, 8 : 5 : 6). இராப்பொழுதானது இருண்டு கறுத்திருப்பதனால் நாழிகையிலும் அக்கருமை ஏற்றிக் கூறப்பட்டது. கரிய நாழிகை - இராப்பொழுது. (157)

## இரவில் அரக்கரூர் நிகழ்ச்சிகள் 253-260

**253.** ★ வேரியு மடங்கின நெடுங்கடல் விளம்பும்
பாரியு மடங்கின வடங்கினது பாடல்
காரிய மடங்கினர்கள் கம்மியர்கள் மும்மைத்
தூரிய மடங்கின தொடங்கினது றக்கம்.

வேரியும் அடங்கின, நெடுங்கடல் விளம்பும்
பாரியும் அடங்கின, அடங்கினது பாடல்,
காரியம் அடங்கினர்கள் கம்மியர்கள், மும்மைத்
தூரியம் அடங்கின, தொடங்கினது உறக்கம்!

வேரியும் - கட்குடிப்பார் முழக்கமும்; நெடும் கடல் விளம்பும் பாரியும் அடங்கின - பெரிய கடல் போல் முழங்குகின்ற கொட்டு முழக்குடன் யாமந்தோறும் புரியும் இராக்காவல்களும் ஓய்ந்து விட்டன; கம்மியர்கள் காரியம் அடங்கினர்கள் - கொல்லர் முதலிய தொழிலாளிகள் தத்தம் செய்தொழிலடங்கினுர்கள். மும்மைத் தூரியம் - மூன்றுவகை முரசுகள்: (அவை வெற்றி, மணம், கொடை முரசங்கள்). (158)

**254.** இறங்கின நிறங்கொள்பரி யேமமுற வெங்கும்
கறங்கின மறங்கொளெயில் காவலர் துடிக்கண்
பிறங்கின நறுங்குழல ரன்பர்பிரி யாதோர்
உறங்கினர் பிணங்கியெதி ரூடினவ ரல்லார்.

இறங்கின நிறம் கொள் பரி, ஏமம் உற எங்கும்
கறங்கின மறம் கொள் எயில் காவலர் துடிக்கண்,
பிறங்கின நறும் குழலர் அன்பர் பிரியாதோர்
உறங்கினர், பிணங்கி எதிர் ஊடினவர் அல்லார்.

நிறம் கொள் பரி இறங்கின - நல்ல நிறத்தைக்கொண்ட குதிரைகள் தலைசாய்ந்து தூங்கலாயின; மறம் கொள் எயில் காவலர் துடிக்கண் எங்கும் ஏமம் உறக் கறங்கின - வலிமைகொண்ட (அந்நக ரத்து) மதில் காப்பவர்கள் அடிக்கின்ற துடியென்னும் பறையின் அடிக்குமிடங்கள் எவ்விடத்தும் பாதுகாப்பாக ஒலிசெய்தன; பிறங்கின நறும் குழலர் அன்பர் பிரியாதோர் - விளங்குகின்ற நல்ல கூந்தலையுடையவரான, மகளிருள், கணவரைப் பிரியாதவர்களும்; பிணங்கி எதிர் ஊடினவர் அல்லார் - (தம் கணவரோடு) வருத்த முற்று எதிராகக் கோபித்துக் கொள்ளாதவர்களும்; உறங்கினர் - உறங்கினுர்கள். (எனவே, அன்பரைப் பிரிந்த மகளிரும், அன்ப ரோடு கூடிய மகளிரும் உறங்கவில்லை என்றவாறு.) (159)

**255.** வடந்தரு தடங்கொள்புய மைந்தர்கல விப்போர்
கடந்தன ரிடைந்தனர் களித்தமயில் போலும்
மடந்தையர் தடந்தன முகட்டிடை மயங்கிக்
கிடந்தனர் நடந்தது புணர்ச்சிதரு கேதம்.

வடம் தரு தடம் கொள் புய மைந்தர் கலவிப்போர்
கடந்தனர், இடைந்தனர், களித்த மயில்போலும்

மடந்தையர் தடம் தன முகட்டிடை மயங்கிக்
கிடந்தனர், நடந்தது புணர்ச்சிதரு கேதம்.

வடம் தரு தடம் கொள் புய மைந்தர் - ஆரங்களை யணிந்த மலை போன்ற தோள்களையுடைய வலிமைவாய்ந்த அரக்கர்கள் ; கலவிப் போர் கடந்தனர் இடைந்தனர் - புணர்ச்சியாகிய போரை முடித்துக் களைத்தவர்களாய் ; களித்த மயில்போலும் மடந்தையர் தடம் தன முகட்டு இடை மயங்கிக் கிடந்தனர் - களிப்புக்கொண்ட மயில் போன்ற (சாயலையுடைய) இளமகளிரின் பருத்த தனமீது சோர்ந்து படுத்துக்கிடப்பாராயினர்; (அவ்வாருக) புணர்ச்சி தரு கேதம் - கலவியால் ஏற்பட்ட களைப்பு; நடந்தது - நீங்குவதாயிற்று : (நிகழ்வ தாயிற்று என்றுமாம்.) (160)

256. வாமநறை யின்றிற நுகர்ந்தவர் மறந்தார்
காமநறை யின்றிற நுகர்ந்தவர் களித்தார்
பூமனறை வண்டுறை யிலங்கமளி புக்கார்
தூமநறை யின்றுறை யயின்றிலர் துயின்ருர்.

வாம நறையின்திறம் நுகர்ந்தவர் மறந்தார்;
காம நறையின்திறம் நுகர்ந்தவர் களித்தார்;
பூமன் நறை வண் துறை இலங்கு அமளி புக்கார்,
தூமநறையின் துறை அயின்றிலர், துயின்ருர்.

வாமம் - தீமையுள்ள : 'வாமக் கள்ளைக் குடித்தவர் போலே' (குற்ருலக் குறவஞ்சி, 105); நறையின் திறம் நுகர்ந்தவர் – மதுபான வகைகளைக் குடித்த அரக்கர்கள் ; மறந்தார் - (மதுவினை) மறந்தவர் களாகி ; பூமன் நறை வண் துறை இலங்கு அமளி புக்கார் - மலர்கள் நிறைந்த பரிமளத்தோடு கூடிய சிறந்த (இன்பத்) துறைக்குரிய விளங்குகின்ற படுக்கையிலே புக்கு ; காம நறையின் - காமமாகிய கள்ளின் ; திறம் - மிகுதியை ; நுகர்ந்தவர் களித்தார் - அனுபவித்துக் களிப்புக்கொண்டவர்களாய் ; தூமம் நறையின் துறை அயின்றிலர் - அகில் போன்ற மணப்புகையால் வரும் இன்பத்தை அனுபவியா தவர்களாய் ; துயின்ருர் - உறங்கினுர்கள். (161)

257. பண்ணிமை யடைத்தபல கட்பொருநர் பாடல்
விண்ணிமை யடைத்தன விளைந்ததிருள் வீணை
தண்ணுமை யடைத்தன தழங்கிசை வழங்குங்
கண்ணிமை யடைத்தன அடைத்தன கபாடம்.

பண் இமை அடைத்த பல கண் பொருநர் பாடல்,
விண் இமை அடைத்தன, விளைந்தது இருள், வீணை
தண்ணுமை அடைத்தன தழங்கு இசை வழங்கும்,
கண் இமை அடைத்தன, அடைத்தன கபாடம்.

பலகண் பொருநர் பாடல் பண் இமை அடைத்த - பலவகைத் துளைக் கருவிகளோடு கூடிய கூத்தருடைய பாட்டுக்கள் இசைகளாகிய இமைகள் மூடப்பெற்றன: (புல்லாங்குழல் போன்ற துளைக் கருவிகளின் இசையும் பாட்டுக்களும் ஒலி அவிந்தன என்க); தழங்கு இசை வழங்கும் வீணை தண்ணுமை அடைத்தன - ஒலிக்கின்ற இசையைத் தருகின்ற வீணையும் மத்தளமும் நிறுத்தப் பெற்றன; கபாடம் அடைத்தன - வாயிற் கதவுகள் மூடப்பெற்றன; கண் இமை அடைத்தன - (எல்லாருடைய) கண்களும் இமை பொருந்தி உறங்கலாயின; விண் இமை அடைத்து அன இருள் விளைந்தது - வானமும் இமைகளை மூடிக்கொண்டதுபோல (எங்கும்) இருள் அதிகரித்தது.

(முதலடியில் 'பண்ணிமை' யென்பது 'பண்ணுமை' என்றிருந்தால் சிறக்கும். ஆனல் அப்பாடம் கிடைக்கவில்லை.) (162)

**258.** விரிந்தன நரந்தமுதல் மென்மலர் வளாகத்
துரிஞ்சிவரு தென்றலுணர் வுண்டய லுலாவச்
சொரிந்தன கருங்கண்வரு துள்ளிதரு வெள்ளம்
எரிந்தன பிரிந்தவர்த மெஞ்சுதனி நெஞ்சம்.

விரிந்தன நரந்தம் முதல் மெல் மலர், வளாகத்து
உரிஞ்சி வரு தென்றல் உணர்வு உண்டு அயல் உலாவச்
சொரிந்தன கரும் கண் வரு துள்ளி தரு வெள்ளம்,
எரிந்தன பிரிந்தவர்தம் எஞ்சுதனி நெஞ்சம்.

வளாகத்து - சுற்றிய இடமெங்கும்; நரந்தம் முதல் விரிந்தன மெல்மலர் - (மணம் வீசுகின்ற) நரந்தப் புல் முதல் மலர்ந்த மெல்லிய மலர்களிலெல்லாம்; உரிஞ்சிவரு தென்றல் - உராய்ந்து கொண்டு வருகின்ற தென்றற்காற்று; உணர்வு உண்டு அயல் உலாவ – (தங்களுடைய) அறிவை யழித்து அண்டையிலே உலாவிக் கொண்டிருக்கவும்; கரும் கண் வரு துள்ளி தரு வெள்ளம் சொரிந்தன – கரிய கண்களிலிருந்து வரும் துளிகளாகிய கண்ணீர் வெள்ளம் சொரியவும்; பிரிந்தவர் தம் எஞ்சு தனி நெஞ்சம் - காதலரைப் பிரிந்த மகளிருடைய (நாணம் முதலிய எல்லாம் ஒழிந்து, மிச்சமாய்) எஞ்சி நின்ற வேறு புகலில்லாத நெஞ்சங்கள்; எரிந்தன - வெந்துகொண்டிருந்தன.

நரந்தம்: ஒருவகை வாசனைப் புல். (-'நரையு நரந்தமு மகிலு மாரமும்' பொருநராற்றுப் படை, 238). இங்கே கருங்கண் என்றது கூட்டமின்மையை உணர்த்தி நின்றது; ('கண்ணகி கருங்கணும்'. சிலப்பதிகாரம்; 5,237—உரை). (163)

**259.** இளக்கரிழு தெஞ்சவிழு மெண்ணரு விளக்கைத்
துளக்கியது தென்றல்பகை சோரவுயர் வோரின்
அளக்கரொ டளக்கரிய வாசையுற வீயா
விளக்கென விளங்குமணி மெய்யுறு விளக்கம்.

இளக்கர் இழுது எஞ்ச விழும் எண் அரு விளக்கைத்
துளக்கியது தென்றல், பகை சோர உயர்வோரின்;
அளக்கரொடு அளக்கரிய ஆசை உற வீயா
விளக்கு என, விளங்கும் மணி மெய் உறு விளக்கம்.

இளக்கர் இழுது எஞ்ச - இளகுதலையுடைய நெய் குறையவே; விழும் எண் அரு விளக்கை - தளர்வனவான கணக்கிட முடியாத விளக்குகளை; தென்றல் - தென்றற்காற்றானது; பகைசோர உயர்வோரின் - பகைவர்கள் தளர்ந்தபொழுது (அவர்களை யழித்துத் தாம்) ஏற்றம்பெறுபவர்போல; துளக்கியது - அசைத்து அணைத்த தாக; மெய் உறு மணி விளக்கம் - (அந்நகரத்து மகளிரது) உடம்பி லுற்ற காந்தியும் அவ்வுடம்பிற் பொருந்திய இரத்தினங்களின் ஒளி களும், அளக்க அரிய அளக்கரொடு ஆசைஉற - அளவிட முடியாத கடலிலும் அதற்கப்பாலுள்ள திசைகளிலும் பொருந்த; வீயா விளக்கு என விளங்கும் - அணையாத விளக்குகள் போற் பிரகாசித்தன.

கம்பராமாயணக் கருப்பொருள் ஏட்டில், "ஆடவருக்கும் பெண் களுக்கும் கலவியிலே கடலுக்கு மிகுதியான ஆசை பொருந்தும் படிக்கு, எரிந்த விளக்கைக் காற்று அவித்தவுடனே அந்தப்பெண்கள் அழகிய மேனியின் ஒளியாகிய விளக்குப் பரந்தது" என்று உரை காணப்படுகிறது. (164)

**260.** நித்தநிய மத்தொழின்மு டித்துநெடு வானத்
துத்தமரு றங்கினர்கள் யோகிகடு யின்றார்
மத்தமத வெங்களிறு றங்கினவு றங்காப்
பித்தருமு றங்கினரி னிப்பிறர தென்னே.

நித்த நியமத் தொழில் முடித்து நெடு வானத்து
உத்தமர் உறங்கினர்கள் ; யோகிகள் துயின்றார் ;
மத்தமத வெம் களிறு உறங்கின ; உறங்காப்
பித்தரும் உறங்கினர் ; இனிப் பிறரது என்னோ ?

நெடு வானத்து உத்தமர் நித்த நியமத்தொழில் முடித்து உறங்கினர்கள் – பெரிய தேவருலகத்து நல்லோர் (அரக்கர் ஏவினபடி) தாம் நாள்தோறும் முறைப்படி செய்யவேண்டிய வேலைகளை முடித்துவிட்டுத் தூங்கினார்கள் : (உறங்கா அமரரும் உறங்கினர் வேலையின் களைப்பால், என்றபடி) ; யோகிகள் துயின்றார் - (தூங்காது) யோகம்புரிகின்றவர்களும் தூங்கினர் ; மத்த மத வெம் களிறு உறங்கின - அறிவு திரிந்த மதங்கொண்ட சினம் மிக்க யானைகளும் தூங்கின ; உறங்காப் பித்தரும் உறங்கினர் - உறங்கும் இயல்பை யிழந்த பித்தரும் உறங்கினர் ; இனி பிறரது என் - இனி மற்றையோரின் நிலையைப் பற்றி என்ன சொல்வது ? (எல்லோரும் உறங்கினர் என்றவாறு.) ஓ : அசை. (165)

## அநுமன் அகநகரடைதல்

**261.** ஆயபொழு தம்மதி லகத்தரசர் வைகும்
தூயதெரு வொன்றொடொரு கோடிதுருவிப்போய்த்
தீயவ னிருக்கையயல் செய்தவக ழிஞ்சி
மேயது கடந்தனன் வினைப்பகையை வென்றான்.

ஆயபொழுது, அம்மதில் அகத்து அரசர் வைகும்
தூய தெரு ஒன்றொடு ஒருகோடி துருவிப் போய்த்
தீயவன் இருக்கை அயல் செய்த அகழ் இஞ்சி
மேயது கடந்தனன், வினைப் பகையை வென்றான்.

ஆயபொழுது - அப்பொழுது ; வினைப்பகையை வென்றான் – இருவினைகளாகிய பகைகளை வென்றவனான அநுமன் ; அம்மதில் அகத்து - அவ்விடை நகர்மதிலின் உட்புறத்தே ; அரசர் வைகும் தூயதெரு ஒன்றொடு ஒரு கோடி துருவிப் போய் - (இராவணனுக்கு உட்பட்ட) மன்னர்கள் வாழ்கின்ற இரண்டுகோடியெண்ணுடைய சுத்தமான தெருக்களையும் தேடிச்சென்று ; தீயவன் இருக்கை அயல் செய்த அகழ் இஞ்சி மேயது - கொடியவனான இராவணனுடைய இருப்பிடத்திற்கு அருகிலே கட்டப்பட்ட அகழோடு கூடின மதில் எதிர்ந்ததை ; கடந்தனன் - தாண்டி உட்சென்றான். (166)

## இராவணன் காதற்கிழத்தியரில்லங்களில் அநுமன் தேடுதல்

**262.** போரி யற்கை யிராவணன் பொன்மனை
★ சீரி யற்கை நிரம்பிய திங்களாத்
தார கைக்குழு விற்றழைத் தோங்கிய
நாரி யர்க்குறை வாமிட நண்ணினன்.

போர் இயற்கை இராவணன் பொன் மனை
சீர் இயற்கை நிரம்பிய திங்களாத்
தாரகைக் குழுவில் தழைத்து ஓங்கிய
நாரியர்க்கு உறைவாம் இடம் நண்ணினன்.

போர் இயற்கை - போர்புரிவதே இயல்பாகவுடைய. சீர் இயற்கை நிரம்பிய திங்கள் ஆ - (தனது) சிறந்த இயல்புகள் (பதினாறு கலைகளும்) நிறைந்திருக்கிற சந்திரனாகவும்; தாரகைக் குழுவில் - (அத்திங்களைச் சுற்றியுள்ள) விண்மீன் கூட்டங்களைப் போல; தழைத்து ஓங்கிய - (இராவணனுடைய பொன் மனையைச் சூழ்ந்து) அமைக்கப்பட்டு விளங்கிய; நாரியர்க்கு உறைவு ஆம் இடம் - (இராவணனுடைய உரிமை) மகளிர் வாழ்வதற்கான இடத்தை.
(167)

**263.** முயற்க ருங்கறை நீங்கிய மொய்ம்மதி
அயர்க்கும் வாண்முகத் தாரமு தன்னவர்
இயக்கர் மங்கையர் யாவரு மீண்டினர்
நயக்கு மாளிகை வீதியை நண்ணினன்.

முயல் கரும் கறை நீங்கிய மொய்ம் மதி
அயர்க்கும் வாள் முகத்து ஆர் அமுது அன்னவர்,
இயக்கர் மங்கையர் யாவரும் ஈண்டினர்
நயக்கும் மாளிகை வீதியை நண்ணினன்.

முயல் கருங்கறை நீங்கிய மொய்ம்மதி - முயல் என்று உரைக் கப்படும் கரிய மறுவில்லாத (கலைகள்) நிரம்பிய சந்திரனும்; அயர்க்கும் - (ஒப்பாக மாட்டாமல்) சோர்வடையத் தக்க; வாள் முகத்து - ஒளியுள்ள முகத்தையுடைய; ஆர் அமுது அன்னவர் - கிடைத்தற்கரிய அமுதத்தைப் போன்றவர்களான; இயக்கர் மங்கையர் யாவரும் – இயக்கர்சாதிப்பெண்களாயுள்ளவர்களெல் லாரும்; ஈண்டினர் நயக்கும் மாளிகை வீதியை - ஒன்றாய்ச் சேர்ந்து விரும்பி வாழ்கின்ற வீடுகளையுடைய தெருவை.

சந்திரனிடத்திலுள்ள மறுவை முயல் என்றும் மான் என்றும் கூறுவர். முயலையுடைமையாற் சந்திரன் சசி யென்ற பெயர் பெற்ருன். கறை நீங்கிய மொய்ம்மதி, இல்பொருளுவமை. (168)

**264.** தழைந்த மொய்யொளி பெய்ம்மணித் தாழ்தொறும்
இழைந்த நூலினு மின்னிளங் காலினும்
நுழைந்து நொய்தினின் மெய்யுற நோக்கினுன்
விழைந்த வெவ்வினை வேரற வீசினுன்.

தழைந்த மொய் ஒளி பெய்ம் மணித் தாழ் தொறும்,
இழைந்த நூலினும், இன் இளம் காலினும்,
நுழைந்து நொய்தினின் மெய் உற நோக்கினுன்
விழைந்த வெவ்வினை வேர் அற வீசினுன்.

விழைந்த வெவ்வினை வேர் அற வீசினுன் - (பொருள்களினிடத்து) ஆசைகொள்ளுதலாலாகிய கொடிய வினைகளின் வேர்களையெல்லாம் அறுத்தவனுகிய அநுமன்; (கதவுகள் பூட்டப்பெற்ற வீடுகளில்) தழைந்த மொய் ஒளி பெய் மணித் தாழ்தொறும் - மிகுதியாய் அடைந்த ஒளிகளைச் சொரிகின்ற இரத்தின மயமான திறவுகோல் செல்லும் துளைகள் தோறும்; மெய் - தனது உடலானது; இழைந்த நூலினும் இன் இளம் காலினும் - இழைக்கப்பெற்ற (நுண்ணிய) நூலையும், இனிய இளங் காற்றையும் விட; நொய்தினின் உற - நுட்பமாயமைய: (இன் இரண்டும் சாரியை); நுழைந்து - புகுந்து; நோக்கினுன் - பார்த்தான். (169)

### இராவணன் உரிமை மகளிருள் இயக்கியர் நிலை 265-274

**265.** அத்தி ரம்புரை யானை யரக்கன்மேல்
வைத்த சிந்தையர் வாங்கு முயிர்ப்பிலர்
பத்தி ரம்புரை நாட்டம் பதைப்பறச்
சித்தி ரங்க ளெனவிருந் தார்சிலர்.

அத்திரம் புரை யானை அரக்கன் மேல்
வைத்த சிந்தையர், வாங்கும் உயிர்ப்பு இலர்,
பத்திரம், புரை நாட்டம் பதைப்பு அறச்
சித்திரங்கள் என இருந்தார் சிலர்.

சிலர் - சில இயக்க மாதர்கள்; அத்திரம்புரை யானை அரக்கன் மேல் – மலையையொத்த யானைகளையுடைய அரக்கனாகிய இராவணனிடத்தில்; வைத்த சிந்தையர் - செலுத்திய மனத்தையுடையவர்களாய்; வாங்கும் உயிர்ப்பு இலர் - விடுகின்ற மூச்சுமில்லாதவர்களாய்; பத்திரம் புரை நாட்டம் பதைப்பு அற - பூவிதழை யொத்த தம் கண்கள் இமைத்தலுமில்லாமல்; சித்திரங்கள் என இருந்தார் - சித்திரப்பாவைகளென்று சொல்லும்படி அசைவற்றிருந்தார்கள் (170)

**266.** அள்ளல் வெஞ்சர மாரனை யஞ்சியோ
மெள்ள வின்கன வின்பயன் வேண்டியோ
கள்ள மென்கொ லறிந்திலங் கண்முகிழ்த்
துள்ள மின்றி யுறங்குகின் றார்சிலர்.

அள்ளல் வெம் சர மாரனை அஞ்சியோ?
மெள்ள இன் கனவின் பயன் வேண்டியோ?
கள்ளம் என்கொல்? அறிந்திலம், கண் முகிழ்த்து,
உள்ளம் இன்றி, உறங்குகின்றார் சிலர்.

சிலர் - சில இயக்க மாதர்கள்; அள்ளல் வெம் சர மாரனை அஞ்சியோ - கூட்டமான கொடிய பாணங்களையுடைய மன்மதனுக்குப் பயந்துதானோ; மெள்ள இன் கனவின் பயன் வேண்டியோ – மெதுவாக நற்கனவாகிய இனிய பயனைப் பெறவிரும்பித் தானோ; கள்ளம் என்கொல் அறிந்திலம் - (அவர்களின்) வஞ்சனைக் கருத்து யாதோ? அறியோம்; கண்முகிழ்த்து உள்ளம் இன்றி உறங்குகின்றார் - (தமது) கண்களை மூடிக்கொண்டு, மனம் விழித்திருக்கவும் தாம் உறங்குகின்றார்கள். (171)

**267.** பழுதின் மன்மத னெய்கணை பன்முறை
உழுத கொங்கைய ரூச லுயிர்ப்பினர்
அழுது செய்வதெ னானை யரக்கனை
எழுத லாங்கொலென் றெண்ணுகின் றார்சிலர்.

பழுதில் மன்மதன் எய்கணை பல் முறை
உழுத கொங்கையர், ஊசல் உயிர்ப்பினர்,
'அழுது செய்வது என்? ஆனை அரக்கனை
எழுதலாம் கொல்?' என்று, எண்ணுகின்றார் சிலர்.

சிலர் - சில இயக்க மாதர்கள்; மன்மதன் எய் பழுது இல் கணை பல் முறை உழுத கொங்கயைர் - மன்மதனால் எய்யப்பட்ட பழுது

படுதலில்லா அம்புகள் பலமுறை பாய்ந்து செல்லப் பெற்ற தனங்களையுடையவரும்; ஊசல் உயிர்ப்பினர் - போவதும் வருவது மாய் ஊசலாடுகின்ற மூச்சினையுடையவர்களுமாய்; அழுது செய்வது என் - (நாம்) அழுவதனால் செய்வது என்ன இருக்கிறது ?; ஆணை அரக்கனை - (எவரும் எதிர்க்காது ஏற்றுக்கொள்ளும்) கட்டளையை யுடைய அரக்கனாகிய இராவணனை; எழுதலாம் கொல் என்று எண்ணுகின்றார் - (சித்திரமாக) வரைந்தாவது பார்த்து ஆறி யிருக்கலாமென்றால் அவ்வாறு வரைதலும் இயலாதே என்று நினைக்கின்றார்கள். (172)

**268.** ஆவ தொன்றரு ளாயென தாவியைக்
கூவு கின்றிலை கூறலை சென்றெனப்
பாவை பேசுவ போற்கண் பனிப்புறப்
பூவை யோடு புலம்புகின் றார்சிலர்.

'ஆவது ஒன்று அருளாய்! எனது ஆவியைக்
கூவுகின்றிலை! கூறலை சென்று!' எனப்
பாவை பேசுவ போல், கண் பனிப்பு உறப்
பூவையோடு புலம்புகின்றார் சிலர்.

எனது ஆவியைக் கூவுகின்றிலை – எனது உயிர்போல்பவனான இராவணனை அழைக்கின்றாயில்லை; சென்று கூறலை – (என் நிலை மையை அவனிடம்) போய்ச் சொல்லுகின்றாயுமில்லை; ஆவது ஒன்று அருளாய் - (இங்ஙனம் எனக்கு) ஆகவேண்டிய காரியம் ஒன்றையும் என்மேல் இரங்கிச் செய்யாதிருக்கிறாய். பாவை பேசுவபோல் - சித்திரப் பதுமைகள் பேசுவன போல. கண் பனிப்பு உற - கண் களில் நீர் சோர. பூவை – நாகணவாய்ப்புள். (173)

**269.** ஈரத் தென்ற லிழுக மெலிந்துதம்
பாரக் கொங்கையைப் பார்த்தந்தப் பாதகன்
வீரத் தோள்களின் வீக்கமெண் ணுவுயிர்
சோரச் சோரத் துளங்குகின் றார்சிலர்.

ஈரத் தென்றல் இழுக மெலிந்து, தம்
பாரக் கொங்கையைப் பார்த்து, அந்தப் பாதகன்
வீரத் தோள்களின் வீக்கம் எண்ணு, உயிர்
சோரச் சோரத் துளங்குகின்றார் சிலர்.

ஈரத் தென்றல் - குளிர்ந்த தென்றல்; இழுக - மெல்ல உராய்ந்து செல்ல. பாதகன் வீரத் தோள்களின் வீக்கம் எண்ணு - (தம்மைக் கூடாது)வருத்துபவனுன இராவணனது வீரம் பொருந்திய தோள்களின் திரட்சியைக் கருதி: துளங்குகின்ருர்-துடிக்கின் ருர்கள். (174)

**270.** நக்க செம்மணி நாறிய நீணிழல்
பக்கம் வீசுறு பள்ளியிற் பல்பகல்
ஒக்க வாசை யுலக்க வுலந்தவர்
செக்கர் வான்றரு திங்களொத் தார்சிலர்.

நக்க செம்மணி நாறிய நீள் நிழல்
பக்கம் வீசுறு பள்ளியில், பல்பகல்
ஒக்க ஆசை உலக்க உலந்தவர்,
செக்கர் வான் தரு திங்கள் ஒத்தார் சிலர்.

சிலர்—சில இயக்க மாதர்கள்; நக்க - ஒளிவிடுகின்ற; செம்மணி நாறிய நீள் நிழல் - சிவந்த இரத்தினங்களினின்று தோன்றிய பெரிய காந்திகள்; பக்கம் வீசுறு பள்ளியில் - பக்கங்களில் வீசப் பெற்ற படுக்கையிலே; பல் பகல் ஒக்க ஆசை உலக்க உலந்தவர் - பல நாள்களாய் ஒரேவிதமாகத் தமது ஆசை வீணேயொழிதலால் மெலிந்து கிடப்பவர்களாய்; செக்கர் வான்தரு திங்கள் ஒத்தார் - மேலைத் திசையிற் செவ்வானத்தில் தோன்றுகின்ற (கலையிழந்த பிறை) மதி போன்றிருந்தார்கள்.

சிவந்த இரத்தினங்களின் ஒளி வீசிச் சிவந்து தோன்று கின்ற பள்ளியிற் சாய்ந்து கிடக்கும் மெலிந்த மங்கையர் சிறந்த வானிற் கீற்றுப் பிறைபோன்றனர் என்க. (175)

**271.** வாளி ஞற்றிய கற்பக வல்லியர்
தோளி ஞற்றிய தூங்கம ளித்துயில்
நாளி ஞற்செவி யிற்புகு நாமயாழ்த்
தேளி ஞற்றிகைப் பெய்துகின் ருர்சிலர்.

வாளின் ஆற்றிய கற்பக வல்லியர்
தோளின் நாற்றிய தூங்கு அமளித் துயில்
நாளினுல், செவியில் புகும் நாம யாழ்த்
தேளினுல் திகைப்பு எய்துகின்ருர் சிலர்.

சிலர் – சில இயக்கமாதர்கள்; நாற்றிய தூங்கு அமளி – தொங்க விடப்பட்ட அசைகின்ற படுக்கையின்கண்; வாளின் ஆற்றிய கற்பக

வல்லியர் தோளின் - ஒளிகொண்டமைத்த கற்பகநாட்டு வல்லியர் (ஆகிய சேடியர்) தோளின்மேல். தூங்குதல் – அசைதல்; ('தூங்கு கையான் ஓங்கு நடைய' புறம் 22). துயில் நாளின் – தூங்கும்போது ஆல்: அசை. செவியில் புகும் யாழ் நாமத் தேளினுல் திகைப்பு எய்து கின்ருர் - செவியிற் புகுகின்ற யாழிசை என்னும் பெயர் கொண்ட தேளினுலே திகைக்கின்ருர்கள். (176)

**272.** கவ்வு தீக்கணை மேருவைக் கால்வளைத்
தெவ்வி னுன்மலை யேந்திய வேந்துதோள்
வவ்வு சாந்துதம் மாமுலை வெளவிய
செவ்வி கண்டு குலாவுகின் ருர்சிலர்.

கவ்வு தீக்கணை மேருவைக் கால் வளைத்து
எவ்வினுன் மலை ஏந்திய ஏந்து தோள்
வவ்வு சாந்து தம் மாமுலை வெளவிய
செவ்வி கண்டு, குலாவுகின்ருர் சிலர்.

சிலர் - சில இயக்க மகளிர்; மேருவைக் கால் வளைத்து - மேரு மலையை இரு கோடிகளும் வளையச் செய்து : (வில்லாக வளைத்து); கவ்வு தீக்கணை எவ்வினுன் மலை - (பட்ட இடத்திற்) பற்றுமியல்புள்ள நெருப்பையுடைய அம்பை (முப்புரங்களின்மேல்) எய்தவனுகிய சிவபெருமானின் கயிலைமலையை ; ஏந்திய ஏந்து தோள் வவ்வு சாந்து - கையினுலெடுத்த(வனுகிய இராவணனுடைய) உயர்ந்த தோள்களிற்பொருந்திய சந்தனச் சாந்தை; தம் மாமுலை வெளவிய செவ்வி கண்டு – தங்களுடைய பருத்த தனங்கள் கவர்ந்த அழகைக் கண்டு; குலாவுகின்ருர் – மகிழ்கின்ருர்கள்.

இது முன்னிகழ்ந்த இன்ப அனுபவநிலையை நினைவிற் கொண்டு பிரிவுக் காலத்தில் ஒருவாறு தேறிய செய்தி கூறியது. (177)

**273.** கூடி நான்குயர் வேலையுங் கோக்கநின்
ருடி னுன்புக ழங்கை நரம்பினுல்
நாடி நாற்பெரும் பண்ணு நயப்புறப்
பாடி னுன்புகழ் பாடுகின் ருர்சிலர்.

கூடி நான்கு உயர் வேலையும் கோக்க நின்று
ஆடினுன் புகழ் அம் கை நரம்பினுல்
நாடி நால் பெரும் பண்ணும் நயப்பு உறப்
பாடினுன் புகழ் பாடுகின்ருர் சிலர்.

சிலர்-சில இயக்கமகளிர்; நான்கு உயர் வேலையும் கூடி கோக்க நின்று ஆடினன் புகழ் - நான்கு திசைகளிலுமுள்ள பெரிய கடல்களும் பொங்கிக் கலந்து ஒரே வெள்ளமாக, அப்பொழுது (தான் கெடாது) நின்று ஆனந்த ஆடலைப் புரிந்தவனை சிவபெருமானது புகழை; அங்கை நரம்பினல் நாடி நாற் பெரும் பண்ணும் நயப்புறப் பாடினன் - (கயிலையின் கீழ் அழுத்தப்பட்டபொழுது) அழகிய தனது கையின் நரம்புகளைக் கொண்டு விரும்பி நால்வகைப் பெரும்பண்களும் இனிமையுண்டாம்படி பாடியவனை இராவணனுடைய; புகழ் பாடுகின்ருர் – புகழைப் பாடுகின்றவரானர்கள்.

நாற்பெரும் பண்களாவன - பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி என்பன. (178)

**274.** இனைய தன்மை இயக்கிய ரீண்டிய
மனையொ ராயிர மாயிரம் வாயில்போய்
அனைய வன்குலத் தாய்வளை யாரிடம்
நினைவி னெய்தின னீதியி னெய்தினன்.

இனைய தன்மை இயக்கியர் ஈண்டிய
மனை ஓராயிரம் ஆயிரம் வாயில் போய்,
அனையவன் குலத்து ஆய் வளையார் இடம்
நினைவின் எய்தினன், நீதியின் எய்தினன்.

அனையவன் குலத்து ஆய் வளையார் இடம் - அவ்விராவணனுடைய குலத்தினராய் அவன் உரிமைமகளிரான அரக்கியர் இருப்பிடத்தை; நீதியின் எய்தினன்–ஒழுக்கநெறிநின்றவனை அநுமன்; நினைவின் எய்தினன் – எண்ணியபடியே அடைந்தான். (179)

இராவணன் உரிமைமகளிருள் அரக்கியர்நிலை 275-286

**275.** எரிசுடர் மணியின் செங்கே
★ ழிளவெயி லிடைவி டாது
விரியிருள் பருகி நாளும்
விளக்கின்றி விளங்கு மாடத்
தரிவையர் குழுவி னீங்கி
யாசையுந் தாமு மேபுக்
கொருசிறை யிருந்து போன
வுள்ளத்தொ டூடு வாரும்.

எரிசுடர் மணியின் செங்கேழ்
இளவெயில் இடைவிடாது
விரி இருள் பருகி நாளும்
விளக்கு இன்றி விளங்கும் மாடத்து,
அரிவையர் குழுவின் நீங்கி,
ஆசையும் தாமுமே புக்கு,
ஒருசிறை இருந்து, போன
உள்ளத்தொடு ஊடுவாரும்.

எரி சுடர் மணியின் - விளங்குகின்ற சூரியன்போல் ஒளிவிடுகின்ற மாணிக்கங்களின்; செங்கேழ் இளவெயில் – செந்நிறங்கொண்ட முதிராத மென்மையையுடைய (ஒளியாகிய) வெயிலானது இடைவிடாது விரியிருள் பருகி – ஓயாமல் பரந்துவருகிற இருட்டை நீக்குவதால்; நாளும் விளக்கு இன்றி விளங்கும் மாடத்து - எப்பொழுதும் விளக்கு வேண்டாமலே ஒளியுடையதாயிருக்கிற மாளிகைகளில் ; அரிவையர் குழுவின் நீங்கி – தோழியராயத்தை விட்டகன்று; ஆசையும் தாமுமே புக்கு ஒரு சிறை இருந்து - (தமது) காதலும் தாமும் மட்டுமே சென்று ஒரு பக்கத்திலே (தனியாக) இருந்துகொண்டு ; போன உள்ளத்தொடு ஊடுவாரும் - (தமது காதலனாகிய இராவணனிடத்துச்) சென்ற மனத்தோடு பிணங்குகின்றவர்களும்.

இப்பாடல்முதல் பதினொரு பாடல்கள் 286-ஆம் பாடலில் 'இத்திறத் தரக்கி மாதர்' எனவரும் தொடரோடு சென்றியையும். (180)

276. நகையெரிக் கற்றை தெற்றி
நாவிதோய்த் தனைய வோதி
புகையெனத் தும்பி சுற்றப்
புதுமலர்ப் பொங்கு சேக்கை
பகையென வேகி யாணர்ப்
பளிங்குடைச் சீதப் பள்ளி
மிகையுயி ரோடுங் காம
விம்மலின் வெதும்பு வாரும்.

நகை எரிக் கற்றை தெற்றி நாவி தோய்த்து அனைய ஓதி
புகை எனத் தும்பி சுற்றப் புதுமலர்ப் பொங்கு சேக்கை
பகை என ஏகி, யாணர்ப் பளிங்கு உடைச் சீதப் பள்ளி
மிகை உயிரோடும் காம விம்மலின் வெதும்புவாரும்.

நகை எரிக் கற்றை தெற்றி - விளங்குகின்ற நெருப்புக் கொழுந்துகளைத் தொகுதியாகப் பின்னிக் கட்டி; நாவி தோய்த்து அனைய ஓதி-கத்தூரிக் குழம்பிலே தோய்த்து எடுத்ததுபோன்ற (நறு மணமிக்க) கூந்தலின்கண்; புகை எனத் தும்பி சுற்ற - புகை யெழுந் தது போன்று (கரிய) வண்டுகள் சுற்றிக்கொண்டிருக்க; புதுமலர்ப் பொங்கு சேக்கை பகை என ஏகி - புதிய மலர்களாலே பூரித்துள்ள படுக்கையை (த்தங்களுக்குப் பிடிக்காத) பகையென்று கருதி அதனை விட்டு நீங்கி, (தனித்து மலர்ப்படுக்கையில் துயில்கொள்ள மனமில் லாது விட்டுநீங்கினரென்றவாறு); யாணர்ப் பளிங்குடைச் சீதப் பள்ளி - அழகிய படிகக் கல்லினாற் செய்யப்பெற்ற குளிர்ந்த மேடை யாகிய படுக்கையின்கண் (கிடந்து); மிகை உயிரோடும் - எஞ்சி நின்ற (வேண்டாத) உயிருடனே; காம விம்மலின் வெதும்புவாரும் - விரும்பியது கிட்டாத ஏக்கத்தால் (நெஞ்சம்) கொதிக்கின்றவர்களும்.

அரக்கியர் கூந்தல் செந்நிறமுடைமையின் நெருப்புக்கொழுந்து கள் உவமையாயின: செந்நிறக் கூந்தலில் கருநிறத் தும்பிகள் மொய்த்தமை நெருப்பிலிருந்து புகை கிளம்புவதை ஒத்தது. (181)

**277.** சவிபடு தகைசால் வானந்
தாளுெரு மேனி யாகக்
குவியுமீ ஞர மாக
மின்கொடி மருங்கு லாகக்
கவிரொளிச் செக்கர் கற்றை
யோதியா மழையுண் கண்ணு
அவிர்மதி நெற்றி யாக
அந்திவா ஞெக்கின் ருரும்.

சவிபடு தகைசால் வானம் தான் ஒரு மேனி ஆகக்
குவியும் மீன் ஆரம் ஆக, மின்கொடி மருங்குல் ஆகக்
கவிர் ஒளிச் செக்கர் கற்றை ஓதியா, மழை உண் கண்ணு
அவிர்மதி நெற்றி ஆக, அந்திவான் ஒக்கின்ருரும்.

சவி – ஒளி. தகை - அழகு: சிறப்புமாம். மீன் – உடுக்கள். மருங்குல் – இடை. கவிர் - முள் முருக்க மலர். செக்கர்-செவ்வானம். உண்கண் - மையுண்டகண். அவிர்மதி – விளங்குகின்ற பிறைச் சந்திரன். வானம் மேனிக்கும், விண்மீன் ஆரத்திற்கும், மின்னற் கொடி இடைக்கும், செக்கர் கூந்தலுக்கும், மழை விழிக்கும், பிறைமதி நெற்றிக்கும் உவமையாயின. (182)

**278.** பானலுண் கண்ணும் வண்ணப்
படிமுறை மாறப் பண்ணைச்
சோனைபோன் றளிகள் பம்புஞ்
சுரிகுழற் கற்றை சோர
மேனிவந் தெழுந்த மாட
வெண்ணிலா முன்றி னண்ணி
வானமீன் கையின் வாரி
மணிக்கழங் காடு வாரும்.

பானல் உண் கண்ணும் வண்ணப் படிமுறை மாறப் பண்ணைச் சோனை போன்று அளிகள் பம்பும் சுரிகுழல் கற்றை சோர, மேல் நிவந்து எழுந்த மாட வெள் நிலா முன்றில் நண்ணி, வான மீன் கையின் வாரி, மணிக் கழங்கு ஆடுவாரும்.

மேல் நிவந்து எழுந்த மாட வெள் நிலா முன்றில் நண்ணி – மேலேஉயர்ந்தெழுந்தமாளிகையின்வெள்ளிய நிலவெறிக்கும் முற்றமாகிய அரமியத் தலத்தையடைந்து; பண்ணை அளிகள் பம்பும் சோனைபோன்ற சுரிகுழல் கற்றை சோர - இசைபாடும் வண்டுகள் நிறைந்த மேகம் போன்ற நுனி சுருண்ட கூந்தலின் தொகுதி சரிய; வானமீன் கையின் வாரி - ஆகாயத்திலுள்ள நட்சத்திரங்களை அள்ளியெடுத்து; பானல் உண்கண்ணும் – நீலோற்பலமலரை வென்ற கண்களால்; வண்ணம் படிமுறை மாற – (அவற்றின்) நிறம் முறையே (கரிதாய்) மாறி மாறித் தோன்ற; மணிக்கழங்கு ஆடுவாரும் - அழகிய கழற்சிக்காய்களாகக்கொண்டு விளையாடுகின்றவர்களும்.

குழல் சோரும்படி ஆடினர் என்க. கண்ணின் பார்வை பட்ட பொழுதெல்லாம் கழங்காகவந்த நட்சத்திரங்கள் கண்ணின் கரு நிறத்தைக் காட்டின என்றவாறு. (183)

**279.** உழையுழைப் பரந்த வான
யாற்றுநின் றும்பர் நாட்டுக்
குழைமுகத் தாயம் தந்த
புனல்குளிர்ப் பிலவென் றூடி
இழைதொடுத் திலங்கு மாடத்
திடைதடு மாற வேறி
மழைபொதுத் தொழுகு நீரால்
மஞ்சன மாடு வாரும்.

உழை உழைப் பரந்த வான யாற்று நின்று, உம்பர் நாட்டுக்
குழை முகத்து ஆயம் தந்த புனல் குளிர்ப்பில என்று ஊடி
இழை தொடுத்து இலங்கும் மாடத்து இடை தடுமாற ஏறி,
மழை பொதுத்து, ஒழுகும் நீரால் மஞ்சனம் ஆடுவாரும்.

உழை உழை பரந்த வான யாற்று நின்று - (வானளாவ வுயர்ந் துள்ள மாளிகைகளின் உச்சியினருகில்) பல பக்கங்களிலும் பரவி யுள்ள ஆகாய கங்கையாற்றிலிருந்து; உம்பர் நாட்டுக் குழை முகத்து ஆயம் - தேவலோகத்துப் பெண்களாகிய குழையென்னுங் காதணி யோடு விளங்கும் முகத்தையுடைய பணிப்பெண்கள்; தந்த புனல் குளிர்ப்பு இல என்று ஊடி - முகந்துகொண்டு வந்த நீரானது குளிர்ச்சியாக இல்லையென்று அவர்களோடு கோபித்துக்கொண்டு; இழை தொடுத்து இலங்கும் மாடத்து - மாலைகள் கட்டி (அல்லது அணிகலன்கள் அமைத்து) அலங்கரிக்கப்பட்டு விளங்கும் மாளிகை களின் மேல் தளத்தில்; இடைதடுமாற ஏறி-இடை சோரும்படியாக ஏறிச் சென்று; மழை பொதுத்து - மேகங்களைத் துளைத்து: ஒழுகும் நீரால் - அவற்றினின்று சிந்துகின்ற நீரினால்; மஞ்சனம் ஆடு வாரும் - நீராடுகின்றவர்களையும்.

ஆகாய கங்கை நீரினும் மேகங்களைக் குடைந்தெடுக்கும் நீர் அதிகக் குளிர்ச்சிபெற்றிருக்கும் என்க. (184)

**280.** பன்னக வரசர் செங்கேழ்ப்
பணாமணி வலியிற் பற்றி
இன்னுயிர்க் கணவ னீந்தா
னாமென விருத்தி விஞ்சை
மன்னவர் முடியும் பூணும்
மாலையும் பணைய மாகப்
பொன்னினன் பலகைச் சூது
துயில்கிலர் பொருகின் றாரும்.

பன்னக அரசர் செங்கேழ்ப் பணாமணி வலியில் பற்றி,
இன் உயிர்க் கணவன் ஈந்தான் ஆம் என இருத்தி, விஞ்சை
மன்னவர் முடியும், பூணும், மாலையும், பணையம் ஆகப்
பொன்னின் நன் பலகைச் சூது, துயில்கிலர் பொருகின்றாரும்.

பன்னக அரசர் - அரவினத்தலைவர்களுடைய; செம் கேழ்ப் பணாமணி வலியில் பற்றி - படத்தையுடைய தலையினுச்சியிலுள்ள (இந்த) சிவந்த நிறமுள்ள இரத்தினங்களைத் தன் வலிமையினாற்

பறித்துக்கொண்டுவந்து ; இன் உயிர்க் கணவன் ஈந்தான் ஆம் என இருத்தி - இனிய உயிர்போன்ற கணவனுன இராவணன் (அன்போடு) தந்தான் (ஆதலால்) இவை வல்லுக்காய்களாக உதவும் என்று இருத்தி ; விஞ்சை மன்னவர் முடியும் பூணும் மாலேயும் பணயம் ஆக - வித்தியாதர மன்னர்கள் (தம் கணவனுக்குத் தோற்றுக் கொடுத்த) கிரீடங்களும் அணிகலன்களும், மாலேகளும் பந்தயப் பொருள்களாக வைத்து ; துயில்கிலர் பொன்னின் நன்பலகைச் சூது பொருகின்ருரும் – தூங்காதபடி பொன்ஞலியன்ற சதுரங்கப் பலகையிலே சூதாட்டமாடுகின்றவர்களும். (185)

**281.** தென்னகு குடமுட் பாடல்
சித்திய ரிசைப்பத் தீஞ்சொற்
பன்னக மகளிர் வள்வார்த்
தண்ணுமைப் பாணி பேணப்
பொன்னகு தரளப் பந்தர்க்
கற்பகப் பொதும்பர்ப் பொற்ருேள்
இன்னகை யரம்பை மாரை
யாடல்கண் டிருக்கின் ருரும்.

தென் நகு குடம் உள் பாடல்
சித்தியர் இசைப்பத் தீஞ்சொல்
பன்னக மகளிர் வள் வார்த்
தண்ணுமைப் பாணி பேணப்
பொன் நகு தரளப் பந்தர்க்
கற்பகப் பொதும்பர்ப் பொன் தோள்
இன் நகை அரம்பைமாரை
ஆடல் கண்டு இருக்கின்ருரும்.

கற்பகப் பொதும்பர்ப் பொன் நகு தரளப் பந்தர் - கற்பகச் சோலேயின் கண் தங்கத்தால் இழைக்கப்பட்டு முத்து வேய்ந்த பந்தலின்கீழ் ; சித்தியர் தென் நகு குடம் உள் பாடல் இசைப்ப - சித்தியருட் சிலர் இனிமை விளங்கும் குடமுழவினே இயக்கவும், மற்றும் சிலர் உள்ளாளப் பாடலே இசைக்கவும் ; தீம் சொல் பன்னக மகளிர் வள்வார்த் தண்ணுமைப் பாணி பேண - இனிய சொற் பயிலும் நாககன்னியர் வலிய தோலினுல் கட்டப்பட்ட மத்தளத்தின் தாள ஒலிகளேத் தளராது எழுப்பவும்; பொன் தோள் இன் நகை அரம்பைமாரை ஆடல் கண்டு இருக்கின்ருரும் - அழகிய தோள் களேயும் இனிமையான புன்சிரிப்பையும் உடைய அரம்பையரை ஆடச்செய்து பார்த்துக்கொண்டிருக்கின்றவர்களும்.

உள்ளாளப் பாடலின் விளக்கத்தை, சீவகசிந்தாமணி, 658-ஆம் செய்யுள் உரையிற் காண்க. ''தன்னுமைப் பாணி தளராதெழூஉ'' (கலித்தொகை—102). (186)

282. ஆணியிற் கிடந்த காத
லகஞ்சுட வருவி யுண்கண்
சேணுய ருறக்கந் தீர்ந்த
சிந்தையர் செய்வ தோரார்
வீணையுங் குழலுந் தத்த
மிடறும்வேற் றுமையிற் றீர்ந்த
பாணிதள் ளாடப் பாட
லமுதுகப் பாடு வாரும்.

ஆணியில் கிடந்த காதல் அகம் சுட, அருவி உண்கண் சேண் உயர் உறக்கம் தீர்ந்த சிந்தையர், செய்வது ஓரார், வீணையும், குழலும், தத்தம் மிடறும், வேற்றுமையில் தீர்ந்த பாணி தள்ளாடப் பாடல் அமுது உகப் பாடுவாரும்.

ஆணியில் கிடந்த காதல் – உரையாணி போன்று (பிறருக்கு எடுத்துக் காட்டாக உள்ளத்து) இருந்த உண்மைக் காதலானது: (ஆணியிற் கிடந்த காதல் என்பதற்கு இருப்பாணி போன்று பெயர்க்கலாகாதபடி உள்ளத்தில் ஊன்றிக் கிடக்கின்ற ஆசை என்றும் பொருள் கூறுவர்); அகம் சுட - (பிரிவுத்துயரால்) மனத்தை வருத்துதலால்; அருவி உண்கண் - அருவிபோன்று நீர் பெருகுகின்ற மையுண்ட கண்களையும்; உயர் உறக்கம் சேண் தீர்ந்த சிந்தையர் - சிறந்த உறக்கம் நெடுந்தூரத்தே விலகிய மனத்தினையும் உடைய அரக்கர் மகளிர்; செய்வது ஓரார் - இன்னது செய்வதென்று அறியாதவர்களாய்; வீணையும்...பாணி - வீணையின் இசையும் புல்லாங்குழலின் இசையும் தங்கள் குரலின் இசையும் வேறுபாடில்லாது அமைந்த முறை; தள்ளாட – நிலைகுலையவும்; பாடல் அமுது உக - பாடலின் இனிமை கெடவும்; பாடுவாரும் - பாடுகின்றவர்களும். (பாணி - முறை.) (187)

283. தண்டலை வாழை யன்ன
குறங்கிடை யல்குற் றட்டிற்
கொண்டபூந் துகிலுங் கோவைக்
கலைகளுஞ் சோரக் கூர்ங்கள்

உண்டல மந்த கண்ணு
　　ரூசலிட் டுலாவு கின்ற
குண்டலந் திருவில் வீசக்
　　குரவையிற் குழறு வாரும்.

தண்டலை வாழை அன்ன
　　குறங்கிடை அல்குல் தட்டில்,
கொண்ட பூம் துகிலும், கோவைக்
　　கலைகளும், சோரக் கூர்ங்கள்
உண்டு அலமந்த கண்ணார்,
　　ஊசல் இட்டு உலாவுகின்ற
குண்டலம் திரு வில் வீசக்
　　குரவையில் குழறுவாரும்.

தண்டலை - சோலை ; குறங்கு - தொடை ; வாழை குறங்குக்கு உவமை. கோவைக் கலைகள் - கோத்த வடங்களையுடைய மேகலை, காஞ்சி என்னும் இடையணிகள். கூர்ங்கள் - உறைப்பான கள். அலமந்த கண்ணார் - சுழலுகின்ற கண்களையுடையராய். குண்டலம் திரு வில் வீச – குண்டலமென்னும் காதணி அழகிய ஒளியை வீசும் படியாக. குரவை - மகளிர் கைகோத்துப் பாடியாடும் கூத்து. குழறு வாரும் – பேச்சுத் தெளிவின்றித் தடுமாறிப் பேசுவாரும். (188)

**284.** நச்செனக் கொடிய கண்ணார்
　　கள்ளொடு குருதி நக்கிப்
பிச்சரிற் பிதற்றி யல்குற்
　　பூந்துகில் கலாபம் பீறிக்
குச்சரித் திறத்தி ஞேசை
　　களங்கொளக் குழுக்கொண் டீண்டிச்
சச்சரிப் பாணி கொட்டி
　　நிறைதடு மாறு வாரும்.

நச்சு எனக் கொடிய கண்ணார்,
　　கள்ளொடு குருதி நக்கிப்
பிச்சரில் பிதற்றி, அல்குல்
　　பூந்துகில் கலாபம் பீறிக்

குச்சரித் திறத்தின் ஓசை
களம் கொளக் குழுக் கொண்டு ஈண்டிச்
சச்சரிப் பாணி கொட்டி,
நிறை தடுமாறுவாரும்.

நச்சு எனக் கொடிய கண்ணார் - நஞ்சு என்று சொல்லும்படி கொடுமையை விளக்கும் கண்களையுடைய சில அரக்கியர்; கள்ளொடு குருதி நக்கி - கள்ளையும் (பலவகைப் பிராணிகளின்) இரத்தத்தையும் குடித்து விட்டு; பிச்சரில் பிதற்றி - பைத்தியம் பிடித்தவர்கள்போல் வாயில் வந்தபடி உளறியவராய்; குழுக் கொண்டு ஈண்டி - கூட்டமாகக் கூடிக்கொண்டு; குச்சரித் திறத்தின் ஓசை களம் கொள - குச்சரியென்ற பண்ணைப் போன்ற ஒலி கண்டத்திலே தோன்ற; அல்குல் பூம் துகில் கலாபம் பீறி - அரையிலுடுத்த மெல்லிய சேலையையும் கலாபம் என்னும் இருபத்தைந்து கோவையுள்ள இடையணியையும் கிழித்துக்கொண்டு; சச்சரிப் பாணி கொட்டி - சச்சரியென்னும் தோற்கருவிகொண்டு தாளமிட்டு; நிறை தடுமாறுவாரும் - மன நிலை தடுமாறுகிறவர்களும்.

நிறையாவது மறை பிறர றியாமை. மதுமயக்கால் வெறியாட்டம் கொண்டு மகளிர்க்குரிய குணங்களை யிழந்து தடுமாறினர் என்றவாறு. (189)

285. தயிர்நிறக் கள்ளுண் டுள்ளந்
தள்ளத்தம் மறிவு தள்ளப்
பயிருறத் தெய்வ மென்மேற்
படிந்தது பார்மி னென்னு
உயிருயிர்த் திரண்டு கையு
முச்சிலுமே லுயர நீட்டி
மயிர்சிலிர்த் துடலங் கூசி
வாய்விரித் தொடுங்கு வாரும்.

தயிர் நிறக் கள் உண்டு, உள்ளம்
தள்ளத் தம் அறிவு, தள்ளப்
பயிர் உறத் 'தெய்வம் என்மேல்
படிந்தது, பார்மின்!' என்னு,
உயிர் உயிர்த்து, இரண்டு கையும்
உச்சிமேல் உயர நீட்டி,
மயிர் சிலிர்த்து, உடலம் கூசி,
வாய் விரித்து, ஒடுங்குவாரும்.

தயிர் நிறக் கள் உண்டு - தயிரினது நிறம் பொருந்திய கள்ளைக் குடித்து; உள்ளம் தள்ளத் தம் அறிவு தள்ள - மனம் தடுமாறத் தம் அறிவும் மயங்கி; பயிர் உற - கூவுதல் மிக; தெய்வம் என் மேல் படிந்தது பார்மின் என்னு –'தெய்வம் என்மேல் ஆவேசித்தது பாருங்கள்' என்று சொல்லி; உயிர் உயிர்த்து - பெருமூச்சுவிட்டு; வாய் விரித்து ஒடுங்குவாரும் - வாய் திறந்து (ஆவென்று கதறிப்) பின்பு ஓய்ந்துவிடுபவர்களும். (190)

**286.** இத்திறத் தரக்கர் மாத
ரீரிரு கோடி யீட்டம்
பத்தியி னுறையும் பத்திப்
படர்நெடுந் தெருவும் பார்த்தான்
சித்திய ருறையு மாடத்
தெருவும்பின் னுகச் சென்ருன்
உத்திசை விஞ்சை மாத
ருறையுளை முறையி னுற்ருன்.

**இத்திறத்து அரக்கர் மாதர் ஈரிரு கோடி ஈட்டம்,**
**பத்தியின் உறையும் பத்திப் படர் நெடும் தெருவும் பார்த்தான் :**
**சித்தியர் உறையும் மாடத் தெருவும் பின்னுகச் சென்ருன் :**
**உத்திசை விஞ்சை மாதர் உறையுளை முறையின் உற்ருன்.**

இத்திறத்து அரக்கர் மாதர் –(இதற்கு முன் வந்துள்ள பதினெரு பாடல்களிற் கூறிய) இயல்புடையவரான அரக்கியர்; ஈரிரு கோடி யீட்டம் - நான்கு கோடியளவு கொண்ட கூட்டத்தார்; பத்தியின் உறையும் - (இராவணனிடத்து) அன்பு கொண்டு வாழ்கின்ற; பத்திப் படர் நெடுந்தெருவும் பார்த்தான் – வரிசையாகத் தொடர்ந்துள்ள நீண்ட தெருவையும் (அநுமன்) தேடிப் பார்த்து; சித்தியர் உறையும் மாடத் தெருவும் பின் ஆகச் சென்ருன் - சித்தியரென்னும் தேவமாதர்கள் வாழ்கின்ற மாடங்களையுடைய தெருவையும் தேடிப்பார்த்து அது பின்னுறும்படி மேற்சென்று; உத்திசை- (தனக்கு) முன்னுலுள்ள; விஞ்சை மாதர் உறையுளை முறையின் உற்ருன் - வித்தியாதரமாதர்கள் வசிக்கின்ற தெருவை முறையே சேர்ந்தனன். (191)

## இராவணன் உரிமை மகளிருள் விஞ்சைமகளிர்நிலை 287–289

**287.** வளர்ந்த காதலர் மகரிகை நெடுமுடி
★ யரக்கனை வரக்காணுர்
தளர்ந்த சிந்தைதம் மிடையினு நுடங்கிட
வுயிரொடு தடுமாறிக்
களந்த வாநெடுங் கருவியிற் கைகளிற்
செயிரியர் கலைக்கண்ணுல்
அளந்த பாடல்வெவ் வரவுதஞ் செவிபுக
வலமர லுறுகின்ருர்.

வளர்ந்த காதலர், மகரிகை நெடுமுடி
அரக்கனை வரக்காணுர்,
தளர்ந்த சிந்தை தம் இடையினும் நுடங்கிட,
உயிரொடு தடுமாறிக்
களம் தவா நெடும் கருவியில், கைகளின்
செயிரியர் கலைக்கண்ணுல்,
அளந்த பாடல் வெவ் அரவு தம் செவிபுக,
அலமரல் உறுகின்ருர்.

வளர்ந்த காதலர் - (தமது கணவனுகிய இராவணனிடத்து) மேன் மேலெழுகின்ற ஆசையையுடையவர்களான சில வித்தியாதர மகளிர்; மகரிகை நெடுமுடி அரக்கனை வரக் காணுர் - சுறுமீன் வடிவு பொறித்த நீண்ட கிரீடத்தையுடைய அரக்கனுன இராவணனை(த் தம்மிடம்) வரக்காணுதவர்களாகி; தளர்ந்த சிந்தை தம் இடையினும் நுடங்கிட - சோர்வுற்ற (தமது) மனம் தமது இடையைக் காட்டிலும் அதிகமாகத் துடிக்க; உயிரொடு தடுமாறி - உயிரும் தாமும் நிலைகெட்டு; செயிரியர் - பாணர்; களம் தவா நெடும் கருவியில் - தங்கள் மிடற்ருேடு மாறுபடாத (ஒத்து இசைக்கின்ற யாழ் முதலிய) சிறந்த வாத்தியங்களில்; கைகளின் - (தங்கள்) கைவிரல்களைக்கொண்டு; கலைக்கண்ணுல் - நூல்களாகிய கண் களால் (இசைநூல்மரபுப்படி); அளந்த பாடல் - அளவிட்டு எழுப்பிய இசைப்பாட்டாகிய; வெவ் அரவு - கொடிய பாம்பு; தம் செவிபுக அலமரலுறுகின்ருர் - தம் காதுகளில் நுழைதலால் கலக்க மடைகின்ருர்கள். (192)

**288.** புரியு நன்னெறி முனிவரும் புலவரும்
புகல்கிலர் பொறைகூர
எரியும் வெஞ்சினத் திகலடு கொடுந்திற
லிராவணற் கெஞ்ஞான்றும்
பரியு நெஞ்சின ரிவரென வயிர்த்தொரு
பகையொடும் பனித்திங்கள்
சொரியும் வெங்கதிர் துணைமுலைக் குவைசுடக்
கொடிகளிற் றுடிக்கின்றார்.

புரியும் நல்நெறி முனிவரும், புலவரும்,
புகல்கிலர் பொறைகூர,
எரியும் வெம் சினத்து இகல் அடு கொடும் திறல்
இராவணற்கு, எஞ்ஞான்றும்
பரியும் நெஞ்சினர் இவர் என வயிர்த்து ஒரு
பகையொடும், பனித்திங்கள்
சொரியும் வெம் கதிர் துணைமுலைக் குவை சுடக்
கொடிகளில் துடிக்கின்றார்.

நல் நெறி புரியும் முனிவரும் புலவரும் - நல்வழிகளையே விரும்பும் இருடிகளும் தேவர்களும்; புகல்கிலர் பொறைகூர - வாய் விட்டுச் சொல்லவும் முடியாமல் மிகுந்த பொறுமையுடன் வருந்த; எரியும் வெம் சினத்து இகல் அடு கொடும் திறல் இராவணற்கு - கொதிக்கின்ற கொடிய கோபத்தோடு (அவர்களின்) வலிமையை அழிக்கின்ற கொடிய ஆற்றலுள்ள இராவணனிடத்தில்; எஞ்ஞான்றும் - எப்பொழுதும்; இவர் பரியும் நெஞ்சினர் என - இவர்கள் அன்புகொள்ளும் மனத்தையுடையவர்கள் என்று; வயிர்த்து ஒரு பகையொடும் - செற்றம்பற்றியதான ஒரு பகையொடு; பனித் திங்கள் - குளிர்ந்த சந்திரன்; சொரியும் வெம் கதிர் - பொழிகின்ற வெப்பம்பொருந்திய கிரணங்கள்; துணை முலைக்குவை சுட - குவிந்தெழுந்த இரண்டு தனங்களையும் எரிக்க; கொடிகளில் துடிக்கின்றார் - பூங்கொடிகள்போல் துடிக்கின்றவர்களும். (193)

**289.** சிறுகு காலங்க ளூழிக ளாம்வகை
திரிந்து சிந்தனைசிந்த
முறுகு காதலின் வேதனை யுழப்பவர்
முயங்கிய முலைமுன்றில்

இறுகு சாந்தமு மெழுதிய குறிகளு
மின்னுயிர்ப் பொறையீர
மறுகு வாட்கண்கள் சிவப்புற நோக்கினர்
மயங்கின ருயிர்க்கின்றார்.

சிறுகு காலங்கள் ஊழிகள் ஆம்வகை,
திரிந்து சிந்தனை சிந்த,
முறுகு காதலின் வேதனை உழப்பவர்,
முயங்கிய முலைமுன்றில்
இறுகு சாந்தமும், எழுதிய குறிகளும்,
இன் உயிர்ப் பொறை ஈர,
மறுகு வாள் கண்கள் சிவப்பு உற நோக்கினர்,
மயங்கினர், உயிர்க்கின்றார்.

சிறுகு காலங்கள் - (நொடி, இமை, நாழிகை முதலிய) சிறிய அளவுள்ள பொழுதுகளும்; ஊழிகள் ஆம்வகை - கற்பகாலங்கள் போல் நீண்டனவாகத் தோன்றும்படி; சிந்தனை திரிந்து சிந்த - மனம் மாறிச் சிதற; முறுகு காதலின் வேதனை உழப்பவர் - முதிர்ந்த காம நோயினால் வருந்துபவர்களாய்; முயங்கிய முலை முன்றில் இறுகு சாந்தமும் எழுதிய குறிகளும் - (முன்பு இராவணனை அணைந்த தமது தனங்களின் மேல் பதிந்த சந்தனமும் (அவன்) எழுதியிட்ட தொய்யிற்குறிகளும்; இன் உயிர்ப் பொறை ஈர - (தமது) இனிய உயிராகிய பாரத்தைப் பிளந்து வருத்த; மறுகு வாள் கண்கள் சிவப்பு உற - சுழலுகின்ற வாள்போன்ற தமது கண்கள் சிவக்கும்படி; நோக்கினர் மயங்கினர் உயிர்க்கின்றார் - பார்த்துக் கலங்கிப் பெருமூச்சுவிடுகின்றவர்களும். (194)

அநுமன் மண்டோதரிமனையைக் காண்டல்

**290.** ஆய விஞ்சையர் மடந்தைய ருறைவிட
மாறிரண் டமைகோடி
தூய மாளிகை நெடுந்தெருத் துருவிப்போய்த்
தொலைவின்மூன் றுலகிற்கும்
நாய கன்பெருங் கோயிலை நண்ணுவான்
கண்டன னளிர்திங்கள்
மாய நந்திய வாண்முகத் தொருதனி
மயன்மகண் மணிமாடம்.

ஆய விஞ்சையர் மடந்தையர் உறைவிடம்
ஆறு இரண்டு அமை கோடி
தூய மாளிகை நெடும் தெருத் துருவிப்போய்த்
தொலைவு இல் மூன்று உலகிற்கும்
நாயகன் பெரும் கோயிலை நண்ணுவான்,
கண்டனன், நளிர் திங்கள்
மாய நந்திய வாள் முகத்து ஒரு தனி
மயன் மகள் மணி மாடம்.

ஆய – ஆகிய, அப்படிப்பட்ட; ஆறு இரண்டு அமை கோடி – பன்னிரண்டுகோடி யென்னும் தொகையுள்ள; தொலைவு இல் மூன்று உலகிற்கும் நாயகன் பெரும் கோயிலை நண்ணுவான் – தோல்வி யில்லாத, மூன்று உலகங்கட்கும் தலைவனான இராவணனுடைய பெரிய அரண்மனையைக் கிட்டினவனான அநுமன்; நளிர் திங்கள் மாய நந்திய வாள்முகத்து மயன் மகள் ஒரு தனி மணிமாடம் கண்டனன் – குளிர்ந்த மதியமும் ஒளி கெடும்படி அழகுடன் விளங்கிய ஒளியுள்ள முகத்தையுடைய, மயன்மகளாகிய மண்டோதரியினுடைய தனியே அமைந்த ஒப்பற்ற அழகிய மாளிகையைப் பார்த்தான்.

மயன் என்ற அசுரன் பெற்ற மகளாகிய மண்டோதரி இராவண னுடைய முதல் மனைவி. மண்டோதரியை மந்தோதரி யென்றும் வண்டோதரி யென்றும் வழங்குவதுண்டு. (195)

## மண்டோதரிமனையை அநுமன் வியத்தல்

**291.** கண்டு கண்ணொடுங் கருத்தொடுங் கடாயினன்
காரணங் கடைநின்ற
துண்டு வேறொரு சிறப்பெங்க ணாயகற்
குயிரினு மினியாளைக்
கொண்டு போந்தவன் வைத்ததோ ருறையுள்கொல்
குலமணி மனைக்கெல்லாம்
விண்டு வின்றட மார்பினின் மணியொத்த
திதுவென வியப்புற்றான்.

கண்டு, கண்ணொடும் கருத்தொடும் கடாயினன் :
'காரணம் கடை நின்றது
உண்டு வேறு ஒரு சிறப்பு! எங்கள் நாயகற்கு
உயிரினும் இனியாளைக்

கொண்டு போந்தவன் வைத்தது ஓர் உறையுள்கொல் ?
குலமணி மனைக்கு எல்லாம்,
விண்டுவின் தட மார்பினின் மணி ஒத்தது
இது!' என வியப்பு உற்முன்.

கடை நின்றது கண்டு கண்ணொடும் கருத்தொடும் காரணம் கடாயினன் - (மண்டோதரியின் மாளிகை) கடைசியாக அமைந்திருப்பதைப் பார்த்து, கண்ணால் நன்கு கண்டும், மனத்தால் நன்கு சிந்தித்தும் அதன் காரணத்தை ஆராய்ந்தவனாய்; வேறு ஒரு சிறப்பு உண்டு - பிற மாளிகைகளுக்கில்லாத சிறப்பு இம்மாளிகைக்கு அமைந்திருக்கிறது; எங்கள் நாயகற்கு உயிரினும் இனியாளைக் கொண்டுபோந்தவன் வைத்தது ஓர் உறையுள் கொல் – எங்கள் தலைவனான இராமபிரானுக்கு உயிரினும் இனியவளான சீதையை எடுத்துவந்தவனான இராவணன் அவளைச் சிறை வைத்திருக்கும் இடம் இதுவாக இருக்குமோ ?; குலமணி......வியப்புற்முன் - மாளிகைகளாகிய உயர்ந்த இரத்தினங்களுக்கெல்லாம் திருமாலின் பரந்த மார்பிலணிந்த கவுத்துவ ரத்தினத்தைப் போன்றுள்ளது இம்மாளிகையென்று அதிசயித்தான்.

கருப்பொருள் ஏட்டில், "கடாயினன் - அளவிட்டான்; காரணம் கடை நின்றது உண்டு - நாம் வந்ததுக்குக் காரணம் இப்போது ஒடுக்கத்திலே கண்டதாகவேணும்'' என்று உரை காணப்படுகிறது. (196)

## மண்டோதரி துயிலும்நிலை 292-293

**292.** அரம்பை மேனகை திலோத்தமை யுருப்பசி
யாதியாயவர் மாரன்
சரம்பெய் தூணிபோற் றளிரடி கரந்தொடச்
சாமரை தடுமாறக்
கரும்பை யுஞ்சுவை கைப்பித்த சொல்லியர்
காமரங் கனியாழின்
நரம்பி னின்னிசை செவிபுக நாசியிற்
கற்பக விரைநாற.

அரம்பை, மேனகை, திலோத்தமை, உருப்பசி
ஆதியாயவர், மாரன்
சரம் பெய் தூணிபோல் தளிர் அடி கரம் தொடச்
சாமரை தடுமாறக்

கரும்பையும் சுவை கைப்பித்த சொல்லியர்
காமரம் கனி யாழின்
நரம்பின் இன்னிசை செவிபுக, நாசியில்
கற்பக விரை நாற.

ஆதியாயவர் - முதலான அமர மாதர்கள்; மாரன் சரம் பெய் தூணிபோல் தளிர் அடி கரம் தொட - மன்மதன் மலரம்புகளையிட்டு வைத்துள்ள அம்பருத்தூணி போன்ற வடிவமுள்ளனவும், தளிர் போல் மெல்லியனவுமான (தன்) பாதங்களைப் பிடிக்கவும்; சாமரை தடுமாற - வெண்சாமரைகள் அசையவும்; கரும்பையும் சுவை கைப் பித்த சொல்லியர் - கருப்பஞ்சாற்றையும் கைப்புச் சுவையுள்ள தென்று சொல்லும்படி மிக இனிமையாயுள்ள சொற்களையுடைய வரான தேவ மாதர்கள் (வாசிக்கின்ற); காமரம் கனியாழின் நரம்பின் இன் இசை செவிபுக - இனிய பண்ணை விளக்கும் யாழ் நரம்பின் இனிய இசையானது செவியில் நுழையவும்; கற்பக விரை நாசியில் நாற - கற்பகமலர்களின் மணம் மூக்கிற் பரிமளிக்கவும்.

இதுவும் அடுத்த பாடலும் மேல்வரும் 294-ஆம் பாடலில் 'துயில் கொளும் தையலை' என்பதோடு இயைந்து முடியும். (197)

**293.** விழைவு நீங்கிய மேன்மைய ராயினுங்
கீழ்மையோர் வெகுள்வுற்றால்
பிழைகொ னன்மைகொல் பெறுவதென் றையுறு
பீழையாற் பெருந்தென்றல்
உழையர் கூவப்புக் கேகெனப் பெயர்வதோ
ரூசலி னுளதாகும்
பழையம் யாமெனப் பண்பல செய்வரோ
பருணிதர் பயனோர்வார்.

விழைவு நீங்கிய மேன்மையர் ஆயினும்
கீழ்மையோர் வெகுள்வு உற்றால்,
பிழைகொல் நன்மைகொல் பெறுவது என்று ஐயுறு
பீழையால், பெரும் தென்றல்,
உழையர் கூவப் புக்கு ஏகு எனப் பெயர்வது ஓர்
ஊசலின் உளதாகும்:
பழையம் யாம் எனப் பண்பு அல செய்வரோ ?
பருணிதர் பயன் ஓர்வார்.

விழைவு - உலகப்பற்று. வெகுள்வு - சினம். பிழைகொல் நன்மைகொல் - (விளைவது) தீங்கோ நலமோ; பீழை - துயர வுணர்ச்சி; விழைவு நீங்கிய மேன்மையர் தென்றலுக்கு உவமை. உழையர் - மண்டோதரி அருகிருக்கும் ஏவலர். கூவப்புக்கு ஏகு எனப் பெயர்வது - அழைத்ததும் வந்து போ என்றால் போவது. ஊசல், நிலையற்ற போக்குவரவுக்கு உவமையாக வந்தது. பருணிதர் - சான்றோர் அல்லது அறிவுடையோர். இச்செய்யுள் வேற்றுப்பொருள்வைப்பு என்னும் அணி பெற்றது. "பழையமெனக் கருதிப் பண்பல்ல செய்யும், கெழுதகைமை கேடு தரும்" என்ற திருக்குறட் கருத்து இதனுட் பயின்றமை காண்க. (198)

## மண்டோதரியைப் பிராட்டியென்று மயங்கி அநுமன் வருந்தல் 294-295

**294.** இன்ன தன்மையி னெழில்மணி விளக்கங்க
ளியல்கெடப் பொலிகின்ற
தன்ன தின்னொளி தழைவுறத் துயில்கொளுந்
தையலைத் தகைவில்லான்
அன்ன ளாகிய சானகி யிவளென
வயிர்த்தகத் தெழுவெந்தீத்
துன்னு தன்னுயி ருடலொடு சுடுவதோர்
துயருழந் திவைசொன்னான்.

இன்ன தன்மையின் எழில் மணி விளக்கங்கள்
இயல்கெடப் பொலிகின்ற
தன்னது இன் ஒளி தழைவு உறத் துயில்கொளும்
தையலைத் தகைவு இல்லான்,
அன்னள் ஆகிய சானகி இவள் என
அயிர்த்து, அகத்து எழு வெம் தீத்
துன்னு தன் உயிர் உடலொடு சுடுவது ஓர்
துயர் உழந்து, இவை சொன்னான்.

இன்ன தன்மையின் -இப்படிப்பட்ட (செல்வ நுகர்ச்சிகளோடுங் கூடிய) தன்மையுடனும்; எழில் மணி விளக்கங்கள் இயல்கெடப் பொலிகின்ற தன்னது இன் ஒளி தழைவுறத் துயில் கொளும் தையலை - அழகிய மணிகளால் இயன்ற விளக்குகள் ஒளிச் சிறப்பு இழக்கும்படி அவற்றை மிஞ்சிக்கொண்டு விளங்குகின்ற தனது இனிமையான தேக காந்தி எங்கும் செழித்துப் பரவும்படி தூங்கிக்

கொண்டிருக்கிற மண்டோதரியை; தகைவு இல்லான் – தடையற்ற வனுன அநுமன்; இவள் அன்னள் ஆகிய சானகி என அயிர்த்து - இவள் அந்தச் சீதையென்று சந்தேகித்து; அகத்து எழு வெம் தீ - மனத்துப் பொங்கியெழுந்த கொடிய சினத்தீ; துன்னு தன் உயிர் உடலொடு சுடுவது ஓர் துயர் உழந்து - பொருந்திய தனது உயிரை யும் உடலையும் சுடும்படியான பெருந்துயரால் வருந்தி. (199)

**295.** எற்பு வான்ருெடர் யாக்கையாற் பெறும்பய
னிழந்தன ளிதுநிற்க
அற்பு வான்றனை யிற்பிறப் பதனெடு
மிழந்துதன் னருந்தெய்வக்
கற்பு நீங்கிய கனங்குழை யிவளெனிற்
காகுத்தன் புகழோடும்
பொற்பும் யானுமிவ் விலங்கையு மரக்கரும்
பொன்றுது மின்றென்ருன்.

'எற்பு வான் தொடர் யாக்கையால் பெறும் பயன்
இழந்தனள் ! இது நிற்க,
அற்பு வான் தனை இற்பிறப்பதனெடும்
இழந்து தன் அரும் தெய்வக்
கற்பும் நீங்கிய கனம் குழை இவள் எனில்,
காகுத்தன் புகழோடும்,
பொற்பும், யானும், இவ் இலங்கையும், அரக்கரும்,
பொன்றுதும் இன்று !' என்ருன்.

எற்பு......இழந்தனள் – என்புகளின் வலிய இணைப்பினுலாகிய உடம்பையெடுத்ததால் அடையும்படியான பயனை (இவள்) இழந்து விட்டாள்; இது நிற்க - இஃது ஒருபுறம் இருக்க; இவள் அற்பு வான்தனை இற்பிறப்பதனெடும் இழந்து தன் அரும் தெய்வக்கற்பு நீங்கிய கனங்குழை எனில் - (இங்கு உறங்கிக்கொண்டிருக்கிற) இவள் அன்பாகிய சிறந்த கட்டையும் உயர்ந்த குடிப்பிறப்பையும் கைவிட்டுத் தனது அருமையான தெய்வத்தன்மையுள்ள கற்பி னின்றும் தவறிய சீதையாயின். காகுத்தன் - ககுஸ்தன் வழிவந் தோனுன இராமபிரான். பொற்பும் - (இராமபிரானது) பொலிவும். பொன்றுதும் - அழிவோம். (200

## அநுமன் தெளிதல் 296-297

**296.** மானு யர்த்திரு வடிவின ளவளிவண்
மாறுகொண் டனள்கூறில்
தானி யக்கியோ தானவர் தையலோ
வையுறுந் தகையானுள்
கானு யர்த்ததா ரிராமன்மே னேக்கிய
காதல்கா ரிகையார்க்கு
மீனு யர்த்தவன் மருங்குதான் மீளுமோ
நினைந்தது மிகையென்றான்.

'மானுயர்த் திருவடிவினள் அவள் : இவள்
மாறுகொண்டனள் : கூறில்,
தான் இயக்கியோ ? தானவர் தையலோ ?
ஐயுறும் தகை ஆனுள் !
கான் உயர்த்த தார் இராமன்மேல் நோக்கிய
காதல் காரிகையார்க்கு
மீன் உயர்த்தவன் மருங்குதான் மீளுமோ ?
நினைந்தது மிகை' என்றான்.

அவள் மானுயர்த் திருவடிவினள் - சீதையாகிய அவள் மானிடப் பெண்ணின் அழகிய உருவத்தையுடையவள்; இவள் மாறுகொண் டனள் - (இங்கே உறங்குகின்ற) இவள் மாறுபட்ட உருவத்தைக் கொண்டிருக்கிறாள்; கூறில் - சொல்லப்புகின்; தான் இயக்கியோ தானவர் தையலோ ஐயுறும் தகை ஆனுள் - இவள் இயக்க மாதோ (அல்லது) அசுர மாதோ (என்று) சந்தேகிக்கும்படியாயுள்ளாள்; காரிகையார்க்கு - பெண்டிர்க்கு; கான் உயர்த்த தார் இராமன்மேல் நோக்கிய காதல் - மணத்தை மிகச் செய்த மாலையை யணிந்த இராமபிரானிடத்துச் சென்ற காதல்; மீன் உயர்த்தவன் மருங்கு தான் மீளுமோ – மீனக்கொடி பிடித்தவனான மன்மதன்பக்கந்தான் திரும்புமோ ? (திரும்பாது); நினைந்தது மிகை என்றான் – (இவளைச் சீதையென்று) நினைத்தது தவறு என்று எண்ணினான் (அநுமன்).

(201)

**297.** இலக்க ணங்களுஞ் சிலவுள வென்னினு
மெல்லைசென் றுறுகில்லா
அலக்க ணெய்துவ தணியதுண் டென்றெடுத்
தறைகின்ற திவள்யாக்கை

மலர்க்க ருங்குழல் சோர்ந்துவாய் வெரீஇச்சில
மாற்றங்கள் பறைகின்ருள்
உலக்கு மிங்கிவள் கணவனு மழிவுமிவ்
வியனகர்க் குளதென்ருன்.

'இலக்கணங்களும் சில உள ! என்னினும்,
எல்லே சென்று உறுகில்லா
அலக்கண் எய்துவது அணியது உண்டு என்று,எடுத்து
அறைகின்றது இவள் யாக்கை!
மலர்க் கருங் குழல் சோர்ந்து, வாய் வெரீஇச் சில
மாற்றங்கள் பறைகின்ருள் !
உலக்கும் இங்கு இவள் கணவனும்! அழிவும் இவ்
வியன் நகர்க்கு உளது!' என்ருன்.

இலக்கணங்களும் சில உள என்னினும் - உத்தமசாதி மகளிர்க்குள்ள அடையாளங்கள் சில இவளிடத்தில் காணப்படினும்; எல்லே சென்று உறுகில்லா அலக்கண் எய்துவது அணியது உண்டு என்று இவள் யாக்கை எடுத்து அறைகின்றது - எல்லேயில்லாத பெருந் தீங்கு அடையுங்காலம் நெருங்கியுள்ளது என்பதை இவளது உடல் எடுத்துச் சொல்லுகின்றது; மலர்க்கருங்குழல்......பறைகின்ருள் — மலரணிந்த கரிய கூந்தல் அவிழ்ந்து கிடக்கப்பெற்றவளாய் வாயும் குழறி ஏதோ சில சொற்களேப் புலம்புகின்ருள்; இங்கு இவள் கணவனும் உலக்கும் – இவ்விடத்துள்ள இவளுடைய கணவனும் இறப்பான்; இவ் வியன் நகர்க்கு அழிவும் உளது என்ருன் – இந்தப் பெரிய இலங்காபுரிக்கும் அழிவுண்டாம் என்று சொன்ஞன் (அநுமன்). (202)

### அநுமன் மண்டோதரி மனேவிட்டு இராவணன் மனேயிற் புகுதல்

298. என்று ணர்ந்துநின் றேமுறு நிலேயினி
னிற்கவித் திறனென்னுப்
பின்று சிந்தையன் பெயர்ந்தன னம்மனே
பிற்படப் பெருமேருக்
குன்று குன்றிய தகையுற வோங்கிய
கொற்றத்து மணிக்கோயில்
சென்று புக்கன னிராவணற் கெடுப்பருங்
கிரியெனத் திரடோளான்.

என்று உணர்ந்து நின்று ஏம் உறு நிலையினில்,
‘ நிற்க இத்திறன் !’ என்னப்
பின்று சிந்தையன், பெயர்ந்தனன், அம்மனை
பிற்படப் பெருமேருக்
குன்று குன்றிய தகை உற ஓங்கிய
கொற்றத்து மணிக் கோயில்
சென்று புக்கனன், இராவணற்கு எடுப்பரும்
கிரி எனத் திரள் தோளான்.

என்று நின்று ஏம் உறும் நிலையினில் உணர்ந்து இத்திறன் நிற்க என்ன - மேற்கூறியவாறு நினைந்து நின்று அவள் சீதையோ அல்லளோ என்று மயக்கமுற்ற நிலையில், அவள் சீதையல்லள் என்பதை ஊகித்தறிந்து, இச்செய்தி இப்படியே நிற்கட்டும் என்று : (ஏம் - மயக்கம்: ‘வேனிலத்தமென்னதேமுற்று’ அகநானூறு, 69); பின்று சிந்தையன் – மீண்ட மனத்தினனாகி (பின்றுதல் - மீளுதல் : ‘பெரும் படைதான்வரிற் பின்றி நீங்கிற் பழி.’ சீவக. 1827.); அம்மனை பிற்படப் பெயர்ந்தனன் - அம்மண்டோதரியின் பெரிய மாளிகை பிற்படும்படி நீங்கி; இராவணற்கு எடுப்பரும் கிரி எனத் திரள் தோளான் - இராவணனுக்குத் தூக்கமுடியாதிருந்த கயிலைமலை போலத் திரண்ட தோள்களையுடையவனான அநுமன்; பெரு மேருக் குன்று குன்றிய தகை உற ஓங்கிய கொற்றத்து மணிக்கோயில் சென்றுபுக்கனன் – பெரிய மேருமலையும் சிறிதாந் தன்மையுறும்படி மிகவுயர்ந்த வெற்றிச்சின்னங்களையுடைய அழகிய (இராவணனுடைய) அரண்மனையிலே போய்ச் சேர்ந்தான். (203)

### அநுமன் இராவணன் மனையிற் கண்ட தீக்குறிகள்

**299.** நிலந்து டித்தன நெடுவரை துடித்தன
நிருதர்தங் குலமாதர்
பொலந்து டித்தன மருங்குல்போற் கண்களும்
புருவமும் பொற்றோளும்
வலந்து டித்தன மாதிரந் துடித்தன
தடித்தின்றி நெடுவானம்
கலந்தி டித்தன வெடித்தன பூரண
மங்கல கலசங்கள்.

நிலம் துடித்தன, நெடுவரை துடித்தன,
நிருதர்தம் குலமாதர்
பொலம் துடித்தன மருங்குல் போல், கண்களும்
புருவமும் பொன் தோளும்
வலம் துடித்தன, மாதிரம் துடித்தன,
தடித்து இன்றி நெடுவானம்
கலந்து இடித்தன, வெடித்தன பூரண
மங்கல கலசங்கள்.

நிலம் துடித்தன - இலங்கைநிலத்துப் பல இடங்களும் நடுங்கின; நெடுவரை துடித்தன - பெரிய மலையாகிய திரிகூடத்தின் பல பகுதிகளும் ஆடின; நிருதர்தம் குல மாதர் மருங்குல் பொலம் துடித்தன – அரக்கர் குலத்து மகளிருடம்பின்கண் (மங்கல நாண் முதலிய) அணிகலன்கள் அசைந்தன; (மருங்குல் – உடம்பு: 'யானை மருங்குலேய்க்கும் வண்டோட்டுத் தெங்கின்': பெரும்பாணாற்றுப்படை. 352). போல்: அசை; கண்களும் புருவமும் பொன் தோளும் வலம் துடித்தன - (அவ்வரக்கியருடைய) வலக்கண்களும் வலப்புருவங்களும் அழகிய வலத்தோள்களும் துடித்தன; மாதிரம் துடித்தன – (எட்டுத்) திசைகளும் நடுங்கின; நெடுவானம் தடித்து இன்றிக் கலந்து இடித்தன - பெரிய மேகங்கள் மின்னல் இல்லாமலே கூடி இடிமுழக்கம் செய்தன; பூரண மங்கல கலசங்கள் வெடித்தன – நீர் நிறைந்த மங்களமான கலசங்கள் உடைந்தன. (204)

### அநுமன் இலங்கை அழியுமென்றெண்ணி இரங்கல்

300\. புக்கு நின்றுதன் புலன்கொடு நோக்கினன்
பொருவருந் திருவுள்ளம்
நெக்கு நின்றன னீங்குமந் தோவிந்த
நெடுநகர்த் திருவென்னு
எக்கு லங்களில் யாவரே யாயினு
மிருவினை யெல்லோர்க்கும்
ஒக்கு மூழ்முறை யல்லது வலியதொன்
றில்லென வுணர்வுற்றான்.

புக்கு நின்று, தன் புலன் கொடு நோக்கினன்,
பொருவரும் திரு உள்ளம்
நெக்கு நின்றனன், 'நீங்கும் அந்தோ இந்த
நெடுநகர்த் திரு!' என்னு,

எக்குலங்களில் யாவரே ஆயினும்,
இருவினை எல்லோர்க்கும்
ஒக்கும் : ஊழ்முறை அல்லது வலியது ஒன்று
இல், என உணர்வுற்றான்.

புலன்கொடு நோக்கினன் – (அத் தீய நிமித்தங்களைக்) கண்ணாலும் அறிவாலும் கூர்ந்து நோக்கி அறிந்தவனாகி; அந்தோ இந்த நெடுநகர்த் திரு நீங்கும் என்னா - ஐயோ! இந்தப் பெரிய நகரமாகிய இலங்கையின் செல்வம் அழியப்போகிறதே யென்று (தனக்குட் சொல்லிக்கொண்டு); பொரு அரும் திருவுள்ளம் நெக்குநின்றனன் – ஒப்பற்ற தனது நல்ல மனம் நெகிழப்பெற்று(ச் சிறிது) நின்றவனாகி; எக்குலங்களில்......உணர்வுற்றான் – எந்தக் குலங்களிற் பிறந்த எத்தகையோராயினும் நல்வினை தீவினை என்னும் இரண்டின் பயனும் எல்லோர்க்கும் ஒத்தே இருக்கும். (ஆதலால்) விதியொழுங்கைவிடப் பெருவலியுடையது வேறு கிடையாது எனத் தெளிந்தான் (அநுமன்).

இதனுள், 'ஊழிற்பெருவலியாவுள' என்னும் திருக்குறட் பொருள் பயின்றமை காண்க. (205)

### அநுமன் இராவணனைக் காண்டல் 301—313

**301.** நூற்பெ ருங்கட னுணங்கிய கேள்வியா
னோக்கினன் மறங்கூரும்
வேற்பெ ருங்கடல் புடைபரந் தீண்டிய
வெள்ளிடை வியன்கோயில்
பாற்பெ ருங்கடற் பன்மணிப் பஃறலைப்
பாப்பிடைப் படர்வேலை
மாற்பெ ருங்கடல் வதிந்ததே யனையதோர்
வனப்பினன் றுயில்வானை.

நூல் பெரும் கடல் நுணங்கிய கேள்வியான்,
நோக்கினன், மறம் கூரும்
வேல் பெரும் கடல் புடைபரந்து ஈண்டிய
வெள்ளிடை வியன் கோயில்,
பால் பெரும் கடல் பல்மணிப் பல்தலைப்
பாப்பு இடைப் படர்வேலை
மால் பெரும் கடல் வதிந்ததே அனையது ஓர்
வனப்பினன் துயில்வானை !

நூல் பெருங்கடல் நுணங்கிய கேள்வியான் - கடல் போன்ற நூலறிவினையும் நுண்ணிய கேள்வியறிவினையுமுடையவனான அநுமன் : (கேட்கப்படுகின்ற பொருளினது நுண்மை கேள்விமேல் ஏற்றப்பட்டது; திருக்குறள் 419 பரிமே. உரை.); மறம் கூரும்......... வியன் கோயில் - வலிமை மிக்க வேலேந்திய வீரர்களின் காவற் கூட்டம், கடல் போலப் பரந்து நெருங்கியுள்ள வெளியிடத்தை யுடைய(இராவணனது அந்தப்)பெரிய அரண்மனையை;நோக்கினன்- தேடினவனாய்; பால் பெருங்கடல்......துயில்வானை – பெரிய பாற் கடலின்கண் பல மணிகள் கொண்ட தலைகளையுடைய (ஆதிசேடனாகிய) பாம்புப் படுக்கையிலே (அழகு என்னும்) அலை வீசுகின்ற மாலாகிய பெரிய கடல் படுத்திருப்பதுபோன்ற ஒரு தனியழகை யுடையவனாய் உறங்குகின்றவனான இராவணனை. (வேலை–அலை)

இச் செய்யுள் முதல் 312-ஆம் செய்யுள் வரை ஒருதொடர். இவை 313-ஆம் பாடலிலுள்ள 'கண்டனன்' என்பதோடு இயைந்து முடியும். (206)

### இராவணன் துயிலும் நிலை 302—312

**302.** குழவி ஞாயிறு குன்றிவர்ந் தனையன
குருமணி நெடுமோலி
இழைக ளோடுநின் றிளவெயி லெறித்திட
விரவெனும் பொருள்வீய
முழைகொண் மேருவின் முகட்டிடைக் கனகனை
முருக்கிய முரட்சீயம்
தழைகொ டோளொடுந் தலைபல பரப்பிமுன்
றுயில்வதோர் தகையானை.

குழவி ஞாயிறு குன்று இவர்ந்து அனையன
குருமணி நெடுமோலி
இழைகளோடு நின்று இளவெயில் எறித்திட
இரவு எனும் பொருள்வீய,
முழைகொள் மேருவின் முகட்டிடைக் கனகனை
முருக்கிய முரண் சீயம்
தழைகொள் தோளொடும் தலைபல பரப்பி முன்
துயில்வது ஓர் தகையானை !

குழவி ஞாயிறு - இளஞ் சூரியன்; குன்று இவர்ந்து அனையன - உதயகிரியின்மேல் ஏறினாற்போன்றனவாகிய; குரு மணி நெடு

மோலி – நல்ல நிறத்தையுடைய இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற நீண்ட கிரீடங்கள்; இழைகளோடு நின்று -(அவற்றிலணியப்பட்ட மாலைகள் போன்ற) ஆபரணங்களோடு கூடி நின்று; இளவெயில் எறித்திட–இளவெயில் போன்ற செந்நிற வொளியை வீசவும். முழைகொள் மேருவின் முகட்டிடை - குகைகளையுடைய மேருமலையின் உச்சியில்; கனகனை – இரணியனை; முருக்கிய-கொன்ற; முரண் சீயம் – வலிமை கொண்ட நரசிங்கமூர்த்தி. தழைகொள்-மிகுதியான.

இரணியன் மேருமலைமேல் அரசு வீற்றிருந்தன னாதலின், இங்கும் மேருவைக் கூறினர். நரசிங்கமூர்த்தி பல தோள்களையும் பல தலைகளையும் பரப்பித் துயில்வது போன்ற தகுதியோடு இராவணன் துயின்றனன் என்க. இராவணனுடைய தலைகள் உதய கிரிகள் போலவும், முடிகள் பால சூரியர் போலவும் கூறப்பட்டமையால், அவனுடைய கரியமேனி கடல்போன்றது என்க. (207)

**303.** ஆய பொற்றலத் தாய்வளை யரம்பைய
ராயிர ரணிநின்று
தூய பொற்கவ ரித்திர ளியக்கிடச்
சுழிபடு பசுங்காற்றின்
மீய கற்பகத் தேன்றுளி விராயன
வீழ்தொறு நெடுமேனி
தீய நற்றொடிச் சீதையை நினைதொறு
முயிர்த்துயிர் தேய்வானை.

ஆய பொன் தலத்து ஆய்வளை அரம்பையர்
ஆயிரர் அணி நின்று
தூய பொன் கவரித்திரள் இயக்கிடச்
சுழிபடு பசுங்காற்றின்
மீய கற்பகத் தேன் துளி விராயன
வீழ்தொறும், நெடுமேனி
தீய, நல் தொடிச் சீதையை நினைதொறும்
உயிர்த்து, உயிர் தேய்வானை !

பொன் ஆய தலத்து - பொன்மயமான உலகில் (இந்திர லோகத்தில்) வாழும்; அணிநின்று -(இருபுறமும்) வரிசையாக நின்று பொன் கவரித்திரள் - பொற்பிடியிட்ட வெண் சாமரைகளின் தொகுதி; சுழிபடு பசுங் காற்றின் - சுழன்று வீசுகின்ற இளங் காற்றினால்; மீய - மேலேயுள்ள; கற்பகத் தேன்துளி விராயன - கற்பக

மலர்களிலுள்ள தேன்துளிகள் பல கலந்தனவாய்; தீய — வெதும்ப. (208)

**304.** குழந்தை வெண்மதிக் குடுமிய னெடுவரை
குலுக்கிய குலத்தோளைக்
கழிந்து புக்கிடை கரந்தன வனங்கன்வெங்
கடுங்கணை பலபாய
உழந்த வெஞ்சமத் துயர்திசை யானையி
னொளிர்மருப் புற்றிற்ற
பழந்த ழும்பினுக் கிடையிடை யேசில
பசும்புண்க ளசும்பூற.

குழந்தை வெண்மதிக் குடுமியன் நெடுவரை
குலுக்கிய குலத் தோளைக்
கழிந்து புக்கு இடை கரந்தன அனங்கன் வெம்
கடும் கணை பலபாய,
உழந்த வெம் சமத்து உயர்திசை யானையின்
ஒளிர் மருப்பு உற்று இற்ற
பழம் தழும்பினுக்கு இடை இடையே சில
பசும் புண்கள் அசும்பு ஊற!

குழந்தை வெண்மதிக் குடுமியன் — வெள்ளைப் பிறைச் சந்திரனைத் தலையிற் கொண்டவனாகிய சிவபெருமானின்; நெடுவரை குலுக்கிய — பெரிய மலையாகிய கயிலையை அசைத்த; குலத்தோளை— கூட்டமான தோள்களை (இருபது தோள்களையும்); கழிந்து புக்கு— உருவிச் சென்று; இடை-அந்தத் தோள்களிலே; கரந்தன — அழுந்தினவாகும்படி; அனங்கன் வெம் கடுங்கணை பல பாய - மன்மதனது கொடுமையையும் வேகத்தையுமுடைய அம்புகள் பலவாகப் பாய்தலினாலே; உழந்த...பழந் தழும்பினுக்கு இடைஇடை—வருந்திச் செய்த வெவ்விய போரிலே (எட்டுத்) திசையானைகளின் உயர்ந்த ஒளி விடுகின்ற கொம்புகள் பாய்ந்து ஒடிந்த பழைய வடுக்களுக்கு நடுநடுவே; சில பசும் புண்கள் அசும்பு ஊற - சில புதுப் புண்கள் தோன்றிக் குருதிநீர் வடிந்துகொண்டிருக்கவும்.

இங்கு வந்துள்ள 'அசும்பூற' வென்பதனை அடுத்து வரும் செய்யுளிலுள்ள 'உயிர்ப்பேற' 'கடிதோட' என்பவற்றோடுங் கூட்டி, 'நெஞ்சுபாழ் பட்டானை' என்பதனோடு முற்றுவிக்க. (209)

**305.** சாந்த ளாவிய கலவைமேற் றவழ்வுறு
தண்டமிழ்ப் பசுந்தென்றல்
ஏய்ந்த காமவெங் கனலுயிர்த் திருமடி
துருத்தியி னுயிர்ப்பேறக்
காந்தள் மெல்விரற் சனகிபான் மனமுதற்
கரணங்கள் கடிதோடப்
பாந்த ணீங்கிய முழையெனக் குழைவுறு
நெஞ்சுபாழ் பட்டானே.

சாந்து அளாவிய கலவைமேல் தவழ்வுறு
தண் தமிழ்ப் பசும் தென்றல்
ஏய்ந்த காமவெம் கனல் உயிர்த்து இருமடி
துருத்தியின் உயிர்ப்பு ஏறக்
காந்தள் மெல் விரல் சனகிபால் மனம் முதல்
கரணங்கள் கடிது ஓடப்
பாந்தள் நீங்கிய முழை எனக் குழைவு உறு
நெஞ்சு பாழ்பட்டானே!

கலவை அளாவிய சாந்துமேல் – (தனது மார்பிற் பூசிய) வாசனைக் கலவையோடு கூடிய சந்தனத்தின்மேல்; தவழ்வுறு தண் தமிழ்ப் பசுந்தென்றல் - மெல்ல வீசுகின்ற குளிர்ந்த இனிமையான தென்றற் காற்றினுல்; ஏய்ந்த காம வெம் கனல் உயிர்த்து – (தன் உள்ளத்திலே) பதிந்து கிடந்த காமமாகிய வெவ்விய நெருப்பு வெளிப்பட்டு; உயிர்ப்புத் துருத்தியின் இருமடி ஏற - பெருமூச்சாகிய துருத்தியினுல் இரண்டு மடங்கு மிகவும்; காந்தள் மெல் விரல் சனகிபால் – காந்தளின் அரும்பு போன்ற மெல்லிய விரல்களை யுடைய சீதையினிடத்தே; மனம் முதல் கரணங்கள் கடிது ஓட - மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் அந்தக் கரணங்கள் நான்கும் விரைந்து ஓடவும்; குழைவு உறு நெஞ்சு பாந்தள் நீங்கிய முழை எனப் பாழ்பாட்டானே - வலிகெட்ட மார்பு பாம்பு நீங்கிய புற்றினைப் போன்று பாழாகிக் கிடந்தவனுன இராவணனே. (210)

**306.** கொண்டபே ரூக்க மூளத்
★ திசைதொறுங் குறித்து மேனுள்
மண்டிய செருவின் மானத்
தோள்களால் வாரி வாரி

உண்டது தெவிட்டிப் பேழ்வாய்க்
கடைகடோ றொழுகிப் பாயும்
அண்டர்தம் புகழிற் றோன்றும்
வெள்ளெயிற் றமைதி யானை.

கொண்ட பேர் ஊக்கம் மூளத்
திசைதொறும் குறித்து மேல் நாள்
மண்டிய செருவில், மானத்
தோள்களால் வாரி வாரி
உண்டது தெவிட்டிப் பேழ்வாய்க்
கடைகள் தோறு ஒழுகிப் பாயும்
அண்டர்தம் புகழில் தோன்றும்,
வெள் எயிற்று அமைதியானை!

கொண்டபேர் ஊக்கம் மூள மேல்நாள் திசைதொறும் குறித்து மண்டிய செரு என்க: மண்டிய செரு - நெருங்கிய போர்; மானத் தோள்களால் – வலிய கைகளால்; தெவிட்டி - (உண்ணும் அளவுக்கு மிஞ்சியதால்) வெறுத்து. வெள் எயிற்று அமைதியானை - வெள்ளிய கோரப்பற்களின் வரிசையையுடையவனை.

தேவர்புகழை மானத்தோள்களால் மேன்மேலும் வாரி உண்டு தேக்கிடுதலால் அப்புகழ் வாய்க்கடைகளில் ஒழுகிப் பாயும் தோற்றம் போலும் வெள்ளிய கோரப் பற்கள் என்க. (211)

307. வெள்ளிவெண் சேக்கை வெந்து
பொறியெழ வெதும்பு மேனி
புள்ளிவெண் மொக்கு ளென்னப்
பொடித்துவேர் கொதித்துப் பொங்கக்
கள்ளவிழ் மாலை தும்பி
வண்டொடுங் கரிந்து சாம்ப
ஒள்ளிய மாலை தீய
வுயிர்க்கின்ற வுயிர்ப்பி னானை.

வெள்ளி வெண் சேக்கை வெந்து
பொறி எழ, வெதும்பும் மேனி
புள்ளி வெண் மொக்குள் என்னப்
பொடித்து வேர் கொதித்துப் பொங்கக்

கள் அவிழ் மாலை தும்பி
வண்டொடும் கரிந்து சாம்ப,
ஒள்ளிய மாலை தீய,
உயிர்க்கின்ற உயிர்ப்பினனை !

வெள்ளி வெண் சேக்கை வெந்து பொறி எழ - வெள்ளி போன்று வெண்ணிறமான மலர்ப்படுக்கை எரிந்து தீப்பொறி பறக்கும்படியாகவும், வெதும்பும் மேனி - சூடேறிய (தனது) உடம்பிலே; புள்ளி வெண்மொக்குள் என்ன வேர் பொடித்துக் கொதித்துப் பொங்க - பொட்டுப் பொட்டா யெழுகிற வெண்ணிறமான கொப்புளம் போல் வேர்வை நீரரும்பிக் கொதிப்புக்கொண்டு பொங்கும்படியாகவும்; கள் அவிழ் மாலை தும்பி வண்டொடும் கரிந்து சாம்ப - தேன் சொரிகின்ற (தான் அணிந்திருக்கிற) மலர் மாலைகள் (தம்மிடையே) மொய்த்துள்ள ஆண் வண்டுகளோடும் பெண் வண்டுகளோடும் (சேர்ந்து) வெந்து வாடவும்; ஒள்ளிய மாலை தீய - ஒளியுள்ள (வயிரமணி முதலிய) மாலைகள் கரிந்து போகவும்; உயிர்க்கின்ற உயிர்ப்பினனை - விடுகின்ற பெருமூச்சை யுடையவனுமான இராவணனை. (212)

308. தேவிய னேமி யானிற்
சிந்தைமெய்த் திருவி னேகப்
பூவிய லமளி மேலாப்
பொய்யுறக் குறங்கு வானைக்
காவியங் கண்ணி தன்பாற்
கண்ணிய காத னீரால்
ஆவியை யுயிர்ப்பென் றோது
மம்மியிட் டரைக்கின் றானை.

தேஇயல் நேமியானில், சிந்தைமெய்த் திருவின் ஏகப்
பூஇயல் அமளி மேலாப் பொய் உறக்கு உறங்குவானைக்
காவி அம் கண்ணி தன் பால் கண்ணிய காதல் நீரால்
ஆவியை உயிர்ப்பு என்று ஓதும் அம்மி இட்டு அரைக்கின்றானை !

தேவியல் நேமியானில் - தெய்வத்தன்மையுள்ள ஆழிப்படையேந்திய திருமால் போலவே : தெய்வத் தன்மையுள்ள ஆணையாகிய சக்கரமுடைய இராமபிரான் போலவே என்றும் கூறலாம்; சிந்தை - மனம்; மெய்த் திரு - உண்மையான திருமகள் : திருமாலுக்குச் சொல்லுங்கால் பெரிய பிராட்டியாகிய திருமகள் : இராமனுக்குச்

சொல்லுங்கால் சீதாபிராட்டியாகிய திருமகள் என்க. இராவண னுக்குச் சொல்லுங்கால், சிந்தை திரு மெய்யின் ஏக எனக்கொண்டு, இராவணன் மனம் திருவாகிய சீதாபிராட்டியின் உடம்பழகின் அள விலே ஈடுபட என்று உரைக்க. பூ இயல் அமளி - பூக்களால் இயன்ற படுக்கை ; மேலா - மேலே கிடந்து; திருமாலுக்கு உரைக் கும்போது அழகு அமைந்த பள்ளியாம் ; இராமபிரானுக்கு உரைக்கும் போது வெறுந்தரை (பூமி)யாகிய பொருந்திய படுக்கையின் மேலே எனக் கொள்க. பொய் உறக்கு - பொய்யான உறக்கம் : திருமாலுக்கு உரைக்கும்போது அறிதுயிலென்னும் யோகநித்திரை, துயிலாத் துயில் : இராமனுக்கு உரைக்கும்போது பொருந்தாத துயில் : இராவணன் பொய்யாகக் கண்மூடிக் கிடந்தான் என்க. உறங்காமலே படுக்கையிற் கிடந்த இராவணனுக்கு உள்ளத்தில் பிராட்டியின் நினைவு இருத்தலால் திருமாலும் இராமனும் உவமை யாயினர். காவி அம் கண்ணி - நீலமலர் போன்ற அழகிய விழி யுடைய சீதை. கண்ணிய - கருதிய. காதல் நீர் : உருவகம். ஆவி - உயிர். உயிர்ப்பு - பெருமூச்சு. காதல் நீராகவும் நெட்டுயிர்ப்பு அம்மியாகவும், ஆவி அரைபடு பொருளாகவும் உருவகம் செய்யப் பட்டன. (213)

**309.** மிகுந்தகை நினைப்பு முற்ற
வுருவெளிப் பட்ட வேலை
நகுந்தகை முகத்தன் காத
னடுக்குறு மனத்தன் வார்தேன்
உகுந்தகை மொழியாண் முன்ன
மொருவகை யுள்ளத் துள்ளே
புகுந்தன ளன்றோ வென்று
மயிர்புறம் பொடிக்கின் றானே.

மிகும் தகை நினைப்பு முற்ற உரு வெளிப்பட்ட வேலை,
நகும் தகை முகத்தன், காதல் நடுக்குறும் மனத்தன், ‘வார் தேன்
உகும் தகை மொழியாள் முன்னம் ஒருவகை உள்ளத்து உள்ளே
புகுந்தனள் அன்றோ?’ என்று மயிர் புறம் பொடிக்கின்றானே !

மிகும் தகை நினைப்பு முற்ற - மேன்மேல் வளருந்தன்மையை யுடைய (சீதையைப்பற்றிய) சிந்தனை மிகுதலால்; உரு வெளிப் பட்ட வேலை - (அவளுடைய) வடிவம் தனக்குப் புலனாகும்படி தோன்றிய பொழுது : (இது பொய்யான உருவெளித்தோற்றம் என்க). நகும் தகை முகத்தன் - சிரிக்கும் தன்மையையுடைய முகங்களையுடையவனும் ; காதல் நடுக்குறு மனத்தன் - ஆசையால்

நடுங்குகின்ற மனத்தையுடையவனுமாகி; வார்தேன் உகும் தகை மொழியாள் - ஒழுகுகின்ற (கொம்புத்) தேனும் (பிராட்டி சொல்லிலுள்ள இனிமை தன்பால் இல்லையே என்று) மனமழியும் இனிய சொற்களையுடையவளான சீதை; ஒருவகை முன்னம் - ஒருபடியாக முன்னமேயே: (அதாவது காணுமுன்னம் சூர்ப்பநகை சொன்ன மாத்திரத்திலேயே) உள்ளத்து உள்ளே புகுந்தனள் என்று - மனத்தினுள்ளே நுழைந்துவிட்டாள் என்று; மயிர் புறம் பொடிக்கின்றானை - (தன்) உடம்பிலெல்லாம் மயிர்சிலிர்க்கப்பெறுகின்றவனான இராவணனை. (214)

**310.** மென்றொழிற் கலாப மஞ்ஞை
வேட்கைமீக் கூரு மேனும்
குன்றொழித் தொருமாக் குன்றி
னரிதிற்சேர் கொள்கை போல
வன்றொழிற் கொற்றப் பொற்றோள்
மணந்திடு மடந்தை மார்கட்
கொன்றொழித் தொன்றி னேக
வரியதோ ளொழுக்கி னானை.

மென் தொழில் கலாப மஞ்ஞை
வேட்கை மீக்கூருமேனும்,
குன்று ஒழித்து ஒருமாக் குன்றின்
அரிதில் சேர் கொள்கை போல,
வன் தொழில் கொற்றப் பொன் தோள்
மணந்திடும் மடந்தை மார்கட்கு
ஒன்று ஒழித்து ஒன்றின் ஏக
அரிய தோள் ஒழுக்கினானை!

மென்றொழில் கலாப மஞ்ஞை - நுட்பமான வேலைப்பாடமைந்த தோகையையுடைய மயிலானது; வேட்கை மீக்கூருமேனும் - ஆசையை அதிகமாகக்கொண்டதாயினும்; குன்று ஒழித்து ஒருமாக்குன்றின் அரிதில் சேர் கொள்கைபோல - தான் இருக்கும் மலையைவிட்டு மற்றொரு பெரிய மலைக்குப் போகமுடியாதிருக்கும் இயல்புபோல: கொள்கை - இயல்பு (அயோத்தியா. கிளைகண்டு—10); வன்றொழிற் கொற்றப் பொன் தோள் மணந்திடும் மடந்தைமார்கட்கு - வலியசெயல்களைச் செய்யவல்லனவும் வெற்றிகொண்டனவுமான அழகிய தன் தோள்களைத் தழுவிடும் பெண்களுக்கு; ஒன்று ஒழித்து ஒன்றின் ஏக அரிய தோள் ஒழுக்கினானை - ஒரு தோளை விட்டு மற்றொரு தோளுக்குச் செல்ல அருமையாயிருக்கிற தோள் வரிசையையுடையவனான இராவணனை. (215)

**311.** தழுவா நின்ற கருங்கடன்மீ
★ துதய கிரியிற் சுடர்தயங்க
எழுவா னென்ன மின்னிமைக்கு
மாரந் திகழு மியல்பிற்ருய்
முழுவா னவரா யுலகமொரு
மூன்றுங் காக்கு முதற்றேவர்
மழுவா ணேமி குலிசத்தின்
வாய்மை துடைத்த மார்பானை.

தழுவா நின்ற கருங்கடல் மீது உதயகிரியில் சுடர் தயங்க எழுவான் என்ன மின் இமைக்கும் ஆரம் திகழும் இயல்பிற்ருய், முழு வானவராய் உலகம் ஒரு மூன்றும் காக்கும் முதல் தேவர் மழு வாள் நேமி குலிசத்தின் வாய்மை துடைத்த மார்பானை !

தழுவா நின்ற - (நிலத்தைத்) தழுவிக்கிடக்கும்; சுடர் தயங்க எழுவான் என்ன - கிரணங்கள் விளங்கத் தோன்றுபவனுன சூரியனைப் போல; இராவணனுடைய கரிய உடலுக்குக் கருங்கடலும், அவ்வுடம்பில் உயர்ந்து பரந்துள்ள மார்புக்கு உதயகிரியும், அதில் திகழும் ஆரத்துக்குச் சூரியனும் உவமையாயின. முதல் தேவர் - சிவபெருமான், பிரமன், திருமால், இந்திரன் என்னும் தலைமைத் தேவர்களுடைய; மழு வாள் நேமி குலிசத்தின் வாய்மை துடைத்த மார்பானை - மழு, வாள், சக்கரம், வச்சிரம் என்னும் படைகளின் தவருத வலிமையைப் போக்கிய மார்பையுடையவனுன இராவணனை.

மேலே குறித்த தேவர்களின் நான்கு படைகளும் போரில் இராவணன் மார்பிற்பட்டும் ஒன்றும் செய்யமுடியாது வலியிழந்தனவாயொழிந்தனவாதலின், 'வாய்மை துடைத்த' என்ருர். (216)

**312.** தோடுழுத தார்வண்டுந் திசையானை
★ மதந்துதைந்த வண்டுஞ் சுற்றி
மாடுழுத நறுங்கலவை வயக்களிற்றின்
சிந்துரத்தை மாறு கொள்ளக்
கோடுழுத மார்பேபோற் கொலையுழுத
வடிவேலின் கொற்ற மஞ்சித்
தாடொழுத பகைவேந்தர் முடியுழுது
தழும்பிருந்த சரணத் தானை.

தோடு உழுத தார் வண்டும், திசையானை
மதம் துதைந்த வண்டும், சுற்றி,
மாடு உழுத நறும் கலவை, வயக்களிற்றின்
சிந்துரத்தை மாறு கொள்ளக்
கோடு உழுத மார்பே போல், கொலை உழுத
வடிவேலின் கொற்றம் அஞ்சித்
தாள் தொழுத பகை வேந்தர் முடி உழுது
தழும்பு இருந்த சரணத்தானை!

தார் தோடு உழுத வண்டும் - (தனது மார்பின்) மாலையி லுள்ள மலரிதழ்களில் கிண்டி மொய்த்த வண்டும்; திசையானை மதம் துதைந்த வண்டும் - திக்கு யானைகளின் மதநீரிலே நெருங்கி மொய்த்த வண்டும்; சுற்றி மாடு உழுத - சுழன்று பக்கங்களிலே மொய்த்துக் கிளறிய; நறும் கலவை - நல்ல மணமுள்ள (இராவ ணன்மார்பிற் பூசிய) கலவைச்சாந்து; வயக்களிற்றின் சிந்துரத்தை மாறுகொள்ள – வலிமையுள்ள திசையானைகளின் நெற்றியில் அணிந்த குங்குமத்திலகத்தொடு மாறுகொள்ளும்படி; கோடு உழுத மார்பேபோல் - (அத் திசையானைகளின்) கொம்புகளாலே குத்திக் கிளறப்பட்ட (தழும்பிருந்த) மார்பினைப்போல்; கொலை உழுத வடி வேலின் கொற்றம் அஞ்சி - கொலைத்தொழிலை மேற்கொண்டு பகைவர் மார்பையுழுத கூரிய (தனது) வேலாயுதத்தின் வெற் றிக்கு அஞ்சி; தாள் தொழுத பகைவேந்தர் முடி உழுது தழும் பிருந்த சரணத்தானை - (தனது) காலில் விழுந்து வணங்கிய பகை மன்னர்களின் கிரீடங்கள் உராய்தலினாலாகிய வடுக்கள் பொருந்திய பாதங்களையுடையவனான இராவணனை.

முன் 301 முதல் 312 ஆகிய இச் செய்யுள்வரையுள்ள பாடல்கள் அடுத்த (313) செய்யுளிலுள்ள 'கண்டனன்' என்பதோடு இயைந்து முடியும். (217)

## இராவணனைக் கண்ட அநுமன் சினத்தல்

313. கண்டனன் காண்டலோடுங்
★ கருத்தின்மூள் காலச் செந்தீ
விண்டன கண்கள் கீண்டு
வெடித்தன கீழுமேலும்
கொண்டதோ ருருவ மாயோன்
குறளினுங் குறுகி நின்றான்
திண்டலை பத்துந் தோள்க
ளிருபதுந் தெரிய நோக்கி.

கண்டனன், காண்டலோடும், கருத்தின் மூள் காலச் செந்தீ
விண்டன கண்கள், கீண்டு வெடித்தன கீழும் மேலும்,
கொண்டது ஓர் உருவ மாயோன் குறளினும் குறுகி நின்றான்,
திண் தலை பத்தும் தோள்கள் இருபதும் தெரிய நோக்கி.

கண்டனன் - (முன்வந்துள்ள பதின்மூன்று பாடல்களிலும் விவரித்த இயல்புகளையுடையவனை இராவணனை அநுமன்) பார்த்தான்; காண்டலோடும் - (அப்படிப்) பார்த்த அளவிலே; கருத்தின் மூள் காலச் செந்தீ கண்கள் விண்டன - (அவனது) மனத்திலே கிளர்ந்தெழுந்த (சினமாகிய) செந்நிறங்கொண்ட ஊழித்தீயை அவன் கண்கள் வெளிப்படுத்தின; கீழும் மேலும் கீண்டு வெடித்தன - (அண்டகோளத்தின்) கீழ்ப் பகுதியும் மேற் பகுதியும் பிளந்து வெடித்தன; மாயோன் கொண்டது ஓர் குறள் உருவினும் குறுகி நின்றான் - திருமால் எடுத்த சிறந்த வாமன வடிவ மான குறள்வடிவத்தினும் சிறிய உருவெடுத்துநின்றவனான அநுமன்; பத்துத் திண் தலையும் இருபது தோள்களும் தெரிய நோக்கி - பத்துத் திண்ணிய தலைகளையும் இருபது தோள்களையும் நன்றாகப் பார்த்து.

இது முதல் 316-ஆம் செய்யுள் முடிய ஒரு தொடர். இப் பாடல் அச்சுப் பிரதிகளில் பின்னிரண்டடி முன்னிரண்டடியாகவும் முன்னிரண்டடி பின்னிரண்டடியாகவும் மாறிக் காணப்படுகிறது.

(218)

## அநுமன் இராவணனைக் கொல்ல நினைத்தல் 314—315

**314.** தோளாற்ற லென்னாகு
மேனிற்குஞ் சொல்லென்னாம்
★ வாளாற்று கண்ணாளை
வஞ்சித்தான் மணிமுடியென்
தாளாற்ற லாலிடித்துத்
தலைபத்துந் தகர்த்தின்றென்
ஆளாற்றல் காட்டேனே
லடியேனாய் முடியேனே.

'தோள் ஆற்றல் என் ஆகும்? மேல் நிற்கும் சொல் என் ஆம்?
வாள் ஆற்று கண்ணாளை வஞ்சித்தான் மணிமுடி என்
தாள் ஆற்றலால் இடித்துத் தலைபத்தும் தகர்த்து, இன்று என்
ஆள் ஆற்றல் காட்டேனேல் அடியேனாய் முடியேனே!'

இதுவும் அடுத்த கவியும் அநுமன் கூற்று. வாள் ஆற்று கண்ணுளை - வாளின் செயலைச் செய்யும்படியான கண்களையுடையவளான சீதா பிராட்டியை ; வஞ்சித்தான் - வஞ்சனையாற் கவர்ந்தவனுன இவ் விராவணனுடைய ; மணிமுடி - இரத்தின கிரீடங்களை ; என்தாள் ஆற்றலால் இடித்து - எனது கால் வலிமையினுல் உதைத்துடைத்து; பத்துத்தலையும் தகர்த்து - பத்துத்தலைகளையும் சிதறச்செய்து; இன்று என் ஆள் ஆற்றல் காட்டேனேல் - இப்பொழுதே என்னுடைய அடிமைத்திறனைக் காட்டாது போனுல்; அடியேனுய் முடியேனே - (எனது தலைவனுகிய இராமபிரானுக்கு) நான் தொண்டனுகவுமாட்டேன் ; தோள் ஆற்றல் என் ஆகும் - (என்னுடைய) தோள்வலிமை தான் என்ன பயனைத்தரும்? மேல் நிற்கும் சொல் என் ஆம் - எதிர்காலத்தில் அழியாது நிற்கத்தக்க புகழ்தான் யாதாகும்? (219)

**315.** நடித்துவாழ் தகைமையதோ
வடிமைதா னன்னுதலைப்
பிடித்துவா ழரக்கனுர்
யான்கண்டும் பிழைப்பாரோ
ஒடித்துவான் ரேளனைத்துந்
தலைபத்து முதைத்துருட்டி
முடித்திவ்வூர் முடித்தான்மேன்
முடிவதெலா முடிந்தொழிக.

'நடித்துவாழ் தகைமையதோ
அடிமைதான்? நல் நுதலைப்
பிடித்துவாழ் அரக்கனுர்
யான்கண்டும் பிழைப்பாரோ?
ஒடித்து வான் தோள் அனைத்தும்,
தலை பத்தும் உதைத்து உருட்டி,
முடித்து, இவ் ஊர் முடித்தால், மேல்
முடிவது எ(ல்)லாம் முடிந்து ஒழிக!'

நன்னுதலைப் பிடித்து(ம்) வாழ் அரக்கனுர் யான் கண்டும் பிழைப்பாரோ - நல்ல நுதலையுடையளாகிய சீதாபிராட்டியைக் கவர்ந்தும் (இது வரை) உயிர் பிழைத்திருக்கிற அரக்கனுகிய இராவணன் நான் நேரிற் கண்ட பின்னரும் உயிருடன் பிழைத்திருப்பனே? 'பிடித்தும் வாழ்' என்பதிலுள்ள உம்மை எதுகை நோக்கித் தொக்கது : அரக்கனுர் என்பதிலுள்ள ஆர்விகுதி இழிவு குறித்துநின்றது. வான் தோள் - பெரிய தோள்கள்; முடித்து -

கொன்று; இவ்வூர் முடித்தால் - இந்த இலங்கை நகரையும் அழித்தால். (220)

## இராவணனைக் கொல்ல நினைத்த அநுமன் அந்நினைவொழிதல் 316—318

**316.** என்றூக்கி யெயிறுகடித்
திருகரமும் பிசைந் தெழுந்து
நின்றூக்கி யுணர்ந்துரைப்பா
னேமியோன் பணியன்றால்
ஒன்றூக்கி யொன்றிழைத்த
லுணர்வுடையோர்க் குரித்தன்றால்
பின்றூக்கி னிதுசாலப்
பிழைபயக்கு மெனப்பெயர்ந்தான்.

என்று, ஊக்கி, எயிறு கடித்து,
இரு கரமும் பிசைந்து, எழுந்து,
நின்று, ஊக்கி உணர்ந்து உரைப்பான்,
நேமியோன் பணி அன்றால்!
ஒன்று ஊக்கி ஒன்று இழைத்தல்
உணர்வு உடையோர்க்கு உரித்து அன்றால்:
பின் தூக்கின், இது சாலப்
பிழைபயக்கும் எனப் பெயர்ந்தான்.

என்று - என்று எண்ணி; ஊக்கி - மனவெழுச்சிகொண்டு; நின்று - சற்று நின்று; ஊக்கி உணர்ந்து - முயன்று ஆலோசித்து; நேமியோன் பணி அன்று - (இராவணனையும் இலங்கையையும் அழித்தல்) ஆணையாகிய சக்கரத்தையுடையவனான இராமபிரானுடைய கட்டளையன்று: (நான் இராமபிரானுக்குச் செய்யும் தொண்டாகாது என்றும் பொருள்படும்.) : ஆல், அசை; ஒன்று ஊக்கி ஒன்று இழைத்தல் - ஒரு காரியத்தில் முனைந்து மற்றொரு காரியத்தைச் செய்தல்; உணர்வுடையோர்க்கு உரித்து அன்று - அறிவாளிகளுக்குத் தக்கதாகாது; பின் தூக்கின் - பின்னால் ஆலோசிக்கும் பொழுது; இது சாலப் பிழை பய்க்கும் - (நான் இராவணனையும் இலங்கையையும் அழிக்கும்) இச்செயல் பெரிதும் குற்றமுடையதாகும்; எனப் பெயர்ந்தான் - என்று சொல்லி அச் செயலிலிருந்து விலகுபவனானான். (221)

**317.** ஆலம்பார்த் துண்டவன்போ
லாற்றலமைந் துளரெனினும்
சீலம்பார்க் குரியோர்க
ளெண்ணுது செய்பவோ
மூலம்பார்க் குறினுலகை
முடிவிக்கு முறைத்தெனினும்
காலம்பார்த் திறைவேலை
கடவாத கடலொத்தான்.

ஆலம் பார்த்து உண்டவன்போல்
ஆற்றல் அமைந்துளர் எனினும்,
சீலம் பார்க்குரியோர்கள்
எண்ணுது செய்பவோ?
மூலம் பார்க்குறின் உலகை
முடிவிக்கும் முறைத்து எனினும்,
காலம் பார்த்து இறை வேலை
கடவாத கடல் ஒத்தான்.

உலகை......கடல் ஒத்தான் - உலகையெல்லாம் அழிக்கும் இயல்புடையதாயிருந்தாலும், உலக முடிவுகாலத்தையெதிர்நோக்கி (அதுவரை) சிறிதும் கரையைத் தாண்டாமல் அடங்கி நிற்கிற கடல்போல் அடங்குபவனுன் (அநுமன்); மூலம் பார்க்குறின் - (அவ்வாறு அவன் அடங்கியதற்குக்) காரணத்தை ஆராய்வோமானுல். ஆலம் பார்த்து உண்டவன் - ஆல்காலவிடத்தின் கொடுமையைத் தெரிந்தே உண்டவனுன சிவபெருமான். பார்க்க உரியோர்கள் என்பது பார்க்குரியோர்கள் என விகாரப்பட்டு நின்றது. (222)

**318.** இற்றைப்போர்ப் பெருஞ்சீற்ற
மென்னேடு முடிந்திடுக
கற்றைப்பூங் குழலாளைச்
சிறைவைத்த கண்டகனை
முற்றப்போர் முடித்ததொரு
குரங்கென்றுன் முனைவீரன்
கொற்றப்போர்ச் சிலைத்தொழிற்குக்
குறையுண்டா மெனக்குறைந்தான்.

‘இற்றைப் போர்ப் பெரும் சீற்றம்
என்னோடு முடிந்திடுக!
கற்றைப் பூம் குழலாளைச்
சிறைவைத்த கண்டகனை
முற்றப் போர் முடித்தது ஒரு
குரங்கு, என்றால், முனைவீரன்
கொற்றப் போர்ச் சிலைத்தொழிற்குக்
குறை உண்டாம்’ எனக் குறைந்தான்.

இற்றைப் போர்ப் பெருஞ் சீற்றம் என்னோடு முடிந்திடுக - இப்பொழுது (இராவணனோடு) போர்செய்யுமாறு (எனக்கு) உண்டான பெருங்கோபம் (பிறர்க்குப் புலனாகாமல்) என் மனத்திலேயே அடங்கிவிடக்கடவது. கற்றை - திரட்சியான. கண்டகனை - கொடியவனான இராவணனை. முற்ற - முழுதும் அழியும்படி. முனைவீரன் - (அரக்கர்குலத்தையே அழிப்பதற்காக) முனைந்து நிற்கிற வீரனாகிய இராமனுடைய. எனக் குறைந்தான் - என்று எண்ணி அடங்கினன் (அநுமன்). (223)

அநுமன் தன்னுட் கூறுதல்

**319.** அந்நிலையான் பெயர்த்துரைப்பா
னய்வளைக்கை யணியிழையார்
இந்நிலையா னுடன்றுயில்வா
ருளரல்ல ரிவனிலையும்
புன்னிலைய காமத்தாற்
புலர்கின்ற நிலைபூவை
நன்னிலையி னுளளென்னு
நலனெனக்கு நல்குமால்.

அந்நிலையான், பெயர்த்து உரைப்பான்,
‘ஆய்வளைக்கை அணி இழையார்
இந்நிலையானுடன் துயில்வார்
உளரல்லர்! இவன் நிலையும்
புல் நிலைய காமத்தால்
புலர்கின்ற நிலை! பூவை
நல் நிலையின் உளள் என்னும்
நலன் எனக்கு நல்குமால்!’

அந்நிலையான் - அவ்வாறு (கோபமடங்கித்) தன்னிலையில் நின்றவனான அநுமன்; பெயர்த்து - மறுபடியும்; ஆய்வளைக்கை அணியிழையார் - சிறந்த வளையணிந்த கையினையும் அழகிய அணி கலங்களையும் உடைய மகளிர்; புல் நிலைய காமத்தால் புலர்கின்ற நிலை - இழிவான நிலைமையையுடைய காம வெப்பத்தால் தவிக்கின்ற நிலைமையாயிருக்கின்றது; பூவை - பூவை போல்வாளாகிய சீதாபிராட்டி. இராவணன் மகளிர் எவருமின்றித் தனியே படுத்துக் கிடந்ததும், ஒருதலைக் காமத்தால் இழிந்த நிலையில் அவன் துயரப் பட்டுக்கிடந்ததும் அநுமனுக்குச் சீதாபிராட்டியின் கற்புக் கெடா திருந்த நிலையை நன்கு எடுத்து விளக்கின என்க. (224)

### அநுமன் பிராட்டியைக் காணாது வருந்துதல் 320-328

**320.** என்றெண்ணி யீண்டினியோர்
பயனில்லை யெனநினையாக்
குன்றன்ன தோளவன்றன்
கோமனைபிற் படப்பெயர்ந்தான்
நின்றெண்ணி யுன்னுவா
னந்தோவிந் நெடுநகரில்
பொன்றுன்னு மணிப்பூணு
ளிலளென்னப் பொருமினான்.

என்று எண்ணி, ஈண்டு இனி ஓர்
பயன் இல்லை என நினையாக்
குன்று அன்ன தோளவன்தன்
கோமனை பின்படப் பெயர்ந்தான்,
நின்று எண்ணி உன்னுவான்,
'அந்தோ! இந் நெடு நகரில்
பொன் துன்னும் மணிப் பூணாள்
இலள்!' என்னப் பொருமினான்.

குன்று அன்ன தோளவன்தன் கோமனை பிற்படப் பெயர்ந்தான்- மலைபோன்ற தோள்களையுடையவனான இராவணனது அரண்மனையைக் கடந்து அது பின்னும்படி அப்பாற் சென்ற அநுமன்; நின்று எண்ணி உன்னுவான் - (அங்கு) நின்று சிந்தித்து ஆலோசிப்பவனாய்; அந்தோ : பிராட்டியைக் காணாமையால் உள்ளத்திலெழுந்த துயரக் குறிப்பு. பொன்துன்னு மணிப்பூணாள்-பொன்னிலே பதித்த இரத்தினங்களையுடைய அணிகலன்கள் பூண்ட சீதாபிராட்டி. பொருமினான் - விம்மலுற்று வருந்துபவனாயினான். (225)

**321.** கொன்ருனே கற்பழியாக்
குலமகளைக் கொடுந்தொழிலால்
தின்ருனே வெப்புறத்தே
செறித்தானே சிறைசிறியோன்
ஒன்ருனு முணரகிலேன்
மீண்டினிப்போ யென்னுரைக்கேன்
பொன்ருத பொழுதெனக்கிக்
கொடுந்துயரம் போகாதால்.

'கொன்ருனே? கற்பு அழியாக்
குலமகளைக் கொடும் தொழிலால்
தின்ருனே? எப்புறத்தே
செறித்தானே சிறை சிறியோன்?
ஒன்ருனும் உணரகிலேன்:
மீண்டு இனிப் போய் என் உரைக்கேன்?
பொன்ருத பொழுது, எனக்கு இக்
கொடும் துயரம் போகாதால்'

சிறியோன் - அற்பகுணம் படைத்தவனுன இராவணன்; எப்புறத்தே சிறை செறித்தானே – வேறு எப்பக்கத்திலே (கொண்டு சென்று) சிறையிட்டானே; ஒன்ருனும் உணரகிலேன் – (பிராட்டி செய்தி) ஒன்றும் அறிகிலேன்; பொன்ருத பொழுது - (நான்) சாவாதபோது. (226)

**322.** கண்டு வருமென்றிருக்குங்
காகுத்தன் கவிகுலக்கோன்
கொண்டுவரு மென்றிருக்கும்
யானிழைத்த கோளிதுவால்
புண்டரிக நயனத்தான்
பாலினியான் போவேனே
விண்டவரோ டுடன்வீயா
தியான்வாளா விளிவேனே.

'கண்டு வரும்! என்று இருக்கும்
காகுத்தன்; கவிகுலக்கோன்
கொண்டு வரும்! என்று இருக்கும்;
யான் இழைத்த கோள் இதுவால்

புண்டரிக நயனத்தான்
பால் இனி யான் போவேனோ?
விண்டவரோடு உடன் வீயாது,
யான் வாளா விளிவேனோ?'

காகுத்தன் கண்டு வரும் என்று இருக்கும் - இராமபிரான் (எப்படியாவது நான் சீதையைக்) கண்டு வருவேன் என்று நம்பி யிருப்பான்; கவிகுலக்கோன் கொண்டு வரும் என்று இருக்கும் - குரக்கினத்தரசனாகிய சுக்கிரீவன் (என் ஆற்றலை நன்குணர்வனாதலால் நான் சீதையை நிச்சயமாகக்) கொண்டுவருவேன் என்று நம்பியிருப்பான்; (இவர் நினைவு இப்படியிருக்க) யான் இழைத்த கோள் இது - நான் செய்த தீமையால் (சீதாபிராட்டியைக் காண முடியாது தவிக்கிற) இந்த நிலைமை ஏற்பட்டது: ஆல், அசை. புண்டரிக நயனத்தான் - தாமரைக் கண்ணனாகிய இராமன்; விண்டவரோடு - பகைவர்களாகிய அரக்கர்களோடு; உடன் வீயாது - (போர் புரிந்து அவர்களைக் கொன்று) அவர்களுடனே மாயாது; யான் வாளா விளிவேனோ - நான் வீணே இறந்து படுவேனோ? (227)

**323.** கண்ணியநாள் கழிந்துளவாற்
கண்டிலமாற் கனங்குழையை
விண்ணடைது மென்றுரை
யாண்டிருத்தி விரைந்தயான்
எண்ணியது முடிக்ககிலே
னினிமுடியா திருப்பேனோ
புண்ணியமென் றொருபொருளென்
னுழைநின்றும் போயதால்.

'கண்ணிய நாள் கழிந்துளவால்
கண்டிலமால், கனம் குழையை!
விண் அடைதும்' என்றுரை
ஆண்டு இருத்தி விரைந்த யான்
எண்ணியது முடிக்ககிலேன்!
இனி முடியாது இருப்பேனோ?
புண்ணியம் என்று ஒரு பொருள் என்
உழை நின்றும் போயதால்.

கண்ணிய நாள் - (சீதையைத் தேடி வருவதற்குத் தவணையாகச் சுக்கிரீவனால்) குறிக்கப்பட்ட நாள். கனங்குழையை என்றது இங்கே

சீதையை. விண் அடைதும் என்ருரை - இறந்து விண்ணுலகம் சேர்வோம் என்று (மனமுடைந்து) கூறிய அங்கதன் முதலியோரை. இனி முடியாது இருப்பேனே - இனி சாவாமல் உயிர் வாழ்வேனே; புண்ணியம் என்று ஒரு பொருள் என் உழை நின்றும் போயது - நல்வினை யென்பதொரு பொருள் என்னிடம் இல்லாமல் போய் விட்டது; ஆல், அசை. (228)

**324.** ஏழுநா ரூசனைசூழ்ந்
தெயில்கிடந்த விவ்விலங்கை
வாழுமா மன்னுயிர்யான்
காணாத மற்றில்லை
ஊழியான் பெருந்தேவி
ஒருவரையும் யான்காணேன்
ஆழிதா யிடராழி
யிடையேவீழ்ந் தழிவேனே.

'ஏழுநூறு ஓசனை சூழ்ந்து எயில் கிடந்த இவ் இலங்கை
வாழும் மா மன்னுயிர் யான் காணாத மற்று இல்லை;
ஊழியான் பெருந் தேவி ஒருவரையும் யான் காணேன்!
ஆழி தாய், இடர் ஆழி, இடையே வீழ்ந்து அழிவேனே?'

ஓசனை - யோசனை : நான்குகுரோசங்கொண்ட நீட்டலளவு; எயில் கிடந்த - மதிலுள்ள; ஊழியான் - ஊழியிறுதியிலும் அழியாதிருப்பவனை இராமபிரான்; ஒருவரையும் – ஒருத்தியைமட்டும்; ஆழி - கருங்கடல்; தாய் - தாவி (வந்தும்); இடர் ஆழி - துயரக் கடல். (229)

**325.** வல்லரக்கன் றனைப்பற்றி வாயாறு குருதியுகக்
கல்லரக்குங்கரதலத்தாற்காட்டென்றுகாண்கேனே
எல்லரக்கு மயினுதிவே லிராவணனு மிவ்வூரும்
மெல்லரக்கி னுருகிவிழ வெந்தழலால் வேய்கேனே.

'வல் அரக்கன்தனைப் பற்றி, வாய் ஆறு குருதி உகக்
கல் அரக்கும் கரதலத்தால், 'காட்டு' என்று காண்கேனே?
எல் அரக்கும் அயில் நுதி வேல் இராவணனும் இவ் ஊரும்
மெல் அரக்கின் உருகி விழ, வெம் தழலால் வேய்கேனே?

கல் அரக்கும் கரதலத்தால் வல் அரக்கன்தனை வாய் ஆறு குருதி உகப்பற்றி - மலையையும் அழுந்தச்செய்யும் வலிமையுள்ள கைகளால் வலிய அரக்கனாகிய இராவணனை வாய்வழியே இரத்தம் சிந்தப் பிடித்து; காட்டு என்று காண்கேனா – (சீதாபிராட்டி இருக்குமிடத்தைக்) காட்டு என்று சொல்லி (அவன் காட்ட) நான் காண்பேனோ; எல் அரக்கும் அயில் நுதிவேல் – சூரிய வொளியையும் வருத்தும்படி மிக்குள்ள ஒளியையும் கூரிய முனையையுமுடைய வேலாயுதத்தையுடைய; மெல் அரக்கின் – மென்மையான அரக்கைப்போல; வெந்தழலால் வேய்கேனா - வெவ்விய நெருப்பினால் மூடக்கடவேனோ. (230)

**326.** வானவரே முதலோரை
 வினவுவனேல் வல்லரக்கன்
தானொருவ னுளனாக
 வுரைசெய்யுந் தருக்கிலரால்
ஏனையர்க ளெங்குரைப்பா
 ரெவ்வண்ணந் தெரிகேனோ
ஊனழிய நீங்காத
 வுயிர்சுமந்த வுணர்வில்லேன்.

'வானவரே முதலோரை வினவுவனேல், வல் அரக்கன்
தான் ஒருவன் உளன் ஆக, உரைசெய்யும் தருக்கு இலரால்!
ஏனையர்கள் எங்கு உரைப்பார்? எவ்வண்ணம் தெரிகேனோ?
ஊன் அழிய நீங்காத உயிர் சுமந்த உணர்வு இல்லேன்!'

வானவரே முதலோரை - தேவர்கள் முதலான நல்லவர்களை. வல் அரக்கன் தான் ஒருவன் உளன் ஆக உரை செய்யும் தருக்கு இலர் - வலிய அரக்கனாகிய இராவணன் ஒருவன் இருப்பதால் (அவனுக்கு அஞ்சிச் சீதையிருப்பிடத்தைக்) கூறும் வலிமையில்லாதவர்களாயிருக்கிறார்கள்; ஏனையர்கள் எங்கு உரைப்பார் – மற்றை(த் தீயோர்களாகிய) அரக்கர்கள் முதலியோர் எங்கே சொல்லப்போகிறார்கள்? (சொல்லமாட்டார்கள் என்றவாறு); ஊன் அழிய - உடம்பு முழுதும் கரைந்தும்; உணர்வில்லேன் - அறிவில்லாத யான். (231)

**327.** எருவைக்கு முதலாய
 சம்பாதி யிலங்கையிலத்
திருவைக்கண் டனெனென்று
 னவனுரையுஞ் சிதைந்ததால்

கருவைக்கு நெடுநகரைக்
கடலிடையே கரையாதே
உருவைக்கொண் டின்னமுநா
னுளெனுகி யுழல்வேனே.

எருவைக்கு முதல்ஆய
சம்பாதி, ‘இலங்கையில் அத்
திருவைக் கண்டனென்’ என்ருன் :
அவன் உரையும் சிதைந்ததால்
கருவைக்கும் நெடுநகரைக்
கடல் இடையே கரையாதே
உருவைக் கொண்டு இன்னமும் நான்
உளென் ஆகி உழல்வேனே?

எருவைக்கு முதலாய சம்பாதி–கழுகுகளுக்கு அரசனுன சம்பாதி என்பவன் : (சம்பாதி சடாயுவின் தமையன்); அத்திருவை - அத் திருமகளாகிய சீதையை; சிதைந்தது - பழுதாயிற்று; கருவைக்கும் நெடு நகரை - கருப்பதித்தமையால் நெடுங்கால மிருக்கத் தக்கதான இந்த இலங்கை நகரை: கருவைத்தல் - நகரைத் தோற்றுவித்தற்கு நாட் கொள்ளல்; “கருவொடு போக்கரு மரபின் இலங்கை - கருப்பதித்த முகூர்த்தத்தாலே ஒருவராலும் அழித்தற்கரிய முறைமையினை யுடைய இலங்கை” (சிறுபாணுற்றுப்படை - 119, உரை) என்பது காண்க. (232)

328. வடித்தாழ்பூங் குழலாளை
வானறிய மண்ணறியப்
பிடித்தானிவ் வடலரக்க
னெனுமாற்றம் பிழையாதால்
எடுத்தாழி யிலங்கையினை
யிருங்கடலிட் டின்றிவனை
முடித்தாலே யான்முடிதன்
முறைமன்ற வென்றுணர்வான்.

‘வடித் தாழ் பூம் குழலாளை,
வான் அறிய, மண் அறியப்
பிடித்தான் இவ் அடல் அரக்கன்
எனும் மாற்றம் பிழையாதால் :

எடுத்து ஆழி இலங்கையினை
இரும் கடல் இட்டு, இன்று, இவனை
முடித்தாலே, யான் முடிதல்
முறை மன்ற! என்று உணர்வான்.

வாடித் தாழ் பூங் குழலாளை - நீண்டு தாழ்ந்த அழகிய குழலை யுடையவளான சீதாபிராட்டியை; எனும் மாற்றம் பிழையாது - என்ற சொல் தவருது; ஆழி இலங்கையினை எடுத்து - வட்டவடிவா யிருக்கிற இலங்கை நகரைத் தூக்கி; மன்ற முறை - நிச்சயமாய் நியாயமாகும். (233)

அநுமன் அசோக வனத்தைக் காண்டல்

329. எள்ளுறையு மொழியாமல்
யாண்டையினு முளனுய்த்தன்
உள்ளுறையு மொருவனைப்போ
லெம்மருங்கு முலாவுவான்
புள்ளுறையு மானத்தை
யுறநோக்கிப் புறம்பேர்வான்
கள்ளுறையு மலர்ச்சோலை
யயலொன்று கண்ணுற்ருன்.

எள் உறையும் ஒழியாமல், யாண்டையினும் உளனுய்த் தன்
உள் உறையும் ஒருவனைப்போல், எம்மருங்கும் உலாவுவான்,
புள் உறையும் மானத்தை உறநோக்கிப் புறம் பேர்வான்,
கள் உறையும் மலர்ச்சோலை அயல் ஒன்று கண்ணுற்ருன்.

தன் உள் உறையும் ஒருவனைப் போல் - தனது உள்ளத்தில் தங்கிய ஒப்பற்றவனுன பரம்பொருளைப்போல்; எள் உறையும் ஒழியாமல் - எள்ளளவு சிற்றிடமும் நீங்காமல்; யாண்டையினும் உளனுய் - எல்லாவிடத்திலும் உள்ளவனுகி; எம்மருங்கும் உலாவு வான் - எல்லாப் பக்கங்களிலும் சஞ்சரித்துத் தேடுபவனுன அநுமன்; புள் உறையும் மானத்தை உற நோக்கி - பறவைகள் தங்கும் விமான வடிவிற் செய்த ஒரு சைத்திய மண்டபத்தை நன்கு தேடி; புறம் பேர்வான் - வெளியே வருபவன்; அயல் - பக்கத்திலே; கள் உறையும் மலர்ச்சோலை ஒன்று - தேன் தங்கிய மலர்களையுடைய ஒரு சோலையை; கண்ணுற்ருன் - கண்டான். (234)

ஊர்தேடு படலம் முற்றிற்று.

# 3. காட்சிப் படலம்*

காட்சி - காண்டல். காட்சிக்கு இலக்காகியவள் சீதாபிராட்டி. ஒப்பாரை மிக்காரை யில்லாத பெருந் தலைவனான இராமபிரான், ஒப்பாரும் உயர்ந்தாரும் இன்றி விளங்கும் பெருந்தலைவியாகிய சீதாபிராட்டியைக் கண்டமை பாலகாண்டத்து மிதிலைக் காட்சிப் படலத்துப் பேசப்பட்டது. அப்பெருமானைப் பிரிந்து சிறையிருந்த பிராட்டியை மெய்யுணர்வுடையருள் முன் எண்ணத்தக்க திருவடி இலங்கையுள் அசோகவனத்துத் தேடிக் கண்ட செய்தி இங்கே பேசப்படுவது. அங்கே உவகைக் காட்சி. இங்கே சோகக் காட்சி, அங்கே இராமபிரான் காட்சிக்கு இலக்காவன, சீதாபிராட்டியின் வடிவழகு முதலியவை. இங்கே அநுமன் காட்சிக்கு இலக்காவன, குடிப்பிறப்பும் கற்பும் பிராட்டியின் குணநலங்களும். புறத்தழகு கண்டு பிராட்டிபக்கல் உள்ளத்தைப் பறிகொடுத்த இராமபிரான் நிலையினும், பிராட்டியின் கற்பும் காதலும் பொறையும் கருணையும் முதலிய அகத்தழகுகண்டு ஈடுபட்டு வியப்புற்ற திருவடிநிலை சிறப்புடைத்து. இது பற்றிப் போலும்

> "மாணநோற் றீண்டிவள் இருந்தவாறெலாம்
> காணநோற்றிலன் அவன் கமலக்கண்களால்"

என்று அநுமன் கூற்றாகக் கம்பரும் கூறுவாராயினர்.

அச்சுப் பிரதிகளிலெல்லாம் இப்படலம் 77 செய்யுளில் முற்றுப் பெற்று நிற்கிறது. அடுத்து 82 செய்யுட்களில் நிந்தனைப் படலமும், அதன் பின் 117 செய்யுட்களில் உருக்காட்டு படலமும் அச்சுப் பிரதி களிற் காணப்படுமேனும் பழமை வாய்ந்து திருந்திய ஓலைச் சுவடிகள் சிலவற்றுள், காட்சிப்படலத்துக்கும் உருக்காட்டுபடலத் துக்கும் இடையே நிந்தனைப் படலம் என்ற ஒன்று காணப்படவில்லை. 82 பாடல்களுடையதாக அச்சுப் புத்தகங்களிற் காணப்படும் நிந்தனைப் படலத்தின் முன் 37 செய்யுளும் அடங்க 114 செய்யுளில் காட்சிப்படலம் முற்றுப்பெற்றுளது. அச்சுப் பதிப்பிற் காணப்படும் நிந்தனைப் படலத்தின் பின் 45 செய்யுளையும் முன்னே கொண்டு உருக்காட்டு படலம் 162 பாடல்களில் முற்றுப்பெற்றுள்ளது.

அச்சுப்புத்தகங்களிற் காணப்படும் நிந்தனைப் படலத்தின் முன் 37 செய்யுட்கள் வந்தனைப்படலம் எனவும் பின் 45 செய்யுட்கள் மட்டும் நிந்தனைப்படலம் எனவும் சில சுவடிகளில் குறிக்கப் பட்டுள்ளன.

---

*இது, வந்தனைப்படலம் எனச் சில சுவடிகளிலும், இராவணன் வந்தனைப் படலம் எனச் சில சுவடிகளிலும், சானகி சோகப்படலம் என ஓர் சுவடி யிலும் காணப்படுகிறது.

நிந்தனைப்படலத்தின் முன் 37 செய்யுட்களும் இராவணன் தன்னுடைய எல்லாப் பெருமையும் தோன்ற அசோகவனத்துள் பிராட்டி சிறையிருந்த பகுதிக்கு வந்து, பிராட்டியைக் கண்டு, தன் காதல் மிகுதியை விரித்துரைத்துத் தனக்கு அருள் புரியும்படி அவளடியின் கண் வீழ்ந்த செய்திகூறுதலின், வந்தனைப் படலம் என்ற தலைப்பொடு பொருந்துவது போலவும், பிற்பகுதியில் 38 முதல் 59 முடியவுள்ள செய்யுட்கள், அவ்வாறு வீழ்ந்த இராவணனைப் பிராட்டி இடித்துரைக்கும் பகுதியாதலின் நிந்தனைப் படலம் என்ற தலைப்பொடு பொருந்துவது போலவும் தோன்றுமாயினும், இங்கே இராவணன் செயல் தூயவணக்கமும், பிராட்டியின் உரை தீய நிந்தனையும் ஆதல் இல்லை. பிராட்டியுரை நிந்தனை யன்று; அறவுரையே என்பதை, 'என்றறத்துரை கேட்டலும்' (466) என்று கம்பரே கூறிச்செல்வாராயினர். அன்றியும், சுந்தர காண்டத்துள் வரும் பிற படலங்களெல்லாம் அநுமன்செயலொடு தொடர்புடையவாயிருக்க, இடையே வந்தனையும் நிந்தனையும் மட்டும் பிறர் செயலாயிருத்தல் பொருந்தாது. மேலும் வாய்வந்தன கூறி அடிவீழ்ந்த இராவணன் செயலும், அவனுக்குப் பிராட்டி கூறும் அறவுரைப் பகுதியும் ஒரு படலத்தில் அமைவதே இயைபுடையதாகும். இராவணன் செயலை மட்டும் பிரித்துக் காட்சிப்படலத்திலும் பிராட்டி கூறும் அறவுரையை மட்டும் பிரித்து உருக்காட்டுபடலத்திலும் இணைப்பது இயைபுடையதாயில்லை. அது, நாடகக் காப்பிய அமைதிக்கும் ஒவ்வாது.

ஆகவே, நிந்தனைப்படலம் முழுவதையும் காட்சிப் படலமாகக் கொண்டு இப்பதிப்பு வெளியிடப்படுகிறது. இனி, இப்படலத்துள், பேசப்படும் காட்சிகள் பல, அவை வருமாறு :—

இலங்கை முழுதும் தேடிப்பிராட்டியைக் காணாமையால் மனம் வெதும்பிச் சினம் மூள நின்ற அநுமன், 'இவ்வசோகவனத்துள் பிராட்டியைக் காண்பெனேல் என் மனக்குறை தீரும். கண்டிலேனேல் இவ்விலங்கையையும் அழித்து யானும் இறப்பேன்; வேறு செய்தக்கதில்லை' என்று முடிவுகட்டி அசோகவனத்துப்புக, அது கண்டு தேவர்கள் அநுமன் மீது பூமழை பொழிந்து வாழ்த்தி மகிழ்ந்தனர் என்ற செய்தியோடு இப்படலம் தொடங்குகிறது.

3 முதல் 29 வரையுள்ள செய்யுட்களால் இராமபிரானைப் பிரிந்து, அசோக வனத்துக் கொடிய அரக்கியர் காவலிற் சிறைப்பட்ட சீதா பிராட்டியின் உடல் மெலிவும் உளநலிவும் கண் முதலிய உறுப்புக்களின் செயலும் பிறவும் விரிப்பதோடு அப்பிராட்டி இராமபிரானுடைய திருமேனியழகினையும் குண நலங்களையும் கருணையினையும் வீரப்பாட்டையும் இடைவிடாது காணும் மானதக் காட்சியும், அடுத்து 32 முதல் 35 வரையுள்ள செய்யுட்களால் சீதாபிராட்டிபால்

உண்டாகிய நன்னிமித்தக் காட்சியும், அதன் மேல் 37 முதல் 53 முடியவுள்ள பாடல்களால் திரிசடை கண்ட நன்னிமித்தக் காட்சியும், கனுக்காட்சி முதலியனவும் அவற்ருல் விளையும் பயனெடு பேசப் பட்டன. 55 முதல் 77 வரையுள்ள செய்யுட்களால் கொடிய அரக்கி யராற் சூழப்பட்ட சீதாபிராட்டியைத் திருவடி காண்டலும் அந் நிலையில் அவன் நினைவுகளும் அவன் தன்னுட் கூறுவனவும் பேசப் பட்டன.

பின்னர் இராவணன் ஊர்வசி முதலிய அரம்பையர் குழாத் தொடு அசோகவனத்துள் வருகின்ருன். அவனுடைய வருகையைக் கம்பர் 20 செய்யுட்களில் மிக அழகாக வருணித்துள்ளார். பணிப் பெண்கள் கூட்டத்தைத் தனியே அப்பால் விலகி நிற்க வைத்துப் பிராட்டியிருக்கும் இடத்தை இராவணன் அணுகுகின்ருன். இராவ ணனே ஆசையால் ஆவி அழிகின்ருன். பிராட்டியோ கூசி ஆவி குலைகின்ருள். தன்னைத் தின்னவந்த புலியைக் கண்ட மான்பிணை போலப் பிராட்டி உடலுருகினுள். அநுமன் அவ்விருவர் நிலையையும் கண்டு இராமனையும் சீதையையும் வாழ்த்தி ஒரு புடையிருந்து கவ னிக்கலுற்ருன். பிராட்டி தன்மீது இரங்கவேண்டும் என்று கூறி இராவணன் அவள் காலடியில் விழுந்து வணங்குகின்ருன்.

அப்பொழுது பிராட்டி அப்பாதகனுடைய புல்லிய வுரைகள் தன் செவியில் விழாதவண்ணம் சிக்குறச் சேமஞ் செய்து, கலக்கம் அடையாமல் ஒழுக்கத்தின் உச்சநிலையில் நின்று கூறும் அற வுரைகள் அருமறைகளைப் பிழிந்தெடுத்து வடித்த சாருகத் திகழ் கின்றன. பின்னர் அறநிலை பிறழ்ந்தவன், செல்வமும் இனமும் ஒழியத் தானும் உடன் அழிவான் என்பதையும், இராமனின் ஆற்ற லையும், இராவணனின் பேடித்தன்மையையும் அவன் வரங்களின் வரம்பையும் நன்கு எடுத்துப் புகன்றமை இருபத்தொருபாடல்களிற் கூறப்பட்டன. சீதையின் அறவுரைகள் இராவணனுக்குச் சினத் தையே மூட்டின. பிராட்டியைக் கொல்ல நினைக்கிருன். காதல் வந்து தடுக்கிறது. பிராட்டியைப் பலவாருக அச்சுறுத்திவிட்டு நீங்கும்பொழுது, காவலரக்கியரை விளித்துப் பிராட்டியின் மனத்தை மாற்ற முயலும்படி ஏவிச் செல்கிருன். அரக்கியர் பொங்கிப் பிராட்டி யைத் துன்புறுத்தவும், திரிசடை நன்மொழி கூறி அவர்களை அடக்கு கிருள். அவர்கள் அடங்கவும் பிராட்டிக்கு அமைதி ஏற்படுகிறது. இவற்றையெல்லாம் அநுமன் காட்சிக்கு இலக்காக்கி இப்படலம் முற்றுப் பெறுகிறது.

இவ்வாறு பல காட்சிகள் கூறப்படினும், சீதாபிராட்டியைத் திருவடி (அநுமன்) கண்டமையே சிறப்புடைத்தாய் இப்படலத்தின் நுவல் பொருளாய் நிற்கும்.

---

# 3. காட்சிப் படலம்

## அநுமன் நினைத்தல்

**330.** மாடு நின்றவம் மணிமலர்ச்
சோலையை மருவித்
தேடி யவ்வழிக் காண்பெனேற்
றீருமென் சிறுமை
ஊடு கண்டிலெ னென்னிற்பின்
னுரியதொன் றில்லை
வீடு வேன்மற்றிவ் விலங்கன்மே
லிலங்கையை வீட்டி.

மாடு நின்ற அம் மணிமலர்ச் சோலையை மருவித்
'தேடி அவ்வழிக் காண்பெனேல் தீரும் என் சிறுமை;
ஊடு கண்டிலென் என்னில், பின் உரியது ஒன்று இல்லை!
வீடுவேன், மற்று, இவ் விலங்கல்மேல் இலங்கையை வீட்டி!'

மாடு - பக்கம். அவ்வழி - அச்சோலையில். ஊடு - அச்சோலையி னுள்ளே. கண்டிலென் என்னில் பின் இவ்விலங்கல் மேல் இலங் கையை வீட்டி வீடுவேன்; மற்று உரியது ஒன்று இல்லை என இயையும். இவ்விலங்கல் மேல் இலங்கையை வீட்டி - இந்த(த் திரி கூட) மலையின்மேல் உள்ள இலங்கையை அழித்து. வீடுவேன் — இறப்பேன். மற்று உரியது ஒன்று இல்லை - வேறு (செய்தற்கு) உரியது ஒன்று(ம்) இல்லை. உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. (1)

25-ஆம் ஏட்டுள், சானகி சோகப்படலம் என்ற தலைப்பும் அப்படலத்தின் முதற் செய்யுளாகப் பின்வரும் பாடலும் காணப்படு கிறது:

330 (a) எயிலி னுட்படு நகரின்யோ சனையெழு நூறு
மயிலி னிற்பட ரிலங்கைமற் றடங்கலு மணுகி
மயல றத்தனி தேடிய மாருதி வனசக்
குயிலி ருந்தவச் சோலைகண் டிதயத்திற் குறித்தான்.

## அநுமன் அசோகவனத்தை அடைதல்

**331.** என்று சோலைபுக் கெய்தின
னிராகவன் றூதன்
ஒன்றி வானவர் பூமழை
பொழிந்தன ருவந்தார்.

அன்று வாளரக் கன்சிறை
யவ்வழி வைத்த
துன்ற லோதிதன் னிலையினிச்
சொல்லுவான் றுணிந்தாம்.

என்று, சோலைபுக்கு எய்தினன் இராகவன் தூதன் ;
ஒன்றி வானவர் பூமழை பொழிந்தனர் உவந்தார்,
அன்று வாள் அரக்கன் சிறை அவ்வழி வைத்த
துன்று அல் ஓதிதன் நிலைஇனிச் சொல்லுவான் துணிந்தாம்.

வானவர் உவந்தார் ஒன்றிப் பூமழை பொழிந்தனர் என்க. உவந்தார் ஒன்றி - மகிழ்ந்து திரண்டு. அவ்வழி வாளரக்கன் சிறைவைத்த துன்று அல் ஓதிதன் அன்று நிலை இனிச் சொல்லுவான் துணிந்தாம் என இயைக்க. அவ்வழி - அச்சோலையில். வாள் அரக்கன் - வாட்படையாற் சிறப்பெய்திய இராவணன். துன்று அல் ஓதிதன் அன்று நிலை - அடர்ந்த இருள்போலும் கரிய கூந்தலையுடைய பிராட்டியின் அப்பொழுதை நிலையை. (2)

25-ஆம் ஏட்டுள், இச்செய்யுளின் பின்,

331 (அ) அஞ்ச னத்தொளி ரமலனை மாயையி னகற்றி
வஞ்ச கத்தொழி லிராவணன் வவ்வினன் கொடுவந்
திஞ்சி யுட்படு மிலங்கையின் சிறையில்வைத் திடவோர்
தஞ்ச மற்றிலை தாளொரு தனியிருந் தயர்வாள்.

என்ற செய்யுள் காணப்படுகிறது.

## பிராட்டி துயர்நிலை 332-358

**332.** வன்ம ருங்குல்வா ளரக்கியர்
நெருக்கவங் கிருந்தாள்
கன்ம ருங்கெழுந் தென்றுமோர்
துளிவரக் காணு
நன்ம ருந்துபோ னலனற
வுணங்கிய நங்கை
மென்ம ருங்குல்போல் வேறுள
வங்கமு மெலிந்தாள்.

வல் மருங்குல் வாள் அரக்கியர் நெருக்க, அங்கு இருந்தாள் :
கல் மருங்கு எழுந்து, என்றும் ஓர் துளி வரக் காணு

நல் மருந்துபோல், நலன் அற உணங்கிய நங்கை,
மெல் மருங்குல்போல், வேறு உள அங்கமும் மெலிந்தாள்.

கன்மருங்கு எழுந்து என்றும் ஓர் துளி வரக் காணு நன் மருந்து போல் நலனற வுணங்கிய நங்கை, வன்மருங்குல் வாள் அரக்கியர் நெருக்க அங்கு இருந்தாள், மென்மருங்குல்போல் வேறு உள அங்கமும் மெலிந்தாள் : என இயையும். மருந்து என்றது மருந்தாக வுதவும் செடி முதலியவற்றை. வன் மருங்குல் வாள் அரக்கியர் - வலிய இடையினையுடைய கொடிய அரக்கியர். நெருக்க - துன் புறுத்த. அங்கு - அந்த அசோக வனத்தில். இருந்தாள் - இருந்து; முற்றெச்சம். உணங்கிய - மெலிந்த. மருங்குல் - இடை. மெலிந்தாள் - மெலிந்தவளாகி. மெலிந்தாள் என்பது பின் 359-ஆம் பாடலில் ' இருந்தனள் ' என்பது கொண்டு முடியும். 333 முதல் 358 முடியவுள்ள பாடல்களிற் பயின்ற வினைகளும் அன்ன.
(3)

**333.** துயில றக்கண்க ளிமைத்தலு
முகிழ்த்தலுந் துறந்தாள்
வெயிலி டைத்தந்த விளக்கென
வொளியிலா மெய்யாள்
மயிலி யற்குயின் மழலையாண்
மானிளம் பேடை
அயிலெ யிற்றுவெம் புலிக்குழாத்
தகப்பட்ட தன்னாள்.

துயில் அறக் கண்கள் இமைத்தலும் முகிழ்த்தலும் துறந்தாள்,
வெயில் இடைத் தந்த விளக்கு என, ஒளிஇலா மெய்யாள்,
மயில் இயல் குயில் மழலை ஆள், மான் இளம் பேடை
அயில் எயிற்று வெம் புலிக்குழாத்து அகப்பட்டது அன்னாள்.

துயில் அற - உறக்கம் நீங்குதலால். முகிழ்த்தல் - மூடுதல். மயில் இயல் குயில் மழலை ஆள் மானிளம் பேடை - மயிலின் சாயலையும் குயிலின் மெல்லிய ஓசையினையும் தனக்கு உரியதாக்கிக் கொண்ட இளைய பெண் மானானது ; இல்பொருளுவமை. அயில் எயிற்று - கூரிய பற்களையுடைய.
(4)

334. விழுதல் விம்முதன் மெய்யுற
வெதும்புதல் வெருவல்
எழுத லேங்குத லிரங்குத
லிராமனை யெண்ணித்
தொழுதல் சோருத றுளங்குத
றுயருழந் துயிர்த்தல்
அழுத லன்றிமற் றயலொன்றுஞ்
செய்குவ தறியாள்.

விழுதல், விம்முதல், மெய் உற வெதும்புதல், வெருவல்,
எழுதல், ஏங்குதல், இரங்குதல், இராமனை எண்ணித்
தொழுதல், சோருதல், துளங்குதல், துயர் உழந்து உயிர்த்தல்,
அழுதல் அன்றி மற்று அயல் ஒன்றும் செய்குவது அறியாள்.

விம்முதல் – ஏங்கி அழுதல். மெய்உற வெதும்புதல் - உடல் மிக்க வெப்பமுடைத்தாதல். வெருவல் - அஞ்சுதல். ஏங்குதல் – இளைத்தல். சோருதல் - தளர்தல். துளங்குதல் - வருந்தல். துயர் உழந்து உயிர்த்தல் - துன்புற்றுப் பெருமூச்சுவிடுதல். அயல் - வேறு. (5)

335. தழைத்த பொன்முலைத் தடங்கடந்
தருவிபோற் றாழப்
புழைத்த போலநீர் நிரந்தரம்
பொழிகின்ற பொலிவால்
இழைக்கு நுண்ணிய மருங்குலா
ளிணைநெடுங் கண்கள்
மழைக்க ணென்பது காரணக்
குறியென வகுத்தாள்.

தழைத்த பொன் முலைத் தடம் கடந்து அருவிபோல் தாழப்
புழைத்த போல நீர் நிரந்தரம் பொழிகின்ற பொலிவால்,
இழைக்கும் நுண்ணிய மருங்குலாள், இணை நெடும் கண்கள்
மழைக்கண் என்பது காரணக்குறி என வகுத்தாள்.

இழைக்கும் நுண்ணிய மருங்குலாள் இணை நெடுங்கண்கள், புழைத்த போல, பொன் தழைத்த முலைத்தடம் கடந்து அருவிபோல் தாழ நீர் நிரந்தரம் பொழிகின்ற பொலிவால் மழைக்கணென்பது

காரணக்குறியென வகுத்தாள் என இயைக்க. இழைக்கும் - பஞ்சு நூலினும். இணை நெடும் கண்கள்-ஒத்த நீண்ட கண்களை. பொன்-தேமல். புழைத்த-துளையிடப்பட்டவை. நிரந்தரம் - எப்பொழுதும். பொழிகின்ற பொலிவால்-சொரிகின்ற தோற்றத்தால். மழைக்கண் - குளிர்ந்த கண், கரிய கண், மழையைப் பொழிகின்ற கண். காரணக் குறி - காரணப் பெயர். வகுத்தாள் - தெரிவிப்பாளாய். மகளிர் கண்களை மழைக்கண் என்று வழங்குதலுண்டு. அது, பிராட்டியின் அப்போதைத் துயர்நிலையில் ஓயாது நீரைப்பொழிதலால் காரணக் குறியெனலாம்படி யிருந்ததென்றபடி. (6)

**336.** அரிய மஞ்சினோ டஞ்சன
முதலிய வதிகம்
கரிய காண்டலுங் கண்ணினீர்
கடல்புகக் கலுழ்வாள்
உரிய காதல ரொருவரோ
டொருவரை யுலகில்
பிரிவெ னுந்துய ருருவுகொண்
டாலன்ன பிணியாள்.

அரிய மஞ்சினோடு அஞ்சனம் முதலிய அதிகம்
கரிய காண்டலும், கண்ணின்நீர் கடல்புகக் கலுழ்வாள்;
உரிய காதலர் ஒருவரோடு ஒருவரை உலகில்
பிரிவு எனும் துயர் உருவுகொண்டால் அன்ன பிணியாள்.

அரிய மஞ்சு - அழகிய மேகம். அஞ்சனம் - மை. அதிகம் கரிய - மிக்க கரியநிறமுடையவற்றை. கலுழ்வாள் - அழுவாளாகி. மஞ்சு முதலியவை இராமபிரான் திருமேனிநிறம்போன்றிருத்தலால் அவனை நினைந்து கலுழ்வாளாயினள். பிரிவெனும் துயர் உருவு கொண்டால் அன்ன பிணியாள் - பிரிதல் என்னும் துன்பம் ஒரு வடிவுகொண்டதுபோன்ற நோயினையுடையளாய். (7)

**337.** துப்பி னுற்செய்த கையொடு
கால்பெற்ற துளிமஞ்
சொப்பி னுன்றனை நினைதொறும்
நெடுங்கண்க ளுகுத்த

அப்பி னனைந் தருந்துய
ருயிர்ப்புடை யாக்கை
வெப்பி னுற்புலர்ந் தொருநிலை
யுருதமென் றுகிலாள்.

துப்பினுல் செய்த கையொடு கால் பெற்ற துளி மஞ்சு,
ஒப்பினுன் தனை நினைதொறும், நெடும் கண்கள் உகுத்த
அப்பினுல் நனைந்து, அரும் துயர் உயிர்ப்பு உடை யாக்கை
வெப்பினுல் புலர்ந்து, ஒருநிலை உருத மென் துகிலாள்.

துப்பினுற் செய்த கையொடு கால்பெற்ற துளி மஞ்சு – பவளத்தினுற் செய்யப்பட்ட கையும் காலும் உடைய, நீர்த்துளிகளைச் சிந்துகின்ற மேகம். மஞ்சு ஒப்பினுனை - மேகம் போன்றவனுன இராமபிரானை. தன், அசை. உகுத்த – சிந்திய. அப்பினுல் – நீரால். அரும் துயர் உயிர்ப்பு உடை யாக்கை வெப்பினுல் புலர்ந்து - பொறுத்தற்கரிய துன்பத்தோடு பெருமூச்சும் உடைய உடற்சூட்டால் புலர்ந்து. துகில் - உடை. (8)

338. அரிது போகவோ விதிவலி
கடக்கவென் றஞ்சிப்
பரிதி வானவன் குலத்தையும்
பழியையும் பாராச்
சுருதி நாயகன் வரும்வரு
மென்பதோர் துணிவால்
கருதி மாதிர மனைத்தையு
மளக்கின்ற கண்ணுள்.

அரிது போகவோ விதிவலி கடக்க என்று அஞ்சிப்
பரிதி வானவன் குலத்தையும் பழியையும் பாராச்
சுருதி நாயகன் வரும் வரும் என்பது ஓர் துணிவால்
கருதி, மாதிரம் அனைத்தையும் அளக்கின்ற கண்ணுள்.

விதி வலி கடக்கப் போகவோ அரிது என இயையும். ஊழ்வலியைக் கடக்கச் செல்லவோ இயலாது என்க. பரிதி வானவன் குலம் - சூரியகுலம். சுருதி - வேதம். சுருதிநாயகன் என்றது இராமபிரானை. மாதிரம் - திசை. (9)

339. கமையி னுடிரு முகத்தயற்
கதுப்புறக் கௌவிச்
சுமையு டைக்கற்றை நிலத்திடைக்
கிடந்ததூ மதியை
அமைய வாயிற்பெய் துமிழ்கின்ற
வயிலெயிற் றரவிற்
குமையு றத்திரண் டொருசடை
யாகிய குழலாள்.

கமையினுள் திருமுகத்து அயல் கதுப்பு உறக் கௌவிச்
சுமையுடைக் கற்றை நிலத்திடைக் கிடந்த, தூமதியை
அமைய வாயில் பெய்து உமிழ்கின்ற அயில் எயிற்று அரவில்,
குமையுறத் திரண்டு, ஒரு சடை ஆகிய குழலாள்.

கமையினுள் திருமுகத்து அயல் கதுப்பு உறக் கௌவி நிலத்திடைக் கிடந்த சுமையுடைக் கற்றை தூமதியை அமைய வாயிற் பெய்து உமிழ்கின்ற அயில் எயிற்று அரவில் குமையுறத் திரண்டு ஒரு சடையாகிய குழலாள் என இயையும். கற்றை திரண்டு சடையாகிய குழலாள் என்க. கமையினுள் - பொறுமையுடையவளாகிய சீதாபிராட்டியினுடைய. கதுப்பு உறக் கௌவி – கன்னங்களை அழுந்தப்பற்றி. சுமையுடைக் கற்றை – பாரமான குழற்றொகுதி. பிராட்டி, 'இருந்த மாநிலஞ் செல்லரித்தெழவு மாண்டெழாதாளாய்' இருந்தமையின் அந்நிலையில் அவிழ்ந்த குழற்றொகுதி நிலத்திடைக் கிடந்த சுமையுடைக் கற்றையாயிற்று. அமைய – அடங்க. வாயிற் பெய்து – வாய்க்கொண்டு விழுங்கி. அயில் எயிற்று அரவில் - கூரிய பற்களையுடைய பாம்புபோல. குமை உறத் திரண்டு – நெருக்கமுறத் திரண்டு. குழலாளாகி என முற்றெச்சமாக்குக. (10)

இப்பாடலின் பின், 25-ஆம் ஏட்டில் ஓர் அதிகப்பாடல் காணப்படுகிறது:

339. (a) கண்ணி னீர்ப்பெருந் தாரைகள் முலைத்தடங் கடந்து
மண்ணின் மீதிடைப் புனலென வழிந்தவை யோட
விண்ணை நோக்குறு மிருகரங் குவிக்கும் வெய்துயிர்க்கும்
எண்ணு மாறிலாப் பிணியினு லிவையிவை இயம்பும்.

இச்செய்யுள் அச்சுப் பிரதிகளில் இல்லை; 17-ஆம் ஏட்டுள், 341–ஆம் பாடலாகிய 'கண்டிலன் கொலாம்' என்பதன்பின் வரையப்பட்டுள்ளது.

**340.** ஆவி யந்துகில் புனைவதொன்
றன்றிவே றறியாள்
தூவி யன்னமென் புனலிடைத்
தோய்கிலா மெய்யாள்
தேவு தெண்கட லமிழ்துகொண்
டநங்கவேள் செய்த
ஓவி யம்புகை யுண்டதே
யொக்கின்ற வுருவாள்.

ஆவி அம் துகில் புனைவது ஒன்று அன்றி வேறு அறியாள்-
தூவி அன்னம் மென் புனலிடைத் தோய்கிலா மெய்யாள்,
தேவு தெண்கடல் அமிழ்துகொண்டு அநங்கவேள் செய்த
ஓவியம் புகையுண்டதே ஒக்கின்ற உருவாள்.

ஆவி அம் துகில் - (உடலுக்கு) உயிர்போற் சிறந்த உடை. துகில் புனைவது ஒன்று அன்றி வேறு அறியாள் - (நாயகன் பிரிவினால் கணந்தோறும் உடல் மெலிதலால் நழுவும்) உடையை உடுத்துக்கொள்வதாகிய ஒரு செயலன்றிவேறுசெயல் அறியாளாய். இனி, ஆவி அம் துகில் என்பதற்கு, நறும்புகையூட்டப்பட்ட அழகிய உடை; என்றும், பாலாவி போன்ற (மெல்லிய) அழகிய உடை என்றும் பொருள் கூறலாம். புனைவது ஒன்று துகில் அன்றி வேறு அறியாள் என்று கொண்டு, உடுத்துவதாகிய ஒரு துகிலையன்றி வேறு (துகில்) அறியாதவளாய் என்று பொருள் கூறுதலும் உண்டு. (11)

**341.** கண்டி லன்கொலா மிளவலுங்
கனைகட னடுவண்
உண்டி லங்கையென் றுணர்ந்தில
ருலகெலா மொறுப்பான்
கொண்டி றந்தமை யறிந்தில
ராமெனக் குழையாப்
புண்டி றந்ததி லெரிநுழைந்
தாலெனப் புகைவாள்.

‘கண்டிலன்கொலாம் இளவலும்? கனை கடல் நடுவண்
உண்டு இலங்கை என்று உணர்ந்திலர், உலகு எலாம் ஒறுப்பான்

கொண்டு இறந்தமை அறிந்திலராம்?' எனக் குழையாப்
புண் திறந்ததில் எரி நுழைந்தால் எனப் புகைவாள்.

இளவலும் கண்டிலன்கொல் – இலக்குமணனும் (மானைப்பிடிக் கச்சென்ற இராமபிரானைக்) காணவில்லைபோலும். ஆம், அசை. (கண்டிருந்தாலும் அவ்விருவரும்) உலகெலாம் ஒறுப்பான் கொண்டு இறந்தமை அறிந்திலர்கொல் – உயிர்களையெல்லாம் வருத்துபவனை இராவணன் என்னைக்கொண்டு சென்றதை அறியவில்லை போலும். ஆம், அசை. (அன்றி) இலங்கை கனைகடல் நடுவண் உண்டு என்று உணர்ந்திலர்கொல் - (இராவணன் வாழும்) இலங்கை ஒலிக்கின்ற கடலின் இடையே உள்ளதென்று அறிந்திலர்போலும். (அறிந்திருந்தால் இதற்குள் அவர்கள் இங்கு வந்து என்னை மீட்டிருக்கலாமே?) எனக் குழையா – என்று உருகி. திறந்த புண்ணில் எரி நுழைந்தால் என – கீறிய புண்ணில் கனல் நுழைந்தாற்போல. புகைவாள் – வருந்துவாள். புகைதல் - வருந்துதல். (சீவக. 13) (12)

342. மாண்டு போயின னெருவைகட்
கரசன்மற் றவரோ
டாண்டை யென்னிலை யுரைப்பவ
ரில்லையிப் பிறப்பிற்
காண்ட லோவரி தென்றென்று
விம்முறுங் கலங்கும்
மீண்டு மீண்டும்புக் கெரிநுழைந்
தாலென மெலிவாள்.

'மாண்டுபோயினன் எருவைகட்கு அரசன், மற்று அவரோடு
ஆண்டை என் நிலை உரைப்பவர் இல்லை; இப் பிறப்பில்
காண்டலோ அரிது!' என்று என்று விம்முறும், கலங்கும்;
மீண்டும் மீண்டும் புக்கு எரி நுழைந்தால் என மெலிவாள்.

(அவர்கள், பிறர் சொல்ல என்நிலை அறிதல்கூடும்; ஆயின், என் நிலையறிந்த) எருவைகட்கு அரசன் மாண்டுபோயினன் - கழுகுகட்கு அரசனான சடாயு இறந்துபோயினான். மற்று, அசை. ஆண்டை - ஆங்கு. அவரோடு என் நிலை உரைப்பவர் இல்லை - (சடாயுவைத் தவிர) இராமலக்குமணரோடு என் நிலை சொல்லுவார் பிறர் இல்லை. இப்பிறப்பில் காண்டல் அரிது – இப்பிறப்பிலே (இராமலக்குமணரைக்) காண்டல் இல்லை. காண்டலோ என்பதனுள் ஓ இரக்கத்தின்கண் வந்தது. அரிது, இங்கே இன்மைமேல் நின்றது

(திருக்குறள். 7). விம்முறும் - வருந்துவாளாகி. எரி மீண்டும் மீண்டும் புக்கு நுழைந்தால் என மெலிவாள் - கனல் (புண்ணில்) மீட்டும் மீட்டும் புகுந்து நுழைந்தாற்போல மெலிவாளாய். (13)

**343.** என்னை நாயக னிளவலை
யெண்ணிலா வினையேன்
சொன்ன வார்த்தைகேட் டறிவில
ளெனத்துறந் தானே
முன்னை யூழ்வினை முடிந்ததோ
வென்றென்று முறையாற்
பன்னி வாய்புலர்ந் துணர்வுதேய்ந்
தாருயிர் பதைப்பாள்.

'என்னை நாயகன் இளவலை
எண்ணிலா வினையேன்
சொன்ன வார்த்தை கேட்டு அறிவிலள்,
எனத் துறந்தானே?
முன்னை ஊழ்வினை முடிந்ததோ?"
என்று என்று முறையால்
பன்னி, வாய் புலர்ந்து, உணர்வு தேய்ந்து,
ஆருயிர் பதைப்பாள்.

எண் இலா வினையேன் இளவலைச் சொன்ன வார்த்தை கேட்டு நாயகன் என்னை அறிவிலள் எனத் துறந்தானே என இயைக்க. இளவல் - தம்பி (யான இலக்குவன்). பன்னி - சொல்லி. புலர்ந்து- உலர்ந்து. (14)

**344.** அருந்து மெல்லட காரிட
வருந்துமென் றழுங்கும்
விருந்து கண்டபோ தென்னுறு
மோவென்று விம்மும்
மருந்து முண்டுகொல் யான்கொண்ட
நோய்க்கென்று மயங்கும்
இருந்த மாநிலஞ் செல்லரித்
தெழவுமாண் டெழாதாள்.

‘அருந்தும் மெல் அடகு ஆர் இட
அருந்தும் ?’ என்று அழுங்கும் ;
‘விருந்து கண்டபோது என் உறுமோ ?’
என்று விம்மும் ;
‘மருந்தும் உண்டுகொல் யான்கொண்ட
நோய்க்கு ?’ என்று மயங்கும்’
இருந்த மா நிலம் செல் அரித்து
எழவும் ஆண்டு எழாதாள்.

அருந்தும் மெல் அடகு - உண்ணத்தக்க மெல்லிய இலையுணவை ஆர் இட அருந்தும் என்று - யார் பரிமாற (இராமபிரான்) உண்பான் என்று. அழுங்கும் - வருந்துவாளாய். இருந்த மாநிலம் - (பிராட்டி) தங்கியிருந்த பூமியில். செல் அரித்து எழ - கறையான் அரித்துப் புற்றுண்டாகவும். (15)

**345.** வன்கண் வஞ்சனை யரக்கரித்
துணைப்பகல் வையார்
தின்ப ரென்னினிச் செயத்தக்க
தென்றுதீர்ந் தானே
தன்கு லப்பொறை தன்பொறை
யெனத்தவிர்ந் தானே
என்கொ லெண்ணுவ தென்னுமங்
கிராப்பக லில்லாள்.

‘வன்கண் வஞ்சனை அரக்கர்
இத்துணைப்பகல் வையார்,
தின்பர், என் இனிச் செயத்தக்கது ?
என்று தீர்ந்தானே ?
தன்குலப்பொறை தன்பொறை
எனத் தவிர்ந்தானே ?
என்கொல் எண்ணுவது ?’ என்னும், அங்கு
இராப்பகல் இல்லாள்.

வன்கண் வஞ்சனை அரக்கர் - கொடுமையும் வஞ்சகமும் உள்ளவரான இராக்கதர். இத்துணைப் பகல் - இவ்வளவு நாள். இனிச் செயத்தக்கது என் என்க. தீர்தல் - நீங்குதல். தன் குலப்பொறை-

தன் குலத்தார் தாங்கிய அரச பாரம். தன் பொறை யென - தான் தாங்கவேண்டிய பாரம் என்று. அங்கு இராப் பகல் இல்லாள் எண்ணுவது என் கொல் என்பாளாய் என்க. (16)

இச்செய்யுளின் பின் 17-ஆம் ஏட்டில் பின்வருமாறு ஒரு செய்யுள் காணப்படுகிறது :—

345 (a) மாய மானின்பின் ஞெடர்ந்த நாண் மாண்டன னென்று
வாயி னுலெடுத் துரைத்தது வாய்மைகொ ளிளையோன்
போய வன்செயல் கண்டுடல் பொன்றின னுகும்
ஆய தின்னதென் றறிந்திலே னென்றென்று மயர்வாள்.

346. பெற்ற தாயருந் தம்பியும்
பெயர்த்தும்வந் தெய்திக்
கொற்ற மாநகர்க் கொண்டிறந்
தார்கொலோ குறித்துச்
சொற்ற யாண்டெலா முறைந்தன்றி
யந்நகர்த் துன்னுன்
உற்ற துண்டெனுப் படருழந்
துருதன வுறுவாள்.

‘பெற்ற தாயரும் தம்பியும்
பெயர்த்தும் வந்து எய்திக்
கொற்றம் மா நகர்க் கொண்டு
இறந்தார்கொலோ? குறித்துச்
சொற்ற யாண்டு எலாம் உறைந்து அன்றி
அந்நகர்த் துன்னுன்.
உற்றது உண்டு’ எனுப் படர் உழந்து
உருதன உறுவாள்.

தாயரும் - தாய்மார்களும். தம்பியும் - பரதாழ்வானும். பெயர்த்தும் - மீட்டும். கொண்டு – இராமலக்குமணர்களை அழைத்துக் கொண்டு. கொற்றம் மா நகர் இறந்தார்கொலோ - வெற்றிச் சின்னங்களையுடைய பெரிய நகராகிய அயோத்திக்குச் சென்று விட்டார்களோ! எய்தி, கொண்டு, இறந்தார்கொலோ என இயைக்க. குறித்துச் சொற்ற யாண்டெலாம் - (பதினுன்கு என்று எல்லை) அறுதியிட்டுச் சொல்லிய ஆண்டு முழுதும். உறைந்தன்றி - (காட்டில்) வசித்தல்லது. அந் நகர் துன்னுன் – அந்த அயோத்தி நகரத்தை அடையமாட்டான். (ஆதலால்) உற்றது உண்டு -

(அவர்களுக்கு) எய்தியது (துன்பம்) ஒன்று உண்டு. படர் உழந்து - துன்புற்று. உருதன உறுவாள் - அடையத்தகாத இடர்ப்பாடுகளை அடைவாள். (17)

347. முரனெ னத்தகு மொய்ம்பினோர்
முன்பொரு தவர்போல்
வரனு மாயமும் வஞ்சமும்
வரம்பில வல்லோர்
பொரநி கழ்ந்ததோர் பூசலுண்
டாமெனப் பொருமாக்
கரனெ ரித்தது கண்டன
ளாமெனக் கவல்வாள்.

'முரன் எனத்தகும் மொய்ம்பினோர் முன் பொருதவர்போல்,
வரனும், மாயமும், வஞ்சமும், வரம்பில வல்லோர்
பொர நிகழ்ந்தது ஓர் பூசல் உண்டாம்?' எனப் பொருமாக்
கரன் நெரித்து, அது கண்டனளாம் எனக் கவல்வாள்.

முரன் எனத்தகும் மொய்ம்பினோர் - முரன் என்னும் பெயருடைய அசுரன் என்று சொல்லத்தக்க ஆற்றலுடையோராகிய. முன் பொருதவர் போல் - முன்னே (ஜனஸ்தானத்தில்) போர் செய்த (கரன் முதலிய)வர்களைப் போல. வரன் - வரம். வஞ்சம் - கொடுமை. வரம்பு இல - எண்ணில்லாத. வரம்பில வரனும் மாயமும் வஞ்சமும் வல்லோர் என்க. பொர - போர் செய்ய. நிகழ்ந்தது ஓர் பூசல் உண்டாம் எனப் பொருமா - உண்டாகிய ஒரு போர் உண்டு போலும் என்று எண்ணிப் பொருமி. அது கண்டனள் எனக் கரன் நெரித்துக் கவல்வாள் - அந்தப் போரைக் கண்டவள் போலக் கைகளை நெரித்துக் கவலையடைவாள். அஞ்சத் தக்கவற்றைக் கண்டவிடத்துக் கைகளை நெரித்தல் மகளிர் இயல்பு. (18)

348. தெம்ம டங்கிய சேணிலங் கேகயர்
★ தம்ம டந்தையுன் றம்பிய தாமென
மும்ம டங்கு பொலிந்த முகத்தினவ்
வெம்ம டங்கலை யுன்னி வெதும்புவாள்.

தெம்மடங்கிய சேண் நிலம், கேகயர்
தம் மடந்தை, உன் தம்பியதாம் என,

மும்மடங்கு பொலிந்த முகத்தின் அவ்
வெம் மடங்கலை உன்னி வெதும்புவாள்.

கேகயர் தம் மடந்தை, தெம்மடங்கிய சேண் நிலம் உன் தம்பிய தாம் என - கேகய நாட்டு அரசர்மகளாகிய கைகேயியானவள், பகைவர் ஒடுங்கிய பெரிய பூமி(யாகிய கோசலநாடு) உன் தம்பி (யாகிய பரதனு)க்குரியதாம் என்று கூற. அயோத்தி என்னும் வடமொழிப் பெயரின் பொருளையே தெம்மடங்கிய சேணிலம் என விளக்கிக் கூறியவாறு. மும் மடங்கு பொலிந்த - (முன்பிருந்த பொலிவினும்) மூன்று மடங்கு மிக்க பொலிவையடைந்த. அவ்வெம் மடங்கலை – அந்த விரும்பத்தக்க சீரிய சிங்கம் போல்பவனை இராம பிரானை. உன்னி - நினைந்து. இதுவும் அடுத்து வரும் செய்யுளும் 'அப்பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்ற தம்மா' (கைகேயி சூழ்வினைப்படலம், 112) என்பதன் விளக்கமாய் அமைந்திருத்தல் நோக்கத்தகும். (19)

**349.** மெய்த்தி ருப்பத மேவென்ற போதினும்
இத்தி ருத்துறந் தேகென்ற போதினும்
சித்தி ரத்தின லர்ந்தசெந் தாமரை
ஒத்தி ருக்குமு கத்தினை யுன்னுவாள்.

'மெய்த் திருப்பதம் மேவு' என்ற போதினும்,
'இத்திருத் துறந்து ஏகு' என்ற போதினும்,
சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை
ஒத்திருக்கும் முகத்தினை உன்னுவாள்.

மெய்த் திருப்பதம் – உண்மையான (அழியாத) செல்வமாகிய (அரச) பதவியை. 'மெய்த்திருப்பதம் மேவு' என்பது தசரதன் கூற்று. 'இத்திருந் துறந்தேகு' என்பது கைகேயி கூற்று. சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை–அதிசயமாக மலர்ந்த செவ்விய தாமரைமலரை ; பகலும் இரவும் ஆகிய இருபோதும் ஒரு படித்தாக மலர்ந்து விளங்குவதோர் அதிசயத்தாமரை என்க. பேறும் இழப்பும் ஆகிய ஒன்றற்கொன்று மாறுபட்ட நிலை ஒரு சேர உற்றபோதும் உள்ளமும் முகமும் வேறுபடாத பொலிவுடையான் இராமபிரான் என்றவாறு. (20)

**350.** தேங்கு கங்கைத் திருமுடிச் செங்கணான்
வாங்கு கோல வடவரை வார்சிலை
ஏங்கு மாத்திரத் திற்றிரண் டாய்விழ
வீங்கு தோளை நினைந்து மெலிந்துளாள்.

தேங்கு கங்கைத் திருமுடிச் செங்கணுன்
வாங்கு கோல வடவரை வார்சிலே
ஏங்கும் மாத்திரத்து இற்று இரண்டாய்விழ
வீங்கு தோளே நினேந்து மெலிந்துளாள்.

கங்கை தேங்கு திருமுடிச் செங்கணுன் – கங்கை தேங்கிய திருமுடியையும் செவ்விய கண்ணினேயும் உடைய சிவபெருமான். வாங்கு – வளேத்த. வடவரை வார்சிலே – வடக்குத்திசையிலுள்ள மகாமேருமலேயாகிய நீண்ட வில். ஏங்கும் மாத்திரத்து – (பிராட்டி தான் இராமபிரானுடைய தோள்களே அணேதல் கிட்டுமோ கிட்டாதோ என்று) ஏங்கிய அப்பொழுதே. (பிராட்டி ஏங்கிய நிலே, பாலகாண்டம் கார்முகப்படலம் 46–54 பாடல்களிற் காண்க.) சிலே இற்று இரண்டாய்விழ வீங்குதோள் என இயையும். (21)

**351.** இன்ன லம்பர வேந்தற் கியற்றிய
பன்ன லம்பதி ஞலாயி ரம்படை
கன்னன் மூன்றிற் களப்படக் கால்வளே
வின்ன லம்புகழ்ந் தேங்கி வெதும்புவாள்.

இன்னல் அம்பரவேந்தற்கு இயற்றிய
பல் நலம் பதினுலாயிரம் படை
கன்னல் மூன்றில் களப்படக் கால் வளே,
வில் நலம் புகழ்ந்து ஏங்கி வெதும்புவாள்.

அம்பரவேந்தற்கு இன்னல் இயற்றிய படை, பல் நலப்படை, பதினுலாயிரம் படை என்க. அம்பர வேந்தற்கும் – இந்திரனுக்கும். உம்மை தொக்கது. இன்னல் இயற்றிய – துன்பத்தை ஆக்கிய. பல் நலம் - பல சிறப்பினேயுடைய. பதினுலாயிரம் படையும் என முற்றும்மை விரிக்க. கன்னல் மூன்றில் – மூன்றுநாழிகைப்பொழுதினுள். களப்பட – போர்க்களத்தின்கண் இறந்துபடும்படி. கால் வளே வில் நலம் – இரு தலேயும் வளேந்த வில்லின் பெருமையை. இதிற் சொல்லிய பதினுலாயிரம்படை கரனெடு வந்தவை. ‘கன்னல் மூன்றில்’ என்ற பாடமே வான்மீகத்தொடு பொருந்துவதாகும். (22)

**352.** ஆழ நீர்க்கங்கை யம்பி கடாவிய
ஏழை வேடனுக் கெம்பிநின் றம்பிநீ
தோழன் மங்கை கொழுந்தி யெனச்சொன்ன
வாழி நண்பினே யுன்னி மயங்குவாள்.

ஆழ நீர்க்கங்கை அம்பி கடாவிய
ஏழை வேடனுக்கு, 'எம்பி நின் தம்பி : நீ
தோழன் : மங்கை கொழுந்தி!' எனச் சொன்ன
வாழி நண்பினை உன்னி மயங்குவாள்.

அம்பி கடாவிய - ஓடம் செலுத்திய. வேடன் என்றது குகனை. எம்பி - என் தம்பி. இங்கு, "ஏழை யேதலன் கீழ்மகனென்னு திரங்கி மற்றவற் கின்னருள் சுரந்து, மாழை மான்மட நோக்கி யுன் தோழி யும்பியெம்பியென் றொழிந்திலை யுகந்து, தோழனீயெனக் கிங்கொழியென்ற சொற்கள் வந்தடியேன்மனத் திருந்திட, ஆழி வண்ணநின் னடியிணை யடைந்தேன் அணி பொழில் திருவரங்கத் தம்மானே" (பெரிய திருமொழி 5-8-1) என்னும் அருளிச் செயலும் நோக்கத்தகும். (23)

**353.** மெய்த்த தாதை விரும்பின னீட்டிய
கைத்த லங்களைக் கைகளி னீக்கிவே
றுய்த்த போது தருப்பையி லொண்பதம்
வைத்த வேதிகைச் செய்தி மனக்கொள்வாள்.

மெய்த்த தாதை விரும்பினன் நீட்டிய
கைத்தலங்களைக் கைகளின் நீக்கி வேறு
உய்த்தபோது தருப்பையில் ஒண்பதம்
வைத்த வேதிகைச்செய்தி மனக்கொள்வாள்.

மெய்த்த தாதை - உண்மையறிவுடைய தந்தையான சனகன். விரும்பினன் - ஆசையுற்று. நீட்டிய கைத்தலங்களை - (மண வறையில் மருமகனாகிய இராமபிரானைப் பாதபூசைசெய்யும்பொருட்டு இராமபிரானுடைய திருவடிகளைக் கையால் தூக்கித் தருப்பையில் வைப்பதற்காக) நீட்டிய கைகளை. கைகளின் நீக்கி வேறுய்த்த போது - கையால் விலக்கி வேருகச் செலுத்தியபொழுது. (இராம பிரான் சனகன்பால் தனக்குள்ள பெருமதிப்புக்காரணமாகத் தன் கால்களைச் சனகன் கைகளால் தொடாதவாறு விலக்கிக்கொண்டு என்றவாறு.) ஒண்பதம் - சிறந்த திருவடிகளை. தருப்பையில் வைத்த-(ஆசனமாக இடப்பட்ட) தருப்பைப் புல்லிற் பொருந்தும்படி வைத்த. வேதிகைச் செய்தி - மணவறைச் செயலை. (24)

**354.** உரங்கொ டேமலர்ச் சென்னி யுரிமைசால்
வரங்கொள் பொன்முடி தம்பி வனைந்திலன்

திரங்கு செஞ்சடை கட்டிய செய்வினைக்
கிரங்கி யேங்கிய தெண்ணி யிரங்குவாள்.

உரம் கொள் தேம் மலர்ச் சென்னி உரிமைசால்
வரம் கொள் பொன் முடி தம்பி வனைந்திலன்,
திரங்கு செஞ்சடை கட்டிய செய்வினைக்கு,
இரங்கி ஏங்கியது, எண்ணி இரங்குவாள்.

உரம் கொள் சென்னி, தேம் மலர்ச் சென்னி என இயைக்க. உரம் – வன்மை. தேம் – தேன். சென்னி – தலையின்கண். உரிமை சால் – உரிமை மிக்க. உரிமை சால் பொன்முடி, வரம்கொள் பொன்முடி என்க. வரம்கொள் – (கைகேயியால்) வரத்தினால் அடையப்பட்ட. முடி – கிரீடம். தம்பியென்றது பரதனை. வனைந்திலன் – சூடாமல். திரங்கு – சுருண்ட. (25)

**355.** பரித்த செல்வ மொழியப் படருநாள்
அருத்தி வேதியற் கான்குல மீந்தவன்
கருத்தி னாசை கரையின்மை கண்டிறை
சிரித்த செய்கை நினைத்தழுஞ் செய்கையாள்.

பரித்த செல்வம் ஒழியப் படரும் நாள்,
அருத்தி வேதியற்கு ஆன்குலம் ஈந்து, அவன்
கருத்தின் ஆசை கரை இன்மை கண்டு, இறை
சிரித்த செய்கை நினைத்து அழும் செய்கையாள்.

பரித்த – தாங்கிய. செல்வம், என்றது அரச பதவியை. ஒழிய – நீங்க. படரும் நாள் - வனத்துக்குச் சென்ற அக்காலத்து. அருத்தி – ஆசை. வேதியற்கு – (திரிசடன் என்னும்) அந்தணனுக்கு. ஆன் குலம் – பசுக்கூட்டத்தை. ஈந்து – கொடுத்து. அவன் கருத்தின்– அவ்வந்தணன் உள்ளத்தில். ஆசை கரை இன்மை கண்டு - ஆசையின் எல்லையில்லாமையை நோக்கி, இறை சிரித்த செய்கை – சற்றே இராமன் சிரித்த செயலை. (26)

**356.** மழுவின் வாயின மன்னரை மூவெழு
பொழுது நூறிப் புலவுறு புண்ணினீர்
முழுகி னான்றவ மொய்ம்பொடு மூரிவில்
தழுவு மேன்மை நினைந்துயிர் சாம்புவாள்.

மழுவின் வாய் இன மன்னரை மூவெழு
பொழுது நூறிப் புலவு உறு புண்ணின் நீர்
முழுகினன் தவம் மொய்ம்பொடு மூரிவில்
தழுவும் மேன்மை நினைந்து உயிர் சாம்புவாள்.

இன மன்னரை மூவெழுபொழுது மழுவின்வாய் நூறிப் புலவுறு புண்ணின் நீர் முழுகினன் எனக் கூட்டுக. இன மன்னரை - திரளான அரசரை. மூவெழுபொழுது - இருபத்தொரு (தலை) முறை. மழுவின் வாய் நூறி - மழுப்படையின் முனையால் அழித்து. புலவு உறு புண்ணின் நீர் முழுகினன் – புலால்நாற்றத்தோடு (அவருடலினின்று பெருகிய) இரத்தத்தில் மூழ்கினவனாகிய பரசுராமனுடைய. தவமொய்ம்பொடு – தவ வலியுடன். மூரிவில் - வலிய வில். சாம்புதல் - வாடுதல். (27)

**357.** ஏக வாளியவ் விந்திரன் காதன்மேற்
போக வேவி யதுகண் பொடித்தநாட்
காக முற்றுமோர் கண்ணில வாகிய
வேக வென்றியைத் தன்றலை மேற்கொள்வாள்.

ஏக வாளி அவ் இந்திரன் காதல் மேல்
போக ஏவி, அது கண் பொடித்தநாள்,
காகம் முற்றும் ஓர் கண்ணில வாகிய
வேக வென்றியைத் தன் தலைமேற் கொள்வாள்.

அ இந்திரன் காதல் மேல் ஏக வாளி போக ஏவி என இயைக்க அ : பண்டறிசுட்டு. இந்திரன் காதல் - இந்திரன் மகன் (சயந்தன்.) ஏகவாளி – ஓர் அப்பு. அது - அவ்வாளி. கண் பொடித்தநாள் - அக்காகத்தினுடைய கண்ணைக் கெடுத்தகாலத்து. குற்றவாளியாகிய சயந்தன் கண் ஒன்றுமே இராமன் அம்புக்கு இலக்காயிற்று; எனினும், அவன் இனமும் ஒரு கண் இழந்தன என்பார், கண்ணில வாகிய வேகவென்றி என்றார். எனவே 'ஆகிய' என்ற பாடம் சிறக்கும். (28)

**358.** வெவ்வி ராதனை மேவருந் தீவினை
வவ்வி மாற்றருஞ் சாபமு மாற்றிய
அவ்வி ராமனை யுன்னித்தன் னுருயிர்
செவ்வி ராதுணர் வோய்ந்துட றேம்புவாள்.

வெவ் விராதனை மேவு அரும் தீவினை
வவ்வி, மாற்று அரும் சாபமும் மாற்றிய
அவ் இராமனை உன்னித் தன் ஆர் உயிர்
செவ் இராது, உணர்வு ஓய்ந்து, உடல் தேம்புவாள்.

வெவ்விராதனை - கொடிய (அரக்கனுகிய) விராதன் என்பவனை. மேவு - அடைந்த. அருந்தீவினை - போக்குதற்கரிய தீவினையை. வவ்வி - கவர்ந்து (போக்கி). மாற்றரும் சாபமும் - போக்குதற்கரிய சாபத்தையும். மாற்றிய - போக்கிய. செவ் இராது - செவ்விதாய் நில்லாமல். உணர்வு ஓய்ந்து - அறிவுசோர்ந்து. தேம்புதல் - வாடுதல். தேம்புவாளாய் இருந்தனள் எனப் பின்வரும் செய்யுளொடு முடிக்க. (29)

இச்செய்யுளின்பின், 25-ஆம் ஏட்டில் பின்வருமாறு மூன்று செய்யுட்கள் காணப்படுகின்றன :—

358 (a) இன்ன வெண்ணி யிடருறு வாள்மருங்
குன்னெ ராயிர கோடி யரக்கியர்
துன்னு காவலுட் டுய திரிசடை
யென்னு மங்கை துணையின்றி வேறிலாள்.

(b) தரும நீதி தழுவிய சிந்தைகொண்
டுரிய வீடணன் தந்தருள ளொண்டாடி
திரிச டைக்கொடி நாடொறுந் தேற்றுஞ்சொல்
அருளி னுற்றன தாவிபெற் றுய்ந்துளாள்.

(c) அன்ன ளாய வருந்ததிக் கற்பினுள்
மன்னு சோலையின் மாருதி யும்வரத்
தன்னி டந்துடித் தெய்துறச் சானகி
என்னு மங்கை யினிதிருந் தாளரோ.

## காவலரக்கியர் துயிலுதல்

**359.** ★ இருந்தன டிரிசடை யென்னு மின்சொலில்
திருந்தினு ளொழியமற் றிருந்த தீவினை
அருந்திற லரக்கிய ரல்லு நள்ளுறப்
பொருந்தலுந் துயினறைக் களிபொ ருந்தினுர்.

'இருந்தனள்; திரிசடை என்னும் இன்சொலில்
திருந்தினுள் ஒழிய, மற்று இருந்த தீவினை
அருந்திறல் அரக்கியர், அல்லு நள்ளுறப்
பொருந்தலும், துயில் நறைக் களிபொருந்தினுர்.

இருந்தனள் - (சீதாபிராட்டி) இருந்தாள். 332 முதல் 358-வரையுள்ள பாடல்களிற் பயின்ற மெலிந்தாள், அறியாள், வகுத்தாள்...... தேம்புவாள் எனும் முற்றுச் சொற்களை மெலிந்தாளாய், அறியாளாய், வகுத்தாளாய், தேம்புவாளாய் என எச்சமாக்கி இப் பாடலுள் முதற்கண் உள்ள 'இருந்தனள்' என்பதனோடு முற்றுவிக்க. அல்லு நள்ளுறப் பொருந்தலும், திரிசடையென்னும் இன் சொலில் திருந்தினள் ஒழிய, மற்று இருந்த தீவினை அருந்திறல் அரக்கியர் துயில் பொருந்தினர் என இயைக்க. அல்லு - இரவில், நள் உறப்பொருந்தலும் - நடுப்பொழுது வந்தடைந்த அளவில். திரிசடையென்னும் இன் சொலில் திருந்தினள் ஒழிய - திரிசடையென்று சொல்லப்படுகிற இனிய சொல்லினால் திருந்தினள் (ஒருத்தி மட்டும் துயில்) ஒழிய. மற்று : அசை. இருந்த - (அங்கே பிராட்டி பக்கல் காவற்றொழிலை மேற்கொண்டு) தங்கிய. இருந்த அரக்கியர், தீவினை அரக்கியர், அருந்திறல் அரக்கியர் என்க. அருந்திறல் - அரிய ஆற்றல். துயில் நறைக்களி - உறக்கமும் கட்களிப்பும். நறை - கள். (30)

## பிராட்டி திரிசடையிடம் கூறல் 360-364

**360.** ஆயிடைத் திரிசடை யென்னு மன்பினால்
தாயினு மினியவ டன்னை நோக்கினள்
தூயநீ கேட்டியென் றுணைவி யாமென
மேயதோர் கட்டுரை விளம்பன் மேயினள்.

ஆயிடைத், திரிசடை என்னும் அன்பினால்
தாயினும் இனியவள் தன்னை நோக்கினள்,
'தூயநீ! கேட்டி! என் துணைவி ஆம்!' என,
மேயது ஓர் கட்டுரை விளம்பல் மேயினள்.

ஆயிடை - (காவலரக்கியர் துயின்ற) அப்பொழுது. நோக்கினள் - நோக்கினளாய். கேட்டி - கேட்பாயாக. 'தூய நீ என் துணைவி, கேட்டி' என்பது திரிசடையைநோக்கிப் பிராட்டி கூறியது. தன், ஆம் என்பன அசை. மேயது ஓர் கட்டுரை - பொருத்தமுடையதும் பொருள் பொதிந்ததுமான ஒரு சொல்லை. விளம்பல் மேயினள் – சொல்லலுற்றாள். சீதா பிராட்டி விளம்பல்மேயினள் என எழுவாய் வருவித்துரைக்க. (31)

**361.** நலந்துடிக் கின்றதோ நான்செய் தீவினை
சலந்துடித் தின்னமுந் தருவ துண்மையோ
பொலந்துடி மருங்குலாய் புருவங் கண்ணுதல்
வலந்துடிக் கின்றில வருவ தோர்கிலேன்.

'நலம் துடிக்கின்றதோ? நான்செய் தீவினை
சலம் துடித்து இன்னமும் தருவது உண்மையோ?
பொலம் துடி மருங்குலாய்! புருவம், கண், நுதல்,
வலம் துடிக்கின்றில : வருவது ஓர்கிலேன்!'

இச்செய்யுள்முதல் நான்கு செய்யுளும் ஒரு தொடர். பொலம் துடி மருங்குலாய் - அழகிய உடுக்கை போன்ற இடையினை யுடையாய்! இது பிராட்டி திரிசடையை எதிர்முகமாக்கிக்கொள்ளும் விளிக்கூற்று. புருவம் கண் நுதல் – புருவமும் கண்ணும் நுதலும். நுதல் - நெற்றி. வலம் துடிக்கின்றில – வலப்பக்கம் துடிக்கவில்லை; (இடப் பக்கம் துடிக்கின்றன.) வருவது –(இவ்வாறு புருவமும் கண்ணும் நெற்றியும் இடப்பக்கம் துடித்தலால்) வரும் பயன். ஓர்கிலேன் – அறியேன். நலம் துடிக்கின்றதோ – நலமாகத் துடிக் கின்றதோ? (அன்றி) நான் செய் தீவினை – யான் செய்த பாவம் சலம் துடித்து – வஞ்சகமாகத் துடித்து. தருவது - (தீமை) தருவது. நலம் துடிக்கின்றதோ? சலம் துடித்து இன்னமும் (தீங்கு) தருவது உண்மையோ? (அடுப்பது யாது?) எனப் பின்வரும் பாடலுடன் (364) கூட்டி முடிவு காண்க. (32)

17-ஆம் ஏட்டில் இச் செய்யுளின் பின், பின்வருமாறு ஒரு பாடல் காணப்படுகிறது:—

361 (a) தாட்சியின் றெனத்திரி சடையுஞ் சாலவும்
மாட்சியி னமைந்தது மலருளாள் தொழும்
காட்சியா யிக்குறி கருதுங் காலையில்
ஆட்சியே கடனென அறிந்து நல்குவாய்.

**362.** முனியொடு மிதிலையின் முதல்வன் முந்துநாள்
துனியறு புருவமுந் தோளு நாட்டமும்
இனியன துடித்தன வீண்டு மாண்டென
நனிதுடிக் கின்றன வாயி னல்குவாய்.

'முனியொடு மிதிலையின் முதல்வன் முந்துநாள்,
துனி அறு புருவமும், தோளும், நாட்டமும்,
இனியன துடித்தன ; ஈண்டும், ஆண்டு என,
நனி துடிக்கின்றன ; ஆயின் நல்குவாய்!'

ஆயின் நல்குவாய் - தாயினும் தலையளிசெய்பவளே! முனி யொடு - விசுவாமித்திரமுனிவனுடன். முதல்வன் – தலைவனான இராமன். முந்து நாள் - எதிர்ப்பட்ட காலத்தில். துனி அறு – குற்றம் அற்ற. நாட்டம் - கண். ஈண்டும் - இப்பொழுதும். ஆண்டு

என - அப்பொழுதுபோல. நனி - மிகவும். துடிக்கின்றன - (கண் முதலியவை) இடப்பக்கம் துடிக்கின்றன. (33)

**363.** மறந்தனெ னிதுவுமோர் மாற்றங் கேட்டியால்
அறந்தரு சிந்தையென் ஞவி நாயகன்
பிறந்த பார் முழுவதுந் தம்பி யேபெறத்
துறந்துகான் புகுந்தநாள் வலந்து டித்ததே.

'மறந்தனென், இதுவும் ஓர் மாற்றம் கேட்டியால்!
அறம் தரு சிந்தை என் ஆவி நாயகன்,
பிறந்த பார்முழுவதும் தம்பியே பெறத்
துறந்து, கான் புகுந்தநாள், வலம் துடித்ததே!'

மாற்றம் - சொல். அறம் தரு சிந்தை என் ஆவி நாயகன் - அறத்தைப் புரக்கின்ற மனமுடையவனுன என் பிராண நாயகன் (இராமபிரான்). பிறந்த பார் - பிறந்தமையால் (தனக்கு உரியதான) பூமி. கான் - காடு. (34)

**364.** நஞ்சனை யான்வனத் திழைக்க நண்ணிய
வஞ்சனை நாள்வலந் துடித்த வாய்மையால்
எஞ்சல வீண்டுதா மிடந்து டிக்குமால்
அஞ்சலென் றிரங்குவா யடுப்பதி யாதென்ருள்.

'நஞ்சு அனையான் வனத்து இழைக்க நண்ணிய
வஞ்சனை நாள் வலம் துடித்த வாய்மையால்,
எஞ்சல ஈண்டுதாம் இடம் துடிக்குமால்;
அஞ்சல் என்று இரங்குவாய்! அடுப்பது யாது என்ருள் ?'

அஞ்சல் என்று இரங்குவாய் - அஞ்சற்க என்று என்பால் இரக்கங் கொள்பவளே! நஞ்சனையான் - நஞ்சுபோல் (கொல்)பவனுன இராவணன். வனத்து வஞ்சனை இழைக்க நண்ணிய நாள் : எனக் கூட்டுக. வாய்மை - (இவை) உண்மை. ஆல் : அசை. ஈண்டு தாம் எஞ்சல இடம் துடிக்கும் - இப்பொழுது அந்தத் தோளும் புருவமும் கண்ணும் குறைவில்லாதனவாய் (மிகவும்) இடப் பக்கம் துடிக்கும். அடுப்பது யாது - (எனக்கு) வருவது எது ? (35)

### திரிசடை பிராட்டிபால் நற்குறிப்பயன் கூறல்

**365.** என்றலுந் திரிசடை யியைந்த சோபனம்
நன்றிது நன்றென நயந்த சிந்தையாள்
உன்றுணைக் கணவனை யுறுத லுண்மையால்
அன்றியுங் கேட்டியென் றறைதன் மேயினள்.

என்றலும், திரிசடை, 'இயைந்த சோபனம்!
நன்று இது! நன்று!' என நயந்த சிந்தையாள்,
'உன் துணைக் கணவனை உறுதல் உண்மையால்!
அன்றியும், கேட்டி!' என்று அறைதல் மேயினள்.

என்றலும் - என்று (பிராட்டி) கூறுதலும். 'இது நன்று நன்று; சோபனம் இயைந்த!' என நயந்த சிந்தையாள் (ஆகிய) திரிசடை என இயைக்க. 'இது நன்று நன்று; சோபனம் இயைந்த' என்பது, பிராட்டி கூறிய துடிக்குறிகளினால் விளையும் பயனுணர்ந்த திரிசடை தன்னுட் கூறுங் கூற்று. சோபனம் - நன்மை. நயந்த - விரும்பிய. சிந்தையாள் - மனமுடையவளாகி. உன் துணைக் கணவனை - உனக்கு ஒத்த தகுதியுடைய நாயகனை. (36)

### திரிசடை தான் கண்ட நிமித்தமும் கனவும் பயனும் கூறல் 366—382

**366.** உன்னிறம் பசப்பற வுயிரு யிர்ப்புற
இன்னிறத் தென்னிசை யினிய நண்பினால்
மின்னிற மருங்குலாய் செவியின் மெல்லவோர்
பொன்னிறத் தும்பிவந் தூதிப் போயதால்.

'உன் நிறம் பசப்பு அற, உயிர் உயிர்ப்பு உற,
இன் நிறத் தென் இசை இனிய நண்பினால்,
மின் நிற மருங்குலாய்! செவியில் மெல்ல ஓர்
பொன் நிறத் தும்பி வந்து ஊதிப் போயதால்!'

மின் நிற மருங்குலாய்! ஓர் பொன்னிறத் தும்பி, இனிய நண்பினால் வந்து, உன் நிறம் பசப்பு அற, உயிர் உயிர்ப்பு உற, இன் நிறத் தென் இசை (உன்) செவியில் மெல்ல ஊதிப் போயது என இயைக்க. மின் நிற மருங்குலாய் - மின்னின் இயல்புடைய இடையையுடையாய்! இது திரிசடை பிராட்டியைத் தன்முகமாக்கிக் கொள்ளும் விளிக்கூற்று. உன் நிறம் பசப்பு அற - (இராமபிரானைப்

பிரிந்தமையால்) உன்பால் உண்டான பசலை நிறம் நீங்க. உயிர் உயிர்ப்பு உற - உயிர் உய்திபெற. இன் நிறத் தென் இசை - இனிய இயல்புடைய அழகிய இசையை. இதுவும் அடுத்துவரும் செய்யுளும் திரிசடை கண்ட நிமித்தக்காட்சி கூறுவன. (37)

**367.** ஆயது தேரினுன் னாவி நாயகன்
ஏயது தூதுவந் தெதிரு மென்னுமால்
தீயது தீயவர்க் கெய்த றிண்ணமென்
வாயது கேளென மறித்துங் கூறுவாள்.

'ஆயது தேரின், உன் ஆவி நாயகன்
ஏயது தூது வந்து எதிரும் என்னுமால்;
தீயது தீயவர்க்கு எய்தல் திண்ணம்! என்
வாயது கேள்!' என மறித்தும் கூறுவாள்.

ஆயது - அவ்வாறு தும்பி ஊதியதனை. தேரின் - ஆராய்ந்தால். ஏயது - செலுத்தப்பட்ட. தூது - தூதன். வந்து எதிரும் - வந்து சந்திப்பான். ஆல்: அசை. தீயவர்க்குத் தீயது எய்தல் திண்ணம் என்க. என் வாயது - என்பால் நிகழ்ந்ததனையும். மறித்தும் - மீட்டும். (38)

**368.** துயிலலை யாதலிற் கனவு தோன்றல
அயில்விழி யன்னையா னமைய நோக்கினேன்
பயில்வன பழுதில பரிவி னாண்டன
வெயிலினு மெய்யன விளம்பக் கேட்டியால்.

துயிலலை ஆதலில் கனவு தோன்றல;
அயில் விழி அன்னை! யான் அமைய நோக்கினேன்:
பயில்வன பழுது இல, பரிவின் ஆண்டன,
வெயிலினும் மெய்யன, விளம்பக் கேட்டியால்!

அயில்விழி அன்னை (நீ) துயிலலை; ஆதலில் கனவு தோன்றல; யான் அமைய நோக்கினேன் என இயையும். அயில்விழி அன்னை - வேல் (போலும்) கண்களையுடைய தாயே! துயிலலை - (நீ) உறங்க வில்லை. அமைய பொருந்த. பயில்வன - நிகழ்பவை. பழுது இல - குற்றமற்றவை. பரிவின் ஆண்டன - விருப்பத்தால் கையா

ளப்பட்டவை. வெயிலினும் மெய்யன - சூரியனைக் காட்டிலும் தவருது பலிப்பன. விளம்ப - சொல்ல. கேட்டி - கேள். (39)

**369.** எண்ணெய்தன் முடிதொறு மிழுகி யீறிலாத்
திண்ணெடுங் கழுதைபேய் பூண்ட தேரின்மேல்
அண்ணல்வே லிராவண னரத்த வாடையன்
நண்ணினன் றென்புலம் நவையில் கற்பினுய்.

'எண்ணெய் தன் முடிதொறும் இழுகி, ஈறு இலாத்
திண் நெடும் கழுதை பேய் பூண்ட தேரின்மேல்,
அண்ணல் வேல் இராவணன், அரத்த ஆடையன்,
நண்ணினன் தென்புலம்; நவை இல் கற்பினுய்!'

நவையில் கற்பினுய்! அண்ணல் வேல் இராவணன், அரத்த ஆடையன், தன் முடிதொறும் எண்ணெய் இழுகி ஈறு இலாத் திண் நெடுங் கழுதை பேய் பூண்ட தேரின்மேல் தென்புலம் நண்ணினன் என இயையும். நவையில் கற்பினுய் - குற்றமற்ற கற்பினை யுடையவளே! இது பிராட்டியை முன்னிலையாக்கிக் கொள்ளும் திரிசடையின் விளிக்கூற்று. அண்ணல் - பெருமை. அரத்த ஆடையன் - செவ்வாடை யணிந்தவனுகி. இழுகி - பூசிக்கொண்டு. தென்புலம் - தென்றிசை. (40)

**370.** மக்களுஞ் சுற்றமும் மற்று ளோர்களும்
புக்கன ரப்புலம் போந்த தில்லையால்
சிக்கற நோக்கினன் றீய வின்னமும்
மிக்கன கேட்கென விளம்பன் மேயினுள்.

'மக்களும், சுற்றமும், மற்றுளோர்களும்,
புக்கனர் அப்புலம், போந்தது இல்லையால்!
சிக்கற நோக்கினன்! தீய இன்னமும்
மிக்கன கேட்க!' என விளம்பல் மேயினுள்.

சிக்கு அற - ஐயம் நீங்க. கேட்க - கேட்பாயாக. (41)

**371.** ஆண்டகை யிராவணன் வளர்க்கு மவ்வனல்
ஈண்டில பிறந்தவால் இனங்கொள் செஞ்சிதல்

தூண்டரு மணிவிளக் கழலுந் தொன்மனை
கீண்டதால் வானவே றெறியக் கீழைநாள்.

‘ஆண்தகை இராவணன் வளர்க்கும் அவ்வனல்
ஈண்டில; பிறந்தவால் இனம் கொள் செம் சிதல்;
தூண்டரு மணிவிளக்கு அழலும், தொல் மனை
கீண்டதால் வான ஏறு எறியக் கீழைநாள்!’

அனல் - ஓமத்தீ. ஈண்டில - சொலித்தெழாது அவிந்தன. இனம் கொள் செம் சிதல் பிறந்த - (ஓம குண்டம் இருந்த நிலத்தில்) கூட்டமான செந்நிறமுடைய கறையான் (புற்று) தோன்றின. ஆல்: அசை. தூண்டரு மணி விளக்கு - தூண்டாமணி விளக்கு. அழலும் - ஒளிர்கின்ற. தொன்மனை - பழமை வாய்ந்த இல்லம். கீழைநாள் வான ஏறு எறிய மணி விளக்கு அழலும் தொன்மனை கீண்டது என்க. கீழை நாள் - விடியற்காலையில். வான ஏறு எறிய - இடியேறு தாக்க. கீண்டது - பிளந்தது. (42)

**372.** பிடிமதம் பிறந்தன பிறங்கு பேரியும்
இடிபட முழங்கின விரட்ட லின்றியே
தடியுடை முகிற்குல மின்றித் தாவில்வான்
வெடிபட வதிருமா லுதிரு மீனெலாம்.

‘பிடி மதம்பிறந்தன; பிறங்கு பேரியும்
இடிபட முழங்கின இரட்டல் இன்றியே;
தடி உடை முகிற்குலம் இன்றித் தாவு இல் வான்
வெடிபட அதிருமால்: உதிரும் மீன் எலாம்!’

பிடி - பெண்யானைகள். மதம் பிறந்தன - மதப் பெருக்குடையவாயின. பிறங்கு - விளங்குகின்ற. பிறங்கு பேரியும் இரட்டல் இன்றியே இடிபட முழங்கின என இயைக்க. பேரியும் - பேரிகைகளும். இரட்டல் இன்றி - கொட்டுதல் இல்லாமல். தடி-மின்னல். முகிற்குலம் இன்றி - மேகக்கூட்டம் இல்லாமல். தாவு இல் வான் - குற்றமற்ற ஆகாயம். வெடிபட - ஓசையுண்டாக. மீன் எலாம் உதிரும் - நட்சத்திரங்களெல்லாம் உதிரும். (43)

**373.** விற்பக லின்றியே யிரவு விண்டற
எற்பக லெறித்துள தென்னத் தோன்றுமால்

மற்பக மலர்ந்ததோண் மைந்தர் சூடிய
கற்பக மாலையும் புலவு காலுமால்.

‘வில் பகல் இன்றியே இரவு விண்டு அற
எல் பகல் எறித்துளது என்னத் தோன்றுமால்!
மல் பக மலர்ந்த தோள் மைந்தர் சூடிய
கற்பக மாலையும் புலவு காலுமால்!’

வில் பகல் இன்றியே - ஒளியொடு கூடிய பகற் பொழுதில்லா திருக்கவும். இரவு - இராப்பொழுது. விண்டு அற - கெட்டு ஒழியும்படி. எல் - சூரியன். பகல் எறித்துளது என்ன - ஒளிசெய் துள்ளது என்னும்படி. மல் - வலி. பக - மிகும்படி. மலர்ந்த - விரிந்த (பூரித்த). புலவு காலும் - புலால் நாற்றம் வீசும். (44)

**374.** திரியுமா லிலங்கையு மதிலுந் திக்கெலாம்
எரியுமாற் கந்தர்ப்ப நகர மெங்கணும்
தெரியுமான் மங்கல கலசஞ் சிந்தின
விரியுமால் விளக்கினை விழுங்கு மாலிருள்.

‘திரியுமால் இலங்கையும், மதிலும்; திக்கு எலாம்
எரியுமால்; கந்தர்ப்ப நகரம் எங்கணும்
தெரியுமால்; மங்கல கலசம் சிந்தின
விரியுமால்; விளக்கினை விழுங்குமால் இருள்!’

இலங்கையும் மதிலும் திரியும் என இயையும். திரியும் - சுழலும். எங்கணும் கந்தர்ப்ப நகரம் தெரியும் எனக் கூட்டுக. கந்தர்ப்ப நகரம் - கந்தருவருடைய பட்டினம்; (இது பேய்த்தேர் போன்ற தொரு பொய்த் தோற்றம்). மங்கல கலசம் சிந்தின விரியும் - மங்கலமாக அமைக்கப்பட்ட கலசங்கள் விழுந்து உடையும். ஆல்: அசை. (45)

**375.** தோரண முறியுமாற் றுளங்கிச் சூழிமால்
வாரண முறியுமால் வலத்த வான்மருப்
பாரண மந்திரத் தறிஞர் நாட்டிய
பூரண குடத்துநீர் நறவிற் பொங்குமால்.

‘தோரணம் முறியுமால், துளங்கிச் சூழி மால்
வாரணம் முறியுமால் வலத்த வால் மருப்பு;

ஆரண மந்திரத்து அறிஞர் நாட்டிய
பூரண குடத்து நீர் நறவில் பொங்குமால்!'

சூழி மால் வாரணம் துளங்கி வலத்த வான் மருப்பு முறியும் - நெற்றிப் பட்டத்தையும் மத மயக்கத்தையும் உடைய யானைகள் நடுங்கி வெற்றியைத் தரும் வெள்ளிய கொம்புகள் ஒடியப்பெறும். ஆரண மந்திரத்து - வேத மந்திரங்களால். நாட்டிய – நிலை நிறுத்திய. நறவு - கள். (46)

**376.** விண்டொடர் மதியினைப் பிளந்து மீனெழும்
புண்டொடர் குருதியிற் பொழியு மான்மழை
தண்டொடு திகிரிவா டனுவென் றின்னன
மண்டமர் புரியுமா லாழி மாறுற.

'விண் தொடர் மதியினைப் பிளந்து, மீன் எழும்;
புண் தொடர் குருதியில் பொழியுமால் மழை;
தண்டொடு, திகிரி, வாள், தனு என்று இன்னன
மண்டு அமர் புரியுமால், ஆழி மாறு உற!'

மீன் - நட்சத்திரம். விண் தொடர் – ஆகாயத்திற் செல்லுகின்ற. மீன் மதியினைப் பிளந்து எழும்; மழை புண்தொடர் குருதியிற் பொழியும் என்க. புண்தொடர் - புண்ணிலிருந்து வழியும். குருதியில் - இரத்தம் போல. தண்டு – தண்டம். ஒடுவும் என்றும் எண்ணிடைச் சொல். திகிரி - சக்கரம். தனு - வில். இன்னன - இவைபோன்ற பிற படைக்கலங்களும். ஆழி மாறு உற மண்டு அமர் புரியும் என்க. ஆழி மாறு உற - (முழக்கத்தால்) கடலொடு மாறுபாடு உண்டாக. மண்டு அமர்புரியும் - நெருங்கிய போரைச் செய்யும். ஆல் : அசை. (47)

**377.** மங்கையர் மங்கலத் தாலி மற்றவர்
அங்கையின் வாங்குந ரெவரு மின்றியே
கொங்கையின் வீழ்ந்தன குறித்த வாற்றினல்
இங்கிதி னற்புத மின்னுங் கேட்டியால்.

'மங்கையர் மங்கலத் தாலி மற்று அவர்,
அங்கையின் வாங்குநர் எவரும் இன்றியே,
கொங்கையின் வீழ்ந்தன; குறித்த ஆற்றினல்,
இங்கு இதின் அற்புதம் இன்னும் கேட்டியால்!'

மங்கையர் மங்கலத்தாலி அங்கையின் வாங்குநர் எவரும் இன்றியே மற்று அவர் கொங்கையின் வீழ்ந்தன என்க. அங்கையின் வாங்குநர் எவரும் இன்றி – அழகிய கையாற் களைவார் யாருமின்றி அவர் கொங்கையின் – அம் மங்கையர் தனங்களில். குறித்த வாற்றினல் - சொல்லிய முறையே. இதின் அற்புதம் - இத் தாலி வீழ்ந்ததிலும் அதிசயத்தை விளைவிப்பது. (48)

**378.** மன்னவன் றேவியம் மயன்ம டந்தைதன்
பின்னவி ழோதியும் பிறங்கி வீழ்ந்தன
துன்னருஞ் சுடர்சுடச் சுறுக்கொண் டேறின
இன்னலுண் டெனுமிதற் கேது வீதெனு.

'மன்னவன் தேவி, அம் மயன் மடந்தைதன்
பின் அவிழ் ஓதியும் பிறங்கி வீழ்ந்தன,
துன் அரும் சுடர் சுடச் சுறுக்கொண்டு ஏறின,
இன்னல் உண்டு எனும் இதற்கு ஏது ஈது எனு!'

மன்னவன் தேவி - அரசனுகிய இராவணன் மனைவியும்; மயன் மடந்தை – மயனுடைய மகளும் ஆகிய மண்டோதரியினுடைய. பின் அவிழ் ஓதியும் – பின்னல் அவிழ்ந்த கூந்தலும். பிறங்கி–நிலைமாறி, துன்னருஞ் சுடர் சுட - நெருங்குதற்கரிய நெருப்புச் சுடுதலால். சுறு - மயிர் முதலியன தீயிற் படலால் உண்டாகும் தீயநாற்றம். இன்னல் உண்டு எனும் இதற்கு - (அரக்கர்க்குத்) துன்பம் உண்டு என்னும் என்னுடைய கூற்றுக்கு. ஈது – மண்டோதரி கூந்தல் நிலை கெட்டுச் சுறு நாற்றமுடையதாயினமை. ஏது - காரணமாகும். (49)

**379.** என்றன வியம்பிவே றின்னுங் கேட்டியால்
இன்றிவ ணிப்பொழு தெழுந்த தோர்கனு
வன்றுணைக் கோளரி யிரண்டு மாறிலாக்
குன்றிடை யுழுவையங் குழுக்கொண் டீண்டியே.

என்று அன இயம்பி, 'வேறு, இன்னும், கேட்டியால்!
இன்று, இவண், இப்பொழுது, எழுந்தது ஓர் கனு!
வன் துணைக் கோளரி இரண்டு மாறு இலாக்
குன்றிடை உழுவை அம் குழுக்கொண்டு ஈண்டியே!'

என்று அ(ன்)ன இயம்பி – என்று கூறி, அவை போல்வன பிறவும் சொல்லி. வன் துணைக் கோளரி – வலியனவும் (ஒன்றற்கொன்று) துணையாயினவும் ஆன சிங்கம்; வலிய ஒன்றையொன்று ஒத்த சிங்கம் எனலுமாம். மாறிலா – ஒப்பில்லாத. உழுவை அம் குழு - புலிக்கூட்டம்: அம்: சாரியை. ஈண்டி – நெருங்கி. இதுவும் அடுத்த 380–ஆம் செய்யுளும் ஒருதொடர். கோளரி இரண்டு ஈண்டி வளைந்தன நேர்ந்தன கொன்று புரம் புக, மயிலும் போயது என முடிவுகொள்க. (50)

**380.** வரம்பிலா மதகரி யுறையு மவ்வனம்
நிரம்புற வளைந்தன நெருக்கி நேர்ந்தன
குரம்பறு பிணம்படக் கொன்று மாறிலாப்
புரம்புக விருந்ததோர் மயிலும் போயதால்.

வரம்பு இலா மதகரி உறையும் அவ்வனம்
நிரம்புற வளைந்தன, நெருக்கி நேர்ந்தன,
குரம்பு அறு பிணம் படக் கொன்று, மாறு இலாப்
புரம் புக இருந்தது ஓர் மயிலும் போயதால்!

வரம்பு இலா - அளவில்லாத. வளைந்தன, நேர்ந்தன என்பவை முற்றெச்சம். நேர்ந்தன - நேர்ந்து (=எதிர்த்து). குரம்பு அறு - எல்லையற்ற. மாறிலாப் புரம்புக - பகையறியாத தம் நகரத்துக்கு மீண்டும் செல்ல. இருந்தது ஓர் மயிலும் - (அவ்வனத்துள்) இருந்த தாகிய ஒப்பற்ற மயிலும். (51)

**381.** ஆயிரந் திருவிளக் கமைய மாட்டிய
சேயொளி விளக்கமொன் றேந்திச் செய்யவள்
நாயகன் றனிமனை நின்று நண்ணுதல்
மேயினள் வீடணன் கோயின் மென்சொலாய்.

'ஆயிரம் திருவிளக்கு அமைய மாட்டிய
சேய் ஒளி விளக்கம் ஒன்று ஏந்திச் செய்யவள்
நாயகன் தனி மனை நின்று நண்ணுதல்
மேயினள் வீடணன் கோயில், மென் சொலாய்!'

மென்சொலாய்! செய்யவள், நாயகன் தனி மனை நின்று விளக்கு ஒன்று ஏந்தி, வீடணன் கோயில் நண்ணுதல் மேயினள் என இயையும். மென்சொலாய் என்பது பிராட்டியைத் திரிசடை தன்முக

மாக்கிக்கொள்ளும் விளிக்கூற்று. ஆயிரம் திருவிளக்கு அமைய மாட்டிய சேயொளி விளக்கம் ஒன்று - ஆயிரம் அழகிய விளக்குகள் பொருந்த இணைக்கப்பட்ட செவ்விய ஒளியையுடைய ஒரு விளக்கை. மாட்டுதல் - இணைத்தல். செய்யவள் - திருமகள். நாயகன் என்றது இங்கே இராவணனை. நண்ணுதல் மேயினள் - வந்தாள். வீடணன் கோயில் - வீடணன் அரண்மனையின் கண். (52)

**382.** பொன்மனை புக்கவப் பொருவில் போதினில்
என்னைநீ யுணர்த்தினை முடிந்த தில்லென
அன்னையே யதன்குறை காணென் றாயிழை
இன்னமுந் துயில்கென விருகை கூப்பினாள்.

'பொன்மனை புக்க அப் பொரு இல் போதினில்,
என்னை நீ உணர்த்தினை, முடிந்தது இல்!' என
'அன்னையே! அதன்குறை காண்! என்று ஆயிழை
இன்னமும் துயில்க;' என இருகை கூப்பினாள்.

மனை - (வீடணன்) மாளிகை. பொன் மனை புக்க அப் பொரு இல் போதினில் - இலக்குமியானவள் (என் தந்தையின்) மாளிகையிற் புக்க தடையில்லாத அப்பொழுது. உணர்த்தினை - எழுப்பினை. (கனா) முடிந்ததில் என: என்க. ஆயிழை - அழகிய அணிகலன்களையுடையாள்: சீதாபிராட்டி. அன்னையே என்பது பிராட்டி திரிசடையைத் தன்முகமாக்கிக்கொள்ளும் விளிக்கூற்று. அதன்-அக்கனாவின். (53)

இச்செய்யுளின் பின் 17-ஆம் ஏடு முதலிய சிலவற்றில் பின்வருமாறு ஒரு பாடல் காணப்படுகிறது :—

382. (a) மீட்டுமத் திருசடை யென்னு மென்சொலாள்
தோட்டடம் பொருகுழைத் தொண்டைத் தூய்மொழி
கேட்டிவெங் கடுவெனக் கிளருற் பாதமாய்
நாட்டினை யாவரு நடுக்கங் காண்டுமால்.

### அநுமன் பிராட்டியிருக்கை காணுதல்

**383.** இவ்விடை யண்ணலவ் விராம னேவிய
வெவ்விடை யனையபோர் வீரத் தூதனும்
அவ்விடை யெய்தின னரிதி னேக்குவான்
நொவ்விடை மடந்தைத னிருக்கை நோக்கினான்.

இவ்விடை, அண்ணல் அவ் இராமன் ஏவிய
வெவ் விடை அனைய போர் வீரத் தூதனும்,
அவ்விடை எய்தினன், அரிதின் நோக்குவான்,
நொவ் இடை மடந்தைதன் இருக்கை நோக்கினான்.

தூதனும் நோக்கினான் என முடியும். இவ்விடை-இச்சமயத்தில் வெவ் விடை அனைய – விரும்பத்தக்க காளைபோல்வானாகிய. தூதனும் - தூதனாகிய அநுமனும்; இராமன் ஏவிய தூதன், வெவ் விடையனைய தூதன், போர்வீரத் தூதன் என இயையும். அவ்விடை-(பிராட்டியிருந்த) அவ்விடத்தை. எய்தினன் - எய்தி (முற்றெச்சம்). நோக்குவான் - தேடுபவன். நொவ் இடை மடந்தைதன் இருக்கை-வருந்தும் இடையையுடைய சீதாபிராட்டியின் இருப்பிடத்தை. (54)

## துயிலுணர்ந்த அரக்கியர் நிலை 384—389

**384.** அவ்வயி னரக்கிய ரறிவுற் றம்மவோ
செவ்வையி றுயினமைச் செய்த தீதெனா
எவ்வயின் மருங்கினு மெழுந்து வீங்கினர்
வெவ்வயின் மழுவெழுச் சூல வெங்கையார்.

அவ்வயின் அரக்கியர் அறிவு உற்று, 'அம்மவோ!
செவ்வை இல் துயில் நமைச் செய்தது ஈது!' எனா,
எவ்வயின் மருங்கினும் எழுந்து வீங்கினர்,
வெவ் அயில், மழு, எழுச் சூல வெங்கையார்.

அவ்வயின் – அப்பொழுது. அறிவுற்று - துயில் விழித்து. அம்மவோ: இரக்கக்குறிப்பு. செவ்வை இல் துயில் - நல்லதல்லாத உறக்கம். நமை ஈது செய்தது எனா - நம்மையும் இந்நிலை யடையச் செய்தது என்று; உம்மை தொக்கது. வெவ் அயில் மழு எழு சூல வெம் கையார் (ஆகி) எவ்வயின் மருங்கினும் எழுந்து வீங்கினர் என முடிக்க. அயில் - வேல். மழு - பரசு. எழு - படைக்கலத்துள் ஒன்று. எவ்வயின் மருங்கினும் - (பிராட்டியிருந்த சூழலில்) எல்லாப் பக்கங்களிலும். வீங்குதல் - மிகுதல். (55)

**385.** வயிற்றிடை வாயினர் வளைந்த நெற்றியிற்
குயிற்றிய விழியினர் கொடிய நோக்கினர்
எயிற்றினுக் கிடையிடை யானை யாளிபேய்
துயிற்கொள்வெம் பிலனெனத் தொட்ட வாயினர்.

வயிற்றிடை வாயினர்; வளைந்த நெற்றியில்
குயிற்றிய விழியினர்; கொடிய நோக்கினர்;
எயிற்றினுக்கு இடையிடை யானை, யாளி, பேய்,
துயில்கொள் வெம் பிலன் எனத் தொட்ட வாயினர்,

குயிற்றிய - செய்த. எயிறு - பல். யானையும் யாளியும் பேயும் துயில் கொள்வாய்: பிலனெனத் தொட்டவாய்: என்க. எதுகை நோக்கித் துயிற்கொள் என் விகாரப்பட்டு நின்றது. பிலன் - பிலம் : குகை. தொட்ட - அகழ்ந்து ஆக்கப்பட்ட. இது முதல் 389 முடிய வுள்ள செய்யுட்கள் ஒருதொடர். (56)

**386.** ஒருபது கையின ரொற்றைச் சென்னியர்
இருபது தலையின ரிரண்டு கையினர்
வெருவரு தோற்றத்தர் விகட வேடத்தர்
பருவரை யெனமுலை பலவு நாற்றினர்.

ஒருபது கையினர் ஒற்றைச் சென்னியர் ;
இருபது தலையினர் இரண்டு கையினர் ;
வெருவரு தோற்றத்தர் விகட வேடத்தர் ;
பருவரை எனமுலை பலவும் நாற்றினர்.

சென்னி - தலை. விகட வேடத்தர் - நகைவிளைக்கும் கோல முடையாரும். (57)

17, 30 என்னும் சுவடிகளில், இச்செய்யுளின்பின் ஒருபாடல் பின்வருமாறு காணப்படுகிறது :—

386. (a) சிரமொரு மூன்றினர் திருக்கு மூன்றினர்
கரமொரு மூன்றினர் காலு மூன்றினர்
உரமுறு வனமுலை வெரிநின் மூன்றுளார்
பொருவரு முலகையும் புதைக்கும் வாயினர்.

**387.** சூலம்வாள் சக்கரந் தோட்டி தோமரம்
காலவேல் கப்பணங் கற்ற கையினர்
ஆலமே யுருவுகொண் டனைய மேனியர்
பாலமே தரித்தவன் வெருவும் பான்மையார்.

சூலம், வாள், சக்கரம், தோட்டி, தோமரம்,
கால வேல், கப்பணம், கற்ற கையினர்;
ஆலமே உருவு கொண்டு அனைய மேனியர்;
பாலமே தரித்தவன் வெருவும் பான்மையார்.

சூலம், வாள், சக்கரம், தோட்டி, தோமரம், வேல், கப்பணம் என்பன படைக்கலங்கள். காலவேல் - காலனைப் போலும் வேல். ஆலம் – விடம். பாலம் - மழு. பாலம் தரித்தவன் - மழுப்படையுடையவனான சிவபெருமான். காவலரக்கியரை விடமே திரண்டு உருவெடுத்தாலொத்த மேனியர் என்ற பின்னும் அவரை, அவ்விடத்தை உண்டொழித்த சிவபெருமானும் அஞ்சும்படி வன்மை வாய்ந்தவர் என்று கவி கூறியது அவர் திறம் மேலும் விளக்கிய வாறு. (58)

388. கரிபரி வேங்கைமாக் கரடி யாளிபேய்
அரிநரி நாயென வணிமு கத்தினர்
வெரிநுறு முகத்தினர் விழிகண் மூன்றினர்
புரிதரு கொடுமையர் புகையும் வாயினர்.

கரி, பரி, வேங்கைமாக் கரடி, யாளி, பேய்,
அரி, நரி, நாய் என அணி முகத்தினர்:
வெரிந் உறு முகத்தினர்: விழிகண் மூன்றினர்:
புரிதரு கொடுமையர் : புகையும் வாயினர்.

கரி - யானை. பரி - குதிரை. வேங்கைமா - புலி. அரி - சிங்கம். அணி - பூண்ட. வெரிந் - முதுகு. (59)

389. எண்ணினுக் களவிட லரிய வீட்டினர்
கண்ணினுக் களவிட லரிய காட்சியர்
பெண்ணெனப் பெயர்கொடு திரியும் பெற்றியர்
துண்ணெனத் துயிலுணர்ந் தெழுந்து சுற்றினர்.

எண்ணினுக்கு அளவிடல் அரிய ஈட்டினர்,
கண்ணினுக்கு அளவிடல் அரிய காட்சியர்,
பெண் எனப் பெயர்கொடு திரியும் பெற்றியர்,
துண் எனத் துயில் உணர்ந்து, எழுந்து சுற்றினர்.

எண்ணினுக்கு - எண்ணினால்: உருபுமயக்கம். எண் - மனம். ஈடு - வலிமை. கண்ணினுக்கு — கண்களால். காட்சி - தோற்றம். துயில் உணர்ந்து — உறக்கம் நீங்கி. 384ஆம் பாடலில் காவலரக்கியர் 'எவ்வயின் மருங்கினும் எழுந்து வீங்கினர்' என்றதனையே பின் 385 முதல் 389 முடியவுள்ள செய்யுட்களால் விரித்து விளக்கியவாறு காண்க. (60)

### பிராட்டி வருந்தலும் அநுமன் அணுகலும்

**390.** ஆயிடை யுரையவிந் தழகன் றேவியும்
தீயனை யவர்முகம் நோக்கித் தேம்பினாள்
நாயகன் றூதனும் விரைவி னண்ணினான்
ஓய்வில னுயர்மரப் பணையி னும்பரான்.

ஆயிடை, உரை அவிந்து, அழகன் தேவியும்
தீஅனையவர்முகம் நோக்கித் தேம்பினாள்:
நாயகன் தூதனும் விரைவின் நண்ணினான்,
ஓய்விலன், உயர்மரப் பணையின் உம்பரான்.

ஆயிடை அழகன் தேவியும் உரை அவிந்து தீயனையவர் முகம் நோக்கித் தேம்பினாள் என்க. ஆயிடை - அப்பொழுது. அழகன், நாயகன் என்பவை இங்கே இராமபிரானைச் சுட்டி நின்றன. உரை அவிந்து - பேச்சற்று. தீ அனையவர் - நெருப்புப்போற் கொடியோராகிய காவலரக்கியருடைய. தேம்பினாள் - வருந்தினாள். ஓய்விலனாகிய நாயகன் தூதனும் என்க. நண்ணினான் - நண்ணி: முற்றெச்சம். உயர் மரப்பணையின் உம்பரானாகி என எச்சமாக்கி, அடுத்த 391-ஆம் பாட்டில் நோக்கினான் என்பதனோடு முடிக்க. பணையின் உம்பரான் - கிளையின் மேலேறியவனாகி. (61)

### அநுமன் சிந்தனை

**391.** அரக்கிய ரயின்முத லேந்து மங்கையர்
நெருக்கிய குழுவினர் துயிலு நீங்கினர்
இருக்குநர் மற்றிதற் கேது வென்னெனப்
பொருக்கென வவரிடைப் பொருந்த நோக்கினான்.

'அரக்கியர், அயில் முதல் ஏந்தும் அங்கையர்,
நெருக்கிய குழுவினர், துயிலும் நீங்கினர்,
இருக்குநர்: மற்று இதற்கு, ஏது என்?' எனப்
பொருக்கென அவரிடைப் பொருந்த நோக்கினான்,

அரக்கியர் துயிலும் நீங்கினர்; அயில் முதல் ஏந்தும் அங்கையர் நெருக்கிய குழுவினர் இருக்குநர் என இயைக்க. நீங்கினர், அங்கையர், குழுவினர் என்பவை முற்றெச்சம். மற்று:அசை. பொருக்கென - விரைந்து. (62)

## அநுமன் பிராட்டியைக் காண்டல்

**392.** விரிமழைக் குலங்கிழித் தொளிரு மின்னெனக்
கருநிறத் தரக்கியர் குழுவிற் கண்டனன்
குருநிறத் தொருதனிக் கொண்ட லூழியான்
இருநிறத் துற்றவெற் கியைந்த காந்தத்தை.

விரி மழைக்குலம் கிழித்து ஒளிரும் மின் எனக்
கருநிறத்து அரக்கியர் குழுவில் கண்டனன்,
குருநிறத்து ஒரு தனிக் கொண்டல் ஊழியான்
இருநிறத்து உற்ற எற்கு இயைந்த காந்தத்தை !

ஊழியான் இருநிறத்து உற்ற எற்கு இயைந்த காந்தத்தை, கருநிறத்து அரக்கியர் குழுவில், மழைக்குலம் கிழித்து ஒளிரும் மின்னென அநுமன் கண்டனன் : என்க. குரு நிறத்து - ஒளியும் நிறமும் வாய்ந்த. கொண்டல் (ஆகிய) ஊழியான் என்க. என்றது இராமபிரானை இருநிறத்து - பெரிய மார்பின்கண். உற்ற - பொருந்திய. எற்கு - ஒளிக்கு. காந்தம் - ஒருவகை மணி. மழைக்குலம் - மேகக் கூட்டம். ஒளிரும் - விளங்குகின்ற. (63)

## பிராட்டியேயென்று அநுமன் துணிதல் 393—395

**393.** கடக்கரு மரக்கியர் காவற் சுற்றுளாள்
மடக்கொடி சீதையா மாத ரேகொலாம்
கடற்றுணை நெடியதன் கண்ணி னீர்ப்பெருந்
தடத்திடை யிருந்ததோ ரன்னத் தன்மையாள்.

‘கடக்க அரும் அரக்கியர் காவல் சுற்றுளாள் !
மடக்கொடி சீதையாம் மாதரேகொலாம் ?
கடல்துணை நெடிய தன் கண்ணின் நீர்ப் பெரும்
தடத்திடை இருந்தது ஓர் அன்னத் தன்மையாள் !’

அரக்கியர் காவற் சுற்றுளாள், கண்ணினீர்ப் பெருந்தடத்திடை யிருந்ததோர் அன்னத்தன்மையாள், சீதையாம் மாதரே ஆம் என முடிக்க. கடக்கரும்......சுற்றுளாள் – கடத்தற்கரிய அரக்கியராகிய காவல் மதிலுள் இருப்பவள். கடற்றுணை – கடலளவு. கொல் : அசை. அரக்கியர் காவலுள் அழுதுகொண்டிருக்கும் நிலை இவள் பிராட்டியே என்று அநுமன் துணிதற்கு ஏதுவாகும். (64)

**394.** எள்ளரு முருவினல் லிலக்க ணங்களும்
வள்ளறன் னுரையொடு மாறு கொண்டில
கள்ளவா ளரக்கனக் கமலக் கண்ணனுர்
உள்ளுறை யுயிரினை யொளித்து வைத்தவா.

'எள் அரும் உருவின் நல் இலக்கணங்களும்
வள்ளல்தன் உரையொடும் மாறு கொண்டில!
கள்ள வாள் அரக்கன், அக் கமலக்கண்ணனுர்
உள் உறை உயிரினை, ஒளித்துவைத்தவா!'

எள் அரும் உருவின் நல் இலக்கணங்களும் - பழிப்பில்லாத உருவின் நல்ல இலக்கணங்களும். வள்ளல், கமலக்கண்ணுர் என்றது இராமபிரானை. தன் : அசை. உரை - பேச்சு. கமலக் கண்ணனுர் உள் உறை உயிர் என்றது சீதாபிராட்டியை. ஒளித்து வைத்தவாறு என்பது ஈறு கெட்டு ஒளித்துவைத்தவா என நின்றது. கள்ளவாளரக்கன் அக்கமலக் கண்ணனுர் உள்ளுறை உயிரினை ஒளித்து வைத்தவா என் ! என்று ஒரு சொற்கூட்டி முடிக்க. (65)

**395.** மூவகை யுலகையு முறையி னீக்கிய
பாவிதன் னுயிர்கொள்வா னிழைத்த பண்பிதால்
ஆவதே யரவணைத் துயிலி னீங்கிய
தேவனே யவனிவள் கமலச் செல்வியே.

'மூவகை உலகையும் முறையின் நீக்கிய
பாவி, தன் உயிர் கொள்வான், இழைத்த பண்பு இதால்!
ஆவதே ? அரவணைத் துயிலின் நீங்கிய
தேவனே அவன்! இவள் கமலச் செல்வியே!'

இது - (பிராட்டியை ஒளித்து வைத்த) இச்செயல். முறையின் நீக்கிய - முறையினின்று விலகச் செய்த. பாவியென்றது, இரா

வணை. பாவி உயிர் கொள்வான் இழைத்த பண்பு - பாவி(யாகிய இராவணன்) உயிர்கொண்டு வாழ்தற்கு இழைத்த செயலின் தன்மையாம். ஆல் : அசை. ஆவதே - அது நடக்குமா? (நடவாது என்றபடி). இனி, பாவியினுடைய உயிரைக் கொள்ளும்படி விதி செய்த செயலாகும். ஆவதே - அது நடக்கக்கூடியதே எனினும் ஆம். இப்பொருட்கு விதியென ஒரு சொல் வருவித்துரைக்க. இன்னும் 'அரக்கன் கமலக் கண்ணனுர் உயிரினை ஒளித்து வைத்தவா என்!' என்று முன்பாட்டில் அதிசயமுற்ற அநுமன், (இங்கு) அவன் ஒளித்துவைக்கவில்லை; இது பாவியின் உயிரைக் கொள்ளப் பிராட்டி மேற்கொண்ட செயல்; அது பொருந்துவதே! என உரைத்தான் எனினும் அமையும். அவன், அரவணைத் துயிலின் நீங்கிய தேவனே! இவள், கமலச் செல்வியே! என இயைக்க. (66)

## அநுமன் மகிழ்தல்

**396.** வீடின தன்றறன் யானும் வீகலேன்
தேடினன் கண்டனன் றேவி யேயெனு
ஆடினன் பாடின னண்டு மீண்டும்பாய்ந்
தோடின னுலாவின னுவகைத் தேனுண்டான்.

'வீடினது அன்று அறன்! யானும் வீகலேன்!
தேடினன் கண்டனன் தேவியே!' எனு,
ஆடினன், பாடினன், ஆண்டும் ஈண்டும் பாய்ந்து
ஓடினன், உலாவினன், உவகைத் தேன் உண்டான்.

அறன் வீடினதன்று என்க. வீடுதல் - அழிதல். வீகலேன் - இறக்கமாட்டேன். உவகைத்தேன் - மகிழ்ச்சியாகிய தேன். உவகைத்தேனுண்டானுகி ஆடினன் பாடினன் ஆண்டும் ஈண்டும் பாய்ந்து ஓடினன் உலாவினன் என்க. அநுமன் அசோகவனத்துட் புகுங்கால் 'இங்கே தேடிப் பிராட்டியைக் காண்பெனேல் என் சிறுமை தீரும். கண்டிலேனென்னில் வீடுவேன்' என்று தேடப் புக்குக் கண்டனனுதலின், யானும் வீகலேன் என்ருன். (67)

## பிராட்டியின் தூய்மைகண்டு அநுமன் வியந்து பேசுதல் 397—405

**397.** மாசுண்ட மணியனுள் வயங்கு வெங்கதிர்த்
தேசுண்ட திங்களு மென்னத் தேய்ந்துளாள்

காசுண்ட கூந்தலாள் கற்புங் காதலும்
ஏசுண்ட தில்லையா லறத்துக் கீறுண்டோ.

'மாசு உண்ட மணி அனாள், வயங்கு வெம் கதிர்த்
தேசு உண்ட திங்களும் என்னத் தேய்ந்துளாள் !
காசு உண்ட கூந்தலாள் கற்பும் காதலும்
ஏசுண்டதில்லையால் ! அறத்துக்கு ஈறு உண்டோ ?'

மாசு உண்ட மணி அனாள் - அழுக்குப் படிந்த இரத்தினத்தை ஒத்தவளாகிய சீதாபிராட்டி. வயங்கு - விளங்குகிற. வெங்கதிர்த் தேசு உண்ட திங்களும் என்ன - வெம்மையான கிரணங்களையுடைய சூரியன் ஒளியால் சூழப்பட்ட சந்திரனும் ஒப்பென்று சொல்லும்படி. தேய்ந்துளாளாதலால் என ஏதுவாக்குக. காசு உண்ட கூந்தலாள்- அழுக்குப் படிந்த கூந்தலையுடைய அப்பிராட்டியின். காதல் - இராம னிடங் கொண்ட அன்பு. ஏசுண்டதில்லை - பழிப்புண்டதில்லை. காசுண்ட கூந்தலாள் என்பது அவள் என்னும் சுட்டு மாத்திரையாய் நின்றது. சீதாபிராட்டியின் கற்பும் காதலும் ஏசுண்டதில்லை; ஆதலால் அறம் அழியாததாயிற்று என்றவாறு. (68)

**398.** புனைகழ லிராகவன் பொற்பு யத்தையோ
வனிதையர் திலகத்தின் மனத்தின் மாண்பையோ
வனைகழ லரசரின் வண்மை மிக்கிடும்
சனகர்தங் குலத்தையோ யாதைச் சாற்றுகேன்.

'புனைகழல் இராகவன் பொன் புயத்தையோ ?
வனிதையர் திலகத்தின் மனத்தின் மாண்பையோ ?
வனைகழல் அரசரின் வண்மை மிக்கிடும்
சனகர்தம் குலத்தையோ? யாதைச் சாற்றுகேன் ?'

வனிதையர் திலகம் என்றது பிராட்டியை. ஏனைய வெளிப் படை. (69)

**399.** தேவரும் பிழைத்திலர் தெய்வ வேதியர்
ஏவரும் பிழைத்தில ரறமு மீறின்றல்
யாவதிங் கினிச்செய லரிய தெம்பிராற்
காவவென் னடிமையும் பிழைப்பின் றுமரோ.

'தேவரும் பிழைத்திலர்! தெய்வ வேதியர்
ஏவரும் பிழைத்திலர் அறமும் ஈறு இன்றால்?
யாவது இங்கு இனிச் செயல் அரியது எம்பிராற்கு?
ஆவ என் அடிமையும் பிழைப்பு இன்றாம் அரோ!'

தேவரும் பிழைத்திலர்; வேதியர் ஏவரும் பிழைத்திலர்; அறமும் ஈறின்று; ஆவ! எம்பிராற்கு என் அடிமையும் பிழைப் பின்றாம்! இங்கு இனி (எனக்கு)ச் செயலரியது யாவது? என முடிக்க. எவரும் என்பது எதுகை நோக்கி ஏவரும் என நீண்டது. ஆவ: அதிசயக் குறிப்பு. ஆல், அரோ என்பவை அசை. (70)

400. கேழிலா ணிறையிறை கீண்ட தாமெனின்
ஆழியான் முனிவெனு மாழி மீக்கொள
ஊழியி னிறுதிவந் துறுமென் றுன்னினேன்
வாழிய வுலகினி வரம்பி ஞளெலாம்.

'கேழிலாள் நிறை இறை கீண்டதாம் எனின்,
ஆழியான் முனிவு எனும் ஆழி மீக்கொள
ஊழியின் இறுதி வந்து உறும்! என்று உன்னினேன்:
வாழிய! உலகு இனி வரம்பில் நாள் எலாம்!'

கேழ் இலாள் நிறை - ஒப்பில்லாதவளாகிய பிராட்டியின் கற்பு. இறை - சிறிது. கீண்டதாம் எனின் - சிதைவுறுமாயின். ஆழியான் என்றது இராமபிரானை; (ஆணையாகிய) சக்கரத்தை யுடையான் அல்லது அறக்கடலாய் விளங்குபவன் என்பது பொருள். முனிவு எனும் ஆழி மீக்கொள - சினமாகிய கடல் பொங்க. இனி உலகு வரம்பு இல் நாளெலாம் வாழிய என்க. (71)

401. வெங்கனன் முழுகியும் புலன்கள் வீக்கியும்
நுங்குவ வருந்துவ நீக்கி நோற்பவர்
எங்குளர் குலத்தில்வந் தில்லின் மாண்புடை
நங்கையர் மனத்தவ நவிலற் பாலதோ.

'வெங்கனல் முழுகியும், புலன்கள் வீக்கியும்,
நுங்குவ, அருந்துவ, நீக்கி, நோற்பவர்,
எங்கு உளர்; குலத்தில் வந்து இல்லின் மாண்புடை
நங்கையர் மனத்தவம் நவிலற் பாலதோ?

குலத்தில் வந்து - நற்குடியிலே தோன்றி. இல்லின் மாண்பு உடை நங்கையர் - இல்லறத்துக்குரிய பண்பும் செயலும் உடைய கற்புடைப் பெண்களின். நவிலற்பாலதோ - சொல்லும் தரத்ததோ? (அளவிட்டுச் சொல்லும் தரத்ததன்று என்றவாறு). இந் நங்கையர் முன் நோற்பவர் எங்குளர் என்க. நங்கையரோடு ஒப்பு நோக்கு மிடத்துத் தவஞ் செய்வோர் இந்நங்கையரை அடுத்து எண்ணும் சிறப்பும் இலராவர் என்பது பொருள். வெம் கனல் மூழ்கியும் - கொடிய தீயிற் குளித்தும். புலன்கள் வீக்கியும் - பொறிகளை அடக்கியும். நுங்குவ - உண்ணுவனவற்றையும், அருந்துவ - பருகுவனவற்றையும். நோற்பவர் - தவஞ்செய்வோர். (72)

402. பேணநோற் றதுமனைப் பிறவி பெண்மைபோல்
நாணநோற் றுயர்ந்தது நங்கை தோன்றலால்
மாணநோற் றீண்டிவ ளிருந்த வாறெலாம்
காணநோற் றிலனவன் கமலக் கண்களால்.

'பேண நோற்றது மனைப் பிறவி! பெண்மைபோல்
நாணம் நோற்று உயர்ந்தது! நங்கை தோன்றலால்!
மாண நோற்று ஈண்டு இவள் இருந்த ஆறு எலாம்
காண நோற்றிலன் அவன் கமலக் கண்களால்!'

நங்கை தோன்றலால், மனைப் பிறவி பேண நோற்றது; நங்கை தோன்றலால் பெண்மைபோல் நாணம் நோற்று உயர்ந்தது; ஈண்டு இவள் மாண நோற்று இருந்தவாறெலாம் அவன் கமலக் கண்களால் காண நோற்றிலன் என்க. நங்கை - பெண்டிரிற் சிறந்தாள் : என்றது பிராட்டியை. மனைப்பிறவி - குடிப்பிறப்பு. நங்கை தோன்றலால் என்பது மீட்டும் கூட்டப்பட்டது. ஈண்டு - இங்கே, இலங்கையில். இவள் என்றது பிராட்டியை. அவன் என்றது இராமனை. (73)

403. முனிபவ ரரக்கியர் முறையி னீங்கினர்
இனியவ டானலா தியாரு மில்லையால்
தனிமையும் பெண்மையுந் தவமு மின்னதே
வனிதையர்க் காகநல் லறத்தின் மாண்பெலாம்.

'முனிபவர் அரக்கியர், முறையின் நீங்கினர்!
இனி அவள் தான் அலாது யாரும் இல்லையால்!
தனிமையும், பெண்மையும், தவமும், இன்னதே!
வனிதையர்க்கு ஆக நல் அறத்தின் மாண்பு எலாம்!'

அரக்கியர் முறையின் நீங்கினர் முனிபவர்; இனி அவள் அலாது யாரும் இல்லை எனக் கூட்டுக. நீங்கினர் : முற்றெச்சம். முறையின் நீங்கினர் முனிபவர் - முறைதவறிச் சீறுகின்றவர்களாயுள்ளார்கள். இனி - இந்நிலையேற்பட்டபின். அவள் அலாது யாரும் இல்லை - இவள் அச் சீதாபிராட்டியேயன்றி வேறு யாரும் இல்லை. ஆல் : அசை. 'தனிமையும்......இன்னதே' என்பது பிராட்டிநிலை கண்டு அநுமன் வியந்துரைத்தது. இன்னது - இத்தகைச் சிறப்புவாய்ந்தது. தனிமையும் இன்னது! பெண்மையும் இன்னது! தவமும் இன்னது! எனத் தனித்தனி கூட்டுக. உம்மைகள் உயர்வுசிறப்புணர்த்தி நின்றன. நல்லறத்தின் மாண்பெலாம் வனிதையர்க்கு ஆக என மாறிக்கூட்டுக. இங்கே நல்லறமென்றது பிராட்டி பக்கல் கண்ட சீரிய இல்லற வொழுக்கங்களை. இந்த நல்லறமாண்பனைத்தும் பிற மகளிர்க்கும் ஆகுக என்றவாறு. (74)

**404.** தருமமே காத்ததோ சனக னல்வினைக்
கருமமே காத்ததோ கற்பின் காவலோ
அருமையே யருமையே யாரி தாற்றுவார்
ஒருமையே யெம்மனோர்க் குரைக்கற் பாலதோ.

'தருமமே காத்ததோ? சனகன் நல்வினைக்
கருமமே காத்ததோ? கற்பின் காவலோ?
அருமையே! அருமையே! ஆர் இது ஆற்றுவார்?
ஒருமையே எம்மனோர்க்கு உரைக்கற்பாலதோ?'

இது அருமையே! அருமையே! இது ஆற்றுவார் ஆர்? இது ஒருமையே! எம்மனோர்க்கு இது உரைக்கற்பாலதோ? என இயைத்துரைக்க. இடைநிலைவிளக்காய்நின்ற இது என்பது முன்னும் பின்னும் கூட்டப்பட்டது. இது - (பிராட்டிமேற் கொண்ட) இத்தவம். அருமையே அருமையே என்பது உவகையின்கண் வந்த அடுக்கு. இது ஆற்றுவார் ஆர் - இத்தவம் செய்யவல்லார் பிறர் ஆர் உளர்? (பிறராற் செயற்கரிய தென்றவாறு). இது ஒருமையே - இத்தவம் ஒப்பற்றது. எம்மனோர்க்கு இது உரைக்கற்பாலதோ - எம்மைப் போன்றோர்க்கு இத்தவம் சொல்லத்தக்க எளிமையுடையதோ? (அன்று என்றவாறு). (75)

**405.** செல்வமோ வதுவவர் தீமை யோவிது
அல்லுநன் பகலுநின் றமர ராட்செய்வார்
ஒல்லுமோ வொருவர்க்கீ துறுகண் யாதினி
வெல்லுமோ தீவினை யறத்தை மெய்ம்மையால்.

செல்வமோ அது ! அவர் தீமையோ இது !
அல்லும் நன்பகலும் நின்று அமரர் ஆட்செய்வார் !
ஒல்லுமோ ஒருவர்க்கு ஈது ? உறுகண் யாது இனி ?
வெல்லுமோ தீவினை அறத்தை மெய்ம்மையால் ?

அமரர் அல்லும் நன் பகலும் நின்று ஆட்செய்வார்; அவர் செல்வமோ அது, அவர் தீமையோ இது; ஒருவர்க்கு ஈது ஒல்லுமோ ? இனி உறுகண் யாது ? தீவினை அறத்தை வெல்லுமோ? மெய்ம்மை : எனக்கூட்டி உரைக்க. அவர் என்பது முன்னும் பின்னும் கூட்டப்பட்டது. அல் - இரவு. நன்பகல் - நல்ல பகற்போது. அமரர் அல்லும் பகலும் நின்று ஆட்செய்வார் - தேவர்கள் இரவும் பகலும் காத்திருந்து (அவ்வரக்கருடைய) பணிகளைச் செய்வார்கள். அவர் செல்வமோ அது – அவ்வரக்கருடைய செல்வமோ அத்தகைச் சிறப்புவாய்ந்தது ! அவர் தீமையோ இது- அவ்வரக்கருடைய தீமையோ (பிராட்டியைப் பிரித்ததுபோன்ற) இத்தகைய கொடுமை வாய்ந்தது. ஈது ஒருவர்க்கு ஒல்லுமோ - இவ்வாறு தம் தகுதியொடு மாறுபட்ட தீச்செயல் ஒருவர்க்குத் தகுமா ? (தகாது). இனி உறுகண் யாது - இனி (எனக்கு)த் துன்பம் ஏது? தீவினை அறத்தை வெல்லுமோ - பாவம் நல் வினையை வெல்லுமோ ? (வெல்லாது). மெய்ம்மை - இது சத்தியம். ஆல் : அசை. (76)

### அசோகவனத்துள் இராவணன் தோன்றுதல்

**406.** என்றிவை யினையன வெண்ணி வண்ணவான்
பொன்றிணி நெடுமரப் பொதும்பர் புக்கவன்
நின்றன னவ்வழி நிகழ்ந்த தென்னெனில்
துன்றுபூஞ் சோலைவா யரக்கன் றோன்றினன்.

என்று, இவை இனையன எண்ணி, வண்ணவான்
பொன் திணி நெடுமரப் பொதும்பர் புக்கவன்,
நின்றனன் : அவ்வழி, நிகழ்ந்தது என் எனில்,
துன்று பூம் சோலைவாய் அரக்கன் தோன்றினன்.

வண்ண வான் பொன் திணி நெடுமரப் பொதும்பர் புக்கவன், என்று இவை இனையன எண்ணி நின்றனன் ; அவ்வழி, சோலை வாய் அரக்கன் தோன்றினன் என்று இயைக்க. வண்ணப் பொதும்பர், வான்பொதும்பர், பொன்திணி நெடுமரப் பொதும்பர் என்க. வண்ணம் - அழகு. வான் - பெருமை. பொன்திணி நெடு மரப் பொதும்பர் - பொன்னாற் செய்யப்பட்ட அடர்ந்த நீண்ட மரங்

களையுடைய சோலையின்கண். புக்கவன் - புகுந்தவனாகிய அநுமன். என்று - (முன் 397 முதல் 405 வரையுள்ள செய்யுட்களிற் கண்டவாறு தன்னுட்) கூறி. இவை இனையன - இவற்றையும் இவை போல்வன பிறவற்றையும். புக்கவன் எண்ணி நின்றனன் என முடிக்க. அவ்வழி - அப்பொழுது. துன்று பூஞ்சோலைவாய் - செறிந்த மலர்களையுடைய அசோக வனத்தில். அரக்கன் என்றது இங்கே இராவணனை. (77)

## இராவணன் அசோகவனத்துட் புகும்நிலை 407—425

**407.** ★ சிகரவண் குடுமி நெடுவரை யெவையு
மொருவழித் திரண்டன சிவண
மகரிகை வயிர குண்டல மலம்பு
திண்டிறற் றோள்புடை வயங்கச்
சகரநீர் வேலை தழுவிய கதிரிற்
றலைதொறுந் தலைதொறுந் தயங்கும்
வகையபன் மகுட மிளவெயி லெறிப்பக்
கங்குலும் பகல்பட வந்தான்.

சிகரவண் குடுமி நெடுவரை எவையும்
ஒருவழித் திரண்டன சிவண,
மகரிகை வயிர குண்டலம் அலம்பு
திண் திறல் தோள் புடை வயங்கச்
சகரநீர் வேலை தழுவிய கதிரில்,
தலைதொறும் தலைதொறும் தயங்கும்
வகைய பல் மகுடம் இளவெயில் எறிப்பக்
கங்குலும் பகல்பட வந்தான்.

தோள்' *நெடுவரை எவையும் ஒருவழித் திரண்டன சிவணப் புடை வயங்க, தலைதொறும் தலைதொறும் தயங்கும் வகைய பல் மகுடம் வேலை தழுவிய கதிரில் இளவெயில் எறிப்ப, கங்குலும் பகல்பட வந்தான் என இயைக்க. அரக்கன் வந்தான் என 406-ஆம் பாட்டிலிருந்து எழுவாய் வருவித்து முடிக்க. சிகரவண் குடுமி - சிகரமாகிய வளமுள்ள உச்சி. சிவண - ஒப்ப. புடை - இருபக்கமும். வயங்க - விளங்க. மகரிகை வயிரகுண்டலம் - சுறாமீன் வடிவமைய

---

*"ஆயிரம் குன்றம் சென்று தொக்கனைய அடல்புரை எழில்திகழ் திரள் தோள்" (திவ். பெரிய திருமொழி. 5. 7. 6); என்று வாணன்றோள் கூறப்பட்டதும் இங்கு நோக்கத்தகும்.

வயிரத்தாற் செய்யப்பட்ட குண்டலமென்னும் காதணி. அலம்பு – அசைகிற. தயங்கும் வகைய – விளங்குந்தன்மையுள்ள. சகர நீர் வேலை - சகரர்களால் தோண்டப்பட்ட நீரையுடைய கடல். கதிரில் - சூரியனைப்போல. கங்குல் – இரவு. (78)

408. உருப்பசி யுடைவாளேந்தின டொடர
மேனகை வெள்ளடை யுதவச்
செருப்பினைத் தாங்கித் திலோத்தமை செல்ல
வரம்பையர் குழாம்புடை சுற்றக்
கருப்புரச் சாந்துங் கலவையு மலருங்
கலந்துமிழ் பரிமள கந்தம்
மருப்புடைப் பொருப்பேர் மாதிரக் களிற்றின்
வரிக்கைவாய் மூக்கிடை மடுப்ப.

உருப்பசி உடைவாள் ஏந்தினள் தொடர,
மேனகை வெள்ளடை உதவச்
செருப்பினைத் தாங்கித் திலோத்தமை செல்ல,
அரம்பையர்குழாம் புடை சுற்றக்
கருப்புரச் சாந்தும் கலவையும் மலரும்
கலந்து உமிழ் பரிமள கந்தம்
மருப்புடைப் பொருப்பு ஏர் மாதிரக் களிற்றின்
வரிக்கைவாய் மூக்கிடை மடுப்ப.

வெள்ளடை - வெற்றிலை. வெள்ளடையென்றாரேனும், பாக்கு முதலியனவும் உபலக்கணத்தாற் கொள்ளப்படும். உமிழ் – வீசுகின்ற. பரிமள கந்தம் - மிக்க நறுமணமானது. மருப்புடைப் பொருப்பு ஏர் மாதிரக் களிற்றின் - கொம்புடைய மலைபோன்ற திசையானைகளின். வரிக்கைவாய் மூக்கிடை மடுப்ப – கீற்றுக்களையுடைய கையாக வாய்த்த மூக்கினிடத்துச் சேர. தொடர, உதவ, செல்ல, சுற்ற, மடுப்ப, ‘வந்தெய்துகின்றானை’ (426) என இயைக்க. பின்வரும் பாடல்களில் (409-425) உள்ள எச்சங்களும் ‘வந்தெய்துகின்றானை’ (426) என்பது கொண்டு முடியும். பின்னிரண்டடிகளால், இராவணன் அணிந்த சந்தனம் மாலை முதலியவற்றின் நறுமணம், திசை எங்கும் பரவித் திசைகளின் முடிவில் உள்ள யானைகளின் மூக்கிலும் நிறைந்தது என அந் நறுமணத்தின் மிகுதி கூறியவாறு. (79)

409. நானநெய் விளக்கு நாலிரு கோடி
நங்கைய ரங்கையா லெடுப்ப
மேனிவந் தெழுந்த மணியுடை யணியின்
விரிகதி ரிருளெலாம் விழுங்கக்
கான்முதற் றொடர்ந்த நூபுரஞ் சிலம்பக்
கிண்கிணி கலையொடுங் கலிப்பப்
பானிறத் தன்னக் குழாம்படர்ந் தென்னப்
பற்பல மங்கையர் படர.

நான நெய் விளக்கு நால் இரு கோடி
நங்கையர் அங்கையால் எடுப்ப,
மேல் நிவந்து எழுந்த மணியுடை அணியின்
விரி கதிர் இருள் எலாம் விழுங்கக்
கால் முதல் தொடர்ந்த நூபுரம் சிலம்பக்
கிண்கிணி கலையொடும் கலிப்பப்
பால் நிறத்து அன்னக் குழாம் படர்ந்தென்னப்
பற்பல மங்கையர் படர.

நான நெய் விளக்கு நாலிருகோடி நங்கையர் அங்கையால் எடுப்ப – வாசனையூட்டப்பட்ட நெய் பெய்த விளக்குக்களை, எண் கோணத்தினும் பெண்கள் (சிலர்) தம் அழகிய கைகளால் ஏந்த; கோடியினும் என உம்மை விரிக்க. 'நாலிருகோடி' என்பதனை நங்கையர்க்கு அடையாக்கி, எட்டுக்கோடி மகளிர் எனவும், எட்டு வரிசையான மகளிர் எனவும், எட்டு நூதன கன்னியர் எனவும், விளக்குக்கு அடையாக்கி, எட்டுக்கோடி விளக்கு எனவும், எட்டு மூலை (- மூக்கு) உள்ள விளக்கு எனவும் உரை விரிப்பாரும் உண்டு. மணியுடை அணியின் மேல் நிவந்து எழுந்த விரிகதிர் – (மகளிர் அணிந்த) மணிகளையுடைய (- மணிகள் அழுத்திச்செய்யப்பட்ட) அணிகலன்களினின்று மேல் உயர்ந்தெழுந்த பரவிய ஒளி. கால் முதல் தொடர்ந்த நூபுரம் சிலம்ப - காலினிடத்துப் பிணைந்துநின்ற சிலம்பு ஒலித்தலாலும். கிண்கிணி – சதங்கை. கலையொடும் கலிப்ப – மேகலையோடு ஒலித்தலாலும். அன்னக்குழாம் படர்ந்தென்ன – அன்னக்கூட்டம் நடந்தாற்போல. படர – சூழ்ந்து செல்ல. நங்கையர் விளக்கெடுப்ப மங்கையர் படர வந்தெய்துகின்றானை (426) என இயைக்க. (80)

410. அந்தரம் புகுந்த துண்டென முனிவுற்
றருந்துயி னீங்கின னாண்டைச்
சந்திர வதனத் தருந்ததி யிருந்த
தண்ணறுஞ் சோலையின் றனையோ
வந்ததிங் கியாதோ யாரொடும் போமோ
வென்றுதம் மனமறு குதலால்
இந்திரன் முதலோ ரிமைப்பிலா நாட்டத்
தெனைவரு முயிர்ப்பவிந் திருப்ப.

'அந்தரம் புகுந்தது உண்டு என முனிவுற்று
அரும் துயில் நீங்கினன் ஆண்டைச்
சந்திர வதனத்து அருந்ததி இருந்த
தண் நறும் சோலையின் தனையோ?
வந்தது இங்கு யாதோ? யாரொடும் போமோ?'
என்று தம் மனம் மறுகுதலால்,
இந்திரன் முதலோர் இமைப்பு இலா நாட்டத்து
எனைவரும் உயிர்ப்பு அவிந்து இருப்ப.

இமைப்பு இ(ல்)லா நாட்டத்து இந்திரன் முதலோர் எனைவரும், (இராவணன்) அருந்துயில் நீங்கி முனிவுற்றான் (ஆதலால்) அந்தரம் புகுந்ததுண்டு என, இங்கு வந்தது யாதோ? (இவன் முனிவு) ஆண்டைத் தண் நறுஞ் சோலையின் இருந்த சந்திரவதனத்து அருந்ததிதனையோ? (அன்றி) யாரொடும் போமோ என்று, தம் மனம் மறுகுதலால் உயிர்ப்பு அவிந்து இருப்ப: என இயைக்க. இமைப்பு இ(ல்)லா நாட்டத்து - இமையாத கண்களையுடைய. இந்திரன் முதலோர் எனைவரும் - இந்திரன் முதலிய தேவர் யாவரும். அந்தரம் - தீங்கு. இங்கு – இப்பொழுது. வந்தது - (இவற்கு) வந்த தீங்கு. ஆண்டை - அவ்விடம். சந்திரவதனத்து அருந்ததி தனையோ – (இராவணன் சீற்றம்) முழுமதிபோன்ற முகத்தையுடைய அருந்ததிபோல்வாளாகிய சீதாபிராட்டியளவேயோ? (அன்றி) யாரொடும் போமோ? - வேறு யாரைக் கெடுத்துத் தானும் ஒழியுமோ?; மறுகுதல் - கலங்குதல். உயிர்ப்பு அவிந்திருப்ப - மூச்சு ஒடுங்கியிருக்க. துயில் நீங்கி முனிவுற்றான் என்பது தொடங்கி, யாரொடும் போமோ என்பது வரை தேவர் நினைவு கூறியவாறு. இந்திரன் முதலோரெனைவரும் உயிர்ப்பவிந் திருப்ப வந்தெய்துகின்றானை (426) என முடிக்க. (81)

**411.** நீனிறக் குன்றி னெடிதுறத் தாழ்ந்த
நீத்தவெள் ளருவியி னிமிர்ந்த
பானிறப் பட்டின் மாலேயுத் தரியம்
பண்புறப் பசும்பொனு ரத்தின்
மானிற மணிக ளிடையுறப் பிறழ்ந்து
வருகதி ரிளவெயில் பொருவச்
சூனிறக் கொண்மூக் கிழித்திடை துடிக்கு
மின்னென மார்பினூ றுளங்க.

நீல் நிறக் குன்றின் நெடிது உறத் தாழ்ந்த
நீத்த வெள் அருவியின் நிமிர்ந்த
பால் நிறப் பட்டின் மாலே உத்தரியம்
பண்பு உறப் பசும்பொன் ஆரத்தின்
மால் நிற மணிகள் இடை உறப் பிறழ்ந்து
வருகதிர் இளவெயில் பொருவச்
சூல்நிறக் கொண்மூக் கிழித்து இடை துடிக்கும்
மின் என மார்பின் நூல் துளங்க.

நீல்நிற மார்பின் நிமிர்ந்த பால்நிறப் பட்டின் மாலே உத்தரியம், நீல் நிறக் குன்றின் நெடிதுறத் தாழ்ந்த நீத்த வெள்ளருவியின் பண்புறத் துளங்க(வும்), மார்பின் பசும்பொன் ஆரத்தின் மால்நிற மணிகளிடை உறப் பிறழ்ந்துவரு கதிர், நீல்நிறக் குன்றினிடையுறப் பிறழ்ந்துவரு கதிரிள வெயில் பொருவத் துளங்க(வும்,) மார்பின் நூல், நீல்நிறக் குன்றினிடை சூல் நிறக்கொண்மூக் கிழித்துத் துடிக்கும் மின் எனத் துளங்க(வும்), என இயைத்து, வந்தெய்து கின்ருனே (426) என்பதனேடு முடிக்க. பால் நிறப் பட்டின் மாலே உத்தரியம் - பால் போன்ற வெண்மை நிறமுடைய பட்டாகிய மாலே யாக அணியப்பட்ட மேலாடை, வெண்பட்டுத்தரியம் மாலே யுத்தரியம் என்க. பட்டின் என்பதனுள் இன் சாரியை. நீத்த வெள்ளருவி - பெருக்காகிய வெண்மை நிறமுள்ள அருவி. துளங்க - விளங்க மால்நிற மணிகளிடை உறப் பிறழ்ந்து வருகதிர் - சிறந்த இயல் புடைய இரத்தினங்களில் நின்று மிகவும் விளக்கத்தைச் செய்து கொண்டு வருகின்ற ஒளியானது. மால் நிறம் - சிறந்த இயல்பு. பிறழ்ந்து - விளங்கி. கதிர் - 1. ஒளி 2. சூரியன். நூல் - பூணூல். சூல் நிறக் கொண்மூ - கருவைத் தன் உடலின்கட் கொண்ட மேகம். இராவணனுடைய கரிய பெரிய மார்புக்கு நீல மலேயும், அம் மார்பில் நீண்டு தாழ்ந்த வெண்பட் டுத்தரியத்துக்குக் கரிய பெரிய மலேயி னின்று பெருக்கெடுத்திறங்கும் வெள்ளிய அருவியும், அவன் அணிந்த ஆரத்தில் மணிகளின் ஒளிபரவிய மார்பிற்குக் கதிரவ

னெளி பரவிய நீலக் குன்றமும், அம்மார்பில் விளங்கும் பூணூலுக்கு மேகத்தைக் கிழித்தெழும் மின்னுக் கொடியும் உவமை. 'பசும் பொன்னாரத்தின் மானிற மணிகளிடையுறப் பிறழ்ந்து வருகதிர் இளவெயில் பொருவ' என்பதனோடு, "தழுவா நின்ற கருங்கடன்மீ துதயகிரியிற் சுடர் தயங்க எழுவான் என்ன மின் இமைக்கும் ஆரம் திகழும் இயல்பிற்றாய்" (311) என்பதும் இங்கு நோக்கத்தகும். (82)

412. தோடொறுந் தொடர்ந்த மகரிகை வயிரக்
கிம்புரி வலயமாச் சுடர்கள்
நாடொறுந் தொடருங் கலிகெழு விசும்பி
னாளொடு கோ௱ளினை நக்கத்
தாடொறுந் தொடர்ந்த தழங்குபொற் கழலின்
றகையொளி நெடுநிலந் தடவக்
கேடொறுந்தொடர்ந்த முறுவல்வெண் ணிலவின்
முகமல ரிரவினுங் கிளர.

தோள்தொறும் தொடர்ந்த மகரிகை வயிரக்
கிம்புரி வலயமாச் சுடர்கள்
நாள்தொறும் தொடரும் கலி கெழு விசும்பின்
நாளொடு கோளினை நக்கத்
தாள்தொறும் தொடர்ந்த தழங்கு பொன் கழலின்
தகை ஒளி நெடு நிலம் தடவக்
கேள்தொறும் தொடர்ந்த முறுவல் வெண்ணிலவின்
முக மலர் இரவினும் கிளர.

தோள் தொறும் தொடர்ந்த - ஒவ்வொரு தோளிலும் பூணப் பட்டுள்ள. மகரிகை வயிரக் கிம்புரி வலய மாச்சுடர்கள் – சுறுமீன் வடிவமைய வயிர மணிகள் அழுத்திச் செய்யப்பட்ட பூணுகிய கேயூ ரத்தின் மிக்க ஒளிகள். நாள்தொறும் தொடரும் - ஒவ்வொரு நாளும் இடையறாது வருகின்ற. தொடரும் நாளொடு கோள் என்க. கலிகெழு - ஒலிமிக்க. நாள் - நாண் மீன் (-நட்சத்திரம்). கோள் - கிரகங்கள். நக்க – தாழ்த்த ('மானக்க நோக்கின் மடவார்' சீவக. 1866). இராவணனுடைய வயிர வாகுவலயத்திலிருந்து எழுந்த ஒளியானது, இருளை ஒழித்தலால் விசும்பில் இடையறாது செல்லும் நாளும் கோளும் ஆகியவற்றின் ஒளியைத் தாழச் செய்ய என்ற வாறு. தழங்கு - ஒலிக்கின்றன. தாள்தொறும் அணிந்த வீரக் கழலின் ஒளி, நீண்ட பூமி முழுதும் சென்று தேடி இருளை ஒழிக்க என்க.

கேள் - சுற்றம். கேள்தொறும் - சுற்றத்தார் ஒவ்வொருவரிடமும். தொடர்ந்த – சென்ற. முறுவல் வெண்ணிலவின் - புன்சிரிப்பாகிய வெள்ளிய நிலவினால். முகமலர் இரவினும் கிளர - இராவணனுடைய முகமாகிய தாமரைமலர் இராப்போதினும் மலர்ந்து விளங்க. இரவில் தாமரை மலர்ந்ததாகக் கூறியது கவி சாதுரியம். (83)

**413.** தன்னிறத் தோடு மாறுகொண் டிமைக்கு
நீவியந் தழைபட வுடுத்த
பொன்னிறத் தூசு கருவரை மருங்கிற்
றழுவிய புதுவெயில் பொருவ
மின்னிறக் கதிரிற் செற்றிய பசும்பொன்
விரற்றலை யவிரொளிக் காசின்
கன்னிறக் கற்றை நெடுநிழல் பூத்த
கற்பக முழுவனங் கவின.

தன்நிறத்தோடு மாறுகொண்டு இமைக்கும்
நீவி அம் தழைபட உடுத்த
பொன் நிறத் தூசு, கருவரை மருங்கில்
தழுவிய புதுவெயில் பொருவ,
மின்நிறக் கதிரில் செற்றிய பசும்பொன்
விரல்தலை அவிர் ஒளிக் காசின்
கல் நிறக்கற்றை, நெடுநிழல் பூத்த
கற்பக முழுவனம் கவின.

தன் நிறத்தோடு மாறுகொண்டிமைக்கும் தூசு, நீவி அம் தழைபட உடுத்த தூசு, பொன்நிறத் தூசு என்க. தன் நிறத்தோடு - இராவணனுடலின் (கரிய) நிறத்தோடு. மாறு கொண்டு இமைக்கும்- மாறுபட்டு விளங்குகின்ற. நீவி அம் தழைபட உடுத்த - (மடித்து விரல்களால் அழுந்தத்) தடவி அழகு மிக உடுத்துள்ள; பொன்நிறத் தூசு - பொன்னின் நிறமுடைய ஆடை (பீதாம்பரம்). கருவரை மருங்கில் தழுவிய புதுவெயில் பொருவ - கரிய மலையின் பக்கம் (தாழ்வரையில்) இசைந்த. இளவெயிலை ஒப்ப. இராவணன் கரிய பெரிய தன் இடையில் உடுத்த பீதாம்பரம், நீலமலையின் தாழ்வரையில் பரவிய இளவெயிலை ஒத்து விளங்க என்றவாறு. தன் விரல் தலை பசும்பொன்(னில்) மின்நிறக் கதிரில் செற்றிய அவிர் ஒளிக்காசின் கல்நிறக் கற்றை - இராவணனுடைய கைவிரல்களில் (அணியப் பட்ட) பசிய பொன்னாலாகிய அணியில் மின்னலின் ஒளியுடைய கிரணங்கள் உள்ளனவாகப் பதிக்கப்பட்ட மிக்க விளக்கமுடைய

இரத்தினக் கற்களின் ஒளித்தொகுதி. நெடுநிழல்பூத்த கற்பகமுழு வனம் கவின - மிக்க ஒளியொடு பூத்த நிரம்பிய கற்பக வனம்போல் விளங்க. பொன்னணிகலன்களும் பொன்னுடையும் ஆகியவற்றின் ஒளிபரவ நின்ற இராவணன் மேனி, பொன்மயமான ஒரு கற்பகச் சோலையாகவும், அவனுடைய தோள்கள், கற்பகத்தின் பெருங்கிளை களாகவும், அவன் கைவிரல்கள் அப்பெருங் கிளைகளிற் கிளைத்த சிறு கிளைகளாகவும் ,அவ்விரல்களில் அணிந்த அணிகலன்களிற் பதித்த மணிகளின் ஒளித்தொகுதி அக்கிளைகளிற் பூத்த பூக்களாகவும் கொள்ள நின்றன. தோள்களுக்குக் கற்பகக்காவை உவமை கூறுதல் மரபென்பது, 'கற்பகக் காவன்ன நற்பல தோளர்க்கு' (6-6-6) என்னும் திருவாய்மொழியானும் விளங்கும். (84)

414. சன்னவீ ரத்த கோவைவெண் டரள
மூழியி னிறுதியிற் றனித்த
பொன்னெடு வரையிற் றொத்திய கோளு
நாளுமொத் திடையிடை பொலிய
மின்னொளிர் மௌலி யுதயமால் வரையின்
மீப்படர் வெங்கதிர்ச் செல்வர்
பன்னிரு வரினு மிருவருந் தவிர
வுதித்ததோர் படியொளி பரப்ப.

சன்னவீரத்த கோவை வெண் தரளம்
ஊழியின் இறுதியில் தனித்த
பொன் நெடு வரையில் தொத்திய கோளும்
நாளும் ஒத்து இடையிடை பொலிய,
மின் ஒளிர் மௌலி உதய மால்வரையின்
மீப்படர் வெம் கதிர்ச் செல்வர்
பன்னிருவரினும் இருவரும் தவிர
உதித்தது ஓர்படி ஒளிபரப்ப.

சன்னவீரத்த கோவை வெண்தரளம் பொலிய மௌலி ஒளி பரப்ப : வந்தெய்துகின்றானை (426) எனக் கூட்டுக. சன்ன வீரத்த (இராவணன் அணிந்துள்ள) சன்னவீரம் என்கின்ற வெற்றி மாலையில் உள்ளனவாகிய மணிகளும். கோவை வெண் தரளம் - ஆரங்களில் உள்ள வெள்ளிய முத்துக்களும். ஊழியின் இறுதியில் - யுகாந்தகாலத்தில். தனித்த - மற்றவை யெல்லாம் அழியத் தான் மட்டும் அழியாதுநின்ற. நெடும் பொன் வரையில் – நீண்ட பொன் மலையாகிய மேருவின்கண். தொத்திய - ஒட்டிக்கொண்டிருக்கிற. கோளும் நாளும் ஒத்து – கிரகங்களும் நாண்மீன்களும் போன்று.

உதயமால்வரையின் மீப்படர் - உதயமாகிய பெரிய மலையின் மீது பரவித் தோன்றுகின்ற. வெம் கதிர்ச்செல்வர் பன்னிருவரினும் - வெவ்விய கிரணங்களாகிய செல்வத்தையுடைய ஆதித்தர் பன்னிருவருள்ளும். இருவரும் தவிர உதித்ததோர்படி - இருவர் நீங்க (மற்றைப் பதின்மரும்) சேரவுதித்த தன்மையில். அணிகலங்களின் பொன்னொளி பரவநின்ற இராவணன் மார்புக்குப் பொன்மலையும், அம்மார்பில் அணிந்த சன்னவீரம் என்னும் வெற்றிமாலையில் உள்ள மணிகளுக்கும் முத்துமாலையில் உள்ள முத்துக்களுக்கும் முறையே ஊழியிறுதியில் பொன்மலையில் தொத்திநின்ற கோள்களும் நாண் மீன்களும், இராவணன் தலைகளுக்கு(த் தனித்தனி) உதயகிரியும், அத் தலைகளில் அணிந்த முடிகளுக்கு உதயகிரியில் தோன்றும் ஆதித்தர் பதின்மரும் உவமையாகும். இரண்டாம் அடியில், 'பொன்னெடு வரையிற் ருெத்திய' என்று கொண்ட பாடமே பொருந்துவதென்பது, யுத்தகாண்டத்துப் பிரமாத்திரப் படலத்து 117-ஆம் செய்யுளில், 'ஒத்தக் கடையுக முற்றுழி யுறுகால் பொர வுடுமீன், தொத்தப் பொலி கனகக்கிரி' என ஆசிரியர் கூறிச் செல்லுதலாலும் விளங்கும். (85)

415. பயிலெயிற் றிரட்டைப் பணைமருப் பொடியப்
படியினிற் பரிபவஞ் சுமந்த
மயிலடித் தொழுக்கி னனையமா மதத்த
மாதிரக் காவன்மால் யானை
கயிலையிற் றிரண்ட முரண்டொடர் தடந்தோட்
கனகன துயர்வரங் கடந்த
அயிலெயிற் றரியின் சுவடுதன் கரத்தா
லளைந்தமாக் கரியினின் றஞ்ச.

பயில் எயிற்று இரட்டைப் பணை மருப்பு ஒடியப்
படியினில் பரிபவம் சுமந்த
மயில் அடித்து ஒழுக்கின் அனைய மா மதத்த
மாதிரக் காவல் மால் யானை
கயிலையில் திரண்ட முரண் தொடர் தடம் தோள்
கனகனது உயர் வரம் கடந்த
அயில் எயிற்று அரியின் சுவடு தன் கரத்தால்
அளைந்த மாக் கரியின் நின்று அஞ்ச.

மயிலடித்து ஒழுக்கின் அனைய மாமதத்த மாதிரக் காவல் மால் யானை - மயிலின் காலிலுள்ள விரலின் செலவையொத்த (மூன்றுகவுள்ள) சிறந்த மதப்பெருக்குடைய திசைகாவல் மேற்கொண்ட

பெரிய யானைகள். பயில் எயிற்று இரட்டைப் பணை மருப்பு ஒடிய - பொருந்திய பற்களாகிய இரட்டையாகவுள்ள பருத்த கொம்புகள் ஒடிதலால். படியினில் பரிபவம் சுமந்த - பூமியின்கண் மிக்க அவமானத்தைத் தாங்கியவையாய். கயிலையில் திரண்டதோள், முரண் தொடர்தோள், தடந்தோள் என்க. கனகன் - இரணியன். கனகனது உயர் வரம் கடந்த - இரணியன் வரபலங்களையெல்லாம் கடந்த; வரம் கடந்த அரி என்க. அயில் எயிற்று - கூரிய பற்களை யுடைய. அரியென்றது நரசிங்கப் பெருமானை. சுவடு - கால்தடம். கரத்தால் - கையால். மாதிரக் காவல் மால்யானை (முன்பே) மருப் பொடிந்தமையால் பரிபவஞ் சுமந்தவாகி, இப்பொழுது இராவணன் புறப்பாடு கண்டு, இரணியனை யிடந்த நரசிங்கப் பெருமான் காற் சுவட்டைக் கையால் அளைந்த யானைபோன்று அஞ்ச என்க. (86)

**416.** அங்கயற் கருங்க ணியக்கியர் துயக்கி
லரம்பையர் விஞ்சையர்க் கமைந்த
நங்கையர் நாக மடந்தையர் சித்த
நாரிய ரரக்கியர் முதலாம்
குங்குமக் கொம்மைக் குவிமுலைக் கனிவாய்க்
கோகிலந் துயர்ந்தமென் குதலை
மங்கைய ரீட்ட மால்வரை தழீஇய
மஞ்ஞையங் குழுவென வயங்க.

அம் கயல் கரும் கண் இயக்கியர், துயக்கு இல்
அரம்பையர் விஞ்சையர்க்கு அமைந்த
நங்கையர், நாக மடந்தையர், சித்த
நாரியர், அரக்கியர் முதலாம்
குங்குமக் கொம்மைக் குவிமுலைக் கனிவாய்க்
கோகிலம் துயர்ந்த மென் குதலை
மங்கையர் ஈட்டம் மால்வரை தழீஇய
மஞ்ஞையங் குழு என வயங்க.

மங்கையர் ஈட்டம் மால்வரை தழீஇய மஞ்ஞையங் குழுவென வயங்க, 'வந்தெய்துகின்றனை' என இயையும். துயக்கு இல் - குற்றமில்லாத; நாரியர் - பெண்கள். அமைந்த - பொருந்திய. கொம்மை - பருமை. கோகிலம் - குயில். துயர்ந்த - வருந்திய. ஈட்டம் - கூட்டம். மால்வரை - பெரிய மலை. தழீஇய - தழுவிய. மஞ்ஞை - மயில். வயங்க - விளங்க. (87)

417. தொளையுறு புழைவேய் தூங்கிசைக் கானந்
துயலுரு தொருநிலை தொடர
இளையவர் மிடறு மின்னிலை யியக்கக்
கின்னர முறைநிறுத் தெடுத்த
கிளையுறு பாடல் சில்லரிப் பாண்டி
றழுவிய முழவொடுங் கெழுமி
அளையுறை யரவு மமுதுவா யுகுப்ப
வண்டமும் வையமு மளப்ப.

தொளை உறு புழை வேய் தூங்கு இசைக் கானம்
துயல் உருது ஒருநிலை தொடர,
இளையவர் மிடறும் இன்னிலை இயக்கக்
கின்னரம் முறை நிறுத்து எடுத்த
கிளை உறு பாடல், சில்லரிப் பாண்டில்
தழுவிய முழவொடும் கெழுமி
அளை உறை அரவும் அமுது வாய் உகுப்ப,
அண்டமும் வையமும் அளப்ப.

புழை வேய்த் தொளையுறு தூங்கு இசை - உள்ளீடற்ற (-குழலாயிருக்கிற) மூங்கிலின்கண் இடப்பட்ட தொளையினின்று மெத்தென எழும் இசையானது. கானம் துயல் உருது - இசைப்பாட்டுக்குரிய இயல்பிற் பிறழாமல்; ஒருநிலை தொடர - ஒருபடியாய்த் தொடுத்தெழ; இளையவர் மிடறும் இன்னிலை இயக்க - இளமகளிருடைய கண்டமும் இனியநிலையில் (குழலுக்கிசைய) ஒலியெழுப்ப. கின்னரம்-யாழின்கண். முறைநிறுத்து எடுத்த - இலக்கணத்தை ஆராய்ந்து எழுப்பிய. கிளை உறு பாடல் - எழுவகை யொலிகளோடு கூடிய பாட்டு. சில்லரிப்பாண்டில் தழுவிய முழவொடும் கெழுமி - சில்லரிப பாண்டில் என்னும் தாளக் கருவியோடு கூடிய முழவினேடியைந்து; அளை உறை அரவும் அமுது வாய் உகுப்ப - புற்றில் வாழும் பாம்பும் விடத்தைக் கக்கும் தன் வாய்வழி அமுது கக்க; வேய்தூங்கு இசை ஒருநிலை தொடர, இளையவர் மிடறும் இன்னிலை யியக்க, கின்னரமுறை நிறுத்தெடுத்த கிளையுறு பாட்டிசை, சில்லரிப் பாண்டில் முழவு என்பவற்றினின் றெழுந்த தாளவொலியொடுகூடி அண்டமும் வையமும் அளப்ப, வந்தெய்துகின்றனை என இயையும். (88)

418. அன்னபூஞ் சதுக்கஞ் சாமரை யுக்க
மாதியாம் வரிசையி னமைந்த
உன்னரும் பொன்னின் மணியினிற் புனைந்த
விழைக்குல மழைக்கருங் கடைக்கண்
மின்னிடைச் செவ்வாய்க் குவிமுலைப்
பணைத்தோள் வீங்குதே ரல்குலார்தாங்கி
நன்னிறக் காரின் வரவுகண் டுவக்கு
நாடக மயிலென நடப்ப.

அன்ன பூம் சதுக்கம், சாமரை, உக்கம்,
ஆதியாம் வரிசையின் அமைந்த
உன்னரும் பொன்னின் மணியினில் புனைந்த
இழைக்குலம் மழைக் கரும் கடைக்கண்
மின் இடைச் செவ்வாய்க் குவி முலைப்
பணைத்தோள் வீங்கு தேர் அல்குலார் தாங்கி,
நல் நிறக் காரின் வரவு கண்டு உவக்கும்
நாடக மயில் என, நடப்ப.

உன்னரும் பொன்னின் மணியினில் புனைந்த இழைக்குலம் - நினைக்கத்தக்க மாற்றுயர்ந்த பொன்னினாலும் மணிகளாலும் செய்யப் பட்ட அணிகலங்களையும். மழைக் கருங்கடைக்கண் - மேகம் போன்ற கரிய கடைக்கண்களையும். மழை - குளிர்ச்சியும் ஆம். பணைத்தோள் - மூங்கில் போன்ற தோள்களையும். வீங்குதேர் அல்குலார் - பருத்த தேர் போன்ற அல்குலையும் உடைய மகளிர். அன்ன பூஞ்சதுக்கம் – அப்படிப்பட்ட (சிறந்த) பூவேலைப்பாடுள்ள சதுரமான மணப்பலகை. பூஞ்சதுக்கம் - பூக்கள் வைக்கப்பட்ட சதுரமான பலகையும் ஆம். உக்கம் ஆதியாம் வரிசையின் அமைந்த - ஆலவட்டம் முதலிய உபசாரப் பொருள்களாக அமைந்த வற்றை. மகளிர், வரிசையினமைந்தவற்றைத் தாங்கிக் காரின் வரவு கண்டு உவக்கும் மயிலென நடப்ப: ' வந்தெய்துகின்றனே ' என இயைக்க. (89)

419. தந்திரி நெறியிற் றருக்குறு கருவி
தூக்கின ரெழுவிய சதியின்
முந்துறு குணிலோ டியைவுறு குறட்டிற்
சில்லரிப் பாண்டிலின் முறையின்

மந்தர கீதத் திசைப்பதம் தொடர்ந்த
வகையுறு கட்டளை வழாமல்
அந்தர வானத் தரம்பையர் கரும்பின்
பாடலா ரருகுவந் தகவ.

தந்திரி நெறியில் தாக்குறு கருவி
தூக்கினர் எழுவிய சதியின்
முந்துறு குணிலோடு இயைவுறு குறட்டில்
சில்லரிப் பாண்டிலின் முறையின்,
மந்தர கீதத்து இசைப்பதம் தொடர்ந்த
வகையுறு கட்டளை வழாமல்
அந்தர வானத்து அரம்பையர், கரும்பின்
பாடலார், அருகுவந்து, அகவ.

தந்திரி நெறியில் தாக்குறு கருவி - நரம்பின் முறையால் தெறித்தல் பொருந்திய யாழ் அல்லது வீணையின்கண். தூக்கினர் எழுவிய சதியின் வழாமல் - (வல்லார்) ஆராய்ந்து எழுப்பிய சதியின் வழுவாமலும். சதி - தாளவொத்து. முந்துறு குணிலோடு இயைவுறு குறட்டில் சில்லரிப் பாண்டிலின் முறையின் வழாமல் - முதன்மை பெற்ற குறுந்தடியொடு கூடிய குறடு என்னும் மத்தளத்தின் முறையினும் சில்லரிப்பாண்டிலென்னும் கஞ்சதாளக் கருவி முறையினும் வழுவாமலும். மந்தர கீதத்து இசைப்பதம் தொடர்ந்த வகையுறு கட்டளைவழாமல் - படுத்தலோசையோடு கூடிய இசைப்பாடலோடியைந்த பாகுபாடுகளோடு கூடிய சீர்தவறுமலும். அந்தர வானத்து - சுவர்க்கமாகிய வானுலகத்துள்ள. அருகு உவந்து - இராவணன் பக்கத்தே மகிழ்ந்து; அருகு வந்து - இராவணன் பக்கத்தே வந்து எனலுமாம். அகவ - ஆட. கரும்பின் பாடலார் அந்தரவானத்து அரம்பையர், அருகு உவந்து, தூக்கினர் எழுவிய சதியின் வழாமலும் குறட்டில் முறையின் வழாமலும், சில்லரிப்பாண்டிலின் முறையின் வழாமலும், இசைப்பதம் தொடர்ந்த வகையுறு கட்டளை வழாமலும் அகவ, 'வந்தெய்துகின்றனை' என இயைத்து முடிக்க. (90)

**420.** அந்தியி னனங்க னழல்படத் துரந்த
வலர்மலர்ப் பகழிவா யறுத்த
வெந்துறு புண்ணின் வேனுழைந் தென்ன
வெண்மதிப் பசுங்கதிர் விரவ

மந்தமா ருதம்போய் மலர்தொறும் வாரி
வயங்குநீர் மாரியின் வருதேன்
சிந்துநுண் டுளிகள் சீகரத் திவலை
யுருக்கிய செம்பெனத் தெறிப்ப..

அந்தியின் அனங்கன் அழல்படத் துரந்த
அலர் மலர்ப் பகழி வாய் அறுத்த
வெந்துறு புண்ணின், வேல் நுழைந்தென்ன
வெண்மதிப் பசும் கதிர் விரவ,
மந்தமாருதம் போய் மலர்தொறும் வாரி
வயங்கும் நீர் மாரியின் வருதேன்
சிந்து நுண் துளிகள் சீகரத் திவலை
உருக்கிய செம்பு எனத் தெறிப்ப.

அந்தியின் - மாலைக்காலத்தில். அனங்கன் அழல் படத் துரந்த- உடல் அற்றவனான மன்மதன் நெருப்பின் வெப்பம் உண்டாகும்படி ஏவிய. அலர் மலர்ப் பகழிவாய் அறுத்த வெந்துறு புண்ணின் - விரிந்த பூக்களாகிய அம்புகளின் வாயினால் அறுக்கப்பட்ட வெந்த புண்ணில். பகழிவாய் அறுத்தபுண் வெந்துறுபுண் என்க. வாய் - கூர்மை. வயங்கும் நீர் மாரியின் - விளங்குகின்ற கடலின்கண் (நீர்வாரும்) மேகம் போல. மந்தமாருதம் மலர்தொறும் போய் வாரி வருதேன் - தென்றல், மலர்தொறும் சென்று வாரிக்கொண்டு வருகிற தேன்துளிகளும். சிந்து நுண் துளிகள் - கடலிலிருந்து (காற்றிற் கலந்து) வருகிற நுண்ணிய நீர்த்துளிகளும். சீகரத் திவலை - பனிநீர்ச் செம்பில் நின்று தூவும் நீர்த்துளிகளும். உருக்கிய செம்பு எனத் தெறிப்ப – உருக்கிய செம்புக் குழம்புபோல மேலே தெறிக்க. தேன்சிந்து நுண்டுளிகள் என்று கொண்டு தேனாகிய சிதறிய நுண்துளிகளும் என உரைக்கலும் ஆம். மன்மதனம்புகளைத்தறுத்த வெந்த புண்ணில் வேல் நுழைந்ததுபோலச் சந்திர கிரணம் பரவவும், மலர்களிற் படிந்து மந்தமாருதம் வாரிக் கொண்டு வரும் தேன்துளியும், கடலிலிருந்து (காற்றிற் கலந்து) வரும் நீர்த் துளியும், பனிநீர்ச் செம்புகொண்டு தெளிக்கும் வாச நறுநீர்த் துளியும் உருக்கிய செம்புக் குழம்பு போலத் தன் மீது தெறிக்கவும் இராவணன் வந்தான் என்க. (91)

**421.** இழைபுரை மருங்கு லிறுமிறு மெனவு
மிறுகலா வனமுலை யிரட்டை
உழைபுகு செப்பி னொளிதர மறைத்த
வுத்தரீ யத்தின ரொல்கிக்

குழைபுகு கமலங் கோட்டினர் நோக்குங்
குறுநகைக் குமுதவாய் மகளிர்
மழைபுரை யொண்கட் செங்கடை யீட்ட
மார்பினுந் தோளினும் வயங்க.

இழை புரை மருங்குல் இறும் இறும் எனவும்
இறுகலா வன முலை இரட்டை
உழை புகு செப்பின் ஒளிதர மறைத்த
உத்தரீயத்தினர், ஒல்கிக்
குழை புகு கமலம் கோட்டினர் நோக்கும்,
குறுநகைக் குமுத வாய் மகளிர்
மழை புரை ஒண்கண் செங்கடை ஈட்டம்,
மார்பினும் தோளினும் வயங்க.

தன்பாற் காதல்கொண்ட மகளிர் கடைக்கண் நோக்கம் தன் மார்பிலும் தோளிலும் விளங்க (இராவணன்) வந்தான் என இயையும். காதல் கொண்ட மகளிரின் இயல் இதன் முதன் மூன்றடிகளாற் பேசப்படுகிறது. இழைபுரை மருங்குல் இறும் இறும் எனவும் - நூலையொத்த (நுண்ணிய) இடையானது மேலுள்ள தனபாரத்தால் இற்றுவிடும், இற்றுவிடும் என்று கண்டோர் சொல்லவும். இறுகலா - (வளர்ச்சியிற்) சுருங்காத. இறுகல் - சுருங்குதல் (திருவாய்மொழி. 4. 1. 10). வன முலை இரட்டை - அழகிய தனம் இரண்டும். உழைபுகு செப்பின் ஒளிதர மறைத்த உத்தரீயத்தினர் – உள்ளே புக்க செப்பிணைபோல மறையும்படி மறைத்தணிந்த மேலாடையுடையராய். ஒல்கி - எதிர்கொண்டு. ஒல்குதல் - எதிர்கொள்ளுதல். (சீவக. 472.) குழை புகு கமலம் கோட்டினர் நோக்கும் - குண்டலம் சேர்ந்த தாமரைமலர்போலும் முகத்தை (நாணத்தினால்) வளைத்துப் பார்க்கின்ற; - நோக்கும் மகளிர் என்க. மகளிர் மழை புரை ஒண்கட் செங்கடையீட்டம் - பெண்களின் குளிர்ச்சி பொருந்திய ஒள்ளிய சிவந்த கடைக்கண்களின் கூட்டம். வயங்க - விளங்க. (92)

**422.** மாலையுஞ் சாந்துங் கலவையும் பூணும்
வயங்குநுண் டுசொடு காசும்
சோலையின் றெழுதிக் கற்பகத் தருவு
நிதிகளுங் கொண்டுபின் றெடரப்

பாலின்வெண் பரவைத் திரைகருங் கிரிமேற்
பரந்தெனச் சாமரை பதைப்ப
வேலைநின் றுயரு முயலில்வெண் மதியின்
வெண்குடை மீதுற விளங்க.

மாலையும், சாந்தும், கலவையும், பூணும்
வயங்கு நுண்தூசொடு, காசும்,
சோலையின் தொழுதிக் கற்பகத் தருவும்,
நிதிகளும், கொண்டு பின்தொடரப்
பாலின் வெண் பரவைத் திரை கரும் கிரிமேல்
பரந்தெனச் சாமரை பதைப்ப,
வேலைநின்று உயரும் முயலில் வெண்மதியின்,
வெண்குடை மீது உற விளங்க.

கற்பகத்தருவும் நிதிகளும், மாலையும் சாந்தும்.........காசும் கொண்டு பின்தொடர, சாமரை பதைப்ப, வெண்குடை விளங்க 'வந்தெய்துகின்றனே' என இயைக்க. சோலையின் தொழுதிக் கற்பகத் தருவும் - சோலையின் கூட்டமாகிய கற்பக விருட்சமும். நிதிகளும் - (சங்கம் பதுமம் முதலிய நவ) நிதிகளும். சாந்து - சந்தனம். கலவை - கலவைச் சந்தனம். பூண் - அணிகலன். தூசு - ஆடை. காசு - பொன்; மணியுமாம். வெண்பால் பரவைத் திரை - வெள்ளிய பாற்கடல் அலைகள். இன் சாரியை. கருங்கிரி-கரிய மலை. பரந்தென - பரவினாற்போல. பதைப்ப - அசைய. வேலை நின்று உயரும் - கடலில் நின்று எழுகின்ற. எழுகின்ற மதி, முயலில் மதி, வெண்மதி என்க. முயல் - முயற்கறை. இராவணன் குறிப்பறிந்து, வேண்டியவற்றை உதவும்பொருட்டுக் கற்பகமும் நிதிகளும் மாலை முதலியன கொண்டு அவன்பின் சென்றன என்க. இங்கே, "இழையும் மாலையும் ஆடையும் சாந்தமும் ஏந்தி, உழையரென்ன நின்றுதவுவ நிதியங்கள்" (122) என்பதும் நோக்கத்தகும். இராவணனுடைய கரிய பெரிய உடலுக்குக் கரிய பெரிய மலையும், சாமரைக்குப் பாற்கடல் அலையும், வெண்கொற்றக் குடைக்கு மதியும் உவமை. (93)

423. ஆர்கலி யகழி யருவரை யிலங்கை
யடிபெயர்த் திடுதொறு மழுந்த
நேர்பொரும் பரவைப் பிறழ்திரை தவழ்ந்து
நெடுந்தடந் திசைதொறு நிமிரச்

சார்வருங் கடுவி னெயிறுடைப் பகுவா
யனந்தனுந் தலைதடு மாற
மூரிநீ ராடை யிருநில மடந்தை
முதுகுளுக் குற்றனண் முரல.

ஆர்கலி அகழி அருவரை இலங்கை
அடி பெயர்த்திடுதொறும் அழுந்த,
நேர் பொரும் பரவைப் பிறழ் திரை தவழ்ந்து
நெடும் தடம் திசைதொறும் நிமிரச்
சார்வு அரும் கடுவின் எயிறு உடைப் பகுவாய்
அனந்தனும் தலை தடுமாற,
மூரி நீர் ஆடை இருநில மடந்தை
முதுகு உளுக்குற்றனள் முரல.

அடிபெயர்த்திடுதொறும், இலங்கை அழுந்தவும், கடலலைகள் திசைதொறும் எல்லை கடத்து பரவி எழவும், ஆதிசேடனும் சுமை தாங்கமாட்டாமல் நிலை தடுமாறவும், நிலமகள் முதுகு உளுக்குற்று முரலவும் வந்தெய்துகின்றனை என இயைக்க. ஆர்கலியகழி - கடலாகிய அகழியையுடைய. அருவரை இலங்கை - அரிய திரிகூட மலையில் அமைந்த இலங்கையானது. அடிபெயர்த்திடுதொறும் - காலைப் பெயர்த்து வைக்கும் போதெல்லாம். நேர்பொரும் - எதிர் தாக்குகிற. பரவைப் பிறழ்திரை - கடலில் முறிந்து வருகின்ற அலைகள். நெடுந்தடந் திசைதொறும் நிமிர - நீண்ட பெரிய திசை தோறும் (எல்லை கடந்து) பரவி யெழ. சார்வு அரும் - கிட்டுதற்கு அரிய. கடுவின் எயிறு உடைப் பகுவாய் அனந்தனும் – விடப்பற்களோடு கூடிய பிளந்த வாயையுடைய ஆதிசேடனும்; இன் சாரியை. தலைதடுமாற - பாரம் தாங்கமாட்டாமல் தலை நிலைமாறவும்; மூரிநீர் ஆடை இருநில மடந்தை - பெரிய நீர் (கடல்) ஆகிய உடையையுடைய பூமிதேவியாகிய பெண்; முதுகு உளுக்குற்றனள் முரல - முதுகு சுளுக்கினவளாய்க் கதற. பரவைத்திரை திசை தொறும் நிமிர்தற்கும் அனந்தன் தலை தடுமாறுதற்கும் நிலமடந்தை முதுகுளுக்குற்று முரலுதற்கும் அடி பெயர்த்திடுதலையே காரண மாக்கியுரைக்க. (94)

**424.** கேடகத் தோடு மழுவெழுச் சூல
மங்குசங் கப்பணங் கிடுகோ
டாடகச் சுடர்வா ளயில்சிலை குலிச
முதலிய வாயுத மனைத்தும்

தாடகைக் கிரட்டி யெறுழ்வலி தழைத்த
தகைமையர் தடவரை பொறுக்கும்
சூடகத் தடக்கைச் சுடுசினத் தடுபோ
ரரக்கியர் தலைதொறுஞ் சுமப்ப.

கேடகத்தோடு, மழு எழுச் சூலம்,
அங்குசம், கப்பணம், கிடுகோடு,
ஆடகச் சுடர்வாள், அயில், சிலை, குலிசம்,
முதலிய ஆயுதம் அனைத்தும்,
தாடகைக்கு இரட்டி எறுழ்வலி தழைத்த
தகைமையர், தடவரை பொறுக்கும்
சூடகத் தடக்கைச் சுடுசினத்து, அடுபோர்
அரக்கியர் தலைதொறும் சுமப்ப.

அரக்கியர் தலைதொறும் ஆயுதமனைத்தும் சுமப்ப வந்தெய்துகின் ருளையென இயையும். தாடகை - இராவணன் பாட்டி, மாரீசன் தாய். தாடகைக்கு இரட்டி எறுழ்வலி - தாடகையினும் இருமடங்கு மிக்க வலிமை. தடவரை பொறுக்கும் - பெரிய மலையையும் தாங்கும் ஆற் றல் அமைந்த. தடவரை பொறுக்கும் கை, சூடகக் கை, தடக்கை என்க. ‘கழங்கும் பந்தும் குன்றுகொடாடும் கரம்’ (185) என்றதும் இங்கு நோக்கத் தகும். சூடகம் - கைவளை. (95)

425. விரிதளிர் முகைபூக் கொம்படை முதல்வேர்
பழமிவை மணிபொனல் வேய்ந்த
தருவுயர் சோலை திசைதொறுங் கரியத்
தழலுமி ழுயிர்ப்புமுன் றவழத்
திருமக ளிருந்த திசையறிந் திருந்துந்
திகைப்புறு சிந்தையாற் கெடுத்த
தொருமணி நேடும் பஃறலை யரவி
னுழைதொறு முழைதொறு முலாவி.

விரிதளிர், முகை, பூக் கொம்பு, அடை, முதல், வேர்,
பழம், இவை, மணி பொனல் வேய்ந்த
தரு உயர் சோலை திசை தொறும் கரியத்
தழல் உமிழ் உயிர்ப்பு முன் தவழத்

திருமகள் இருந்த திசை அறிந்திருந்தும்,
திகைப்பு உறு சிந்தையால், கெடுத்தது
ஒருமணி நேடும் பல்தலை அரவின்,
உழைதொறும் உழைதொறும் உலாவி.

தழலுமிழ் உயிர்ப்பு முன் தவழ, சோலை கரிய, உலாவி, வந்தெய்துகின்றானை என இயையும். தழல் உமிழ் உயிர்ப்பு முன் தவழ - விரக நோயினாலாகிய வெம்மையைக் கக்குகின்ற பெருமூச்சானது முன்னே தவழ்தலால். தவழ்தலால் சோலை கரிய என்க. வேரும் முதலும் கொம்பும் தளிரும் அடையும் முகையும் பூவும் பழமும் (எனும்) இவை பொன்னாலும் மணியாலும் வேய்ந்த தருக்கள் ஓங்கிய சோலை என்க. முதல் - அடிமரம். கொம்பு - கிளை. அடை - இலை. முகை - அரும்பு. வேய்தல் - செய்தல். "கானும் பொழிலும் இவை செங்கனகத்தினாலும், ஏனம் மணியாலும் இயற்றிய வேனும் யாவும், தேனும் மலரும் கனியும் தரச்செய்த செய்கை" (114) என்பதும் இங்கு நோக்கத்தகும். திசைதொறும் - இராவணன் நோக்கும் திசைதோறும். கரிய-தீந்துபோக. திருமகள் என்றது சீதாபிராட்டியை. திகைப்பு உறு சிந்தையால் - மயங்கிய மனத்தினால். கெடுத்தது ஒரு மணி - கை நழுவ விட்டதொரு மணியை. நேடும் - தேடுகிற. பஃறலையரவின் - பல தலைகளையுடைய பாம்புபோல. உழை-இடம். சீதாபிராட்டி சிறையிருக்குமிடம் தெரிந்திருந்தும் மனமயக்கத்தால் (மறந்து) அசோக வனத்துள் ஒவ்வோரிடத்தும் சென்று சென்று காண முயலும் இராவணனுக்கு இழந்த மணியைத் தேடும் பலதலைப் பாம்பு உவமை. (96)

## அநுமன் இராவணனை நோக்குதல்

**426.** இனையதோர் தன்மை யெறுழ்வலி யரக்க
ரேந்தல்வந் தெய்துகின் றானை
அனையதோர் தன்மை யஞ்சனை சிறுவன்
கண்டன னமைவுற நோக்கி
வினையமுஞ் செயலு மேல்விளை பொருளு
மிவ்வழி விளங்குமென் றெண்ணி
வனைகழ லிராமன் பெரும்பெய ரோதி
யிருந்தனன் வந்தயன் மறைந்தே.

இனயது ஓர் தன்மை எறுழ்வலி அரக்கர்
ஏந்தல் வந்து எய்துகின்றுனே,
அனயது ஓர் தன்மை அஞ்சனே சிறுவன்
கண்டனன், அமைவுற நோக்கி,
'வினயமும், செயலும், மேல்வினே பொருளும்,
இவ்வழி விளங்கும்!' என்று எண்ணி,
வனே கழல் இராமன் பெரும் பெயர் ஓதி,
இருந்தனன் வந்து அயல் மறைந்தே.

அஞ்சனே சிறுவன், வந்தெய்துகின்றுன் ஆகிய அரக்கர் ஏந்தலேக் கண்டனன், நோக்கி, எண்ணி, அயல்வந்து, ஓதி, மறைந்திருந்தனன் என இயையும். அனயது ஓர் தன்மை அஞ்சனே சிறுவன் - அப்படிப்பட்ட ஒப்பற்ற இயல்புடைய அஞ்சனு தேவியின் புத்திரனுன அநுமன். வந்தெய்துகின்றுன் (ஆன) இனயதோர் தன்மை எறுழ்வலி அரக்கர் ஏந்தலே - வந்து கிட்டுகின்றவனுன இப்படிப்பட்ட ஒப்பற்ற இயல்புடன் மிக்க வலியும் உடைய அரக்கர் வேந்தனே. கண்டனன் - கண்டு: முற்றெச்சம். அமைவுற நோக்கி - பொருந்த ஆலோசித்து. செயலும் வினயமும் மேல் வினேபொருளும் என இயைத்து இராவணனுடைய செயலும், அதனே முற்றுவிக்க அவன் மேற்கொள்ளும் உபாயமும், அதனுல் மேல் வினேயும் பயனும் என்று உரை விரிக்க. அநுமன் தான் மேற்கொள்ளவேண்டிய செயலும், அதை முற்றுவிக்கும் உபாயமும், அதனுல் பின் வினேயும் பயனும் என்று உரைப்பினும் அமையும். அன்றியும், வினயமும் செயலும் மேல் வினேபொருளும் என நின்றபடியே கொண்டு பிராட்டியின் அடக்கமும், ஒழுக்கமும் அவற்றுல் பின் வினேயும் பயனும் என உரைக்கலும் ஆம். இவ்வழி - இவ்விடத்து = இப்பொழுது. அயல் வந்து - பக்கத்து வந்து. வனேகழல் இராமன்-(தன்னே அடைந்தாரைப் புரத்தலேயே குறிக்கோளாகக்கொண்டு, அதற்குத் தடைநேரின் அதையொழித்து முற்றுவிக்கும் உறுதியோடு அதற்கு அடையாளமாகப்) பூண்ட வீரக்கழலேயுடைய இராமபிரானுடைய. பெரும் பெயர் - (எழுத்தளவாற் சிறிதெனினும் பயனளித்தலாற்) பெரிய பெயர். பெயர் ஓதியது இராவணன் வரவால் தீங்கு நேராதொழிதற்கு. (97)

இராவணன் அணுகலும் பிராட்டி அஞ்சுதலும்

427. ஆயிடை யரக்க னரம்பையர் குழுவு
மல்லவும் வேறய லகல
மேயினன் பெண்ணின் விளக்கெனுந் தகையா
ளிருந்துழி யாண்டவள் வெருவிப்

போயின வுயிர ளாமென நடுங்கிப்
பொறிவரி யெறுழ்வலிப் புகைக்கண்
காய்சின வுழுவை தின்னிய வந்த
கலையிளம் பிணையெனக் கரைந்தாள்.

ஆயிடை, அரக்கன், அரம்பையர் குழுவும்
அல்லவும் வேறு அயல் அகல,
மேயினன் பெண்ணின் விளக்கு எனும் தகையாள்
இருந்துழி; ஆண்டு அவள் வெருவிப்
போயின உயிரளாம் என நடுங்கிப்
பொறி வரி எறுழ் வலிப் புகைக் கண்
காய் சின உழுவை தின்னிய வந்த
கலையிளம் பிணை எனக் கரைந்தாள்!

அரக்கன், ஆயிடை, பெண்ணின் விளக்கு எனும் தகையாள் இருந்துழி மேயினன்; அவள், ஆண்டு வெருவி நடுங்கிக் கரைந்தாள் என இயைக்க. அரக்கன் என்றது இராவணனை. ஆயிடை - அப் பொழுது. பெண்ணின் விளக்கு எனும் தகையாள் - பெண்களுள் விளக்கு என்று சொல்லத் தக்க தகுதியுடையாள்; என்றது சீதா பிராட்டியை. இருந்துழி - இருந்த இடத்தில். அவள் – அச்சீதா பிராட்டி. ஆண்டு - அப்பொழுது. வெருவி - அஞ்சி. பொறி வரி எறுழ்வலிப் புகைக்கண் காய்சின உழுவை - பொலிவுள்ள கோடு களையும், மிக்க வலிமையினையும், புகைதோன்றும் கண்களையும், வருத்துகின்ற சினத்தையும் உடைய புலி. தின்னிய - தின்னும் பொருட்டு. தின்னிய வந்த காய்சினவுழுவை(யைக்)கண்ட கலை யிளம்பிணை எனக் கூட்டுக. கலையிளம்பிணையென – கலைமானுக்குரிய இளைய பெண்மான்போல. கரைந்தாள் - உருகினாள். இராவணனுக் குப் புலியும், இராமபிரானைப் பிரிந்து அவனிடத்தே உள்ளஞ் செல்ல இருந்த சீதாபிராட்டிக்குக் கலைமானைப் பிரிந்து அதனையே நினைந்து வருந்தும் பிணைமானும் உவமை. (98)

## இருவர் நிலையினையும் அநுமன் காண்டல்

428. கூசி யாவி குலைவுறு வானையும்
★ ஆசை யாலுயி ராசழி வானையும்
காசில் கண்ணிணை சான்றெனக் கண்டனன்
ஊச லாட லொழிந்த வுளத்தினன்.

கூசி ஆவி குலைவுறுவாளையும்,
ஆசையால் உயிர் ஆசு அழிவானையும்,
காசு இல் கண் இணை சான்று எனக் கண்டனன்,
ஊசல் ஆடல் ஒழிந்த உளத்தினன்.

## அநுமன் பிராட்டியை வாழ்த்தல்

**429.** வாழி சானகி வாழியி ராகவன்
வாழி நான்மறை வாழிய ரந்தணர்
வாழி நல்லற மென்றுற வாழ்த்தினன்
ஊழி தோறு முயர்வுறுங் கீர்த்தியான்.

வாழி சானகி! வாழி இராகவன்!
வாழி நான்மறை! வாழியர் அந்தணர்!
வாழி நல்லறம்! என்று உற வாழ்த்தினன்,
ஊழிதோறும் உயர்வுறும் கீர்த்தியான்.

இரண்டும் ஒரு தொடர். ஊழிதோறும் உயர்வுறும் கீர்த்தியான் கூசி ஆவி குலைவுறுவாளையும், ஆசையால் உயிர் ஆசு அழிவானையும் கண்டனன், ஊசலாடல் ஒழிந்த உளத்தினன் வாழ்த்தினன் என இயைத்து முடிக்க. ஊழிதோறும் உயர்வுறும் கீர்த்தியான் - ஒவ்வோரூழியினும் உயர்வடையும் கீர்த்தியையுடையவனாகிய அநுமன். கூசி-அஞ்சி. கூசுதல் - அஞ்சுதல்; கூசினவல்ல பேசிநாணின, (பால. பூக்கொய். 6). ஆவி குலைவுறுவாள் என்றது சீதாபிராட்டியை. ஆவி - உயிர். உயிர் ஆசு அழிவானையும் - உயிர்க்குரிய பற்றுக் கோடாகிய உடல் மெலிபவனான இராவணனையும். காசு - குற்றம். கண் இணை - கண் இரண்டும். சான்று - சாட்சி. கண்டனன் - கண்டு; முற்றெச்சம். ஊசலாடல் ஒழிந்த உளத்தினன்-தடுமாற்றம் நீங்கிய மனத்தினனாகி; உளத்தினன்: முற்றெச்சம். ஊசல் - தடுமாற்றம் எனும் பொருளில் 'ஊசல் நீங்கினர்' (யுத்த. நாகபாச. 130) எனப் பின்னும் பயின்றமை காண்க. (99-100)

25 என்னும் குறியீடுள்ள சுவடியுள் 429-ஆம் பாடலின்பின் பின் வருமாறு ஒரு பாடல் காணப்படுகிறது.

**429.** (a) என்ன வாழ்த்திய மாருதி யீது நாம்
இன்னும் காண்டும் எனமறைந் தெய்தினன்
சொன்ன வாளரக் கன்சுடு தீச்சுடும்
அன்னை வைகுறும் அவ்விடத் தாயினன்.

## இராவணன் பிராட்டியை இரத்தல் 430-443

**430.** அவ்வி டத்தரு கெய்திய ரக்கன்ருன்
எவ்வி டத்தெனக் கின்னரு ளீவது
நொவ்வி டக்குயி லேநுவல் கென்றனன்
வெவ்வி டத்தை யமுதென வேண்டுவான்.

அவ்விடத்து அருகு எய்தி அரக்கன் தான்,
'எவ்விடத்து எனக்கு இன் அருள் ஈவது
நொவ் விடக் குயிலே! நுவல்க' என்றனன்
வெவ் விடத்தை அமுது என வேண்டுவான்.

வெவ்விடத்தை அமுதென வேண்டுவான் (ஆன) அரக்கன் அவ் விடத்து அருகு எய்தி, குயிலே! நொ விட எனக்கு இன் அருள் ஈவது எவ்விடத்து? நுவல்க! என்றனன் என இயையும். வெவ்விடத்தை - கொடிய நஞ்சினை. அமுதென வேண்டுவான் அரக்கன்—அமுதென்று விரும்புபவனுன அரக்கன்; என்றது இராவணனை. தான் அசை. குயிலே! என்பது பிராட்டியை எதிர்முகமாக்கிக் கொள்ளும் இராவணன் விளிக்கூற்று. எனக்கு நொ விட— (உன்னையடையாமையால் உண்டாகிய) துன்பம் என்னைவிட்டு நீங்க. இன் அருள் ஈவது எவ் விடத்து? - (உன்னுடைய) இனிய கருணை புரிவது எப்பொழுது? நுவல்க - சொல்வாயாக. அரக்கன் நுவல்கென்றனன் என்க. (101)

**431.** ஈசற் காயினு மீடழி வுற்றிறை
வாசிப் பாடழி யாத மனத்தினுன்
ஆசைப் பாடுமந் நாணும டர்த்திடக்
கூசிக் கூசி யிவையிவை கூறினுன்.

ஈசற்கு ஆயினும் ஈடு அழிவுற்று இறை
வாசிப்பாடு அழியாத மனத்தினுன்,
ஆசைப்பாடும் அந்நாணும் அடர்த்திடக்
கூசிக் கூசி இவை இவை கூறினுன்.

மனத்தினுன் கூறினுன் என்க. ஈசற்கு ஆயினும் - சிவபெருமானுக்கும். ஆயினும் என்பது உயர்வுகுறித்துவருவதோர் இடைச் சொல்; (தொல். சொல். இடையியற் புறனடையாற் கொள்ளத் தக்கது). ஈடு அழிவுற்று — வலிதொலைந்து. இறை - சிறிதும். வாசிப் பாடு — பெருமிதம். ஆசைப்பாடும் - ஆசையும். அந்நாணும் - அந்த (சிறந்த) நாணமும். அடர்த்திட - வருத்த. (102)

432. இன்றி றந்தன நாளேயி றந்தன
என்றி றந்தருந் தன்மையி தாலெனேக்
கொன்றி றந்தபின் கூடுதி யோகுழை
சென்றி றங்கி மறந்தரு செங்கணுய்.

இன்று இறந்தன நாளே இறந்தன
என் திறம் தரும் தன்மை இதால்; எனேக்
கொன்று இறந்தபின் கூடுதியோ? குழை
சென்று இறங்கி மறம் தரு செங்கணுய்!

குழை சென்று இறங்கி மறம் தரு செங்கணுய்! இன்று இறந்தன; நாளே இறந்தன; என் திறம் தரும் தன்மை இது; எனேக் கொன்று இறந்தபின் கூடுதியோ? என இயைக்க. குழைசென்று இறங்கி மறம் தரு செங்கணுய்!-காதளவும் நீண்டு என்மேற் பதிந்து கொலேத்தொழிலேச் செய்கின்ற சிவந்த கண்களேயுடையாய்! என்றது, பிராட்டியை எதிர் முகமாக்கிக்கொள்ளும் இராவணன் விளிக்கூற்று. இன்று இறந்தன - இன்று என்று வழங்கப்படும் நாட்கள் பல (பயனின்றிக்) கழிந்தன; நாளே இறந்தன - வழிநாள் என்று வழங்கப்படும் பல நாட்களும் (பயனின்றிக்) கழிந்தன. என்திறம் தரும் தன்மை இது - நீ என்பால் அருள் செய்யும் வகை இத்தன்மைத்து. ஆல் அசை. எனேக் கொன்று - என்னே வருத்தி. இறந்தபின்-யான் இறந்தொழிந்த பின்பு. (103)

இதன் பின், 17 என்னும் குறியீடுள்ள சுவடியில் பின்வருமாறு ஒரு பாடல் தொடக்கத்திலும் முடிவிலும் புள்ளடியிட்டு எழுதப்பட்டுள்ளது.

432 (a) இன்று நாளே யருளும் திருவருள்
என்று கொண்டிட ராலழி வேனேநீ
கொன்றி றந்தனே கூடுதி யோகுழை
தின்று றங்கி மறந்தவர் செல்வியே.

433. உலக மூன்று மொருங்குட ணேம்புமென்
அலகில் செல்வத் தரசிய லாணேயில்
திலக மேயுன் றிறத்தனங் கன்றரு
கலக மல்ல தெளிமையுங் காண்டியோ.

உலகம் மூன்றும் ஒருங்கு உடன் ஓம்பும் என்
அலகில் செல்வத்து அரசியல் ஆணேயில்
திலகமே! உன் திறத்து அனங்கன் தரு
கலகம் அல்லது எளிமையும் காண்டியோ.

திலகமே! என் அரசியலாணையில், கலகமல்லது எளிமையும் காண்டியோ! என்க. திலகமே! என்பது பிராட்டியை நோக்கிய இராவணன் விளி. உலகம் மூன்றும் ஒருங்கு உடன் ஓம்பும் - (மண் விண் பாதலம் எனும்) மூன்றுலகத்தையும் முழுதும் ஒருசேர ஆளுகிற. என் அரசியலாணையில்-என்னுடைய அரசியல் அதிகாரத்துள். உன் திறத்து - உன் விஷயமாக. அனங்கன் தரு கலகம் அல்லது - உடலற்றவனான மன்மதன்செய்யும் போரையேயன்றி; எளிமையும்- (அப்போரில்) என் வலியின்மையையும்: காண்டியோ - செய்தியோ! (செய்யலாகாது). (104)

434. பூந்தண் வார்குழற் பொற்கொழுந் தேபுகழ்
ஏந்து செல்வ மிகழ்ந்தனை யின்னுயிர்க்
காந்தன் மாண்டிலன் காடுக டந்துபோய்
வாய்ந்து வாழ்வது மானிடர் வாழ்வன்றே.

பூந்தண் வார் குழல் பொன் கொழுந்தே! புகழ்
ஏந்து செல்வம் இகழ்ந்தனை! இன் உயிர்க்
காந்தன் மாண்டிலன் காடு கடந்து போய்
வாய்ந்து வாழ்வதும் மானிடர் வாழ்வன்றே ?

பூந்தண் வார்குழற் பொற்கொழுந்தே - பூச்சூடிய குளிர்ந்த நீண்ட கூந்தலையுடைய அழகிய மருக்கொழுந்து போன்றவளே! புகழ் ஏந்து செல்வம்-புகழைத்தாங்கிய என் செல்வத்தை. காந்தன்- நாயகனான இராமன். மாண்டிலன் - இறவாதவனாய்; காடு கடந்து போய் - வனவாசத்தை முடித்து அயோத்திக்குச் சென்று. வாய்ந்து- (அங்கு) எல்லா வளமும் நிரம்பப்பெற்று; வாழ்வதும் - வாழ்வதாகிய அவ்வாழ்வும். மானிடர் வாழ்வினும் சிறந்த எங்கள் வாழ்வை நீ இகழாது ஏற்றுக்கொள்க என்றவாறு. (105)

435. நோற்கின் றார்களு நுண்பொரு ளுண்ணிதிற்
பார்க்கின் றாரும் பெறும்பயன் பார்த்தியேல்
வார்க்குன் றாமுலை யென்சொன் மவுலியால்
ஏற்கின் றாரொ டுடனுறை யின்பமால்.

நோற்கின்றார்களும் நுண்பொருள் நுண்ணிதில்
பார்க்கின்றாரும் பெறும் பயன் பார்த்தியேல்,
வார்க் குன்றாம் முலை! என் சொல் மவுலியால்
ஏற்கின்றாரொடு உடனுறை இன்பமால்.

வார்க்குன்ரும் முலே! கச்சணிந்த மலேபோன்ற தனங்களே யுடையாய்! நோற்கின்ருர்களும் – தவநிலேமேற்கொண்டவர்களும். நுண் பொருள் - நுண்ணிய (அறிதற்கரிய) பொருளான இறைவனே. நுண்ணிதில் - கூரிய அறிவினுல். பெறும்பயன் - பெறும்பேறு. பார்த்தியேல் - ஆராய்வாயாயின். என் சொல் – என் கட்டளேயை. மவுலியால் ஏற்கின்ருரொடு - தலேயால் (தாழ்ந்து வணங்கி) ஏற்கின் றவர்களுடன். உடன் உறையின்பம் – கூடி வாழ்கின்ற இன்ப மாகும். ஆல்அசை. (106)

**436.** பொருளும் யாழும் விளரியும் பூவையும்
மருளு நாளு மழலே வழங்குவாய்
தெருளு நான்முகன் செய்ததுன் சிந்தையில்
அருளு மின்மருங் கும்மரி தாக்கியோ.

பொருளும் யாழும் விளரியும் பூவையும்
மருளும் நாளும் மழலே வழங்குவாய்!
தெருளும் நான்முகன் செய்தது உன் சிந்தையில்
அருளும் மின் மருங்கும் அரிது ஆக்கியோ?

பொருளும் யாழும் விளரியும் பூவையும் மருளும் மழலே நாளும் வழங்குவாய்! நான்முகன், உன்சிந்தையில் அருளும், (உன் உடலில்) மருங்கும் அரிதாக்கியோ! (உன்னேச்) செய்தது? என இயைக்க. பொருள் – மக்கள். விளரி, ஓர் இசை. பூவை - நாகணவாய்ப் பறவை. மருளும் - மயங்கச் செய்கின்ற. தெருளும் - தெளிந்த. நான்முகன் - பிரமன். சிந்தை - மனம். மின்மருங்கும் - மின்னற் கொடி போன்ற இடையும்; அரிதாக்கியோ செய்தது - இல்லேயாக் கியோ உன்னேப் படைத்தது? முன் இரண்டடிகளால் பிராட்டியின் மொழியினிமை பேசப்பட்டது. (107)

**437.** ஈண்டு நாளு மிளமையு மென்றிவை
மாண்டு மாண்டு பிறிதுறு மாலேய
வேண்டு நாள்வெறி தேவிளிந் தாவினி
யாண்டு வாழ்வ திடருழந் தாழ்தியோ.

ஈண்டு நாளும் இளமையும் என்று இவை
மாண்டு மாண்டு பிறிது உறும் மாலேய
வேண்டும் நாள் வெறிதே விளிந்தால் இனி
யாண்டு வாழ்வது? இடர் உழந்து ஆழ்தியோ?

மழலை வழங்குவாய்! என முன்பாட்டில் உள்ள விளியினை இங்கும் அடுத்துவரும் பாட்டிலும் ஒட்டிக்கொள்க. ஈண்டு நாளும் - நிரம்பிய வாழ்நாளும்; மாண்டு மாண்டு – செத்துச் செத்து. பிறிது உறும் மாலைய - வேறுபடும் இயல்புடையன. வேண்டும் நாள் - விரும்பத்தக்க வாழ்நாள். வெறிதே – பயன் இன்றி. இடர் உழந்து ஆழ்தியோ-துன்பக்கடலுள் வருந்தி அழுந்துவாயோ?(108)

438. இழவெ னக்குயி ரெய்தினு மெய்துக
குழைமு கத்துநின் சிந்தனை கோடினல்
பழகி நிற்புறு பண்பியை காமத்தோ
டழகி னுக்கினி யாருள ராவரோ.

இழவு எனக்கு உயிர் எய்தினும் எய்துக,
குழை முகத்து நின் சிந்தனை கோடினல்
பழகி நிற்புறு பண்பு இயை காமத்தோடு
அழகினுக்கு இனி யார் உளர் ஆவரோ ?

மழலை வழங்குவாய்! குழைமுகத்து நின் சிந்தனை கோடினல், எனக்கு உயிர் இழவு (எய்தும்,) எய்தினும் எய்துக; காமத்தோடு அழகினுக்கு இனி யார் உளராவர்? என்க. குழைமுகத்து நின் சிந்தனை கோடினல் - குண்டலம் அணிந்த முகமுடைய உன் மனம் கோணினல்; எனக்கு உயிர் இழவு எய்தும், (அது) எய்தினும் எய்துக - எனக்கு உயிர் நீக்கம் நேரும்; அவ்வுயிர் நீக்கம் (சாவு) வந்தாலும் வரட்டும்; அதுபற்றி யான் கவலேன். பழகி – கலந்து; நிற்புறு - நிலைத்த. பண்பு இயை காமத்தோடு அழகினுக்கு – நல்லியல்புடைய காமத்தோடு அழகினுக்கும். இனி யார் உளராவர் ?– இனி என்னையன்றி (உனக்கு ஏற்றவர்) பிறர் யார் இருக்கிறார்கள். (ஒருவரும் இல்லையே!) என்றவாறு. (109)

439. பெண்மை யும்மழ கும்பிற ழாமனத்
திண்மை யும்முதல் யாவையுஞ் செய்யவாய்க்
கண்மை யும்பொருந் திக்கரு ணைப்படா
வண்மை யென்கொல் சனகன் மடந்தையே.

பெண்மையும் அழகும் பிறழா மனத்
திண்மையும் முதல் யாவையும் செய்யவாய்க்
கண்மையும் பொருந்திக் கருணைப்படா
வண்மை என்கொல்? சனகன் மடந்தையே!

பிறழா மனத்திண்மையும் – வேறுபடாத மனவலிமையும். செய்ய வாய் - நல்லனவாய். கண்மை - கண்ணோட்டம். கருணைப் படாவண்மை என்கொல்? - கருணையிற் பொருந்தாத இயல்பு எதனால் விளைந்தது? (110)

440. வீட்டுங் காலத் தலறிய மெய்க்குரல்
கேட்டுங் காண்டற் கிருத்திகொல் கிள்ளைநீ
நாட்டுங் காலனெடு நல்லறத் தின்பயன்
ஊட்டுங் காலத் திகழ்வ துறுங்கொலோ.

வீட்டும் காலத்து அலறிய மெய்க்குரல்
கேட்டும், காண்டற்கு இருத்திகொல்? கிள்ளை நீ
நாட்டுங்கால் நெடு நல்லறத்தின் பயன்
ஊட்டுங்காலத்து இகழ்வது உறுங்கொலோ?

கிள்ளை! - கிளிபோல்பவளே! (இராமனை யான்) வீட்டுங் காலத்து (அவன்) அலறிய மெய்க்குரல் கேட்டும், நீ (அவனைக்) காண்டற்கு இருத்திகொல்? நாட்டுங்கால், (ஊழ்) நெடு நல் லறத்தின் பயன் ஊட்டுங்காலத்து இகழ்வது உறுங்கொல்? என்க. வீட்டுதல் - கொல்லுதல். நாட்டுங்கால் – உறுதியாகச் சொல்லு மிடத்து. (111)

441. தக்க தென்னுயிர் வீடுறத் தாழ்கிலாத்
தொக்க செல்வந் தொலையு மொருத்திநீ
புக்கு யர்ந்த தெனும்புகழ் போக்கிவே
றுக்க தென்னு முறுபழி கோடியோ.

தக்கது என் உயிர் வீடு உறத் தாழ்கிலாத்
தொக்க செல்வம் தொலையும் : ஒருத்தி நீ
புக்கு உயர்ந்தது எனும் புகழ் போக்கி வேறு
உக்கது என்னும் உறு பழி கோடியோ.

முன் பாட்டில் உள்ள 'கிள்ளை' என்னும் விளியினை இங்கும் ஒட்டிக்கொள்க. தக்கது என் உயிர் - தகுதியுடையதாகிய என் உயிர். வீடு உற – அழிய. தாழ்கிலா - தாழ்வடையாத (- மிக மிக உயர்ந்த). தொக்க செல்வம் - திரண்ட செல்வம். தொலையும் - அழியும். ஒருத்தி நீ - ஒப்பற்றவளாகிய நீ. புக்கு - (என் இல்லிற்) புகுதலால். உக்கது என்னும் உறுபழி - அழிந்ததென்று சொல்லப் படும் மிக்க பழியை. கோடியோ – கொள்வாயோ! (112)

**442.** தேவர் தேவியர் சேவடி கைதொழும்
தாவின் மூவுல கின்றனி நாயகம்
மேவு கின்றது நுன்கண் விலக்கினை
ஏவ ரேழையர் நின்னி னிலங்கிழாய்.

தேவர் தேவியர் சேவடி கைதொழும்
தா இல் மூவுலகின் தனி நாயகம்
மேவுகின்றது நுன்கண், விலக்கினை,
ஏவர் ஏழையர் நின்னின் ? இலங்கு இழாய் !

இலங்கிழாய் ! நுன்கண் மேவுகின்றது மூவுலகின் தனி நாயகம் விலக்கினை ! நின்னின் ஏழையர் ஏவர் ? என இயைக்க. நுன்கண் - உன்னிடம். மேவுகின்றது - வந்து சேர்கின்றதாகிய. தேவர் தேவியர் - தேவரும் அவர் தேவிமாரும். தா இல் - குற்றம் இல்லாத. தா இல் நாயகம், மூவுலகின் நாயகம், தனி நாயகம் என்க. தனி நாயகம் - ஒப்பார் மிக்காரை யில்லாத தனித்தலைமை (- ஒரு நாயகம்). நின்னின் - உன்னைப்போல். ஏழையர் ஏவர்? அறிவில்லாதவர் யார் உளர்? (ஒருவருமில்லை என்றவாறு). (113)

**443.** குடிமை மூன்றுல குஞ்செயுங் கொற்றத்தென்
அடிமை கோடி அருளுதி யாலெனு
முடியின் மீது முகிழ்த்துயர் கையினன்
படியின் மேல்விழுந் தான்பழி பார்க்கலான்.

'குடிமை மூன்று உலகும் செயும் கொற்றத்து என்
அடிமை கோடி ; அருளுதியால்' எனு
முடியின் மீது முகிழ்த்து உயர் கையினன்
படியின் மேல் விழுந்தான் பழி பார்க்கலான்.

பழிபார்க்கலான் (பிராட்டியை நோக்கி), 'என் அடிமை கோடி; அருளுதி' எனு முடியின்மீது முகிழ்த்து உயர்கையினன் (ஆகிப்) படியின் மேல் விழுந்தான் என முடிக்க. பழிபார்க்கலான் - (அயலான்மனையாளிடத்து நெறிகடந்து எய்துதலால் அழியாத) பழி (வருமென்பதை) எண்ணுதவனான இராவணன் ; மூன்றுலகும் குடிமை செயும் - மூன்றுலகத்தும் உள்ள உயிர்களெல்லாம் அடிமை செய்யும்படியான. கொற்றத்து - வெற்றியையுடைய ; என் அடிமை கோடி - என் அடிமைப்பணியை ஏற்றுக்கொள் ; அருளுதி - கருணை பாலிப்பாயாக. ஆல் : அசை. எனு - என்று. முடியின்மீது - தலை

மீது ; முகிழ்த்து உயர் கையினன் - குவித்தெடுத்த கைகளையுடையனாய். கையினன் முற்றெச்சம். படியின்மேல் விழுந்தான் - பூமியில் விழுந்து வணங்கினான். (114)

## பிராட்டியின் மறுமாற்றம் 444—465.

444. காய்ந்தன சலாகை யன்ன
 வுரைவந்து கதுவா முன்னம்
☆ தீந்தன செவிக ளுள்ளந்
 திரிந்தது சிவந்த சோரி
பாய்ந்தன கண்க ளொன்றும்
 பரிந்தில ளுயிர்க்கும் பெண்மைக்
கேய்ந்தன வல்ல வெய்ய
 மாற்றங்க ளினைய சொன்னாள்.

காய்ந்தன சலாகை அன்ன
 உரை வந்து கதுவா முன்னம்
தீந்தன செவிகள் ; உள்ளம்
 திரிந்தது ; சிவந்த சோரி
பாய்ந்தன கண்கள் ; ஒன்றும்
 பரிந்திலள் உயிர்க்கும் ; பெண்மைக்கு
ஏய்ந்தன வல்ல வெய்ய
 மாற்றங்கள் இனைய சொன்னாள்.

(இராவணன் கூறிய) உரை வந்து கதுவாமுன்னம் செவிகள் தீந்தன ; உள்ளம் திரிந்தது ; கண்கள் சிவந்த சோரி பாய்ந்தன; (பிராட்டி) உயிர்க்கும் ஒன்றும் பரிந்திலள் ; இனைய மாற்றங்கள் சொன்னாள் : என இயைக்க. காய்ந்தன சலாகையன்ன உரை வந்து கதுவாமுன்னம் - (நெருப்பிலே பழுக்கக்) காய்ந்தனவாகிய நாராசம் போன்ற (இராவணன்) சொற்கள் வந்து பற்று (புகு) முன்னமே; செவிகள் தீந்தன - (பிராட்டியின்) காதுகள் கருகின ; உள்ளம் திரிந்தது - மனமும் மாறிற்று (வெய்தாயிற்று); கண்கள் சிவந்த சோரி பாய்ந்தன என இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின் மேல் ஏற்றிக் கூறப்பட்டது. சோரி – இரத்தம் ; கண்களில் இரத்தம் பெருகிற்று என்றவாறு. உயிர்க்கும் ஒன்றும் பரிந்திலள் - தன் உயிர்க்கு நேரும் தீங்கு குறித்தும் சிறிதும் வருந்தாதவளாய் ; பெண்மைக்கு ஏய்ந்தன - பெண்ணின் தன்மைக்கு இசைந்தனவும் ; வல்ல - ஆற்றலுடையனவும்; வெய்ய – சொல்லளவிற் கடுமையாயினவும் ; வெய்ய - நற்பயன் விளைத்தலின் விரும்பத்தக்கனவும் ஆகிய;

இனைய மாற்றங்கள் - இத்தகைய மறுமொழிகளை. வெய்ய என்பது மீட்டும் கூட்டி உரை யுரைக்கப்பட்டது ; பிராட்டி என்னும் எழுவாய் தொக்கது. ‘பெண்மைக்கு ஏய்ந்தனவல்ல வெய்ய மாற்றங்கள்’ என்பதற்குப் ‘பெண்ணின் தன்மையொடு பொருந்தாத கொடிய சொற்கள்’ என்று உரை கூறுவாரும் உளர். பிராட்டி கூறியவை ‘அறத்துரை’ (466) என்று ஆசிரியர் பின்னே கூறுதலால், அவ் வுரையைப் ‘பெண்ணின் தன்மையொடு பொருந்தாத கொடிய சொற்கள்’ என்பது, ஆசிரியர் கருதிய பொருளாகாது. (115)

**445.** மல்லொடு திரடோள் வஞ்சன்
மனம்பிறி தாகும் வண்ணம்
கல்லொடுந் தொடர்ந்த நெஞ்சங்
கற்பின்மேற் கண்ட துண்டோ
இல்லொடுந் தொடர்ந்த மாதர்க்
கேய்வன வல்ல வெய்ய
சொல்லிது தெரியக் கேட்டி
துரும்பெனக் கனன்று சொன்னாள்.

மல்லொடு திரள்தோள் வஞ்சன்
மனம் பிறிது ஆகும் வண்ணம்
‘கல்லொடும் தொடர்ந்த நெஞ்சம்
கற்பின்மேல் கண்டது உண்டோ ?
இல்லொடும் தொடர்ந்த மாதர்க்கு
ஏய்வன அல்ல வெய்ய
சொல் இது தெரியக் கேட்டி !
துரும்பு !’ எனக் கனன்று சொன்னாள்.

(பிராட்டி,) வஞ்சன் மனம் பிறிதாகும்வண்ணம் கனன்று சொன்னாள் என்க. மல்லொடு திரள் தோள் – வலிமையோடு திரட்சியும் உடைய தோள். வஞ்சன் மனம் பிறிதாகும் வண்ணம் - வஞ்சகனான இராவணன் மனம் (பிராட்டி பக்கல் தீங்கு நினையாது) மாறும்படி ; துரும்பு !– துரும்பே ! குலமகளிர் பரபுருடரை நோக்கிப் பேசாராகலின், பிராட்டி தனக்கும் இராவணனுக்குமிடையே ஒரு துரும்பையிட்டு அதனை விளித்துப் பேசுவதுபோல இராவணனுக்கு அறிவுரை கூறுவாளாயினள். கல்லொடும் தொடர்ந்த நெஞ்சம் - (இராமபிரானைப் பிரிந்தும்உருகி நைந்தொழியாது) கல்லின் தன்மை யாகிய திண்மையோடு கூடிய என் மனமானது; உன் தீய உரைகளைக் கேட்டு அஞ்சி நைந்தொழியாது கல்லின் தன்மையாகிய

திண்மையோடு கூடிய என் மனமானது என்று உரைக்கலும் ஆம். கற்பின் மேல் கண்டது உண்டோ! - கற்பிலும் உயர்ந்தது ஒன்றைக் கண்டதில்லை ; (அன்றியும்), வெய்ய சொல் - நீ கூறிய கொடுஞ் சொற்கள் ; இல்லொடும் தொடர்ந்த மாதர்க்கு ஏய்வன அல்ல - குடிப்பிறப்புடைய மகளிர்க்குப் பொருந்தாதவை; இல் - குடி (திருக். 951) இது - நான் கூறும் இச்சொல்லை. தெரியக் கேட்டி - நன்றாக விளங்கக் கேட்பாயாக. நீ கூறியவை வெய்ய சொல், இல்லொடும் தொடர்ந்த மாதர்க்கு ஏய்வன அல்ல எனவே, யான் கூறும் இச்சொற்கள், இனியன, இல்லொடும் தொடர்ந்த மாதர்க்கு ஏய்வன, வல்ல என்பது போதரும். இல் என்பதற்கு இல்லறம் என்று உரை கண்டாரும் உண்டு; குடி என்பதே கவிகருதிய தென்பது, இராமபிரான் பக்கல், அநுமன் பிராட்டியைக் கண்டவாறு கூறுமிடத்து, 'இற்பிறப்பென்பதொன்றும் இரும்பொறை யென்ப தொன்றும் கற்பெனும் பெயர தொன்றும் களி நடம் புரியக் கண்டேன்' (திருவடி தொழுத படலம். 62) என்று கூறிச் சென்ற மையான் வலியுறும். (116)

446. மேருவை யுருவ வேண்டின்
விண்பிளந் தேக வேண்டின்
ஈரெழு புவனம் யாவு
முற்றுவித் திடுதல் வேண்டின்
ஆரியன் பகழி வல்ல
தறிந்திருந் தறிவி லாதாய்
சீரிய வல்ல சொல்லித்
தலைபத்துஞ் சிந்து வாயோ.

மேருவை உருவ வேண்டின், விண் பிளந்து ஏகவேண்டின்,
ஈர் எழு புவனம் யாவும் முற்றுவித்திடுதல் வேண்டின்,
ஆரியன் பகழி வல்லது; அறிந்திருந்து அறிவு இலாதாய்!
சீரிய அல்ல சொல்லித் தலை பத்தும் சிந்துவாயோ ?

அறிவிலாதாய்! ஆரியன் பகழி, மேருவை உருவ வேண்டின் வல்லது; விண்பிளந்தேக வேண்டின் வல்லது; ஈரெழுபுவனம் யாவும் முற்றுவித்திடுதல் வேண்டின் வல்லது; அறிந்திருந்தும் சீரிய அல்ல சொல்லித் தலைபத்தும் சிந்துவாயோ? என்க. ஆரியன் - பூசிக்கத் தக்கவன் : என்றது இராமபிரானை. பகழி - அம்பு. ஈர் எழு புவனம் யாவும் - பதினான்கு உலகங்களையும் முழுதும். முற்றுவித் திடுதல் - அழித்தல். அறிந்திருந்தும் என உம்மை விரிக்க; இராம

பிரானம்பின் ஆற்றலை முன்னே சூர்ப்பநகையாலும் மாரீசனாலும் நன்கு அறிந்திருந்தும் என்றவாறு. (117)

447. அஞ்சினை யாத லாலன்
றாண்டகை யற்ற நோக்கி
வஞ்சனை மானொன் றேவி
மாயையான் மறைத்து வைத்தாய்
உஞ்சனை போதி யாயின்
விடுதியுன் குலத்துக் கெல்லாம்
நஞ்சினை யெதிர்ந்த போது
நோக்குமோ நினது நாட்டம்.

அஞ்சினை ஆதலால் அன்று
ஆண்தகை அற்றம் நோக்கி,
வஞ்சனை மான் ஒன்று ஏவி,
மாயையால் மறைத்து வைத்தாய்;
உஞ்சனை போதி ஆயின்,
விடுதி! உன் குலத்துக்கெல்லாம்
நஞ்சினை எதிர்ந்த போது
நோக்குமோ நினது நாட்டம்?

முன் பாட்டில் உள்ள 'அறிவிலாதாய்!' என்னும் விளியினை இங்கும், பின்வரும் பாடல்களில் வேண்டும் இடங்களிலும் ஒட்டிக் கொள்க. அறிவிலாதாய்! அஞ்சினை, ஆதலால் அன்று மாயையால் வஞ்சனை மான் ஒன்று ஏவி, ஆண்டகை அற்றம் நோக்கி (என்னைக் கவர்ந்து வந்து) மறைத்து வைத்தாய்! உன் குலத்துக்கெல்லாம் நஞ்சினை எதிர்ந்தபோது நினது நாட்டம் நோக்குமோ? உஞ்சனை போதியாயின் விடுதி என இயைக்க. வஞ்சனைமான் – பொய்ம்மான். ஆண்டகை அற்றம் நோக்கி - ஆடவருள் உயர்ந்தோனை இராம பிரான் இல்லாத சமயம் பார்த்து. மறைத்து வைத்தாய் - (என்னைக் கவர்ந்து வந்து) ஒளித்து வைத்தாய். உன் குலத்துக்கெல்லாம் நஞ்சினை - உன் குலத்திற் பிறந்த அரக்கர்க்கெல்லாம் நஞ்சுபோல்ப வனை இராமபிரானை. எதிர்ந்தபோது - நேர் பட்ட போது. நினது நாட்டம் - உன் கண்கள். நோக்குமோ ? - காணுமோ ? (காணா என்றவாறு). உஞ்சனை போதியாயின் - நீ உய்ந்து (பிழைத்துப்) போகும் நினைவுடையையானால். விடுதி - (என்னை அவ் இராம பிரான் பால்) கொண்டுபோய்விடு. (118)

448. பத்துள தலையுந் தோளும்
பலவுள பகழி தூவும்
வித்தக வில்லி னுற்குத்
திருவிளை யாடற் கேற்ற
சித்திர விலக்க மாகு
மல்லது செருவி லேற்கும்
சத்தியை போலு மேனுட்
சடாயுவாற் றரையின் வீழ்ந்தாய்.

பத்து உள தலையும் தோளும்
பல உள பகழி தூவும்
வித்தக வில்லினுற்குத்
திருவிளையாடற்கு ஏற்ற
சித்திர இலக்கம் ஆகும்;
அல்லது செருவில் ஏற்கும்
சத்தியை போலும்? மேல் நாள்
சடாயுவால் தரையின் வீழ்ந்தாய்.

(அறிவு இ(ல்)லாதாய்!) மேல் நாள் சடாயுவால் தரையின் வீழ்ந்தாய்; (நின்) பத்து உ(ள்)ள தலையும், பல உ(ள்)ள தோளும், வித்தக வில்லினுற்கு, திருவிளையாடற்கு ஏற்ற பகழிதூவும் சித்திர இலக்கம் ஆகும்; அல்லது (நீ) செருவில் (அவ்விராமபிரானை) ஏற்கும் சத்தியைபோலும்: என இயைக்க. மேல் நாள் - முன் (நீ என்னைக் கவர்ந்து வந்த) காலத்து. சடாயு - கழுகின்வேந்து. பத்து உ(ள்)ள தலையும் - பத்தாகவுள்ள உன் தலைகளும். பல உ(ள்)ள தோளும் - பலவாகவுள்ள உன் தோள்களும். வித்தக வில்லினுற்கு - ஆற்றல் அமைந்த வில்லாளியான இராமபிரானுக்கு; வித்தகம் - சாமர்த்தியம் (— ஆற்றல்). 'வித்தகமும் விதிவசமும்' (பால. கார்முகப். 19.) சித்திர இலக்கம் ஆகும் - அதிசயமான இலக்க மாகும். சித்திரம் — அதிசயம்; 'சித்திரமிங்கிதுவொப்ப தெங்குண்டு' (பால. கார்முகப் 19.) இலக்கம் — அம்பெய்யும் குறி. அல்லது - அன்றி. செருவில் - போரில். ஏற்கும் சத்தியை போலும் - இராம பிரானுெடு எதிர்த்து நிற்கும் ஆற்றலுடையை போலும்! (ஆற்ற லுடையை யல்லை என்றவாறு). (119)

449. தோற்றனை பறவைக் கன்று
துள்ளுநீர் வெள்ளஞ் சென்னி
ஏற்றவன் வாளால் வென்ரு
யின்றெனி னிறத்தி யன்றே

நோற்றநோன் புடைய வாணுள்
வரமிவை நுனித்த வெல்லாம்
கூற்றினுக் கன்றே வீரன்
சரத்துக்குங் குறித்த துண்டோ.

தோற்றனை பறவைக்கு அன்று;
துள்ளும் நீர் வெள்ளம் சென்னி
ஏற்றவன் வாளால் வென்ருய்,
இன்று எனின் இறத்தி அன்றே!
நோற்ற நோன்பு, உடைய வாள் நாள்,
வரம், இவை நுனித்த எல்லாம்,
கூற்றினுக்கு அன்றே? வீரன்
சரத்துக்கும் குறித்தது உண்டோ?

அறிவு இ(ல்)லாதாய்! அன்று பறவைக்குத் தோற்றனை என்க. அன்று-(நீ என்னைக் கவர்ந்த) அந்நாள். பறவை என்றது சடாயுவை. துள்ளும் நீர் வெள்ளம் - செருக்குற்றுப் பொங்கிப் பாய்ந்த கங்கை நீர்ப்பெருக்கை. சென்னி, ஆகுபெயராய்ச் சடையை யுணர்த்தியது. சென்னியேற்றவன் - சடையில் தாங்கிய சிவபெருமான் (அளித்த). வாளால் - வாளினுல்; இன்றெனின் - (அவ்வாள்) இல்லையென்ருல். இறத்தி - இறந்துபடுவாய் (சாவாய்). நோற்ற ......நுனித்த எல்லாம் – நோற்ற நோன்பினுல் நீ உடைய வாளும் நாளும் வரமும் ஆகிய இவைகளும் (மற்றும் உனக்குப் பாதுகாப்பாக) நீ ஆராய்ந்து தேடிக்கொண்டவைகளும் ஆகிய எல்லாம். கூற்றினுக்கன்றே குறித்தது - எமன் உன்னை அணுகாதிருத்தற்பொருட்டு எல்லை வரையறுத்ததன்ருே? வீரன் சரத்துக்கும் குறித்ததுண்டோ?- இராமபிரானம்பு நின்னை அணுகாமைக்கும் வரையறுத்ததுண்டோ? வாணுள் என்பதனை உம்மைத் தொகையாகக் கோடலே கவி கருத்தென்பது, 'பெற்றுடைவாளும் நாளும்' என அடுத்த பாடலில் (450) வருவதுகொண்டு அறியலாம். (120)

450. பெற்றுடை வாளு நாளும்
பிறந்துடை யுரனும் பின்னும்
மற்றுடை யெவையுந் தந்த
மலரவன் முதலோர் வார்த்தை

விற்ரொடை யிராமன் கோத்து
விடுதலும் விலக்குண் டெல்லாம்
இற்றுடைந் திறுதன் மெய்யே
விளக்கின்முன் னிருளுண் டாமோ.

பெற்று உடை வாளும், நாளும்,
பிறந்து உடை உரனும், பின்னும்
மற்று உடை எவையும் தந்த
மலரவன் முதலோர் வார்த்தை,
வில் தொடை இராமன் கோத்து
விடுதலும், விலக்குண்டு, எல்லாம்
இற்று உடைந்து இறுதல் மெய்யே!
விளக்கின் முன் இருள் உண்டாமோ?

(அறிவில்லாதாய்! நீ) பிறந்து உடை(ய) உரனும், பின்னும் பெற்று உடை(ய) வாளும் நாளும், மற்று(ம்) உடை(ய) எவையும் தந்த மலரவன் முதலோர் வார்த்தை(யும்), (ஆகிய எல்லாம்) இராமன் வில்தொடை கோத்துவிடுதலும் விலக்குண்டு இற்று உடைந்து இறுதல் மெய்யே!; விளக்கின்முன் இருள் உண்டாமோ? என இயைக்க. பிறந்து உடை(ய) உரனும் – நீ அரக்கர்குலத்துப் பிறந்தமையால் உன்பால் இயல்பான் உளதாகிய வலிமையும். 'பிறந்து நீயுடைப் பிரிவில் தொல்லறம்' என்ருர் முன்னும் (அயோத்தியா. திருவடிசூட். 102). பின்னும் பெற்றுடை வாளும் நாளும் - மேலும் நீ தவம் செய்து பெற்றுள்ள வாட்படையும் நிறைந்த வாழ்நாளும். மற்று(ம்) உடை(ய) எவையும் தந்த மலரவன் முதலோர் வார்த்தை(யும் ஆகிய) எல்லாம் – மேலும் நீ உடைய எல்லாவற்றையும் உனக்குக் கொடுத்த பிரமன் முதலியோர் (நல்கிய) வரங்களும் ஆகிய யாவையும். இராமன் வில் தொடை கோத்து விடுதலும் – இராமபிரான் வில்லில் அம்பை ஏறிட்டு விட்ட அளவில். தொடை - அம்பு. விலக்குண்டு - நீங்கி. இற்று உடைந்து என்னும் செய்தெனெச்சங்களைச் செயவெனெச்சமாகத் திரித்து, நீ பிறந்து உடைய உரனும் பெற்று உடைய வாளும் நாளும் இற, மற்று உடைய எவையும் தந்த மலரவன் முதலோர் வார்த்தை உடைய – (அழிய) என உரைக்க. இறுதல் – (நீயும்) இறந்துபடுதல். மெய் - சத்தியம். இராவணனுக்கு இருளும் இராம பிரானுக்கு விளக்கும் உவமை கருத நின்றன. (121)

451. குன்றுநீ யெடுத்த நாட்டன்
சேவடிக் கொழுந்தா லுன்னை
வென்றவன் புரங்கள் வேவத்
தனிச்சரந் துரந்த மேரு
என்றுணைக் கணவ னூற்றற்
குரனிலா திற்று வீழ்ந்த
அன்றெழுந் துயர்ந்த வோசை
கேட்டிலை போலு மம்மா.

குன்றுநீ எடுத்தநாள் தன்
சேவடிக் கொழுந்தால் உன்னை
வென்றவன் புரங்கள் வேவத்
தனிச் சரம் துரந்த மேரு
என் துணைக் கணவன் ஆற்றற்கு
உரன் இலாது இற்று வீழ்ந்த
அன்று எழுந்து உயர்ந்த ஓசை
கேட்டிலை போலும் அம்மா!

நீ குன்று எடுத்தநாள் என மாறிக்கூட்டுக. குன்றென்றது கயிலை மலையை. தன் சேவடிக் கொழுந்தால் உன்னை வென்றவன் - தன் செவ்விய அடியின் கொழுந்தாகிய ஒரு விரலால் (அழுத்தி) உன்னை வெற்றி கொண்ட சிவபெருமான். வேவ – வேகும்படி. தனிச்சரம் - ஒப்பற்ற அம்பு. துரந்த - எய்த. மேரு - மேருமலை யாகிய வில். உரன் - வலி. அம்மா—வியப்பிடைச்சொல். மேருவில் இற்றது மிதிலையில் நிகழ்ந்தது. அவ்வில் இறுங்கால் பேரொலி எழுந்ததென்பது, 'கணிச்சிவானவன்......மூரிவில், இற்ற பேரொலி கொல் அன்று இடித்தது இங்கென்றான்' (பால. எழுச்சிப். 5) 'சிலையை நீ இறுத்த வோசை செவியுறச் சீறிவந்தேன்' (பால. பரசுராமப். 34.) என முன்னும் கூறப்பட்டது. (122)

452. மலையெடுத் தெண்டிசை காக்கு மாக்களை
★ நிலைகெடுத் தேனெனு மாற்ற நேருநீ
சிலையெடுத் திளையவ னிற்கச் சேர்ந்திலை
தலையெடுத் தின்னமு மகளிர்த் தாழ்தியோ.

மலை எடுத்து எண்திசை காக்கும் மாக்களை
நிலை கெடுத்தேன் எனும் மாற்றம் நேரும்நீ

சிலை எடுத்து இளையவன் நிற்கச் சேர்ந்திலை,
தலை எடுத்து இன்னமும் மகளிர்த் தாழ்தியோ ?

மலை - கயிலை. எடுத்து - தூக்கி. 'எண்திசை காக்கும் மாக்களை நிலைகெடுத்தேன்' என்பது இராவணன் வீரவாதம். இக்கூற்று, சிலேடை வாய்பாட்டால் எட்டுத் திசைகளையும் காக்கின்றவர்களை நிலைகெடச் செய்து வென்றேன், எட்டுத்திசைகளையும் காக்கின்ற யானைகளை நிலைகெடச் செய்து வென்றேன் என இருபொருள் பயந்துநின்றது. மாற்றம் - பேச்சு. நேரும் நீ - சொல்லுகின்ற நீ. இளையவன் சிலையெடுத்து நிற்கச் சேர்ந்திலை எனக் கூட்டுக. இளையவன் - இலக்குவன். சிலை - வில். இளையவன் வில்லேந்தி என்னைக் காத்து நின்றபோது உன்னாற்றல் தோன்ற வந்தாயில்லை என்றவாறு. இளையவன் சிலையெடுத்து நிற்க அவனோடு பொருதற்குச் சென்றாயில்லை எனினும் ஆம். தலை எடுத்து - தலைதூக்கி; மகளிர்த் தாழ்தியோ - பெண்களை வணங்குவாயோ! (அதுதான் உன் வீரப்பாட்டுக்குப் பொருந்துவதோ என்றவாறு.) (123)

453. ஏழைநின் னொளித்துறை யின்ன தாமென
வாழியெங் கோமக னறிய வந்தநாள்
ஆழியு மிலங்கையு மழியத் தாழுமோ
ஊழியுந் திரியுமுன் னுயிரொ டோயுமோ.

ஏழை! நின் ஒளித்துறை இன்னது ஆம் என
ஆழி எம் கோமகன் அறிய வந்த நாள்
ஆழியும் இலங்கையும் அழியத் தாழுமோ ?
ஊழியும் திரியும் ; உன் உயிரொடு ஓயுமோ ?

ஏழை ! - அறிவிலி !. நின் ஒளித்துறை - உன்னுடைய மறைந்து வசிக்கும் இடம். இன்னது என - இது வென்று. ஆம் அசை. ஆழி எம் கோமகன் அறியவந்த நாள் - (ஆணையாகிய) சக்கரத்தையுடைய எங்கள் சக்கரவர்த்தித் திருமகனாகிய இராமபிரான் அறிந்துகொள்ள நேர்ந்தபோது. வாழி எம் கோமகன் என்று கொண்டு, வாழியென்பதை அசையாக்கலும் ஆம். அன்றியும், வாழி என்பதனை வாழ்த்தாகக் கொண்டு எம் கோமகன் என்பதை மீண்டும் கூட்டி, வாழி எம் கோமகன், எம் கோமகன் அறியவந்த நாள் என்று கொண்டு உரைத்தலும் ஆம். ஆழி-கடல். அழிய - அழிந்து பட. தாழுமோ - எம் கோமகன் சினம் தணிவானோ ? (தணியான்). அன்றியும், நின் உயிரொடு ஓயுமோ - உன் உயிரினையுண்டு அதனோடு எம் கோமகன் சினம் ஒடுங்குவதோ? (ஒடுங்காது). ஊழியும் திரியும். (அவன் சினத்தினால்) ஊழியும் வேறுபடும். ஊழி - உகம். (124)

454. வெஞ்சின வரக்கரை விளித்து வீயுமோ
வஞ்சனை நீசெய வள்ளல் சீற்றத்தால்
எஞ்சலி லுலகெலா மெஞ்சு மெஞ்சுமென்
றஞ்சுகின் றேனிதற் கறமுஞ் சான்றரோ.

வெம் சின அரக்கரை விளித்து வீயுமோ ?
வஞ்சனை நீசெய, வள்ளல் சீற்றத்தால்
எஞ்சல் இல் உலகெலாம் எஞ்சும்! எஞ்சும்! என்று
அஞ்சுகின்றேன் ; இதற்கு அறமும் சான்று அரோ!

மேற்பாட்டில் 'இராமபிரான் சினம் நின் உயிரொடு ஓயாது என்ருள்' என்றவர், இப்பாட்டில் 'அச்சினம் உன் அரக்கரினத்தையும் ஒழித்து அவ்வளவின் அமைவதன்று; அதனல் அழியாத உலகங்களும் அழிந்து படுமோ என்று அஞ்சுகின்றேன்; இறப்பப் பெரியார்சினம், குற்றவாளிகளை அவரினத்தோடும் சார்ந்தாரோடும் கெடுக்கும் என்பதற்கு அறநூலும் சான்று என்ருள்' என்கிருர். நீ வஞ்சனை செய(லால் எழுந்த) வள்ளல் சீற்றம், வெம்சின அரக்கரை விளித்து (அவ்வளவில்) வீயுமோ? (வீயாது; அச்) சீற்றத்தால் உலகெலாம் எஞ்சும் எஞ்சும் என்று அஞ்சுகின்றேன்; இதற்கு அறமும் சான்று என இயைக்க. அரோ அசை. வள்ளல் என்றது இராமபிரானை. விளித்து - அழித்து. வீயுமோ? - ஒழியுமோ? (ஒழியாது). எஞ்சலில் உலகெலாம் எஞ்சும் எஞ்சும் என்று - கெடாதவுலகமெல்லாம் அழிந்துவிடுமோ? அழிந்துவிடுமோ? என்று. இதற்கு - இறப்பப் பெரியார் சினம், குற்றவாளியையும் அவன் இனத்தையும் அழிக்கும் என்பதற்கு. அறமும் சான்று - அறநூலும் சாட்சி (அறநூலும் இவ்வாறே கூறும் என்றவாறு). பெரியோர் சினத்துக்கு ஆளாயினர் இனத்தோடு அழிவர் : என்பது யான் கூறும் புனைந்துரையன்று; அறநூலுரை என்றவாறு. இங்கு ஆசிரியர் அறம் என்றது, பொதுவாக அறநூல்களையும் சிறப்பாகத் திருக்குறள் நூலையும் சுட்டும். 'குன்றன்னர் குன்ற மதிப்பிற் குடியொடு, நின்றன்னர் மாய்வர் நிலத்து' என்பது அவ்வற நூலுரையன்ருே! 'இதற்கு அறமும் சான்று' என்ற தொடர்க்கு, 'இவ்வாறு நான் அஞ்சுவதற்குத் தருமதேவதையும் சாட்சியாகும்?' என்று உரை கூறுவாரும் உளர். இதற்கு என்பதனுள் இது என்னும் சுட்டு, முன் நின்ற அஞ்சுகின்றேன் என்பதைச் சுட்டுவதாகவும், அறம் என்பது அறக்கடவுளை (தருமதேவதையை)ச் சுட்டுவதாகவும் கோடலிற் பொருட்சிறப்பின்று; ஆகவே இதற்கு என்பது இறப்பப் பெரியார் திறத்துத் தவறு செய்தோர் கிளையொடும் சார்ந்தாரோடும் கெடுவர் என்பது சுட்டுவதாகவும், அறம் என்பது அறநூல்களைச் சுட்டுவதாகவும் கொண்டு மேலுரைத்தவுரையே அமைவுடைய

தென்பது போதரும். அறம் என்பது அறநூலை யுணர்த்திவருதல், 'செய்த தீவினை செய்தவர்க்கு எய்திடும் - ஐயமில்லை அறம் கரி யாதலால்', 'செய்தி கொன்றோர்க்கு உய்தியில்லென - அறம் பாடிற்றே ஆயிழை கணவ' (புறம். 34) என்னும் ஆன்றோர் கூற்றுக் களால் விளங்கும். (125)

**455.** அங்கண்மா ஞாலமும் விசும்பு மஞ்சவாழ்
வெங்கணாய் புன்றொழில் விலக்க மேற்கொளாய்
செங்கண்மா னான்முகன் சிவனென் றேகொலோ
எங்கணா யகனையு நினைந்த தேழைநீ.

அங்கண்மா ஞாலமும் விசும்பும் அஞ்ச வாழ்
வெங்கணாய்! புன் தொழில் விலக்க மேற்கொளாய்!
செங்கண்மால், நான்முகன், சிவன் என்றே கொலோ
எங்கள் நாயகனையும் நினைந்தது? ஏழை நீ!

ஏழை! வெங்கணாய்? புன்தொழில் விலக்க மேற்கொளாய்; நீ எங்கள் நாயகனையும் செங்கண்மால் நான்முகன் சிவன் என்றே கொல் நினைந்தது: என இயைக. அங்கண்மாஞாலமும் - அழகிய இடத்தையுடைய பெரிய பூமியில் உள்ளாரும். விசும்பும் - வானுல கத்தாரும். ஞாலமும் விசும்பும் ஆகுபெயராய் அங்கங்குள்ளாரை உணர்த்தின. வெங்கணாய் - கொடுமையுடையாய்! புன்தொழில் விலக்க மேற்கொளாய் - உன் இழிதொழிலை விட முயல்கின்றாயில்லை; மேற்கொளல் - முயலுதல் (திருக்குறள் 262). உன் இழிதொழில் கண்டு முத்தேவரும்போல் வாளா இராது எங்கள் நாயகன் உன்னைத் தண்டித்து ஒறுப்பான்; ஆதலால் உன் இழிதொழிலை விட்டிடுக என்றவாறு. (126)

**456.** மானுய ரிவரென மனக்கொண் டாயெனின்
கானுயர் வரைநிகர் கார்த்த வீரியன்
தானொரு மனிதனற் றவத்து ளாரெனில்
தேனுயர் கொன்றையான் றன்மை தேர்தியால்.

மானுயர் இவர் என மனக் கொண்டாய் எனின்,
கான் உயர் வரை நிகர் கார்த்த வீரியன்
தான் ஒரு மனிதனல்; தவத்துளார் எனில்
தேன் உயர் கொன்றையான் தன்மை தேர்தியால்!

இவர் மானுயர் என மாறிக்கூட்டுக. இவர் என்பதனை மீண்டும் கூட்டி, இவர் தவத்துளார் எனில் என்க. இவர் என்றது இராமலக்குமணரை. மானுயர் - மானுடர். மானுடர் வலியற்றவர்; பெருந்தேவரையெல்லாம் வென்ற என்னை இவர் என் செய்ய வல்லர்? என்று நீ எண்ணின் என்பது முதலடிப்பொருள். கான் உயர்வரை – காடுகள் வளர்ந்தோங்கிய மலை. கார்த்தவீரியன் உடலுக்கு மலையும், அவன் கைகளுக்கு அம்மலையின்கண் வளர்ந்த காடும் உவமை. கார்த்தவீரியனும் ஒரு மனிதனே என உம்மையும் ஏகாரமும் விரிக்க. தான் ஆல் அசை. மனிதனாகிய கார்த்த வீரியன்பால் நீ தோற்றிலையோ என்பது குறிப்பு. தவத்துளார் எனில் தவநிலை மேற்கொண்டவர், இவர் சருகும் இலையும் தின்றும் தண்ணீர் பருகியும் வாழ்பவர்; ஆதலின் வலியற்றவர்; இவர் என்னை என்செய்யவல்லர்? என்று நீ எண்ணின் என்றவாறு. தேன் உயர் கொன்றையான் தன்மை தேர்தி – தேன்மிக்க கொன்றை மாலையை அணிந்த சிவபெருமானுடைய ஆற்றலை அறிவாயாக; என்றது அவனும் ஒரு தவசிதானே; அவன் கால்விரலொன்றினால் நீ பட்டது அறியாயோ என்றவாறு. சிவபிரானைத் தவசியாகக் கூற லுண்டென்பது, 'நீரறவறியாக் கரகத்துத், தாழ்சடைப் பொலிந்த அருந்தவத்தோற்கே' (புறம். கடவுள் வாழ்த்து) என்பதனாலும் விளங்கும். (127)

457\. இருவரென் றிகழ்ந்தனை யென்னின் யாண்டெல்லை
ஒருவனன் றேயுல கழிக்கு மூழியான்
செருவருங் காலவர் மேன்மை தேர்தியால்
பொருவருந் திருவிழந் தாயுள் பொன்றுவாய்.

இருவர் என்று இகழ்ந்தனை என்னின், யாண்டு எல்லை
ஒருவன் அன்றே உலகு அழிக்கும் ஊழியான்!
செரு வருங்கால் அவர் மேன்மை தேர்தியால்!
பொரு அரும் திரு இழந்து ஆயுள் பொன்றுவாய்!

பொரு அரும் திரு இழந்து ஆயுள் பொன்றுவாய் (அவர்) இருவர் என்று இகழ்ந்தனை யென்னின், யாண்டெல்லை உலகு அழிக்கும் ஊழியான் ஒருவனன்றே; அவர் மேன்மை செரு வருங்கால் தேர்தி என இயைக்க. பொரு அரும் திரு இழந்து ஆயுள் பொன்றுவாய் - ஒப்பில்லாத செல்வத்தையும் இழந்து, அதன்மேல் நீண்ட ஆயுளும் அழிய நிற்பவனே! அவர் இருவர் என்று இகழ்ந்தனையென்னில் – அவ்விராமலக்குமணரோ இருவர், (நாங்களோ கணக்கற்றவர்களா யுள்ளோம்; அவரால் எங்களை என்னதான் செய்ய இயலும்) என்று இகழ்ந்தாயேல். யாண்

டெல்லே உலகு அழிக்கும் ஊழியான் ஒருவனன்றே - (வகுத்த) ஆண்டுகளின் முடிவில் உலகங்களையெல்லாம் அழிக்கும் கடவுள் ஒருவனல்லனே! அவர் மேன்மை - அவ்விராம லக்குமணர் பெருமை (யும் உன் சிறுமையும்). செருவருங்கால் – போர் நிகழுங்கால். தேர்தி- தெளிவாய். (128)

458. பொற்கணன் றம்பியென் றினைய போர்த்தொழில்
விற்கணாண் பொருததோ ளவுணர் வேறுளார்
நற்கணார் நல்லறந் துறந்த நாளினும்
இற்கண ரிறந்தில ரிறந்து நீங்கினர்.

பொற்கணன், தம்பி, என்று இனைய போர்த் தொழில்
விற்கண் நாண் பொருத தோள் அவுணர், வேறு உளார்
நற்கணார் நல்லறம் துறந்த நாளினும்,
இற்கணர் இறந்திலர், இறந்து நீங்கினர்.

பொற்கணன் என்று, (பொற்கணன்) தம்பி என்று, இனைய போர்த்தொழில் விற்கண் நாண்பொருத தோள் அவுணர், இறந்து நீங்கினர், நற்கணார் நல்லறம் துறந்தநாளினும், வேறுளார் இற் கணர் இறந்திலர் என இயைக்க. பொற்கணன்.........அவுணர் - இரணியனும் அவன் தம்பி இரணியாக்கனும் ஆகிய இப்படிப்பட்ட போர்த்தொழில்வல்ல, வில்லினிடத்துள்ள நாண் உராய்ந்த தோளி னையுடைய அசுரரும். பொற்கணன் என்பது பின்னும், என்று என்னும் எண்ணிடைச் சொல் முன்னும், கூட்டப்பட்டன. பொற் கணன் - பொன்மயமான வுடம்பையுடையான்; இரணியன். கண் - உடம்பு. ('பொன்கட் பச்சை' பரிபாடல் 3. 82). அவுணரும் என்பத னுள் உம்மை தொக்கது. இனைய அவுணர், போர்த்தொழி லவுணர், விற்கண் நாண்பொருத தோளவுணர் என்க. நற்க(ண்)ணார் நல் அறம் துறந்த நாளினும்-நல்லறிவுடையார் மேற்கொள்ளும் இறைவ னடியடைதல் ( - சரணகதி) ஆகிய நல்லறச்செயலைக் கைவிட்ட காலத்தும்; கண் - அறிவு. (கள்ளொற்றிக் கண் சாய்பவர், திருக். 927). நற்கணார் நல்லறம் துறத்தலாவது இறைவன் ஆண்டானும் தாம் அடிமைகளும் ஆகிய நிலையினின்று மாறித் தாங்களே இறைவ ராய் நிற்றல். வேறு உளார் இல் க(ண்)ணர், இறந்திலர் - பிறர் மனைவியரை (விரும்பி) நினைத்திலர்; அவர்திறத்து நெறிகடந்து செல்லுதலும் செய்திலர். அறன்கடை நின்றாராகிய இரணியனும் இரணியாக்கனும் செய்யாத பிறன்கடை நிற்றலாகிய கொடுஞ் செயல் புரிகின்ற நீ எங்ஙனம் உய்திபெறுவாய் என்றவாறு. (129)

459. பூவிலோ ணாதி யாகப்
★ புலன்கள்போ நெறியிற் போகாத்
தேவரோ வவுணர் தாமோ
நிலைநின்று வினையிற் றீர்ந்தார்
ஏவர்மூ வுலகின் செல்வ
மெய்தின ரிசையி னேழாய்
பாவமோ முன்னீ செய்த
தருமமோ தெரியப் பாராய்.

பூ இலோன் ஆதியாகப்
புலன்கள் போம் நெறியிற் போகாத்
தேவரோ, அவுணர் தாமோ,
நிலைநின்று வினையில் தீர்ந்தார்?
ஏவர் மூவுலகின் செல்வம்
எய்தினர்? இசையின், ஏழாய்!
பாவமோ? முன் நீ செய்த
தருமமோ? தெரியப் பாராய்!

ஏழாய்! (நின்) வினையில் தீர்ந்து தம் நிலைநின்ருர் தேவரோ? அவுணரோ? ஏவர்? மூவுலகின் செல்வமும் எய்தினர் தேவரோ? அவுணரோ ஏவர்? இவை நிற்கு இசையின் (அதற்குக் காரணம்) நீ முன்னர்ச் செய்த பாவமோ? தருமமோ? தெரியப் பாராய் என இயையும். பூ இ(ல்)லோன் ஆதியாக – (தாமரைப்) பூவை வாழுமிடமாக வுடைய பிரமன் முதலாக (வுள்ள). புலன்கள் போம் நெறியிற் போகாத் தேவரோ – பொறிகள் சென்ற நெறியிற் செல்லாத (-மனத்தை அடக்கி ஒழுகிய) தேவர்களோ. அவுணரோ - அசுரர்களோ. தாம்: அசை. (நின்) வினையில் தீர்ந்து (தம்) நிலைநின்ருர் ஏவர்? என விகுதி பிரித்துக்கூட்டி, உனக்குப் பணி செய்யுந் தொழிலின் நீங்கித் தம் பதவியில் நிலைத்துநின்றவர் யார்? (ஒருவரும் இல்லை. தேவரும் அசுரரும் உன்கீழ் அடங்கி உன்தொண்டு புரிகின்றனர்) என்று பொருளுரைக்க. இடைநிலை விளக்காய் நின்ற ஏவர் என்பதனைப் பின்வரும் தொடரொடும் இயைக்க. ஏவர் மூவுலகின் செல்வமும் எய்தினர் என முற்றும்மை விரிக்க. தேவரோ அவுணரோ எவர்தாம் மூன்றுலகின் செல்வங்களையும் ஒருசேரப் பெற்றனர்? (ஒருவரும் இல்லை) என்று பொருள் உரைக்க. இசையின் - (தேவரும் அவுணரும் அடிமைசெய்ய நாயகனாய் வாழும் நிலையும் மூன்றுலகச் செல்வமும் ஒருங்கு நின்பால்) இயைந்த தென்ருல் (அதற்குக் காரணம்). அதற்குக் காரணம் என்பது அவாய்நிலையான் வருவித்

துரைக்கப்பட்டது. இவ்வாறு நல்வினை (தவம் முதலியன) செய்து உயர் நிலையும் பெருஞ் செல்வமும் எய்திய நீ, பிறர்மனை நயத்த லாகிய தீவினையால் அவற்றை இழக்கலாமோ என்றவாறு. (130)

460. இப்பெருஞ் செல்வ நின்க
ணீந்ததோ ரீசன் யாண்டும்
அப்பெருஞ் செல்வந் துய்ப்பா
னின்றுமா தவத்தி னன்றே
ஒப்பருந் திருவு நீங்கி
யுறவொடு முலக்க வுன்னித்
தப்புதி யறத்தை யேழாய்
தருமத்தைக் காமியாயோ

இப் பெரும் செல்வம் நின் கண்
ஈந்தது, ஓர் ஈசன், யாண்டும்
அப்பெரும் செல்வம் துய்ப்பான்
நின்று மாதவத்தின் அன்றே?
ஒப்பு அரும் திருவும் நீங்கி,
உறவொடும் உலக்க உன்னித்
தப்புதி அறத்தை, ஏழாய்!
தருமத்தைக் காமியாயோ?

ஏழாய்! ஓர் ஈசன் இப்பெருஞ் செல்வம் நின்கண் ஈந்தது, (நீ) யாண்டும் மாதவத்தின் நின்று அப்பெருஞ் செல்வம் துய்ப்பான் அன்றே? (நீ) ஒப்பருந் திருவும் நீங்கி உறவொடும் உலக்க அறத் தைத் தப்புதி; தருமத்தை உன்னிக் காமியாயோ? என இயைக்க. ஓர் ஈசன் – ஒப்பற்ற சிவபெருமான். யாண்டும் மாதவத்தின் நின்று அப்பெருஞ் செல்வம் துய்ப்பான் அன்றே – (நீ) எப்பொழுதும் பெரிய தவநெறியிலே தப்பாது ஒழுகி அந்தப் பெரிய செல்வத்தை அநு பவிக்க வேண்டும் என்ற அருளால் அல்லவா? ஒப்பு அரும் திருவும் நீங்கி – ஒப்பில்லாத செல்வமும் தொலைந்து. உறவொடும் உலக்க - சுற்றத்தோடும் அழியும்படி. அறத்தை – அறவொழுக்கத்தை. தப்புதி – விடுகிறாய். தருமத்தை உன்னிக் காமியாயோ - (இத்தனை பெருமையையும் செல்வத்தையும் உனக்குத் தந்த) அறத்தினை எண்ணி அதை விரும்பமாட்டாயா? (விரும்புவாயாக என்றபடி). (131)

461. மறந்திறம் பாத தோலா
வலியின ரெனினு மாண்டார்
அறந்திறம் பினரு மக்கட்
கருடிறம் பினரு மன்றே
பிறந்திறந் துழலும் பாசப்
பிணக்குடைப் பிணியிற் றீர்ந்தார்
துறந்தரும் பகைகண் மூன்றுந்
துடைத்தவர் பிறர்யார் சொல்லாய்.

மறம் திறம்பாத தோலா
வலியினர் எனினும் மாண்டார்
அறம் திறம்பினரும் மக்கட்கு
அருள் திறம்பினரும் அன்றே?
பிறந்து இறந்து உழலும் பாசப்
பிணக்கு உடைப் பிணியில் தீர்ந்தார்
துறந்து அரும் பகைகள் மூன்றும்
துடைத்தவர் பிறர் யார்? சொல்லாய்?

தோலா வலியினர் எனினும் அறம் திறம்பினரும் அருள் திறம் பினரும் மாண்டாரன்றே: அரும் பகைகள் மூன்றும் துறந்து துடைத் தவர், பிறந்து இறந்து உழலும் பாசப் பிணக்கு உடைப் பிணியில் தீர்ந்தார்; பிறர் யார்? சொல்லாய் என இயைக்க. மறம் திறம்பாத வலி, தோலா வலி என்க. மறம் திறம்பாத - வீரத்தினின்றும் வழு வாத. தோலா - தோல்வியடையாத. வலியினர் எனினும் - ஆற்றலுடையராயினும். அறம் திறம்பினரும் - அறநெறியினின்று பிறழ்ந்தவரும். அருள் திறம்பினரும் - அருள் நெறியினின்று விலகினவரும். மாண்டாரன்றே - இறந்தாரல்லவா? துறந்து - பற்றுவிட்டு; அரும் பகைகள் மூன்றும் – வெல்லுதற்கரிய காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூன்று பகைகளையும். துடைத்தவர் - போக்கியவர்கள். பிறந்து இறந்து உழலும் பாசப் பிணக்கு உடைப் பிணியில் தீர்ந்தார் - பிறந்தும் செத்தும் திரிகிற பாசபந்தங்களை யுடைய நோயில் நின்றும் நீங்கியவராவர். பிறர் மறம் திறம்பாத தோலாவலியினர் எனினும் பிணியிற்றீர்ந்தாராவரோ? சொல்லாய் என்க. பிறர் - பகைகள் மூன்றும் துடையாதவர். எனவே நீ அறம் அருள் இவற்றைக் கடைப்பிடித்தும் பகை மூன்றும் வென்றும் நிலைத்த வாழ்வடைவாயாக என்றவாறு. (132)

462. தென்றமி ழுரைத்தோன் முன்னாத்
தீதுதீர் முனிவர் யாரும்
புன்றொழி லரக்கர்க் காற்றே
நோற்கிலம் புகுந்த போதே
கொன்றரு ளுன்னா லன்னார்
குறைவது சரதங் கோவே
என்றனர் யானே கேட்டே
னீயதற் கியைவ செய்தாய்.

தென் தமிழ் உரைத்தோன் முன்னாத்
தீது தீர் முனிவர் யாரும்,
'புன் தொழில் அரக்கர்க்கு ஆற்றேம்!
நோற்கிலம்! புகுந்த போதே
கொன்று அருள்! உன்னால் அன்னார்
குறைவது சரதம்! கோவே!'
என்றனர், யானே கேட்டேன்,
நீ அதற்கு இயைவ செய்தாய்.

தென் தமிழுரைத்தோன் முன்னாத் தீதுதீர் முனிவர் யாரும், புகுந்தபோதே, "கோவே? நோற்கிலம்; புன்தொழில் அரக்கர்க்கு ஆற்றேம்; அன்னார் உன்னால் குறைவது சரதம்; கொன்றருள்" என்றனர். யான் கேட்டேன்; நீ அதற்கு இயைவ செய்தாய் என இயைக்க. தென் தமிழ் உரைத்தோன் முன்னாத் தீதுதீர் முனிவர் யாரும் - இனிய தமிழிலக்கண நூலை யுரைத்த அகத்தியன் முதலாக வுள்ள குற்றமற்ற முனிவர் யாவரும்; புகுந்தபோதே - இராமபிரான் தண்டகாரணியத்துள் புகுந்த காலத்திலேயே. 'நோற்கிலம்......... கொன்றருள்' என்பது முனிவர் இராமபிரானை நோக்கிக் கூறியது. நோற்கிலம் - தவஞ்செய்ய இயலாதவராயினேம். (ஏனெனின்), புன் தொழில் அரக்கர்க்கு ஆற்றேம் - இழிதொழிலுடைய அரக்கரால் வலியழிந்தோம். அன்னார் - அவ்வரக்கர். உன்னால் குறைவது சரதம் - உன்னால் வலியழிவது சத்தியம். கொன்று - அரக்கரை அழித்து. அருள் - எங்கள்பால் கருணைசெய்வாயாக. அதற்கு - அத்தண்டகவன முனிவர் கூற்றுக்கு. இயைவ - பொருந்திய (தீய) செயல்களை. (133)

463. உன்னையுங் கேட்டு மற்றுன்
றூற்றமு முடைய நாளும்
பின்னையிவ் வரக்கர் சேனைப்
பெருமையு முனிவர் பேணிச்

சொன்னபி னுங்கை மூக்கு
மும்பியர் தோளுந் தாளும்
சின்னபின் னங்கள் செய்த
வதனை நீ சிந்தி யாயோ.

உன்னையும் கேட்டு, மற்று, உன் ஊற்றமும், உடைய நாளும், பின்னை, இவ் அரக்கர் சேனைப் பெருமையும் முனிவர் பேணிச் சொன்னபின், உங்கை மூக்கும், உம்பியர் தோளும், தாளும், சின்னபின்னங்கள் செய்த அதனை நீ சிந்தியாயோ?

உன்னையும் கேட்டு - உன்னையும் (முனிவர் முதலியோர் சொல்ல) அறிந்து. உன் ஊற்றமும் - உன் வலிமையும், உடைய நாளும் - நீ உடைய வாழ் நாளும். முனிவர் பின்னையும் பேணிச் சொன்னபின் - அகத்தியன் முதலிய முனிவர் மேலும் தம்மைப் பாதுகாத்துக் கொண்டு சொன்ன பிறகு; உங்கை - உன் தங்கை; என்றது சூர்ப்ப நகையை. உம்பியர் - உன் தம்பியர்: என்றது கரன், தூடணன், திரிசிரா என்போரை. சின்னபின்னம் – கண்ட துண்டம். (134)

**464.** ஆயிரந் தடக்கை யானின்
னைந்நான்கு கரமும் பற்றி
வாய்வழி குருதி சோரக்
குத்திவான் சிறையில் வைத்த
தூயவன் வயிரத் தோள்க
டுணித்தவன் றொலைந்த மாற்றம்
நீயறிந் திலையோ நீதி
நிலையறிந் திலாத நீசா.

ஆயிரம் தடக்கையால் நின் ஐந்நான்கு கரமும் பற்றி, வாய் வழி குருதி சோரக் குத்தி, வான் சிறையில் வைத்த தூயவன் வயிரத் தோள்கள் துணித்தவன் தொலைந்த மாற்றம் நீ அறிந்திலையோ? நீதி நிலை அறிந்திலாத நீசா!

நீதிநிலை அறிந்திலாத நீசா! உன்னை வென்று சிறையில் வைத்த கார்த்தவீரியனுடைய ஆயிரங்கைகளையும் வெட்டி வென்ற பரசுராமன் என் நாயகனால் வலியழிந் தொழிந்த மாற்றம் நீ அறிந் திலையோ! என்க. குருதி – இரத்தம். சோர - சிந்த. வான் சிறையில் – பெரிய சிறைக்கூடத்தில். தூயவன் - குற்றமற்றவன்: என்றது கார்த்தவீரியார்ச்சுனனை. தூயவன் வயிரத்தோள்கள் துணித்

தவன் - கார்த்தவீரியனுடைய வலிய ஆயிரம் தோள்களையும் அறுத்த பரசுராமன். தொலைந்த மாற்றம் - இராமபிரானால் வலியழிந் தொழிந்த வார்த்தை. (135)

**465.** கடிக்கும்வல் லரவுங் கேட்கு
மந்திரங் களிக்கின் றோயை
அடுக்குமீ தடாதென் றான்ற
வேதுவோ டறிவு காட்டி
இடிக்குந ரில்லை யுள்ளா
ரெண்ணிய தெண்ணி யுன்னை
முடிக்குந ரென்ற போது
முடிவன்றி முடிவ துண்டோ.

கடிக்கும் வல்அரவும் கேட்கும்
மந்திரம்; களிக்கின்றோயை
'அடுக்கும், ஈது அடாது!' என்று ஆன்ற
ஏதுவோடு அறிவு காட்டி
இடிக்குநர் இல்லை; உள்ளார்
எண்ணியது எண்ணி உன்னை
முடிக்குநர் என்ற போது,
முடிவு அன்றி முடிவது உண்டோ?

அரவும் மந்திரங் கேட்கும் என்க. கடித்துக் கொல்லும் கொடிய பாம்பும் மந்திரம் கேட்டு அடங்கும் என்றவாறு. களிக்கின்றோயை - செருக்குற்று நிற்கின்ற உன்னை. உன்னை இடிக்குநர் இல்லையென்க. ஈது என்பது ஈது அடுக்கும், ஈது அடாது என முன்னும் பின்னும் இயையும். ஈது அடுக்கும் - இது பொருந்தும். அடாது - பொருந்தாது. ஆன்ற ஏதுவோடு அறிவு காட்டி இடிக்குநர் இல்லை - மாட்சிமைப் பட்ட (தூய) ஏதுவோடு அறிவு கொளுத்தி இடித்துரைப்பார் (உன் மந்திரத்துள்) இல்லை. (நீ) எண்ணியது எண்ணி உன்னை முடிக்குநர் உள்ளார் - நீ நினைந்ததனை (நீ நினைந்த படியே நினைந்து) உன்னைக் கெடுப்போர் (உன் மந்திரத்து) உள்ளார்கள். என்றபோது - என்றால். முடிவது முடிவு அன்றி உண்டோ - நிறைவேறுவது உன் அழிவேயன்றி வேறு நிகழ்வது உண்டோ? (136)

### இராவணன் சினத்தல் 466-7

**466.** என்ற றத்துரை கேட்டலு
★ மிருபது நயனம்
மின்றி றப்பன வொத்தன
வெயில்விடு பகுவாய்
குன்றி றத்தெழித் துரப்பின
குறிப்பதென் காமத்
தின்றி றத்தையுங் கடந்தது
சீற்றத்தின் றகைமை.

என்ற அறத்து உரை கேட்டலும், இருபது நயனம்
மின் திறப்பன ஒத்தன ; வெயில்விடு பகுவாய்
குன்று இறத் தெழித்து உரப்பின ; குறிப்பது என்? க மத்
தின்திறத்தையும் கடந்தது சீற்றத்தின் தகைமை.

இதுவும் பின்வரும் பாடலும் ஒரு தொடர்; பிராட்டியின் அற வுரை கேட்ட இராவணன்பால் நிகழ்ந்த மெய்ப்பாடுகளை விரிப்பன. அறத்துரை கேட்டலும் நயனம் மின் திறப்பன வொத்தன; வாய் தெழித்துரப்பின; சீற்றத்தின் தகைமை காமத்தின் திறத்தையும் கடந்தது என்க. என்ற அறத்து உரை - என்று பிராட்டி மொழிந்த அறநெறி பற்றிய மொழிகளை; என்றறத்துரை விகாரம். என்று அறத்துரை எனினும் ஆம். இருபது நயனமும் என உம்மை விரிக்க. நயனம் - கண். மின் திறப்பன ஒத்தன - மின்னல் (மேகத்தைக்) கிழித்துக்கொண்டு வெளிப்படுவன போன்றன. இருபது நயனமும் தீப்பொறி சிந்தித் தகித்தன என்றபடி. வெயில்விடு பகுவாய்- கோரப் பற்களின் ஒளி வீசுகின்ற பிளந்த வாய்கள்; குன்று இறத் தெழித்து உரப்பின - மலைகளும் குலையும்படி அதட்டி அச்சுறுத்தின. குறிப்பது என் - சொல்வது என்? (137)

**467.** வளர்ந்த தாளினன் மாதிர
மனைத்தையு மறைவித்
தளந்த தோளின னனல்சொரி
கண்ணின னிவளைப்
பிளந்து தின்பெனென் றுடன்றுநின்
றனனடி பெயரான்
கிளர்ந்த சீற்றமுங் காதலு
மெதிரெதிர் கிடைப்ப.

வளர்ந்த தாளினன், மாதிரம்
அனைத்தையும் மறைவித்து
அளந்த தோளினன், அனல்சொரி
கண்ணினன், 'இவளைப்
பிளந்து தின்பென்!' என்று உடன்று
நின்றனன், அடிபெயரான்,
கிளர்ந்த சீற்றமும் காதலும்
எதிர் எதிர் கிடைப்ப.

(இராவணன்), தாளினன் தோளினன் கண்ணினன் (ஆகி) உடன்று நின்றனன்; சீற்றமும் காதலும் எதிரெதிர் கிடைப்ப அடி பெயரான் என்க. இராவணன் என எழுவாய் வருவிக்க. தாளினன் தோளினன் கண்ணினன்: என்பவை முற்றெச்சம். வளர்ந்த தாளினன் - சீற்றத்தால் (உதைத்து) நீண்ட கால்களையுடையனாய். மாதிரம் அனைத்தையும் மறைவித்து அளந்த தோளினன் - திசைகளையெல்லாம் மறையும்படி செய்து அளந்த (ஓங்க எடுத்த) தோள்களையுடையனாய். உடன்று நின்றனன் - சினந்து நின்றான் கிளர்ந்த - ஓங்கியெழுந்த, சீற்றமும் காதலும் – சினமும் காமமும். எதிரெதிர் கிடைப்ப – ஒன்றின் எதிர் ஒன்று தாழாது இசைதலால். அடி பெயரான் - (பிராட்டிபாற்) செல்லாதவனாயினான். (138)

### இராவணன் நிலை கண்ட அநுமன் நினைவு 468–9

468. அன்ன காலையி லநுமனு
மருந்ததிக் கற்பின்
என்னை யாளுடை நாயகன்
றேவியை யென்முன்
சொன்ன நீசன்கை தொடுவதன்
முன்றுகைத் துழக்கிப்
பின்னை நின்றது செய்குவெ
னென்பது பிடித்தான்.

அன்னகாலையில் அநுமனும், 'அருந்ததிக் கற்பின்
என்னை ஆளுடை நாயகன் தேவியை என்முன்
சொன்ன நீசன்கை தொடுவதன்முன் துகைத்து உழக்கிப்
பின்னை, நின்றது செய்குவென்!' என்பது பிடித்தான்.

அன்ன காலையில் - அப்பொழுது. 'அருந்ததிக் கற்பின்......... செய்குவென்' என்பது அநுமன் நினைவு கூறியது. என்னை ஆளுடை நாயகன் என்றது இராமபிரானை. நீசன் – கீழ்மகன்: என்றது இராவணனை. உழக்கி - கலக்கி. நின்றது பின்னைச் செய்குவென் என மாறிக் கூட்டுக. நின்றது - எஞ்சியுள்ள காரியத்தை. பின்னைச் செய்குவென் - மேற் செய்வேன். பிடித்தான் - உறுதியாக எண்ணினன். (139)

469. தனிய னின்றனன் றலைபத்துங்
கடிதுகத் தாக்கிப்
பனியின் வேலையி லிலங்கையைக்
கீழுறப் பாய்ச்சிப்
புனித மாதவத் தணங்கினைச்
சுமந்தனன் போவென்
இனிதி னென்பது நினைந்துதன்
கரம்பிசைந் திருந்தான்.

'தனியன், நின்றனன் தலைபத்தும்
கடிது உகத் தாக்கிப்
பனியின் வேலையில் இலங்கையைக்
கீழ் உறப் பாய்ச்சிப்
புனித மாதவத்து அணங்கினைச்
சுமந்தனன் போவென்
இனிதின்' என்பது நினைந்து தன்
கரம் பிசைந்து இருந்தான்.

'தனியன், தாக்கி பாய்ச்சி சுமந்தனன் போவென்' என்பதும் நினைந்து (அநுமன்) கரம்பிசைந்திருந்தான் என முடிக்க. தனியன் - துணையற்ற யானே. நின்றனன் தலைபத்தும் – (பிராட்டியெதிர் சினந்து) நின்றவனை இராவணனுடைய பத்துத் தலைகளும்; கடிது உகத் தாக்கி - விரைந்து சிந்தும்படி புடைத்து. இலங்கையைப் பனியின் வேலையில் கீழ் உறப் பாய்ச்சி - இவ்விலங்கை நகரைக் குளிர்ச்சியுடைய கடலில் அடியில் அழுந்தும்படி செலுத்தி. புனித மாதவத்து அணங்கு என்றது சீதா பிராட்டியை. சுமந்தனன் - சுமந்து; முற்றெச்சம். இனிதின் போவென் என மாறுக. என்பதும் நினைந்து என உம்மை விரிக்க. முன்பாட்டில் அநுமன், 'தேவியை நீசன் தொடுவதன்முன் அவனைத் துகைத் துழக்கி, நின்றது பின்னைச் செய்குவென்' என்று நினைந்தான் என்

றவர், இப்பாட்டில் அவ்வநுமன், 'தனியஞன தானே பிராட்டி யெதிர் சினந்து நின்றவஞன இராவணனுடைய தலைபத்தும் கடிது சிந்தத் தாக்கி, இலங்கை நகரைக் கடலின் அடியில் அழுந்தப் பாய்ச்சிப் பிராட்டியையும் தாங்கி இனிது செல்வேன்' என்பதும் நினைந்து கரம்பிசைந் திருந்தான் என்கிருர். தனியினின்றவன் தலைபத்தும் என்று பாடம் கொண்டு, தனியஞய் நிற்கின்றவஞன இராவணனுடைய தலைபத்தும் என்று உரை கண்டாரும் உண்டு. தனித்திருக்கின்றவஞன இராவணனைக் கொல்வேன் என்பது பெரு வீரஞன அநுமனுடைய வீரப்பாட்டுக்கு இழுக்காகும். தனியில் என்ற பாடத்தினும் தனியன் என்ற பாடம் சிறப்புடைத்து. (140)

சீற்றம் தணிந்து இராவணன் பேசுதல் 470—8

**470.** ஆண்ட வாளரக் கன்னகத்
தண்டத்தை யழிப்பான்
மூண்ட காலவெந் தீயென
முற்றிய சீற்றம்
நீண்ட காமநீர் நீத்தத்தி
னவிவுறு நிலையின்
மீண்டு நின்றெரு தன்மையா
லிவையிவை விளம்பும்.

**ஆண்டு, அ வாள் அரக்கன் அகத்து அண்டத்தை அழிப்பான்**
**மூண்ட கால வெம் தீ என முற்றிய சீற்றம்**
**நீண்ட காமநீர் நீத்தத்தின் அவிவுறும் நிலையில்,**
**மீண்டும் நின்று, ஒருதன்மையால், இவை இவை விளம்பும்.**

அரக்கன், சீற்றம் அவிவுறும் நிலையில் நின்று, இவையிவை மீண்டும் விளம்பும் என இயைக்க. ஆண்டு - அப்போது (- காமமும் சீற்றமும் முற்றிநின்ற நிலையில்). அரக்கன் என்றது இராவணனை. அகத்து - மனத்தின்கண். அண்டத்தை அழிப்பான் மூண்டதீ காலத்தீ வெந்தீ என்க. உலகத்தை அழிக்கும் பொருட்டுக் கிளர்ந் தெழுந்த கொடிய பிரளய காலத்தீ என்பது பொருள். சீற்றம் - சின மாகிய நெருப்பு. நீண்ட காம நீர் நீத்தத்தின் அவிவுறும் நிலையில் - பெரிய காமமாகிய நீர்ப் பெருக்கிஞல் அணைந்த நிலையில். ஒரு தன் மையால் - ஒரு படியாக (மாற்றமில்லாததாக) விளம்பும் - சொல் வான். (141)

471. கொல்வெனென் றுடன்றே னுன்னைக்
☆ கொல்கிலென் குறித்துச் சொன்ன
சொல்லள வவற்றுக் கெல்லாங்
காரணந் தெரியச் சொல்லின்
ஒல்வதீ தொல்லா தீதென்
றெனக்குமொன் றுலகத் துண்டோ
வெல்வதுந் தோற்ற ருனும்
விளையாட்டின் விளைந்த மேனுள்.

கொல்வென் என்று உடன்றேன், உன்னைக்
கொல்கிலென், குறித்துச் சொன்ன
சொல் அளவு; அவற்றுக்கு எல்லாம்
காரணம் தெரியச் சொல்லின்,
ஒல்வது ஈது, ஒல்லாது ஈது, என்று
எனக்கும் ஒன்று உலகத்து உண்டோ?
வெல்வதும் தோற்றல் தானும்
விளையாட்டின் விளைந்த மேல்நாள்.

உன்னைக் கொல்வென் என்று உடன்றேன்; குறித்துச் சொன்ன சொல் அளவும் உன்னைக் கொல்கிலென் என இயைக்க. உன்னை யென்பது மீட்டும் கூட்டப் பட்டது. அளவும் என உம்மை விரிக்கப்பட்டது. உன்னைக் கொல்வென் என்று உடன்றேன் - உன்னைக் கொல்வேன் என்று சினந்தேன். குறித்துச் சொன்ன சொல் அளவும் கொல்கிலென் - நீ என் கருத்துக்கு இசைவதற்கு நான் முன்னம் வரையறுத்துச் சொல்லிய சொல்லாற் குறித்த காலம் வருமளவும் உன்னைக் கொல்லேன். பிராட்டியைக் கவர்ந்து வந்து அசோகவனத்துச் சிறைவைத்த இராவணன் அவள் ஓராண் டுக்குள் தன் கருத்துக்கு இணங்காவிடிற் கொல்லப்படுவாள் என்று கால வரையறைசெய்தமையும், பின் அவன் அநுமன் மறைந்து நின்று காணும் நிலையில் அசோகவனத்துப் புக்குப் பிராட்டியைக் கண்டு வேண்டியபொழுது "பத்து மாதங்கள் கழிந்து இரண்டு மாதங் களே எஞ்சி நின்றமையும் வான்மீகத்துக் கூறப்பட்டது. "உனக்கு யான் ஏற்படுத்திய கால வரையறையில் (இன்னும்) இரண்டு மாதங் களையே யான் எதிர்பார்க்க வேண்டும்" என்பது சுந்தர காண்டத்து 22-ஆம் சருக்கத்து 8-ஆம் சுலோகம். பின்பு, 'தீதுயிர்க் கிழைக்கும் நாளும் திங்களோரிரண்டில் தேயும் (479) என்பதும் காண்க. அவற் றுக்கெல்லாம் - நீ கூறிய என் தோல்வி முதலியவற்றுக்கெல்லாம். எனக்கும் உலகத்து ஈது ஒன்று ஒல்வது, ஈது ஒன்று ஒல்லாது என்று உண்டோ? என இயைக்க. ஒல்வது - இயல்வது. ஒல்லாது - இயலாதது. (142)

**472.** ஒன்றுகே ளுரைக்க நிற்கோ
 ருயிரென வுரியோன் றன்னைக்
கொன்றுகோ ளிழைத்தா னீநின்
 னுயிர்விடிற் குற்றங் கூடும்
என்றனு ருயிரு நீங்கு
 மென்பதை யியைய வெண்ணி
அன்றுநான் வஞ்சஞ் செய்த
 தாரெனக் கமரி னேர்வார்.

ஒன்று கேள் உரைக்க! நிற்கு ஓர்
 உயிர் என உரியோன்றன்னைக்
கொன்று கோள் இழைத்தால், நீ நின்
 உயிர் விடில் குற்றம் கூடும்,
என்றன் ஆர் உயிரும் நீங்கும்:
 என்பதை இயைய எண்ணி
அன்று நான் வஞ்சம் செய்தது;
 ஆர் எனக்கு அமரில் நேர்வார்?

ஒன்று உரைக்கக் கேள்: என்க. நிற்கு ஓர் உயிரென உரியோனை - உனக்கு ஒப்பற்ற உயிர் என்று சொல்லத்தக்க நாயகனை இராமனை. தன்: சாரியை. கோள் இழைத்தால் - நான் உன்னைக் கவர்தலைச் செய்தேனாயின். நின் உயிர் நீ விடில் குற்றம் கூடும் - உன் உயிரை நீ விடுவை, விட்டால் அதனால் பிழை மிகும். என் ஆர் உயிரும் நீங்கும் - என்னுடைய பெறுதற்கரிய உயிரும் நீங்கி விடும். அன்று - அக்காலத்து. அமரில் எனக்கு நேர்வார் யார் - போரில் எனக்கு எதிர் நிற்பவர் யார்? இதனால் வஞ்சித்துக் கவர்ந்த தற்குக் காரணம் கூறியவாறு. (143)

**473.** மானென்ப தறிந்து போன
 மானிட ராவார் மீண்டி
யானென்ப தறிந்தால் வாரா
 ரேழைமை யெண்ணி நோக்கல்
தேனென்ப தறிந்த சொல்லாய்
 தேவர்தாம் யாவ ரேயெங்
கோனென்ப தறிந்து பின்னைத்
 திறம்புவார் குறையி னல்லால்.

மான் என்பது அறிந்து போன
மானிடர் ஆவார் மீண்டு
யான் என்பது அறிந்தால் வாரார்,
ஏழைமை எண்ணி நோக்கல்
தேன் என்பது அறிந்த சொல்லாய்!
தேவர்தாம் யாவரே எம்
கோன் என்பது அறிந்து பின்னைத்
திறம்புவார், குறையின் அல்லால்?

தேன் என்பது அறிந்த சொல்லாய்! மானிடராவார், மீண்டு, யான் என்பது அறிந்தால் வாரார்; தேவர்தாம் எங்கோன் என்பது அறிந்து குறையினல்லால், பின்னைத் திறம்புவார் யாவர்? ஏழைமை எண்ணி நோக்கல்: என இயையும். தேன் என்பது அறிந்த சொல்லாய்! - இனிமையென்பது பயின்ற சொல்லையுடையாய்! அறிதல் - பயிலுதல் ('களவறிந்தார் நெஞ்சிற் கரவு' திருக்குறள். 288). மான் என்பது அறிந்து போன மானிடராவார் - மாரீசன் மாயமானுயினன் என்று அறியாது மெய்ம்மான் என்றே அறிந்து அதைத் தொடர்ந்து சென்ற அறிவு குறைந்த மனிதராகிய ராமலக்குமணர்; மீண்டு – (மாரீசன்மாயத்தினின்றும் விடுபட்டு இருக்கைக்குத்) திரும்பி. யான் என்பது அறிந்தால் - உன்னைக் கவர்ந்து சென்றவன் யான் என்பதைத் தெரிந்துகொண்டால்; வாரார் - (உன்னை மீட்டற்கு இங்கு) வரமாட்டார்கள், அவரைச் சொல்லுவதென்? தேவர்தாம் - அவரிற் சிறந்த தேவர்களும். எம் கோன்என்பது அறிந்து குறையினல்லால் - எங்கள் அரசன் என்று அறிந்து (மனத்துள்) அழிவதன்றி; பின்னை – அதன்மேல்; திறம்புவார் யாவர்? தவறி நடப்பவர் எவருளர்? (ஒருவரும் இல்லையென்றவாறு.) (144)

474. வென்றேரு மிருப்ப யார்க்கு
மேலவர் விளிவி லாதோர்
என்றேரு மிருப்ப வன்றே
யிந்திர னேவல் செய்ய
ஒன்றேவிவ் வுலக மூன்று
மாள்கின்ற வொருவன் யானே
மென்றேளா யிதற்கு வேறோர்
காரணம் விரிப்ப துண்டோ.

வென்றேரும் இருப்ப, யார்க்கும்
மேலவர் விளிவு இலா தோர்
என்றேரும் இருப்ப அன்றே
இந்திரன் ஏவல் செய்ய
ஒன்றே இவ்வுலகம் மூன்றும்
ஆள்கின்ற ஒருவன் யானே,
மென் தோளாய்! இதற்கு வேறு ஓர்
காரணம் விரிப்பது உண்டோ?

மென்தோளாய்! யான், வென்றேரும் இருப்ப, யார்க்கும் மேலவர் விளிவிலாதோர் என்றேரும் இருப்ப, இந்திரன் ஏவல் செய்ய, ஒன்றே! இவ்வுலகம் மூன்றும் ஆள்கின்ற ஒருவன் அன்றே! இதற்கு வேறு ஓர் காரணம் விரிப்பது உண்டோ! என இயைக்க. வென்றேரும் இருப்ப - (என்னை) வென்றவர் (என்று உன்னுற் சொல்லப்பட்டவர்)களாகிய வாலி, கார்த்தவீரியன் முதலியோர் உயிருடன் வாழ்ந்திருக்கவும். விளிவு இலாதோர் என்றேரும் இருப்ப - சாவு அற்றவர்கள் என்று சொல்லப்பட்ட தேவர்களும் இருக்கவும். முன் 471-ஆம் பாட்டில் 'வெல்வதும் தோற்றல்தானும் விளையாட்டின் விளைந்த' என்ற இராவணன், இப்பாடலால் அதனை வலியுறுத்துமாற்ருல் வாலியும் கார்த்தவீரியனும் என்னை வென்றது உண்மையாயின், யான் அவர்கள் கீழ் அடங்கியிருக்க வேண்டியவனல்லனே! அவர்கள் உயிர் வாழ்ந்திருக்கும் நிலையிலும்; அழிவற்றவர்களும் எவரினும் மேம்பட்டவர்களும் ஆகிய தேவர்கள் வாழ்ந்திருக்கும் நிலையினுமன்றே யான் அவர்களுக்கு மேம்பட்டவனுக மூன்றுலகத்தையும் ஆட்சி செய்பவனுயினேன்; யான் இவ்வாறு மூன்றுலகும் ஆளும் நிலை ஏற்பட்டதற்கும் பிறவற்றுக்கும் என் இச்சையேயன்றி வேறு ஒரு காரணம் விரித்துரைக்க வேண்டுவதுண்டோ என்ருன் என்றவாறு. (145)

**475.** மூவருந் தேவர் தாமு
முரணுக முற்றுங் கொற்றம்
பாவைநின் பொருட்டி ஞலோர்
பழிபெறப் பயன்றீர் நோன்பின்
ஆவியன் மனிதர் தம்மை
யடுகிலே னவரை யீண்டக்
கூவிநின் றேவல் கொள்வென்
காணுதி குதலைச் சொல்லாய்.

மூவரும் தேவர் தாமும் முரண் உக முற்றும் கொற்றம்,
பாவை! நின் பொருட்டினல் ஓர்பழிபெறப் பயன்தீர் நோன்பின்
ஆஇயல் மனிதர் தம்மை அடுகிலேன்; அவரை ஈண்டக்
கூவிநின்று ஏவல் கொள்வென், காணுதி! குதலைச் சொல்லாய்!

பாவை! நின்பொருட்டினல் (என்) கொற்றம் பழிபெற, மனிதர் தம்மை அடுகிலேன் குதலைச்சொல்லாய்! அவரைக் கூவி ஏவல் கொள்வென்; காணுதி என இயைக்க. மூவரும்.........கொற்றம் - பிரமா விஷ்ணு உருத்திரன் என்னும் மூன்று முதற்கடவுளரும், மற்றும் இந்திரன் முதலிய தேவர்களும் வலியழியும்படி வளைத்த என்னுடைய வெற்றியானது; வெற்றி உன் பொருட்டுப் பழிபெற என்க. பழியாவது வலியற்றூர்மேற்சென்று அவரை அட்டமையான் வருவது. பயன்தீர் - பயன் அற்ற. நோன்பின் மனிதர், ஆவியன் மனிதர் என்க. ஆ இயல் மனிதர் தம்மை - பசுவின் தன்மை வாய்ந்தவர்களான (தீங்கு செய்யத்தகாதவர்களான) மனிதர்களை. 'ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்' (9) என்பது புறநானூறு. அடுகிலேன் - கொல்லேன். அவரை - அம்மனிதர்களை. ஈண்டக் கூவி - விரைவாக அழைத்து. நின்று - நிலைத்திருந்து. ஏவல் கொள்வென் - அவர்கள் செய்யும் பணிவிடைகளை ஏற்பன். (146)

**476.** சிற்றியற் சிறுமை யாற்றற்
சிறுதொழின் மனித ரோடே
முற்றிய தாய வீர
முனிவென்கண் முளையா தேனும்
இற்றையிப் பகலி னெய்தி
னிருவரை யொருகை யாலே
பற்றினென் கொணருந் தன்மை
காணுதி பழிப்பி லாதாய்.

சிற்றியல் சிறுமை ஆற்றல் சிறுதொழில் மனிதரோடே
முற்றியது ஆய வீர முனிவு என்கண் முளையாதேனும்,
இற்றை இப்பகலில் நொய்தின் இருவரை ஒருகையாலே
பற்றினென் கொணரும் தன்மை காணுதி! பழிப்பு இலாதாய்!

பழிப்பு இலாதாய்! மனிதரோடு வீரமுனிவு என்கண் முளையாதேனும், இற்றை இப் பகலில் இருவரை நொய்தின் ஒரு கையால் பற்றினென் கொணருந் தன்மை காணுதி என இயைக்க. சிற்றியல் - சிறு தன்மை. சிறுமை யாற்றல் - புல்லிய வீரம். சிறுதொழில் -

புன்தொழில். மனிதரோடு முனிவு என்கண் முளையாதேனும் என்க. முற்றியதாய முனிவு, வீரமுனிவு என்க. இற்றை இப்பகலில் நொய்தின் – இன்று இப்பொழுதே எளிதாக. இருவரை - இராம லக்குமணரை. (147)

**477.** பதவியன் மனித ரேனும்
 பைந்தொடி நின்னைத் தந்த
உதவியை யுணர நோக்கி
 னுயிர்க்கொலைக் குரிய ரல்லர்
சிதைவுற லவர்க்கு வேண்டிச்
 செய்திநீ தேர்ந்த தின்றி
இதமுனக் கீதே யாகி
 லியற்றுவல் காண்டி யின்னும்.

பதவு இயல் மனிதரேனும்,
 பைந்தொடி! நின்னைத் தந்த
உதவியை உணர நோக்கின்,
 உயிர்க்கொலைக்கு உரியர் அல்லர்
சிதைவுறல் அவர்க்கு வேண்டிச்
 செய்தி நீ தேர்ந்தது இன்றி;
இதம் உனக்கு ஈதே ஆகில்,
 இயற்றுவல்! காண்டி இன்னும்!

பைந்தொடி! (அவர்) பதவியல் மனிதரேனும், நின்னைத் தந்த உதவியை உணரநோக்கின் உயிர்க்கொலைக்கு உரியரல்லர்; நீ தேர்ந்தது இன்றி அவர்க்குச் சிதைவுறல் வேண்டிச் செய்தி; ஈதே உனக்கு இதம் ஆகில் இயற்றுவல்: என இயையும். பதவு இயல் மனிதரேனும் – (அவ்விராமலக்குணமர்) புல்லின் தன்மையுள்ள (புல்லிய) மனிதரா யிருந்தாலும்; பதவு – புல். நின்னை (எனக்கு)த் தந்த உதவியை உணர நோக்கின் உயிர்க் கொலைக்கு உரியரல்லர் என்க. தேர்ந்தது இன்றி – தெளிந்த அறிவின்றி. அவர்க்கு – அவ்விராம லக்குமணர்க்கு. சிதைவுறல் - கேடுவரும் செயலை. வேண்டிச் செய்தி – விரும்பிச் செய்கின்றாய். ஈதே - (அவ் இராம லக்குமணர்க்குக்) கேடுறுதலே. உனக்கு இதம் ஆகில் – உனக்கு நன்மையாயின். காண்டி : முன்னிலையசை. இன்னும் - இது வன்றியும் ( – மேலும்). (148)

**478.** பள்ளநீ ரயோத்தி நண்ணிப்
பரதனே முதலி னோராண்
டுள்ளவர் தம்மை யெல்லா
முயிர்குடித் தூழித் தீயின்
வெள்ளநீர் மிதிலை யோரை
வேரறுத் தெளிதி னெய்திக்
கொள்வெனின் னுயிரு மென்னை
யறிந்திலை குறைந்த நாளோய்.

பள்ள நீர் அயோத்தி நண்ணிப்
பரதனே முதலினோர் ஆண்டு
உள்ளவர்தம்மையெல்லாம்
உயிர் குடித்து, ஊழித் தீயின்
வெள்ள நீர் மிதிலையோரை
வேர் அறுத்து, எளிதின் எய்திக்
கொள்வென் நின் உயிரும்! என்னை
அறிந்திலை! குறைந்த நாளோய்!

குறைந்த நாளோய்! நீ என்னை அறிந்திலை; (யான்) ஊழித் தீயின் அயோத்தி நண்ணிப் பரதனே முதலினோர் ஆண்டு உள்ளவர்தம்மையெல்லாம் உயிர்குடித்து, மிதிலை நண்ணி, (ஜனகனே முதலினோர் ஆண்டு உள்ளவரை யெல்லாம்) வேரறுத்து எளிதின் (இலங்கை) எய்தி நின் உயிரும் கொள்வென்: என இயைக்க. ஊழித் தீயின் என்பது இடைநிலை விளக்காய் முன்னும் பின்னும் இயையும். முன்னிரண்டடியிற் கூறியதற்கேற்ப மூன்றும் அடியில் வேண்டியவை வருவித்துரைக்கப்பட்டன. பள்ள நீர் அயோத்தி – ஆழமான நீரையுடைய அகழி சூழ்ந்த அயோத்தி. (149)

இப் பாடலின்பின் 30-ஆம் ஏட்டுள் பின்வரும் பாடல்கள் வரையப்பட்டுள்ளன :—

478 (a) என்றனன் எயிறு தின்று எரியெழ விழித்து நோக்கி
நி......லத்தாவி நிலனொளி கலனிற் றேய
மின்றனை மின்சூழ்ந் தென்ன அரம்பையர் சூழ மெல்லச்
சென்றவன் றன்னைச் சார்ந்தாள் மயனருள் திலக மன்னாள்.

(b) பொருக்கென அவனி......க......கொடி முறுவல் பூப்ப
அரக்கர்கோ மகனை நோக்கி ஆண்மையன் றழகு மன்றால்
செ[illegible] [illegible]த்தைக் [illegible] தெய்வத்தைத் திருமை யினை
வெருக்கொளச் செய்வதையா என இன விளம்ப லுற்றாள்.

(c) செம்மலர்த் திருவினளுஞ் சிறப்புறு திலத மன்னர்
வெம்மையுற் றுன் மேல் வீழ்வார் வெளாகி யே நகைசெய் தோதத்
தம்மனத் தாசை வேறோர் தலைமகற் குடையா டன்னை
அம்மலற் றிறைஞ்சும் வேட்கை யாடவற் குரிய தன்றே.

(d) புலத்தியன் மரபின் வந்து புண்ணியம் புரிந்த மேன்மைக்
குலத்தியல் பதனுக் கென்றும் பழியன்றோ வென்றுங் கொள்ளாய்
வலத்திய லாண்மைக் கீது மாசென மதிப்பி......
..................................................

(e) வாசமென் குழலி னூரால் மண்ணினில் வானில் யார்க்கும்
நாசம்வந் தேன்று......மறைகளே நவிலு மாற்றம்
பூசல்வண் டுறையுந் தாராய் அறிந்துநீ புகழாற் பொற்பாற்
றேசுடை யவளோ வென்னிற் சீதையுந்.........

இராவணன் பிராட்டியை அச்சுறுத்துதல்

479. ஈதுரைத் தழன்று பொங்கி
யெரிகதிர் வாளை நோக்கித்
தீதுயிர்க் கிழைக்கு நாளுந்
திங்களோ ரிரண்டிற் றேய்ந்த
தாதலிற் பின்னை நீயே
யறிந்தவா றறிதி யென்னுப்
போதரிக் கண்ணி னாளை
யகத்துவைத் துரப்பிப் போனான்.

ஈது உரைத்து அழன்று பொங்கி,
எரிகதிர் வாளை நோக்கித்
'தீது உயிர்க்கு இழைக்கும் நாளும்
திங்கள் ஓர் இரண்டில் தேய்ந்தது!
ஆதலில், பின்னை நீயே
அறிந்தவாறு அறிதி!' என்னுப்
போது அரிக் கண்ணினாளை
அகத்துவைத்து, உரப்பிப் போனான்.

உரைத்து அழன்று பொங்கி நோக்கி என்னு வைத்து உரப்பிப் போனான் என முற்றுவிக்க. ஈது உரைத்து - இவ்வார்த்தைகளைச் சொல்லி. அழன்றுபொங்கி - சினந்தெழுந்து; உயிர்க்குத் தீது

இமைக்கும் நாளும் ஓர் இரண்டு திங்களில் தேய்ந்தது - (நீ இணங்காவிடில் உன்) உயிர்க்குத் தீங்கு செய்யும் ( - உன்னைக் கொல்ல வேண்டிய) நாளும் ஓர் இரண்டுமாத கால அளவில் தேய்ந்து (குறுகி) விட்டது. நீ அறிந்தவாறு அறிதி - நீ உனக்குத் தெரிந்த முறையால் (மேற்செய்யவேண்டியதை) அறிவாயாக. 'தீது உயிர்க்கு.........அறிதி' என்பது பிராட்டியை நோக்கிய இராவணன் கூற்று. போது அரிக் கண்ணினாளை - (தாமரை) மலர்போன்ற செவ்வரி கருவரி படர்ந்த கண்களையுடைய சீதாபிராட்டியை. அகத்துவைத்து - மனத்தில் இருத்தி; உள்ளே காதல் கொண்டு. உரப்பி - (வெளியே கடுமொழியால்) அதட்டி. (150)

### இராவணன் காவலரக்கியர்க்குக் கட்டளையிட்டுச் செல்லல்

**480.** அஞ்சுவித் தானு மொன்று
லறிவுறத் தேற்றி யானும்
வஞ்சியிற் செவ்வி யாளை
வசித்தென்பால் வருவீ ரன்றேல்
நஞ்சுமக் காவெ னென்று
நகையிலா முகத்துப் பேழ்வாய்
வெஞ்சினத் தரக்கி மார்க்கு
வேறுவே றுரைத்துப் போனான்.

'அஞ்சுவித்தானும், ஒன்றால்
அறிவுறத் தேற்றியானும்,
வஞ்சியின் செவ்வியாளை
வசித்து, என்பால் வருவீர்! அன்றேல்,
நஞ்சு உமக்கு ஆவென்!' என்று,
நகை இலா முகத்துப் பேழ்வாய்
வெம் சினத்து அரக்கிமார்க்கு
வேறு வேறு உரைத்துப் போனான்.

'வஞ்சியிற் செவ்வியாளை, ஒன்றால் அஞ்சுவித்தானும், ஒன்றால் அறிவுறத் தேற்றியானும் வசித்து என்பால் வருவீர்; அன்றேல் உமக்கு நஞ்சு ஆவென்' என்று இராவணன் அரக்கிமார்க்கு உரைத்துப் போனான் என்க. வஞ்சியிற் செவ்வியாளை - வஞ்சிக் கொடியினும் (மிக்க) அழகுடைய பிராட்டியை. ஒன்றால் - யாதேனும் ஓர் உபாயத்தால். ஒன்றால் அறிவுறத் தேற்றியானும் - யாதேனும் ஒரு சூழ்ச்சியால் (தனக்கு நலன் இராவணன் நோக்கத்துக்கு இணங்

குதலே என்று பிராட்டி) அறியும்படி தெளிவித்தாயினும்: ஆயினு மென்பது ஆனுமென்றுனது விகாரம். வசித்து - வசப்படுத்தி. வேறுவேறு - தனித்தனி. (151)

காவலரக்கியர் பிராட்டியைக் கனன்று கூறல் 481–5

481. போயின னரக்கன் பின்னைப்
பொங்கரா நுங்கிக் கான்ற
தூயவெண் மதிய மொத்த
தோகையைத் தொடர்ந்து சுற்றித்
தீயவல் லரக்கி மார்க
டெழித்திழித் துரப்பிச் சிந்தை
மேயின வண்ண மெல்லாம்
விளம்புவா னுடன்று மிக்கார்.

போயினன் அரக்கன் பின்னைப்
பொங்கு அரா நுங்கிக் கான்ற
தூய வெண் மதியம் ஒத்த
தோகையைத் தொடர்ந்து சுற்றித்
தீய வல் அரக்கிமார்கள்
தெழித்து இழித்து உரப்பிச் சிந்தை
மேயின வண்ணம் எல்லாம்
விளம்புவான் உடன்று மிக்கார்.

அரக்கன் போயினன்; பின்னைத் தீய வல் அரக்கிமார்கள் தோகையைத் தொடர்ந்து சுற்றித் தெழித்து இழித்து உரப்பி விளம்புவான் உடன்று மிக்கார் என்க. பொங்கு அரா நுங்கிக் கான்ற தூய வெண்மதியம் ஒத்த தோகையை - சினந்த (இராகு வென்னும்) பாம்பினுல் விழுங்கி உமிழப்பட்ட பரிசுத்தம் வாய்ந்த வெள்ளிய மதியம் போன்ற பெண்ணுகிய சீதாபிராட்டியை. இரா வணனுக்குச் சினங்கொண்ட பாம்பும், அவன் சினத்துக்கு இலக்காய் உய்ந்த சீதாபிராட்டிக்கு இராகுவென்னும் சினங்கொண்ட பாம்பினுல் விழுங்கி உமிழப்பட்ட மதியும் உவமை. தெழித்து - வருத்தி. இழித்து - அவமதித்து. உரப்பி - அதட்டி: அச்சுறுத்தி. சிந்தை மேயினவண்ணமெல்லாம் - மனம் விரும்பினபடி யெல்லாம். விளம்பு வான் — சொல்லுதற்கு. உடன்றுமிக்கார் - சினந்தெழுந்தார். (152)

**482.** முன்முன் னின்ருர் கண்கனல்
★ சிந்த முடுகுற்ருர்
மின்மின் னென்னுஞ் சூலமும்
வாளும் மிசையோச்சிக்
கொன்மின் கொன்மின் கொன்று
குறைத்துக் குடராரத்
தின்மின் தின்மின் னென்று
தெழித்தார் சிலரெல்லாம்.

முன்முன் நின்ருர் கண் கனல் சிந்த முடுகுற்ருர்,
மின்மின் என்னும் சூலமும் வாளும் மிசை ஓச்சிக்
'கொல்மின்! கொல்மின்! கொன்று குறைத்துக் குடர் ஆரத்
தின்மின்! தின்மின்!' என்று தெழித்தார் சிலர் எல்லாம்.

சிலரெல்லாம் முன்முன் நின்று முடுகுற்று ஓச்சித் தெழித்தார் என்க. நின்ருர் முடுகுற்ருர் என்பவை முற்றெச்சம். முன்முன் நின்ருர் - சீதாபிராட்டியைக் கடிவதில் (ஒருவரின் ஒருவர்) முன்னே முன்னே நின்று. கனல் - நெருப்பு. முடுகுற்ருர் – விரைந்தவராய். மிசை ஓச்சி - மேலே ஓங்க எடுத்து. கொன்மின் கொன்மின் - கொல்லுங்கள் கொல்லுங்கள். குறைத்து – துண்டு துண்டாக்கி. குடர் ஆரத்தின்மின் தின்மின் - வயிறு நிறையத் தின்னுங்கள் தின்னுங்கள். (153)

**483.** வையந் தந்த நான்முகன்
மைந்தன் மகன்மைந்தன்
ஐயன் வேத மாயிரம்
வல்லா னறிவாளன்
மெய்யன் புன்பால் வைத்துள
தல்லால் வினைவென்ருேன்
செய்யும் புன்மை யாதுகொ
லென்ருர் சிலரெல்லாம்.

'வையம் தந்த நான்முகன் மைந்தன் மகன் மைந்தன்,
ஐயன், வேதம் ஆயிரம் வல்லான், அறிவாளன்,
மெய்யன்பு உன்பால் வைத்துளது அல்லால், வினைவென்ருேன்
செய்யும் புன்மை யாதுகொல்?' என்ருர் சிலர் எல்லாம்.

சிலரெல்லாம், 'நான்முகன்மைந்தன் மகன்மைந்தன்! ஐயன்; ஆயிரம்வேதம்வல்லான், அறிவாளன், வினைவென்றோன், உன்பால் மெய்யன்பு வைத்துளதல்லால், செய்யும் புன்மை யாது?' என்றார் என்க. வையம் தந்த............மைந்தன் - உலகத்தைப் படைத்த நான்கு முகங்களையுடைய பிரமாவின் மைந்தனான புலஸ்திபனுக்கு மகனான விசிரவசுவின் மகன் இராவணன். ஐயன் - அழகுடையான். ஆயிரம் வேதம் வல்லான் - ஆயிரம் சாகைகளாகவுள்ள சாம வேதத்தில் தேர்ந்தவன். அறிவாளன் – நுண்ணறிவும் உடையான். வினை வென்றோன் - தீவினையை ஒழித்தவன். புன்மை – இழிந்த செயல். கொல்: அசை. இதனால் இராவணன் உயர்குடிப்பிறப்பும் அழகும் கல்வியும் அறிவும் அன்பும் செயலும் கூறப்பட்டன. (154)

484\. மண்ணிற் றீய மானுயர்
தத்தம் வழியோடும்
பெண்ணிற் றீயோய் நின்முதன்
மாயும் பிணிசெய்தாய்
புண்ணிற் கோலிட் டாலன
சொல்லிப் பொது நோக்கா
தெண்ணிற் காணாய் மெய்ம்மையை
யென்றார் சிலரெல்லாம்.

'மண்ணில் தீய மானுயர் தத்தம் வழியோடும்,
பெண்ணில் தீயோய்! நின்முதல் மாயும் பிணிசெய்தாய்!
புண்ணில் கோல் இட்டால் அன சொல்லிப் பொதுநோக்காது
எண்ணில், காணாய் மெய்ம்மையை!' என்றார் சிலர் எல்லாம்.

சிலரெல்லாம், பெண்ணில் தீயோய்! புண்ணில் கோல் இட்டால் அன சொல்லி, மண்ணில் தீய மானுயர் தத்தம் வழியோடும் நின் முதலும் மாயும் பிணி செய்தாய்; பொதுநோக்காது எண்ணில் மெய்ம்மையைக் காணாய்! என்றனர் என இயைக்க. பெண்ணில் தீயோய்! என்பது பிராட்டியை நோக்கி யெழுந்த அரக்கியர் விளிக் கூற்று. கோல் இட்டால் அன - அம்பு நுழைத்தாற்போன்ற கொடிய சொற்களை. தீய மானுயர் என்றது அரக்கியர் கருத்தால் இராமலக்குமணரை. சூர்ப்பநகை மூக்கு முதலியவற்றைப் போக்கியது பற்றி இவ்வாறு கூறுவாராயினர். வழி என்றது இராமலக்கு மணர்களின் தாய்வழியையும் தந்தை வழியையும். நின்முதல் – நின்மரபின் மூலமும். முதலும் என உம்மை விரிக்க. மாயும் பிணி - அழிந்துபடும் துன்பத்தை. பொதுநோக்காது எண்ணில் - நடுநிலை

நின்று ஆராயாது ஒருபக்கத்தே சார்ந்து நின்று ஆராய்ந்தால். மெய்ம்மையைக் காணாய் - உண்மையை அறியமாட்டாய். நடுநிலை நின்று ஆராயின் உனக்கு உண்மை புலனாகும்; அதனால் நீ செய்யத் தக்கதைச் செய்வாய் என்றவாறு. (155)

485. புக்க வழிக்கும் போந்த
வழிக்கும் புகைவெந்தீ
ஒக்க விதைப்பா னுற்றனை
யன்றோ வுணர்வில்லாய்
இக்கண மிற்றா யுன்னின
மெல்லாம் மினிவாழா
சிக்க வுரைத்தே மென்று
தெழித்தார் சிலரெல்லாம்.

'புக்க வழிக்கும் போந்த வழிக்கும் புகை வெம் தீ
ஒக்க விதைப்பான் உற்றனை அன்றோ, உணர்வு இல்லாய்!
இக்கணம் இற்றாய்! உன் இனம் எல்லாம் இனி வாழா!
சிக்க உரைத்தேம்!' என்று தெழித்தார் சிலர் எல்லாம்.

சிலரெல்லாம், 'உணர்வில்லாய்! புக்கவழிக்கும் போந்தவழிக்கும் புகைவெந்தீ ஒக்க விதைப்பான் உற்றனை; இக்கணம் இற்றாய்; இனி உன் இனமெல்லாம் வாழா; சிக்க உரைத்தேம்.' என்று தெழித்தார் என இயைக்க. அன்று ஓ: அசை. புக்கவழி - புகுந்த மரபு (தசரதன் குலம்). போந்தவழி - பிறந்த மரபு (ஜனககுலம்). பிராட்டியின் செயலை நெருப்பாகக் கூறியது ஏகதேசவுருவகமெனும் அணிதழுவிய கூற்று. அதற்கியைய வழிவந்த மக்களாற் பல்கிய மரபுகளைக் கிளைகளாற் பல்கிய தருக்களாகக் கொள்க. விரைந்து அழிந்துபடுதல் உறுதியென்பார் இற்றாய் என இறந்தகாலத்தாற் கூறினார். சிக்க - உறுதியாக. (156)

25-ஆம் ஏட்டுள் இப்பாட்டின்பின், பின்வருமாறு ஒரு செய்யுள் காணப்படுகிறது:—

485 (a) என்றா ரின்னு மெத்தனை சொற்கொண் டிதமாறக்
கன்றா நின்றார் காலுமெ யிற்றார் கனல் கண்ணார்
ஒன்றோ மற்றும் ஆயிர கோடி யுளரம்மா
பொன்றா வஞ்சங் கொண்டவ ரின்னும் புகல்கின்றார்.

பிராட்டி வருந்துதல்

**486.** கொல்வா னுற்ருேர் பெற்றியும்
யாதுங் குறையாதோன்
வெல்வா னங்கோன் றின்னுமின்
வம்மென் பவர்மெய்யும்
வல்வாய் வெய்யோ னேவலு
மெல்லா மனம்வைத்தாள்
நல்வாய் நல்லாள் கண்கள்
கலுழ்ந்தே நகுகின்ருள்.

கொல்வான் உற்ருேர் பெற்றியும், 'யாதும் குறையாதோன் வெல்வான் நம் கோன்! தின்னுமின்! வம்!' என்பவர்மெய்யும், வல்வாய் வெய்யோன் ஏவலும், எல்லாம் மனம் வைத்தாள். நல்வாய் நல்லாள், கண்கள் கலுழ்ந்தே நகுகின்ருள்.

நல்லாள், பெற்றியும் மெய்யும் ஏவலும் (ஆகிய) எல்லாம் மனம் வைத்தாளாகிக் கலுழ்ந்து நகுகின்ருளாயினுள் என்க. 'நம் கோன் யாதும் குறையாதோன்; வெல்வான்; வம்; தின்னுமின்' என்பது காவலரக்கியர் கூற்று. கொல்வான் உற்ருேர் பெற்றியும்-தன்னைக் கொல்லவந்த காவலரக்கியருடைய கொடுந்தன்மையும். நம்கோன் யாதும் குறையாதோன் - நம் அரசனுன இராவணன் ஒன்ருனும் குறையில்லாதோன். வம் – வாருங்கள். என்பவர் மெய்யும் - என்று அச்சுறுத்துகிற அரக்கியர் உடலும். வல்வாய் வெய்யோன் ஏவலும் தீய சொற்கள் பயிலும் வாயினையுடைய கொடியவனுன இராவணன் காவலரக்கியர்க்கு இட்ட கட்டளையும். எல்லாம்-(ஆகிய) எல்லாவற்றையும். கலுழ்ந்து - அழுதுகொண்டே. நகுகின்ருள் - (தன் அவலநிலை குறித்துச்) சிரிக்கின்றவள் ஆயினுள். பிராட்டிபக்கல் தீ மொழி பிதற்றிய வாயுடைய கொடியனுன இராவணனை வல்வாய்வெய்யோன் என்றவர், அதற்கேற்ப, அவன் மாற்றங்களுக்கு மறுமொழியாக அறவுரை கூறிய பிராட்டியை நல்வாய்நல்லாள் என்ருர். (157)

திரிசடை சொல்லால் பிராட்டி ஆறுதலடைதல்

**487.** இன்னே ரன்ன வெய்திய
காலத் திடைநின்ருள்
முன்னே சொன்னேன் கண்ட
கனவின் முடிவம்மா

பின்னே வாளா பேதுறு
வீரேற் பிழையென்ருள்
அன்னே நன்றென் ருளவ
ரெல்லா மவிவுற்ருர்.

இன்னோர் அன்ன எய்திய காலத்து, இடை நின்ருள்,
'முன்னே சொன்னேன் கண்ட கனவின் முடிவு, அம்மா!
பின்னே, வாளா பேதுறுவீரேல், பிழை!' என்ருள்
'அன்னே! நன்று!' என்ருள், அவர் எல்லாம் அவிவுற்ருர்.

இன்னோரன்ன எய்திய காலத்து - (பிராட்டி) இத்தகைய அவல நிலை அடைந்தபோது. இடைநின்ருள் - நடுநிலை திறம்பாதவளாகிய திரிசடை. அம்மா! கண்ட கனவின் முடிவு முன்னே சொன்னேன்; பின் வாளா பேதுறுவீரேல் பிழை' என்பது பிராட்டியை நோக்கித் திரிசடை கூறியது. கனவின் முடிவு - கனவின் பயன். பின் - யான் கூறிய பின்னும். வாளா - வீணே. பேதுறுவீரேல் - கலங்குவீராஞல். அன்னே என்பது பிராட்டி திரிசடையைத் தன் முகமாக்கிக் கொள்ளும் விளி. அவர் எல்லாம் அவிவுற்ருர் - அக் காவலரக்கியர் அனைவரும் அடங்கினர்கள். இடை நின்ருள் 'அம்மா..............பிழை' என்ருள்: பிராட்டி 'அன்னே நன்று' என்ருள்; அவரெல்லாம் அவிவுற்ருர் என்க. (158)

திரிசடை சொல்லால் காவலரக்கியர் அடங்குதல்

488. அறிந்தா ரன்ன முச்சடை
யென்பா ளதுசொல்லப்
பிறிந்தார் சீற்ற மன்னனை
யஞ்சிப் பிறிகில்லார்
செறிந்தா ராய தீவினை
யன்ஞர் தெறலெண்ணர்
நெறிந்தா ரோதிப் பேதையு
மாவி நிலைநின்ருள்.

அறிந்தார் அன்ன முச்சடை என்பாள் அது சொல்லப்
பிறிந்தார் சீற்றம், மன்னனை அஞ்சிப் பிறிகில்லார்,
செறிந்தார் ஆய தீவினை அன்ஞர், தெறல் எண்ணர்,
நெறிந்து ஆர் ஓதிப் பேதையும் ஆவி நிலை நின்ருள்.

முச்சடை யென்பான் அது சொல்ல, தீவினையன்னர் சீற்றம் பிறிந்தார்; மன்னனையஞ்சிப் பிறிகில்லார்; (ஆயினும்) தெறல் எண்ணார்; பேதையும் ஆவிநிலை நின்ருள் ஏன இயைக்க. அறிந்தார் அன்ன முச்சடை யென்பாள் - மெய்யறிவுடையரை ஒத்தவளான திரிசடை யென்பவள். அது சொல்ல - கண்ட கனவும் அதன் பயனும் ஆகியவற்றை விரித்துச் சொல்லுதலால். செறிந்தார் ஆய தீவினையன்னர் - பிராட்டியைச் சூழ்ந்து நெருங்கிநின்றவர்களாகிய தீவினை போல வருத்துபவர்களான காவலரக்கியர். சீற்றம் பிறிந்தார் - சினம் நீங்கினர் (ஆயினும்), மன்னனை அஞ்சிப் பிறிகில்லார் - தம் அரசனுகிய இராவணனுக்குப் பயந்து பிராட்டியை விட்டு நீங்காதவராயினர் (எனினும்); தெறல் எண்ணார்-பிராட்டியை வருத்துதலை நினையாராயினர் (ஆகவே); நெறிந்து ஆர் ஓதிப் பேதையும் ஆவி நிலை நின்ருள்-சுருளுதல் பொருந்திய கூந்தலையுடைய பெண்ணுகிய பிராட்டியும் உயிர் நிலைத்திருக்கப் பெற்ருள். (159)

25-ஆம் ஏட்டில் இச்செய்யுளின்பின் பின்வருமாறு ஒரு பாடல் வரையப் பட்டுளது :—

488 (a) தீபோர் செய்கை தானு மிராம ஞெருதேவித்
தாயா டுன்பு மாருதி கண்டே தளர்வெய்தி
மாயா தொன்றே யன்றி மனத்தே மலிதுன்பத்
தோயா துன்னிச் சோர்பவ ஞென்றங் குணர்வுற்ருன்.

காட்சிப் படலம் முற்றிற்று.

# 4. உருக்காட்டு படலம்

உரு என்பது இங்கே வடிவம், வடிவழகு, இயல்பு, மெய்ந்நிலை என்னும் பொருள்களை உணர்த்தி நிற்கும். காட்டுதல் – காணச் செய்தல்-அறிவித்தல் என்று பொருள்படும். இக்காப்பிய நாயகனான இராமபிரானுடைய திருமேனியழகினையும் குண நலங்களையும், பிராட்டி பக்கல் பேரறிஞனான அநுமன் உரைத்த செய்தி விரித்தலின் இப்படலம் இப்பெயரான் வழங்கப்படுவதாயிற்று.

பிராட்டியைச் சூழ்ந்து நின்று காவல்புரிந்த அரக்கியர், அநுமன் விஞ்சையால் துயின்ற செய்தியொடு இப்படலம் தொடங்குகிறது. அதன்மேல் 490 முதல் 509 வரையுள்ள பாடல்கள், இராமபிரானைப் பிரிந்தமையால் ஆற்றாமை கைவிஞ்சிய நிலையில் தன் உயிரை விடத் துணிந்த பிராட்டிநிலை பேசுவன. இவற்றால், தம் நாயகர்பொருட்டே உயிர் வாழ்ந்து, அவர்க்கு இன்பத்தையும் மகிழ்ச்சியையும் விளைத்து, அவரைப் பிரியநேரின் அவருடைய குணமும் செயலுமே நினைந்து நினைந்து உயிர்தாங்கி, மீண்டும் அவரைக் கூடுங் காலத்தை எதிர் பார்த்து நிற்கும் கற்புடைய மகளிர்நிலை காட்டியவாறாகும். மேலும், அச்செய்யுட்களால் இறைவனைப் பிரிந்து துயருறுங் காலத்து, உய்தி பெறுதற்கு அவ்விறைவன்பால் காரணமின்றி நிகழும் அருளினையே பற்றுக்கோடாகக் கொண்டு, தன் குறைகளை நினைந்து நினைந்து கசிந்து நிற்றலே உயிர்க்குரிய நிலை என்பதும் புலப்படும்.

510 முதல் 525 வரையுள்ள பாடல்கள், பிராட்டியிடம் அநுமன் தன் வரலாறு கூறுவனவாகும்.

சீதாபிராட்டிபால், அநுமன் இராமபிரானுடைய திருமேனி யழகைப் பாதாதி கேசமாகப் புகலுவனவான 526 முதல் 547 முடிய வுள்ள செய்யுட்கள், கட்டறும் விழைவுடைய சேதனன் பக்கல் நல்லா சிரியன் உணர்த்தும் இறைநிலை புலப்படுப்பனவாகும். இப்பகுதி இப் படலத்துள் பெருஞ் சிறப்புடையது.

548 முதல் 551 வரையுள்ள பாடல்கள், இராமபிரான் சொல்லிய அடையாளங்களை அநுமன் பிராட்டியிடம் உரைத்துத் திருவாழியை யும் அளித்தமை பேசுவன.

இராமபிரான் அளித்த திருவாழியை அநுமன் கொடுக்கப்பெற்று மகிழ்ந்து, நன்றியுணர்வொடு வாழ்த்தும் பிராட்டி நிலை பேசும் 552 முதல் 561 வரையுள்ள செய்யுட்களால், நாயகரின் தொடர்புடைய

பொருள்களைக் காணப் பெற்ருல் அவரைக் கண்டாங்கு மகிழ்ந்து வாழ்த்தி நிற்கும் கற்புடைய மகளிரியல் பெறப்படும். மேலும், அவற்ருல், நல்லாசிரியன் அருளப் பிரணவப் பொருளுணர்ந்து மகிழ்ந்து பல்லாண்டு பாடி மகிழும் உயிர்நிலையும் புலனுகும். இங்கே திருவாழி பிரணவத்தைச் சுட்டும்.

இராமபிரான் பிராட்டியைப் பிரிந்தது முதல், அவளைத் தேடிக் கண்டு வரும்படி அநுமனை அனுப்பியது வரையுள்ள செய்தி பேசும் (562 முதல் 584 வரையுள்ள) பாடல்கள், உலகியல்நூன் முறையில், தலைவியைப் பிரிந்த தலைவன்பால் நிகழுவனவற்றை விரிப்பதுடன், அறிவனூன் முறையில், வினைவலியால் தன்னினின்று பிரிந்த உயிரை மீட்டுக் கோடற்கு முயலும் இறைநிலையினை மீட்டும் விரிப்பனவாய் உள்ளன.

'இத்துணைச் சிறிய வுருவுடைய நீ பெருங்கடலை எவ்வாறு கடந்து வந்தனை?' என்று வினவிய பிராட்டி தெளியும்படி, அநுமன் தான் கடல் தாண்டற்குக் கொண்ட பேருருவொடு நின்றமை பேசும் (585 முதல் 597 வரையுள்ள) பாடல்கள், பிரிந்த உயிரை இறைவனொடு கூட்டுவிக்கும் நல்லாசிரியரை அவர் உருவுகொண்டு மானிடருள் ஒருவராகக் கருதலாகாதென்று, அவர் பெருமை புலப்படுப்பனவாயுள்ளன. இறைவன் திருமேனியழகு பேசிய பகுதிபோலவே. அடியார் அல்லது ஆசிரியர் உருவ நலம் பேசும் இப்பகுதியும் இப் படலநுவல் பொருள்களுள் தலைசிறந்த தொன்ருகும்.

கடத்தற்கரிய கடலைக் கடந்து, புகற்கரிய காப்புடைய இலங்கையுள் புக்கு, 'இனி உய்தியில்லை' என்று உயிர்விடத் துணிந்த தன்னைக் கண்டு, இராமபிரான் அளித்த திருவாழியைத் தந்து, அவன் உரைத்த அடையாளங்களையும் கூறித் தன்னைத் தேற்றி, இறவாது காத்த அநுமனைப் பிராட்டி பாராட்டுவதா யமைந்த (598 முதல் 602 வரையுள்ள) பாடல்களால், இருள்தருமா ஞாலத்துப் பிறந்திறந் துழந்த தன்னை உய்யக்கொள்ளும்படி, அருளே உருவாகவந்து கிட்டி அறியவேண்டிய பொருள்களெல்லாவற்றையும் தெளியவுரைத்து மெய்யறிவூட்டிக் கலக்கம் நீக்கிய நல்லாசிரியனையே உய்தற்கு உறுதுணையாகப் பற்றிப் பாராட்டியிருத்தலும் கட்டறும் விழைவுடைய உயிரின் இயல்பாம் என்பது புலனுகும்.

தன்னை மீட்குஞ் செயலில், 'பெருமானுக்கு ஆற்றல்மிக்க பகைவர் பலர்; துணையாவார் பிறரில்லை; இலக்குமணன் ஒருவனே' என்று வருந்தியிருந்த பிராட்டி, அறிவும் உருவும் ஆற்றலும் வாய்ந்த அநுமனைக் கண்டு, சிறிது மனக்குறை தீர்ந்து பேசினளாக, அது கேட்ட அநுமன், 'சிறியனுன யான் ஒருவனுமேயல்லேன்; என்னி

லும் அறிவும் உருவும் ஆற்றலும் மிக்கார் பலர் இராமபிரானுக்குத் துணையாவார் உளர்' என்று அவர் பெயரும் பீடும் விரிப்பதாய் அமைந்த (603 முதல் 606 வரையுள்ள) பாடல்கள், பிறவிச் சிறை நீக்கி உயிரை உய்யக் கொள்ளும் முயற்சியில்வழிவழி வந்த நல்லாசிரியர் குழு இறைவற்கு முன்னின்று உதவும் என்னும் மெய்ந் நெறி புலப்படுப்பன.

இவ்வாறு உலகநூன் முறையாலும் அறிவனூன் முறையாலும் பல மெய்ந் நிலைகளை உணர்த்தலின், இஃது உருக்காட்டு படலமாயிற்று. எனினும், அம் மெய்ந்நிலைகளுள், இராமபிரானுடைய வடிவழகும் திவ்யாத்ம குணங்களுமே சிறப்புப்பற்றி இப்படலத்தின் நுவல்பொருளாகும். அநுமனுடைய குணங்களும் செயல்களும் இப் படலத்தின் நுவல் பொருளாகும் எனினும் அமையும்.

இப்படலம், சில ஓலைச் சுவடிகளில் திருவாழி காட்டு படலம் என்று தலைப்பிட்டும், வேறு சில சுவடிகளில் விசுவருபப் படலம் என்று தலைப்பிட்டும் வரையப்பட்டுள்ளதேனும், அத் தலைப்புக்கள், மேல் விரித்த பொருள்களுள், அநுமன் திருவாழி காட்டியதும், விசுவரூபம் கொண்டதுமாகிய தனி யொரு செயல் பற்றி வந்த பெயராவதன்றி, உருக்காட்டு படலம் என்பது போல, மேலே விரித்தவாறு பல பொருள்களையும் உணர்த்தும் ஆற்றலுடையனவாயில்லை. உருக்காட்டு படலம் என்ற தலைப்பே திருந்திய பழைய ஓலைச் சுவடிகள் பலவற்றிலும் காணப்படுவது; இதுவரை வெளிவந்துள்ள சுந்தர காண்டப் பதிப்பிலெல்லாம் காணப்படும் தலைப்பும் அதுவே. ஆதலால் உருக்காட்டு படலம் என்பதே அமைவும் சிறப்பும் உடைய தலைப்பாகும்.

---

# 4. உருக்காட்டு படலம்

## அநுமன் விஞ்சையால் காவலரக்கியர் உறங்குதல்

**489.** காண்டற் கொத்த காலமு
மீதே தெறுகாவல்
தூண்டற் கொத்த சிந்தையி
ளுருந் துயில்கில்லார்
வேண்டத் துஞ்சா ரென்றொரு
விஞ்சை வினைசெய்தான்
மாண்டற் றூரா மென்றிட
வன்னூர் மயர்வுற்றூர்.

காண்டற்கு ஒத்த காலமும் ஈதே; தெறு காவல்
தூண்டற்கு ஒத்த சிந்தையினரும் துயில்கில்லார்:
வேண்டத் துஞ்சார்! என்று, ஒரு விஞ்சை வினை செய்தான்;
மாண்டு அற்றராம் என்றிட அன்னூர் மயர்வு உற்றூர்.

காண்டற்கு ஒத்த காலமும் ஈதே - (நான் பிராட்டியைக்) கண்டு பேசுவதற்கு ஏற்ற வேளை இதுவே யாகும்; இது அநுமன் கூற்று. தெறு காவல் தூண்டற்கு ஒத்த சிந்தையினரும்-வருத்துகின்ற காவலினின்று (பிராட்டியின் மனத்தை மாற்றி இசைவிக்கத்) தூண்டி விடுவதில் முனைந்த மனத்தை யுடையோராகிய அரக்கியரும். துயில்கில்லார் - தூங்குவதாயில்லை. வேண்டத் துஞ்சார் - (தூங்கவேண்டுமென்று யான்) விரும்புகிற மாத்திரத்தால் (இவர்கள்) தூங்கமாட்டார்கள்; தாமாகவும் துஞ்சார், யான் வேண்டவும் துஞ்சார் என்றவாறு. ஒரு விஞ்சை - ஒரு மந்திரத்தை. வினை செய்தான் - உச்சரித்தான் (அநுமன்). மாண்டு அற்றூர் என்றிட அன்னூர் மயர்வு உற்றூர்-மடிந்து உயிர்நீங்கினர் என்று சொல்லும்படியாக அக்காவலரக்கியர் மயக்கமடைந்தார்கள். ஆம், அசை.

அரக்கியர் உறங்குமாறு அநுமன் விஞ்சை வினை செய்ததாக வான்மீகத்திற் கூறப்படவில்லை. (1)

## பிராட்டி துயர்நிலைக்கிளவி 490—497

**490.** துஞ்சா தாருந் துஞ்சுதல் கண்டா டுயராற்றூள்
நெஞ்சா லொன்று முய்வழி காணு ணெகுகின்றூள்
அஞ்சா நின்றூள் பன்னெடு நாளு மழிவுற்றூள்
எஞ்சா வன்பா லின்னப கர்ந்தாங் கிடருற்றூள்.

துஞ்சாதாரும் துஞ்சுதல் கண்டாள், துயர் ஆற்ருள்,
நெஞ்சால் ஒன்றும் உய்வழி காணுள், நெகுகின்ருள்,
அஞ்சா நின்ருள், பல்நெடு நாளும் அழிவுற்ருள்,
எஞ்சா அன்பால் இன்ன பகர்ந்து ஆங்கு இடர் உற்ருள்.

பல்நெடு நாளும் அழிவுற்ருள் – மிகப் பல நாளாக(ச் சிறையிலகப்பட்ட காலமெல்லாம்) வருந்துபவளான பிராட்டி. துஞ்சாதாரும் துஞ்சுதல் கண்டாள் - ஒருநாளும் தூங்காதவர்களான அரக்கியர் அப்பொழுது தூங்குவதைப் பார்த்து. துயர் ஆற்ருள் – (தனக்கு நேர்ந்த) துன்பத்தை மேலும் பொறுக்கமாட்டாதவளாய். உய்வழி ஒன்றும் நெஞ்சால் காணுள் - (சிறையினின்றும்) தப்புவதற்கு எந்த வழியும் தன் மனத்தால் எண்ணி அறியமாட்டாதவளாய். நெகுகின்ருள் - வருந்தி. அஞ்சா நின்ருள்–அச்சம் கொண்டு. எஞ்சா அன்பால் இன்ன பகர்ந்து ஆங்கு இடர் உற்ருள் - (இராமனிடத்துக்) குறையாத (வளரும்) அன்பினுல் இவ்வார்த்தைகளைச் சொல்லி அப்பொழுது துன்பப்படுவாளாஞள். (2)

491. கருமே கநெடுங் கடல்கா வனேயான்
★ தருமே தமியேன் றனதா ருயிர்தான்
உருமே றுறழ்வெஞ் சிலேநா ணெலிதான்
வருமே யுரையாய் வலியார் விதியே.

கருமேகம், நெடும் கடல், கா அனேயான்
தருமே தமியேன் தனது ஆர் உயிர்தான் ?
உரும் ஏறு உறழ் வெம் சிலே நாண் ஒலிதான்
வருமே? உரையாய்! வலிஆர் விதியே!

வலிஆர் விதியே – வலிமை மிக்க (என்) விதியே! கருமேகம்-கருநிறமுள்ள மேகத்தையும். நெடும்கடல் – பெரிய கடலேயும். கா – (கற்பகச்) சோலேயையும். அனேயான் – ஒத்த (திருமேனி நிறத்தையுடைய) இராமபிரான் ;

"கற்பகக் காவன நற்பல தோளற்கு
பொற்சுடர்க் குன்றன்ன பூந்தண் முடியற்கு
நற்பல தாமரை நாண்மலர்க் கையற்குஎன்
விற்புரு வக்கொடி தோற்றது மெய்யே."

(திருவாய்மொழி—6. 6. 6.) என்ற சடகோபர் வாக்கும் இங்கு நோக்கத்தகும். உரும் ஏறு உறழ் - பேரிடியை ஒத்த. வருமே - (நான் கேட்கும்படி) இங்கு வருமா? உரையாய் – சொல்வாயாக. (3)

492. கல்லா மதியே கதிர்வா ணிலவே
செல்லா விரவே சிறுகா விருளே
எல்லா மெனையே முனிவீர் நினையா
வில்லா ளனையா தும்விளித் திலிரோ.

கல்லா மதியே! கதிர் வாள் நிலவே!
செல்லா இரவே! சிறுகா இருளே!
எல்லாம் எனையே முனிவீர், நினையா
வில்லாளனை யாதும் விளித்திலிரோ?

கல்லா மதியே - கற்றலில்லாத சந்திரனே! (பெண்ணை வருத்துவது பெரும்பாவம் என்று அறியாததால் இவ்வாறு கூறப் பெற்றது.) கதிர் வாள் நிலவே - மிக்க ஒளியுடைய நிலாவே. (அன்று நிறைமதி நாளானதால் விடியுமளவும் நிலவெறித்தல் பெற்றும்.) செல்லா இரவே - (விரைவிற்) கழியாத இராப்பொழுதே! சிறுகா இருளே – குறையாது பெருகின இருளே! (அடர்ந்த சோலையினகத்தே பிராட்டி இருத்தலால் நிலவுப் பொழுதிலும் இருள் தென்பட்டது என்க. மதியமும் நிலவும் இரவும் இருளும் பிரிந்த காதலரை வருத்தும் என்க.) எல்லாம் எனையே முனிவீர் - நீங்கள் எல்லோரும் என்னை மாத்திரமே வருத்துகின்றீர்கள். நினையா வில்லாளனை யாதும் விளித்திலிரோ - (என்னைச் சிறிதும்) எண்ணாத வில் வீரனை இராமபிரானிடத்தில் (என்குறை) எதுவும் சொல்லீர்களோ? (இராமன் தன்னை மீட்க இன்னும் வாராமையாற் பிராட்டி இவ்வாறு கூறினாள்.) (4)

493. தழல்வீ சியுலா வருவா டைதழீஇ
அழல்வீ ரெனதா வியறிந் திலிரோ
நிழல்வீ ரையனு னுடனே நெடுநாள்
உழல்வீர் கொடியீ ருரையா டிலிரோ.

தழல் வீசி உலாவரு வாடை தழீஇ
அழல்வீர்: எனது ஆவி அறிந்திலிரோ?
நிழல் வீரை அனுன் உடனே நெடுநாள்
உழல்வீர்; கொடியீர்! உரையாடிலிரோ?

கொடியீர் - (முன்பாடலிற் கூறிய மதியும் நிலவும் இரவும் இருளும் ஆகிய) கொடுமை மிக்கவர்களே! தழல் வீசி உலாவரு வாடை தழீஇ அழல்வீர் - அனல் வீசும்படியாக வெதுப்பிக்கொண்டு உலாவிவருகிற வடகாற்றைத் துணையாகச் சேர்த்துக்கொண்டு, என்னை வருத்துகின்றீர்கள். எனது ஆவி அறிந்திலிரோ – எனது

உயிரின் நிலைமையை (நீங்கள் சற்றும்) அறியவில்லையோ? நிழல் வீரை அனுனுடனே - (தனது) மேனி நிறத்தாற் கடலையொத்த இராமனுடன். நெடுநாள் உழல்வீர் - பல நாட்களாகப் பயில்கின் றீர்கள். உரையாடிலிரோ - (என் குறையைச்) சொல்லமாட்டீர் களோ? (5)

494. வாரா தொழியா னெனும்வன் மையினல்
ஓரா யிரகோ டியிடர்க் குடைவேன்
தீரா வொருநாள் வலிசே வகனே
நாரா யணனே தனிநா யகனே.

வாராது ஒழியான் எனும் வன்மையினல்
ஓர் ஆயிரகோடி இடர்க்கு உடைவேன்:
தீரா ஒரு நாள் வலி; சேவகனே!
நாராயணனே! தனி நாயகனே!

சேவகனே - வீரனே! நாராயணனே - நாராயணன் என்னும் திருநாமமுடையவனே! தனிநாயகனே-ஒப்பற்ற தலைவனே! வாராது ஒழியான் எனும் வன்மையினல் - (எனது நாயகன் எப்படியும்) வராமலிருக்க மாட்டான் என்ற (திடமான) எண்ணத்தால்: வன்மை - கருத்து (திவாகரம்). ஓர் ஆயிரகோடி இடர்க்கு உடைவேன் - எண்ணிலடங்காத துயரங்களுக்கும் உள்ளாகி வருந்திக்கொண்டிருக்கிறேன். வலி ஒரு நாள் தீரா - (நான்படும்) நோய்கள் (துன்பங்கள்) ஒருநாளும் நீங்கமாட்டா (போலும்).

நாராயணனே இராமனுக அவதரித்தானுதலின் அப்பெயரால் அழைத்தாள். நார + அயநன் = நாராயணன் என்ற பெயர், படைப்புப் பொருள்கட்கெல்லாம் சேர்விடமானவன் என்றும், படைப்புப் பொருள்களைத் தனக்குச் சேர்விடமாகவுடையவன் என்றும், ஊழிவெள்ளத்து நீரைத் தனக்கு இருப்பிடமாகவுடையவன் என்றும் பொருள்படும். தன்னைப் புறக்கணித்தான் என்ற நினைவினுண்டான ஊடலின் மிகுதிபால் முன்னிலையாகக் கூறுதலையொழித்து 'வாராதொழியான்' எனப் படர்க்கையாற் கூறினுள். (6)

495. தருவொன் றியகா னடைவாய் தவிர்நீ
வருவென் சிலநா ளினின்மா நகர்வாய்
இருவென் றனையின் னருடா னிதுவோ
ஒருவென் றனியா வியையுண் ணுதியோ.

தரு ஒன்றிய கான் அடைவாய், 'தவிர்நீ :
வருவென் சில நாளினில்: மாநகர்வாய்
இரு!' என்றனை ; இன் அருள்தான் இதுவோ?
ஒருவென் தனி ஆவியை உண்ணுதியோ?

தரு ஒன்றிய கான் அடைவாய் - (நாதா! நீ) மரங்களடர்ந்த வனத்திற்குச் செல்லப் புறப்பட்டபொழுது. நீ தவிர் - நீ (வரவிரும்புவதை) ஒழிப்பாயாக. சில நாளினில் வருவென் - சில நாட்களில் நான் திரும்பி வந்துவிடுவேன். மாநகர்வாய் இரு - பெரிய பட்டணமாகிய அயோத்தியிலே தங்கியிருப்பாயாக. என்றனை - என்று சொன்னாய். இன் அருள்தான் இதுவோ - (இப்பொழுது நீ என் மீது கொண்டுள்ள) இனிய திருவருள் இவ்வளவுதானோ? ஒருவென் தனி ஆவியை உண்ணுதியோ - (உன்னை விட்டுத்) தனியேயிருக்கிற எனது வேறு கதியில்லாத உயிரை நீ வருத்துவாயோ? உண்ணுதியோ என்பது வருத்துதியோ என்ற பொருளில் வந்தது. (7)

496. பேணும் முணர்வே யுயிரே பெருநாள்
நாணின் றுழல்வீர் தனிநா யகனைக்
காணுந் துணையுங் கழிவீ ரலிர்நான்
பூணும் பழியோ டுபொருந் துவதோ.

பேணும் உணர்வே! உயிரே! பெருநாள்
நாண் இன்று உழல்வீர், தனிநாயகனைக்
காணும் துணையும் கழிவீரலிர், நான்
பூணும் பழியோடு பொருந்துவதோ?

பேணும் உணர்வே - விரும்பத்தக்க (என்) அறிவே! என்னைப் பேணி வரும் உணர்வே என்றும் பொருள் கூறலாம். உயிரே - (என்) உயிரே! பெருநாள் நாண் இன்று உழல்வீர் - பலநாளாக வெட்கமில்லாமல் அலைகிறீர்கள். நான் பூணும் பழியோடு பொருந்துவதோ - (நீங்கள் இன்னும் கழியாது உழல்வதால், நீங்கள் கழியும்வரை) நான் பூண்ட பழியோடு பொருந்தி வாழ்ந்துகொண்டிருப்பதா? உயிரும் அறிவும் தாமாக நீங்கும்வரை தான் பழிபூண்டு வாழ்வது தகாது எனக்கருதிக் கூறியவாறு. (8

497. முடியா முடிமன் னன்முடிந் திடவும்
படியே மூநெடுந் துயர்பா விடவும்
மடியா னுடன்வந் துவனம் புகுதும்
கொடியான் வருமென் றுகுலா வுவதோ.

முடியா முடி மன்னன் முடிந்திடவும்,
படி ஏழும் நெடும் துயர் பாவிடவும்,
மடியான், உடன் வந்து வனம் புகுதும்
கொடியான் வரும் என்று குலாவுவதோ ?

முடியா - அழிதலில்லாத. முடிமன்னன் முடிந்திடவும் - பொன் முடி தரித்த தசரதச் சக்கரவர்த்தி இறக்கவும். படி ஏழும் நெடும் துயர் பாவிடவும் - ஏழுலகங்களிலும் பெருந்துன்பம் பரவவும். மடியான் - (அவற்ருல்) மனம் மடங்கி முயற்சியருதவனுய். உடன் வந்து வனம்புகுதும் கொடியான் – உடனே புறப்பட்டுவந்து வனம் புகுந்த (இரங்காத நெஞ்சு படைத்த) கொடியவனுன இராமன். வரும் என்று குலாவுவதோ - (இப்பொழுது என்மீது மனம் இரங்கி) வருவான் என்று எண்ணி (நான்) மகிழ்ந்து வாழலாமா ? (கூடாது என்றவாறு.) (9)

## பிராட்டி இறக்கத்துணிதல் 498-508

**498.** என்றென் றுயிர்விம் மியிருந் தழிவாள்
மின்றுன் னுமருங் குல்விளங் கிழையாள்
ஒன்றென் னுயிருண் டெனினுண் டிடர்யான்
பொன்றும் பொழுதே புகழ்பூ ணுமெனு.

என்று என்று, உயிர் விம்மி இருந்து அழிவாள்,
மின் துன்னும் மருங்குல் விளங்கு இழையாள்,
'ஒன்று என் உயிர் உண்டு எனின் உண்டு இடர் : யான்
பொன்றும் பொழுதே புகழ் பூணும்' எனு.

மின் துன்னும் மருங்குல் விளங்கு இழையாள் – மின்னலுக் கொப்பான இடையை யுடைய சீதா பிராட்டி : இங்கு விளங்கிழை யாள் என்பது சீதாபிராட்டி யென்னும் பெயரளவாக நின்றதெனக் கொள்க. என்று என்று - எனப் பலவாருகக் கூறி. உயிர் விம்மி - உயிர் வருந்தி. இருந்து அழிவாள் - நீள நினைந்து வருந்தியவ ளாய். என் உயிர் ஒன்று உண்டு எனின் இடர் உண்டு - என் உயி ரென்பதொன்று (உடம்பில்) உள்ளளவும் (கூடவே) துன்பமும் உள தாகும். யான் பொன்றும் பொழுதே புகழ் பூணும் – நான் இறக்கும் பொழுதுதான் (துன்பம் நீங்கிப்) புகழ் பெறுவேன். எனு - என்று எண்ணி : 'எனு' என்பது மேல் 509-ஆம் பாடலில் 'எய்தினுள்' என்பதனேடு முடியும். (10)

499\. பொறையிருந் தாற்றியென் னுயிரும் போற்றினேன்
★ அறையிருங் கழலவற் காணு மாசையால்
நிறையிரும் பல்பக னிருதர் நீணகர்ச்
சிறையிருந் தேனையும் புனிதன் றீண்டுமோ.

பொறை இருந்து ஆற்றி என் உயிரும் போற்றினேன்,
அறை இரும் கழலவன் காணும் ஆசையால் :
நிறை இரும் பல்பகல் நிருதர் நீள் நகர்ச்
சிறை இருந்தேனையும் புனிதன் தீண்டுமோ ?

அறை இரும் கழலவன் - ஒலிக்கின்ற பெரிய வீரக்கழலணிந்த இராமபிரானை. இருந்து - இங்கே இருந்து. பொறை ஆற்றி - (எல்லாத் துன்பங்களையும்) பொறுத்தல் செய்து. என் உயிரும் போற்றினேன் – எனது உயிரையும் பாதுகாத்து வந்தேன். நிறை... தீண்டுமோ - நிறைந்த மிகப் பல நாளாக அரக்கர்களுடைய பெரிய பட்டணமாகிய இவ்விலங்கையில் சிறைப்பட்டிருந்த என்னையும் தூயவனான இராமபிரான் தொடுதலைச் செய்வானோ? (தொடவும் மாட்டான் என்றபடி.) (11)

500\. உன்னினர் பிறரென வுணர்ந்து முய்ந்தவர்
சொன்னன சொன்னன செவியிற் றூங்கவும்
மன்னுயிர் காத்திருங் காலம் வைகினேன்
என்னின்வே றரக்கியர் யாண்டை யார்கொலோ.

உன்னினர் பிறர் என உணர்ந்தும் உய்ந்து, அவர்
சொன்னன சொன்னன செவியில் தூங்கவும்,
மன் உயிர் காத்து, இரும் காலம் வைகினேன்:
என்னின் வேறு அரக்கியர் யாண்டையார் கொலோ ?

பிறர் உன்னினர் என உணர்ந்தும் – (என்னை) வேறொருவன் ஆசை கொண்டான் என்பது தெரிந்தும். உய்ந்து – உயிர் பிழைத்து. அவர் சொன்னன சொன்னன - (அவ்வாறு ஆசை கொண்டவனும் அவனுக்காக அவனைச் சேர்ந்தவர்களும்) சொல்லியவைகளெல்லாம், செவியில் தூங்கவும் - (என்) காதிலே புகுந்து தங்கவும். மன் உயிர் காத்து இரும் காலம் வைகினேன் – நிலையான தன்மையுள்ள என் உயிரைக் காத்திருந்து நெடுங்காலம் வாழ்ந்தேன். என்னின் வேறு அரக்கியர் - (இவ்விதம் வாழ்கிற) என்னைக் காட்டிலும் கொடிய வேறு அரக்கிமார்கள். யாண்டையார் கொலோ- எவ்விடத்தில் உளரோ ? (எங்கும் இரார் என்றவாறு.) (12)

**501.** சொற்பிரி யாப்பழி சுமந்து தூங்குவேன்
நற்பிறப் புடைமையு நாணு நன்றரோ
கற்புடை மடந்தையர் கதையு ளோர்கடாம்
இற்பிரிந் துய்ந்தவர் யாவர் யானலால்.

சொல் பிரியாப் பழி சுமந்து தூங்குவேன்!
நல் பிறப்புடைமையும் நாணும் நன்று அரோ!
கற்புடை மடந்தையர், கதையுளோர்கள் தாம்,
இல் பிரிந்து உய்ந்தவர் யாவர் யான் அலால்?

சொல் பிரியாப் பழி-சொல்லுதல் நீங்காத வசையை: (என்றது, உலகம் என்றும் நின்று தூற்றும் பழியை.) சுமந்து - ஏற்றுக் கொண்டு. தூங்குவேன் - கவலையற்றிருக்கின்ற எனது, நல் பிறப்பு உடைமையும் - உயர் குடியிற் பிறத்தலை யுடையளா யிருக்கும் தன்மையும். நாணும் - நாணுடைமையும். நன்று - மிகவும் நன்று யிருக்கிறது: (இகழ்ச்சிக் குறிப்பு: பழி சுமந்து உயிரோடிருத்தல் குடிப்பிறப்புக்கும் நாணுடைமைக்கும் தகாது என்றவாறு.) அரோ, அசை. கதையுளோர்கள் - பழைய கதைகளில் வந்துள்ளவர்களான. கற்புடை மடந்தையர் - கற்பிற் சிறந்த பெண்கள். தாம் - தம்மில். இல் பிரிந்து உய்ந்தவர் - இல் வாழ்க்கைக்கு உரிய கணவனைப் பிரிந்து பிழைத்திருந்தவர் (உயிர் வாழ்ந்தவர்.) யான் அலால் - யான் ஒருத்தியே யல்லாமல். யாவர் - வேறு யாவர் உளர்? (வேறு எவரும் இல்லை என்றவாறு.) (13)

**502.** பிறர்மனை யெய்திய பெண்ணைப் பேணுதல்
திறனல தென்றுயிர்க் கிறைவன் றீர்ந்தனன்
புறனல ரவனுறப் பொழுது போக்கியான்
அறனல தியற்றிவே றென்கொண் டாற்றுகேன்.

பிறர்மனை எய்திய பெண்ணைப் பேணுதல்
திறன் அலது என்று உயிர்க்கு இறைவன் தீர்ந்தனன்
புறன் அலர் அவன் உறப் பொழுது போக்கி யான்
அறன் அலது இயற்றி வேறுஎன் கொண்டுஆற்றுகேன்?

பிறர் மனை எய்திய பெண்ணை - அயலார் வீட்டிற் போன ஒரு பெண்ணை. பேணுதல் - பின்னும் விரும்பிக் கொணர்ந்து வைத்துக் கொள்ளுதல். திறன் அலது - தகுதி யன்று. என்று - என்று நினைத்து. உயிர்க்கு இறைவன் - (எனது) பிராண நாயகனான இராமபிரான். தீர்ந்தனன் - நீங்கிப் போனான். புறன் - வெளி

யுலகில். அலர் - பழிச் சொல்லை. அவன் உற - (என் நாயகனை) அவன் அடையவும். யான் பொழுது போக்கி - நான் இப்படிக் காலம் கழித்து. அறன் அலது இயற்றி - தருமம் அல்லதான பாவத்தைச் செய்து. வேறு என் கொண்டு ஆற்றுகேன் - இனி வேறு எந்த நன்மையைக் கருதி உய்வேன் (உயிர் தரித்திருப்பேன்). ஆற்றுதல் - உய்தல் (பிங்கலந்தை). (14)

**503.** எப்பொழு திப்பெரும் பழியி னெய்தினேன்
அப்பொழு தேயுயிர் துறக்கு மாணையேன்
ஒப்பரும் பெருமறு வுலக மோதயான்
துப்பழிந் துய்வது துறக்கந் துன்னவோ.

எப்பொழுது இப்பெரும் பழியின் எய்தினேன்
அப்பொழுதே உயிர் துறக்கும் ஆணையேன் :
ஒப்பு அரும் பெரு மறு உலகம் ஓத, யான்
துப்பு அழிந்து உய்வது, துறக்கம் துன்னவோ ?

அப்பொழுதே உயிர் துறக்கும் ஆணையேன் - அந்தக் கணத்திலேயே உயிரை விட்டிருக்க வேண்டிய முறைமையை யுடையேன். ஒப்பு அரும்பெரு மறு உலகம் ஓத - எவராலும் ஒப்பமுடியாத பெரிய பழிச்சொல்லை உலகமெல்லாம் எடுத்துக் கூறும்படியாக. யான் துப்பு அழிந்து உய்வது துறக்கம் துன்னவோ - நான் பெருமை குலைந்து உயிர் வாழ்வது சுவர்க்கம் அடையலாமென்றோ? (தனக்குப் பழி வந்தது போலவே பாவமும் வருமாதலால் இருமையும் கெட்டதற்கு வருந்தினள் என்க.) (15)

**504.** அன்பழி சிந்தைய ராய வாடவர்
வன்பழி சுமக்கினுஞ் சுமக்க வானுயர்
துன்பழி பெரும்புகழ்க் குலத்துட் டோன்றினேன்
என்பழி துடைப்பவ ரென்னின் யாவரே.

அன்பு அழி சிந்தையர் ஆய ஆடவர்
வன்பழி சுமக்கினும் சுமக்க : வான் உயர்
துன்பு அழி பெரும் புகழ்க் குலத்துள் தோன்றினேன்,
என் பழி துடைப்பவர் என்னின் யாவரே ?

அன்பு அழி சிந்தையர் ஆய ஆடவர் - (என்னிடத்தில்) அன்பு இல்லாத மனத்தையுடைய ஆண்மக்களாகிய இராம லக்குமணர். வன்பழி - (என்னை மீட்காமையாலும் இறக்க விடுத்தமையாலும்

உண்டான பெண் பாவம் என்ற) கொடிய பழியை. சுமக்கினும் சுமக்க - தாங்கினும் தாங்குக. துன்பு அழி பெரும் புகழ்க் குலத்துள் தோன்றினேன் - துன்பமே யில்லாத (அறியாத) பெரிய புகழ் படைத்த குலத்திற் பிறந்தவள் நான். (ஆதலால்) என் பழி துடைப்பவர் என்னின் யாவர் - எனக்கு நேர்ந்த பழியைப் போக்கு பவர் என்னை யல்லது வேறு யாவர் உளர்?

தான் பிறந்த குலத்தின் உயர்வை நிலைகுலையாமல் காப்பது தன் கடமை என்பது பிராட்டியின் கருத்தாகும். (16)

505. வஞ்சனை மானின்பின் மன்னைப் போக்கியென்
மஞ்சனை வைதுபின் வழிக்கொள் வாயென
நஞ்சனை யானகம் புகுந்த நங்கையான்
உய்ஞ்சனெ னிருத்தலு முலகங் கொள்ளுமோ.

வஞ்சனை மானின்பின் மன்னைப் போக்கி, என்
மஞ்சனை வைது பின் வழிக்கொள்வாய் என,
நஞ்சு அனையான் அகம் புகுந்த நங்கை யான்,
உய்ஞ்சனென் இருத்தலும் உலகம் கொள்ளுமோ?

வஞ்சனை மானின் பின் - பொய் வேடம் புனைந்துவந்த மாய மானின் பின். மன்னைப் போக்கி - (என்) நாயகனாகிய இராமனை அனுப்பி. என் மஞ்சனை வைது பின் வழிக்கொள்வாய் என - என் மைந்தன் போன்றவனான இலக்குவனைக் கடுமையாகப் பேசி (அவ் விராமன்) பின் செல்வாய் என்று அனுப்பிவிட்டு; (தமையன்மனைவி தாய்க்கு நிகராதலால் மஞ்சன் என்றாள்: சுமித்திரையும் இலக்குவனிடம் சீதையைத் தாய் என்று முன்னர்க் கூறினாள்: 2. நகர் நீங்கு படலம், 150.) நஞ்சு அனையான் அகம் புகுந்த நங்கை யான் - விடம் போன்று மிகக் கொடியவனான இராவணனுடைய வீட்டுக் குள்ளே வந்து நுழைந்துகொண்ட பெண்ணாகிய நான். உய்ஞ்சனென் இருத்தலும் உலகம் கொள்ளுமோ - (இறவாது) உயிர் பிழைத்திருத்தலையும் நேரிதென்று உலகத்தார் கொள்வார்களோ?

நங்கை என்றது இகழ்ச்சிக் குறிப்பு. (17)

506. வல்லியன் மறவர்தம் வருக்க மாசற
வெல்லினும் வெல்கபோர் விளிந்து வீடுக
இல்லிய லறத்தையா னிறந்து வாழ்ந்தபின்
சொல்லிய வென்பழி யவரைச் சுற்றுமோ.

வல் இயல் மறவர், தம் வருக்கம் மாசு அற,
வெல்லினும் வெல்க போர், விளிந்து வீடுக :
இல் இயல் அறத்தை யான் இறந்து வாழ்ந்த பின்,
சொல்லிய என்பழி அவரைச் சுற்றுமோ ?

வல் இயல் மறவர் – வலிமை பொருந்திய வீரராகிய இராம லக்குமணர். தம் வருக்கம் மாசு அற – தம்முடைய வமிசத்திற்குப் பழி உண்டாகாது நீங்கும்படி. போர் வெல்லினும் வெல்க – (இராவணனேடு பொருது) போரில் வெற்றியடைந்தாலும் அடைக. (அல்லது) விளிந்து வீடுக – (போரில்) இறந்து அழிக. இல் இயல் அறத்தை – இல்லற தருமத்தை. யான் இறந்து வாழ்ந்த பின் – நான் கடந்து (தப்பி) வாழ்ந்த பின். சொல்லிய என் பழி – (உலகத் தோரால் தூற்றிச்) சொல்லப்படுகிற எனது பழிப்பு. அவரைச் சுற்றுமோ–அவ்விராம லக்குமணரையும் தொடருமோ ? (தொடராது என்றவாறு.)

இல்லியல் அறத்தை இறந்து வாழ்ந்தபின் என்பது, தான் அயலான் வீட்டில் வாழ்வதைக் குறிக்கும். (18)

**507.** வருந்தலின் மானமா வனைய மாட்சியர்
பெருந்தவ மடந்தையர் முன்பு பேதையேன்
கருந்தனி முகிலினைப் பிரிந்து கள்வரூர்
இருந்தவ ளிவளென வேச நிற்பெனே.

வருந்தல் இல் மானம் மா அனைய மாட்சியர்,
பெரும் தவ மடந்தையர் முன்பு, பேதையேன்,
'கரும் தனி முகிலினைப் பிரிந்து கள்வர் ஊர்
இருந்தவள் இவள் !' என ஏச நிற்பெனே ?

மானம் - மானத்தைப் பேணிக்கொள்ளும் பொருட்டு. வருந்தல் இல் - (உயிர் விடுவதில்) வருத்தம் அடையாத. மா அனைய மாட்சியர் - கவரிமாவை யொத்த மேன்மையையுடையவர்களாகிய; "மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னர், உயிர்நீப்பர் மானம் வரின்." (திருக்குறள் 969.) பெரும் தவ மடந்தையர் முன்பு-எல்லாத் தவங்களினும் மேலான கொழுநற் பேணுதலாகிய கற்புநெறி யொழுக்கமுடைய பெண்களின் முன்னர். பேதையேன் - அறி வில்லாத யான். இவள் – இச்சீதை. கருந்தனி முகிலினைப் பிரிந்து – கரிய ஒப்பற்ற மேகம் போல்வானுகிய இராமனைப் பிரிந்து நீங்கி. கள்வர் ஊர் இருந்தவள் - வஞ்சக அரக்கரின் ஊராகிய இலங்கையில் இருந்தவள். என ஏச – என்று உலகம் பழித்துச் சொல்லும்படி. நிற்பெனே - உயிரோடு வாழ்வேனே ? (19)

**508.** அற்புத னரக்கர்தம் வருக்க மாசற
விற்பணி கொண்டருஞ் சிறையின் மீட்ட நாள்
இற்புகத் தக்கலை யென்னின் யானுடைக்
கற்பினை யெப்பரி சிழைத்துக் காட்டுகேன்.

அற்புதன், அரக்கர்தம் வருக்கம் ஆசு அற,
வில் பணி கொண்டு, அரும் சிறையின் மீட்ட நாள்,
'இல் புகத் தக்கலை!' என்னின், யான் உடைக்
கற்பினை எப்பரிசு இழைத்துக் காட்டுகேன்?

அற்புதன் - வியக்கத்தக்க குணஞ்செயல்களையுடையவனை இராமன். அரக்கர்தம் வருக்கம் ஆசு அற - அரக்கர் வமிசமெல்லாம் அடியோடு பற்றுக்கோடில்லாதபடி அழிய. வில்பணி கொண்டு - விற்றொழிலைச் செய்து. அரும் சிறையின் மீட்ட நாள் - தாங்கற்கரிய இச்சிறையினின்றும் என்னை மீட்கும் நாளில். இல் புகத் தக்கலை என்னின் - (என்) வீட்டினுள் நீ நுழையத்தகாதவள் (இல்வாழ்க்கைக்கு உரியள் அல்லை) என்று சொன்னால். யான் உடைக் கற்பினை - நான் கொண்டிருக்கிற என்னுடைய நிறைவழுவா நிலையை. எப்பரிசு இழைத்துக் காட்டுகேன் - எவ்விதமாக எடுத்துக் காட்ட வல்லேன்? (20)

## பிராட்டி மாதவிச்சூழ லடைதல்

**509.** ஆதலா லிறத்தலே யறத்தி னாறெனச்
சாதல்காப் பவருமென் றவத்திற் சாம்பினார்
ஈதலா திடமும்வே றில்லை யென்றொரு
போதுலா மாதவிப் பொதும்ப ரெய்தினாள்.

'ஆதலால் இறத்தலே அறத்தின் ஆறு!' எனச்,
'சாதல் காப்பவரும் என் தவத்தில் சாம்பினார்;
ஈது அலாது இடமும் வேறு இல்லை' என்று, ஒரு
போது உலாம் மாதவிப் பொதும்பர் எய்தினாள்.

அறத்தின் ஆறு - தருமத்தின் ஒழுங்கு. சாதல் காப்பவரும் - (நான்) இறத்தலைத் தடுப்பவராகிய காவலரக்கியரும். என் தவத்திற் சாம்பினார் - நான் செய்த தவப் பயனாலே மயங்கித் தூங்குகின்றார்கள். ஈது அலாது இடமும் வேறு இல்லை - இதுவல்லாமல் (உயிரைத் துறக்கத்தக்க) வாய்ப்பும் வேறு கிடைக்காது. போது உலாம் மாதவிப் பொதும்பர் - மலர்கள் அசையப்பெற்ற குருக்கத்தி மரச் செறிவை. எய்தினாள் - அடைந்தாள். (21)

### பிராட்டி உயிரைவிட முயலுதல்

**510.** எய்தினள் பின்னுமெண் ணுத வெண்ணியீங்
குய்திற மில்லையென் ஞெருப்பட் டாங்கொரு
கொய்தளிர்க் கொம்பிடைக் கொடியிட் டேதலை
பெய்திடு மேல்வையிற் றவத்தின் பெற்றியால்.

எய்தினள், பின்னும் எண்ணுத எண்ணி, 'ஈங்கு
உய்திறம் இல்லை !' என்று ஒருப்பட்டு, ஆங்கு ஒரு
கொய்தளிர்க் கொம்பிடைக் கொடி இட்டே தலை
பெய்திடும் ஏல்வையில், தவத்தின் பெற்றியால்.

இதுவும் அடுத்துவரும் செய்யுளும் ஒரு தொடர். எய்தினள் - (அவ்வாறு மாதவிப் பொதும்பரை) அடைந்தவளாகிய பிராட்டி. எண்ணுத பின்னும் எண்ணி - நினைக்கக் கூடாததாகிய உயிர் விடு தலைப்பற்றி மீண்டும் பலவாறு நினைந்து. ஈங்கு உய்திறம் இல்லை என்று - இவ்விடத்தில் பிழைக்கும் வழி வேறு இல்லை என்று; ('உய்திறனில்லை' : திருவவதாரப் படலம், 17.) ஒருப்பட்டு - ஒரு நினைவாகத் துணிந்து. ஆங்கு - அவ்விடத்தில். ஒரு கொய்தளிர்க் கொம்பிடை - தழைத்த தளிர்களையுடைய ஒரு மரக்கொம்பிலே. கொடி இட்டு - குருக்கத்திக் கொடியைச் சுருக்கிட்டுக் கட்டி. தலை பெய்திடும் ஏல்வையில் - (அதனுள்ளே) தலையை நுழைக்கும் பொழுதில். தவத்தின் பெற்றியால் - (அநுமனுடைய) தவத்தின் பெருமையால். தவத்தின் பெற்றியால் கண்டனன் (511) என்க.

இப்பாடல் 12 என்னும் குறியீடுள்ள சுவடியில் மட்டும் காணப் படுகிறது : ஏனைச் சுவடிகளிலும் இப்பொழுதுள்ள அச்சுப் புத்தகங் களிலும் காணப்படவில்லை. ஆயினும், 'மாதவிப் பொதும்பரெய் தினுள்' (509) என்று முடியும் பாடலோடு 'கண்டன னநுமனுங்...... மெய்தீண்டக் கூசுவான்' (511) என வரும் பாடல் தொடர்பற்றதாய் இருக்கிறது. அநுமன் பிராட்டியின் மெய்தீண்டித் தவிர்க்கப்பட வேண்டிய தீங்கு என்ன நிகழ்ந்தது என்று அங்கு உரைக்கப்பட வில்லை. இப்பாடல் அதனை விளக்குதலாலும், முன் பின் பாடல் களோடு தொடர்புடையதாயிருத்தலாலும், கம்பர் கவியின் நடை யமைதி யுடைமையாலும் மூலத்தோடு சேர்க்கலாயிற்று. இக்கவியிற் கூறிய, பிராட்டிமேற்கொண்ட தற்கொலை முயற்சி இக்காண்டத்திறு தியில், திருவடிதொழுத படலத்து, 74-ஆம் பாடலில் கூறப்பெற் றிருத்தலும் இதற்கு ஆதரவாகும். இப்பாடல் பிராட்டியின் கற்பு மேம்பாட்டினையும், சுந்தர குணத்தின் மிகவுயர்ந்த கொடுமுடியினை யும், உள்ளத்துறுதியையும் தெள்ளத் தெளிய விளக்குவதாகும். இக்காண்டத்திற்கே உயிர்நாடியாகவுள்ள இப்பாடலைக் கம்பர் கூறு

திரார். இவ்வரிய நிகழ்ச்சியை ஊகித்தறிய விட்டதாகக் கருதுவதும் பொருத்தமாகத் தோன்றவில்லை. திருவடிதொழுத படலத்துக் கூறப் பெற்றமையால் இங்குக் கூறல் வேண்டா என்னும் கூற்றும் ஏற்புடையதாயில்லை. இப்பாடல் எப்படியோ விடுபட்டு, சில சுவடிகளில் இதற்குப் பதிலாக வேறு இரண்டு பாடல்கள் இடைச் செருகலாகச் சேர்க்கப் பெற்றுள்ளன. அவை அத்துணைச் சிறப்புடையனவாக இல்லாமையும், கம்பர் கவி போலாமையும் அவற்றைப் படிப்பார்க்குத் தெற்றென விளங்கும். (22)

அச்செய்யுள் இரண்டும் 25 என்னும் குறியீடுள்ள சுவடியில் பின் வருமாறு வரையப் பெற்றுள்ளன :—

510 (a) சுற்றிய கொடியொன்றைத் துணித்துத் தூயளோர்
பொற்றடங் கொம்பினிற் பூட்டிப் பூமியே
நற்றவ முடையள்யா ளுகில் நாயகன்
வெற்றிசேர் திருவடி மேவுவே னென்றாள்.

510 (b) என்றருந் ததிமனத் தெம்மை யாளுடைத்
துன்றருங் கற்பினுள் சுருதி நாயகன்
பொன்றரு மலர்ப்பதம் வழுத்திப் பூங்கொடி
தன்றனிக் கழுத்திடைத் தரிக்கு மேல்வையின்.

## அநுமன் தன்னை இராமதூதன் என்று தெரிவித்தல் 511–512

511. கண்டன னநுமனுங் கருத்து மெண்ணினன்
கொண்டனன் றுணுக்கமெய் தீண்டக் கூசுவான்
அண்டர்நா யகனரு டுதன் யானெனுத்
தொண்டைவாய் மயிலினைத் தொழுது தோன்றினன்.

கண்டனன் அநுமனும் : கருத்தும் எண்ணினன் :
கொண்டனன் துணுக்கம் : மெய்தீண்டக் கூசுவான் :
'அண்டர் நாயகன் அருள்தூதன் யான்!' எனுத்,
தொண்டைவாய் மயிலினைத் தொழுது தோன்றினன்.

அநுமனும் கண்டனன் - அநுமன் பார்த்தான். கருத்தும் எண்ணினன் - (பிராட்டியின்) எண்ணம் இது என்பதை ஊகித்தறிந்து. துணுக்கம் கொண்டனன் - அச்சம் கொண்டு. மெய் தீண்டக் கூசுவான் - பிராட்டியின் திருமேனியைத் தொட்டு விலக்குவதற்கு மனம் கூசினவனாய். யான் அண்டர் நாயகன் அருள் தூதன் - நான் தேவர்களின் தலைவனாகிய இராமபிரான் அனுப்பிய தூதன். தொண்டைவாய் மயிலினை - கோவைப் பழம்போற் சிவந்த வாயினையுடையளான மயில் போலும் சாயலையுடைய பிராட்டியை.

(தொண்டை - ஆதொண்டைக் கனி என்றுமாம்.) மெய் தீண்டி விலக்கக் கூசிய நிலையில் முன்தோன்றி, இராமதூதன் தான் என்பதைக் கூறித் தொழுது விலக்கினன் என்க. (23)

இப்பாடலின் பின் 25 என்னும் குறியீடுள்ள ஏட்டுச் சுவடியில் பின் வரும் பாடல் காணப்படுகிறது :—

511 (a) தோன்றினன் றனதுருக் காணத் தூயவள்
மூன்றுல கினுக்குமோ ரன்னை மொய்ம்மலர்
தேன்றிக ழிருவடி சென்னி யாற்றொழு
தான்றபே ரன்புகொண் டறைதல் மேயினன்.

**512.** அடைந்தனெ னடியனே னிராம னாணையாற்
குடைந்துல கனைத்தையு நாடுங் கொட்பினால்
மிடைந்தவ ருலப்பிலர் தவத்தை மேவலால்
மடந்தைநின் சேவடி வந்து நோக்கினேன்.

அடைந்தனென் அடியனேன்; இராமன் ஆணையால்,
குடைந்து உலகு அனைத்தையும் நாடும் கொட்பினால்
மிடைந்தவர் உலப்பிலர்; தவத்தை மேவலால்,
மடந்தை! நின் சேவடி வந்து நோக்கினேன்,

மடந்தை! இராமன் ஆணையால் உலகு அனைத்தையும் குடைந்து நாடும் கொட்பினால் மிடைந்தவர் உலப்பிலர்; (அவர்களுள்) அடியனேன் தவத்தை மேவலால் நின் சேவடி வந்து அடைந்தனென் நோக்கினேன் என்க.

மடந்தை - பெண்களிற் சிறந்தவளே; ஆணையால் - கட்டளையினால். குடைந்து - துளைத்து. நாடும் கொட்பினால் - (உன்னைத்) தேடிப்பார்க்க வேண்டுமென்கிற கோட்பாட்டினால். மிடைந்தவர் - நெருங்கிச் சென்றவர்கள். உலப்பிலர் – அளவில்லாதவர்கள். தவத்தை மேவலால் - முற்பிறப்பில் நல்வினையைச் செய்திருந்ததால்; நின் சேவடி வந்து அடைந்தனென் நோக்கினேன் - உன்னுடைய சிவந்த திருவடிகளை வந்து சேர்ந்து உன்னைக் கண்டேன். (24)

இதன் பின் 25 என்னும் குறியீடுள்ள சுவடியில் பின்வரும் பாடல் காணப்படுகிறது :—

512 (a) நோக்கினே னரக்கியர் நுனிப்பில் கோடியர்
நீக்கினர் துயிலினை நின்னைக் காணுதற்
காக்கிய காலம்பார்த் தயல்ம றைந்துபின்
தாக்கணங் கவர்துயில் கண்டு சார்ந்துளேன்.

### இராமன் வராமைக்குக் காரணம் கூறல்

**513.** ஈண்டுநீ யிருந்ததை யிடரின் வைகுறும்
ஆண்டகை யறிந்தில னதற்குக் காரணம்
வேண்டுமே யரக்கர்தம் வருக்கம் வேரொடு
மாண்டில வீதலான் மாறு வேறுண்டோ.

ஈண்டு நீ இருந்ததை இடரின் வைகுறும்
ஆண்தகை அறிந்திலன் : அதற்குக் காரணம்
வேண்டுமே ? அரக்கர்தம் வருக்கம் வேரொடு
மாண்டில ஈது அலால், மாறு வேறு உண்டா ?

இடரின் வைகுறும் ஆண்டகை - (உன்னைப் பிரிந்ததனாலாகிய) துன்பத்தில் தங்கியிருக்கின்ற ஆண்மைக் குணமுள்ள இராமபிரான். அதற்குக் காரணம் வேண்டுமே - அவ்வாறு அறியான் என்பதற்கு விளக்கமும் சொல்ல வேண்டுமா? அரக்கர்தம் வருக்கம் வேரொடு மாண்டில ஈது அலால் – (இதுவரை) அரக்கர்களுடைய கூட்டம் அடியோடும் அழியாமலிருக்கின்றது என்னும் இது அல்லாமல். மாறு வேறுண்டோ - அவன் நீ யிருக்குமிடத்தை அறியாமலிருப்ப தற்கு வேறும் ஒரு காரணம் (சான்று) உண்டோ? இராமன் அறிந்தானாகில் அரக்கர் குலம் அப்பொழுதே அழிந்திருக்கும் என்றவாறு.
(25)

### அநுமன் தான் இராமதூதனே, ஐயுறவேண்டா எனல்

**514.** ஐயுற லுளதடை யாள மாரியன்
மெய்யுற வுணர்த்திய வுரையும் வேறுள
கையுறு நெல்லியங் கனியிற் காண்டியால்
நெய்யுறு விளக்கனாய் நினையல் வேறென்றான்.

'ஐயுறல் ! உளது அடையாளம் : ஆரியன்
மெய்யுற உணர்த்திய உரையும் வேறு உள ;
கைஉறு நெல்லி அம் கனியில் காண்டியால் !
நெய்உறு விளக்கு அனாய் ! நினையல் வேறு !' என்றான்.

ஐயுறல் - (என்னைச்) சந்தேகப்படாதே. அடையாளம் உளது - (இராமன் கொடுத்தருளிய) அடையாளப் பொருளும் (என்னிடத்தில்) உளது. ஆரியன் மெய்யுற உணர்த்திய உரையும் வேறு உள - பெரியோனாகிய இராமன் உண்மை விளங்கும்படி சொல்லி அனுப்பின (அடையாள) வார்த்தைகளும் வேறே உள்ளன. (அவற்றையெல்லாம் கொண்டு) கைஉறு நெல்லி அம் கனியில்

காண்டி - உள்ளங்கையிற் பொருந்திய நெல்லிக் கனியைப் போலக் காண்பாய்; அம், சாரியை. நெய்உறு விளக்கு அனாய் - நெய் நிறைய வார்க்கப்பெற்றுள்ள விளக்குப் போன்றவளே! வேறு நினையல் - (நீ வாழ்வதைத் தவிர்த்து அதற்கு மாறான) வேறு (எதையும் செய்ய) எண்ணக்கூடாது. என்றான் அநுமன் என்க. நெய் பெய்த விளக்கு கொழுந்துவிட்டு ஒளிர்வதுபோல், இராம னுடைய அன்பாகிய நெய்யைப் பெற்றுச் சீதையாகிய விளக்கு வளரும் என்க. நெய் பெய்த விளக்கு ஓங்குவதுபோல் உயிர்வாழ வேண்டியவளாகிய பிராட்டி அதனை அணைக்க முயலுதல் கூடாது என்பதைக் குறிப்பிற் புலப்படுத்தியவாறு காண்க. தற்கொலை புரிதல் தகாது என்று வாயாற் கூறமாட்டாத அநுமன் வேறு நினையல் என்றான் என்க: 'ஐயுறல்' என முதலிலேயே தன்னைப்பற்றி அநுமன் கூறிவிட்டபடியால், ஈண்டும் அதனையே கூறினன் என்றல் பொருந்தாமை நோக்கியறியலாம். (26)

### பிராட்டி அநுமனைத் தெளிதல்

515. என்றவ னிறைஞ்ச நோக்கி
யிரக்கமு முனிவு மெய்தி
நின்றவ னிருத னல்ல
னெறிநின்று பொறிக ளைந்தும்
வென்றவ னல்ல னாகில்
விண்ணவ னாதல் வேண்டும்
நன்றுணர் வுரையுந் தூய
னவையிலன் போலு மென்றா.

என்று அவன் இறைஞ்ச நோக்கி, இரக்கமும் முனிவும் எய்தி, நின்றவன் நிருதன் அல்லன்: நெறி நின்று பொறிகள் ஐந்தும் வென்றவன்: அல்லன் ஆகில், விண்ணவன் ஆதல் வேண்டும்: நன்று உணர்வு: உரையும் தூயன்: நவை இலன்போலும்!' என்றா.

என்று - என்று இவ்வாறு கூறி. அவன் - அவ்வநுமன். இறைஞ்ச - வணங்கி நிற்க. நோக்கி – (பிராட்டி அவனைப்) பார்த்து. இரக்கமும் முனிவும் எய்தி - கருணையையும் கோபத்தையும் ஒருங்கே அடைந்து. இராமநாமத்தைச் சொல்லக் கேட்டதால் இரக்கமும் அரக்கனே உருமாறி வந்தானோ என்ற எண்ணத்தால் முனிவும் உடன் தோன்றின என்றவாறு. (பிறகு நன்கு உற்றுக் கவனித்த வளாய்) நின்றவன் - (என் முன்னாலே வந்து இறைஞ்சி) நிற்கின்ற இவன். நிருதன் அல்லன் - அரக்கன் அல்லன். நெறி நின்று

பொறிகள் ஐந்தும் வென்றவன் - நல்லொழுக்கத்திலே தவருது நின்று மெய் வாய் கண் மூக்குச் செவியாகிய ஐம்பொறிகளையும் வென்றடக்கிய முனிவனுவன். அல்லன் ஆகில் - (அப்படி) முனிவனுகாவிடில். விண்ணவன் ஆதல் வேண்டும் - ஒரு தேவனுகவிருக்க வேண்டும். உணர்வு நன்று - (இவன்) எண்ணமும் நல்லதாகவேயிருக்கிறது. உரையும் தூயன் - சொற்களாலும் தூய்மையுடையவன். நவை இலன் - (ஆதலால்) குற்றமில்லாதவன். போலும், உரையசை. என்னு - என்று (சீதை) நினைத்து. (27)

## பிராட்டி மகிழ்தல்

**516.** அரக்கனே யாக வேரு
ரமரனே யாக வன்றிக்
குரக்கினத் தொருவ னேதா
னுகுக கொடுமை யாக
இரக்கமே யாக வந்திங்
கெம்பிரா னுமஞ் சொல்லி
உருக்கின னுணர்வைத் தந்தா
னுயிரிதி னுதவி யுண்டோ.

அரக்கனே ஆக: வேறு ஓர் அமரனே ஆக: அன்றிக்
குரக்கு இனத்து ஒருவனேதான் ஆகுக: கொடுமை ஆக:
இரக்கமே ஆக: வந்து இங்கு எம்பிரான் நாமம் சொல்லி
உருக்கினன் உணர்வைத் தந்தான் உயிர்; இதின் உதவி உண்டோ?

அரக்கனே ஆக - (இவன்) அரக்கனுனுலும் ஆகட்டும். வேறு ஓர் அமரனே ஆக-அல்லது ஒரு தேவனுனுலும் ஆகட்டும். அன்றிக் குரக்கு இனத்து ஒருவனேதான் ஆகுக - அல்லது (இப்பொழுது காணப்படுவதுபோல்) குரங்கினத்தைச் சேர்ந்த ஒருவனுனுலும் ஆகட்டும். கொடுமை ஆக - (இவன் செய்வது) தீமையேயானுலும் ஆகட்டும். இரக்கமே ஆக - (அல்லது இவன் செய்வது) என்மீது இரக்கம் கொண்டு நன்மையேயானுலும் ஆகட்டும். இங்கு வந்து எம்பிரான் நாமம் சொல்லி உணர்வை உருக்கினன் - இவ்விடம் வந்து என் நாயகனது திருப்பேராகிய இராம நாமத்தைச் சொல்லி என் ஆன்மாவை உருகப்பண்ணினுன்; உணர்வு-ஆன்மா; ('ஒருவனையே நோக்குமுணர்வு' திவ். இயற். 1, 67.) உணர்ச்சியுமாம். உயிர் தந்தான் - போகும் உயிரை மீட்டுக் கொடுத்தான். இதின் உதவி உண்டோ - இதைவிடப் பெரிய உதவி வேறு என்ன இருக்கிறது ? (28)

பிராட்டி அநுமனை வினவுதல்

**517.** எனநினைத் தெய்த நோக்கி
யிரங்குமெ னுள்ளங் கள்ள
மனனகத் துடைய ராய
வஞ்சகர் மாற்ற மல்லன்
நினைவுடைச் சொற்கள் கண்ணீர்
நிலம்புகப் புலம்பா நின்றான்
வினவுதற் குரிய னென்னா
வீரநீ யாவ னென்றாள்.

**என நினைத்து எய்த நோக்கி, ' இரங்கும் என் உள்ளம் : கள்ளம் மனன் அகத்து உடையர் ஆய வஞ்சகர் மாற்றம் அல்லன் : நினைவு உடைச் சொற்கள் கண்ணீர் நிலம்புகப் புலம்பா நின்றான்: வினவுதற்கு உரியன் ' என்னா, ' வீர ! நீ யாவன் ?' என்றாள்.**

எய்த நோக்கி - நன்றாகப் பார்த்து. என் உள்ளம் இரங்கும் - என் மனமானது (இவனிடத்தில்) கருணை செய்கின்றது. மனன் அகத்துக் கள்ளம் உடையர் ஆய வஞ்சகர் மாற்றம் அல்லன் - மனத்தினுள்ளே சூது நிறைந்த வஞ்சகர்களாகிய அரக்கரது பேச்சுப் போன்று பேசுகிறவனாகத் தோன்றவில்லை. நினைவு உடைச் சொற்கள் - வருத்தத்தோடு கூடிய வார்த்தைகளை ; நினைவு - வருத்தம். (' நெறிமையிற் கூற நினைவி னகன்றாள் ' சீவக சிந்தாமணி, 333.) கண்ணீர் நிலம்புகப் புலம்பா நின்றான் - கண்ணீர் பூமியில் விழும்படிக் கூறிக்கொண்டே அழுகின்றான். (' அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர், புன்கணீர் பூச றரும்.' திருக்குறள். 71. என்றபடி, காட்சியளவைக் கெய்தாத அன்பை அநுமான வளவையான் உணர்ந்து கூறியவாறு.) வினவுதற்கு உரியன் - (ஆதலால் நான்) உசாவி யறிதற்குத் தகுதியுடையவன். (29)

அநுமன் தன்வரலாறு விரித்தல் 518–525

**518.** ஆயசொற் றலைமேற் கொண்ட
வங்கைய னன்னை நின்னைத்
தூயவன் பிரிந்த பின்பு
தேடிய துணைவன் றெல்லைக்

காய்கதிர்ச் செல்வன் மைந்தன்
கவிக்குல மவற்றுக் கெல்லாம்
நாயகன் சுக்கி ரீவ
னென்றுள னவையிற் றீர்ந்தான்.

ஆயசொல் தலைமேல் கொண்ட
அம் கையன், 'அன்னை! நின்னைத்
தூயவன் பிரிந்த பின்பு,
தேடிய துணைவன், தொல்லைக்
காய்கதிர்ச் செல்வன் மைந்தன்,
கவிக்குலம் அவற்றுக்கு எல்லாம்
நாயகன், சுக்கிரீவன்
என்று உளன், நவையில் தீர்ந்தான்.'

ஆய சொல் - (பிராட்டியின்) அந்தச் சொல்லையும். அம் கை - தனது அழகிய கைகளையும். தலைமேல் கொண்டவன் – தலைமேற் கொண்டவனாய். அன்னை – தாயே! தூயவன் – மனம் வாக்கு மெய்களால் தூயவனான இராமபிரான். தேடிய துணைவன் – தேடிப் பெற்ற நண்பன். தொல்லைக் காய்கதிர்ச் செல்வன் மைந்தன் - சூரிய குலத்திற்கு முதல்வனாகும் பழமையையுடைய சுடுகின்ற கிரணங்களைச் செல்வமாகக் கொண்ட சூரியனுடைய புதல்வன். கவி குலம் அவற்றுக்கு எல்லாம் நாயகன் - குரங்குக் கூட்டங்கட் கெல்லாம் தலைவன். நவையில் தீர்ந்தான் – குற்றங்களினின்று நீங்கினவன். (30)

519. மற்றவன் முன்னோன் வாலி
யிராவணன் வலிதன் வாலின்
இற்றுகக் கட்டி யெட்டுத்
திசையினு மெழுந்து பாய்ந்த
வெற்றியன் றேவர் வேண்ட
வேலையை விலங்கன் மத்திற்
சுற்றிய நாகந் தேய
வமுதெழக் கடைந்த தோளான்.

மற்றவன் முன்னோன் வாலி, இராவணன் வலி தன் வாலின் இற்று உகக் கட்டி, எட்டுத் திசையினும் எழுந்து பாய்ந்த வெற்றியன், தேவர் வேண்ட, வேலையை விலங்கல் மத்தில் சுற்றிய நாகம் தேய அமுது எழக் கடைந்த தோளான்.

மற்றவன் முன்னேன் வாலி - அந்தச் சுக்கிரீவனுடைய தமையனை வாலி யென்பவன். இற்று உக - அழிந்தொழியும்படி. வேலையை என்றது இங்கே பாற்கடலை. விலங்கல் மத்தில் - (மந்தர) மலையை மத்தாகக் கொண்டு. நாகம் தேய - கயிருகிய வாசுகி யென்னும் பாம்பினது உடம்பு தேயும்படி. (31)

**520.** அன்னவன் றன்னை யுங்கோ
னம்பொன்ரு லாவி வாங்கிப்
பின்னவற் கரசு நல்கித்
துணையெனப் பிடித்தா னெங்கள்
மன்னவன் றனக்கு நாயேன்
மந்திரத் துள்ளேன் வானின்
நன்னெடுங் காலின் மைந்த
ஞமமு மநும னென்பேன்.

அன்னவன் தன்னை உம்கோன் அம்பு ஒன்ருல் ஆவி வாங்கிப் பின்னவற்கு அரசு நல்கித் துணை எனப் பிடித்தான்; எங்கள் மன்னவன் தனக்கு நாயேன் மந்திரத்து உள்ளேன், வானின் நல்நெடும் காலின் மைந்தன், நாமமும் அநுமன் என்பேன்.

அன்னவன் தன்னை - அப்படிப்பட்ட வாலியை. உம் கோன் - உங்கள் அரசனுகிய இராமபிரான். பின்னவற்கு - (வாலியின்) தம்பியாகிய சுக்கிரீவனுக்கு. அரசு நல்கி - (கிட்கிந்தைமலையை யாளும்) பட்டத்தைக் கொடுத்து. துணையெனப் பிடித்தான் - (உன்னைத் தேடுதற்கு அவனையே) துணையாகக் கொண்டான். நாயேன் எங்கள் மன்னவன் தனக்கு மந்திரத்து உள்ளேன் - நாய்போற் கடையனுன நான் எங்கள் அரசனுகிய சுக்கிரீவனுடைய அமைச்சவையில் ஒருவனுயுள்ளவன். வானின் - ஆகாயத்தினின்றும் தோன்றிய. நல் நெடும் காலின் மைந்தன் - நல்ல பெரிய காற்றுக் கடவுளின் மகன். (32)

**521.** எழுபது வெள்ளங் கொண்ட
வெண்ணன வுலக மெல்லாந்
தழுவிநின் றெடுப்ப வேலை
தனித்தனி கடக்குந் தாள
குழுவின வுங்கோன் செய்யக்
குறித்தது குறிப்பி னுன்னி
வழுவில செய்தற் கொத்த
வானரம் வானி னீண்ட

எழுபது வெள்ளம் கொண்ட எண்ணன, உலகம் எல்லாம்
தழுவி நின்று எடுப்ப, வேலை தனித்தனி கடக்கும் தாள,
குழுவின, உம் கோன் செய்யக் குறித்தது குறிப்பின் உன்னி
வழுஇல செய்தற்கு ஒத்த வானரம், வானின் நீண்ட.

எழுபது வெள்ளம் கொண்ட எண்ணன - எழுபது வெள்ள மென்னும் தொகையைக் கொண்டவையும். உலகம் எல்லாம் தழுவி நின்று எடுப்ப - எல்லா உலகங்களையும் ஒருசேரக் கைகளால் எடுக்க வல்லவையும். வேலை தனித்தனி கடக்கும் தாள - கடலைத் தனித் தனியே தாண்டவல்ல கால்களையுடையவையும். வானின் நீண்ட - ஆகாயத்தின் உயர்ந்தவையுமான. வானரம் - குரங்குகள். உம் கோன் செய்யக் குறித்தது - உமது நாயகனாகிய இராமபிரான் செய்ய நினைத்ததை. குறிப்பின் உன்னி - முகக் குறிப்பினால் ஆராய்ந் தறிந்து. வழு இல செய்தற்கு ஒத்த - குற்றம் நேராதபடி செய்து முடித்தற்கு மனம் பொருந்தியவையாய். குழுவின - கூடியுள்ளன. (33)

**522.** துப்புறு பரவை யேழுஞ்
சூழ்ந்தபா ரேழு மாழ்ந்த
ஒப்புறு நாகர் நாடு
மும்பர்நின் றிம்பர் காறும்
இப்புறந் தேடி நின்னை
யெதிர்ந்தில வென்னினண்டத்
தப்புறம் போயுந் தேட
வவதியி னமைந்து போன.

துப்பு உறு பரவை ஏழும், சூழ்ந்த பார் ஏழும், ஆழ்ந்த
ஒப்பு உறு நாகர் நாடும், உம்பர்நின்று இம்பர்காறும்,
இப்புறம் தேடி நின்னை எதிர்ந்தில என்னின், அண்டத்து
அப்புறம் போயும் தேட அவதியின் அமைந்து போன.

(அவற்றிற் பல வானரங்கள்) துப்பு உறு பரவை ஏழும்-பவழக் கொடிகளையுடைய ஏழு கடல்களிலும். சூழ்ந்த பார் ஏழும் - (அக் கடல்களாற்) சூழப்பட்ட ஏழு தீவுகளிலும். ஆழ்ந்த ஒப்பு உறு நாகர் நாடும் - கீழே ஆழ்ந்துள்ள அழகிய நாகர் உலகிலும்; ஒப்பு-அழகு. ('ஒப்புடை யொருவனை யுருவழிய' தேவாரம். 474.7.) உம்பர்நின்று இம்பர் காறும் - மேலுலகம் முதல் இந்தப் பூமிவரையில். இப்புறம் தேடி - இவ்வண்டத்துப் பகுதிகளிலெல்லாம் தேடி. நின்னை எதிர்ந் தில என்னின் - உன்னைக் காணமுடியாது போனால். அண்டத்து அப்புறம் போயும் தேட - இவ்வண்டத்துக்கு அப்பாலுள்ள பகுதிகளி

லும் சென்று தேடிப் பார்க்கும்படி. அவதியின் அமைந்து போன - ஒரு காலவெல்லைக்குள் தேடி வருவதாகச் சென்றுள்ளன. (34)

**523.** புன்ெறாழி லரக்கன் கொண்டு
போந்தநாட் பொதிந்து தூசிற்
குன்றினெம் மருங்கி னிட்ட
வணிகலக் குறியி னாலே
வென்றியா னடியேன் றன்னை
வேறுகொண் டிருந்து கூறித்
தென்றிசைச் சேறி யென்றா
னவனருள் சிதைவ தாமோ.

புன்தொழில் அரக்கன் கொண்டு
போந்த நாள், பொதிந்து தூசில்
குன்றின் எம் மருங்கின் இட்ட
அணிகலக் குறியினாலே,
வென்றியான் அடியேன் தன்னை
வேறு கொண்டு இருந்து கூறித்
'தென்திசைச் சேறி!' என்றான்:
அவன் அருள் சிதைவது ஆமோ?

புன் தொழில் அரக்கன் - இழிதொழில் பூண்ட அரக்கனாகிய இராவணன். தூசில் பொதிந்து - (நீ) ஆடையில் முடிந்து. குன்றின் எம்மருங்கின் இட்ட - (ருசியமூக) மலையில் எமது அருகே எறிந்த. அணிகலக் குறியினாலே - நகைகள் விழுந்துகிடந்த அடையாளத்தினாலே. வென்றியான் – வெற்றியை யுடையவனான இராம பிரான். அடியேன் தன்னை வேறு கொண்டு இருந்து - அடியவனாகிய என்னைத் தனியாக அழைத்துச் சென்று அங்கே இருந்து. கூறி - அடையாளங்களும் சொல்லி. தென் திசைச் சேறி என்றான் - (நீ) தெற்கே நோக்கிச் செல்வாயாக என்று பணித்தருளினான். அவன் அருள் சிதைவது ஆமோ - அவன் அருளியது பழுதாகுமோ? (ஆகாது. ஆதலால் அடியேன் இங்கு நின்னைக் கண்டேன் என்றவாறு.) (35)

**524.** கொற்றவற் காண்டுக் காட்டிக்
கொடுத்தபோ தடுத்த தன்மை
பெற்றியி னுணர்தற் பாற்றே
வுயிர்நிலை பிறிது முண்டோ

இற்றைநா ளளவு மன்னு
வன்றுநீ யிழித்து நீத்த
மற்றைநல் லணிகள் காணுன்
மங்கலங் காத்த மன்னே.

கொற்றவற்கு ஆண்டுக் காட்டிக் கொடுத்தபோது அடுத்த தன்மை
பெற்றியின் உணர்தற் பாற்றே ? உயிர் நிலை பிறிதும் உண்டோ
இற்றைநாள் அளவும் ? அன்ன ! அன்று நீ இழித்து நீத்த
மற்றை நல் அணிகள் காண் உன் மங்கலம் காத்த மன்னே !

அன்ன - தாயே ! கொற்றவற்கு - வெற்றியையுடையவனான இராமபிரானுக்கு. ஆண்டு - (சுக்கிரீவனோடு நட்புக் கொண்ட) அப்பொழுது. காட்டிக் கொடுத்த போது - (நான் உன் நகைகளை எடுத்துக்) காண்பித்து (அவன் கையில்) கொடுத்தபொழுது. அடுத்த தன்மை - (அவ்விராமபிரானுக்கு) நேர்ந்த நிலைமை. பெற்றியின் - (நான் இப்பொழுது சொல்லும்) வகையினால் (உள்ளபடி). உணர்தற் பாற்றே - (பிறரால்) அறியத்தக்க தன்மையுடையதோ ? (நேரில் கண்டிருந்தாலே அறியமுடியும் என்றவாறு). இற்றைநாள் அளவும் - இன்று வரையும். உயிர் நிலை - (இராமபிரானது) உயிர் (அவன் உடலிலே) நிற்றல். பிறிதும் உண்டோ - பிறிதாலும் உண்டோ என உருபு விரித்துக்கொள்க. (இவ்வணிகலங்களையன்றி) வேறு எக்காரணத்தாலும் உள்ளதாகுமோ (ஆகாது). அன்று நீ இழித்து நீத்த மற்றை நல் அணிகள் - (இராவணன் உன்னை எடுத்துவந்த) அந்நாளில் நீ கழற்றி யெறிந்த அந்த அணிகலன்களே. காண், அசை, உன் மங்கலம் காத்த - உனது திருமங்கலியத்தைக் காப்பாற்றின. (நீ வீசியெறிந்த அணிகலன்களின் அடையாளத்தைக் கொண்டே இராமன் இதுவரை உயிரோடிருக்கிறான் என்றவாறு. மற்றையணிகலன்களைக் காக்கவல்ல திருமங்கலியத்தை மற்றையணிகலன்களே இங்குக் காத்துக் கொடுத்தன என்ற நயம் காண்க.) மன், ஓ, அசை. (36)

**525.** ஆயவன் றன்மை நிற்க
வங்கதன் வாலி மைந்தன்
ஏயவன் றென்பால் வெள்ள
மிரண்டினோ டெழுந்து சேனை
மேயினன் படர்ந்து தீர
வினையவன் விடுத்தா னென்னைப்
பாய்திரை யிலங்கை மூதூர்க்
கென்றனன் பழியை வென்றான்.

'ஆயவன் தன்மை நிற்க அங்கதன், வாலி மைந்தன்,
ஏயவன் தென்பால், வெள்ளம் இரண்டினோடு எழுந்து சேனை
மேயினன் படர்ந்து, தீரவினையவன் விடுத்தான் என்னைப்
பாய்திரை இலங்கை மூதூர்க்கு' என்றனன் பழியை வென்றான்.

'ஆயவன் தன்மை நிற்க : தென்பால் ஏயவன் வாலி மைந்தன், அங்கதன், இரண்டு வெள்ளம் சேனையோடு எழுந்து படர்ந்து மேயினன் : தீரவினையவன் பாய்திரை இலங்கை மூதூர்க்கு என்னை விடுத்தான்' என்றனன் பழியை வென்றான் என்க.

ஆயவன் தன்மை நிற்க - அப்படிப்பட்ட இராமபிரானின் இயல்பு (இவ்வாறு) இருக்கட்டும். தென்பால் ஏயவன் – தென் திசை நோக்கி ஏவப்பட்டவனும். வாலி மைந்தன் - வாலியின் மகனுமான. அங்கதன் - அங்கதன் என்பவன். இரண்டு வெள்ளம் சேனையோடு எழுந்து படர்ந்து மேயினன் - இரண்டு வெள்ளம் என்னும் எண்ணுடைய படையுடனே கிளம்பி விரைந்து தென்கடற் கரையை அடைந்தவனாய். தீரவினையவன் - அஞ்சாத வீரச் செயலையுடைய அவ் வங்கதன். பாய்திரை இலங்கை மூதூர்க்கு என்னை விடுத்தான் - பாயும் அலைகளாற் சூழப்பட்ட பழமையான ஊராகிய இவ்விலங்காபுரிக்கு என்னை அனுப்பினான். என்றனன் பழியை வென்றான் - என்று கூறினான் பழிக்கப்படுவனவாகிய குற்றங்களை வென்றவனாகிய அநுமன் என்க. (37)

### இராமபிரான் திருமேனிநிலை கூறுக எனப் பிராட்டி அநுமனை வேண்டுதல்

**526.** எய்தின வுரைத்த லோடு
மெழுந்துபே ருவகை யேற
வெய்துற வொடுங்கு மேனி
வானுற விம்மி யோங்க
உய்தல்வந் துற்ற தோவென்
றருவிநீ ரொழுகு கண்ணள்
அய்யசொ லனையன் மேனி
யெப்படித் தறிவி யென்றாள்.

எய்தின உரைத்தலோடும், எழுந்து பேர்உவகை ஏற,
வெய்துஉற ஒடுங்கும் மேனி வான்உற விம்மி ஓங்க,
'உய்தல் வந்து உற்றதோ?' என்று அருவிநீர் ஒழுகு கண்ணள்,
'அய்ய! சொல்! அனையன் மேனி எப்படித்து? அறிவி!' என்றாள்.

எய்தின உரைத்தலோடும் - (இவ்வாறு அநுமன்) அங்கு நிகழ்ந்தவைகளைக் கூறினவுடனே. பேர் உவகை எழுந்து ஏற - (தன் மனத்தில்) பெரு மகிழ்ச்சி தோன்றிப் பொங்கவும். வெய்து உற ஒடுங்கும் மேனி - துன்பமுறுதலால் மெலிந்திருந்த (தனது) உடல். வான் உற விம்மி ஓங்க - பெரிதாகப் பூரித்து வளரவும். உய்தல் வந்து உற்றதோ என்று அருவி நீர் ஒழுகு கண்ணுள் - (துன்பம் நீங்கி) உயிர் பிழைக்கும் காலமும் (எனக்கு) வந்து கூடியதோ என்று அருவிபோல நீர் பெருகுகின்ற கண்களையுடையவளாய். அய்ய - பெரியவனே! 'ஐய' என்பது எதுகை நோக்கி அய்ய என நின்றது. சொல் அனையன் மேனி - (உன்னாலே) சொல்லப்பட்ட அந்த இராம பிரானுடைய வடிவம். எப்படித்து - என்ன தன்மையையுடையது? (எது போன்றிருக்கும்?) அறிவி - தெரிவிப்பாயாக. என்றுள் - என்று (பிராட்டி) கூறினுள். (38)

### இராமபிரான் திருமேனியழகை அடிமுதல் முடியீருக அநுமன் கூறல் 527–547

**527.** படியெடுத் துரைத்துக் காட்டும்
படித்தன்று படிவம் பண்பின்
முடிவுள வுவமைக் கெல்லா
மிலக்கண முரைக்கின் முந்தா
துடியிடை யடையா ளத்தின்
றொடர்வையே தொடர்தி யென்னு
அடிமுதன் முடியீ ருக
வறிவுற வநுமன் சொல்வான்.

'படி எடுத்து உரைத்துக் காட்டும்
படித்துஅன்று : படிவம், பண்பின்
முடிவு உள உவமைக்கு எல்லாம் :
இலக்கணம், உரைக்கின் முந்தா :
துடிஇடை! அடையாளத்தின்
தொடர்வையே தொடர்தி!' என்னு,
அடிமுதல் முடி ஈருக
அறிவுற அநுமன் சொல்வான்.

'துடியிடை! படிவம் பண்பின் படி எடுத்து உரைத்துக் காட்டும் படித்தன்று; உவமைக்கு எல்லாம் இலக்கணம் முடிவு உள; உரைக்கின் முந்தா; அடையாளத்தின் தொடர்வையே தொடர்தி: என்னு அடிமுதல் முடி ஈறு ஆக அறிவுற அநுமன் சொல்வான்: என இயைக்க. துடி இடை - உடுக்கை போலும் இடையை யுடையாய்!

அண்மை விளி. படிவம் - இராமபிரானது திருமேனி. பண்பின் - (வினையும், பயனும், மெய்யும், உருவுமாகிய) பண்புகளால். படி எடுத்து உரைத்துக் காட்டும் படித்தன்று—ஒத்த பிறிதொன்று கொண்டு சொல்லி அறிவிக்கும் தன்மையுடையதன்று. (ஏன் எனின்) உவமைக்கெல்லாம் இலக்கணம் முடிவுள—உவமமாகக் கூறத்தக்கவற்றுக்கெல்லாம் இயல்புகள் வரையறைப்பட்டன. உரைக்கின் முந்தா—(அவற்றை உவமை) கூறின் சிறப்புடையன வாகா; என்றது வரையறைப்பட்ட இயல்புடையவற்றை வரையறைப் படாத இயல்புடைய பெருமான் திருமேனி (யுறுப்புக்களு)க்கு உவமை கூறின் சிறப்புடையனவாகா ஆதலின் என்றபடி. அடை யாளத்தின் தொடர்வையே தொடர்தி—யான் கூறும் அறிகுறிகளின் தொடர்ச்சியையே தொடர்ந்து கேட்பாயாக. என்னு - என்று. படி யெடுத்து...தொடர்தி என்பது பிராட்டியை நோக்கி அநுமன் கூறியது. இறுதியடி கவிக் கூற்று. முதலடி முடிவுரையாகவும் இரண்டாவது அடி அப் முடிவுக்குரிய ஏது வாக்கியமாகவும் அமைந் துள்ள நயம் காண்க. (39)

## திருவடிச் செவ்வி

528. சேயிதழ்த் தாமரை யென்று சேணுளோர்
★ ஏயின ரதன்றுணை யெளிய தில்லையால்
நாயகன் றிருவடி குறித்து நாட்டுறின்
பாய்திரைப் பவழமுங் குவளைப் பண்பிற்றால்.

சேயிதழ்த் தாமரை என்று சேண்உளோர்
ஏயினர்; அதன்துணை எளியது இல்லையால்
நாயகன் திருவடி, குறித்து நாட்டுறின்,
பாய்திரைப் பவழமும் குவளைப் பண்பிற்றால்.

நாயகன் திருவடி, சேயிதழ்த் தாமரை (ஒக்கும்) என்று சேண் உளோர் ஏயினர்; அதன் துணை எளியதில்லை. திருவடி குறித்து நாட்டுறின், பாய்திரைப் பவழமும் குவளைப் பண்பிற்றால்: என இயைக்க. நாயகன் திருவடி - தலைவனை இராமபிரானுடைய திருவடி. சேயிதழ்த் தாமரை என்று - சிவந்த இதழ்களையுடைய தாமரை மலர் (ஒக்கும்) என்று. சேண் உளோர் ஏயினர் - பழம்புல வர்கள் பணித்தார்கள் (ஆயினும்); அதன் துணை எளியதில்லை - அத் தாமரையின் அளவு எளிமையுடையதல்ல. திருவடி குறித்து நாட்டுறின் - அத்திருவடியைக் குறித்து உவமை கூறின். பாய் திரைப் பவழமும் - பரவிய அலைகளையுடைய கடலில் உண்டான பவழமும். குவளைப் பண்பிற்று - (தன் செம்மை குன்றிக்) குவளை மலர்போற் பொலிவழியும். முன்னையோர் பெருமான் திருவடி

களுக்குத் தாமரைமலரை உவமை கூறினர்களாயினும், எப்பொழுதும் ஒருபடியாக மலர்ந்து விளங்கும் திருவடிகள், ஒரு பொழுது மலர்ந்து, ஒருபொழுது குவியும் இயல்புடைய தாமரை மலரனைய எளிமையுடையனவல்ல; அவ்வடிகள் குறித்து ஒருபடியான ஒளியுடைய பவழத்தை உவமை கூறினும், திருவடிகளின் வளரும் செந்நிற ஒளியின்முன் பவழம் தன் செம்மை குன்றிக் குவளை போலப் பொலிவழியும் என்றவாறு. திருவடி என்பது மீட்டும் கூட்டப்பட்டது. ஒக்கும் என்பது அவாய்நிலையான் வந்தது. 'குவளைப் பண்பினும்' என்று பாடம் கொண்டு, 'தாமரையைத் திருவடிக்கு உவமை குறித்து நாட்டுறின், அது, பவழத்திற்குக் குவளையை உவமை கூறிய பண்பாகும்' என்று பொருள் கொள்ளலும் ஆம். (40)

திருவடிவிரற் செவ்வி

**529.** தளங்கெழு கற்பக முகிழுந் தண்டுறை
இளங்கொடிப் பவழமுங் கிடக்க வென்னவை
துளங்கொளி விரற்கெதி ருதிக்குஞ் சூரியன்
இளங்கதி ரொக்கினு மொக்கு மேந்திழாய்.

தளம்கெழு கற்பக முகிழும், தண் துறை
இளம்கொடிப் பவழமும் கிடக்க: என் அவை ?
துளங்குஒளி விரற்குஎதிர் உதிக்கும் சூரியன்
இளம்கதிர் ஒக்கினும் ஒக்கும், ஏந்திழாய் !

ஏந்திழாய்! (நாயகன் திருவடிகளில் உள்ள) துளங்கு ஒளி விரற்கு, தளம் கெழு கற்பகமுகிழும் தண்துறை இளங்கொடிப் பவழமும் எதிர் என் அவை கிடக்க. (அவ்விரல்) உதிக்கும் சூரியன் இளங்கதிர் ஒக்கினும் ஒக்கும்: என இயைக்க. துளங்கு ஒளி விரற்கு—மிக்க ஒளியையுடைய (இராமபிரான் திருவடி) விரலுக்கு. தளம் கெழு கற்பக முகிழும்—இதழ்கள் செறிந்த கற்பகத்தின் அரும்பும். தண் துறை இளங்கொடிப் பவழமும்—குளிர்ந்த நீர்த் துறையிலுள்ள பவழத்தின் இளங்கொடியும். எதிர் என்—ஒப்பாவது ஏது ? ஒப்பாதல் இல்லை ஆதலால், அவை கிடக்க. உதிக்கும் இளம் சூரியன் கதிர்—தோன்றுகிற பால சூரியனுடைய கிரணங்களை. ஒக்கினும் ஒக்கும் - ஒருவாறு ஒத்தாலும் ஒக்கும். (41)

திருவடிவிரல்களின் நகச்செவ்வி

**530.** சிறியவும் பெரியவு மாகித் திங்களோ
மறுவில பத்துள வல்ல மற்றினி
எறிசுடர் வயிரமோ திரட்சி யெய்தில
அறிகிலெ னுகிர்க்கியா னுவமை யாவன.

சிறியவும் பெரியவும் ஆகித் திங்களோ
மறுஇல பத்துஉள அல்ல மற்று இனி
எறிசுடர் வயிரமோ திரட்சி எய்தில
அறிகிலென் உகிர்க்கு யான் உவமை ஆவன.

திங்களோ சிறியவும் பெரியவும் ஆகி, மறு இல பத்து உள அல்ல; இனி, எறிசுடர் வயிரமோ திரட்சி எய்தில; (ஆதலின்) யான், உகிர்க்கு உவமையாவன அறிகிலென்: எனக் கூட்டுக. இராமபிரானுடைய திருவடி விரல் நகங்கள்; சிறியனவும் பெரியனவுமாகிக் குற்றமில்லாதனவாகப் பத்து உள்ளன; சந்திரன் அவ்வண்ணம் இல்லை; ஆதலால் நகங்கட்கு ஒப்பாதல் இல்லை. வயிர மணியை அவ்விரல்களுக்கு உவமை கூறலாமோ எனின், அவை நகங்களைப்போல் திரட்சியாயில்லை; ஆதலால் நகங்களுக்குப் பொருத்தமான உவமையை யான் அறிந்திலேன் என்றவாறு. மறு—களங்கம். எறிசுடர்—வீசுகின்ற ஒளி. திரட்சி - உருட்சி. மற்று, அசை. உகிர் - நகம். (42)

### மீட்டும் திருவடிச் செவ்வி

531. பொருந்தின நிலனொடு போந்து கானிடை
வருந்தின வெனினது நூலை மாறுகொண்
டிருந்தது நின்றது புவனம் யாவையும்
ஒருங்குடன் புணர்வன வுணர்த்தற் பாலதோ.

பொருந்தின நிலனொடு போந்து கானிடை
வருந்தின எனின், அது நூலை மாறுகொண்டு
இருந்தது; நின்றது புவனம் யாவையும்
ஒருங்கு உடன் புணர்வன; உணர்த்தற் பாலதோ?

'சேயிதழ்த் தாமரை' என்ற செய்யுளால், திருவடிச் சிறப்பைப் பொதுவாகக் கூறிப் பின்னர், விரல் நகம் என்பவற்றின் இயல்பைத் தெரிவித்த அநுமனுடைய உள்ளத்தில், இராமபிரான் கானில் நடந்துவந்த எளிமை திருவடியிலே மீட்டும் ஈடுபடுத்த அவ்வடிகளையே பற்றிக் கூறுகின்றான். நின்றது புவனம் யாவையும் ஒருங்கு உடன்புணர்வன (பாதங்கள்), 'நிலனொடு பொருந்தின; கானிடைப் போந்து வருந்தின' எனின் அது நூலை மாறுகொண்டிருந்தது; அவ்வடிகளின் பெருமை உணர்த்தற்பாலதோ: என இயைக்க. நின்றது புவனம் யாவையும் – நிலைபெற்றுள்ளதாகிய உலகம் அனைத்தையும். ஒருங்கு உடன் புணர்வன - ஒரே சமயத்தில் முழுதும் பொருந்தியனவாகவுள்ள திருவடிகள். நிலனொடு பொருந்தின – இந்த நிலவுல

கத்தின் அளவாகப் பொருந்தின. கானிடைப் போந்து வருந்தின - நிலவுலகின் ஒருபகுதியாகிய காட்டில் வந்து வருந்தின. எனின் - என்ருல். அது - அந்தக் கூற்று. நூலை மாறுகொண்டு இருந்தது - (வரலாறும் தருக்கமும் ஆகிய) நூல்களின் கருத்தொடு மாறுபட்ட தாயிருந்தது. உணர்த்தற்பாலதோ—அவ்வடிகளின் பெருமை தெரிவிக்குந் தன்மையதோ? உலகங்கள் எல்லாவற்றையுமே தம் கீழ் ஒடுக்கியளந்தன என்று பாராட்டப்பெறும் அடிகள், இன்று உல கங்களில் ஒன்ருகிய பூமியளவில் பொருந்தின என்றலும், அப் பூமியின் ஒருபகுதியாகிய காட்டில் நடந்து வருந்தின என்றலும் நூற்கருத்துக்களோடு மாறுபட்டன என்பதாம். நிலத்தைக் கடந்த திருவடிகள் நிலத்தைப் பொருந்தின என்றலும், வருந்தாத அடிகள் வருந்தின என்றலும் நூலொடு மாறுபட்டன எனினும் அமையும். பதினன்கு உலகங்களும் வியாப்பியமாய், தாம் வியாபகமாய் விரிந்த அடிகள், இன்று, அவற்றுள் ஒன்ருகிய பூமியின் வியாப்பியமாயின எனின், அது தருக்கநூலொடும் வரலாற்றுநூலொடும் மாறுபட்ட கருத்து என்றவாறு. (43)

## கணைக்காற் செவ்வி

**532.** தாங்கணைப் பணிலமும் வளையுந் தாங்குநீர்
வீங்கணைப் பணிமிசை மேக மன்னவன்
பூங்கணைக் காற்கொரு பரிசு தான்பொரு
ஆங்கணைக் காவமோ வாவ தன்னையே.

தாங்குஅணைப் பணிலமும் வளையும் தாங்கும் நீர்
வீங்குஅணைப் பணிமிசை மேகம் அன்னவன்
பூங்கணைக்காற்கு ஒரு பரிசுதான் பொரு
ஆம் கணைக்கு ஆவமோ ஆவது? அன்னையே!

அன்னையே அணைதாங்கு பணிலமும் வளையும் தாங்கும், வீங்கு நீர்ப் பணியணைமிசை மேகம் அன்னவன் பூங்கணைக்காற்கு, கணைக்கு ஆம் ஆவம் ஒருபரிசுதான் பொருவாவதோ? என இயைக்க. அணை தாங்கு பணிலமும் - நீர்க்கரைகளில் தங்கியுள்ள சங்கமும். வளையும் - சக்கரமும். தாங்கும் - தரித்துள்ள. வீங்கு நீர் - மிக்க நீரின்கண் (கடலில்). பணி அணைமிசை மேகம் அன்னவன் - ஆதிசேடனுகிய படுக்கையில் (கிடக்கின்ற) மேகத்தை ஒத்த (திருமாலின் அமிசமான) இராமபிரானுடைய. பூங்கணைக் காற்கு - அழகிய கணைக்காலுக்கு. கணைக்கு ஆம் ஆவம் - கணைகளுக்கு இடம் ஆகிய தூணி; ஒரு பரிசு தான் பொருவாவதோ - ஒருதன்மையானும் ஒப்பாகுமோ? (ஒருவாற் ருனும் ஒப்பாகாது.) அடைந்தாரை ஆக்கும் சிறப்புடைய திருவடி

களுக்கு, அழிக்குமியல்புடைய கணைகளுக்கு உறைவிடமாகிய அம்ப ருத்தூணியோ ஒப்பாவது? என்றவாறு. பணிலமும் வளையும் தாங்கும் மேகம்; வீங்கு நீர்ப் பணியணை மிசை மேகம் என்க. வீங்கு நீர் மேகம், பணியணைமிசை மேகம் எனினும் ஆம். வீங்கு நீர் மேகம் - மிக்க நீரையுடைய (கருக்கொண்ட மேகம்) என்க. (44)

இப்பாடலின் பின் 55 என்னும் குறியீடுள்ள பிரதியில், பின்வரு மாறு ஒரு செய்யுள் காணப்படுகிறது:—

532 (அ) நிலைபெற வயனிருந் தியற்று நீலத்தின்
சிலைமணி வள்ளமு முவமை சேர்கல
அலவன தென்பரா லறிவி லோரவர்
உலைவறு திருமுழங் காலுக் கொப்புண்டோ.

## தொடைகளின் செவ்வி

**533.** அறங்கிளர் பறவையி னரச ளுடெழிற்
பிறங்கெருத் தணைவன பெயரும் பொற்புடை
மறங்கிளர் மதகரிக் கரமு நாணின
குறங்கினுக் குவமையிவ் வுலகிற் கூடுமோ.

அறம் கிளர் பறவையின் அரசன் ஆடு எழில்
பிறங்கு எருத்து அணைவன பெயரும் பொற்புடை
மறம் கிளர் மதகரிக் கரமும் நாணின
குறங்கினுக்கு உவமை இவ் உலகில் கூடுமோ?

பறவையின் அரசன் எருத்து, ஆடெழிலெருத்து, பிறங்கு எருத்து என்க. அறம் கிளர் பறவையின் அரசன் ஆடெழிற் பிறங்கு எருத்து அணைவன பெயரும் குறங்கு, பொற்புடைக் குறங்கு என இயைக்க. திருமாலே இராமபிரானாக அவதரித்துள்ளா ராதலின், பறவையின் அரசன் எருத்து அணைவனவாகிப் பெயரும் குறங்கு என்றார். அறம் கிளர் - தரும வடிவாய் விளங்குகின்ற; பறவையின் அரசன் - பறவைகளுக்கு அரசாகிய கருடனுடைய; ஆடு எழில் பிறங்கு எருத்து அணைவன பெயரும் - வெற்றியும் அழகும் வாய்ந்த பிடரியை அணைவனவாய் (இராமபிரானான நிலையில்) அதனை நீங்கிய; பொற்புடை - அழகினையுடைய; மறம் கிளர் - வலிமை மிக்க. மத யானையின் கரமும் ஒப்பாகாமல் வெட்கும்படி (சிறப்பு மிக்க) துடைக்கு என்க. (45)

## திருவுந்தியின் செவ்வி

**534.** வலஞ்சுழித் தொழுகுநீர் வழங்கு கங்கையின்
பொலஞ்சுழி யென்றலும் புன்மை பூவொடு
நிலஞ்சுழித் தெழுமணி யுந்தி நேரினி
இலஞ்சியும் போலும்வே றுவமை யாண்டரோ.

வலம் சுழித்து ஒழுகு நீர் வழங்கு கங்கையின்
பொலம் சுழி என்றலும் புன்மை பூவொடு
நிலம் சுழித்து எழும் மணி உந்தி நேர் இனி
இலஞ்சியும் போலும் வேறு உவமை யாண்டு அரோ.

பூவொடு நிலம் சுழித்து எழும் மணிஉந்தி நேர், கங்கையின் பொலம் சுழி என்றலும் புன்மை; இனி இலஞ்சியும் நேர் போலும்; வேறு உவமை யாண்டு? என இயைக்க. அரோ, அசை. பூவொடு - பூவும் (திருவுந்தித் தாமரையும்). நிலம் - உலகங்களும். சுழித்து எழும் - ஒருங்கு திரண்டு தோன்றிய. மணி உந்தி நேர் – நீலமணி போலும் உந்திக்கு ஒப்பு. உந்திக்கு ஒப்பு கங்கையின் பொலஞ்சுழி என்றலும் புன்மையாகும். (ஆயின்), இனி இலஞ்சியும் ஒப் பாகுமோ? (ஆகாது.) எனவே வேறு உவமை எங்கே உண்டு என்றவாறு. பொலம் - அழகு. இலஞ்சி – மகிழம்பூ. (46)

## திருமார்பின் செவ்வி

**535.** பொருவரு மரகதப் பொலங்கொண் மால்வரை
வெருவுற விரிந்துயர் விலங்க லாகத்தைப்
பிரிவற நோற்றன ளென்னிற் பின்னையத்
திருவினிற் றிருவுளார் யாவர் தெய்வமே.

பொருஅரு மரகதப் பொலம் கொள் மால்வரை
வெருஉற விரிந்து உயர் விலங்கல் ஆகத்தைப்
பிரிவு அற நோற்றனள் என்னில் பின்னை அத்
திருவினில் திருஉளார் யாவர்? தெய்வமே!

தெய்வமே! திரு, மரகதவரை வெருவுற விரிந்து உயர் விலங்கல் ஆகத்தைப் பிரிவுஅற நோற்றனள் என்னில், அத் திருவினில் திரு உளார் யாவர்? என இயைக்க. பொருவரு வரை, மரகதவரை, பொலம்கொள் வரை, மால்வரை என்க; ஒப்பற்ற அழகினையுடைய பெரிய மரகதமலை யென்பது பொருள். மரகத மலையும் அஞ்சும்படி பரந்து ஓங்கிய மார்பு, குறுக்ககன்ற மார்பு என்க, விலங்கலாகம் – குறுக்கே அகன்ற மார்பு. ‘விலங்ககன்றவியன்

மார்ப' (புறம் 3, 16) என்பதும் இங்குத் நோக்கத்தகும். திரு, ஆகத்தைப் பிரிவற நோற்றனள் என்றது, 'அகலகில்லேன் இறையும் என்று அலர்மேன்மங்கை யுறைமார்பா' என்னும் திருவாய்மொழியைத் தழுவி எழுந்தது. திருவீற்றிருந்ததென்று மார்பின் பெருமை பேசியவாறு. தெய்வமே! என்பது பிராட்டியைத் தன்முகமாக்கிக் கொள்ளும் விளிக்கூற்று. (47)

### கைத்தலங்களின் செவ்வி

**536.** நீடுறு கீழ்த்திசை நின்ற யானையின்
கோடுறு கரமெனச் சிறிது கூறலாம்
தோடுறு மலரெனச் சுரும்பு சுற்றருத்
தாடுறு தடக்கைவே றுவமை சாலுமோ.

நீடுறு கீழ்த்திசை நின்ற யானையின்
கோள்துறு கரம் எனச் சிறிது கூறலாம்
தோடுஉறும் மலர் எனச் சுரும்பு சுற்றுஅருத்
தாள்துறு தடக்கை வேறு உவமை சாலுமோ?

(இராமபிரானுடைய) தாள் துறு தடக்கை, கீழ்த்திசை நின்ற யானையின் நீடுறு கோள் துறு கரம் எனச் சிறிது கூறலாம்: வேறு உவமை சாலுமோ? என இயைக்க. தோடு உறும் மலர் எனச் சுரும்பு சுற்று அருத்தாள் துறு தடக்கை - இதழ்களோடு கூடிய (தாமரை) மலர் என்று வண்டுகள் நீங்காது சுழலுகின்ற முழந்தாளை யடைந்த பெரிய கை. சுரும்பு சுற்றருக் கை, தாள்துறு கை, தடக்கை என்க. தோடு - இதழ். சுரும்பு - வண்டு. தாள் - முழங்கால். துறுதல் - அடைதல். கீழ்த்திசை நின்ற யானையின் நீடுறு கரம், கோள்துறு கரம் என்று கொண்டு, அயிராவதத்தின் நீண்ட கை, வலிமை பொருந்திய கை என்று பொருளுரைக்க. கீழ்த்திசை நின்ற யானை – அயிராவதம். கோள் – வலிமை. கோடு உறு கரம் எனப் பிரித்து, தந்தங்கள் பொருந்திய கை என்று பொருள் கண்டாரும் உண்டு. கோடு உறு கை என்பதனல் பெறும் நயம் ஒன்றும் இன்மையின், கோள்துறு கரம் என்று கொண்டு வலிமை பொருந்திய கையென்று பொருள் கோடல் சிறப்புடைத்து. வலிமையும், தாள் தொடும் நீட்சியும், வண்டுகள் மொய்த்தலும் இராமன் தோளுக்கும் அயிராவதத்தின் துதிக்கைக்கும் பொதுவான தன்மைகள். பெருமான் கைகளிலுள்ள தெய்வ மணத்தாலும் அக் கைகளைத் தாமரைமலர்களாக நினைந்தமையாலும் வண்டுகள் சுற்றுவனவாயின. அயிராவதத்தின் கரத்தில் மதநீர் நறுமணத்தால் வண்டுகள் சுற்றுவனவாயின. பெருமானுடைய திருக்கைகளுக்குத் திருப்பாற் கடலில்

அமுதொடு பிறந்த பெருமையும் ஆற்றலழியாத சிறப்பும் தெய்வத் தன்மையும் உடைய அயிராவதத்தின் நீண்ட கையும் ஒரு சிறிதே ஒக்குமெனின் வேறு உவமை பொருந்தாதென்றவாறு. (48)

## கைந் நகங்களின் செவ்வி

**537.** பச்சிலைத் தாமரை பகல்கண் டாலன
கைச்செறி முகிழுகிர் கனக னென்பவன்
வச்சிர யாக்கையை வகிர்ந்த வன்றொழில்
நிச்சய மன்றெனி னையம் நீக்குமே.

பச்சிலைத் தாமரை பகல் கண்டால்அன
கைச்செறி முகிழ் உகிர், கனகன் என்பவன்
வச்சிர யாக்கையை வகிர்ந்த வன்தொழில்
நிச்சயம், அன்று எனின், ஐயம் நீக்குமே.

'பச்சிலைத் தாமரை பகல் கண்டால் அ(ன்)ன கை, கனகன் என்பவன் வச்சிரயாக்கையை வகிர்ந்த வன்தொழில், நிச்சயம் அன்று' எனின், (அக் கையின்கண்) செறி முகிழ் உகிர் ஐயம் நீக்கும்: என இயைக்க. சூரியனைக் கண்டு மலர்ந்த தாமரைமலர்போன்ற மென்மைத்தன்மையுடைய இராமபிரான் கைத்தலங்கள், (முன் நரசிங்கப்பெருமானான நிலையில்) வலிய இரணியன் மார்பைப் பிளந்த செயல் நிச்சயமாக நிகழ்ந்ததோ? அல்லது நிகழாததோ? என்று ஐயுறுவார் உளராயின், அப்பெருமானது கைத்தலங்களிற் செறிந்து தோன்றுகின்ற நகங்கள் அந்த ஐயத்தை நீக்கும் என்றவாறு. பகல் - சூரியன். கனகன் – இரணியன். வச்சிரயாக்கை - உறுதியான உடல். வகிர்தல் - பிளத்தல். செறிதல் - நெருங்குதல். முகிழ்த்தல் - தோன்றுதல். உகிர் - நகம். நிச்சயம் அன்று எனின் - நிச்சயமோ? அன்றோ? எனின். கை வகிர்ந்தது நிச்சயமோ? அன்றோ? என ஐயம் தோன்றின், அக் கையின்கண் உள்ள நகங்கள் கூர்மையாலும் செந்நிறம்வாய்ந்து விளங்குதலாலும் அவ் ஐயத்தைப் போக்கு மென்றவாறு. (49)

## திருப் புயங்களின் செவ்வி

**538.** திரண்டில வொளியில திருவின் சேர்வில
முரண்டரு மேருவின் சிலையின் மூரிநாண்
புரண்டில புகழில பொருப்பென் றென்றுபோன்
றிரண்டில புயங்களுக் குவமை யேற்குமோ.

திரண்டில, ஒளியில, திருவின் சேர்வில,
முரண்தரு மேருவின் சிலையின் மூரிநாண்
புரண்டில, புகழ் இல, பொருப்பு என்று ஒன்று போன்று
இரண்டு இல, புயங்களுக்கு உவமை ஏற்குமோ?

இராமன் தோள்களுக்கு மலையை உவமை கூறுவாரும் உண்டு. எனினும், தோள்கள் திரட்சியுடையன; ஒளியுடையன; திருமகள் சேரப் பெற்றன; பெரிய வில்லின் நாண் புரளப் பெற்றன; புகழுடையன; ஒத்த இரண்டாக வுள்ளன. மலைகளோ திரட்சியுடையன வல்ல; ஒளியுடையனவல்ல; திருமகள் சேரப்பெற்றனவல்ல; பெரிய வில்லின் நாண் புரளப்பெற்றன அல்ல; புகழுடையன அல்ல; ஒன்று போன்று இரண்டில; ஆதலால் மலைகளை இராமன் புயங்களுக்கு உவமை கூறுதல் தகுமோ என்றவாறு. முரண்தரு மேருவின் சிலையின் மூரிநாண் புரண்டில – வலிமைமிக்க மேருமலை போலும் பெரிய வில்லின் வலிய நாண்கயிறு புரளப் பெற்றில. 'மேருவில் முரிய மூரிநாண் புரண்டில' என்று பாடங்கொண்டு, 'வலிமை பொருந்திய மகாமேருவாகிய வில் [சிவதநுசு] ஒடியும்படி வலிய நாண் புரளப்பெற்றனவில்லை' என்று உரை கொள்வோரும் உண்டு. மேரு வில் முரியும்படி நாண் புரளுதல் தோளுக்கு இயையாமையின், மேருவின் சிலையின் மூரிநாண் என்ற பாடம் சிறப்புடைத்தாகும். (50)

இதன்பின் 16 என்னும் குறியீடுள்ள சுவடியில் பின்வருமாறு ஒரு செய்யுள் காணப்படுகிறது:—

538 (a) எள்ளற் கரிய நிலையாகி யியைந்து தம்மி லிணையுருவாய்த்
தள்ளப் படாத தகையாகிச் சார்கத் திரிகை வகையொழுகா
அள்ளற் பள்ளத் தகன்புனல்சூ ழகன்ற வாவிக் குண்ணின்ற
வள்ளைத் தண்டும் வனப்பழிய மகரஞ் செறியாக் குழையென்றான்.

### திருமிடற்றின் செவ்வி

**539.** கடற்படு பணிலமுங்
கன்னிப் பூகமும்
மிடற்றினுக் குவமையென்
றுரைக்கும் வெள்ளியோர்க்
குடற்பட வொண்ணுமோ
வுரகப் பள்ளியான்
இடத்துறை சங்கமொன்
றிருக்க வெங்களால்.

கடல்படு பணிலமும், கன்னிப் பூகமும்,
மிடற்றினுக்கு உவமை என்று உரைக்கும் வெள்ளியோர்க்கு
உடன்பட ஒண்ணுமோ? உரகப் பள்ளியான்
இடத்து உறை சங்கம் ஒன்று இருக்க, எங்களால்.

(இராமன்) மிடற்றினுக்கு உரகப்பள்ளியான் இடத்து உறை சங்கம் ஒன்று இருக்க, கடற்படு பணிலமும் கன்னிப்பூகமும் உவமை என்று உரைக்கும் வெள்ளியோர்க்கு எங்களால் உடன்பட ஒண்ணுமோ: என இயைக்க. மிடற்றினுக்கு - இராமபிரானுடைய திருக் கழுத்தினுக்கு (உவமையாக). உரகப்பள்ளியான் இடத்து உறை சங்கம் ஒன்று இருக்க - பாம்புப்படுக்கையையுடைய திருமாலின் இடக்கரத்திருக்கின்ற பாஞ்சசன்னியம் என்ற சங்கம் ஒன்று இருக் கவும். கடல்படு பணிலமும் - கடலில் உண்டாகிய சங்கமும். கன்னிப் பூகமும் - இளமையான கமுகும். வெள்ளியோர்க்கு - அறி விலிகளுக்கு. உடற்பட ஒண்ணுமோ - இசையலாமோ? (இசைய லாகாது); உடன்பட என்பது எதுகை நோக்கி உடற்பட என விகாரமாயிற்று. பூகம் ஆகுபெயராய்க் கமுகின் கழுத்தை யுணர்த்தி நின்றது; மிடற்றினுக்கு உவமை அதுவே ஆகலின். இராமன் திருக்கழுத்துக்குக் கருணைக் கடலான திருமாலின் இடப்பக்கத்துறை கின்ற சங்கம் இருக்க, உவர்க் கடலிற் பிறந்த சங்கமோ ஒப்பாவது? அது கிடக்க; என்றும் அழியாத அழகுடைய இராமன் கழுத்துக்கு முதிர்ந்து அழகழியும் கமுகோ ஒப்பாவது? (ஒப்பாகாது) என்ற வாறு. (51)

## திருமுகச் செவ்வி

**540.** அண்ணறன் றிருமுகங் கமல மாமெனிற்
கண்ணினுக் குவமைவே றியாது காட்டுகேன்
தண்மதி யாமென வுரைக்கத் தக்கதோ
வெண்மதி பொலிந்தது மெலிந்து தேயுமால்.

அண்ணல்தன் திருமுகம் கமலம் ஆம்எனில்
கண்ணினுக்கு உவமை வேறு யாது காட்டுகேன்
தண்மதி ஆம் என உரைக்கத் தக்கதோ
வெண்மதி பொலிந்தது மெலிந்து தேயுமால்.

இராமனுடைய முகம் கமலம் போலும் எனின் அவனுடைய கண்களுக்கு அத் தாமரைமலரையன்றி வேறு எதனை உவமை கூறுவேன். தாமரைக் கண்ணன் என்றே பெருமான் சுட்டப்படுத லால் பெருமான் கண்கள் தாமரைமலரை ஒக்கு மென்று கொள்வோ மாயின், அவன் முகத்துக்கு வேறு எதனை உவமை கூறுவது?

குளிர்ந்த சந்திரனை முகத்துக்கு உவமை கூறுவோமென்றால் அது (ஒரு நிலையின்றி) வளர்ந்து தேயும் இயல்புடையதன்றோ? என்றும் ஒரு படித்தாய் விளங்கும் பெருமான் முகத்துக்கு அம்மதியை உவமை கூறுதல் தகுமோ? தகாது என்றவாறு. (52)

திருவாயின் செவ்வி

541. ஆரமு மகிலு நீவி
★ யகன்றதோ ளமலன் செவ்வாய்
நாரமுண் டலர்ந்த செங்கேழ்
நளினமென் றுரைக்க நாணும்
ஈரமுண் டமுத மூறு
மின்னுரை யியம்பா தேனும்
மூரல்வெண் முறுவல் பூவாப்
பவழமோ மொழியற் பாற்றே.

'ஆரமும் அகிலும் நீவி
அகன்ற தோள் அமலன் செவ்வாய்
நாரம் உண்டு அலர்ந்த செங்கேழ்
நளினம்' என்று உரைக்க நாணும்;
ஈரம் உண்டு அமுதம் ஊறும்
இன் உரை இயம்பாதேனும்,
மூரல் வெண்முறுவல் பூவாப்
பவழமோ மொழியற்பாற்றே?

ஆரமும் அகிலும் நீவி அகன்ற தோள் அமலன் செவ்வாய்—சந்தனமும் அகிற்கலவையும் பூசப்பெற்று விரிந்த தோள்களை யுடைய குற்றமற்றவனான இராமபிரானுடைய சிவந்த வாய். நாரம் உண்டு அலர்ந்த செங்கேழ் நளினம் என்று உரைக்க - நீரையுண்டு (வளர்ந்து) மலர்ந்த செந்தாமரை என்று சொல்ல. நாணும் - செந்தாமரை வெட்கமுறும். என்றது இராமன் செவ்வாயின் இயற்கையழகு தனக்கு இன்மையின் மிகுபுகழ்ச்சி கண்டு நாணுறும் என்பதாம். அன்றி, பெருமான் செவ்வாய் செந்தாமரையை ஒக்குமென்று சொல்ல என் மனம் நாணும் எனினும் ஆம். ஈரம் உண்டு அமுதம் ஊறும் இன் உரை இயம்பாதேனும் - (தாமரையே ஒவ்வாத நிலையில், அச்செவ்வாய்க்கு) குளிர்ச்சியுடையதாய் அமுதமூற்றெடுக்கின்ற இனிய மொழிகளைச் சொல்லாதாயினும்; வெண் மூரல் முறுவல் பூவாப் பவழமோ மொழியற் பாற்று?-வெள்ளிய பற்களால் புன்சிரிப்பைத் தோற்றுவிக்காத பவழமும் உவமையாக உரைக்குந் தன்மையுடையதோ? அன்று. பெருமான் செவ்வாய்க்கு ஈரமும்,

அமுதூறுதலும், இன்மொழியியம்பலும், காண்போரை மகிழ்வித்து அணுக அழைக்கும் புன்முறுவலும் உண்டு. பவழத்திற்கு அவை இன்மையின் ஒப்பாகாது என்பது தெரிவித்தவாறு. (53)

பற்களின் செவ்வி

**542.** முத்தங் கொல்லோ முழுநிலவின்
★ முறியின் றிறனோ முறையமுதத்
தொத்தின் றுள்ளி வெள்ளியினந்
தொடுத்த கொல்லோ துறையறத்தின்
வித்தின் முளைத்த வங்குரங்கொல்
வேறே சிலகொன் மெய்ம்முகிழ்த்த
தொத்தின் றொகைகொல் யாதென்று
பல்லுக் குவமை சொல்லுகேன்.

முத்தம் கொல்லோ? முழுநிலவின்
முறியின் திறனோ? முறை அமுதத்
தொத்தின் துள்ளி வெள்ளி இனம்
தொடுத்த கொல்லோ? துறை அறத்தின்
வித்தின்முளைத்த அங்குரம்கொல்?
வேறே சிலகொல்? மெய்ம்முகிழ்த்த
தொத்தின் தொகைகொல்? யாது என்று
பல்லுக்கு உவமை சொல்லுகேன்!

(இராமபிரான்) பற்களுக்கு முத்தமோ? முழுமதித்துண்டங்களின் வரிசையோ? வரிசையாகத் தொடுக்கப்பட்ட திரண்ட வெள்ளிய அமுதத்துளிகளோ? அறமாகிய வித்தினின்று ஒழுங்காக முளைத்த முளைகளோ? உண்மையினின்று அரும்பிய பூங்கொத்தின் கூட்டமோ? மற்றும் உள்ள முல்லையரும்பு, மயிலடிக்குருத்து முதலிய சிலவோ? எது உவமையாகுமென்று சொல்வேன்! என்றவாறு.

நிலவு - மதி. முறி - துண்டம். திறன் - வரிசை. முறை தொடுத்த தொத்து இன் வெள்ளி அமுதத் துள்ளியினமோ என இயைக்க. துறை - ஒழுங்கு; வரிசை. இன் சாரியை. அங்குரம் - முளை. வேறே சிலகொல் - உவமையாகச் சொல்லத் தக்க வேறு சிலவோ? முகிழ்த்த – அரும்பிய. தொத்து - இரண்டாமடியில் திரள்; நான்காம் அடியில் பூங்கொத்து. முத்தங் கொல்லோ என்றது இயல்பாகவே வெண்ணிறமுடைமையின். முப்பத்திரண்டாக உள்ள பற்களுக்கு முப்பத்திரண்டாக வகுக்கப்பட்ட அறத்தை உவமை கூறிய நயம் காண்க. (54)

## திருமூக்கின் செவ்வி

**543.** எள்ளா நிலத்திந் திரநீலத்
தெழுந்த கொழுந்து மரகதத்தின்
விள்ளா முழுமா நிழற்பிழம்பும்
வேண்ட வேண்டு மேனியதோ
தள்ளா வோதி கோபத்தைக்
கௌவ வந்து சார்ந்ததுவும்
கொள்ளா வள்ள றிருமூக்கிற்
குவமை பின்னுங் குணிப்பாமோ.

எள்ளா நிலத்து இந்திரநீலத்து
எழுந்த கொழுந்தும் மரகதத்தின்
விள்ளா முழுமா நிழல்பிழம்பும்
வேண்ட வேண்டும் மேனியதோ ?
தள்ளா ஓதி கோபத்தைக்
கௌவ வந்து சார்ந்ததுவும்
கொள்ளா வள்ளல் திருமூக்கிற்கு
உவமை பின்னும் குணிப்பாமோ ?

வள்ளல் திருமூக்கு, எள்ளா நிலத்து இந்திர நீலத்து எழுந்த கொழுந்தும், மரகதத்தின் விள்ளா முழு மா நிழற் பிழம்பும் உவமை வேண்ட வேண்டும் மேனியதோ? கோபத்தைக் கௌவ வந்து சார்ந்தது தள்ளா ஓதியும் உவமை கொள்ளா அம் மூக்குக்குப் பின்னும் உவமை குணிப்பு ஆமோ என இயைக்க. வள்ளல் திரு மூக்கு - கொடையிற் சிறந்தவராகிய பெருமானுடைய அழகிய மூக்கானது. எள்ளா நிலத்து இந்திர நீலத்து எழுந்த கொழுந்தும்- இகழப்பெருது உயர்ந்த இடத்தில் உண்டான இந்திர நீலக் கல்லி லெழுந்த முளையும்; மரகதத்தின் விள்ளா முழு மா நிழற் பிழம்பும் - மரகதமணியின் பிளவுபடாத முழுத்த பெரிய ஒளித்திரளும்; உவமை வேண்ட வேண்டும் மேனியதோ - உவமையாக விரும்பவேண்டும் நிறமுடையதோ? மூக்கு, மேனியதோ? என்க. கோபத்தைக் கௌவவந்து சார்ந்தது தள்ளா ஓதியும் - இந்திரகோபப்பூச்சியைக் கௌவுதற்காக வந்தடைந்த குறி தவருத பச்சோந்தியும். உவமை கொள்ளா மூக்குக்கு - ஒப்பாதலைப் பொருந்தாத மூக்குக்கு. பின்னும் உவமை குணிப்பாமோ - மேலும் உவமை (யாகத்தக்கவற்றை) ஆராய்தல் இயலுமோ? இயலாது என்றவாறு. 'எள்ளா நிலத் திந்திர நீலத் தெழுந்த கொழுந்தும்' என்பதனுடன், 'புதிய மேக முழக்கத்தால் வைடூரிய நிலங்கள் முளைக் கொண்டன' (குமார ஸம்பவம் ஸர்க்கம் 1.) என்னும் காளிதாசன்கூற்றும் நோக்கத்தகும். ஓதி - ஒந்தி என்பதன் இடைக்குறை. கோபம் - இந்திரகோபம்

என்பதன் முதற்குறை. இந்திர நீலமுளையும் மரகத மணியின் ஒளிப் பிழம்பும் மூக்குக்கு நிறமும் வடிவும் பற்றி உவமைகள். அதரமும் அதற்குமேல் எடுத்த மூக்கும் ஆகிய இவற்றின் தோற்றம், இந்திரகோபப்பூச்சியும் அதைக் கௌவவந்து சார்ந்து தலைதூக்கி நின்ற ஓந்தியும் போலும் என்னும் இது, வினையடியாக வந்த உவமை. செந்நிற முடைமையால் இந்திரகோபம் அதரத்துக்கு உவமையாம். (55)

திருப்புருவச் சிறப்பு

**544.** பனிக்கற் சுரத்துக் கரன்முதலோர்
கவந்தப் படையும் பல்பேயும்
தனிக்கைச் சிலையும் வானவரு
முனிவர் குழுவுந் தனியறமும்
இனிக்கட் டழிந்த தரக்கர்குல
மென்று சுருதி யீரிரண்டும்
குனிக்கக் குனித்த புருவத்துக்
குவமை நீயே கோடியால்.

பனிக் கல் சுரத்துக் கரன் முதலோர்
கவந்தப்படையும், பல்பேயும்,
தனிக் கைச்சிலையும், வானவரும்,
முனிவர் குழுவும், தனி அறமும்,
'இனிக் கட்டு அழிந்தது அரக்கர்குலம்!'
என்று சுருதி ஈரிரண்டும்
குனிக்கக் குனித்த புருவத்துக்கு
உவமை நீயே கோடியால்!

பனி கல் சுரத்துக் கரன் முதலோர் கவந்தப்படையும் பல்பேயும் குனிக்க, தனிக் கைச்சிலையும் குனிக்க, 'அரக்கர் குலம் இனிக் கட்டு அழிந்தது' என்று வானவரும் முனிவர் குழுவும் தனி அறமும் சுருதி ஈரிரண்டும் குனிக்கக் குனித்த (இராமபிரான்) புருவத்துக்கு நீயே உவமை கோடி: என இயைக்க. குனிக்க என்பது முன் இரண்டிடத்தும் கூட்டப்பட்டது. பனி கல் சுரத்து - நடுக்கத்தை விளைக்கும் மலைகளோடு கூடிய காட்டில் (ஜனஸ்தானத்தில்). கரன்முதலோர் கவந்தப் படையும் - கரன் முதலிய அரக்கர்களின் தலையற்ற உடற்ளுெகுதியும். கவந்தப் படைக்குக் குனிப்பாவது அட்டையாடல். பேய்க்குக் குனிப்பு, நல்ல இரை (பிணம்) மிகுதியாகக் கிடைத்தமையால் என்க. தனி - ஒப்பற்ற. கைச்சிலை-(பெருமான்) கையிலேந்திய

வில். குனிப்பு - வளைவு. கட்டு - உறுதி. சுருதி ஈரிரண்டும் - நான்கு வேதங்களும். வானவர்க்கும் முனிவர்க்கும் அறத்துக்கும் சுருதிகளுக்கும் குனிப்பு அரக்கர் குலம் அழியும் என்னும் மகிழ்ச்சியால். குனித்தல் - (முன்னதும் பின்னதும்.) கூத்தாடல்; வில்லுக்கும் புருவத்துக்கும் வளைதல். புருவம் சிறிது வளைந்த அளவில் (இராமபிரானுக்குச் சிறிது சினம் மூண்ட அளவில்) கைவில் வளைந்தது; வளையவே கரன் முதலிய அரக்கருடைய உடல்கள் கண்டதுண்டமாகக் கவந்தங்கள் எழுந்தாடின; அரக்கர் மடியவே, பிணவுணவு மிகக் கிடைத்தது என்று மகிழ்ச்சியால் பேய்கள் கூத்தாடின; தேவரும் முனிவரும் அறமும் வேதங்களும் இனி அரக்கர் குலம் உறுதியழிந்து மடிந்ததாகும் என்று மகிழ்ந்து கூத்தாடுவராயினர் என்க. (56)

திருநெற்றியின் பெற்றி

545. வருநாட் டோன்றுந் தனிமறுவும்
வளர்வுந் தேய்வும் வாளரவம்
ஒருநாட் கவ்வு முறுகோளு
மிறப்பும் பிறப்பு மொழிவுற்ற
இருநாற் பகலி னிலங்குமதி
யலங்க லிருளி னெழினிழற்கீழ்ப்
பெருநா ணிற்பி னவனெற்றிப்
பெற்றித் தாகப் பெறுமன்னே.

வரும் நாள் தோன்றும் தனி மறுவும்
வளர்வும் தேய்வும் வாள் அரவம்
ஒருநாள் கவ்வும் உறுகோளும்
இறப்பும் பிறப்பும் ஒழிவுற்ற
இருநால் பகலின் இலங்குமதி
அலங்கல் இருளின் எழில் நிழற்கீழ்ப்
பெருநாள் நிற்பின் அவன் நெற்றிப்
பெற்றித்தாகப் பெறும் மன்னே!

வருநாள் தோன்றும் தனிமறுவும் - வளர்ந்துவரும் நாள்களிற் காணப்படுகிற ஒப்பற்ற களங்கமும். வாள் அரவம் ஒருநாள் கவ்வும் உறுகோளும் - கொடிய இராகுவென்னும் பாம்பு நிறைமதியாகிய ஒருநாள் கௌவுதலால் உளதாகும் துன்பமும். இருநாற் பகலின் இலங்குமதி - எட்டுநாளில் விளங்குகின்ற பிறைமதி; என்றது அட்டமிச் சந்திரனை. அலங்கல் இருளின் எழில் நிழற் கீழ் -

மாலையையணிந்த இருள்போன்றதாகிய மயிர்முடியின் அழகிய நிழலின்கீழே. இருள் உவம ஆகுபெயராய் இருள்போன்ற தலை யுரோமத்தொகுதியை உணர்த்திற்று. இருளின் கீழ் நிறைமதி உறையமுடியாததலால் நிற்கப்பெறின் என்றார். இருண்ட குழற் கற்றையின்கீழ் விளங்கும் பெருமான்நெற்றிக்கு இருளின்கீழ் ஒளிரும் பிறை ஒன்று இருக்குமாயின் ஒப்பாகும் என்றவாறு. (57)

### திருக்குழலின் செவ்வி

546. நீண்டு குழன்று நெய்த்திருண்டு
நெறிந்து செறிந்து நெடுநீலம்
பூண்டு புரிந்து சரிந்துகடை
சுருண்டு புகையு நறும்பூவும்
வேண்டு மல்ல வெனத்தெய்வ
வெறியே கமழு நறுங்குஞ்சி
ஈண்டு சடையா யினதென்றான்
மழையென் றுரைத்த லிழிவன்றோ.

நீண்டு குழன்று நெய்த்து இருண்டு
நெறிந்து செறிந்து நெடு நீலம்
பூண்டு புரிந்து சரிந்து கடை
சுருண்டு புகையும் நறும் பூவும்
வேண்டும் அல்ல எனத் தெய்வ
வெறியே கமழும் நறும் குஞ்சி
ஈண்டு சடை ஆயினது என்றால்,
மழை என்று உரைத்தல் இழிவு அன்றோ ?

குழன்று - குழல் போலச் சுருண்டு. நெய்த்து - பளபளப்போடு கூடி. நெறிந்து - சிறு மேடுபள்ளங்களை யுடையதாய்; 'நெறி தரு குழலை அறல் என்பர்கள்' என்ற கோயினுன்மணிமாலைப் பகுதி யையும் ஈண்டுக் காண்க. நெடுநீலம் பூண்டு - பெரிய நீலமணியைப் போல மிக்க நீல நிறத்தை மேற்கொண்டு. புரிந்து - புரியாகப் பிரிந்து. சரிந்து - பிடரியின்மேல் சரிந்து தொங்கி. கடை சுருண்டு - நுனியில் சுருண்டு. புகையும் நறும்பூவும் வேண்டும் அல்ல என - குழலுக்கு மணம் வீச இடப்பெறும் அகிற்புகையும் மணமுள்ள பூக் களும் விரும்பத்தக்கன அல்ல என்று. தெய்வ வெறியே கமழும் நறுங்குஞ்சி - தெய்வமணங் கமழும் நல்ல முடிமயிர். ஈண்டு - அடர்ந்த. (அக்குழலை) மழையென்று உரைத்தல் இழிவு அன்றோ - மேகத்திற்கு ஒப்பாம் என்று சொல்லுதல் இழிவான காரியம் அல்லவா ? (58)

நடையின் செவ்வி

547. புல்ல லேற்ற திருமகளும்
பூவும் பொருந்தப் புவியேழின்
எல்லை யேற்ற நெடுஞ்செல்வ
மெதிர்ந்த ஞான்று மஃதின்றி
அல்ல லேற்ற கானகத்து
மழியா நடையை யிழிவான
மல்ல லேற்றி னுளதென்ருன்
மத்த யானை வருந்தாதோ.

**புல்லல் ஏற்ற திருமகளும் பூவும் பொருந்தப் புவி ஏழின்
எல்லை ஏற்ற நெடுஞ்செல்வம் எதிர்ந்த ஞான்றும், அஃது இன்றி,
அல்லல் ஏற்ற கானகத்தும் அழியா நடையை இழிவு ஆன
மல்லல் ஏற்றின் உளது என்ருல், மத்தயானை வருந்தாதோ ?**

புல்லல் ஏற்ற திருமகளும் - எஞ்ஞான்றும் தழுவியுறைதலைப் பொருந்திய சீதேவியும். இது ‘அகலகில்லேன் இறையுமென்று அலர்மேல் மங்கை யுறைமார்பா’ என்ற பாசுரப் பகுதியை நினைவுட் கொண்டு கூறியது. பூவும் - பூதேவியும். புவியேழின் எல்லை ஏற்ற நெடுஞ்செல்வம் - ஏழுலகங்களையும் எல்லையாக உடைய பெருஞ் செல்வத்தை. எதிர்ந்த ஞான்றும் - பொருந்திய காலத்தும். அஃது இன்றி அல்லல் ஏற்ற கானகத்தும் - அத்தகைய செல்வ மின்றித் துன்பத்தையே பொருந்திய காட்டிலும். அழியா நடையை - அழகு குன்ருத நடையை. இழிவான மல்லல் ஏற்றின் உளது என்ருல் - மிக இழிந்த வளப்பம் பொருந்திய சிங்கவேற்றி னிடத்து உள்ளது என்ருல். மத்தயானை வருந்தாதோ - மதயானை வருந்தாதோ. சிங்கவேற்றின் நடையும் மதயானையின் நடையும் ஆடவரிற் சிறந்தார் நடைக்கு உவமை கூறப்படுதலின் இவ்வாறு கூறினுர். இச்செய்யுளில் “அஃது இன்றி” என்றது, பிறந்த பார் முழுதும் தம்பியே பெறத் துறந்து கான்புகுந்த செய்தியை, உட் கொண்டு அநுமன் கூறியது. (59)

இராமபிரான் கூறிய அடையாளங்களை அநுமன்
உரைக்கத் தொடங்குதல்

548. என்ன மொழிய வம்மொழிகேட்
டெரியி னிட்ட மெழுகென்னத்
தன்னை யறியா தழிவாளைத்
தரையின் வணங்கி நாயகனுர்

சொன்ன குறியுண் டடையாளச்
சொல்லு முளவாற் றொழுதகைய
அன்ன நடையாய் கேட்கவென
வறிவ னறைவா னுயினுன்.

என்ன மொழிய, அம் மொழி கேட்டு
எரியின் இட்ட மெழுகு என்னத்
தன்னை அறியாது அழிவாளைத்
தரையின் வணங்கி, 'நாயகனுர்
சொன்ன குறி உண்டு : அடையாளச்
சொல்லும் உளவால் : தொழுத கைய
அன்னநடையாய் ! கேட்க !' என
அறிவன் அறைவான் ஆயினுன்.

என்ன மொழிய - என்று (அநுமன்) சொல்ல. அம்மொழி கேட்டு - அச்சொற்களைக் கேட்டு. எரியின் இட்ட மெழுகு என்ன - நெருப்பிலே போகட்ட மெழுகுபோல. தன்னை அறியாது அழிவாளை- மெய்மறந்த நிலையில் உருகுபவளான பிராட்டியை. அறிவன் - பேரறிவினனுகிய அநுமன். தரையின் வணங்கி - நிலத்தில் விழுந்து வணங்கி. தொழுத கைய அன்னநடையாய் - (இராம னிருக்கும் திசை நோக்கித்) தொழுகின்ற கைகளையும் அன்னம் போன்ற நடையையும் உடையவளே! நாயகனுர் - தலைவரான இராமபிரானுடைய. சொன்ன குறி உண்டு - பொன்னுலாகிய அடையாளப் பொருளும் உண்டு. (சொன்ன) அடையாளச் சொல்லும் உள - சொல்லி அனுப்பிய அடையாளச் சொற்களும் உள்ளன. கேட்க - அவற்றைக் கேட்பாயாக. என அறைவான் ஆயினுன் - என்று (அவற்றைக்) கூறத்தொடங்கினுன். சொன்ன குறி யென்றது பொன்னுலாகிய திருவாழியை. (60)

### அநுமன் கூறிய அடையாளவுரைகள் 549–551

**549.** ★ நடத்தலரி தாகுநெறி நாள்கள்சில தாயர்க்
கடுத்தபணி செய்திவணி ருத்தியென வச்சுற்
றுடுத்ததுகி லோடுமுயி ருக்கவுட லோடும்
எடுத்தமுனி வோடுமய னின்றதுமி சைப்பாய்.

'நடத்தல் அரிது ஆகும் நெறி : நாள்கள் சில : தாயர்க்கு
அடுத்த பணி செய்து இவண் இருத்தி !' என, அச்சுற்று-
உடுத்த துகிலோடும், உயிர் உக்க உடலோடும்,
எடுத்த முனிவோடும், அயல் நின்றதும் இசைப்பாய் !

நெறி - காட்டுவழி. நடத்தல் அரிது ஆகும் - (நீ) நடந்து செல்லுதற்கு அரியதாகும். நாள்கள் சில - (நான் வனம் சென்று மீளும்) நாள்களோ சிலவாகும். தாயர்க்கு அடுத்த பணிசெய்து இவண் இருத்தி என - (என்) தாய்மார்களுக்குத் தக்க பணிவிடைகளைச் செய்து கொண்டு இங்கேயே இருப்பாயாக என்று (நான்) சொல்லவும். அச்சுற்று - திகிலடைந்து. உடுத்த துகிலோடும் - கட்டியிருந்த புடவையுடனேயும். உயிர் உக்க உடலோடும் - உயிர் நீங்கினது போன்ற உடம்புடனேயும். 'உன்னவுன்ன வுயிருமிழா நின்ருள்' (அயோத்தியா காண்டம். நகர் நீங்கு. 224.) என்றதும் காண்க. எடுத்த முனிவோடும் - மேலெழுந்த கோபத்துடனும். அயல் நின்றதும் இசைப்பாய் - (என்) பக்கலில் வந்து (காடு செல்லத் துணிந்து) நின்ற தன்மையை (நீ அவளுக்கு அடையாளமாக)க் கூறுவாய். இதுமுதல் 551-ஆம் பாடலில் 'நீட்டிது' என்பது வரை இராமன்கூற்ருக அநுமன் பிராட்டிக்குக் கூறியதாகக் கொள்க. இவை அடையாளச் சொல்லாகும். (61)

**550.** நீண்டமுடி வேந்தனரு ளேந்திநிறை செல்வம்
பூண்டதனை நீங்கிநெறி போதலுறு நாளின்
ஆண்டநக ராரையொடு வாயிலக லாமுன்
யாண்டையது கானெனவி சைத்ததுமி சைப்பாய்.

நீண்ட முடி வேந்தன் அருள் ஏந்தி நிறைசெல்வம்
பூண்டு, அதனை நீங்கி நெறி போதல் உறு நாளின்,
ஆண்டு அ நகர் ஆரையொடு வாயில் அகலாமுன்,
'யாண்டையது கான் ?' என இசைத்ததும் இசைப்பாய்.

நீண்டமுடி – நெடுங்காலமாய் (அறுபதினுயிரம் ஆண்டுகளாய்)த் தரித்துவந்த கிரீடத்தையுடைய. வேந்தன் அருள் ஏந்தி - மன்னவனுகிய தசரத சக்கரவர்த்தியின் ஆணையைத் தலைமேற் கொண்டு. நிறை செல்வம் பூண்டு - செல்வம் நிறைந்த அரசாட்சியை முதலில் ஏற்றுக்கொண்டு. அதனை நீங்கி - (பின்) அச்செல்வத்தைக் (கைகேயி கட்டளையாற்) கைவிட்டு. நெறி போதல் உறு நாளின் - (காட்டுக்குச்) செல்லலுற்ற பொழுதில். ஆண்டு அ நகர் ஆரையொடு வாயில் அகலாமுன் - அவ்விடத்து அந்த நகராகிய அயோத்தியின் மதிலோடு கூடிய கோட்டைவாயிலைக் கடப்பதற்கு முன்னமேயே. கான் யாண்டையது என இசைத்ததும் இசைப்பாய் - காடு எவ்விடத்திலுள்ளது? என வினவியதையும் (நீ அவளுக்கு அடையாளமாகச்) சொல்வாய்.

(காவிரிப்பூம்பட்டினத்தைக் கடந்தவுடன் கண்ணகி கோவலனிடம் 'மதுரை எவ்விடத்துள்ளது?' எனக் கேட்டசெய்தி இங்கு ஒப்புநோக்கத் தகும். சிலப். நாடுகாண் காதை. 38-41). (62)

551. எள்ளரிய தேர்தரு சுமந்திர னிசைப்பாய்
வள்ளன்மொழி வாசக மெனத்துயர் மறந்தாள்
கிள்ளையொடு பூவைகள் வளர்த்தல்கிள வென்னும்
பிள்ளையுரை யின்றிற முணர்த்துதி பெயர்த்தும்.

எள் அரிய தேர்தரு சுமந்திரன் 'இசைப்பாய்,
வள்ளல் மொழி! வாசகம்' எனத் துயர் மறந்தாள்,
'கிள்ளையொடு பூவைகள் வளர்த்தல் கிள!' என்னும்
பிள்ளை உரையின் திறம் உணர்த்துதி பெயர்த்தும்.

எள் அரிய தேர்தரு சுமந்திரன் - இகழ்வதற்கு அருமையான (ஒரு குற்றமுமில்லாத) தேரை ஓட்டுகிற சுமந்திரன். வள்ளல் மொழி - வண்மை நிறைந்த சொற்களை யுடையவளே! (என்றது பிராட்டியை). வாசகம் இசைப்பாய் என - (அயோத்திக்கு நான் சென்று கூறவேண்டிய உன்) உரை யாதென்று சொல்லுக என்னலும். துயர் மறந்தாள் - தன் துன்பங்களை மறந்தவளாய். கிள்ளையொடு பூவைகள் வளர்த்தல் கிள என்னும் - (நான் வளர்த்த) கிளிகளோடு நாகணவாய்ப் புட்களையும் (கவனமாய்) வளர்த்து வரும்படி சொல் என்ற. பிள்ளை உரையின் திறம் - (சீதையின்) குழந்தை யியல்புள்ள பேச்சின் தன்மையை. பெயர்த்தும் உணர்த்துதி - மீண்டும் (அவளுக்கு அடையாளமாகச்) சொல்லு வாயாக. (63)

## அநுமன் திருவாழி காட்டுதல்

552. மீட்டுமுரை வேண்டுவன வில்லையென மெய்ப்பேர்
தீட்டியது தீட்டரிய செய்கையது செவ்வே
நீட்டிதென நேர்ந்தனனெ னுநெடிய கையாற்
காட்டினனொ ராழியது வாணுதலி கண்டாள்.

'மீட்டும் உரை வேண்டுவன இல்லை' என, மெய்ப்பேர்
தீட்டியது தீட்டு அரிய செய்கையது செவ்வே:
'நீட்டு இது!' என நேர்ந்தனன் எனு, நெடிய கையால்
காட்டினன் ஓர் ஆழி; அது வாள் நுதலி கண்டாள்.

மீட்டும் உரை வேண்டுவன இல்லை என - மறுபடியும் சொல்ல வேண்டியவைகள் இல்லை யென்று (இராமன் கூறி). இது நீட்டு என நேர்ந்தனன் - இதனைக் கொடு என்று கொடுத்தனன். எனு - என்று (அநுமன் பிராட்டியிடம்) கூறி. மெய்ப்பேர் செவ்வே தீட்டியது - உண்மைப் பொருள் பொதிந்த பெயராகிய இராமநாமம் நன்கு பொறிக்கப்பெற்றதும். தீட்டு அரிய செய்கையது - சொல்லு

தற்கரிய வேலைப்பாடமைந்ததுமான; தீட்டுதல் - சொல்லுதல்; 'தெவ்வரம்பனைய சொல் தீட்டினுள்' (அயோத்தியா. நகர்நீங்கு. 167) என்பதும் காண்க. ஓர் ஆழி - ஒரு மோதிரத்தை. நெடிய கையால் காட்டினன் - (தனது) நீண்ட கையாற் காட்டினுன். அது வாள் நுதலி கண்டாள் - அந்தத் திருவாழியை ஒளி பொருந்திய நெற்றியையுடைய பிராட்டி கண்டாள்.

பலவகைப் பயனையும் தரவல்லதாதலின் இராமநாமம் மெய்ப் பேர் எனப்பட்டது. பெரியாழ்வார்திருமொழியில்,

"மைத்தகுமா மலர்க்குழலாய் வைதேவீ விண்ணப்பம்
ஒத்தபுகழ் வானரக்கோ னுடனிருந்து நினைத்தேட
அத்தகுசீ ரயோத்தியர்கோ னடையாள மிவைமொழிந்தான்
இத்தகையா லடையாள மீதவன்கைம் மோதிரமே"

என வந்துள்ளமையும் இங்கு நோக்கத்தகும். (64)

## ஆழிகண்ட பிராட்டிநிலை 553-554

**553.** இறந்தவர் பிறந்தபய னெய்தினர்கொ லென்கோ
மறந்தவ ரறிந்துணர்வு வந்தனர்கொ லென்கோ
துறந்தவுயிர் வந்திடைதொ டர்ந்ததுகொலென்கோ
திறந்தெரிவ தென்னைகொலி நன்னுதலி செய்கை.

இறந்தவர் பிறந்தபயன் எய்தினர்கொல் என்கோ ?
மறந்தவர் அறிந்து உணர்வு வந்தனர்கொல் என்கோ ?
துறந்த உயிர் வந்து இடை தொடர்ந்ததுகொல் என்கோ?
திறம் தெரிவது என்னைகொல் ? இ நல் நுதலி செய்கை !

இ நல் நுதலி செய்கை, இறந்தவர் பிறந்த பயன் எய்தினர் செய்கை என்கோ ? அறிந்து மறந்தவர் உணர்வு வந்தனர் செய்கை என்கோ ? துறந்த உயிர் வந்து இடை தொடர்ந்தது செய்கை என்கோ ? திறம் தெரிவது என்னை ? எனக் கொள்க.

இ நல் நுதலி செய்கை - (திருவாழியைக் கண்ட) இந்த நல்ல நுதலையுடையளான பிராட்டியின் செயல்; இறந்தவர் - (வாழ்க் கையை இறைபணிக்கு உரித்தாக்காது நெடுநாள் வாளா) கழித்து வருந்தியவர்கள். பிறந்த பயன் எய்தினர் செய்கை என்கோ - பிறவியின் பயனுகிய அவ்விறை பணியைப் பெற்றவர்கள் செயல் போன்றது என்று சொல்லுகேனே ? (அல்லது), அறிந்து மறந் தவர் - ஒன்றனை அறிந்து பின் அதை மறந்துவிட்டவர்கள். உணர்வு வந்தனர் செய்கை என்கோ - பின் அதன் நினைவு வந்த வர்கள் செயல்போன்றது என்று சொல்லுகேனே? (அல்லது)

துறந்த உயிர் - (உடலைவிட்டு) நீங்கிய உயிர். வந்து இடை தொடர்ந்தது செய்கை என்கோ - மீண்டும் வந்து தக்கசமயத்திலே சேரப்பெற்ற உடலின் செய்கை போன்றிருந்தது என்று சொல்லு கேனோ? தொடர்ந்தது என்பதைத் தொடர்ந்த அது எனப் பிரித்துக் கொள்க: அது என்றது இங்கே உடம்பை. இடை - தக்கசமயம்: "உடையோர்போல இடையின்று குறுகி." (புறநானூறு. 54). என்பது காண்க. தக்க சமயமாவது, இங்கே, உயிர் நீங்கிய உடல் கெடும் முன் என்க. திறம் தெரிவது என்னை - (பிராட்டி அடைந்த நிலையின்) தன்மையை எங்ஙனம் அறிவது? கொல், அசை.

இறுதியிலுள்ள செய்கை என்ற சொல் ஏனையிடங்களிலும் ஏற்ற வாறு கூட்டிப் பொருளுரைக்கப்பட்டது. செய்கை - செயல்: மன மொழி மெய்களின் தொழிற்பாடு.

பிராட்டியின் மன மொழி மெய்களில், மனம் அடைந்த இன்ப நிலைக்கு இறந்தவர் பிறந்தபயன் எய்திய நிலையும், மொழி அடைந்த இன்பநிலைக்கு அறிந்து மறந்தவர் உணர்வுவந்து நினைவு எய்திய போது அடையும் நிலையும், மெய் அடைந்த துடிப்பு முதலிய மெய்ப் பாடுகள் நிறைந்த இன்பநிலைக்கு உயிரின்றி அசைவற்றுக்கிடந்த உடல், உயிர்பெற்றுத் துடிக்கின்ற நிலையும் உவமமாக வந்தன.

இறைபணி தலைநின்று இறைவனுக்கு அன்பராய்வாழ்ந்து பிறந்தபயன் கொள்ளாது வீணே வாழ்க்கையைக் கழித்தவர்களை 'இறந்தவர்' என்றார். அவர்கள் பிறந்தும் பிறவாதவர்களே யாவர். அவ்வாறு இறைதொண்டு புரிதலுக்கு ஆளாகாதவர்கள் நெடுநாள் வருந்திப் பின் அது கை கூடிய நிலையில் அடையும் மகிழ்ச்சிக்கு ஓர் எல்லையில்லை. இவ்விரண்டு நிலைகளுக்கும் திருநாவுக்கரசர் ஒரு சிறந்த எடுத்துக்காட்டாவர். அவர் நெடுநாள் இறைவனை மறந் திருந்து வருந்திப் பின் இறைவன் திருவடிக்குத் தொண்டுசெய்யும் பேறு பெற்றார். தாம் அன்பற்றிருந்த முன்னைய நிலையையும், அன்புற்றபின் தாம் அடைந்த பின்னைய நிலையையும் ஒரு திருத் தாண்டகத்தில் நன்கு விளக்கியிருத்தல் இங்கு நோக்கத் தகும்:—

"அறம் தெரியா ஊத்தைவா யறிவில் சிந்தை
யாரம்பக் குண்டரோ டயர்த்து நாளும்
மறந்தும் அரன் திருவடிகள் நினைய மாட்டா
மதியிலியேன் வாழ்வெலாம் வாளா மண்மேல்
பிறந்தநாள் நாளல்ல வாளா வீசன்
பேர்பிதற்றிச் சீரடிமைத் திறத்துள் அன்பு
செறிந்தெறும்பி யூர்மலைமேல் மாணிக்கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே."
(திருமுறை 6. பதிகம் 305. பாட்டு 8.)

மற்றும் பிள்ளைலோகாசாரியார், அஷ்டாதச ரகசியத்தில், "பழுதே பல பகலும் போயின என்று இழந்த நாளைக்குக் கூப்பிடுகிறவனுக்கு உறங்க விரகில்லை. 'அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்' என்னு நின்ருர்களிறே'' என்று எழுதியதும் காணத்தகும்.

இராமாயணக் கருப்பொருள் ஏட்டில், பிறந்த பயன் எய்துதல் என்பதற்கு 'மனுஷ ஜனனம் எடுத்ததற்குப் பலனுன பரமபதத்தை உடனே பெற்றது' என்று வரையப்பட்டுள்ளது. (65)

554. இழந்தமணி புற்றர
வெதிர்ந்ததென லானுள்
பழந்தன மிழந்தன
படைத்தவரு மொத்தாள்
குழந்தையை யுயிர்த்தமல
டிக்குவமை கொண்டாள்
உழந்துவிழி பெற்றதொ
ருயிர்ப்பொறையு மொத்தாள்.

இழந்த மணி புற்று அரவு எதிர்ந்தது எனல் ஆனுள்,
பழம் தனம் இழந்தன படைத்தவரும் ஒத்தாள்,
குழந்தையை உயிர்த்த மலடிக்கு உவமை கொண்டாள்,
உழந்து விழி பெற்றது ஓர் உயிர்ப் பொறையும் ஒத்தாள்.

(இன்னும் அச் சீதை) இழந்தமணி எதிர்ந்தது புற்று அரவு எனல் ஆனுள் - தான் இழந்த மாணிக்கத்தை மீளவும் அடைந்த பாம்பு என்று உவமை சொல்லத் தக்கவளானுள். இழந்தன பழந் தனம் படைத்தவரும் ஒத்தாள் - இழந்தனவாகிய செல்வங்களை மீண்டும் பெற்றவரையும் போன்ருள். குழந்தையை உயிர்த்த மலடிக்கு உவமை கொண்டாள் - பிள்ளை பெருதாள் ஒருத்தி குழந்தையைப் பெற்றெடுத்தமைக்கு ஒப்பானுள். உயிர்த்தல் - ஈனுதல். உழந்து விழிபெற்றது ஓர் உயிர்ப்பொறையும் ஒத்தாள் - (குருடாக நெடுநாள்) வருந்திப் பின்பு கண்ணைப் பெற்றதாகிய ஓர் உடம்பையும் போன்ருள் : உயிர்ப்பொறை என்பது உயிரைப் பாரமாகக் கொண்டு வருந்திய ஒரு குருடனின் உடம்பைக் குறித்தது.

பிராட்டிக்குத் திருவாழிகிடைத்தது, ஒரு பாம்புக்குத் தொலைந்து போன மாணிக்கம் கிடைத்ததுபோலவும், ஒருவனுக்கு இழந்த பழைய செல்வம் அல்லது நிதிக்குவை திரும்பக் கிடைத்தது போலவும், மலடிக்குக் குழந்தை பிறந்ததுபோலவும் குருடனுக்குக் கண்பார்வை கிடைத்தது போலவும் இருந்தது என்க. (66)

## திருவாழி பெற்ற பிராட்டிநிலை 555–558

**555.** வாங்கினள் முலைக்குவையில்
வைத்தனள் சிரத்தால்
தாங்கினள் மலர்க்கண்மிசை
யொத்தின டடந்தோள்
வீங்கினள் மெலிந்தனள்
குளிர்ந்தனள் வெதுப்போ
டேங்கின ளுயிர்த்தனளி
தின்னதென லாமே.

வாங்கினள்: முலைக்குவையில் வைத்தனள்: சிரத்தால்
தாங்கினள்: மலர்க்கண்மிசை ஒத்தினள்: தடம்தோள்
வீங்கினள், மெலிந்தனள்: குளிர்ந்தனள், வெதுப்போடு
ஏங்கினள்: உயிர்த்தனள்: இது இன்னது எனல் ஆமே?

(பிராட்டி அந்த மோதிரத்தை) வாங்கினள் - (அநுமன் கையி னின்றும் தன் கையில்) வாங்கினாள். தடம் தோள் வீங்கினள் - (மோதிரம் கிடைத்த மகிழ்ச்சியால்) தன் பெரிய தோள்கள் பூரிக்கப் பெற்றாள். மெலிந்தனள் – (உடனே தன் நாயகனைவிட்டுப் பிரிந்த நிலைக்கு வருந்தி) இளைத்தாள். குளிர்ந்தனள் – (நாயகன் மோதி ரத்தை மார்பில்வைத்து முயங்கிய மகிழ்ச்சியால்) உள்ளம் குளிர்ந்தாள். வெதுப்போடு ஏங்கினள் - (இராமனை அடையமாட் டாமையால் எழுந்த ஆசை) வெப்பத்தினால் வருந்தினாள். உயிர்த் தனள் - பெருமூச்சுவிட்டாள். இது இன்னது எனல் ஆமே - (பிராட்டி அடைந்த) மாறுபட்ட இந்த நிலையை இப்படிப்பட்டது என்று சொல்வதற்கு ஆகுமோ?

திருவடி தொழுதபடலத்தில்,

"ஒருகணத் திரண்டு கண்டே னொளிமணி யாழி யான்ற
திருமுலைத் தடத்து வைத்தாள் வைத்தலுஞ் செல்வ நின்பால்
விரகமென் பதனின் வந்த வெங்கொழுந் தீயினால்வெந்
துருகிய துடனே யாறி வலித்தது குளிர்ப்புள் ளூற."

எனவரும் பாடல் இங்கு ஒப்புநோக்கத்தகும்.

"திக்குநிறை புகழாளன் தீவேள்விச் சென்றந்நாள்
மிக்கபெருஞ் சபைநடுவே வில்லிறுத்தான் மோதிரங்கண்
டொக்குமா லடையாள மநுமானென் றுச்சிமேல்
வைத்துக்கொண் டுகந்தனளான் மலர்க்குழலாள் சீதையுமே."

என்றார் பெரியாழ்வாரும்.

மருட்கை யென்னும் மெய்ப்பாடு. இவ்வண்ணமே பிராட்டியின் அணிகலங்களைக் கண்டபோது இராமனுக்கு உண்டான உணர்ச்சி கிட்கிந்தாகாண்டம் கலன்காண் படலத்திற் கூறப்பட்டது.

"மோதிரத்தையே பெருமானென நினைத்துப் பூரித்தலும் அவனல்லாதது கண்டு வாடுதலும் இதில் விளங்கும்." (கருப் பொருள்). (67)

**556.** மோக்குமுலை வைத்துறமு யங்குமொளிர் நன்னீர்
நீக்கிநிறை கண்ணிணைத தும்பநெடு நீள
நோக்குநுவ லக்கருது மொன்றுநுவல் கில்லாள்
மேக்குநிமிர் விம்மலள்வி ழுங்கலுறு கின்றாள்.

மோக்கும், முலை வைத்து உற முயங்கும், ஒளிர் நல் நீர்
நீக்கி நிறை கண் இணை ததும்ப நெடு நீள
நோக்கும், நுவலக் கருதும், ஒன்றும் நுவல்கில்லாள்,
மேக்கு நிமிர் விம்மலள், விழுங்கலுறுகின்றாள்.

(பிராட்டி அத்திருவாழியை) மோக்கும் - மூக்காலே முகருவாள். உற முயங்கும் - நன்றாகத் தழுவுவாள். ஒளிர் நல் நீர் நீக்கி நிறை கண் இணை ததும்ப நெடு நீள நோக்கும் – விளங்குகிற ஆனந்தக் கண்ணீரைத் துடைத்துவிட்டு இரண்டு கண்களிலும் மீண்டும் நீர் நிறையும்படி நெடுநேரம் (அதனைப்) பார்த்துக் கொண்டிருப்பாள். நுவலக் கருதும் - (அதனோடு ஏதேனும்) பேசக் கருதுவாள். (ஆனால் பேசுதற்கு வார்த்தை கிடையாமல்) ஒன்றும் நுவல்கில்லாள் - ஒன்றும் பேசமாட்டாதிருப்பாள். மேக்கு நிமிர் விம்மலள் - மேலே கிளர்ந்து எழும் ஏக்கத்தையுடையவளாய். விழுங்கலுறுகின்றாள் - (அவ்வேக்கத்தை) அடக்குகிறவளானாள். (68)

**557.** நீண்டவிழி நேரிழைதன் மின்னினிற மெல்லாம்
பூண்டதொளிர் பொன்னனைய பொம்மனிற மம்மா
ஆண்டகைதன் மோதிரம டுத்தபொரு ளெல்லாம்
தீண்டளவில்வேதிகைசெய்தெய்வமணிகொல்லோ.

நீண்ட விழி நேரிழைதன் மின்னின் நிறம் எல்லாம்
பூண்டது ஒளிர் பொன் அனைய பொம்மல் நிறம், அம்மா!
ஆண்தகைதன் மோதிரம், அடுத்த பொருள் எல்லாம்,
தீண்டு அளவில், வேதிகைசெய் தெய்வமணி கொல்லோ?

நீண்ட விழி நேர் இழை தன் - (காதளவும்) நீண்ட கண்களையும் அழகிய ஆபரணங்களையும் உடைய பிராட்டியின். மின்னின் நிறம் எல்லாம் - மின்னலைப் போன்ற உடல் முழுவதும்; நிறம் - உடல். 'மெல்லியலை மல்லற் றன்னிற மொன்றி லிருத்தி நின்றேன்' (திருக் கோவையார். 58) என்பது காண்க. ஒளிர் பொன் அனைய பொம்மல் நிறம் பூண்டது - விளங்குகின்ற பொன்னை யொத்த பொலிவுள்ள நிறத்தை அடைந்தது. அம்மா, வியப்பிடைச்சொல். ஆண்டகை தன்.........கொல்லோ - வீரனை இராமபிரானது மோதிரம் தன்னைச் சேர்ந்த எல்லாப் பொருள்களையும் தொட்டமாத்திரத்திலே வேறு படுத்துகிற (பொன்னாக மாற்றுகிற) தெய்வத் தன்மையுடைய (ஸ்பர்ச வேதியென்னும்) ரசகுளிகைதானோ ? (69)

558. இருந்துபசி யாலிடரு ழந்தவர்க ளெய்தும்
அருந்துமமு தாகியத றத்தவரை யண்மும்
விருந்துமென லாகியது வீயுமுயிர் மீளும்
மருந்துமென லாகியது வாழிமணி யாழி.

இருந்து பசியால் இடர் உழந்தவர்கள் எய்தும்
அருந்தும் அமுது ஆகியது: அறத்தவரை அண்மும்
விருந்தும் எனல் ஆகியது: வீயும் உயிர் மீளும்
மருந்தும் எனல் ஆகியது; வாழி! மணி ஆழி.

மணி ஆழி - (இராமபிரானுடைய அந்த) அழகிய மோதிரம். (பிராட்டிக்கு), பசியால் இருந்து இடர் உழந்தவர்கள் எய்தும் அருந்தும் அமுது ஆகியது - பசியினைப்பினால் நடக்கமுடியாதிருந்து துன்பப்பட்டவர்களுக்கு முன்னே கிடைத்த உண்ணும் சோறு போன்றாகியது. 'பசித்தோர்க்கு எதிர் கிடைத்த பாற்சோற்றுத் திரளே' என்றார் பிறரும். அறத்தவரை அண்மும் விருந்து எனலும் ஆகியது - (மற்றும் அம்மோதிரம் பிராட்டிக்கு) இல்லறத்தை (நன்கு) நடத்துமவரை யடுத்த விருந்தாளியை ஒத்ததென்றும் சொல்ல லாம்படி யாயிற்று. வீயும் உயிர் மீளும் மருந்து எனலும் ஆகியது - இறந்த உயிர் மீண்டும் பிழைத்தற்குக் காரணமான (மிருத சஞ் சீவினி யென்னும்) மருந்தையும் ஒத்தது என்னலாம்படி யாயிற்று. வாழி – (அம் மோதிரம்) வாழ்வதாக!

அத்திருவாழி பிராட்டியின் விரகதாபத்தைத் தீர்ப்பதாயிருந்த தாலும், பிராட்டியால் பூசிக்கப்பெற்றதாலும், பிராட்டிக்கு உயிரைத் தளிர்க்கச் செய்ததாலும் இங்ஙனம் மூன்றுவமைகள் கூறப்பெற்றன என்க. (70)

### பிராட்டி அநுமனைப் பாராட்டுதல் 559-560

**559.** இத்தகைய ளாகியுயி ரேமுறவி ளங்கும்
முத்தநகை யாள்விழியி னாலிமுலை முன்றில்
தத்தியுக மென்குதலை தள்ளவுயிர் தந்தாய்
உத்தமவெ னாவினைய வாசகமு ரைத்தாள்.

இத்தகையள் ஆகி, உயிர் ஏம் உற விளங்கும்
முத்த நகையாள், விழியின் ஆலி முலைமுன்றில்
தத்திஉக, மென்குதலை தள்ள, 'உயிர் தந்தாய்!
உத்தம!' எனா, இனைய வாசகம் உரைத்தாள்,

இத்தகையள் ஆகி - இப்படிப்பட்ட தன்மை யுடையவளாய். உயிர் ஏமுற - உயிர் இன்பமடைய. விளங்கும் முத்த நகையாள் - விளங்குகிற முத்துப் போன்ற பற்களையுடைய பிராட்டி. விழியின் ஆலி - கண்ணின் நீர்த்துளிகள். முன்றில் - மேல் முகட்டிலே. தத்தி உக - பாய்ந்து ஒழுகவும். மென்குதலை தள்ள - மென்மை யான மழலைச்சொற்கள் தடுமாறவும். (அநுமனை நோக்கி) உத்தம - (யாவரினும்) சிறந்தவனே! உயிர் தந்தாய் - (நீ என்) உயிரைக் கொடுத்தவனே! எனா இனைய வாசகம் - என்று இப்படிப்பட்ட சொற்களை. உரைத்தாள் - சொல்லுவாளாயினாள். (இனைய என்ப தனால் குறிக்கப்படும் வாசகம் பின் செய்யுட்களிற் காணப்படும்). (71)

**560.** மும்மையா முலகந் தந்த
★ முதல்வற்கு முதல்வன் தூதாய்ச்
செம்மையா லுயிர்தந் தாய்க்குச்
செயலென்னா லெளிய துண்டே
அம்மையா யப்ப னாய
வத்தனே யருளின் வாழ்வே
இம்மையே மறுமை தானு
நல்கினை யிசையோ டென்றாள்

'மும்மை ஆம் உலகம் தந்த
முதல்வற்கும் முதல்வன் தூது ஆய்ச்
செம்மையால் உயிர் தந்தாய்க்குச்
செயல் என்னால் எளியது உண்டே?

அம்மை ஆய் அப்பன் ஆய
அத்தனே ! அருளின் வாழ்வே !
இம்மையே மறுமை தானும்
நல்கினை இசையோடு ' என்றாள்.

மும்மையாம் உலகம் தந்த முதல்வற்கும் முதல்வன் தூது ஆய் - (மேல் கீழ் நடு என) மூன்றுவகைப்பட்ட உலகங்களை யெல்லாம் படைத்த (யாவர்க்கும்) முதலிலுள்ளவனாகிய நான்முக னுக்கும் காரணனாகிய (திருமாலின் திருவவதாரமாகிய) இராம பிரானது தூதனாய் (வந்து). செம்மையால் - உனது செம்மைக்குணத் தினாலே. உயிர் தந்தாய்க்கு - எனக்கு உயிர் கொடுத்த உனக்கு. என்னால் செயல் எளியது உண்டே - என்னால் எளிதிற் செய்யக் கூடியதொரு கைம்மாறும் உளதோ? அம்மையாய் அப்பன் ஆய அத்தனே - எனக்குத் தாயாகித் தந்தையுமாகிய பெரியவனே! அருளின் வாழ்வே - திருவருளுக்கு இருப்பிடமானவனே! இம் மையே மறுமைதானும் இசையோடு நல்கினை - இவ்வுலகத்தில் அநு பவிக்கும் இன்பத்தையும் (இறந்து சென்று) மறுமையில் அநு பவிக்கும் இன்பத்தையும் புகழோடு கொடுத்தாய் என்றாள். (72)

பிராட்டி அநுமனை வாழ்த்தல்

561. பாழிய பணைத்தோள் வீர
துணையிலேன் பரிவு தீர்த்த
வாழிய வள்ள லேயான்
மறுவிலா மனத்தே னென்னின்
ஊழியோர் பகலா யோதும்
யாண்டெலா முலக மேழும்
ஏழும்வீ வுற்ற ஞான்று
மின்றென விருத்தி யென்றாள்.

'பாழிய பணைத்தோள் வீர! துணை இலேன் பரிவு தீர்த்த
வாழிய! வள்ளலே! யான் மறு இலா மனத்தேன் என்னின்,
ஊழி ஓர் பகலாய் ஓதும் யாண்டு எலாம், உலகம் ஏழும்
ஏழும் வீவு உற்ற ஞான்றும், இன்று என இருத்தி!' என்றாள்.

பாழிய பணைத் தோள் வீர - வலிமை பொருந்திய பருத்த தோள்களையுடைய வீரனே! துணை இலேன் பரிவு தீர்த்த வள்ளலே- யாதொரு துணையும் இல்லாதிருந்த என்னுடைய துன்பத்தைப் போக்கிய வண்மையாளனே! வாழிய - நீ வாழ்வாயாக. யான் மறு

இலா மனத்தேன் என்னின் - யான் களங்கமில்லாத மனத்தை யுடையேனுனல். ஊழி ஓர் பகலாய் ஓதும் யாண்டு எலாம் - பல யுக காலங்கள் ஒரு நாளாய்ச் சொல்லப்படுகிற பல்லாண்டுகளும். உலகம் ஏழும் ஏழும் வீவு உற்ற ஞான்றும் - பதினுன்கு உலகங்களும் அழிவடைந்த பொழுதும். இன்று என இருத்தி என்ருள் - இன்றைத் தினத்தில் இருப்பதுபோலவே (என்றும் சிரஞ்சீவியாய்) வாழ்ந்திருப் பாயாக! என்று (பிராட்டி அனுமனை) வாழ்த்தினுள்.

இங்கு 'மறுவிலா மனத்தே னென்னின்' என்றது போலவே, பிணி வீட்டு படலத்திலும் 'கற்பினுற், றூயே னென்னிற் ெறழு கின்றே னெரியே யவனைச் சுடலென்ருள்' எனக் கூறியது காண்க. (73)

பிராட்டி அனுமனிடம் இராமபிரானைப்பற்றி வினவுதல்

562. மீண்டுரை விளம்ப லுற்ருள்
விழுமிய குணத்தோய் வீரன்
யாண்டையா னிளவ லோடு
மெவ்வழி யெய்திற் றுன்னை
ஆண்டகை யடியேன் றன்மை
யார்சொல வறிந்த தென்ருள்
தூண்டிரண் டனைய தோளா
னுற்றது சொல்ல லுற்ருன்.

மீண்டு உரை விளம்பல்உற்ருள், 'விழுமிய குணத்தோய்! வீரன்
யாண்டையான் இளவலோடும்? எவ்வழி எய்திற்று உன்னை?
ஆண்தகை,அடியேன் தன்மை யார் சொல அறிந்தது?'என்ருள்;
தூண் திரண்டு அனைய தோளான் உற்றது சொல்லல் உற்ருன்.

(பிராட்டி அனுமனை நோக்கி) மீண்டு உரை விளம்பல் உற்ருள் - மறுபடியும் சில சொற்களைச் சொல்லலுற்றவளாய். விழுமிய குணத் தோய் - சிறந்த நற்குணங்களையுடையவனே! வீரன் இளவலோடும் யாண்டையான் - மகாவீரனுகிய இராமபிரான் தம்பியாகிய இலக்குவ னேடும் எவ்விடத்திலுள்ளான்? உன்னை எவ்வழி எய்திற்று - உன்னை (அவன்) எவ்விடத்தில் வந்து அடைந்தது? ஆண்டகை அடியேன் தன்மை யார் சொல அறிந்தது - ஆண்மைக் குணம் மிகுந்தவனுன இராமபிரான் அடியாளாகிய என்னுடைய நிலை மையை யார் சொல்லத் தெரிந்தது? என்ருள் - என்று கேட்டாள். தூண் திரண்டு அனைய தோளான் - தூண் திரண்டன போன்ற தோள்களையுடைய அநுமனும். உற்றது சொல்லலுற்ருன் - நடந் ததைச் சொல்லத் தொடங்கினுன். (74)

## அநுமன் இராமனது வரலாறு விரித்தல் 563-583

**563.** உழைக்குலத் தியையு மாய
வுருவுகொண் டுறுவல் செய்தான்
மழைக்கரு நிறத்து மாய
வரக்கன்மா ரீச னென்பான்
இழைத்தட மார்பத் தண்ண
லெய்யப்போய் வையஞ் சேர்வான்
அழைத்தவல் லோசை யுன்னை
மயக்கிய தரக்கன் சொல்லால்.

உழைக்குலத்து இயையும் மாய
உருவுகொண்டு உறுவல் செய்தான்,
மழைக் கருநிறத்து மாய
அரக்கன், மாரீசன் என்பான்,
இழைத் தட மார்பத்து அண்ணல்
எய்யப் போய், வையம் சேர்வான்,
அழைத்த வல் ஓசை உன்னை
மயக்கியது அரக்கன் சொல்லால்.

அரக்கன் சொல்லால் மழைக் கருநிறத்து மாய அரக்கன் மாரீசன் என்பான் உழைக்குலத்து இயையும் மாய உருவு கொண்டு உறுவல் செய்தான் இழைத்தட மார்பத்து அண்ணல் போய் எய்ய வையம் சேர்வான் அழைத்த வல் ஓசை உன்னை மயக்கியது எனக் கொள்க.

அரக்கன் சொல்லால் - அரக்கனாகிய இராவணன் கட்டளையால். மழைக் கருநிறத்து மாய அரக்கன் மாரீசன் என்பான் - மேகம் போன்ற கருநிறத்தையுடைய வஞ்சக அரக்கனான மாரீசன் என்பவன். உழைக்குலத்து இயையும் மாய உருவுகொண்டு - மானினத்தையொத்த பொய்யான உருவம் எடுத்து. உறுவல் செய்தான் - துன்பம் செய்தானாக. இழைத்தட மார்பத்து அண்ணல்- ஆபரணங்களை யணிந்த (அல்லது நூலணிந்த) பெரிய திருமார்பத்தையுடைய தலைவனாகிய இராமபிரான். போய் எய்ய - (பொன்மானென்று தொடர்ந்து) சென்று (பின் அவன் மாயையை உணர்ந்து அம்பை) எய்ததனால். வையம்சேர்வான் - மண்ணில் விழுபவன் (ஆகிய மாரீசன்). அழைத்த வல் ஓசை - ('ஆ சீதா ! ஆ லக்ஷ்மணா !' என்று) கூப்பிட்ட வலிய ஒலி. உன்னை மயக்கியது - (இராமன் குரலே யென்று எண்ணும்படி) உன்னை ஏமாற்றியது.

'சீதா ! லக்ஷ்மணா !' என்று மாரீசன் இராமன் குரலாற் கூப்பிட்டதைக் கம்பர் 'அழைத்த' என்று ஒரு சொல்லிலேயே அமைத்துச்

செல்வது நோக்கியறியத்தகும். ஆரணிய காண்டம், மாரீசன் வதைப் படலத்திலும், "அட்ட திக்கினு மப்புற மும்புக, விட்ட ழைத் தொரு குன்றென வீழ்ந்தனன்." (247) என்றதும் காண்க. (75)

**564.** இக்குர லிளவல் கேளா
தொழிகென விறைவ னிட்டான்
மெய்க்குரற் சாபம் பின்னை
விளைந்தது விதியின் வெம்மை
பொய்க்குர லின்று பொல்லாப்
பொருள்பின்பு பயக்கு மென்பான்
கைக்குரல் வரிவில் லானு
மிளையவன் வரவு கண்டான்.

'இக்குரல் இளவல் கேளாது
ஒழிக!' என இறைவன் இட்டான்
மெய்க்குரல் சாபம்: பின்னை,
விளைந்தது விதியின் வெம்மை:
'பொய்க்குரல் இன்று! பொல்லாப்
பொருள் பின்பு பயக்கும்!' என்பான்,
கைக்குரல் வரிவில்லானும்,
இளையவன் வரவு கண்டான்.

பின்னை - உடனே. இறைவன் – தலைவனாகிய இராமபிரான். இக்குரல் – இந்த (மாய மானின்) குரலை. இளவல் - (எனது) தம்பி யாகிய இலக்குமணன். கேளாது ஒழிக - கேட்காதிருக்க. என - என்று எண்ணி. சாபம் - (தன் கையிலுள்ள) வில்லினால். மெய்க் குரல் இட்டான் - உண்மையான ஒலியை உண்டாக்கினான். (ஆனாலும்) விதியின் வெம்மை விளைந்தது - ஊழின் கொடுமையால் (இவ்வாறு) நேர்ந்துவிட்டது. பொய்க்குரல் இன்று - (மாரீசன் வாய்விட்டரற்றிய ஒலி) பொய்யான குரல்போலவே இல்லை. (என் குரலாகவே இருந்தது என்றவாறு.) பின்பு பொல்லாப்பொருள் பயக்கும் என்பான் – இதன் விளைவாகத் தீங்கு பின்பு ஏற்படக்கூடும் என்று எண்ணியவனாய். (விரைகின்ற), கைக்குரல் வரி வில்லானும்– கையிற்பிடித்த ஒலியோடுகூடிய கட்டமைந்த வில்லையுடைய இராமனும். இளையவன் வரவு கண்டான் - தம்பியாகிய இலக்கு மணன் (தன்னை நோக்கி) வருவதைக் கண்டான். சீதையும் இலக்கு மணனும் கேட்டு அச்சம் தவிரும்படியாய் வில்லின் நாணொலியை எழுப்பிய வண்ணம் இராமன் திரும்பி வந்தனன் என்க. (76)

**565.** கண்டபி னிளைய வீரன்
முகத்தினுற் கருத்தை யோர்ந்த
புண்டரி கக்க ணுனு
முற்றது புகலக் கேட்டான்
வண்டுறை சாலை வந்தா
னின்திரு வடிவு காணுன்
உண்டுயி ரிருந்தா னின்ன
லுழத்தற்கே யேது வன்ருே.

கண்டபின், இளைய வீரன்
முகத்தினுல் கருத்தை ஓர்ந்த
புண்டரிகக் கணுனும்
உற்றது புகலக் கேட்டான்:
வண்டு உறை சாலை வந்தான்,
நின் திருவடிவு காணுன்,
உண்டு உயிர், இருந்தான்: இன்னல்
உழத்தற்கே ஏது அன்ருே?

புண்டரிகக்கணுனும் - தாமரைக் கண்ணனுகிய இராமனும். உற்றது புகலக் கேட்டான் - நடந்த செய்தியை (இலக்குமணன்) சொல்லக் கேட்டவனுய். திருவடிவு - திருமேனி. உயிர் உண்டு இருந்தான் - உயிர் உண்டு (என) இருந்தான்: (உயிர் உண்டு என்றுமட்டும் சொல்லும் நிலையில் செயலற்றிருந்தான் என்றவாறு). இன்னல் உழத்தற்கே ஏது அன்ருே – (அவ்வாறு அவன் இருந்த இருப்பு) துன்பம் அநுபவிப்பதற்கே காரணம் அல்லவா? (77)

**566.** தேண்டிநேர் கண்டேன் வாழி
தீதில னெங்கோ ணுகம்
பூண்டமெய் யுயிரே நீயப்
பொய்யுயிர் போயே நின்ற
ஆண்டகை நெஞ்சி னின்று
மகன்றிலை யழிவுண் டாமோ
ஈண்டுநீ யிருந்தா யாண்டங்
கெவ்வுயிர் விடுமி ராமன்.

தேண்டி நேர் கண்டேன் வாழி! தீது இலன் எம் கோன்; ஆகம்
பூண்ட மெய் உயிரே நீ! அப் பொய் உயிர் போயே நின்ற
ஆண்தகை நெஞ்சில் நின்றும் அகன்றிலே: அழிவு உண்டாமோ?
ஈண்டு நீ இருந்தாய், ஆண்டு அங்கு எவ்வுயிர் விடும் இராமன்?

தேண்டி நேர் கண்டேன் - (உன்னை நான்) தேடிவந்து (இங்கே) எதிரிற் காணப்பெற்றேன். வாழி - (நீ) வாழ்வாயாக. எம் கோன் தீது இலன் - எமது தலைவனாகிய இராமபிரான் ஒரு தீங்கையும் அடையமாட்டான். நீ ஆகம் பூண்ட மெய் உயிர் - நீ (அவனுடைய) உடம்பிற் பொருந்திய உண்மையான உயிராயுள்ளவள். அப் பொய் உயிர் போயே நின்ற ஆண்டகை நெஞ்சில் நின்றும் அகன்றிலே - அந்தப் பொய்யான உயிர் நீங்கியிருந்த ஆண்மை மிக்கவனான இராமபிரான் மனத்திலிருந்து நீ பிரியவேயில்லை. (ஆதலால்) அழிவு உண்டாமோ - (இராமபிரானுக்குத்) தீங்கு ஏற்படுமா? (உண்டாகாது என்றவாறு). நீ ஈண்டு இருந்தாய் - (அவனுடைய மெய்யுயிராகிய) நீ இங்கே இருந்தாய். ஆண்டு இராமன் எவ் வுயிர் விடும் - அவ்விடத்தில் இராமன் எந்த உயிரை விடுவான்? அங்கு, அசை. (78)

567. அந்நிலே யாய வண்ண
லாண்டுநின் றன்னே நின்னேத்
துன்னருங் கானும் யாறு
மலேகளுந் தொடர்ந்து நாடி
இன்னுயி ரின்றி யேகு
மியந்திரப் படிவ மொப்பான்
தன்னுயிர் புகழ்க்கு விற்ற
சடாயுவை வந்து சார்ந்தான்.

அந்நிலே ஆய அண்ணல், ஆண்டு நின்று, அன்னே! நின்னேத்
துன்அரும் கானும் யாறும் மலேகளும் தொடர்ந்து நாடி,
இன் உயிர் இன்றி ஏகும் இயந்திரப் படிவம் ஒப்பான்,
தன் உயிர் புகழ்க்கு விற்ற சடாயுவை வந்து சார்ந்தான்.

அன்னே - தாயே! அந்நிலேயாய அண்ணல் - அப்படிப்பட்ட தன்மையையுடைய தலைவனாகிய இராமபிரான். ஆண்டு நின்று - அப் பஞ்சவடியிலிருந்து. துன் அரும் - அணுகுதற்கு அருமையான. தொடர்ந்து நின்னே நாடி - போய் உன்னேத் தேடிக்கொண்டு. இன் உயிர் இன்றி ஏகும் இயந்திரப் படிவம் ஒப்பான் - இனிய உயிர் இல்லாமலே பொறியாலியங்கும் பாவையைப் போன்றவனாகிய

இராமன். தன் உயிர் புகழ்க்கு விற்ற - தனது உயிரைப் புகழ்பெறும் பொருட்டுக் கொடுத்துவிட்ட. தன் உயிர்க்கு இறுதியுறுவதையும் எண்ணாது சீதையைக் கொடியவனான இராவணன் பிணிப்பிலிருந்து விடுவிக்க வேண்டிப் பெரும் போர்புரிந்து இறக்கநேரிட்டாலும் பெரும் புகழைத் தேடிக்கொண்டவன் சடாயுவாதலால், தன்னுயிர் புகழ்க்கு விற்றசடாயு என்று பாராட்டப் பெற்றனன் என்க. “புகழெனி னுயிருங் கொடுக்குவர்” (புறநானூறு, 182). என்பதும் காண்க. (79)

**568.** வந்தவன் மேனி நோக்கி
வானுயர் துயரின் வைகி
எந்தைநீ யுற்ற தன்மை
யியம்பென விலங்கை வேந்தன்
சுந்தரி நின்னைச் செய்த
வஞ்சனை சொல்லச் சொல்ல
வெந்தன வுலக மென்ன
நிமிர்ந்தது சீற்ற வெந்தீ.

வந்து அவன்மேனி நோக்கி,
வான் உயர் துயரின் வைகி,
‘எந்தை! நீ உற்ற தன்மை
இயம்பு!’ என, இலங்கைவேந்தன்,
சுந்தரி! நின்னைச் செய்த
வஞ்சனை சொல்லச் சொல்ல,
வெந்தன உலகம் என்ன,
நிமிர்ந்தது சீற்ற வெம் தீ.

சுந்தரி - அழகுள்ளவளே! வந்து - (இராமன் சடாயு விழுந்து கிடந்த இடத்திற்கு) வந்து. அவன்மேனி நோக்கி - (இராவணனால் அடிபட்டுக் குற்றுயிருடன் கிடந்த) அந்தச் சடாயுவின் உடம்பைப் பார்த்து. வான் உயர் துயரின் வைகி - மிகவும் பெரிதான துக்கத் திலாழ்ந்து. எந்தை – எமது தந்தையே! நீ உற்ற தன்மை - நீ (இந்நிலைமையை) அடைந்த விதத்தை. இயம்பு என - சொல்லு வாயாக என்று (இராமன்) வினவ. இலங்கை வேந்தன் நின்னைச் செய்த வஞ்சனை சொல்லச் ' சொல்ல - இலங்கைக்கு அரசனான இராவணன் உன்னை வஞ்சித்துக் கவர்ந்து சென்றதைச் (சடாயு) சொல்லிக்கொண்டுவரும்பொழுதே. சீற்ற வெம் தீ - கோபமாகிற கொடிய நெருப்பு. உலகம் வெந்தன என்ன – உலகங்கள் யாவும் வெந்துபோயின என்று கண்டோர் அஞ்சும்படி. நிமிர்ந்தது – (இராமன்பால்) கிளர்ந்தெழுந்தது. (80)

**569.** சீறியிவ் வுலக மூன்றுந்
 தீந்துகச் சினவா யம்பால்
நூறுவெ னென்று கைவி
 ஞேக்கிய காலே வெய்தின்
ஊரெரு சிறியோன் செய்ய
 முனிதியோ வுலகை யுள்ளம்
ஆறுதி யென்று தாதை
 யாற்றலிற் சீற்ற மாறி.

சீறி, 'இவ் வுலகம் மூன்றும்
 தீந்து உகச் சினவாய் அம்பால்
நூறுவென் !' என்று கைவில்
 நோக்கிய காலே, 'வெய்தின்,
ஊறு ஒரு சிறியோன் செய்ய
 முனிதியோ உலகை? உள்ளம்
ஆறுதி !' என்று தாதை
 ஆற்றலில், சீற்றம் ஆறி.

தீந்து உக - கரிந்து நீருய்ப்போம்படி. சின வாய் அம்பால் - கோபம் கொண்ட முனையையுடைய அம்பிஞல் : தனது கோபத்தை அம்பின் மேலேற்றிக் கூறிஞன் என்க. நூறுவென் - அழிப்பேன். ஒரு சிறியோன் ஊறு செய்ய வெய்தின் உலகை முனிதியோ - ஓர் அற்பன் (உனக்குத்) தீங்கு செய்ய (அதற்காக) அவசரப்பட்டு (யாதொரு குற்றமும் செய்யாத) உலகங்களேச் சினந்து அழிப் பாயோ? தாதை யென்றது இங்கே சடாயுவை. வெய்தின் - விரைவில்; 'வேந்தன் வெருவந்து வெய்து கெடும்' (திருக்குறள் - 569) என்பது காண்க. (81)

**570.** எவ்வழி யேகிற் றன்ஞன்
 யாண்டையா னுறையுள் யாது
செவ்வியோய் கூறு கென்னச்
 செப்புவா னுற்ற செவ்வி
வெவ்வியல் விதியின் கொட்பால்
 வீடினன் கழுகின் வேந்தன்
எவ்விய வரிவிற் செங்கை
 யிருவரு மிடரின் வீழ்ந்தார்.

'எவ்வழி ஏகிற்று அன்னன்?
யாண்டையான்? உறையுள் யாது?
செவ்வியோய்! கூறுக!' என்னச்
செப்புவான் உற்ற செவ்வி,
வெவ்வியல் விதியின் கொட்பால்,
வீடினன் கழுகின் வேந்தன்;
எவ்விய வரி வில் செங்கை
இருவரும் இடரின் வீழ்ந்தார்.

செவ்வியோய் - நன்மைக் குணமுடையவனே! இஃது இராமன் சடாயுவைத் தன்முகமாக்கிக்கொள்ளும் விளி. அன்னன் எவ்வழி ஏகிற்று - அந்த இராவணன் எந்தவழியாகப் போனன்? யாண்டையான் - எங்கிருப்பான்? உறையுள் யாது - (அவனுடைய) இருப்பிடம் எது? கூறுக என்ன - சொல்லுக என்று இராமன் கேட்க. கழுகின் வேந்தன் - கழுகுகளுக்கு அரசனுகிய சடாயு. செப்புவான் உற்ற செவ்வி - சொல்லத்தொடங்கிய பொழுது. வெவ்வியல் விதியின் கொட்பால் - கொடுந்தன்மையையுடைய விதி சூழ்தலால். வீடினன் - உயிர் நீங்கினன். எவ்விய வரிவில் செங்கை இருவரும் - அம்புகளை எவுதற்குரிய கட்டமைந்த வில்லை யேந்திய சிவந்த கைகளையுடைய இராமலக்குமணர் இருவரும். இடரின் வீழ்ந்தார் - துன்பத்தில் அழுந்தினர்கள். (82)

**571.** அயர்த்தவ ரரிதிற் றேறி
யாண்டொழிற் ருதைக் காண்டுச்
செயத்தகு கடன்கள் யாவுந்
தேவரு மருளச் செய்தார்
கயத்தொழி லரக்கன் றன்னை
நாடிநாங் காண்டு மென்னுப்
புயற்றெடு குடுமிக் குன்றுங்
கானமுங் கடிது போனர்.

அயர்த்தவர் அரிதில் தேறி,
ஆண்தொழில் தாதைக்கு ஆண்டுச்
செயத்தகு கடன்கள் யாவும்
தேவரும் மருளச் செய்தார்:
'கயத்தொழில் அரக்கன்தன்னை
நாடி நாம் காண்டும்' என்னுப்
புயல் தொடு குடுமிக் குன்றும்
கானமும் கடிது போனர்.

அயர்த்தவர் அரிதில் தேறி - (இவ்வாறு) துன்பப்பட்ட இராம லக்குமணர் இருவரும் மிக வருந்தித் தெளிந்து. ஆண் தொழில் தாதைக்கு - ஆண்மைக்குரிய செய்கையைப் புரிந்த தமக்குத் தந்தை முறையினனான சடாயுவுக்கு. ஆண்டுச் செயத்தகு கடன்கள் யாவும் - அவ்விடத்தில் செய்யத்தக்க கடமையாகிய ஈமக்கிரியை களெல்லாவற்றையும். தேவரும் மருளச் செய்தார் - தேவர்களும் வியக்கும்படி செய்து முடித்து. கயத் தொழில் அரக்கன்தன்னை - கீழ்மைச் செயலையுடைய அரக்கனாகிய இராவணனை. புயல் - மேகம். (83)

**572.** அவ்வழி நின்னைக் காணு
தயர்பவ னரிதிற் றேறிச்
செவ்வழி நயனஞ் செல்லு
நெடுவழி சேறு செய்ய
வெவ்வழ லுற்ற மெல்லென்
மெழுகென வழியு மெய்யன்
இவ்வழி யினைய பன்னி
யறிவழிந் திரங்க லுற்றான்.

அவ்வழி நின்னைக் காணாது
அயர்பவன், அரிதில் தேறிச்
செவ்வழி நயனம் செல்லும்
நெடுவழி சேறு செய்ய,
வெவ் அழல் உற்ற மெல் என்
மெழுகு என அழியும் மெய்யன்,
இவ்வழி இனைய பன்னி,
அறிவு அழிந்து, இரங்கல் உற்றான்.

அயர்பவன் - துயருறுபவனாகிய இராமன். செவ்வழி நயனம் - (அழுதழுது) செம்மைநிறம் மிகுந்த கண்கள். சேறு செய்ய - (கண்ணீரால்) சேருக்கிக் கொண்டிருக்க. அழியும் மெய்யன் - கரைந்து மெலிந்த உடம்பையுடையவனாகி. இவ்வழி - இந்நிலையில். இனைய பன்னி - இத்தன்மையான சொற்களைச் சொல்லி. அறிவு அழிந்து - அறிவு கலங்கி. (84)

**573.** கன்மத்தை ஞாலத்
★ தவர்யாருள ரேக டப்பார்
பொன்மொய்த்த தோளான்
மயல்கொண்டு புலன்கள் வேருய்
நன்மத்த நாகந்
தலைசூடிய நம்ப னேபோல்
உன்மத்த ஞனுன்
றனையொன்று முணர்ந்தி லாதான்.

கன்மத்தை ஞாலத்தவர்
யார் உளரே கடப்பார் ?
பொன்மொய்த்த தோளான்,
மயல்கொண்டு, புலன்கள் வேறு ஆய்,
நல் மத்தம் நாகம்
தலைசூடிய நம்பனேபோல்,
உன்மத்தன் ஆனுன்,
தனை ஒன்றும் உணர்ந்திலாதான்.

ஞாலத்தவர் - உலகத்தவர். கன்மத்தை - ஊழ்வினைப்பயனை. கடப்பார் யார் உளரே - கடக்கவல்லவர் யாவர் இருக்கின்றனர்? பொன் மொய்த்த தோளான் - வீரலட்சுமி தங்கிய தோள்களை யுடையவனுன இராமன். (பொன் அழகும் ஆம்). மயல் கொண்டு- மயங்கி. புலன்கள் வேறு ஆய் - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் வேறுபட்டு; (என்றது புலனுகர்ச்சியில் வெறுப்புப் பிறந்தமை கூறியவாறு). தனை ஒன்றும் உணர்ந்திலாதான் - தன்னைத்தான் சிறிதும் உணராதவனுய். நல் மத்தம் நாகம் - நல்ல ஊமத்தம் பூவையும் பாம்பையும். நம்பனேபோல் - சிவபெருமானைப்போல. உன்மத்தன் ஆனுன் - பித்தம்பிடித்தவனுனுன். (85)

**574.** போதாயின போதுன தண்புன
லாடல் பொய்யோ
சீதாபவ ழக்கொடி யன்னவட்
டேடி யென்கண்
நீதாரு கிற்றிலை யேனெருப்
பாதி யென்னுக்
கோதாவரி யைச்சினங் கொண்டனன்
கொண்ட லொப்பான்.

'போது ஆயின போது உன தண்புனல்
ஆடல் பொய்யோ?
சீதா, பவழக்கொடி அன்னவள்
தேடி என்கண்
நீ தா! தருகிற்றிலேயேல் நெருப்பு
ஆதி!' என்னுக்
கோதாவரியைச் சினம் கொண்டனன்
கொண்டல் ஒப்பான்.

கொண்டல் ஒப்பான் - மேகம்போன்றவனுன இராமன். போது ஆயின போது - உரியவேளை வந்தபொழுது (ஞாயிறுதோன்றிய போது என்றுமாம்: "போதும் சென்றது குடபால்" அயோத்தியா. வனம்புகு படலம், 19). பவழக்கொடி சீதா - பவழக்கொடிபோன்ற வளான சீதை. உன தண்புனல் ஆடல் பொய்யோ - உன்னுடைய குளிர்ந்த நீரில் குளித்தது உண்மையல்லவா? அன்னவள் தேடி என்கண் நீ தா - அவளைத் தேடிக்கொணர்ந்து நீ என்னிடம் தருவாயாக. தருகிற்றிலேயேல் - (நீ) கொடாமற்போனுல். நெருப்பு ஆதி என்னு - (எனது அம்பினுல்) வெந்து விடுவாய் என்று. கோதாவரியைச் சினந்தனன் என்க.

உரியகாலத்தில் கோதாவரியாற்றின் புனிதநீரில் தீர்த்தமாடு வது புண்ணியம் என்பது பொய்த்துப் போகலாமா? என்ற கருத்து முதலடியில் அமைந்திருத்தல் கருதத்தகும். (86)

**575.** குன்றேகடி தோடினை கோமளக்
கொம்ப ரன்ன
என்றேவியைக் காட்டுதி காட்டலை
யென்னி னிவ்வம்
பொன்றேயமை யும்முனு டைக்குல
முள்ள வெல்லாம்
இன்றேபிள வாவெரி யாக்கரி
யாக்க வென்றுன்.

'குன்றே! கடிது ஓடினை கோமளக்கொம்பர் அன்ன
என் தேவியைக் காட்டுதி! காட்டலை என்னின், இவ் அம்பு
ஒன்றே அமையும், உன் உடைக் குலம் உள்ள எல்லாம்
இன்றே பிளவா, எரியாக் கரி ஆக்க' என்றுன்.

குன்றே, ஓடினை, (ஆதலால்) கோமளக்கொம்பர் அன்ன என் தேவியைக் கடிது (தேடிக்) காட்டுதி: காட்டலை என்னின், இன்றே

உன் உடைக்குலம் உள்ள எல்லாம் பிளவா எரியாக் கரியாக்க இவ் அம்பு ஒன்றே அமையும் என்ருன் எனக் கூட்டுக.

குன்றே - மலேயே! ஓடினே - (நீ) நீண்டோடி யிருத்தலாலே. கோமளக் கொம்பர் அன்ன என் தேவியை - அழகிய பூங்கொம்பு போன்ற என் மனேவியாகிய சீதையை. கடிது காட்டுதி - விரைந்து (தேடிக்) காண்பிப்பாயாக. காட்டலே என்னின் - காண்பியாமற் போவாயாளுல். இன்றே - இப்பொழுதே. உன் உடைக்குலம் உள்ள எல்லாம் - (உன்னேயும்) உன்னுடைய இனங்களாகவுள்ள மலேகள் எல்லாவற்றையும். பிளவா - பிளந்து. எரியா - எரித்து. கரிஆக்க - கரியாகச் செய்வதற்கு. இவ் அம்பு ஒன்றே அமையும் - (எனது கையிலுள்ள) இந்த அம்பு ஒன்றே போதும். என்ருன் - என்று (இராமன்) கூறினன். (87)

576. பொன்மானுரு வாற்சில மாயை
புணர்க்க வன்ருே
என்மானகல் வுற்றன ளிப்பொழு
தென்க ணென்ளு
நன்மான்களே நோக்கிநுந் நாமமு
மாய்ப்பெ னின்றே
வின்மான்கொலே வாளியி னென்று
வெகுண்டு நின்ருன்.

'பொன்மான் உருவால் சில மாயை புணர்க்க அன்ருே,
என்மான் அகல்வுற்றனள் இப்பொழுது என்கண்?' என்ளு,
நல் மான்களே நோக்கி, 'நும் நாமமும் மாய்ப்பென் இன்றே,
வில் மான் கொலே வாளியின்' என்று வெகுண்டு நின்ருன்.

பொன் மான் உருவால் - (மாரீசன் என்பவன்) பொன்மயமான மானின் வடிவத்தைக்கொண்டு. சில மாயை புணர்க்க அன்ருே - சில வஞ்சனேகளேச் செய்ததனுலல்லவோ. என் மான் - எனது மான் போன்ற மனேவியாகிய சீதை. இப்பொழுது என்கண் அகல் வுற்றனள் என்ளு - இப்பொழுது என்னிடத்திலிருந்து பிரிந் துள்ளாள் என்று நினேத்து. நல்மான்களே நோக்கி - (வஞ்சக மில்லாத) நல்ல மான்களே யெல்லாம் பார்த்து. இன்றே - இப் பொழுதே. வில்மான் கொலேவாளியின் நும் நாமமும் மாய்ப்பென் - (என்) வில்லுக்கு ஒத்த கொலேத் தொழிலேச் செய்கிற அம்பினுல் உம்முடைய (மான் என்ற) பெயரையும் (உலகத்தில் இல்லேயாம்படி) அழிப்பேன். என்று வெகுண்டு நின்ருன் - என்று சொல்லிக் கோபித்து நின்றனன் (இராமன்). (88)

**577.** வேறுற்ற மனத்தவ னின்ன விளம்பி நோவ
ஆறுற்ற நெஞ்சிற் றனதாருயி ராய தம்பி
கூறுற்ற சொல்லென் றுளகோதறு நன்மருந்தால்
தேறுற் றுயிர்பெற் றியல்வுஞ்சில தேற லுற்ருன்.

வேறு உற்ற மனத்தவன் இன்ன விளம்பி நோவ,
ஆறு உற்ற நெஞ்சில் தனது ஆர் உயிர் ஆய தம்பி
கூறுற்ற சொல் என்று உள கோது அறு நல் மருந்தால்
தேறுற்று, உயிர்பெற்று, இயல்வும் சில தேறல் உற்ருன்.

வேறுற்ற மனத்தவன் - (இப்படி) வேறுபட்ட மனத்தையுடைய வனுன இராமன். இன்ன விளம்பி நோவ - இதுபோன்ற சொற்களைச் சொல்லி வருந்த. ஆறுற்ற நெஞ்சில் தனது ஆருயிர் ஆய தம்பி - கோபம் ஆறின மனமுடைய தன் அருமையான உயிர் போன்ற தம்பியாகிய இலக்குமணன். கூறுற்ற சொல் என்று உள - சொன்ன சொல்லென்கிற. கோது அறு நல் மருந்தால் - குற்றமற்ற நல்ல மருந்திஞலே. உயிர்பெற்று – உயிர் மீள்ப்பெற்றவனுய். தேறுற்று - தெளிவடைந்து. சில இயல்வும் - (சீதையைப்) பெறுகைக்குத் தக்க உபாயம் சிலவற்றையும். இயல்வு - உபாயம்: “ஏனமாய் நின்ருர்க் கியல்வு.” (திவ். இயற். 1, 12). தேறலுற்ருன் - ஆராயலாஞன். (89)

இதன்பின் 25 என்னும் குறியீடுள்ள சுவடியில் ஓர் அதிகப் பாடல் காணப்படுகிறது:—

577 (1) தவந்தந்த நெஞ்சிற் றனதாருயிர்த் தம்பி யோடும்
நவந்தந்த குன்றுங் கொடுங்கானமு நாடி யேகிக்
கவந்தன்றன தாவி கவர்ந்தொருக் காலு நீங்காச்
சிவந்தந்து மெய்ம்மைச் சபரிக்குத் தீர்ந்து வந்தான்.

**578.** வந்தானிளை யானெடும் வானுயர் தேரின் வைகும்
நந்தாவிளக் கின்வரு மெங்குல நாதன் வாழும்
சந்தார்தடங் குன்றினிற் றன்னுயிர் காத லோனும்
செந்தாமரைக் கண்ணனு நட்டனர் தேவ ருய்ய.

வந்தான் இளையானெடும் வான் உயர் தேரின் வைகும்
நந்தாவிளக்கின் வரும் எம் குலநாதன் வாழும்
சந்து ஆர் தடம் குன்றினில்; தன் உயிர் காதலோனும்
செந்தாமரைக் கண்ணனும் நட்டனர் தேவர் உய்ய.

வான் உயர் தேரின் வைகும் நந்தாவிளக்கின் வரும் எம் குல நாதன் வாழும் சந்து ஆர் தடம்குன்றினில் இளையானெடும் வந்தான், தன் உயிர் காதலோனும் செந்தாமரைக் கண்ணனும் தேவர் உய்ய நட்டனர் என முடிக்க.

வான் உயர் தேரின் வைகும் - வானமண்டலத்திலே எழுந்த ஒற்றையுருளைத் தேரின்மேலே தங்குவதான. நந்தாவிளக்கின் வரும் - கெடாத விளக்கான சூரியனிடத்திலிருந்து பிறந்த. எம் குலநாதன் வாழும் - எங்களுடைய கூட்டத்தரசனான சுக்கிரீவன் இருப்பதான. சந்துஆர் தடம் குன்றினில் இளையானெடும் வந்தான் - சந்தனமரங்கள் வளர்ந்த பெரிய (ருசியமூக) மலையின் கண் தன் தம்பி இலக்குமனனுடன் வந்து சேர்ந்தானாக. தன் உயிர் காதலோனும் - தன் உயிர் அழியாதபடி காக்க விரும்பிய சுக்கிரீவனும். செந்தாமரைக் கண்ணனும் - சிவந்த தாமரை போன்ற கண்களையுடையவனான இராமனும். தேவர் உய்ய - தேவர்கள் துன்பம் நீங்கும்படி. நட்டனர் - நட்புக்கொள்ளுவாராயினர். (90)

579. உண்டாயது முற்றது முற்று
முணர்த்தி யுள்ளம்
புண்டானென நோயுற விம்முறு
கின்ற போழ்தின்
எண்டானுழந் திட்டநு மேந்திழை
யாங்கள் காட்டக்
கண்டானுயர் போதமும் வேதமுங்
காண்கி லாதான்.

உண்டாயதும் உற்றதும் முற்றும் உணர்த்தி, உள்ளம்
புண்தான் என நோய் உற விம்முறுகின்றபோழ்தின்,
எண்தான் உழந்து இட்ட நும் ஏந்து இழை யாங்கள் காட்டக்
கண்டான், உயர் போதமும் வேதமும் காண்கிலாதான்.

உயர் போதமும் - சிறந்த ஞானத்தாலும். வேதமும் - வேத நூல்களாலும். காண்கிலாதான் - காணமுடியாதவனாகிய இராமபிரான். உண்டாயதும் - (தனக்கு) நேர்ந்த துன்பத்தையும். உற்றதும் - (அது நீங்கும் பொருட்டுத் தான் அங்கு) வந்ததையும். முற்றும் உணர்த்தி - முழுவதும் சொல்லி. உள்ளம் புண்தான் என நோயுற - மனம் புண்பட்டதே யென்னும்படி பிணி மிகுதியாக. விம்முறுகின்ற போழ்தின் - துயரப்படுகிறபோது. எண்தான் உழந்து இட்ட - (நீர்) மனம் வருந்திப் போகட்ட. (இங்கு அநுமன் பிராட்டியைச் சுட்டிக் கூறுகின்றான்). நும் ஏந்து இழை யாங்கள் காட்டக்

கண்டான் - அழகைத் தம்மிடத்தே கொண்ட உம்முடைய அணி கலன்களை நாங்கள் காட்டப் பார்த்தான். (91)

580. தணிகின்றநஞ் சொற்ருெடர்
தன்மைய தன்று தன்மை
துணிகொண்டிலங் குஞ்சுடர்
வேலவன் தூய நின்கண்
அணிகண்டுழி யேயமு
தந்தெளித் தாலு மாருப்
பிணிகண்டது பண்டதுண்
டாயினும் பேர்ப்ப தன்ருல்.

தணிகின்ற நம் சொல் தொடர்
தன்மையது அன்று தன்மை,
துணிகொண்டு இலங்கும் சுடர்
வேலவன், தூய நின்கண்
அணிகண்டுழியே, அமுதம்
தெளித்தாலும் ஆருப்
பிணிகண்டது : பண்டு அது உண்டு
ஆயினும், பேர்ப்பது அன்ருல்.

துணிகொண்டு இலங்கும் சுடர் வேலவன் தூய நின்கண் அணி கண்டுழி, அமுதம் தெளித்தாலும் ஆருப் பிணி (அவனிடம்) கண்டது. அது பண்டு உண்டு ஆயினும் (இப்பொழுது) பேர்ப்பது அன்று. (அதன்) தன்மை தணிகின்ற நம் சொல் தொடர் தன்மையது அன்று என முடிவு செய்க.

துணிகொண்டு இலங்கும் சுடர் வேலவன் - (பகைவருடலைப்) பிளந்து விளங்குகிற ஒளி பொருந்திய வேற்படையையுடையவனுன இராமபிரான் : வேல் என்பது இங்கு ஆயுதப் பொதுவாய் நின்றதெனக்கொள்க. தூய நின்கண் அணி கண்டுழி - தூய்மையையுடைய உன்னிடத்தி லிருந்தனவாகிய அணிகலன்களைப் பார்த்தவுடனே. அமுதம் தெளித்தாலும் ஆருப் பிணி கண்டது - சாவா மருந்தாகிய அமுதத்தைத் தெளித்தாலும் தணியாத நோய் (இராமனிடம்) வெளிப்பட்டுத் தோன்றியது. அது - அப்பிணி. பண்டு உண்டு ஆயினும் - முன்னமேயே (நீ அவனைப் பிரிந்ததிலிருந்தே) இருந்து வந்தது ஆனுலும். பேர்ப்பது அன்று - (இப்பொழுது) போக்க முடியாததாய் இருந்தது. தன்மை - (அதன்) நிலைமை. தணிகின்ற நம் சொல் தொடர் தன்மையது அன்று - ஆற்றல் குன்றிய நம்

முடைய சொற்களால் பேசப்படும் தன்மையதாயில்லை. ஏகாரம், அசை.

கலன்காண்படலத்து இராமன்நிலைமையைக் கூறும் செய்யுட்கள் இங்கே நினையத்தகும். (92)

**581.** அயர்வுற்றரி திற்றெளிந்
தம்மலைக் கப்பு றத்தோர்
உயர்பொற்கிரி யுற்றுளன்
வாலியென் றோங்க லொப்பான்
துயர்வுற்றவி ராவணன்
வாலிடைப் பண்டு தூங்க
மயர்வுற்றபொ ருப்பொடு
மால்கட ருவி வந்தான்.

அயர்வு உற்று, அரிதில் தெளிந்து, அம்மலைக்கு அப்புறத்து ஓர் உயர் பொன்கிரி உற்றுளன் வாலி என்று ஓங்கல் ஒப்பான், துயர்வு உற்று அ இராவணன் வாலிடைப் பண்டு தூங்க, மயர்வு உற்ற பொருப்பொடு மால் கடல் தாவி வந்தான்.

இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர். அயர்வு உற்று - (இராமன் அவ்வாறுயுள்ள மனப் பிணியினுற்) சோர்வடைந்து. அரிதில் தெளிந்து - (பின்) அருமையாகத் தேறி. அம்மலைக்கு அப்புறத்து ஓர் உயர் பொன்கிரி உற்று உளன் - அந்த ருசியமூகமலைக்கு அப்பால் ஓர் உயர்ந்த அழகிய மலையாகிய கிட்கிந்தையி லுள்ளவனும். வாலி யென்று ஓங்கல் ஒப்பான் - வாலி யென்ற பெயர் சொல்லப்பட்டு மலையை ஒத்திருப்பவனும். அ இராவணன் பண்டு வாலிடை துயர்வு உற்றுத் தூங்க - அந்த இராவணன் முன்னொரு நாள் (தன்) வாலினிற் கட்டுண்டு துன்பமடைந்து தொங்கும்படி. மயர்வு உற்ற பொருப்பொடு மால்கடல் தாவி வந்தான் - மயக்கமடைந்த மலைகளோடு மயங்கிய கடல்களையும் தாண்டிவந்தவனும்.

வாலியின் ஆற்றலைத் தாங்கமாட்டாது மலைகளும் கடல்களும் மயங்கின என்றவாறு. (93)

**582.** ஆயானையொ ரம்பினி லாருயிர் வாங்கி யன்பிற்
றூயான்வயி னவ்வர சீந்தவன் சுற்று சேனை
மேயான்வரு வாயென விட்டனன் மேவு காறும்
ஏயானிருந் தானிடை திங்க ளிரண்டி ரண்டும்.

ஆயானை ஓர் அம்பினில் ஆர் உயிர் வாங்கி அன்பில்
தூயான்வயின் அவ் அரசு ஈந்தவன், 'சுற்று சேனை
மேயான் வருவாய்!' என விட்டனன், மேவுகாறும்
ஏயான், இருந்தான் இடை திங்கள் இரண்டு இரண்டும்.

ஆயானை ஓர் அம்பினில் ஆர் உயிர் வாங்கி - ஆகிய அவனை (வாலியை) ஒரே அம்பினால் அருமையான உயிரைக் கவர்ந்து (கொன்று). அன்பில் தூயான்வயின் அவ் அரசு ஈந்தவன் - தூய்மையான அன்புடையவனான சுக்கிரீவனுக்கு அந்த (வாலியினது) இராச்சியத்தைக் கொடுத்தவனாகிய இராமன். சுற்று சேனைமேயான் வருவாய் என விட்டனன் - சூழ்ந்த படைகளுடன் பொருந்தியவனாய் வருவாய் என்று சொல்லி அனுப்பிவிட்டு. ஏயான் மேவுகாறும் - ஏவப்பட்டவனாகிய அச் சுக்கிரீவன் திரும்பிவருமளவும். திங்கள் இரண்டு இரண்டும் இடை இருந்தான் - நான்கு மாத காலம் அந்த (ருசியமூக) மலையில் தங்கியிருந்தான். அரசீந்தவன் (ஆகிய இராமன்) இருந்தான் என்க. (94)

**583.** பிற்கூடிய சேனைபெ
ருந்திசை பின்ன வாக
விற்கூடுநு தற்றிரு
நின்னிடை மேவ வேவித்
தெற்கூடுரு வக்கடி
தேவின னென்னை யென்னா
முற்கூடின கூறினன்
காலமொர் மூன்றும் வல்லான்.

'பின் கூடிய சேனை பெரும் திசை பின்ன ஆக,
வில் கூடும் நுதல் திரு! நின்இடை மேவ ஏவித்
தெற்கு ஊடுருவக் கடிது ஏவினன் என்னை' என்னா,
முன் கூடின கூறினன், காலம் ஓர் மூன்றும் வல்லான்.

வில் கூடும் நுதல் திரு - வில்லையொத்த நெற்றியையுடைய இலக்குமியே! (இது பிராட்டியை அநுமன் தன்முகமாக்கிக் கொள்ளும் விளிக்கூற்று). பின்கூடிய சேனை - (நான்கு மாதங்களுக்குப்) பின்னர் (சுக்கிரீவன் ஏவலால்) வந்து சேர்ந்த சேனைகளை. பெரும் திசை பின்ன ஆக நின்னிடை மேவ ஏவி - பெரிய திக்குகள் (தமக்குப்) பின்னுள்ளனவாம்படி (நான்கு திக்குகளுக்கு அப்பாலும் சென்று) நீ இருக்குமிடத்தைத் தேடிக் காணும்படி அனுப்பிவிட்டு. கடிது தெற்கு ஊடுருவ என்னை ஏவினன் என்னா - விரைவில் தென்திசையைத் துளைத்துச் செல்லும்படி என்னை அனுப்பினான் என்று.

காலம் ஓர் மூன்றும் வல்லான் - இறப்பு எதிர்வு நிகழ்வு என்னும் மூன்றுகாலத்து நிகழ்ச்சிகளையும் தெரியவல்லவனுன அநுமன். முன் கூடின கூறினன் - முன்னுல் நடந்த வரலாறுகளை யெல்லாம் சொல்லி முடித்தான். (95)

### இராமனது துயர்நினைந்த பிராட்டிநிலை

**584.** அன்பின னிவ்வுரை யுணர்த்த வாரியன்
★ வன்பொறை நெஞ்சினன் வருத்த முன்னுவாள்
என்புற வுருகின ளிரங்கி யேங்கினள்
துன்பமு முவகையுஞ் சுமந்த வுள்ளத்தாள்.

அன்பினன் இவ்வுரை உணர்த்த, ஆரியன்
வன்பொறை நெஞ்சினன், வருத்தம் உன்னுவாள்,
என்பு உற உருகினள், இரங்கி ஏங்கினள்,
துன்பமும் உவகையும் சுமந்த உள்ளத்தாள்.

அன்பினன் இவ்வுரை உணர்த்த, துன்பமும் உவகையும் சுமந்த உள்ளத்தாள், ஆரியன், வன்பொறை நெஞ்சினன் வருத்தம் உன்னு வாள், என்பு உற உருகினள், இரங்கி ஏங்கினள் என்க.

அன்பினன் - (இராமனிடம்) பேரன்பு பூண்ட அநுமன். இவ் வுரை உணர்த்த - (இராமனுடைய பிரிவுத்துன்பமும், அதனை நீக்க அவன் சுக்கிரீவனைத் தோழமைகொண்டதும், தேடவிட்டதும் ஆகிய) இந்த வார்த்தைகளைத் தெரிவிக்க. துன்பமும் உவகையும் சுமந்த உள்ளத்தாள் - துயரத்தையும் மகிழ்ச்சியையும் மிகுதியாகத் தாங்கிய மனத்தையுடையவளான சீதை. ஆரியன் - பூசிக்கத் தக்கவனும். வன்பொறை நெஞ்சினன் - மிக்க பொறுமையைக் கொண்ட மனத்தை யுடையவனுமாகிய இராமனது. வருத்தம் உன்னுவாள் - துயரத்தை நினைத்து. என்புஉற உருகினள் - எலும்பு மிகக் கரைந் தவளாய். இரங்கி - வருந்தி. ஏங்கினள் - ஏக்கமுற்ருள். (96)

### சீதை அநுமனைக் கடல்கடந்தவாறு வினவுதல்

**585.** நையுறு சிந்தைய ணயன வாரியின்
தொய்யல்வெஞ் சுழியிடைச் சுரிக்கு மேனியள்
ஐயநீ யளப்பரு மளக்கர் நீந்தினை
எய்திய தெப்பரி சியம்பு வாயென்ருள்.

நையுறு சிந்தையள், நயன வாரியின்
தொய்யல் வெம் சுழியிடைச் சுரிக்கும் மேனியள்,
'ஐய! நீ அளப்பு அரும் அளக்கர் நீந்தினை
எய்தியது எப்பரிசு? இயம்புவாய்!' என்றாள்.

நையுறுசிந்தையள் - துன்ப மிகுதியால் நைந்துபோன மனத்தையுடையவளும்] நயனவாரியின் தொய்யல் வெம் சுழியிடைச் சுரிக்கும் மேனியள் - கண்களிலிருந்து பொழிகின்ற நீரின் பெருக்கு வெப்பம் மிகுந்த திருவுந்திச் சுழியில் ஓடி வற்றி மறைகின்ற திருமேனியையுடையவளும் ஆகிய பிராட்டி. (தொய்யல் - பெருக்கு. "மையலுற் றிழிமத மழைய ருமையாற், றொய்யலைக் கடந்தில சூழி யானையே" எழுச்சிப் படலம், 20; அனந்தராமையர் பதிப்பு, கலித்தொகை, பக்கம், 327. அடிக் குறிப்பிலும் காண்க). குமார சம்பவத்தில், (சர்க்கம் 4, சுலோகம் 24,) பார்வதி தவம் செய்யும் போது உண்டான கண்ணீர்த் துளிகள் உந்திச் சுழியில் சுழித்து மறைந்தன என்று கூறியுள்ளமையும் ஈண்டு அறியத்தகும். அளப்பு அரும் அளக்கர் - அளத்தற்கு அரிய கடலை. நீந்தினை எய்தியது எப்பரிசு - நீந்தி (இங்கு) அடைந்தது எப்படி? (97)

அநுமன் கடல்கடந்தவாறு கூறுதல்

**586.** சுருங்கிடை யுன்னொரு துணைவன் றூயதாள்
ஒருங்கிடை யுணர்வினோ ரோய்வின் மாயையின்
பெருங்கடல் கடந்தனர் பெயரும் பெற்றிபோல்
கருங்கடல் கடந்தனென் காலி னாலென்றான்.

'சுருங்கு இடை! உன் ஒரு துணைவன் தூயதாள்
ஒருங்கு இடை உணர்வினோர் ஓய்வு இல் மாயையின்
பெருங்கடல் கடந்தனர் பெயரும் பெற்றிபோல்,
கருங்கடல் கடந்தனென் காலினால்' என்றான்.

சுருங்கு இடை - நுணுகிய இடையினையுடையவளே! இது அநுமன் பிராட்டியைத் தன்முகமாக்கிக்கொள்ளும் விளிக்கூற்று. உன் ஒரு துணைவன் தூய தாள் இடை ஒருங்கு உணர்வினோர் - உன்னுடைய ஒப்பற்ற நாயகனாகிய இராமபிரானது தூய்மையையுடைய திருவடிகளினிடத்திலே ஒடுங்கும் அறிவையுடைய உத்தமர்கள். ஓய்வு இல் மாயையின் பெரும் கடல் கடந்தனர் பெயரும் பெற்றி போல் - ஒழிதலில்லாத மாயையாகிய பெரிய கடலை (அதில் தோய்தலில்லாமலே) தாண்டிச் செல்லும் தன்மைபோல. காலினால் - காற்றின்மூலம் (வான்வழியாக). கருங்கடல் கடந்தனென் - கரிய இக்கடலை (அதில் தோயாதவாறு) தாவிவந்தேன்; என்றான். (98)

### பிராட்டி அநுமனை மீண்டும் வினவுதல்

**587.** இத்துணைச் சிறியதோ ரேணில் யாக்கையை
தத்தினை கடலது தவத்தி னுயதோ
சித்தியி னியன்றதோ செப்பு வாயென்ருள்
முத்தினு நிலவினு முறுவன் முற்றினுள்.

'இத்துணைச் சிறியது ஓர் ஏண் இல் யாக்கையை
தத்தினை கடல், அது தவத்தின் ஆயதோ?
சித்தியின் இயன்றதோ? செப்புவாய்!' என்ருள்,
முத்தினும் நிலவினும் முறுவல் முற்றினுள்.

முத்தினும் நிலவினும் முறுவல் முற்றினுள் - முத்தொளியினும் நிலவொளியினும் பல்லொளி மிகுந்துள்ளவளான பிராட்டி. இத் துணைச் சிறியது ஓர் ஏண் இல் யாக்கையை - இவ்வளவு சிறிய வலியற்ற உடலையுடையவனுகிய நீ. கடல் தத்தினை - கடலைத் தாண்டினுய். அது தவத்தின் ஆயதோ - அச்செயல் (நீ செய்த) தவத்தால் விளைந்த பயனே? சித்தியின் இயன்றதோ - (அல்லது, அணிமா முதலிய எண்வகைச்) சித்திகளால் விளைந்ததோ?

எண்வகைச் சித்திகள்: அணிமா, மகிமா, கரிமா, லகிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், ஈசத்வம், வசித்வம் என்பன. (99)

### பிராட்டிக்கு அநுமன் தன் பேருருக் காட்டுதல்

**588.** சுட்டின னின்றனன் ரெழுத கையினன்
விட்டுயர் தோளினன் விசும்பின் மேக்குயர்
எட்டரு நெடுமுக டெய்தி நீளுமேல்
முட்டுமென் றுருவொடும் வளர்ந்த மூர்த்தியான்.

சுட்டினன்; நின்றனன்; தொழுத கையினன்,
விட்டு உயர் தோளினன், விசும்பின் மேக்கு உயர்
எட்டஅரும் நெடுமுகடு எய்தி, நீளுமேல்
முட்டும் என்று, உருவொடும் வளர்ந்த மூர்த்தியான்.

தொழுத கையினன் சுட்டினன்: விட்டு உயர் தோளினன், விசும்பின் மேக்கு உயர் எட்ட அரும் நெடு முகடு எய்தி, நீளுமேல் முட்டும் என்று, உருவொடும் வளர்ந்த மூர்த்தியான் நின்றனன் என்க.

(பிராட்டி அவ்வாறு வினவியதும் அநுமன்) தொழுத கையினன் - கூப்பிய கைகளையுடையவனாய். சுட்டினன் - (தன் பேருருவத்தைப் பிராட்டிக்குக் காட்ட) நினைத்தான். சுட்டுதல் - நினைத்தல்; 'சுட்டினும் பனிக்கும்' (மலைபடுகடாம், 398.) விட்டு உயர் தோளினன் - (அப்படி நினைத்த அளவில்) தன்னிலைவிட்டு ஓங்கிய தோளையுடையவனாய். விசும்பின் மேக்கு உயர் எட்ட அரும் நெடு முகடு எய்தி - விண்ணின் மேலுயர்ந்துள்ள (பிறர் யார்க்கும்) எட்டுதற்கரிய உயர்ந்த உச்சியை அடைந்து. நீளுமேல் முட்டும் என்று - (அதற்கு மேலும்) நீளின் இடிக்கும் என்று. உருவொடும் வளைந்த மூர்த்தியான் நின்றனன் - தன் பேருருவத்தோடும் வளைந்த தலையையுடையவனாய் நின்றான்; மூர்த்தம் - தலை.

அண்டமுகடளவும் வளர்ந்தவன், மேலும் வளர்ந்தால் முட்டும் என்று நிமிராமல் உடலையும் தலையையும் வளைத்து நின்றான் என்றவாறு. (100)

## அநுமன் காட்டிய பேருருவின் நிலை 589-594

**589.** செவ்வழிப் பெருமையென்
றுரைக்குஞ் செம்மைதான்
வெவ்வழிப் பூதமோ
ரைந்தின் மேலதோ
அவ்வழித் தன்றெனி
னநுமன் பாலதோ
எவ்வழித் தாகுமென்
றெண்ணு மீட்டதே.

செவ்வழிப் பெருமை என்று உரைக்கும் செம்மைதான்,
வெவ்வழிப் பூதம் ஓர் ஐந்தின் மேலதோ?
அவ்வழித்து அன்று எனின், அநுமன்பாலதோ?
எவ்வழித்து ஆகும்? என்று எண்ணும் ஈட்டதே.

செவ்வழிப் பெருமை என்று உரைக்கும் செம்மை தான் - நன்னெறி வாயிலாக எய்தும் பெருமை என்று சொல்லப்படுகிற சீரிய தன்மை. வெவ்வழிப் பூதம் ஓர் ஐந்தின்மேலதோ - (இறைவனுடைய) விருப்பின்வழி காரியப்படுகின்ற ஐந்து பூதங்களின் பாலதோ? அவ்வழித்து அன்று எனின் - அந்தப் பூதங்களிடத்திலுள்ளதன்று என்றால். அநுமன்பாலதோ - அநுமனிடத்திலேதான் உள்ளதோ? எவ்வழித்து ஆகும் என்று எண்ணும் ஈட்டது - (இவற்றுள்) எதனிடத்திலுள்ளதாம் என்று நினைக்கும்படியான பெருமையை யுடையது.

அநுமன் தன் இச்சையாற் கொண்ட வளர்ச்சியின்பெருமை, இறைவன் இச்சையாற் காரியப்படுகிற பஞ்சபூதங்களுக்கும் இல்லையென்று சொல்லும்படியாயிருந்தது என்றவாறு. 'நிலையிற் றிரியா தடங்கியான் தோற்றம், மலையினும் மாணப் பெரிது.' (திருக்குறள், 124) என்பது ஈண்டு நினைக்கத்தகும். (101)

**590.** ஒத்துயர் கனகவான் கிரியி னோங்கிய
மெய்த்துறு மரந்தொறு மின்மி னிக்குலம்
மொய்த்துள வாமென முன்னும் பின்னரும்
தொத்தின தாரகை மயிரின் சுற்றெலாம்.

ஒத்து உயர் கனக வான் கிரியின், ஓங்கிய,
மெய்த் துறு மரம் தொறும் மின்மினிக்குலம்
மொய்த்து உளவாம் என, முன்னும் பின்னரும்,
தொத்தின தாரகை, மயிரின் சுற்று எலாம்.

கனக வான் கிரியின் ஒத்து உயர் மெய் முன்னும் பின்னரும் துறு மயிரின் சுற்று எலாம், (அக்) கிரியின் ஓங்கிய மரம் தொறும் மின் மினிக் குலம் மொய்த்துளவாம் என, தாரகை தொத்தின என இயைக்க. கிரியின் என்பது மீண்டும் கூட்டப்பட்டது.

கனக வான் கிரியின் - பொன்மயமான பெரிய மேருமலைபோல. ஒத்து உயர் மெய் - ஒருதன்மைத்தாக ஓங்கிய (அநுமன்) உடலின் கண். முன்னும் பின்னரும் – முன்பக்கமும் பின்பக்கமும். துறு மயிரின் சுற்று எலாம் - செறிந்துள்ள மயிரின் சூழலெங்கும். (அக்) கிரியின் ஓங்கிய மரம் தொறும் மின்மினிக்குலம் மொய்த்துளவாம் என - (அந்த) மேருமலைமேல் ஓங்கி வளர்ந்துள்ள மரங்கள்தோறும் மின்மினிப் பூச்சியின் கூட்டம் மொய்த்துள்ளன போல. தாரகை தொத்தின - நட்சத்திரக்கூட்டம் பற்றிக் கொண்டிருந்தன.

மேருமலை அநுமனது உடலுக்கும், அம்மலையில் அடர்ந்துள்ள மரங்கள் அநுமன் உடலிலுள்ள மயிர்களுக்கும், அம்மரங்களில் மொய்க்கிற மின்மினிக் குலம் அவன் மயிர்களில் ஒட்டுகிற நட்சத்திரக்கூட்டத்துக்கும் உவமையாகக்கொள்க. (102)

**591.** கண்டல மறிவொடு கடந்த காட்சிய
விண்டல மிருபுடை விளங்கு மெய்ம்மைய
குண்டல மிரண்டுமக் கோளின் மாச்சுடர்
மண்டல மிரண்டொடு மாறு கொண்டவே.

கண் தலம் அறிவொடு கடந்த காட்சிய,
விண் தலம் இருபுடை விளங்கும் மெய்ம்மைய,
குண்டலம் இரண்டும், அக் கோளில், மாச்சுடர்
மண்டலம் இரண்டொடும் மாறு கொண்டவே.

கண் தலம் அறிவொடு கடந்த காட்சிய - கண்களினிடத்தையும் அறிவையும் மேலிட்டுச் சென்ற தோற்றத்தை யுடையனவும். விண் தலம் - ஆகாயத்தினிடத்தில். இருபுடை விளங்கும் மெய்ம்மைய - (அநுமன் காதுகளில்) இரண்டு பக்கங்களிலும் விளங்குகின்ற தன்மையனவுமான. குண்டலம் இரண்டும் - இரண்டு குண்டலங்களும். அக் கோளில் - (ஆகாயத்திலுள்ள) ஒன்பது கிரகங்களுள். மாச்சுடர் மண்டலம் இரண்டொடும் - மிக்க ஒளியையுடைய சூரிய மண்டலம் சந்திர மண்டலம் என்கிற இரண்டோடும். மாறு கொண்ட - பகைகொண்டன. (மிக்கு விளங்கின என்றவாறு.) (103)

**592.** ஏணில தொருகுரங் கீதென் றெண்ணலா
ஆணியை யநுமனை யமைய நோக்குவான்
சேணுயர் பெருமையோர் திறத்த தன்றெனு
நாணுறு முலகெலா மளந்த நாயகன்.

ஏண் இலது ஒரு குரங்கு ஈது என்று எண்ணலா
ஆணியை, அநுமனை, அமைய நோக்குவான்,
'சேண் உயர் பெருமை ஓர் திறத்தது அன்று!' எனு,
நாண் உறும், உலகு எலாம் அளந்த நாயகன்.

உலகு எலாம் அளந்த நாயகன் - (திரிவிக்கிரமாவதாரஞ் செய்து தன் திருவடிகளால்) எல்லா வுலகங்களையும் அளவிட்ட யாவர்க்கும் தலைவனாய திருமால். ஈது ஏண் இலது ஒரு குரங்கு என்று எண்ணலா ஆணியை அநுமனை - இது வலிமை யில்லாத ஒரு குரங்கு என்று நினைக்கக் கூடாத அச்சாணி போல் உள்ளவனான அநுமனை. அமைய நோக்குவான் - நன்றாகப் பார்த்தவனாய். சேண் உயர் பெருமை ஓர் திறத்தது அன்று எனு - மிகவும் உயர்ந்த பெருந்தன்மை ஓரிடத்திலேயே உள்ளதன்று என்று எண்ணி. நாண் உறும் - நாணுபவனானான்.

அநுமன் கொண்ட பெருவடிவம் திருமால் திரிவிக்கிரமாவதார காலத்திற் கொண்ட பெருவடிவத்தை ஒத்திருந்தது என்றவாறு. (104)

**593.** எண்டிசை மருங்கினு முலகம் யாவினும்
தண்டலி லுயிரெலாந் தன்னை நோக்கின
அண்டமென் றதினுறை யமரர் யாரையும்
கண்டனன் ருனுந்தன் கமலக் கண்களால்.

எண் திசை மருங்கினும், உலகம் யாவினும்,
தண்டல்இல் உயிர்எலாம் தன்னை நோக்கின ;
அண்டம் என்றதின் உறை அமரர் யாரையும்
கண்டனன், தானும் தன் கமலக் கண்களால்.

எண் திசை மருங்கினும் உலகம் யாவினும் - எட்டுத் திக்குகளினிடத்திலும் எல்லாவுலகங்களிலும் உள்ள. தண்டல் இல் உயிர் எலாம் தன்னை நோக்கின - தவருத உயிர்கள் யாவும் (அநுமனுகிய) அவனைப் பார்த்தன ; தண்டல் - தவறுகை : 'தண்டலில்தவஞ் செய்வோர்' (மாரீசன்வதைப் படலம், 162). எல்லா உயிர்களும் பார்த்தன என்றபடி. தானும் தன் கமலக் கண்களால் அண்டம் என்றதின் உறை அமரர் யாரையும் கண்டனன் - அவ்வநுமனும் தாமரைமலர்போன்ற தன் கண்களால் மேலுலகத்தில் வாழ்கிற தேவர்கள் எல்லாரையும் பார்த்தான். (105)

**594.** எழுந்துயர் நெடுந்தகை யிரண்டு பாதமும்
அழுந்துற வழுத்தலி னிலங்கை யாழ்கடல்
விழுந்தது நிலமிசை விரிந்த வெண்டிரை
தழைந்தன புரண்டன மீனந் தாமெலாம்.

எழுந்து உயர் நெடுந்தகை இரண்டு பாதமும்
அழுந்துற அழுத்தலின், இலங்கை ஆழ்கடல்
விழுந்தது ; நிலமிசை விரிந்த வெண் திரை
தழைந்தன; புரண்டன மீனம் தாம் எலாம்.

எழுந்து உயர் நெடுந்தகை - மேலே ஓங்கி வளர்ந்த பெருமைக் குணத்தையுடைய அநுமன். இரண்டு பாதமும் அழுந்துற அழுத்தலின் - (தன்) இரண்டு கால்களையும் (நிலத்தில்) அழுந்தும்படி அழுத்தியதனுல். இலங்கை ஆழ்கடல் விழுந்தது - இலங்கைத்தீவு ஆழமாகிய கடல் நீருக்குள் அழுந்தியது. நிலமிசை விரிந்த வெண்திரை தழைந்தன - அந்தப் பூமி மேலே விரிந்துள்ள வெள்ளை அலைகள் மிகப் பெருகலாயின. மீனம் எலாம் புரண்டன - (அவ்வலைகளின் மேல்) மீன்களெல்லாம் புரளலாயின. தாம், அசை. (106)

## பேருருவை ஒடுக்கிக் கொள்ளும்படி அநுமனைப் பிராட்டி வேண்டுதல் 595–596

**595.** வஞ்சியம் மருங்குலம் மறுவில் கற்பினள்
கஞ்சமும் புரைவன கழலுங் கண்டிலாள்
துஞ்சின ரரக்கரென் றுவக்குஞ் சூழ்ச்சியாள்
அஞ்சினெ னிவ்வுரு வடக்கு வாயென்றாள்.

வஞ்சி அம் மருங்குல் அம் மறு இல் கற்பினள்
கஞ்சமும் புரைவன கழலும் கண்டிலாள்;
துஞ்சினர் அரக்கர் என்று உவக்கும் சூழ்ச்சியாள்,
'அஞ்சினென்! இவ்வுரு அடக்குவாய்!' என்றாள்.

வஞ்சி அம்மருங்குல் அம்மறு இல் கற்பினள் - வஞ்சிக்கொடி போன்ற அழகிய இடையையும் குற்றமில்லாத கற்பினையுமுடைய அச் சீதை. கஞ்சமும் புரைவன கழலும் கண்டிலாள் - (அநும னுடைய) தாமரை மலர் போன்ற திருவடிகளைக்கூட (முழுதும்) காண முடியாதவளாய். அரக்கர் துஞ்சினர் என்று உவக்கும் சூழ்ச்சியாள் – (உறுதியாக) அரக்கரெல்லாம் இறப்பார்கள் என்று மகிழ்ச்சியோடு எண்ணியவளாய். (அநுமனை நோக்கி) அஞ்சினென் - நான் அஞ்சுகின்றேன். இவ் உரு அடக்குவாய் என்றாள் - இந்தப் பெருவடிவத்தை ஒடுக்கிக்கொள்வாயாக! என்று கூறினாள். (107)

**596.** முழுவது மிவ்வுருக் காண முற்றிய
குழுவின துலகினிக் குறுகு வாயென்றாள்
எழுவினு மெழிலிலங் கிராமன் றோள்களைத்
தழுவின ளாமெனத் தளிர்க்குஞ் சிந்தையாள்.

'முழுவதும் இவ்வுருக் காண முற்றிய
குழுவினது உலகு: இனிக் குறுகுவாய்!' என்றாள்;
எழுவினும் எழில் இலங்கு இராமன் தோள்களைத்
தழுவினள் ஆம்எனத் தளிர்க்கும் சிந்தையாள்.

எழுவினும் எழில் இலங்கு இராமன் தோள்களைத் தழுவினள் ஆம் எனத் தளிர்க்கும் சிந்தையாள் - எழுக்கம்பத்தைவிடவும் அழகு விளங்குகின்ற இராமனுடைய தோள்களைச் சேர்ந்தவள்போலக் களிக்கின்ற மனத்தையுடையவளான பிராட்டி. இவ் வுருக் காண உலகு முழுவதும் முற்றிய குழுவினது - (உன்னுடைய) இந்தப் பெருவடிவத்தைக் காண்பதற்கு உலகம் முழுவதும் ஒருங்கு சூழ்ந்து

திரண்டனவாய்விடும். இனிக் குறுகுவாய் என்றுள் - இப்பொழுதே ஒடுங்குவாயாக என்று கூறினுள். (108)

அநுமன் பேருருவொடுங்குதல்

597. ஆண்டகை யநுமனு மருள தாமெனு
மீண்டனன் விசும்பெனும் பதத்தை மீச்செல்வான்
காண்டலுக் குரியதோ ருருவு காட்டினுன்
தூண்டரு விளக்கனு ளினைய சொல்லினுள்.

ஆண்தகை அநுமனும், 'அருளதாம்!' எனு
மீண்டனன் விசும்பு எனும் பதத்தை மீச்செல்வான்,
காண்டலுக்கு உரியது ஓர் உருவு காட்டினுன்;
தூண்டு அரு விளக்கு அனுள் இனைய சொல்லினுள்.

விசும்பு எனும் பதத்தை மீச்செல்வான் - ஆகாயம் என்னும் இடத்தையும் கடந்து மேலே வளர்ந்து செல்பவனுகிய. ஆண்தகை அநுமனும் - ஆண்மையிற் சிறந்தவனுகிய அநுமனும். அருளதாம் எனு - (உனது) அருளின்வண்ணமே ஆகட்டும் என்று சொல்லி. மீண்டனன் - (வளர்வதினின்று) ஒடுங்கினவனுய் (- சுருங்கி). காண்டலுக்கு உரியது ஓர் உருவு காட்டினுன் - (பிராட்டி) பார்ப்பதற்குத் தக்கதான (சிறிய) ஒரு வடிவைக் காட்டினுன். தூண்டு அரு விளக்கு அனுள் இனைய சொல்லினுள் - தூண்டுதல் வேண்டாத விளக்குப் போன்றவளான சீதையும் இவ்வார்த்தைகளைச் சொல்லுபவளானுள். (மேல் வரும் ஐந்து கவிகளும் சீதையின் கூற்று). (109)

பிராட்டி அநுமனைப் பாராட்டுதல் 598–602

598. இடந்தா யுலகை மலையோடு
★ மிடித்தாய் விசும்பை யிவைசுமக்கும்
படந்தா ழரவை யொருகரத்தாற்
பறித்தா யெனினும் பயனின்றுல்
நடந்தா யிடையே யென்றுலு
நாணு நினக்கு நளிகடலைக்
கடந்தா யென்று லென்னுகுங்
காற்று மன்ன கடுமையாய்.

இடந்தாய் உலகை மலேயோடும்,
இடித்தாய் விசும்பை, இவை சுமக்கும்
படந்தாழ் அரவை ஒருகரத்தால்
பறித்தாய் எனினும் பயன் இன்ருல்:
நடந்தாய் இடையே என்ருலும்
நாணும் நினக்கு: நளி கடலேக்
கடந்தாய் என்ருல் என்ஞகும்?
காற்றும் அன்ன கடுமையாய்!

காற்று அன்ன கடுமையாய் - காற்றைப்போன்ற வேகமுள்ளவனே! காற்றும் என்பதில் ஆம், அசை. மலேயோடும் உலகை இடந்தாய் - மலேகளோடும் உலகத்தைப் பெயர்த்தெடுத்தாய். விசும்பை இடித்தாய் - ஆகாயத்தை (ப்பொடியாக) இடித்தாய். இவை சுமக்கும் படம் தாழ் அரவை ஒரு கரத்தால் பறித்தாய் எனினும் - மலேகள், உலகம், விசும்பு ஆகிய இவற்றைச் சுமக்கும் படங்களேயுடைய பாம்பாகிய ஆதிசேடனே ஒரு கையாலே இழுத்தெறிந்தாய் என்று சொன்ஞலும். பயன் இன்று - (உனது திறமைக்குப்) பயன் ஆவதோர் சிறப்பாகாது. இடையே நடந்தாய் என்ருலும் நினக்கு நாணும் - (இக்கடலின்) இடத்திலே நடந்து வந்தாய் என்ருலும் அது உனக்கு வெட்கத்தையே தருவதாயிருக்கும். (அப்படியிருக்க) நளி கடலேக் கடந்தாய் என்ருல் என் ஆகும் - (இந்தப்) பெரிய கடலேத் தாவி வந்தாய் என்று சொன்ஞல் (உன் திறத்து) என்ன மேம்பாடு உண்டாகும்? (110)

**599.** ஆழி நெடுங்கை யாண்டகைத
னருளும் புகழு மழிவின்றி
ஊழி பலவு நிலேநிறுத்தற்
கொருவ னீயே யுளேயாஞய்
பாழி நெடுந்தோள் வீராநின்
பெருமைக் கேற்பப் பகையிலங்கை
ஏழு கடற்கு மப்புறத்த
தாகா திருந்த திழிவன்ருே.

ஆழி நெடும் கை ஆண்தகைதன்
அருளும் புகழும் அழிவு இன்றி
ஊழி பலவும் நிலேநிறுத்தற்கு
ஒருவன் நீயே உளேயாஞய்

பாழி நெடும் தோள் வீரா! நின்
பெருமைக்கு ஏற்பப் பகை இலங்கை
ஏழு கடற்கும் அப்புறத்தது
ஆகாது இருந்தது இழிவுஅன்றோ?

பாழி நெடும் தோள் வீரா - வலிய பெரிய தோள்களையுடைய வீரனே! ஆழி நெடும் கை ஆண் தகை - ஆணையாகிய சக்கரத்தைப் பெரிய கையிலே தரித்த ஆண்மை மிக்கவனாகிய இராமபிரான். நீ ஒருவனே உளையானாய் - நீ ஒருத்தனே உள்ளவனானாய். நின் பெருமைக்கு ஏற்பப் பகை இலங்கை ஏழு கடற்கும் அப்புறத்தது ஆகாது இருந்தது இழிவு அன்றோ - உனது பெருமைக்குத் தக்கபடி பகைவர்களுடைய ஊராகிய இந்த இலங்கை ஏழு கடல்களுக்கும் அப்பாலுள்ளதாகாமல் (தூக்கியெறியப்படாமல் இங்கேயே) இருந்தது (உனது பெருமைக்கு) ஒரு குறையல்லவா?

'நின் பெருமைக்கு இலங்கை இவ்வளவு நேரம் புறவாழியில் வீழ்ந்து அழிந்திருக்கவேண்டும்' என்று பிராட்டி அநுமனைப் பாராட்டினாள் என்க.

இலங்கை இந்த ஒரு கடலுக்கு அப்பால் உள்ளதல்லாமல் ஏழு கடல்களுக்கும் அப்பால் இருந்தாலும் உனக்குப் பொருளாகாது என்று உரை கூறுவாருமுளர். (111)

600. அறிவு மீதே யுருவீதே
யாற்ற லீதே யைம்புலத்தின்
செறிவு மீதே செயலீதே
தேற்ற மீதே தேற்றத்தின்
நெறியு மீதே நினைவீதே
நீதி யீதே நினக்கென்றால்
வெறிய ரன்றோ குணங்களால்
விரிஞ்சன் முதலா மேலானோர்.

அறிவும் ஈதே, உரு ஈதே,
ஆற்றல் ஈதே, ஐம்புலத்தின்
செறிவும் ஈதே, செயல் ஈதே,
தேற்றம் ஈதே, தேற்றத்தின்
நெறியும் ஈதே, நினைவு ஈதே,
நீதி ஈதே, நினக்கு என்றால்,
வெறியர் அன்றோ? குணங்களால்,
விரிஞ்சன் முதலாம் மேலானோர்.

நினக்கு அறிவும் உருவும் ஆற்றலும் முதலாயின ஈதே என்றால் விரிஞ்சன் முதலாம் மேலானோர் குணங்களால் வெறியர் அன்றோ எனக் கூட்டிப் பொருள் காண்க.

உருவும் - வடிவும். ஐம்புலத்தின் செறிவும் - ஐம்புலங்களின் உணர்ச்சி மிகுதியும் : (ஐம்புலன்களையும் அடக்கித் தன்வழி நடத்தும் ஆற்றலும் எனலுமாம்). தேற்றமும் - தெளிந்த துணிவும். தேற்றத்தின் நெறியும் - அத்தெளிவை வழியாகக் கொண்டு பின் விளைவதாகிய பயனும் : (அத்தெளிவின் துணிவினால் அமைந்த செய்கை அல்லது நடத்தை எனலுமாம்). விரிஞ்சன் முதலாம் மேலானோர் - பிரமன் முதலான தேவர்கள். குணங்களால் வெறியர் அன்றோ - (உன்னை நோக்கக்) குணங்கள் இல்லாதவர்கள் அல்லவா ?

ஈதே என்பன யாவும் அநுமனிடம் தான் நேரிற் கண்டவைகளை அகத்தடக்கிச் சுட்டிக் கூறிய வியப்புரைகள். இங்ஙனம் வியந்த பிராட்டி, பிரமன் முதலான தேவர்களின் குணங்களையும் அளந்து உன்னை நோக்க அவர்கள் குணங்களே இல்லாதவர்கள் எனலாம் என்கின்றாள். (112)

**601.** மின்னே ரெயிற்று வல்லரக்கர்
வீக்க நோக்கி வீரற்குப்
பின்னே பிறந்தா னல்லதோர்
துணையி லாத பிழைநோக்கி
உன்னா நின்றே யுடைகின்றே
னொழிந்தே னைய முயிருயிர்த்தேன்
என்னே நிருத ரென்னாவர்
நீயே யெங்கோன் றுணையானால்.

மின் நேர் எயிற்று வல் அரக்கர்
வீக்கம் நோக்கி, வீரற்குப்
பின்னே பிறந்தான் அல்லது ஓர்
துணை இலாத பிழை நோக்கி,
உன்னா நின்றே உடைகின்றேன் ;
ஒழிந்தேன் ஐயம் ; உயிர் உயிர்த்தேன் ;
என்னே ! நிருதர் என் ஆவர் ?
நீயே எங்கோன் துணை ஆனால்.

மின் நேர் எயிற்று வல் அரக்கர் வீக்கம் நோக்கி - மின்னலை ஒத்த பற்களையுடைய வலிய அரக்கர்களது பெருக்கத்தையும் பார்த்து. வீரற்கு - வீரனாகிய இராமபிரானுக்கு. பின்னே பிறந்

தான் அல்லது - தம்பியாகிய இலக்குமணனை யல்லாமல். ஓர் துணை இலாத பிழை நோக்கி - ஒரு துணையும் இல்லாத குறையினையும் பார்த்து. உன்னுநின்றே - ஆலோசித்தவளாய். உடைகின்றேன் - வருந்துகின்ற நான். ஐயம் ஒழிந்தேன் - (இப்பொழுது) சந்தேகம் நீங்கினேன். உயிர் உயிர்த்தேன் - மூச்சுவிட்டேன் : (உயிர் பெற்றேன் எனலுமாம்). என்னே - இது எத்தகைய வாய்ப்பு! நீயே எம்கோன் துணையானால் நிருதர் என் ஆவர் - (இத்துணைப் பெருமை வாய்ந்த) நீயே எனது நாயகனான இராமனுக்கு உற்ற துணைவனாக அமைந்த பொழுது (இந்த) அரக்கர்கள் எவ்வளவினராவர்? அரக்கர்கள் அழிவது திண்ணம் என்றவாறு. (113)

602. மாண்டே னெனினும் பழுதன்றே
யின்றே மாயச் சிறைநின்று
மீண்டே னென்னை யொறுத்தாரைக்
குலங்க ளோடும் வேரறுத்தேன்
பூண்டே னெங்கோன் பொலங்கழலும்
புகழே யன்றிப் புன்பழியும்
தீண்டே னென்று மனமகிழ்ந்தாள்
திருவின் முகத்துத் திருவானாள்.

'மாண்டேன் எனினும் பழுது அன்றே;
இன்றே மாயச் சிறைநின்றும்
மீண்டேன்; என்னை ஒறுத்தாரைக்
குலங்களோடும் வேர் அறுத்தேன்;
பூண்டேன் எம் கோன் பொலம் கழலும்;
புகழே அன்றிப் புன்பழியும்
தீண்டேன்!' என்று மனம் மகிழ்ந்தாள்,
திருவின் முகத்துத் திரு ஆனாள்.

மாண்டேன் எனினும் பழுதன்றே - யான் இனி இறந்தாலும் குற்றமில்லை. (ஏனெனில்) மாயச் சிறை நின்றும் இன்றே மீண்டேன் - வஞ்சனை நிறைந்த (இந்தச்) சிறையிலிருந்தும் இப்பொழுதே மீண்டவளானேன். என்னை ஒறுத்தாரைக் குலங்களோடும் வேர் அறுத்தேன் - என்னை வருத்திய அரக்கர்களை இனத்துடனே வேரோடும் அழியச்செய்தவளானேன். எம் கோன் பொலம் கழலும் பூண்டேன் - என்னுடைய நாயகனாகிய இராம பிரானின் பொன்னடிகளையும் அடைந்தவளானேன். புகழே அன்றிப் புன்பழியும் தீண்டேன் - இசையுடையவளாவேனேயன்றிச் சிறிதும் வசையுடையவ ளாகமாட்டேன். என்று மனம் மகிழ்ந்தாள் -

என்று (பிராட்டி) உள்ளம் களிப்படைந்தவளாய். திருவின் முகத்துத் திரு ஆனாள் - (அந்நிலையில்) திருமகள் முன்பு திருமகளாய் விளங்கினாள்; அதாவது, திருவுக்கும் திருவாகிய செல்வியானாள் என்றவாறு. முகத்து - முன்பு; இஃது இப்பொருளில் வழங்கல், "ஈன்ருள்முகத்தேயும்" என்னும் திருக்குறளால் அறியலாம். இனி, 'திருவின் முகத்துத் திருவன்னாள்' என்று பாடம் கொண்டு, 'லட்சுமி முகத்திலுள்ள லட்சுமீகரத்தை (அழகை) ஒப்பான பிராட்டி' என்றும், 'அழகையும் ஒளியையும் உடைய முகத்தையுடைய இலக்குமியை யொத்தவளாகிய சீதை' என்றும் பொருள் கொண்டாரும் உண்டு. ஆசிரியர், தம் ஊராகிய திருவழுந்தூர்ப்பதிகத்தே, இறைவனைத் 'திருவுக்கும் திருவாகிய செல்வா' (திவ். பெரிய திருமொழி 7. 7. 1) என்ற திருமங்கைமன்னன் வாய்மொழி தம் உள்ளத்தே ஊறிக் கிடக்கவும், சிறையிருந்த செல்வியைப் பேச எழுந்த இங்கு அக் கருத்தே அமையத் 'திருவின் முகத்துத் திருவானாள்' என்று பேசி மகிழ்வாராயினர். ஆதலின் 'ஆனாள்' என்ற பாடமும் அதற்கு உரைத்த பொருளும் சிறப்புடையவாதல் காண்க.

திருமகள் தன்னிலையிலிருந்து தீராத உலகத் துன்பத்தைப் பிராட்டி தன்னிலையில் அவ்வுலகத் துன்பத்தினும் மிக்க துன்பத்தை அநுபவித்துச் சிறையிருந்த செல்வியாய்த் திகழ்ந்து தீர்த்துவைத்து அத்திருமகளுக்கு இல்லாத பெருமையையும் புகழையும் தனதாக்கிக் கொண்டதால் திருவின் முகத்துத் திருவானாள் என்க. தான் இவ்வுலகிற் பிறந்து செய்யவந்த காரியம் முடிந்துவிட்டதாகப் பிராட்டி கருதி மனமகிழ்ந்து, 'மாண்டேன் எனினும் பழுதன்றே' என்று கூறினமையும், அவ்விடம் நோக்கி ஆசிரியர் 'திருவின் முகத்துத் திருவானாள்' என்று போற்றிய நயமும் கருதத்தகும்.

மீண்டேன், வேரறுத்தேன், பூண்டேன் என்ற வினைகள் துணிவுபற்றி வந்த காலவழுவமைதி. (114)

## அநுமன் பணிமொழி

**603.** அண்ணற் பெரியோ னடிவணங்கி
யறிய வுரைப்பா னருந்ததியே
வண்ணக் கடலி னிடைக்கிடந்த
மணலிற் பலரால் வானரத்தின்
எண்ணற் கரிய படைத்தலைவ
ரிராமற் கடியார் யானவர்தம்
பண்ணைக் கொருவ னெனப்போந்தே
னேவக் கடவ பணிசெய்வேன்.

அண்ணல் பெரியோன், அடி வணங்கி,
அறிய உரைப்பான்: 'அருந்ததியே!
வண்ணக் கடலின் இடைக் கிடந்த
மணலின் பலரால், வானரத்தின்
எண்ணற்கு அரிய படைத்தலைவர்,
இராமற்கு அடியார்: யான் அவர்தம்
பண்ணைக்கு ஒருவன் எனப் போந்தேன் :
ஏவக்கடவ பணிசெய்வேன்.'

அண்ணல் பெரியோன் அடிவணங்கி, அறிய உரைப்பான் : "அருந்ததியே! இராமற்கு அடியார், எண்ணற்கு அரிய வானரத்தின் படைத் தலைவர், வண்ணக்கடலின் இடைக் கிடந்த மணலிற் பலர் : யான் அவர்தம் பண்ணைக்கு ஒருவன் எனப் போந்தேன் : ஏவக்கடவ பணி செய்வேன் !'' எனக் கொள்க.

அண்ணல் பெரியோன் - மிகவும் பெருமைவாய்ந்தவனான அநுமன். அடிவணங்கி - (பிராட்டியின் புகழுரையைக் கேட்டு அவள்) திருவடிகளை வணங்கி. அறிய உரைப்பான் - தெரியச் சொல்வானாயினன். அருந்ததியே - அருந்ததிக்கு ஒப்பான பிராட்டியே ! இராமற்கு அடியார் - இராமனுக்கு அடியவர்களாகிய. எண்ணற்கு அரிய வானரத்தின் படைத்தலைவர் - எண்ணுதற்கு அருமையான (எண்ணிலடங்காத) குரங்குக் கூட்டங்களின் படைத்தலைவர்கள். வண்ணக்கடலின் இடைக்கிடந்த மணலிற் பலர் - அழகிய கடலினிடத்திலுள்ள மணலினும் பலராவர். யான் அவர்தம் பண்ணைக்கு ஒருவன் எனப் போந்தேன் - நான் அந்த இராமற்கு அடியாராகிய வானரக்கூட்டத்தில் ஒருவனாக இங்கு வந்தேன். ஏவக்கடவ பணி செய்வேன் - (அப்படைத் தலைவர்கள்) ஏவத்தக்க ஊழியங்கள் செய்கிறவன். (115)

### வானரர் பெருமையினை அநுமன் கூறுதல்

604. வெள்ள மெழுப துளதன்றே
வீரன் சேனை யிவ்வேலைப்
பள்ள மொருகைந் நீரள்ளிக்
குடிக்கப் போதும் பான்மையதோ
கள்ள வரக்கர் கடியிலங்கை
காணு தொழிந்த தாலன்றே
உள்ள துணையு முளதாவ
தறிந்த பின்னு முளதாமோ.

வெள்ளம் எழுபது உளது அன்றோ வீரன் சேனை ! இவ்வேலைப்
பள்ளம் ஒருகை நீர் அள்ளிக் குடிக்கப் போதும் பான்மையதோ ?
கள்ள அரக்கர் கடி இலங்கை காணாது ஒழிந்ததால் அன்றோ
உள்ள துணையும் உளதாவது; அறிந்த பின்னும் உளது ஆமோ?

வீரன் சேனை எழுபது வெள்ளம் உளது - வீரனாகிய இராமனுடைய படை எழுபதுவெள்ளம் என்னும் தொகையளவு உள்ளது. அன்று, ஓ: அசை. இவ்வேலைப்பள்ளம் நீர் ஒருகை அள்ளிக் குடிக்கப் போதும் பான்மையதோ - (அத்தொகையையுடைய சேனைக்கு) இக்கடலின் ஆழமான நீர் முழுதும் (தலைக்கு) ஒரு கை எடுத்துக் குடிப்பதற்காயினும் போதுந்தன்மையையுடையதோ? (போதாது என்றபடி). கள்ள அரக்கர் கடி இலங்கை - வஞ்சனை பொருந்திய அரக்கர்களுக்குப் பாதுகாவலாகவுள்ள இலங்கை; (அரக்கரது காவல் மிகுந்த இலங்கை என்றுமாம்). காணாது ஒழிந்ததால் உள்ளதுணையும் உளது ஆவது - (இன்னவிடத்திலுள்ளதென்று) காணப்படாமலொழிந்ததால் இந்நாள்மட்டும் அழியாமல் இருந்து வருகிறது. அன்று, ஓ: அசை. அறிந்தபின்னும் உளது ஆமோ - (இவ்விடத்திலுள்ளதென்று) தெரிந்த பின்பும் அழியாமலிருப்பதாமோ ? (ஆகாது, இனி அழிந்துவிடும் என்றபடி.) உளதாமோ என்பதற்கு நிலைத்திருக்குமோ எனலுமாம். (116)

### வானரப்படைத் தலைவர் பெயர்

**605.** வாலி யிளவ லவன்மைந்தன்
வசந்தன் றுமிந்தன் வயக்குமுதன்
நீல னிடபன் குமுதாக்கன்
பனசன் சரப னெடுஞ்சாம்பன்
கால னனைய துன்மருடன்
கனகன் கவயன் கவயாக்கன்
ஞால மறியு நளன்சங்கன்
விந்தன் றுவிந்தன் மதனென்போன்.

வாலி இளவல், அவன்மைந்தன்
வசந்தன், துமிந்தன், வயக் குமுதன்,
நீலன், இடபன், குமுதாக்கன்,
பனசன், சரபன், நெடும் சாம்பன்,

காலன் அனைய துன்மருடன்,
　　கனகன், கவயன், கவயாக்கன்,
ஞாலம் அறியும் நளன், சங்கன்,
　　விந்தன், துவிந்தன், மதன் என்போன்.

இப்பாடலும் அடுத்த பாடலும் வானரப் படைத் தலைவர் சிலரின் பெயரும் பெருமையும் கூறுவன.

வாலி இளவல் - வாலியின் தம்பியாகிய சுக்கிரீவன். அவன் மைந்தன் - அவ்வாலியின் மகனான அங்கதன். வயக்குமுதன் - வெற்றியையுடைய குமுதன். சாம்பன் என்பது சாம்பவான் என்பதன் விகாரம். சாம்பவான் பிரமனது கொட்டாவியினின்று அவனம்சமாய்க் கரடிவடிவமாய்ப் பிறந்தவன். இவன் மிகவும் மூத்தவனாதலால் நெடுஞ்சாம்பன் எனப்பட்டான். ஞாலம் அறியும் நளன் - உலகியலை நன்கறிந்த நளன்: உலகத்தாரால் நன்கு அறியப்பட்ட நளன் என்றுமாம். (117)

### வானரப்படைத் தலைவர் பெருமை

**606.** தம்பன் றூமத் தனிப்பேரோன்
　　றதியின் வதனன் சதவலியென்
றிம்ப ருலகோ டெவ்வுலகு
　　மெடுக்கு மிடுக்க ரிராமன்கை
அம்பி னுதவும் படைத்தலைவ
　　ரவரை நோக்கி னிவ்வரக்கர்
வம்பின் முலையா யுறையிடவும்
　　போதார் கணக்கு வரம்புண்டோ.

தம்பன், தூமத் தனிப்பேரோன்,
　　ததியின்வதனன், சதவலி என்று
இம்பர் உலகோடு எவ்வுலகும்
　　எடுக்கும் மிடுக்கர், இராமன்கை
அம்பின் உதவும் படைத்தலைவர்,
　　அவரை நோக்கின் இவ் அரக்கர்,
வம்பின் முலையாய்! உறையிடவும்
　　போதார்: கணக்கு வரம்பு உண்டோ?

தம்பன் - தம்பனும். தூமத் தனிப்பேரோன் - தூமன் என்ற ஒப்பற்ற பெயரையுடையவனும். ததியின்வதனன் - ததிமுகனும். சதவலி என்று - சதவலியும் ஆகிய : என்று என்னும் எண்ணிடைச்

சொல்லைப் பிரித்துப் படைத்தலைவர்பெயர்தோறும் ஒட்டுக. இம்பர் உலகோடு எவ்வுலகும் எடுக்கும் மிடுக்கர் - இவ்வுலகோடு எல்லா வுலகங்களையும் பெயர்த்துத் தூக்கவல்ல வலிமையையுடையராய். இராமன் கை அம்பின் உதவும் படைத்தலைவர் - இராமபிரானுடைய கையிலுள்ள அம்பைப் போல(ப் பல்கித் திரண்டு விரைந்து குறி தப்பாமற் சென்று) உற்றவிடத்துதவும் படைத்தலைவர்களின். கணக்கு வரம்பு உண்டோ - அளவுக்கு எல்லையுண்டோ? (இல்லை என்றபடி). வம்பின் முலையாய் - கச்சணிந்த முலையினையுடைய தாயே! அவரை நோக்கின் இவ் அரக்கர் உறை இடவும் போதார் - அவ் வானரவீரர்களைப் பார்த்தால் இவ்வரக்கர்களெல்லாம் (அவர்கள் தொகைக்கு) உறையிடவும் போதமாட்டார்கள். இங்கு 521-ஆம் பாடலும் நோக்கத்தகும். (118)

இதன்பின், 11 என்னும் குறியீடுள்ள சுவடியில், பின்வருமாறு ஒரு செய்யுள் காணப்படுகிறது :—

606 (a) சென்றே னடியே னுனதின்னல்
சிறிதே யுணர்த்து மத்துணையும்
அன்றே யரக்கர் வருக்கமுட
னடைவ தல்லா தரியின்கை
மன்றே கமழுந் தொடையன்றே
நிருதர் குழுவு மானகரு
மென்றே யிறைஞ்சிப் பின்னருமொன்
றிசைப்பா னுணர்ந்தா னீறில்லான்.

உருக்காட்டு படலம் முற்றிற்று.

# 5. சூடாமணிப் படலம்

சூடாமணி என்னும் வடமொழித்தொடர் தலை (யிலணியும்) மணி என்று பொருள்படும். சூடா - சூடை; தலை. மணி - (பொன்னில்) மணிபதித்துச் செய்யப்பட்டதொரு அணிகலன்; இது மகளிர் தலையில் அணிந்துகொள்ளும் அணிகலன்களுள் சிறந்ததொன்று. சூடாமணி யென்னும் தொடர், டகரத்துக்கு ளகரம் போலியாக வரும் வடமொழி யிலக்கண முறைப்படி சூளாமணி யெனவும் வழங்கப்படுவதுண்டு. இங்குச் சுட்டப்படும் சூடாமணி பிராட்டியின் தலையணியாகும். இது தேவர்க்கு அரசனான இந்திரனால், சனகமன்னனுக்கு அவன் செய்த வேள்வி முடிவில் பரிசாக வழங்கப்பட்டது; பிராட்டியின் திருமணக் காலத்தில் சனகனால் பிராட்டிக்கு மணப்பரிசாக வழங்கப்பட்டது; தசரத சக்கரவர்த்தியாலும் சக்கரவர்த்தித் திருமகனாலும் நன்கு மதிக்கப்பெற்றது. அநுமனால் இலங்கையிற் காணப்பட்டவள், தானே என்று இராமபிரான் தெளியும்படி காட்டுதற்பொருட்டு, அவன் நன்கறிந்ததான தன் தலையணியைப் பிராட்டி அநுமனிடம் அடையாளமாகக் கொடுத்தசெய்தி பேசுதலின் இப்படலம் சூடா மணிப்படலம் என வழங்கப்பட்டது.

இப்படலத்தின் முதற்செய்யுள், பிராட்டி தனிமைகண்ட அநுமன், அவளை அப்பொழுதே இராமனிடம் கொண்டு சேர்க்க நினைந்தமை பேசுவது. 608 முதல் 615 முடியவுள்ள செய்யுட்கள், இராமன் பக்கல் யான் உன்னைக் கொண்டு சேர்த்து, நீங்கள் இருவீரும் சேர்ந்த நிலையில் வழிபடுமாறு எனக்கு அநுமதிதர வேண்டுமென்று பிராட்டிபால் அநுமன் வேண்டிய செய்தி கூறுவன. இவற்றால் ஒருவர் செய்யக் கருதும் பணி எத்துணை சிறந்ததாயினும், செய்பவர் எத்துணை பெரியராயினும், யார் பொருட்டு அப்பணி செய்யப்படுகிறதோ அவர் இசைவும் அதற்கு இன்றியமையாது வேண்டும் என்ற உலகியல்நெறியும், அடிமைப்பணியும் வேண்டிப் பெறத்தக்கது என்னும் அறிவனூல் நெறியும் புலனாகுதல் காண்க.

அநுமன் வேண்டுகோட்கு இசையாத பிராட்டி கூற்றாய் அமைந்த 617 முதல் 632 முடியவுள்ள பாடல்கள், கற்புடைய மகளிர், தமக்கு உதவிபுரியும் ஆடவர் எத்துணைப் பெரியராயினும், பொறி யடக்கமுடையவராயினும், தம்மையுற்ற பேரிடுக்கணீக்கிக் காக்கும் நிலையினும், அவர்தம் மெய் தீண்டற்கு இசையார் என்பதேயன்றி, அஃறிணைப் பொருளிலும் ஆணெனப்படுபவை தம் மெய்தீண்டவும் பொறார் என்னும் ஒழுக்க நெறியை விளக்குகின்றன. அன்றியும்,

அவற்ருல், பிறவிச் சிறையில் துன்புற்று, நல்லாசிரியர் அறிவிக்க இறைநிலை யுணர்ந்த உயிர், தன் முயற்சியால் உய்திபெறக் கருதாது, இறைவனருளையே நோக்கி நிற்குமென்னும் அறிவனூன் முறையும் புலனுகுதல் காணலாம்.

பின்னர் பிராட்டி மனம் உடைந்து தன் உற்ருர்களுக்குக் கூறி விடுக்கும் செய்திகள் 635-644 பாடல்களிற் காணப்படும். அவற் றைக்கேட்ட அநுமன் 645-681 செய்யுட்களில் பிராட்டியின் மனத் தைத் தேற்ற முயல்கிருன். அவற்றின்பின் வரும் செய்யுட்களில், அநுமன் தேற்றத் தேறிய பிராட்டி, அடையாளம் கூறிச் சூடாமணி யையும் இராமனிடம் சேர்க்கும்படி அநுமனிடம் கொடுத்து அனுப்பு வதோடு இப்படலம் முடிவடைகிறது.

# 5. சூடாமணிப் படலம்

## அநுமன் கருதுதல்

**607.** உண்டுதுணை யென்னலெளி
★ தோவுலகி லம்மா
புண்டரிகை போலுமிவ
ளின்னல்புரி கின்ருள்
அண்டமுத ஞயகன
தாவியனை யாளைக்
கொண்டகல்வ தேகரும
மென்றுணர்வு கொண்டான்.

'உண்டு துணை என்னல் எளிதோ உலகில்? அம்மா!
புண்டரிகைபோலும் இவள் இன்னல் புரிகின்ருள்;
அண்டமுதல் நாயகனது ஆவி அனையாளைக்
கொண்டு அகல்வதே கருமம்!' என்று உணர்வுகொண்டான்.

'இவள் புண்டரிகை; அண்ட முதல் நாயகனது ஆவி அனையாள்; இன்னல் புரிகின்ருன்; உலகில் துணை உண்டு என்னல் எளிதோ? இவளைக்கொண்டு அகல்வதே கருமம்' என்று அநுமன் உணர்வு கொண்டான்: என இயையும். இவள் புண்டரிகை - இவள் திருமகள். புண்டரிகம் - தாமரை. புண்டரிகை - தாமரைப்பூவில் இருப்பவள் (-திருமகள்). போலும், உரையசை. புண்டரிகை போலும் இவள் என்பதற்கு 'இலக்குமி போலிருக்கிற இந்தச் சீதாபிராட்டி' என்று உரை கண்டாரும் உண்டு. 'புண்டரிகை போலும் இவள்' என்பது, 'அரவின் நீங்கிய தேவனே அவன்' இவள் கமலச் செல்வியே' (396) என்று தெளிந்த அநுமன் கூற்ரு தலின், 'இவள் திருமகள்' என்று கொள்ளுதலே சிறப்புடைத்து. அண்ட முதல் நாயகனது ஆவி அனையாள் - உலகங்களுக்குச் சிறந்த தலைவ(ஞன இராமபிரா) னுடைய உயிர் போல்பவள்; இன்னல் புரி கின்ருள் - துன்பத்தை அநுபவிக்கின்ருள்; உலகில் துணை உண்டு என்னல் எளிதோ? - (இவளுடைய இன்னல்நிலைக்கு) உலகில் ஒப்பு உண்டு என்று கூறல் எளிதாமோ? (எளிதாகாது); என்றது, இவள் இன்னல் புரிகின்ருள் என்று கருதியவன், அவ் இன்னலை ஓர் உவமையால் அளவிட முயன்று, அஃது இயலாது என்று நின்றபடி. எனவே, இவள் போல் இன்னலுழந்தார் இல்லை என்றவாறு. அம்மா: வியப்பின்கண் வந்த இடைச்சொல். அன்றியும் இவ்வடிக்கு (இவளையன்றி) உலகில் (உயிர்கட்கு வேறு) துணை உண்டு என்றல்

எளிதோ? (எளிதன்று) என்றும், (இவளுக்கு இவ் இன்னற்காலத்து ஆறுதல் கூறும் உசாத்) துணையாவார் இந்நிலத்தில் உண்டு என்றல் எளிதோ (எளிதன்று) என்றும் பொருள் உரைக்கலாம். இவள் இன்னல் புரிகின்ருள் எனவே அமையுமாயினும், 'இவள் புண்டரிகை; இன்னல் புரிகின்ருள்' என்றது, உலகத்துயிர்க்கெல்லாம் இன்பமும் மகிழ்ச்சியும் செல்வமும் சேமமும் நல்கும் திருமகளாகிய இவள் இன்னலுறுதல் தகுமோ? என்றவாறு. மேலும், அண்ட முதல் நாயகனது ஆவியனையாள் என்றது, இவள் முற் கூறியவாறு, அருளால் உலகை வாழ்விப்பவள் என்பதுமட்டுமன்றி, அவ்வுலகைத் தோற்றுவித்துக் காக்கும் இறைவனுக்கும் வாழ்வளிப்பவள் என்பது உணர நின்றது. இவளைக் கொண்டு அகல்வதே கருமம் என்று உணர்வுகொண்டான் - இந்தச் சீதாபிராட்டியை அழைத்துக் கொண்டு (இவ்விலங்கையை விட்டு) நீங்குதலே (செய்யத்தக்க) செயல்: என்று அநுமன் எண்ணினன். கொண்டு அகல்வது கருமம் என்னது கொண்டு அகல்வதே கருமம் என்றமையால், கண்டு அகல்வது கருமமன்று என்பது பெறப்படும். 'கண்டுவரு மென்றிருக்கும் காகுத்தன் கவிகுலக்கோன் கொண்டுவரு மென்றிருக்கும்' (322) என்று தன்னை ஏவிய தலைவர் கருத்துணர்ந்தோனுதலின், கண்டு அகலுதலும் கொண்டு அகலுதலுமாகிய இரண்டில், இப்பிராட்டியின் இன்னல்நிலை கண்டு அகலுவது கருமமன்று; கொண்டு அகல்வதே கருமம் என்று துணிவானுயினன் என்க. 'இவளைக் கொண்டகல்வதே கருமம்' என்று அநுமன் துணிந்தமைக்கு, 'இவள் இன்னல் புரிகின்ருள்' என்பது ஏது. புண்டரிகை; அண்டமுதல் நாயகனது ஆவி அனையாள்; உண்டு துணை என்னல் உலகில் எளிதோ? என்பவை, இவள் இன்னல் புரிதல் தகாது என்பதை விளக்கிநின்றன. (1)

## பிராட்டிபால் அநுமன் வேண்டல் 608–616

**608.** கேட்டியடி யேனுரை முனிந்தருளல் கேளாய்
வீட்டியிடு மேலவனை வேறல்வினை யன்ருல்
நீட்டியினி யென்பயனி ராமனெதிர் நின்னைக்
காட்டியடி தாழ்வெனிது காண்டியிது காலம்.

கேட்டி அடியேன் உரை; முனிந்தருளல்; கேள், ஆய்!
வீட்டியிடும் மேல் அவனை; வேறல் வினை அன்ருல்;
நீட்டி இனி என் பயன்? இராமன் எதிர் நின்னைக்
காட்டி அடிதாழ்வென்; இது காண்டி இது காலம்!

ஆய்! அடியேன் உரை கேட்டி; முனிந்தருளல்; (நின்) கேள், மேல் அவனை வீட்டியிடும்; (அவனை) வேறல் வினையன்று;

இராமன் எதிர் நின்னைக் காட்டி, அடிதாழ்வென்; இது வினை; இது காலம்; இனி நீட்டிப் பயன் என்? இது காண்டி: என இயைக்க. நின் என்பது வருவிக்கப்பட்டது. அவனை என்பது மீட்டும் கூட்டப் பட்டது.

ஆய் - தாயே! அடியேன் உரை கேட்டி - தொண்டனாகிய என் சொல்லைக் கேட்பாயாக. முனிந்தருளல் - (என் வார்த்தையிற் குற்றங்கண்டு) சினங்கொள்ளற்க; என்றது, என் கருத்து நோக்கி இசைந்தருளவேண்டும் என்றவாறு. (நின்) கேள் மேல் அவனை வீட்டியிடும் - உன் நாயகன், பின் அவனை (இராவணனை)க் கொல் வான்; கேள் கணவன் என்னும் பொருளில் வருதல், சிந்தாமணி யிலும் (1052) காண்க. அநுமன் இறை திருநாமங்களையன்றிப் பிற பெயரை மொழியாதவனாதலின் இராவணனை யென்னாது 'அவனை' என்றான் என்க. அவனை வேறல் வினையன்று - இராவணனை வெல் லுதல் (அடியனான எனக்கு உரிய) செயலன்று. ஆல், அசை. இராமன் எதிர் நின்னைக் காட்டி அடி தாழ்வென் - இராமபிரான் திரு முன்பே உன்னை மீட்டுக்கொண்டுபோய்ச் சேர்த்து (நீங்கள் இரு வீரும் சேர்ந்தநிலையில்) வணங்குவேன்; இது வினை - (இவ்வாறு வணங்குதலாகிய) இதுவே (அடியனான யான்) செய்யத்தக்க செய லாகும். அவனை வேறல் வினையன்று என்றமையால் அடிதாழ்த லாகிய இது வினையென்பது பெறப்பட்டது. இது காலம் - (அடி தாழ்தற்கு) இதுவே ஏற்ற காலமாகும். இனி - யான் உன்னைக் கண்டபின்னும். நீட்டி - (காலம்) தாழ்த்தலால். பயன் என் - பயன் இல்லை. என் என்பது இன்மைகுறித்து நின்றது. இது காண்டி - இதை ஆராய்க. பிரிவினால் ஆற்றாமை மிக்க பெருமானும் பிராட் டியும் ஆகிய இருவர் நிலையினையும் அநுமன் நன்கறிந்தவனாதலின் 'இராவணவதம் உன் கணவனால் பின் நிகழும்; இப்பொழுது யான் மேற்கொள்ளத்தக்கசெயல் உன்னை எம்பிரான் திருமுன்பு சேர்த்து வணங்குதலேயாகும்; காலம் தாழ்த்தலால் பயன் இல்லை. இதை நன்கு ஆராய்ந்து, யான் உன்னை இராமன்பக்கல் மீட்டுச் சேர்த்து வணங்குதற்கு அநுமதி தருக' என்று வேண்டுவானாயினன். இதனால் பெருமானும் பிராட்டியும் ஆகிய இருவரும் கூடிய நிலையே வழிபடுதற்குரியது என்பதும் பெறப்பட்டது. (2)

609. பொன்றிணி பொலங்கொடியென்
மென்மயிர் பொருந்தித்
துன்றிய புயத்தினி
திருக்கதுயர் விட்டாய்
இன்றுயில் விளைக்கவொ
ரிமைப்பினிறை வைகும்
குன்றிடை யுனைக்கொடு
குதிப்பெனிடை கொள்ளேன்.

பொன் திணி பொலம் கொடி ! என் மென் மயிர் பொருந்தித்
துன்றிய புயத்து இனிது இருக்க : துயர் விட்டாய்,
இன்துயில் விளைக்க : ஓர் இமைப்பின், இறை வைகும்
குன்றிடை உனைக்கொடு குதிப்பென் ; இடை கொள்ளேன்.

பொன்திணி பொலம் கொடி ! (நீ) துயர்விட்டாய் ! என்புயத்து இனிது இருக்க ! இன் துயில் விளைக்க ! (யான்), உனைக்கொடு இறை வைகும் குன்றிடை இமைப்பிற் குதிப்பென் ; இடைகொள்ளேன் : என இயைக்க. பொன்திணி பொலம் கொடி - பொன்போலும் தேமல் செறிந்த பொற்கொடிபோன்றவளே ! துயர்விட்டாய் - நீ துன்பம் நீங்கியவளாய். மென்மயிர் பொருந்தித் துன்றிய என் புயத்து - மெல்லிய மயிர் அடர்ந்து பொருந்திய என் தோளில். இறைவைகும் குன்றிடை - இராமபிரான் எழுந்தருளியுள்ள மலையில். இடைகொள்ளேன் - வருந்தேன். இடைதல் - வருந்துதல். இடை, முதல்நிலை. இனி, 'இடைகொள்ளேன்' என்பதற்குத் தடைப் படேன் எனவும், இடையே தங்கேன் எனவும் பொருள் உரைக்கலும் ஆம். 'இராமனெதிர் நின்னைக் காட்டி அடிதாழ்வென்' என்ற அநுமன், தான் அதுபுரியுமாறுரைத்தமை இச்செய்யுளால் பேசப் பட்டது. (3)

**610.** அறிந்திடை யரக்கர்தொடர் வார்களுள ராமேல்
முறிந்துதிர நூறியென் மனச்சின முடிப்பேன்
நெறிந்தகுழ னின்னிலைமை கண்டுநெடி யோன்பால்
வெறுங்கைபெய ரேனொருவ ராலும்விளி யாதேன்.

அறிந்து இடை அரக்கர் தொடர்வார்கள் உளராமேல்,
முறிந்து உதிர நூறி, என் மனச் சினம் முடிப்பேன் ;
நெறிந்த குழல் : நின் நிலைமை கண்டும் நெடியோன்பால்
வெறும் கை பெயரேன், ஒருவராலும் விளியாதேன்.

அரக்கர் அறிந்து இடை தொடர்வார்கள் உளரேல் எனக் கூட்டுக. ஆம், அசை. நெறிந்த குழல் - சுருண்ட கூந்தலையுடையாய் ! அறிந்து - யான் உன்னைச் சிறைமீட்டுச்செல்லுதலைத் தெரிந்து கொண்டு ; இடை - இடையே ; அரக்கர் தொடர்வார்கள் உளரேல் - இராக்கதர் பின்பற்றி வந்து பொருவார் உளராயின்; 'அறிந்து தொடர்வார்கள் உளராமேல்' என்றமையால் அரக்கர் அறிந்து தடை செய்யாதபடி இரகசியமாகச் செல்வேன் என்பது பெறப்பட்டது ஒருவராலும் விளியாதேன் - ஒருவராலும் கொல்லப்படாத (ஆற்றலுடைய) யான் ; (ஒருவராலும் அழிய மாட்டேன் என்றபடி).

முறிந்து உதிர நூறி - அவ்வரக்கர் தோற்று (க்கடலிலே) விழும்படி அழித்து; என் மனச் சினம் முடிப்பேன் - என் மனத்துள் அடக்கி வைத்த சினத்தையும் ஒழிப்பேன். 'இற்றைப்போர்ப் பெருஞ்சீற்றம் என்னோடு முடிந்திடுக' என்று (318) அடக்கிப் போந்தவனாதலின் 'முறிந்துதிர நூறி என் மனச்சினம் முடிப்பேன்' என்றனன். வெறுங்கை பெயரேன் - ஒன்றுமில்லாத கையோடு செல்லேன். (4)

611. இலங்கையொடு மேகுதிகொ
லென்னினு மிடந்தென்
வலங்கொளொரு கைத்தலையில்
வைத்தெதிர் தடுப்பான்
விலங்கினரை நூறிவரி
வெஞ்சிலையி னோர்தம்
பொலங்கொள்கழ றாழ்குவெனி
தன்னைபொரு ளன்றால்.

'இலங்கையொடும் ஏகுதிகொல்!'
என்னினும், இடந்து என்
வலம் கொள் ஒரு கைத்தலையில்
வைத்து, எதிர் தடுப்பான்
விலங்கினரை நூறி, வரி
வெம் சிலையினோர்தம்
பொலம்கொள் கழல் தாழ்குவென்;
இது, அன்னை! பொருளன்றால்.

அன்னை! இடந்து, வைத்து, நூறி, தாழ்குவென்; இது பொருளன்று: என முடிக்க. 'இலங்கையொடும் ஏகுதி' என்னினும் - இலங்கையோடு கொண்டு செல்லுக என்று கட்டளையிட்டாலும். இடந்து - இலங்கையோடு பெயர்த்தெடுத்து; என் கை, ஒரு கை, வலம்கொள் கை: என்க. வலம் - ஆற்றல்; வெற்றியும் ஆம். கைத்தலையில் - கையில். தடுப்பான் எதிர் விலங்கினரை நூறி - என்னுடைய போக்கைத் தடுக்கும்பொருட்டு எதிரே குறுக்கிட்டவர்களை அழித்து. வரி வெம் சிலை - கட்டமைந்த கொடிய வில். சிலையினோர் என்றது வில்வீரரான இராமலக்குமணரை. பொலம் கொள் கழல் - அழகிய திருவடிகளை. இது - இலங்கையொடு உன்னையெடுத்துச் செல்லுதலாகிய இச்செயல். பொருள் அன்று - ஒரு பெரிய காரியமன்று; மிக எளிது. (5)

612. அருந்ததியு ரைத்தியழ கற்கருகு சென்றுன்
மருந்தனைய தேவிநெடு வஞ்சர்சிறை வைப்பிற்
பெருந்துயரி னேடுமொரு வீடுபெறு கில்லாள்
இருந்தனளெ னப்பகரி னென்னடிமை யென்னும்.

அருந்ததி! உரைத்தி! அழகற்கு அருகு சென்று, 'உன்
மருந்து அனைய தேவி, நெடுவஞ்சர் சிறைவைப்பில்,
பெரும் துயரினேடும் ஒரு வீடு பெறுகில்லாள்
இருந்தனள்' எனப் பகரின், என் அடிமை என் ஆம்?

அருந்ததி! அழகற்கு அருகுசென்று, 'உன் தேவி, வஞ்சர் சிறை வைப்பில், ஒரு வீடு பெறுகில்லாள், பெருந்துயரினேடும் இருந்தனள்' எனப் பகரின் என் அடிமை என் ஆம்? உரைத்தி! என இயைக்க. 'அருந்ததி! உரைத்தி' என்பதனைப் பின்வரும் செய்யுளோடும் ஒட்டுக. அருந்ததி, அண்மைவிளி. கற்பிற் சிறந்தாளாதலின் அருந்ததி என்றான். மருந்து - நோய் நீக்குவது. உன் மருந்து அனைய தேவி - உன் மன நோயைப் போக்கும் மருந்து போல்பவளாகிய தேவி. நெடு வஞ்சர் சிறை வைப்பில் – பெரிய மாயம் வல்லவர்களான அரக்கர் சிறையில். ஒரு வீடு பெறுகில்லாள் - ஓராற்றானும் விடுதலை பெருதவளாய். பகரின் - சொன்னால் என் ஆம் - யாது பயன்படும்? (6)

613. புண்டொடர்வ கற்றியபு யத்திினெடு புக்கேன்
விண்டவர்ந லத்தையும்வ லத்தையும்வி ரிப்பேன்
கொண்டுவரு கிற்றிலெ னுயிர்க்குறுதி கொண்டேன்
கண்டுவரு கிற்றிலெனெ னக்கழறு கேனே.

புண் தொடர்வு அகற்றிய புயத்திினெடு புக்கேன்,
விண்டவர் நலத்தையும் வலத்தையும் விரிப்பேன்,
'கொண்டுவருகிற்றிலென்; உயிர்க்கு உறுதிகொண்டேன்:
கண்டுவருகிற்றிலென்!' எனக் கழறுகேனே?

(அருந்ததி!) புண் தொடர்வு அகற்றிய புயத்தினெடு புக்கேன், விண்டவர் நலத்தையும் வலத்தையும் விரிப்பேன், 'உயிர்க்கு உறுதி கொண்டேன், கண்டு வருகிற்றிலென்' எனக் கழறுகேனே? (அல்லது) 'உயிர்க்கு உறுதிகொண்டேன், கொண்டு வருகிற்றிலென்' எனக் கழறுகேனே? (உரைத்தி): என இயைக்க. இடைநிலை விளக்காய் நின்ற 'உயிர்க்கு உறுதி கொண்டேன்' என்பது, முன்னும் பின்னும் இணைத்து உரைக்கப் பட்டது. 'எனக் கழறு

கேனே, என்பது, 'கொண்டு வருகிற்றிலென்' என்பதனேடும் இணைக்கப்பட்டது. புண் தொடர்வு அகற்றிய புயத்தினெடு - புண்படுதலை நீக்கிய (புண்படாத) தோள்களோடு. புக்கேன் - (இராமன் திருமுன்பு) போய்; முற்றெச்சம். விண்டவர் - பகைவரான அரக்கருடைய. நலம் - செல்வம். வலம் - ஆற்றல். விரிப்பேனுகி என முற்றெச்சமாக்குக. 'உயிர்க்கு உறுதிகொண்டேன் கண்டுவருகிற்றிலென்' எனக் கழறுகேனே? (கடல் கடக்குங்கால் வரும் ஏதம் நினைந்து) என் உயிர்க்கு உறுதி எண்ணியமையால் (இலங்கை சென்று) பிராட்டியைக் கண்டுவந்தேனில்லை' என்று சொல்லுவேனே? (அல்லது) உயிர்க்குறுதி கொண்டேன் கொண்டு வருகிற்றிலென் எனக் கழறுகேனே - (இலங்கைக்குச் சென்று பிராட்டியைத் தேடிக் கண்டேன்; ஆயினும் பகைவராற்றலால்) என் உயிர்க்கு வரும் ஊறுநினைந்து அதனைப் போற்றிக்கொள்ளக் கருதியவனுய்ப் பிராட்டியை மீட்டுக்கொண்டுவந்தேனில்லை என்று சொல்லுவேனே? 'அருந்ததி! உரைத்தி' என முடிக்க. (7)

**614.** இருக்குமதில் சூழ்கடியி லங்கையையி மைப்பின்
உருக்கியெரி யாலிகல ரக்கனையு மொன்ரு
முருக்கிநிரு தக்குலமு டித்துவினை முற்றிப்
பொருக்கவகல் கென்னினும தின்றுபுரி கின்றேன்.

'இருக்கும் மதில் சூழ் கடி இலங்கையை, இமைப்பின்
உருக்கி எரியால், இகல் அரக்கனையும் ஒன்ரு
முருக்கி, நிருதக்குலம் முடித்து, வினைமுற்றிப்
பொருக்க அகல்க' என்னினும், அது இன்று புரிகின்றேன்.

'இருக்கும் மதில்சூழ் கடியிலங்கையை இமைப்பின் எரியால் உருக்கி, நிருதக்குலம் முடித்து, இகல் அரக்கனையும் ஒன்ரு முருக்கி, வினைமுற்றி, பொருக்க அகல்க' என்னினும் அது இன்று புரிகின்றேன்: என இயையும். இருக்கும் - யான் சிறையிருக்கின்ற. இருக்கும் இலங்கை, மதில்சூழ் இலங்கை, கடியிலங்கை என்க. மதில்சூழ் கடியிலங்கையை - மதில்களாற் சூழப்பட்ட விளக்கம் மிக்க இலங்கையை. இலங்கையை இமைப்பின் எரியால் உருக்கி என்க. இமைப்பின் - கண்மூடித் திறக்குமுன் (ஒரு மாத்திரைப் பொழுதினுள்). எரி - நெருப்பு. நிருதக்குலம் - அரக்கர் கூட்டத்தை; அரக்கர் குடியும் ஆம். முடித்து - கொன்று. இகல் அரக்கனையும் ஒன்ரு(க) முருக்கி - வலிய அரக்கனுகிய இராவணனையும் ஒருசேரக் கொன்று. 'ஒன்ரு முருக்கி' என்பதற்கு நிச்சயமாக (ஒருதலையாக)க் கொன்று என்றுரைப்பினும் அமையும். வினைமுற்றி - போரை முடித்து; வந்த காரியத்தை முற்றுவித்து; செய்ய

வேண்டிய செயல்களை நிறைவேற்றி எனலும் ஆம். பொருக்க - விரைவாக. அது - (இலங்கையை எரித்து, நிருதக்குலம் முடித்து, இராவணனை முருக்கி வினைமுற்றி மீளுவதாகிய) அச்செயலை. இன்று புரிகின்றேன் - இப்பொழுதே செய்கின்றேன். (8)

**615.** இந்துநுத னின்னொடிவ ணெய்தியிகல் வீரன்
சிந்தையுறு வெந்துயர்த விர்ந்ததெளி வோடும்
அந்தமில ரக்கர்குல மற்றவிய நூறி
நந்தலில்பு விக்கணிடர் பிற்களைத னன்றால்.

இந்து நுதல்! நின்னொடு இவண் எய்தி, இகல் வீரன்,
சிந்தை உறு வெம் துயர் தவிர்ந்த தெளிவோடும்,
அந்தம் இல் அரக்கர்குலம் அற்று அவிய நூறி,
நந்தல் இல் புவிக்கண் இடர் பின் களைதல் நன்றால்.

இந்துநுதல்! இகல்வீரன், இவண் நின்னொடு எய்தி, துயர் தவிர்ந்த தெளிவோடும், அரக்கர்குலம் அவிய நூறிப் புவிக்கண் இடர், பின் களைதல் நன்று: என இயைக்க. இந்துநுதல் - மதி போலும் நெற்றியை யுடையாய்; நுதல் என்ற குறிப்பால் இந்து என்றது எண்ணாட்டிங்களை (அட்டமிச்சந்திரனை). வீரன் என்றது இராமபிரானை. இவண் - இப்பொழுது. நின்னொடு எய்தி - உன்னோடுகூடி. சிந்தை உறு வெம் துயர் தவிர்ந்த தெளிவோடும் - மனத்தின்கண் உள்ள கொடிய துக்கம்நீங்கிய (மையால் ஏற்பட்ட) தெளிவுடன்; அந்தம் இல் - அழிதல் இல்லாத; எல்லையில்லாத எனினும் ஆம். அரக்கர் குலம் அற்று அவிய நூறி - அரக்கர் கூட்டம் கெட்டு ஒழியும்படி அழித்து. நந்தல் இல் புவிக்கண் இடர் - கெடுதல் இல்லாத பூமியின் கண் (அரக்கரால் உண்டாகிய) துன்பத்தை. பின் களைதல் நன்று - பின்பு போக்குதல் நலமாகும். (9)

**616.** வேறினிவி ளம்பவுள தன்றுவிதி யாலிப்
பேறுபெற வென்கணரு டந்தருளு பின்னே
ஆறுதுய ரஞ்சொலிள வஞ்சியடி யன்றோள்
ஏறுகடி தென்றுதொழு தின்னடிப ணிந்தான்.

'வேறு இனி விளம்ப உளதன்று; விதியால் இப்
பேறு பெற, என்கண் அருள் தந்தருளு; பின்னே
ஆறு துயர்; அம் சொல் இள வஞ்சி! அடியன் தோள்
ஏறு கடிது!' என்று தொழுது இன் அடி பணிந்தான்.

அம் சொல் இளவஞ்சி! 'இனி விளம்ப வேறு உளதன்று; இப் பேறு பெற என்கண் விதியால் அருள் தந்தருளு; அடியன்தோள் கடிது ஏறு; பின் துயர் ஆறு' என்றுதொழுது இன் அடி பணிந் தான் : என இயைக்க. இனி விளம்ப வேறு உளதன்று - இனியும் சொல்லுவதற்கு வேறு செய்தி இல்லை. இப்பேறு பெற - (இராம னிடம் உன்னைச் சேர்த்து நீங்கள் இருவீரும் சேர்ந்த நிலையில் வழி பாடு செய்யும்) இந்தப்பேற்றை யான் பெறும்படி. விதியால் என் கண் அருள் தந்தருளு - கட்டளையிட்டு என்பால் கருணைபாலிப்பா யாக. விதி - கட்டளை. அடியன் தோள் கடிது ஏறு - தொண்ட ஞகிய என் தோள்மீது விரைந்து ஏறிக்கொள்க. பின் துயர் ஆறு - அதன்மேல் துன்பம் நீங்குக. அடைந்தார் துன்பம் அகற்றி இன்பம் அளித்தலின் இன்னடியாயிற்று. அநுமன் பணிந்தான் : என எழு வாய் வருவித்துரைக்க. (10)

## பிராட்டி அநுமனுற்றல் கருதுதல்

617. ஏய நன்மொழி எய்த விளம்பிய
☆ தாயை முன்னிய கன்றனை யான்றனக்
காய தன்மை யரியதன் ருலெனத்
தூய மென்சொ லினையன சொல்லினுள்.

ஏய நல்மொழி எய்த விளம்பிய
தாயை முன்னிய கன்று அனையான்தனக்கு
'ஆய தன்மை அரியதன்ருல்' எனத்
தூய மென்சொல் இனையன சொல்லினுள்.

தூயமென்சொல், நன்மொழி விளம்பிய கன்று அனையான் தனக்கு, 'ஆய தன்மை அரியதன்று' என இனையன சொல் லினுள் : என இயைக்க. தூய மென் சொல் - குற்றமற்ற மென்மை யான சொல்லையுடையளான பிராட்டி. ஏய நன்மொழி - பொருந்திய நல்ல சொற்களை. எய்த விளம்பிய - (கேட்கும் பிராட்டியின் உள் ளத்தே பதியுமாறு) நன்கு சொல்லிய. எய்த – நன்ருக. 'என நினைந்தெய்த நோக்கி' (516) என்பதும் காண்க. தாயை முன்னிய - தாய்ப்பசுவை எதிர்ந்த. தாய்ப்பசு பிராட்டிக்கும் கன்று அநும னுக்கும் உவமை- ஆய தன்மை - அத்தன்மை; (மேற்பாடல்களில் அநுமன் கூறியவாறு செய்தல்). அரியதன்று - இயலாததன்று. ஆல், அசை. என – என்று எண்ணி. இனையன சொல்லினுள் - இத்தன்மையான சொற்களைக் கூறினுள். 'கன்றனையான்றனக்கு ஆயதன்மை அரியதன்று' என்பது பிராட்டி நினைவு கூறியவாறு. (11)

அநுமன் வேண்டுகோட்கு இசையாத பிராட்டி கூற்று 618–632

618. அரிய தன்றுநின் னாற்றலுக் கேற்றதே
தெரிய வெண்ணினை செய்வதுஞ் செய்தியே
உரிய தன்றென வோர்கின்ற துண்டதென்
பெரிய பேதைமைச் சின்மதிப் பெண்மையால்.

அரியது அன்று நின் ஆற்றலுக்கு; ஏற்றதே;
தெரிய எண்ணினை; செய்வதும் செய்தியே;
உரியது அன்று என ஓர்கின்றது உண்டு; அது, என்
பெரிய பேதைமைச் சில் மதிப் பெண்மையால்.

'அது நின் ஆற்றலுக்கு அரியது அன்று; ஏற்றதே; தெரிய எண்ணினை; செய்வதும் செய்தி; என் பெரிய பேதைமைச் சின்மதிப் பெண்மையால் உரியதன்று என ஓர்கின்றது உண்டு' என இயைக்க. அது - நீ சொல்லியவாறு செய்தல். நின் ஆற்றலுக்கு அரியதன்று - நின் வலிமைக்குக் கூடாததன்று; ஏற்றதே - இசைவதே; தெரிய எண்ணினை - விளங்க ஆராய்ந்தனை. செய்வதும் செய்தி - செய்யவும் செய்வாய். (எனினும்), என் பெரிய பேதைமைச் சின்மதிப் பெண்மையால்-என்னுடைய பெரிய பேதைமையோடு சிற்றறிவும் உடைய பெண்டன்மையால்; பேதைமையாவது கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமை (அறிவிக்க அறிந்து அறிந்தது விடாமை) யாகிய மடம். உரியதன்று என ஓர்கின்றது உண்டு - (என்னைக் கொண்டு அகல்வது உனக்கு) உரிய செயலன்று என்று நினைக்கின்றதுண்டு. (12)

619. வேலை யின்னிடை யேவந்து வெய்யவர்
கோலி வெஞ்சர நின்னெடுங் கோத்தபோ
தால மன்னவர்க் கல்லையெற் கல்லையாற்
சால வுந்தடு மாறுந் தனிமையோய்.

வேலையின் இடையே வந்து, வெய்யவர்,
கோலி, வெம் சரம் நின்னெடும் கோத்தபோது,
ஆலம் அன்னவர்க்கு அல்லை, எற்கு அல்லை ஆல்;
சாலவும் தடுமாறும் தனிமையோய்.

வெய்யவர், வேலையின் இடையே வந்து கோலி, நின்னெடும் வெம் சரம் கோத்தபோது, ஆலம் அன்னவர்க்கு அல்லை; எற்கு அல்லை; சாலவும் தடுமாறும் தனிமையோய் (ஆவை) : என

இயையும். வெய்யவர் - கொடியவரான அரக்கர். வேலையின் இடையே வந்து கோலி - (நீ செல்லுங்கால்) கடலினிடையே வந்து உன்னை வளைத்து. நின்னொடும் வெம் சரம் கோத்தபோது - உன்னொடு எதிரம்புகோத்துப் போர் செய்யுங்கால். ஆலம் அன்னவர்க்கு அல்லை - நஞ்சு போன்றவரான அரக்கரோடு பொருதற்கும் இயலாதவனாய். எற்கு அல்லை - என்னைக் காத்தற்கும் இயலாதவனாய். ஆல், அசை. சாலவும் தடுமாறும் தனிமையோய் - மிகவும் தடுமாறும் தனிமையுடையனாவை. (13)

**620.** அன்றி யும்பிறி துள்ளதொன் றாரியன்
வென்றி வெஞ்சிலை மாசுணும் வேறினி
நன்றி யென்பவோ வஞ்சித்த நாயவன்
நின்ற வஞ்சனை நீயு நினைத்தியோ.

அன்றியும், பிறிது உள்ளது ஒன்று ; ஆரியன்
வென்றி வெம் சிலை மாசு உணும் ; வேறு இனி
நன்றி என்பவோ ? வஞ்சித்த நாய் அவன்
நின்ற வஞ்சனை நீயும் நினைத்தியோ ?

அன்றியும், பிறிதொன்று உள்ளது ; ஆரியன் வென்றி வெம் சிலை மாசு உணும் ; இனி வேறு (ஒன்று உள்ளது) ; வஞ்சித்த நாய் அவன் நின்ற வஞ்சனை நீயும் நினைத்தியோ ? நன்றி என்பவோ? என இயைக்க. அன்றியும் - முற்கூறிய காரணம் அல்லாமலும். பிறிது ஒன்று உள்ளது - வேறு ஒரு காரணமும் இருக்கிறது. (அஃது யாதெனின்) ஆரியன் வென்றி வெம்சிலை மாசு உணும் - பூசிக்கத்தக்கவனாகிய இராமபிரானுடைய வெற்றி வில்லுக்குக் குற்றம் நேரும். இனி வேறு (ஒன்று உளது) - மேல் பிறிதொன்றும் உண்டு (அஃது என்னையெனின்). வஞ்சித்த நாய் அவன் நின்ற வஞ்சனை - என்னை ஏமாற்றியெடுத்துவந்த நாய்போல்பவனான இராவணன்பால் நின்ற வஞ்சனைத்தொழிலை. நீயும் நினைத்தியோ - (ஒழுகலாற்றினின்றும் தவறாத) நீயும் நினைக்கலாமோ? நன்றி என்பவோ - (இவ்வாறு ஒளித்தெடுத்துச் செல்லுதல்) நன்றென்று சொல்லுவார்களோ? சொல்லார் என்றவாறு. (14)

**621.** கொண்ட போரினெங் கொற்றவன் விற்றொழில்
அண்ட ரேவரு நோக்கவென் னாக்கையைக்
கண்ட வாளரக் கன்விழி காகங்கள்
உண்ட போதன்றி யானுளெ னாவெனோ.

கொண்ட போரின், எம் கொற்றவன் வில் தொழில்,
அண்டர் ஏவரும் நோக்க, என் ஆக்கையைக்
கண்ட வாள் அரக்கன் விழி, காகங்கள்
உண்டபோது அன்றி யான் உளென் ஆவெனோ ?

கொண்டபோரின் - மேற்கொண்ட போரில். எம் கொற்றவன் வில் தொழில் - எங்கள் அரச(னாகிய இராமபிரா)னுடைய விற்போரை. அண்டர் ஏவரும் நோக்க - தேவரெல்லாரும் பார்(த்து அதிசயி)க்க. எம் கொற்றவன் விற்றொழிலால், காகங்கள், வாளரக்கன் விழியைத் தேவர்காண உண்ட போதன்றி: என இயைத்துரைப்பினும் அமையும். யான் உளென் ஆவெனோ - யான் கற்பின் நெறியில் நின்றேன் ஆவேனோ ? (15)

622. வெற்றி நாணுடை வில்லியர் விற்றொழில்
முற்ற நாணில ரக்கியர் மூக்கொடும்
அற்ற நாணின ராயின போதன்றிப்
பெற்ற நாணமும் பெற்றிய தாகுமோ.

வெற்றி நாண் உடை வில்லியர் வில் தொழில்
முற்ற, நாண் இல் அரக்கியர், மூக்கொடும்
அற்ற நாணினர் ஆயினபோது அன்றிப்
பெற்ற நாணமும் பெற்றியது ஆகுமோ ?

வெற்றி நாண் உடை வில்லியர் வில் தொழில் முற்ற - வெற்றியைத் தரும் நாணொலியையுடைய வில்லாளிகளான இராமலக்குமணருடைய விற்போர் முதிர்தலால். வெற்றிவில், நாண் உடைய வில் என்க. வெற்றியை நாணுக்கு அடையாக்கி, நாணொலி கேட்ட அளவிலே பகைவர் அழிவர், ஆதலின் வெற்றிநாண் என்றுள் எனினும் சிறக்கும். அற்ற நாணினர் - மங்கலநாண் இழந்தவர். பெற்ற நாணமும் - உயிரினும் சிறந்ததாக யான் பெற்றுள்ள நாணமும். பெற்றி - சிறப்பு. (16)

623. பொற்பி றங்கலி லங்கை பொருந்தலர்
எற்பு மால்வரை யாகில தேயெனின்
இற்பி றப்புமொ ழுக்குமி ழுக்கமில்
கற்பும் யான்பிறர்க் கெங்ஙனங் காட்டுகேன்.

பொன் பிறங்கல் இலங்கை, பொருந்தலர்
என்பு மால்வரை ஆகிலதே எனின்,
இற்பிறப்பும், ஒழுக்கும், இழுக்கம் இல்
கற்பும், யான் பிறர்க்கு எங்ஙனம் காட்டுகேன் ?

பொன் பிறங்கல் - பொன்மலை. பொற்பிறங்கல் இலங்கை - பொன் மலையான (மகாமேருவினின்று காற்றுக்கடவுளால் பிரித்தெறியப்பட்ட) திரிகூடத்தில் அமைக்கப்பட்ட இலங்கைநகரமானது. பொருந்தலர் எற்புமால்வரை ஆகிலது எனின் - பகைவரான அரக்கருடைய என்புகளால் பெரிய மலையாகாவிட்டால். இற்பிறப்பும் - என்னுடைய உயிர்குடிப்பிறப்பினையும். அரக்கரை எரித்து, இலங்கையில் அவர்என்பு மலையாகக் குவியச்செய்து என்னுடைய உயர் குடிப் பிறப்பும் ஒழுக்கமும் கற்பும் பிறர்க்கு விளங்கச் செய்வேன் என்றவாறு. (17)

**624.** அல்லன் மாக்க ளிலங்கைய தாகுமோ
எல்லை நீத்த வுலகங்கள் யாவுமென்
சொல்லி ஞற்சுடு வேனது தூயவன்
வில்லி ஞற்றற்கு மாசென்று வீசினேன்.

அல்லல் மாக்கள் இலங்கை, அது ஆகுமோ ?
எல்லை நீத்த உலகங்கள் யாவும் என்
சொல்லினுல் சுடுவேன் ; அது, தூயவன்
வில்லின் ஆற்றற்கு மாசு என்று வீசினேன்.

அல்லல் மாக்கள் இலங்கை (மட்டும்) அது ஆகுமோ ? - (உலகுக்குத்) துன்பம் விளைப்பவரான அரக்கருடைய இலங்கை மட்டும் (முன் பாட்டிற் கூறியபடி) என்புமலை யாகுமோ ? எல்லை நீத்த உலகங்கள் யாவும் - வரம்பற்ற எல்லாவுலகங்களையும். சுடுவேன் - சுட்டெரித்து என்பு மலையாக்குவேன். அது - அவ்வாறு இலங்கையையும் உலகங்களையும் சுட்டெரித்து என்புமலையாக்குதல். தூயவன்- பரிசுத்தமுடையவன் (இராமபிரான்). வீசினேன் - கைவிட்டேன். (18)

**625.** வேறு முண்டுரை கேளது மெய்ம்மையோய்
ஏறு சேவகன் மேனியல் லாலிடை
ஆறு மைம்பொறி நின்னையு மாணெனக்
கூறு மிவ்வுருத் தீண்டுதல் கூடுமோ.

வேறும் உண்டு உரை ; கேள் அது, மெய்ம்மையோய் !
ஏறுசேவகன்மேனி அல்லால், இடை
ஆறும் ஐம்பொறி நின்னையும், ஆண் எனக்
கூறும் ; இவ்வுருத் தீண்டுதல் கூடுமோ ?

மெய்ம்மையோய்! வேறு உரையும் உண்டு; அதுகேள்; இடை ஐம்பொறி ஆறும் நின்னையும் ஆண் என (உலகம்) கூறும்; ஏறு சேவகன் மேனி அல்லால் இவ்வுருத் தீண்டுதல் கூடுமோ?: என இயைக்க. உலகம் என ஒருசொல் வருவிக்கப் பட்டது. மெய்ம்மையோய்! - வாய்மையுடையவனே! வேறு உரையும் உண்டு - (நின்னை யான் தீண்டலாகாது என்பதற்குப்) பிறிதோர் ஏதுவுரையும் உண்டு; இடை ஐம்பொறி ஆறும் நின்னையும் - வருத்தும் இயல்புடைய ஐம்பொறிகளும் அடங்கப்பெற்ற நின்னையும், ஆண் என உலகம் கூறும், (ஆதலால்). ஏறுசேவகன் மேனி அல்லால் - வளர்ச்சியடைகிற வீர(த்தையுடைய இராமபிரா)னது திருமேனியையன்றி. இவ்வுரு - இந்த உன் உடலையும். தீண்டுதல் கூடுமோ - பரிசித்தல் தகுமோ? (தகாது என்றவாறு). (19)

**626.** தீண்டி னானெனி னித்தனை சேண்பகல்
ஈண்டு மோவுயிர் மெய்யி னிமைப்பின்முன்
மாண்டு தீர்வனென் றேநிலம் வன்கையாற்
கீண்டு கொண்டெழுந் தேகினன் கீழ்மையான்.

தீண்டினான் எனின், இத்தனை சேண்பகல்
ஈண்டுமோ உயிர் மெய்யின்? இமைப்பின்முன்
மாண்டு தீர்வன் என்றே நிலம் வன்கையால்
கீண்டுகொண்டு எழுந்து ஏகினன் கீழ்மையான்.

இராமபிரான் திருமேனியையன்றிப் பிறருருவைத் தீண்டேன் என்ற பிராட்டி, இராவணனும் தன்னைத் தீண்டவில்லை என்பதை ஈண்டுக் கூறுகின்றாள். கீழ்மையான், தீண்டினான் எனின் இத்தனை சேண்பகல் உயிர் மெய்யின் ஈண்டுமோ? 'மாண்டு தீர்வன்' என்றே நிலம் வன்கையால் கீண்டுகொண்டு எழுந்து ஏகினன்: எனக் கூட்டுக. கீழ்மையான் - (பிறர்மனை விழைதலாகிய) இழிதகைய (னான இராவண)ன். தீண்டினான் எனின் - என்னைத் தொட்டானெனின். இத்தனை சேண்பகல் உயிர் மெய்யின் ஈண்டுமோ?- இவ்வளவு நீண்டகாலம் அவன் உயிர் உடலிற் கூடியிருக்குமோ? (இராது). ஈண்டுதல் - கூடுதல். 'இமைப்பின் முன் மாண்டு தீர்வன்' என்பது இராவணன் நினைவுகூறியவாறு. இமைப்பின் முன் மாண்டு தீர்வன் என்று - ('நான் இவளைத் தொடுவேனாயின்) கண் இமைக்கும் நேரத்துள், இறந்தொழிவேன்' என்று எண்ணி. நிலம் - யான் இருந்த பன்னசாலையை. வன்கையால் கீண்டு கொண்டு எழுந்து ஏகினன் - வலிய கைகளால் (பூமியோடு) பெயர்த்து எடுத்துக்கொண்டு புறப்பட்டுச் சென்றான். இனி, 'உயிர் மெய்யின் ஈண்டுமோ' என்பதற்கு 'என் உயிர் என் உடலிற் கூடியிருக்குமோ? (இராது) என்று பிராட்டி தன்னிலையுரைத்ததாக்கலும் ஆம். (20)

**627.** மேவு சிந்தையின் மாதரை மெய்தொடிற்
றேவு பொன்றலை சிந்துக நீயெனப்
பூவின் வந்த புராதன னேபுகல்
சாவ முண்டென தாருயிர் தந்ததால்.

‘மேவு சிந்தை இல் மாதரை மெய் தொடின்,
தேவு பொன் தலை சிந்துக நீ!’ எனப்
பூவின் வந்த புராதனனே புகல்
சாவம் உண்டு: எனது ஆர் உயிர் தந்ததால்.

‘மேவு சிந்தை இல் மாதரை நீ மெய்தொடின் (உன்) தேவு பொன் தலை சிந்துக’ எனப் பூவின் வந்த புராதனன் புகல் சாவம் உண்டு. அது எனது ஆர் உயிர் தந்தது: என இயைக்க. அது என்னும் சுட்டு அவாய் நிலையான் வந்தது. ‘மேவு சிந்தை............ தலை சிந்துக’ என்பது பிரமன் இராவணனுக்கிட்ட சாபக்கூற்று. மேவு சிந்தைஇல் மாதரை - (உன்னைக்) கூடும் மனமில்லாத மகளிரை. நீ மெய்தொடின் - நீ உடல் தீண்டுவாயாயின். தேவு பொன்தலை சிந்துக என - (உன்னுடைய) தெய்வத்தன்மையுள்ள அழகிய தலைகள் உதிர்க என்று. பூவின் வந்த புராதனன் - (திருமாலின்) உந்தித் தாமரையில் தோன்றிய பழையோனான பிரமன். புராதனன் புகல் சாவம் உண்டு: என்க. சாவம் (– சாபம்) போலி. அது - அச்சாபம். எனது ஆர் உயிர் தந்தது - எனது பெறற்கரிய உயிரைக் கொடுத்தது. ஆல், அசை. பிரமனை வணங்கச் சென்ற புஞ்சிகஸ்தலை என்னும் நீரரமகளை இராவணன் கண்டு வலிந்து கற்பழிக்க, அதனால் முனிந்த பிரமன், இராவணனை நோக்கி, ‘இனி, நீ உன்னை விரும்பாத மகளிரைத் தீண்டுவையாயின் உன் தலை வெடித்து உதிரும்’ என்று இட்ட சாபவரலாறு இச்செய்யுளிற் குறிக்கப்பட்டது. இராவணன், தன் தலை போரில் அறுபட்டாலும் மீண்டும் முளைக்கும் வரம்பெற்றுள்ளமை நோக்கித் ‘தேவு பொன் தலை’ எனப்பட்டது. (21)

**628.** அன்ன சாப முளதென வாண்மையான்
மின்னு மௌலியன் வீடணன் மெய்ம்மையான்
கன்னி யென்வயின் வைத்த கருணையாள்
சொன்ன துண்டு துணுக்க மகற்றுவான்.

‘அன்ன சாபம் உளது’ என, ஆண்மையான்,
மின்னும் மௌலியன், வீடணன், மெய்ம்மையான்,
கன்னி, என்வயின் வைத்த கருணையாள்,
சொன்னது உண்டு, துணுக்கம் அகற்றுவான்.

முன் பாட்டு, பிராட்டி, பிரமன் இராவணனுக்கு இட்ட சாபத்தால் யான் உய்ந்தேன் என்றமை கூறிற்று. இப்பாட்டு, அச்சாப வரலாறு பிராட்டிக்குத் தெரிந்தவாறு கூறுகிறது. ஆண்மையான், மின்னும் மௌலியன், மெய்ம்மையான், வீடணன் கன்னி என்வயின் வைத்த கருணையாள் துணுக்கம் அகற்றுவான், அன்ன சாபம் உளதெனச் சொன்னது உண்டு : என இயைக்க. ஆண்மையான்... வீடணன் - வலிமையுடையவனும், விளக்கம் மிக்க முடியுடையவனும், உண்மையுடையவனும் ஆகிய வீடணன். வீடணன் பின் இராமனருள்பெற்று மின்னுமுடியனுதற்குமுன்னே, பிராட்டியருளால் மின்னுமுடியனுயினமை இங்கே சுட்டப்பட்டமை காண்க. வீடணன் கன்னி - வீடணன் மகளாகிய திரிசடை. என்வயின் வைத்த கருணையாள் - என்பால் மாருது நிலைக்க வைத்த கருணையினை யுடையளாய். துணுக்கம் அகற்றுவான்-(இராவணனால் எப்பொழுது என்ன தீங்கு நேருமோ என்று வருந்திய எனது) நடுக்கம் நீக்கும் பொருட்டு. அன்ன சாபம் - அப்படிப்பட்ட சாபம். உளது எனச் சொன்னது உண்டு என்க. (22)

629. ஆய துண்மையி ஞனும தன்றெனின்
மாய்வென் மன்ற வறம்வழு வாதென்றும்
நாய கன்வலி யெண்ணியு நாணுடைத்
தூய்மை காட்டவு மித்துணை தூங்கினேன்.

ஆயது உண்மையின், நானும், அது அன்று எனின்,
மாய்வென் மன்ற; அறம் வழுவாது என்றும்,
நாயகன் வலி எண்ணியும், நாணுடைத்
தூய்மை காட்டவும், இத்துணை தூங்கினேன்.

ஆயது உண்மையின், நானும், அறம் வழுவாது என்றும், நாயகன் வலி எண்ணியும், நாணுடைத்தூய்மை காட்டவும் இத்துணை தூங்கினேன். அது அன்று எனின், மன்ற மாய்வென் : என இயைக்க. ஆயது உண்மையின் - அச்சாபம் இருத்தலால். நானும் - துணையற்றவளான யானும். அறம் வழுவாது என்றும் - தருமம் (என்னைக் காக்கத்) தவருது என்று கருதியும்; நாயகன்வலி எண்ணியும் - என்னுடைய நாயகனை இராமபிரானுடைய ஆற்றல் என்னைக் காக்கும் என்று நினைந்தும்; நாண் உடைத்தூய்மை காட்டவும் – நாணெடு கூடிய என்னுடைய தூயநிலையினை உலகுக்கு விளக்க எண்ணியும்; இத்துணை தூங்கினேன் - இவ்வளவுநாள் உயிரைவிடாமல் தாமதித்தேன். அது அன்று எனின் - அச்சாபம் இல்லாவிட்டால்; மன்ற மாய்வென் - நிச்சயமாக இறந்துபடுவேன். 'அறம் வழுவாது' என்பதனெடு 'தருமமே காத்ததோ' (404) என்னும் அநுமன் கருத்தும் நோக்கத்தகும். (23)

**630.** ஆண்டு நின்று மரக்க னகழ்ந்துகொண்
டீண்டு வைத்த திளவ லியற்றிய
நீண்ட சாலே யொடுநிலே நின்றது
காண்டி யையநின் மெய்யுணர் கண்களால்.

ஆண்டு நின்றும் அரக்கன் அகழ்ந்து கொண்டு
ஈண்டு வைத்தது, இளவல் இயற்றிய
நீண்ட சாலேயொடு நிலேநின்றது,
காண்டி, ஐய! நின் மெய் உணர் கண்களால்.

ஐய! நிலே, அரக்கன், ஆண்டு நின்றும் அகழ்ந்து கொண்டு (வந்து) ஈண்டுவைத்தது, இளவல் இயற்றிய நீண்டசாலேயொடு நின்றது : நின் மெய் உணர் கண்களால் காண்டி : என இயைக்க. அரக்கன் என்றது இராவணனே. நிலே - என் நிலேமை. ஆண்டு நின்றும் - பஞ்சவடியிலிருந்து. அகழ்ந்து கொண்டு (வந்து) ஈண்டு வைத்தது - பேர்த்தெடுத்துக்கொண்டு வந்து இவ்வசோக வனத்தே வைத்ததாகிய. நீண்ட சாலேயொடு - பெரிய பன்னசாலேயோடு. வைத்ததாகிய சாலே, இளவல் இயற்றிய சாலே என்க. நின்றது - அமைந்ததனே. காண்டி - காண்க. என் நிலே இளவலியற்றிய பன்னசாலேயொடு அமைந்ததைக் காண்டி என்க. நின்கண், மெய் யுணர் கண் எனக் கொள்க. (24)

**631.** தீர்வி லேனி தொருபக லுஞ்சிலே
வீரன் மேனியை மானுமிவ் வீங்குநீர்
நார நாண்மலர்ப் பொய்கையை நண்ணுவேன்
சோரு மாருயிர் காக்கும் துணிவினல்.

தீர்வு இலேன் இது ஒரு பகலும், சிலே
வீரன் மேனியை மானும் இவ் வீங்கும் நீர்
நார நாள் மலர்ப் பொய்கையை நண்ணுவேன்,
சோரும் ஆர் உயிர் காக்கும் துணிவினல்.

ஒரு பகலும் இது தீர்வு இலேன்; சோரும் ஆருயிர் காக்கும் துணிவினல், சிலேவீரன் மேனியை மானும் இவ் வீங்கும் நீர் நார நாள் மலர்ப் பொய்கையை நண்ணுவேன் : என இயைக்க. ஒரு பகலும் - ஒரு கணப்பொழுதும், இது தீர்வு இலேன் - (இளவல் இயற்றிய) இப் பன்னசாலேயினின்று நீங்கேன். சோரும் ஆருயிர் காக்கும் துணிவினல் - இராமனேப் பிரிந்தமையால் நிலேதளர்கிற என்னுடைய அரிய உயிரைக் காத்துக்கொள்ளும் மனவுறுதியால். சிலேவீரன் மேனியை மானும் - வில் வீரனை இராமபிரானுடைய

திருமேனியை ஒத்து விளங்குகிற. இவ்வீங்கும் நீர் நார நாண்மலர்ப் பொய்கையை நண்ணுவேன் - மேலும் மேலும் பெருகுந்தன்மை யுள்ள (வற்ருத) நீர்வளமுடைய அப்பொழுதலர்ந்த பூக்களோடு கூடிய இந்தப் பொய்கையை அடைவேன். முன்னே 'ஒரு பகலும் இது நீங்கேன்' என்று, பின், 'பொய்கையை நண்ணுவேன்' என்றது, இப் பன்னசாலையினின்று நீங்கேனுய் (படிதாண்டாது), இதனுள் இருந்தபடியே, அடுத்துள்ள பொய்கையைக் கண்டு இராமன் திருமேனி கண்டாங்கு ஆறி உயிர்தரிப்பேன் என்றவாறு. 'இருந்தமா நிலஞ் செல்லரித்தெழவு மாண்டெழாதாள்' (344) என்பதும் இங்கு நோக்கத்தகும். வீங்கும் நீர்மையும் பசுமையும் பூக்களுடைமையும் நறுமணமுடைமையும் இராமனுக்கும் பொய் கைக்கும் பொதுவான தன்மைகள். வீங்கும் நீர்மை - இராமனுக்கு அளப்பரிய குணங்கள்; பொய்கைக்கு வற்ருத நீர்ப்பெருக்குடைய தாதல். பசுமை - இராமனுக்குத் திருமேனி நிறம்; பொய்கைக்கு அதிற் படர்ந்து விரிந்த தாமரை இலைகளால் உண்டாகிய பசுந் தோற்றம். பூக்கள - இராமனுக்குத் திருவடியும் திருக்கைகளும் கண்ணும் முதலிய உறுப்புக்கள்; பொய்கைக்குத் தாமரைப் பூக்கள் மணம்: இராமனுக்கு இயல்பான் அமைந்த சருவகந்தம்; பொய் கைக்குத் தாமரைப் பூக்களால் உண்டாகிய மணம். உவமானமாகிய பொய்கையை உவமேயமாக்கியது எதிர்நிலை என்னும் அணி தழுவிய கூற்று. இராமன் திருமேனிக்கு நாண்மலர்ப் பொய்கையை உவமைகூறிய இச்செய்யுட் பகுதி,

"மாயக்கூத்தா வாமனு வினையேன் கண்ணு கண்கைகால்,
தூய செய்ய மலர்களாச் சோதிச் செவ்வாய் முகிழதாச்
சாயல் சாமத் திருமேனி தண்பாசடையாத் தாமரைநீள்
வாசத்தடம்போல் வருவானே ஒரு நாள்காண வாராயே"

(திவ். திருவாய்மொழி. 8. 6. 1) என்பதன் சுருக்கமாய் அமைந் தமை நோக்கத்தகும். (25)

**632.** ஆத லானது காரிய மன்றயர்
வேத நாயகன் பாலினி மீண்டனே
போதல் காரிய மென்றனள் பூவையக்
கோதி லானு மினையன கூறினுன்.

"ஆதலான், அது காரியம் அன்று; அயர்
வேதநாயகன்பால், இனி மீண்டனே
போதல், காரியம்!" என்றனள் பூவை; அக்
கோது இலானும் இனையன கூறினுன்.

பூவை என்றனள்; கோதிலானும் கூறினன் என்க. ஆதலாம அது காரியமன்று - யான் மேற்கூறிய காரணங்களால், என்னை நீ கொண்டு அகல்வது செய்யத்தக்க செயலன்று. அயர் வேதநாய கன்பால் - என்னைப் பிரிந்தமையால் சோர்வுறுகின்ற வேதநாயகனை இராமபிரானிடத்து. இனி - இப்பொழுதே. மீண்டனைபோதல் காரியம் - மீண்டு செல்லுதலே செய்யத்தக்க செயலாகும். அக் கோது இலானும் - அந்தக் குற்றமற்ற அநுமனும். இனையன கூறினன் - இப்படிப்பட்ட (பின்வருமாறுள்ள) மொழிகளைச் சொன் னன். இனியென்பது இப்பொழுது என்னும் பொருளில் வருதல் 'கேளினி' என்னும் மலைபடுகடாத்து 94-ஆம் அடியாலும் விளங்கும். (26)

## சீதையை அநுமன் பாராட்டல்

633. நன்று நன்றிவ் வுலகுடை நாயகன்
தன்று ணைப்பெருந் தேவி தவத்தொழில்
என்று சிந்தை களித்துவந் தேத்தினன்
நின்ற சங்கை யிடரொடு நீங்கினன்.

'நன்று ! நன்று ! இவ் உலகு உடை நாயகன்
தன் துணைப் பெருந்தேவி தவத் தொழில் !'
என்று சிந்தை களித்து உவந்து ஏத்தினன்,
நின்ற சங்கை இடரொடு நீங்கினன்.

நின்ற சங்கை இடரொடு நீங்கினன், 'இவ்வுலகுடை நாயகன் றன் துணைப் பெருந்தேவி தவத்தொழில், நன்று! நன்று!' என்று சிந்தை களித்து உவந்து ஏத்தினன் : என இயைக்க. நின்ற சங்கை இடரொடு நீங்கினன் - பிராட்டியின் கற்பும் ஒழுக்கமுதலிய வையும் நன்றென்றறிந்தானாயினும், இராவணனால் அவளுக்கு மேலும் என்ன தீங்கு விளையுமோ என்று நினைதலால் எஞ்சியிருந்த ஐயமும், துன்பமும் நீங்கியவனாய். உலகுடை நாயகன் தன் துணைப் பெருந்தேவி தவத்தொழில் - உலகினையுடைய தலைவனாகிய இராம பிரானுடைய பெருமையோடு ஒத்த பெருமையையுடைய பிராட்டி யின் தவச்செயல். இனி, உலகநாயகனை இராமபிரானுடைய பெரிய தவச்செயலோடொத்த பிராட்டியின் பெருந்தவச்செயல் எனினும் ஆம். தவச்செயல் நன்று! நன்று! என்க. சிந்தை களித்து உவந்து ஏத்தினன் – மனம் மிக மகிழ்ந்து பாராட்டினன். களிப்பும் உவப்பும் மகிழ்ச்சி என்னும் ஒருபொருள; ஆதலின் மிக மகிழ்ந்து என்று பொருள் உரைக்கலாயிற்று. உவப்பு - மகிழ்ச்சியும், களிப்பு - செருக்கோடு கூடிய மகிழ்ச்சியும் ஆம். (27)

## இராமனிடம் யாதுகூறவேண்டும் என்று அநுமன் கேட்டல்

**634.** இருளு ஞால மிராகவ ளுலிது
தெருளு நீயினிச் சில்பக றீங்குறல்
மருளு மன்னவற் கியான்சொலும் வாசகம்
அருளு வாயென் றடியி னிறைஞ்சினுன்.

'இருளும் ஞாலம் இராகவனுல் இது
தெருளும், நீ இனிச் சில்பகல் தீங்குறல்;
மருளும் மன்னவற்கு யான் சொலும் வாசகம்
அருளுவாய்!' என்று அடியின் இறைஞ்சினுன்.

'(இராவணனுல்) இருளும் ஞாலம் இது, இராகவனுல் தெருளும். நீ இனிச் சில்பகல் தீங்குறல்; மருளும் மன்னவற்கு யான் சொலும் வாசகம் அருளுவாய்' என்று (அநுமன், பிராட்டியின்) அடியின் இறைஞ்சினுன்: என இயைக்க. இருளுதல் - துன்புற்று அறிவிழந்து மயங்குதல். தெருளுதல் - துன்பம் நீங்கித் தெளிதல். தீங்கு உறல் - துன்புருதிருப்பாயாக. மருளும் மன்னவற்கு - உன் பிரிவினுல் மயக்கம் அடைந்துள்ள அரசனுகிய இராமபிரான்பால்.

(28)

## சீதை அநுமனிடம் கூறியவை 635–644

**635.** இன்னு மீண்டொரு திங்க ளிருப்பல்யான்
நின்னை நோக்கிப் பகர்ந்தது நீதியோய்
பின்னை யாவி பிடிக்க கிலேனந்த
மன்ன ளுணை யிதனை மனக்கொணீ.

இன்னும் ஈண்டு ஒருதிங்கள் இருப்பல் யான்,
நின்னை நோக்கிப் பகர்ந்தது, நீதியோய்!
பின்னை ஆவி பிடிக்ககிலேன்: அந்த
மன்னன் ஆணை! இதனை மனக்கொள் நீ!

நீதியோய்! நின்னை நோக்கிப் பகர்ந்தது; அந்த மன்னன் ஆணை; ஈண்டு யான், இன்னும் ஒரு திங்கள் இருப்பல்; பின்னை ஆவி பிடிக்ககிலேன்; இதனை நீ மனக்கொள்: என இயைக்க. நீதியோய்! ஒழுக்க நெறியுடையாய்! என்பது பிராட்டி அநுமனைத் தன்முகமாக்கிக்கொள்ளும் விளிக்கூற்று. அந்த மன்னன் என்றது

இராமபிரானை. நம்தம் மன்னன் என்று கொண்டு, நம் அரசனாகிய இராமபிரான் என்று பொருளுரைக்கலும் ஆம். பின்னை - அவ்வொருதிங்களும் கடந்த பின். ஆவி பிடிக்ககிலேன் - உயிர் தரித்திருக்கமாட்டேன். மனக்கொள் - (இதனை) மனத்திற் பதிய வைத்துக் கொள்க. இங்கே பிராட்டிகூற்று, சூளுரைபோன்றிருத்தல் நோக்கத்தக்கது. (29)

## இராமனிடம் கூறுமாறு சீதை கூறியது

**636.** ஆரந் தாழ்திரு மார்பற் கமைந்ததோர்
தாரம் தானலெ னேனுந் தயாவெனும்
ஈரந் தானகத் தில்லையென் ருலுந்தன்
வீரங் காத்தலை வேண்டென்று வேண்டுவாய்.

ஆரம் தாழ் திருமார்பற்கு அமைந்தது ஓர்
தாரம் தான் அலெனேனும், தயா எனும்
ஈரம் தான் அகத்து இல்லை என்ருலும், 'தன்
வீரம் காத்தலை வேண்டு' என்று வேண்டுவாய்.

ஆரம் தாழ் திரு மார்பற்கு அமைந்தது ஓர் தாரம் அலெனேனும் - மாலை தங்கிய அழகிய மார்புடைய இராமபிரானுக்கு ஏற்ற மனையாளாக யான் இல்லாவிட்டாலும்; ஆரம் - மாலை. தாழ்தல் - தங்குதல். அமைந்தது – ஏற்றது. தாரம் - மனையாள். தான், அசை. தாரம் என்னும் சொல்லுக்கிசைய அமைந்தது என அஃறிணையாற் கூறலாயிற்று. தயா - தயை. அகத்து - மனத்தில். 'தன் வீரம் காத்தலை வேண்டு' என்று வேண்டுவாய் - 'தன் வீரத்துக்குக் குறை வராதபடி பாதுகாத்தலை விரும்புக' என்று வேண்டுவாயாக. 'வீரங்காத்தலை வேண்டு' என்பது இராமனிடம் அநுமன் கூறவேண்டிய கூற்று. மனையாளைப் பாதுகாத்தல் கணவன் கடன்; யான் அப்பெருமானுக்கு ஏற்றவளாயில்லை யென்று கைவிட்டாலும், தன்னைக் காத்துக்கொள்ளும் வலியற்ற ஒரு மகள் துட்டரால் தீங்குறக் காணின், இரக்கமுள்ள ஆடவர் தீங்ககற்றிக் காத்தல் கடன்; இரக்கமற்றவராயினும், ஆற்றலுடையார், தம் ஆற்றற்கு இழிவு நேராதவாறு, உதவுதல் கடன். அதனை இராமனிடம் தெரிவிப்பாயாக என்றவாறு. மார்பற்கு என்பதில் கு உருபுமயக்கமாகக்கொண்டு மார்பனிடம் வேண்டுவாயாக என உரைப்பினும் அமையும். (30)

### இலக்குவன்பாற் கூறுமாறு கூறியது

**637.** ஏத்தும் வென்றி யிளையவற் கீதொரு
வார்த்தை கூறுதி மன்னரு ளாலெனைக்
காத்தி ருந்த தனக்கே கடனிடை
கோத்த வெஞ்சிறை வீடென்று கூறுவாய்.

ஏத்தும் வென்றி இளையவற்கு, ஈது ஒரு
வார்த்தை கூறுதி: மன் அருளால் எனைக்
காத்திருந்த தனக்கே கடன் இடை
கோத்த வெம் சிறை வீடு, என்று கூறுவாய்.

கூறுவாய்! 'இடைகோத்த வெம் சிறை வீடு, மன் அருளால் எனைக் காத்திருந்த தனக்கே கடன்' என்று ஈது ஒரு வார்த்தை, ஏத்தும் வென்றி இளையவற்குக் கூறுதி: என இயைக்க. கூறுவாய்-சொலல்வல்லோனே! இடை கோத்த வெம் சிறை வீடு - துன்பம் கவிந்த கொடிய சிறையினின்றும் என்னை விடுதலை செய்தல் (மீட்டல்). இடை - துன்பம். இனி 'இடைகோத்த வெம்சிறை வீடு' என்பதற்கு, 'தனது காவலின் இடையே வந்து பற்றிய சிறை யினின்றும் என்னை விடுவித்தல்' எனப் பொருள் கூறலும் பொருந்தும். இடை - நடுவில். மன்அருளால் எனைக் காத்திருந்த தனக்கே கடன் என்று - இராமபிரான்கட்டளையால் என்னைக் காவல் செய்திருந்த தனக்கே கடமை என்று. ஈது ஒரு வார்த்தை - இந்த ஒரு செய்தியையும்; ஏத்தும் வென்றி இளையவற்குக் கூறுதி - பாராட்டப்படும் வெற்றியையுடைய இளையவனாகிய இலக்குமண னிடம் சொல்வாயாக. இலக்குவதற்கு என்பதில் குவ்வுருபு ஏழாம் வேற்றுமைப் பொருளில் வந்தது. (31)

இதன் பின் 17, 55 என்னும் குறியீடுள்ள சுவடிகளில் பின்வரு மாறு ஒரு பாடல் காணப்படுகிறது:

**637.** (a) சேண்ட வானெறி செல்பகற் றீங்கற
மீண்டு தம்பியும் வீரனு மூர்புகப்
பூண்ட பேரன்பி னேருடன் போதியால்
ஈண்டி யான்வரம் வேண்டின னீறிலாய்.

### மீட்டும் இராமன்பாற் கூறுமாறு கூறியது

**638.** திங்க ளொன்றினென் செய்தவந் தீர்ந்ததால்
இங்கு வந்தில னேயெனின் யாணர்நீர்க்
கங்கை யாற்றங் கரையடி யேற்குந்தன்
செங்கை யாற்கடன் செய்கென்று செப்புவாய்.

திங்கள் ஒன்றின் என் செய்தவம் தீர்ந்ததால்,
இங்கு வந்திலனே யெனின், யாணர் நீர்க்
கங்கை யாற்றங் கரை, அடியேற்கும் தன்
செங்கையால் கடன் செய்க, என்று செப்புவாய்!

திங்கள் ஒன்றின் இங்கு வந்திலன் எனின், என் செய்தவம் தீர்ந்தது; கங்கையாற்றங்கரை அடியேற்கும் தன் செங்கையால் கடன் செய்க என்று செப்புவாய்: என இயைக்க. திங்கள் ஒன்றின் - ஒரு மாத எல்லையுள். இங்கு - இவ் இலங்கை நகரில். என் செய்தவம் தீர்ந்தது - யான் மேற்கொண்டுள்ள (என் உயிர் காத்திருத்தலாகிய) தவமானது ஒழிந்துவிடும் ஆதலால். யாணர்— புதுவருவாய். கடன் - இறுதிச் சடங்குகளை. 'கடன் செய்க' என்பது இராமபிரான்பக்கல் அநுமன் கூறவேண்டிய கூற்று. (32)

மாமியர்பாற் கூறுமாறு கூறியது

**639.** சிறக்கு மாமியர் மூவர்க்குஞ் சீதையாண்
டிறக்கின் றுடொழு தாளெனு மின்னசொல்
அறத்தி னுயகன் பாலரு ளின்மையால்
மறக்கு மாயினு நீமற வேலையா.

சிறக்கும் மாமியர் மூவர்க்கும், சீதை ஆண்டு
இறக்கின்றுள் தொழுதாள், எனும் இன்னசொல்,
அறத்தின் நாயகன்பால் அருள் இன்மையால்
மறக்குமாயினும், நீ மறவேல், ஐயா!

சிறக்கும் - முதன்மை வாய்ந்த. மாமியர் மூவர்: கோசலை, கைகேயி, சுமித்திரை என்போர். ஆண்டு - அங்கே (இலங்கையில்). இன்ன - இம்மொழிகளை. அறத்தின் நாயகன் என்றது இராம பிரானை. ஐயா! 'சீதை, ஆண்டு இறக்கின்றுள், சிறக்கும் மாமியர் மூவர்க்கும் தொழுதாள்' எனும் இன்ன (சொற்களை அம் மாமியர்பாற் கூறுமாறு,) அறத்தின் நாயகன்பாற் சொல்; (அவற்கு என்பால்) அருளின்மையால் (அவன் அதனை அவர்பாற் கூற) மறந்தாலும், நீ மறவேல் (அவர்பாற்) சொல்: என்றுள் என்க. (33)

மீட்டும் இராமனிடம் கூறுமாறு கூறியவை 640-41

**640.** வந்தெ னைக்கரம் பற்றிய வைகல்வாய்
இந்த விப்பிற விக்கிரு மாதரைச்
சிந்தை யாலுந்தொ டேனென்ற செவ்வரம்
தந்த வாறு திருச்செவி சாற்றுவாய்.

வந்து, எனைக் கரம்பற்றிய வைகல்வாய்,
'இந்த இப் பிறவிக்கு இரு மாதரைச்
சிந்தையாலும் தொடேன்' என்ற செவ்வரம்
தந்தவாறு, திருச்செவி சாற்றுவாய்!

வந்து - மிதிலைக்கு எழுந்தருளி. எனைக் கரம் பற்றிய வைகல் வாய் - என்னைப் பாணிக்கிரகணம் (கைப்பிடித்தல்) என்னும் சடங்கு நிகழ்த்தி மணந்துகொண்ட காலத்து. 'இந்த இப்பிறவிக்கு இரு மாதரைச் சிந்தையாலும் தொடேன்:' என்பது சீதாபிராட்டிபக்கல் இராமபிரான் கூறிய உறுதிமொழி. இந்தப் பிறவி, இப்பிறவி என்க. இந்தப் பிறவி - மானிடப் பிறப்பு. இப்பிறவி - தசரதராமனான பிறவி. இப்பிறவிக்கு - இப்பிறவியில். இரு மாதரை - இரண்டாவதாக (வேறு) பெண்ணை. சிந்தை - மனம். தொடுதல் – பரிசித்தல், மனத்தாலும் தொடேன் எனவே மெய்யாலும் தொடேன் என்பது பெறப்பட்டது. செவ்வரம் தந்தவாறு - நல்ல வரம் தந்தபடியை. திருச் செவி சாற்றுவாய் - (இராமனுடைய) அழகிய காதில் (இரகசியமாகச்) சொல்லுவாயாக: (விண்ணப்பிப்பாய் என்றவாறு). (34)

**641.** ஈண்டு நானிருந் தின்னுயிர் மாயினும்
மீண்டு வந்து பிறந்துதன் மேனியைத்
தீண்ட லாவதொர் தீவினை தீர்வரம்
வேண்டி னுடொழு தென்று விளம்புவாய்.

ஈண்டு நான் இருந்து இன் உயிர் மாயினும்,
மீண்டு வந்து பிறந்து, தன் மேனியைத்
தீண்டல் ஆவது ஓர் தீவினை தீர் வரம்
வேண்டினாள் தொழுது, என்று விளம்புவாய்.

ஈண்டு - இங்கு (இலங்கையில்). தன் மேனியை - இராமபிரானுடைய திருமேனியை. தீண்டலாவதொர் வரம், தீவினை தீர்வரம் என்க. 'வரம் தொழுது வேண்டினாள்' என்று விளம்புவாய் என இயைக்க.

எழுமையும் தொடர்வதோர் உழுவலன்பின் திறம் ஈண்டுப் புலனுதல் அறியத்தகும். ஒப்பு : குறுந்தொகை, 49 ; 199 ; பெருங் கதை 1, 36, 113-5 ; திருச்சிற்றம்பலக் கோவை, 205 ; நைடதம், பிரிவுறு, 17. (35)

சீதை மீட்டும் அநுமனிடம் கூறியன 642–644

**642.** அரசு வீற்றிருந் தாளவு மாய்மணிப்
புரசை யானையின் வீதியிற் போதவும்
விரசு கோலங்கள் காண விதியிலேன்
உரைசெய் தென்னையென் னூழ்வினை யுன்னுவேன்.

அரசு வீற்றிருந்து ஆளவும், ஆய் மணிப்
புரசை யானையின் வீதியில் போதவும்,
விரசு கோலங்கள் காண விதி இலேன் :
உரை செய்து என்னை ? என் ஊழ்வினை உன்னுவேன் !

அரசு வீற்றிருந்து-அரசு கட்டிலின்கண் (சிங்காதனத்தின்கண்) பெருமையோடும் ஏறியிருந்து. வீற்றிருந் தென்பதனைப் பின்னும் கூட்டி, ஆய் மணிப் புரசை யானையின் வீற்றிருந்து வீதியிற் போதவும் : என இயைத்துச் சிறந்த மணிகளையும் கழுத்திடு கயிற் றினையும் உடைய யானையின்கண் சிறக்க ஏறியிருந்து, திருவீதியிலே பவனி வரவும் எனப் பொருள் உரைக்க. விரசு கோலங்கள் - பொருந்திய கோலங்களை. விதியிலேன் - நல்லூழ் இல்லாதவ ளாய் விதியிலேனுகி, ஊழ்வினையுன்னுவேன் உரை செய்து என்னை ? என்க. முடிசூட்டும் கோலமும் பவனிக் கோலமும் காணுது இழந்த தீயூழுடைய யான் மேலும் பலவற்றை விரும்பி உரை செய்து என்ன பயன் ? என்றவாறு. (36)

**643.** தன்னை நோக்கி யுலகந் தளர்தற்கும்
அன்னை நோய்க்கும் பரதனங் காற்றுறும்
இன்ன னேய்க்குமங் கேகுவ தன்றியே
என்னை நோக்கியிங் கெங்ஙன மெய்துமோ.

தன்னை நோக்கி உலகம் தளர்தற்கும்,
அன்னை நோய்க்கும், பரதன் அங்கு ஆற்றுறும்
இன்னல் நோய்க்கும், அங்கு ஏகுவது அன்றியே,
என்னை நோக்கி, இங்கு எங்ஙனம் எய்துமோ ?

உலகம் தன்னை நோக்கித் தளர்தற்கும் என்க. கோசல நாட்டு நன் மக்கள் தன் வரவை எதிர்பார்த்து வரவு தாழ்த்தலால் வருந்தி யிருக்கும் தளர்ச்சியைப் போக்குதற்கும் என்று பொருள் உரைக்க. தன்னை என்றது இராமபிரானை. அன்னை - தாய்: கோசலை. நோய்க்கும் – நோயைப் போக்குதற்கும். இன்னல் நோய் - மிக்க துன்பம்; மீமிசைச்சொல். அங்கு - அயோத்திக்கு. இங்கே துன் புறுவேன் யான் ஒருத்தியே; அங்கே துன்புறுவோரோ பலர். ஆதலால் அங்கேயே செல்வான் என்றவாறு. (37)

644. எந்தையாய் முதலிய கிளைஞர் யார்க்குமென்
★ வந்தனை விளம்புதி கவியின் மனனனைச்
சுந்தரத் தோளனைத் தொடர்ந்து காத்துப்போய்
அந்தமி றிருநகர்க் கரச ஞக்கென்பாய்.

எந்தை யாய் முதலிய கிளைஞர் யார்க்கும் என்
வந்தனை விளம்புதி! கவியின் மன்னனைச்
'சுந்தரத் தோளனைத் தொடர்ந்து காத்துப் போய்
அந்தம் இல் திருநகர்க்கு அரசன் ஆக்கு!' என்பாய்!

எந்தை - என் தந்தை (சனகன்). யாய் - (என்னுடைய) தாய். கிளைஞர் யார்க்கும் - சுற்றத்தார் எல்லாருக்கும். என் வந்தனை விளம்புதி - என் வணக்கத்தைச் சொல்லுக. கவியின் மன்னனை - குரங்குகளுக்கு அரசனாகிய சுக்கிரீவனிடம்; இரண்டன்உருபு ஏழா வதன் பொருளில் மயங்கியது. சுந்தரத்தோளனை - அழகிய தோள் களையுடைய இராமபிரானை. அந்தம் இல் திருநகர்க்கு - அழிவற்ற செல்வமுடைய நகரமாகிய அயோத்திக்கு. 'சுந்தரத் தோளனைத் தொடர்ந்து காத்துச் சென்று அந்தமில் திருநகர்க்கு அரசனுக்கு' என்று கவியின் மன்னன்பாற் சொல்வாயாக என்றவாறு. (38)

இதன்பின் 17 என்னும் குறியீடுள்ள சுவடியில் பின்வருமாறு ஒரு பாடல் காணப்படுகிறது :—

644 (a) என்றுரைத் திடுதிபின் னயோத்தி யெய்தினல்
வென்றிவெஞ் சிலையினன் மணம் விழைந்திடா
தன்றியே மறைநெறிக் கருக னல்லனல்
பொன்றிணி மௌலியும் புனைத லில்லையால்.

## அநுமன் பிராட்டியைத் தேற்றுதல் 645–680

**645.** இத்திற மனையவ ளியம்ப வின்னமும்
தத்துற வொழிந்திலை தைய னீயெனு
எத்திறத் தேதுவு மியைந்த வின்னுரை
ஒத்தன தெரிவுற வுணர்த்தி னனரோ.

இத்திறம் அனையவள் இயம்ப, 'இன்னமும்
தத்துறவு ஒழிந்திலை, தையல் நீ!' எனு,
எத்திறத்து ஏதுவும் இயைந்த இன் உரை
ஒத்தன தெரிவுற உணர்த்தினன் அரோ.

அனையவள் இத்திறம் இயம்ப - அந்தச் சீதாபிராட்டி இப்படிச் சொல்ல, தையல்! நீ இன்னமும் தத்துறவு ஒழிந்திலை - அம்மையே! நீ இன்னும் துன்புறுதலை விட்டாயில்லை. 'தையல்! நீ தத்துறவு ஒழிந்திலை' என்பது பிராட்டியை நோக்கிய அநுமன் கூற்று. தத்துறவு - தடுமாற்றம். ஒத்தன - பொருந்தியவையும். எத்திறத்தும் ஏது இயைந்த இன் உரை - எல்லாப் படியாலும் தூய ஏதுவோடு கூடியவையுமான இனிய ஆறுதல் மொழிகளை. அநுமன் உணர்த்தினன் : என எழுவாய் வருவித்துரைக்க. (39)

**646.** வீவாய் நீயிவண் மெய்யஃதே
★ ஓய்வா னின்னுயி ருய்வானும்
போய்வா னந்நகர் புக்கன்றே
வேய்வான் மௌலியும் மெய்யன்றே.

வீவாய் நீ இவண், மெய் அஃதே!
ஓய்வான் இன் உயிர் உய்வானும்!
போய் வான் அந்நகர் புக்கு அன்றே
வேய்வான் மௌலியும்! மெய் அன்றே!

நீ இவண் வீவாய்; அஃது மெய்யே! இன் உயிர் ஓய்வான், உய்வானும்! வான் அந்நகர் போய்ப் புக்கு மௌலியும் வேய்வானும்! அஃது மெய்யன்றே! என இயைக்க. ஆம் என்பதும் அஃது என்பதும் பின்னும் கூட்டப்பட்டன. இவண் - இங்கே (இலங்கையிலே). வீவாய் - இறப்பாய்! இன் உயிர் ஓய்வான் - இனிய உயிர் அழிந்து கொண்டிருப்பவனான இராமபிரான். வான் அந்நகர் - சிறந்த அந்த அயோத்தியில். மௌலியும் வேய்வானும் - முடியும் சூடிக்கொள்வானும்! உய்வானும், வேய்வானும் என்பவற்றுள் ஆம் என்பது

உய்யான் வேயான் என மறுதலைப்பொருள் உணர நின்றது; பின் வரும் பாடலிலும் இவ்வாறு கொள்க. (40)

647. கைத்தோ டுஞ்சிறை கற்போயை
வைத்தோ னின்னுயிர் வாழ்வானும்
பொய்த்தோர் வில்லிகள் போவாராம்
இத்தோ டொப்பதி யாதுண்டே.

கைத்து ஓடும் சிறை கற்போயை
வைத்தோன் இன் உயிர் வாழ்வானும்!
பொய்த்தோர் வில்லிகள் போவாராம்!
இத்தோடு ஒப்பது யாது உண்டே?

கற்போயைச் சிறைவைத்தோன் உயிர் வாழ்வானும்! வில்லிகள் பொய்த்தோர் போவாராம்! இத்தோடு ஒப்பது யாது உண்டு?: என இயைக்க. கற்போயை - கற்புடைய உன்னை. கைத்து ஓடும் சிறை - கண்டோர் வெறுத்து (நெடுந்தூரத்தே) விலகியோடும்படி யான (- துன்பம் நிறைந்த) சிறை. வில்லிகள் - வில்லாளிகளான இராம லக்குமணர். பொய்த்தோர் போவாராம் - (அரக்கரை அழிப் போமென்று தாம் சொல்லிய) சொல்லை நிறைவேற்றாதவர்களாய்ச் சென்றுவிடுவார்களாம். இத்தோடு என்பது எதுகைநோக்கிவந்த விரித்தல்விகாரம். இத்தோடு ஒப்பது - இப்படிக் கூறுவதோடு பொருந்துவது. யாது உண்டு - எது உண்டு? ஒன்றும் இல்லை: என்றவாறு. (41)

648. நல்லோய் நின்னை நலிந்தோரைக்
கொல்லோ மெம்முயிர் கொண்டங்கே
எல்லோ முஞ்செல வெங்கோனும்
வில்லோ டுஞ்செல வேண்டாவோ.

நல்லோய்! நின்னை நலிந்தோரைக்
கொல்லோம், எம் உயிர் கொண்டு அங்கே
எல்லோமும் செல, எம் கோனும்
வில்லோடும் செலவேண்டாவோ?

நின்னை நலிந்தோரை - உன்னை வருத்திய அரக்கர்களை. அங்கே - இராமன் இருக்குமிடத்திலே. எல்லோமும் - (தெற்கே தேட வந்த) நாங்கள் எல்லோரும். எம் கோனும் - எங்கள் அரசனாகிய இராமபிரானும். (42)

**649.** நீந்தா வின்னலி னீந்தாமே
தேய்ந்தா ருதபெ ருஞ்செல்வம்
ஈந்தா னுக்குனே யீயாதே
ஒய்ந்தா லெம்மி னுயர்ந்தார்யார்.

நீந்தா இன்னலின் நீந்தாமே
தேய்ந்து ஆருத பெருஞ் செல்வம்
ஈந்தானுக்கு உனே ஈயாதே
ஓய்ந்தால், எம்மின் உயர்ந்தார் யார்?

நீந்தா இன்னலின் நீந்தாமே - நீந்திக் கரைகாண முடியாத துன்பக்கடலுள் நாங்கள் நீந்தாதபடி; என்றது வாலியால் நேர்ந்த துன்ப மிகுதியை. தேய்ந்து ஆருத பெருஞ்செல்வம் ஈந்தானுக்கு - குறைந்து அழியாத மிகப்பெரிய (கிட்கிந்தை அரசு என்னும்) செல்வத்தைக் கொடுத்த இராமபிரானுக்கு. அருத என்பது ஆருத என எதுகை நோக்கி விகாரமாயிற்று. எம்மின் உயர்ந்தார் யார் என்றது, எங்களினும் இழிந்தார் ஒருவரும் இல்லே என்று குறிப்பான் உணர்த்தியவாறு. (43)

**650.** நன்ரு நல்வினே நல்லோரைத்
தின்ருர் தங்குடர் பேய்தின்னக்
கொன்ரு லல்லது கொள்ளேனு
டென்ரு னுக்கிவை யேலாவோ.

'நன்று ஆம் நல்வினே நல்லோரைத்
தின்ருர்தம் குடர் பேய் தின்னக்
கொன்ருல் அல்லது கொள்ளேன் நாடு!'
என்ருனுக்கு இவை ஏலாவோ?

நன்று ஆம் நல்வினே நல்லோரை – இன்பம் விளேயும் நல்ல செயல்களேயுடைய நல்லோரான தண்டகவனமுனிவரை. நன்று - இன்பம் (திருக்குறள். 328). கொன்ருல் அல்லது நாடு கொள்ளேன் என்ருனுக்கு – கொன்ருலன்றி நாட்டை அடையேன் என்று சொல்லிய (சபதங்கூறிய) இராமபிரானுக்கு. இவை - அரக்கரையழித்தலும் உன்னே மீட்டலும் ஆகிய இச்செயல்கள். ஏலாவோ?- இயலாதனவோ? (இயலுவனவே) என்றவாறு. அரக்கரைக் கொன்ருலன்றி நாட்டுக்குத் திரும்பேன் என்று இராமன் கூறிய செய்தி, ஆரணிய காண்டம், சூர்ப்பநகைப் படலம், 136-ஆம் செய்யுளிலும் பயின்றமை காண்க. (44)

**651.** மாட்டா தார்சிறை வைத்தோயை
மீட்டா மென்கில மீள்வாமே
நாட்டார் நல்லவர் நன்னூலும்
கேட்டா ரிவ்வுரை கேட்பாரோ.

மாட்டாதார் சிறை வைத்தோயை,
மீட்டாம் என்கிலம், மீள்வாமே?
நாட்டார் நல்லவர் நல்நூலும்
கேட்டார், இவ்வுரை கேட்பாரோ?

மாட்டாதார் சிறைவைத்தோயை - எதிர் நின்று போர்செய்ய மாட்டாதவரால் சிறைவைக்கப்பட்ட உன்னை. மீட்டாம் என்கிலம் - மீட்டுக் கொண்டோம் என்று பெருமைகொள்ளாது; மீள்வாமே - திரும்புவோமோ? (திரும்போம்). நாட்டாரும் நல்லவரும் என எண்ணும்மை விரிக்க. நன்னூல் கேட்டாரும் என உம்மையைப் பிரித்துக் கூட்டுக. நாட்டார் - நாட்டுப் பொதுமக்கள். நல்லவர் - நல்லொழுக்கமுள்ளவர். நல் நூல் கேட்டார் - நல்ல நூலறிவுற்ற பெரியோர். இவ்வுரை - (உன்னை மீட்காது தாம் மீண்டார் என்ற) இம்மொழியை. கேட்பாரோ? - ஏற்றுக்கொள்வார்களோ? (ஏற்றுக்கொள்ளார் என்றவாறு). கேட்டல் - ஏற்றுக்கொள்ளுதல் (திருக்குறள் 643). (45)

**652.** பூண்டாள் கற்புடை யாள்பொய்யாள்
தீண்டா வஞ்சகர் தீண்டாமுன்
மாண்டா ளென்று மனந்தேறி
மீண்டால் வீரம் விளங்காதோ.

'பூண்டாள் கற்புடையாள் பொய்யாள்,
தீண்டா வஞ்சகர் தீண்டாமுன்
மாண்டாள்!' என்று மனம் தேறி
மீண்டால் வீரம் விளங்காதோ?

கற்புடையாள் பூண்டாள் பொய்யாள் - கற்பையே செல்வமாக வுடையவளும், அணிகலமாகப் பூண்டவளும், கற்பொழுக்கத்தினின்று தவறுதவளுமாகிய சீதை. வீரம் விளங்காதோ என்றது குறிப்பால் வீரம் விளங்காது என்பது உணர நின்றது. (46)

**653.** கெட்டே நீயுயிர் கேதத்தால்
விட்டா யென்றிடின் வெவ்வம்பால்
ஒட்டா ரோடுல கோரேழும்
சுட்டா லுந்தொலை யாதன்றே.

கெட்டே நீ உயிர் கேதத்தால்
விட்டாய் என்றிடின், வெவ் அம்பால்
ஒட்டாரோடு, உலகு ஓர் ஏழும்
சுட்டாலும், தொலையாது அன்றே ?

நீ கேதத்தால் கெட்டு உயிர்விட்டாய் என்றிடின்: என இயைக்க. கேதம் - (இராமபிரானைப் பிரிந்தமையால் உளதாகிய) துக்கம். கெட்டு - அழிந்து. வெவ் அம்பு - கொடிய அம்பு. ஒட்டார் - பகைவர். தொலையாது - (எம்மை விட்டுப்) பழி நீங்காது. (47)

**654.** முன்னே கொல்வான் மூவுலகும்
பொன்னே பொங்கிய போர்வில்லான்
என்னே நின்னிலை யீதென்றால்
பின்னே செம்மை பிடிப்பானே.

முன்னே கொல்வான் மூவுலகும்,
பொன்னே ! பொங்கிய போர்வில்லான்,
என்னே ! நின்நிலை ஈது என்றால்,
பின்னே செம்மை பிடிப்பானே ?

பொன்னே ! முன்னே மூவுலகும் கொல்வான் பொங்கிய போர் வில்லான், நின்நிலை ஈது என்றால், பின் செம்மை பிடிப்பானே ? (இது) என்னே ? என இயைக்க. பொன்னே - திருமகளே ! முன்னே - முன்பே. பொங்கிய போர்வில்லான் - சினந்த போர்க்குரிய வில்லையுடையவனை இராமபிரான். செம்மை பிடிப்பானே - சாந்த குணம் மேற்கொள்வானே ?

(இவ்வாறு இராமன் கோபித்த செய்தி, ஆரணிய காண்டம் சடாயு உயிர்நீத்த படலம் 160-162 ; 204-207 செய்யுட்களில் காண்க.) (48)

**655.** கோளா ருயிர் கோளோடும்
மூளா வெஞ்சின முற்றாக
மீளா வேலய்ல் வேறுண்டோ
மாளா தோபுவி வானோடும்.

கோள் ஆனர் உயிர் கோளோடும்
மூளா வெம் சினம் முற்று ஆக
மீளாவேல், அயல் வேறு உண்டோ ?
மாளாதோ புவி வானேடும் ?

மூளா வெம் சினம், கோள் ஆனர் உயிர் முற்ருகக் கோளோடும் (நின்னையும்) மீளாவேல், புவி வானேடும் மாளாதோ? அயல் வேறு உண்டோ? என இயைக்க. மூளா வெம் சினம் - (தக்க காரணமின்றிக்) கிளர்ந்து எழாத (இராமபிரானுடைய) கொடிய கோபம். காத்தற்கு அரிதாகலின் வெஞ்சினம் என்ருர். கோள் ஆனர் உயிர் முற்ருகக் கோளோடும் மீளாவேல் - கொலைமேற் கொண்டவரான அரக்கருயிர் முடியக் கொள்ளுதலுடனே (நின்னையும்) மீட்காவிட்டால். கோள் (முன்னது) - கொலை (சீவக. 264). கோள் (பின்னது) - கொள்ளுதல். புவி – இம்மண்ணுலகானது. வானேடும் - தேவருலகுடன். மாளாதோ - அழிந்து விடாதோ? அயல் வேறு உண்டோ - அவ் அரக்கர் தப்பி உய்தற்கு வேறு இடமும் உண்டோ ? (இல்லை என்றவாறு). (49)

656. தாழித் தண்கட றம்மோடும்
ஏழுக் கேழுல கெல்லாமன்
ரூழிக் கையவ னம்பம்மா
ஊழித் தீயென வுண்ணுதோ.

தாழித் தண் கடல் தம்மோடும்,
ஏழுக்கு ஏழ் உலகு எல்லாம், அன்று,
ஆழிக் கையவன் அம்பு, அம்மா!
ஊழித்தீ என உண்ணுதோ ?

அம்மா! ஆழிக் கையவன் அம்பு, அன்று தாழித் தண் கடல் தம் மோடும், ஏழுக்கு ஏழ் உலகெல்லாம், ஊழித்தீ என உண்ணுதோ ? என இயைக்க. அம்மா, விளி; வியப்பிடைச் சொல்லுமாம். ஆழிக் கையவன் அம்பு - ஆணையாகிய சக்கரத்தைக் கொண்டவனுகிய இராமபிரானுடைய (ஓர்) அம்பே. அன்று - உன் நிலையறிந்த நாளில். தாழித் தண் கடல் தம்மோடும் - தாழிபோன்ற (அகன்று ஆழ்ந்த) குளிர்ந்த கடல்களோடும். ஏழுக்கு ஏழ் உலகு எல்லாம் – ஏழொடு ஏழாக (பதினன்காக) வுள்ள உலக மெல்லாவற்றையும். ஊழித்தீ என உண்ணுதோ ? – பிரளயகாலத்து நெருப்பைப் போலக் கடல்களோடு உலகமெல்லாவற்றையும் உண்ணுதோ ? அம்பு உண்ணுதோ என்க. (50)

**657.** படுத்தான் வானவர் பற்ருரைத்
தடுத்தான் றீவினை தக்கோரை
எடுத்தா னல்வினை யெந்நாளும்
கொடுத்தா னென்றிசை கொள்ளாயோ.

'படுத்தான் வானவர் பற்ருரைத்
தடுத்தான் தீவினை, தக்கோரை
எடுத்தான், நல்வினை எந்நாளும்
கொடுத்தான்' என்று இசை கொள்ளாயோ ?

(இராமபிரான்) "வானவர் பற்ருரைப் படுத்தான், தக்கோரை எடுத்தான், தீவினை தடுத்தான், எந்நாளும் நல்வினை(க்கு நிலை) கொடுத்தான்" என்று இசை கொள்ளாயோ ? என இயைக்க. வானவர் பற்ருரைப் படுத்தான் - தேவர்களுக்குப் பகைவராகிய அரக்கரை அழித்தான் : (இது கொடியோரை ஒறுத்தமை கூறியது.) தக்கோரை எடுத்தான் - நல்லோரை உயர்த்தினன் ; (இது தக்கார்க்குத் தலையளி செய்தமை கூறியது); தீவினை தடுத்தான் - பாவத்தின் வளர்ச்சியைத் தடுத்தான். (இது, மறம் களைந்தமை கூறியது); எந்நாளும் நல்வினை கொடுத்தான் - எக்காலத்தும் நல்வினை(க்கு நிலை) கொடுத்தான் ; (இஃது அறம்புரந்தமை கூறியது). என்று இசை - என்று உலகம் கூறுதலை (புகழ்வதனை). கொள்ளாயோ - நீ இசைய மாட்டாயோ ? என்றது, பரம்பொருளே இராமபிரானகத் தோன்றியுள்ளானென்பதும், அவன் தோற்றத்தால் நிறைவேறத்தகுஞ் செயல்களும், அவற்றை நிறைவேற்றியமையால் அவற்கு உளதாம் புகழும் கூறி, அப்புகழ்தானும் கற்புடையளாகிய உன்னல் நிலைபெறவேண்டுவதன்ருே ? என்றவாறு. இங்கே, 'தகைசான்ற சொற்காத்து' (56) என்னும் திருக்குறட் பகுதியும், அதற்கு, 'இருவர்மாட்டும் நன்மையமைந்த புகழ் நீங்காமற் காத்து' என்னும் பரிமேலழகர் உரைப்பகுதியும் சிந்திக்கத்தகும். (51)

**658.** சின்ன ணீயிடர் தீராதாய்
இன்ன வைகலி னெல்லோரும்
நன்னள் காணுத னன்றன்ருே
உன்ன னல்லற முண்டானல்.

சில் நாள் நீ இடர் தீராதாய்
இன்ன வைகலின், எல்லோரும்
நல்நாள் காணுதல் நன்று அன்ருே
உன்னல் நல்லறம் உண்டானல் ?

உன்னால் நல்லறம் உண்டானால் நன்றன்றோ? நீ இடர் தீரா தாய் சின்னாள் இன்னா வைகலின், எல்லோரும் நன்னாள் காணுதல் உண்டானால் நன்றன்றோ: என இயைக்க. 'நன்றன்றோ' என்பது பின்னும் 'உண்டானால்' என்பது முன்னும் கூட்டப்பட்டன. உன்னால் நல்லறம் உண்டானால் நன்று அன்றோ - உன்னால் நல்ல அறமானது நிலைபேறுடையதாயின் நலமல்லவோ? நீ இடர் தீரா தாய் சின்னாள் இன்னா வைகலின் - நீ (ஒருத்தி அரக்கரால் நிகழும்) துன்பம் நீங்காதவளாய்ச் சில நாள் (நாயகனைப் பிரிந்த) துன்பத் தோடு இங்கே தங்குதலால். எல்லோரும் நன்னாள் காணுதல் உண் டானால் நன்று அன்றோ - எல்லா வுலகத்தவரும் தமக்கு இன்பம் தருங் காலத்தைக் காணுதல் உண்டாகுமானால் நலமல்லவோ? என்றது, நீ ஒருத்தி இத்தனை துன்பத்தையும் பொறுத்துக்கொண்டு சில நாள் உயிர் காத்திருத்தலால், அறம் நிலைபெறுதலும், உலகத் தார்க்கெல்லாம் நற்காலம் நிகழ்தலும் உண்டு; ஆதலால் நீ சில நாள் ஆற்றியிருப்பாயாக என்றவாறு. (52)

**659.** புளிக்குங் கண்டகர் புண்ணீருள்
குளிக்கும் பேய்குடை யுந்தோறும்
ஒளிக்குந் தேவ ருவந்துள்ளங்
களிக்குந் நல்வினை காணுயோ.

புளிக்கும் கண்டகர் புண் நீருள்
குளிக்கும் பேய், குடையும் தோறும்,
ஒளிக்கும் தேவர் உவந்து உள்ளம்
களிக்கும் நல்வினை காணுயோ?

புளிக்கும் கண்டகர் புண் நீருள் - எல்லோரும் வெறுக்கும் முட் போற் கொடியரான அரக்கருடலில் இராமன் அம்பு தைத்தமையால் உண்டாகிய புண்ணிலிருந்து பெருகிய இரத்த வெள்ளத்தில். குளிக்கும் - முழுகும் புண்ணீருள், பேய் குளிக்கும்; பேய் குடையும் தோறும் எனக் கூட்டுக. குடைதல் - முழுகுதல். ஒளிக்கும் தேவர் - இராவணனுக்கு அஞ்சி ஒளித்திருந்த தேவர்கள். தேவர் உள்ளம் உவந்து களிக்கும் நல்வினை என்க. இராவணனுக்கு அஞ்சி, ஒளித்திருந்த தேவர், அரக்கருடலில் இராமனம்பு தைத்துருவிய புண்ணினின்று பெருகிய இரத்த வெள்ளத்தில் பேய்கள் திளைத்துக் குளிக்குந்தோறும் மனமுவந்து வெளிவந்து மகிழும் செயலை நீ விரைவில் காண்பாய் என்றவாறு. (53)

660. ஊழியி னிறுதியி னுருமெ றிந்தெனக்
★ கேழ்கிளர் சுடுகணை கிழித்த புண்பொழி
தாழிருங் குருதியாற் றரங்க வேலைகள்
ஏழுமொன் ருகிநின் றிரைப்பக் காண்டியால்.

ஊழியின் இறுதியின் உரும் எறிந்தெனக்
கேழ்கிளர் சுடுகணை கிழித்த புண்பொழி
தாழ் இரும் குருதியால் தரங்க வேலைகள்
ஏழும் ஒன்று ஆகி நின்று இரைப்பக் காண்டி ஆல்!

ஊழியின் இறுதியின் உரும் எறிந்தென - உகாந்தகாலத்து இடி தாக்கினாற்போல. எறிந்தெனக் கிழித்த என்க. கேழ்கிளர் - ஒளி விளங்குகின்ற. கணை - அம்பு. தாழ் இரும் குருதியால் - ஆழ்ந்த மிக்க இரத்த வெள்ளத்தால். தரங்க வேலைகள் ஏழும் - அலையொடு கூடிய ஏழு கடல்களும். ஒன்ருகி நின்று இரைப்ப - ஒரே இரத்தக் கடலாகி ஒலிக்க. காண்டி - பார்ப்பாய். (54)

661. சூலிரும் பெருவயி றலைத்துச் சோர்வுறும்
ஆலியங் கண்ணிய ரறுத்து நீத்தன
வாலியுங் கடப்பரும் வனப்ப வானுயர்
தாலியம் பெருமலை தயங்கக் காண்டியால்.

சூல் இரும் பெருவயிறு அலைத்துச் சோர்வுறும்
ஆலி அம் கண்ணியர் அறுத்து நீத்தன,
வாலியும் கடப்பு அரும் வனப்ப, வான் உயர்
தாலி அம் பெரு மலை தயங்கக் காண்டி ஆல்!

ஆலி சோர்வுறும் கண்ணியர், சூல் இரும் பெரு வயிறு அலைத்து, அறுத்து நீத்தன வான்உயர் தாலி அம் பெருமலை, வாலியும் கடப்பு அரும் வனப்ப தயங்கக் காண்டி : என இயைக்க. ஆலி சோர்வுறும் கண்ணியர் - (இராமனம்பால் தம் நாயகர் இறந்தமையால்) நீர்த்துளிகளைச் சொரிகின்ற (அழுகின்ற) கண்களையுடைய அரக்கர்மகளிர். ஆலி அம் கண்ணியர் என்பதனுள் அம், சாரியை. இரும் பெரு சூல் வயிறு அலைத்து - மிகப் பெரிய கருக்கொண்ட வயிற்றில் அடித்துக்கொண்டு; இரும்பெரு வயிறு, சூல்வயிறு என்க. அறுத்து நீத்தன வானுயர் தாலியம் பெருமலை - அறுத்தெறிந்த வானுற ஓங்கிய தாலியாகிய பெரிய மலையானது; அறுத்தெறிந்த தாலிமலை, வானுயர்மலை, பெருமலை என இயையும். தாலியம் பெருமலை என்பதனுள் அம், சாரியை. வாலியும் கடப்பு

அரும் வனப்ப தயங்கக் காண்டி - (எல்லாவற்றையும் எளிதிலே தாண்டிக் கடத்தல்வல்ல) வாலியென்பவனாலும் தாண்டிக் கடத்தற்கரிய பெரிய தோற்றமுடையவாய் விளங்கக் காண்பாயாக. வனப்பு - பெருந்தோற்றம். தயங்குதல் - விளங்குதல். (55)

**662.** விண்ணினீ ளியநெடுங் கழுதும் வெஞ்சிறை
எண்ணினீ ளியபெரும் பறவை யீட்டமும்
புண்ணினீர்ப் புணரியிற் படிந்து பூவையர்
கண்ணினீ ராற்றினிற் குளிப்பக் காண்டியால்.

விண்ணின் நீளிய நெடும் கழுதும், வெம்சிறை
எண்ணின் நீளிய பெரும் பறவை ஈட்டமும்,
புண்ணின் நீர்ப் புணரியில் படிந்து, பூவையர்
கண்ணின் நீர் ஆற்றினில் குளிப்பக் காண்டி ஆல்!

விண்ணின் நீளிய நெடுங்கழுதும் - ஆகாயத்தினும் மிக உயர்ந்த பேய்க்கூட்டமும். எண்ணின் நீளிய பறவை, வெஞ்சிறைப் பெரும் பறவை என்க. எண்ணின் நீளிய - எண்களால் அளவிடற்கரியவான. வெம் சிறைப் பெரும் பறவை யீட்டமும் - கொடிய இறக்கைகளையுடைய பெரிய பறவைகளின் கூட்டமும். புண்ணின்நீர்ப் புணரியில் படிந்து - (இராமபிரானம்புதுளைத்த அரக்கருடற்) புண்ணினின்று பெருகிய இரத்த வெள்ளத்தில் முழுகி. பூவையர் கண்ணின் நீர் ஆற்றினில் குளிப்பக் காண்டி - (இறந்த அரக்கருடைய மனைவியராகிய) பெண்களின் கண்ணீராற்றிலே குளிக்கக் காண்பாய். பேய்களும் பறவைகளும் தம் உடலினின்று பெருகிய சோரிவெள்ளத்தில் முழுகிக் களிக்கும்படி அரக்கர் அனைவரும் இராமபிரானுடைய அம்புகளால் துளைக்கப்பட்டு இறக்க, அவர் மனைவிமார் அழுத கண்ணீர் ஆறாகப் பெருகும் என்றவாறு. பேய்களும் பறவைகளும் அரக்கருடலினின்று பெருகிய இரத்தவெள்ளத்தில் மூழ்கி, (அவ் இரத்தக்கறை நீங்க) அரக்கியர் கண்ணீராற்றில் முழுகின என்றது, உவர்க்கடலிலே முழுகினவர், அவ்வுவர்மாசு நீங்க நன்னீரில் மூழ்குதலை நினைவூட்டுகிறது. (56)

**663.** கரம்பயின் முரசினங் கறங்கக் கைதொடர்
நரம்பிய லிமிழிசை நவில நாடகம்
அரம்பைய ராடிய வரங்கி னுண்டொழிற்
குரங்குகண் முறைமுறை குனிப்பக் காண்டியால்.

கரம் பயில் முரசு இனம் கறங்கக் கைதொடர்
நரம்பு இயல் இமிழ் இசை நவில, நாடகம்
அரம்பையர் ஆடிய அரங்கின், ஆண் தொழில்
குரங்குகள் முறை முறை குனிப்பக் காண்டி ஆல்!

முரசினம் கறங்க, இசை நவில, அரம்பையர் நாடகம் ஆடிய அரங்கின் (கண்) குரங்குகள் குனிப்பக் காண்டி: என இயைக்க. கரம் பயில் முரசு இனம் கறங்க - கையால் அடித்து ஒலி எழுப்பப் படும் மத்தளங்கள் ஒலிக்கவும். கரம் - கை. முரசு - மத்தளம். கறங்க - ஒலிக்க. கை தொடர் நரம்பு இயல் இமிழ் இசை நவில - கைவிரல்களால் தடவி எழுப்பப் படுகிற யாழ்நரம்பின் இசையோடு பொருந்தி ஒலிக்கின்ற இசைப்பாடல்களைப் பாடவும். கை, நரம்பு என்பன ஆகுபெயராய் முறையே கையின் கண் உள்ள விரலையும். நரம்பினின்றெழும் இசையையும் உணர்த்தி நின்றன. இயலுதல் - ஒத்தல். இமிழ்தல் - ஒலித்தல். இசை - வாய்ப்பாட்டு. நவில - பாட. அரம்பையர் - தேவமாதர். ஆண் தொழிற் குரங்குகள் - வீரச்செயல்களையுடைய குரங்குகள். குனிப்ப - கூத்தாட. இராவணன் கட்டளைக்கு அஞ்சிய அரம்பையர் ஆடிய அரங்கில், இராம பிரான்வெற்றியால் களித்த குரங்குகள் கூத்தாடக் காண்பாய் என்றவாறு. (57)

**664.** புரையுறு புன்றொழி லரக்கர் புண்பொழி
திரையுறு குருதியா றீர்ப்பச் செல்வன
வரையுறு பிணப்பெரும் பிறக்க மண்டின
கரையுறு நெடுங்கட றூர்ப்பக் காண்டியால்.

புரை உறு புன் தொழில் அரக்கர் புண்பொழி
திரை உறு குருதி ஆறு ஈர்ப்பச் செல்வன,
வரை உறு பிணப் பெரும் பிறக்கம் மண்டின,
கரை உறு நெடுங் கடல் தூர்ப்பக் காண்டி ஆல்!

புரை உறு புன் தொழில் அரக்கர் - குற்றம் மிக்க இழிதொழில்களைப் புரியும் அரக்கருடைய. புண்பொழி குருதியாறு, திரையுறு குருதியாறு என்க. குருதியாறு ஈர்ப்ப - இரத்தவெள்ளம் இழுத்தலால். செல்வன – அவ் இரத்த வெள்ளத்தோடு செல்வனவாகிய; வரையுறு பெரும்பிணப் பிறக்கம் – மலையொத்த பெரிய பிணக் குவியல்கள். மண்டின - விரைந்து சென்று; மண்டுதல் - விரைதல்; நெருக்கமும் ஆம். கரை உறு - கரையை மோதுகின்ற. கடல் தூர்ப்பக் காண்டி - கடலைத் தூர்த்து மேடாக்கக் காண்பாய். (58)

**665.** வினையுடை யரக்கரா மிருந்தை வெந்துகச்
சனகியென் றொருதழ னடுவட் டங்கலான்
அனகன்கை யம்பெனு மளவி லூதையாற்
கனகநீ டிலங்கைநின் றுருகக் காண்டியால்.

வினை உடை அரக்கராம் இருந்தை வெந்து உகச்
சனகி என்று ஒரு தழல் நடுவண் தங்கலான்,
அனகன்கை அம்பு எனும் அளவில் ஊதையால்,
கனகம் நீடு இலங்கை நின்று உருகக் காண்டி ஆல்!

சனகி என்று ஒரு தழல் நடுவண் தங்கலான், அனகன்கை அம்பு எனும் அளவில் ஊதையால், வினையுடை அரக்கராம் இருந்தை வெந்து உக, கனகம் நீடு இலங்கை(யும்) நின்று உருகக் காண்டி : என இயைக்க. சனகி - சனகன்மகள். தழல் - நெருப்பு. அனகன் - குற்றமற்றவன் : என்றது இராமபிரானை. ஊதை - காற்று. வினையுடை அரக்கராம் இருந்தை வெந்து உக – மறச்செயலுடைய அரக்கராகிய கரி நீருய்ச்சிந்த. நீடு இலங்கை கனகம் - பெரிய இலங்கைநகரமாகிய பொன். நின்று - தங்கி; நிலைத்து. கருநிறமுடைமையால் அரக்கரைக் கரியாகவும், ஒளியும் தூய்மையும், தீயோரைத் தன் கற்பால் ஒறுக்குந் தன்மையும் உடைமையால் பிராட்டியைத் தழலாகவும், விரைதலும், தழலை மூண்டு எரியச்செய்தலும் உடைமையால் பெருமானுடைய அம்பைக் காற்ருகவும், 'பொன் கொண்டிழைத்தது' (96) ஆதலின் இலங்கையைப் பொன்ருகவும் உருவகித்தார். (பொன்மயமான மேருவின் ஒரு பகுதியே இலங்கையாதலால் பொன் என்றல் மிகப் பொருந்தும்.) இச்செய்யுள் முற்றுருவகம் என்னும் அணிபயின்றது. இதனுல் அரக்கரோடு இலங்கையும் விரைவில் அழியும் என்பது கூறப்பட்டது. பொற்கொல்லன் உலையாக உருவகித்தவாறு. (59)

**666.** தாக்கிக விராவணன்
      றலையிற் ருவின
பாக்கிய மனையநின்
      பழிப்பின் மேனியை
நோக்கிய கண்களை
      நுதிகொண் மூக்கினுற்
காக்கைகள் கவர்ந்துகொண்
      டுண்ணக் காண்டியால்.

தாக்கு இகல் இராவணன் தலையில் தாவின,
பாக்கியம் அனைய நின் பழிப்பு இல் மேனியை
நோக்கிய கண்களை நுதிகொள் மூக்கினால்,
காக்கைகள் கவர்ந்துகொண்டு உண்ணக் காண்டி ஆல்!

பாக்கியம் அனைய நின் பழிப்பில் மேனியை நோக்கிய இராவணன் கண்களை, தாக்கு இகல், காக்கைகள் (அவன்) தலையில் தாவின (வாய்), நுதிகொள் மூக்கினால் கவர்ந்துகொண்டு உண்ணக் காண்டி : என இயைக்க. பாக்கியமனையமேனி, நின்மேனி, பழிப்பு இல் மேனி என்க. பாக்கியம் அனைய - உலகத்தார் செய்த நல் வினைப் பயன்போல் விளங்குகிற. நின் பழிப்பு இல் மேனியை - உன்னுடைய குற்றமற்ற திருமேனியை. நோக்கிய – விரும்பிப் பார்த்த. தாக்கு இகல் - மோதுகின்ற போரில் (அவ்விராவணன் இராமனுடைய அம்பினால் இறந்து வீழ்ந்தபோது). காக்கைகள் தலையில் தாவின - காகங்கள் (அவ்விராவணன்) தலையிலே தாவின வாய். தாவின முற்றெச்சம். நுதி - கூர்மை. போரில் இராவணன் இராமனுடைய பகழிகளால் இறந்து விழக் காகங்கள் அவன் தலையில் தாவித் தம் கூரியமூக்கினால், உன்னை நோக்கிய அவனுடைய கண் களைக் குடைந்தெடுத்துண்ணுதலை நீ காண்பாய் என்றவாறு. (60)

**667.** மேலுற விராவணற் கழிந்து வெள்கிய
நீலுறு திசைக்கரி திரிந்து நிற்பன
ஆலுற வனையவன் றலையை யவ்வவை
காலுறக் கணைதடிந் திடுவ காண்டியால்.

மேல் உற இராவணற்கு அழிந்து வெள்கிய,
நீல் உறு திசைக் கரி திரிந்து நிற்பன,
ஆல் உற, அனையவன் தலையை, அவ் அவை
கால் உறக் கணை தடிந்து, இடுவ காண்டி ஆல்!

மேல் இராவணற்கு அழிந்து உற வெள்கிய, திரிந்து நிற்பன, நீல்உறு திசைக்கரி ஆலுற, அனையவன் தலையை, கணை தடிந்து அவ் வவை கால் உற இடுவ காண்டி : என இயைக்க. மேல் - முற் காலத்தில். இராவணற்கு அழிந்து - இராவணனுக்குத் தோற்று. உற வெள்கிய – மிகவும் வெட்க முற்றனவாய்; திரிந்து நிற்பன - புறங் காட்டி நிற்பனவான; நீல் உறு திசைக்கரி - கரிய நிறமுடைய திசையானைகள். திசையானைகளுள் வெண்மை முதலிய பிற நிற முடையனவும் உளவேனும் பெரும்பான்மை பற்றி நீலுறு திசைக்கரி என்றார் என்க. அன்றியும், நீல் உறுதிசையென்று கொண்டு (திசைக்கு அடையாக்கி) இருண்டதிசை என்று உரைப்பினும் அமையும். ஆல் உற - களிக்கும்படி. அனையவன் தலையை - அவ்

